உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

துறையங்கலம்

**சிவப்பிரகாசசுவாமிகள்**

இயற்றிய

# பிரபுலிங்கலீலை

இதற்கு விருத்தியுரை

இந்திரபீடம்

கரபாத்திரசுவாமிகளாதீனத்திற்குரிய

பிறைசை

**அருணாசலசுவாமிகள்**

பிரதம மாணாக்கர்

குணம்பேட்டைக்கடுத்த ஈசூர் - கணக்கு

**சச்சிதானந்தபிள்ளை யவர்களாற்**

செய்யப்பட்டு

அவரது மாணாக்கருக்குரிய அத்வைத சங்கத்தாருக்கு
சில தர்மபரிபாலனத்தி னிமித்தம் கொடுக்கப்பட்டு
ஷை சங்கத்தாரால்
சென்னை செண்ட்ரல் பிரெஸில்
பதிப்பிக்கப்பட்டது.

MADRAS.

1885.

## சிறப்புப்பாயிரம்.

நிரோட்டக யமக நேர்பெறப் பாடியோன்
அன்பு பழுத்த வுளத்தின னாகி
மூவகை நச்சு மாய்வகை யியற்றி
வணர்வழிச் செலாது வெஃறியினை மடக்கி
செந்நெறி நின்ற சிவப்பிர காசன்
கணக்கறு நூல்க ளியற்றின னாக
ஒருவ ரியற்றிய பன்னூ றம்மினும்
ஒன்றே சிறக்கு மொருபுடை மற்றைய
வொருநூற் கண்ணே யொவ்வோ ரிலம்பகம்
எய்ந்திடும் பொற்பரவ் விலம்பகத் துள்ளும்
ஒவ்வோர் செய்யுளே யுயர்வின தாகுமச்
செய்யுளி னிரண்டொரு செப்பே விழுமிய
வாகு மிவனூற் கங்ஙன மன்று
தொடர் தொறுஞ் சுவையணி தொனிகுறிப் புயிர்க்கும்.
எளிதி னுணர்ச்சியு மிரும்பொரு ளமைவுஞ்
செய்கையும் வடநூற றெள்ளிய முடிபும்
பெற்றுறு மவற்றுட் பேரின் புறுத்தும்
பெருமைசால் பிரபு லிங்க லீலைக்
கரிய வுரையொன் றுக்குக வென்று
பூண்டகு புலமையோர் வேண்டுதல் செய்ய
யானை மருப்பின்வேலி போக்கித்
தேத்தடைத் துளியிற செந்தினை விளைவித்
தணில்வாற் குரல்களைக் கவர்வரு குரீஇயினை
மோப்புறக் கவண்வயி னுள்ளிய செம்மணி
வைத்தெறி யிறவுளர் மொய்த்துவாழ் சீறூர்
சழூவிய வமர ரிடுக்கண் டவிர்ப்பப்
புன்மலை பொடித்துச் சூருயிர் விழுங்கிய
வொள்ளிலை வேற்படை யொருகரத் தேந்து
முருகு வீற்றிருக்கு மொருதிருத் தணிகையான்
றன்னால் விளங்கிய தமிழ்மொழி வையகத்
திந்நாள் வழக்குற் றிறைந்தன வென்று
பண்டுபோ லியற்றக் கொண்டபே ரருளோ
டகத்தியன் றானே யவதரித் தானெனப்
புவிபுகழ் பெருமைப் புலவர் சிகாமணி
உரிய தூரிப்பொரு ளொன்றுறக் கலக்குந்

## சிறப்புப்பாயிரம்.

தகைசேர் வீர சைவ சித்தாந்தன்
றேடரும் பெரும்புகழ் திகந்த நிறீஇய
பீடுறு சரவணப் பெருமா ளையன்
உரையொன் றியற்றினன் மாயை யுற்பத்தி
யளவு மதன்பி னவன்றிருத் தோன்றல்
வடமொழி யொடுதமிழ் மாண்புற வுணர்ந்த
கந்த சாமியா முந்துசீர்ப் புலவன்
மற்றறைய கதிக்கு முற்றுவித் தனனே.

## சிறப்புப்பாயிரம்.

முற்றிற்று.

---

உ

சிவமயம்

# பிரபுலிங்கலீலை

## கதியினட்டவணை.


| | | | பக்கம். |
|---|---|---|---|
| ௧ | வது. | துதிகதி ... ... ... | ௩ |
| ௨ | ,, | கைலாசகதி ... ... ... | ௨௨ |
| ௩ | ,, | மாயையினுற்பத்திகதி ... ... | ௫௪ |
| ௪ | ,, | மாயைபூசைகதி ... ... ... | ௯௪ |
| ௫ | ,, | பிரபுதேவர்வந்தகதி ... ... | ௧௧௯ |
| ௬ | ,, | விமலைகதி ... ... ... ... | ௧௬௪ |
| ௭ | ,, | மாயைகோலாகலகதி ... ... | ௧௮௮ |
| ௮ | ,, | வசவண்ணர்வந்தகதி ... ... | ௨௨௪ |
| ௯ | ,, | அக்கமாதேவியுற்பத்திகதி ... | ௨௪௩ |
| ௧௦ | ,, | அக்கமாதேவிதுறவுகதி ... ... | ௨௭௨ |
| ௧௧ | ,, | கொக்கிதேவர்கதி ... ... | ௩௦௦ |
| ௧௨ | ,, | முத்தாயியம்மைகதி ... ... | ௩௧௬ |
| ௧௩ | ,, | சித்தராமையர்கதி ... ... | ௩௨௯ |
| ௧௪ | ,, | வசவண்ணர்கதி ... ... ... | ௩௬௪ |
| ௧௫ | ,, | மருளசங்கரதேவர்கதி ... ... | ௩௮௭ |
| ௧௬ | ,, | இட்டலிங்ககதி ... ... ... | ௪௦௦ |
| ௧௭ | ,, | கதலிவனகதி ... ... ... | ௪௨௧ |
| ௧௮ | ,, | சாதகாங்ககதி ... ... ... | ௪௩௧ |
| ௧௯ | ,, | கோரக்கர்கதி ... ... ... | ௪௪௨ |
| ௨௦ | ,, | முனிவரர்கதி ... ... ... | ௪௭௭ |
| ௨௧ | ,, | சூனியசிங்காதனகதி ... ... | ௪௮௮ |
| ௨௨ | ,, | சூனியசிங்காதனத்திலிருந்தகதி ... | ௪௯௭ |
| ௨௩ | ,, | ஆரோகணகதி ... ... | ௫௨௮ |
| ௨௪ | ,, | மனோலயகதி ... ... ... | ௫௫௮ |
| ௨௫ | ,, | மான்மியகதி ... ... ... | ௫௭௨ |

உ

சிவமயம்.

# பிரபுலிங்கலீலை.

பிரபுவெனல் எல்லாமா யல்லவுமா யிருக்குந்தன்மை. லிங்கமெனல் ஆன்மா. லீலையெனல் திருவிளையாடல். எனவே; விஸ்வதைசத பிராக்ஞமாயும்; அல்லாததா யும், விளங்குவ தான்மாவென விருமுகத்தாலுஞ் சோ தனையாதிகளாற் கண்டாம். காணவே துக்கநிவிர்த்தி தடையற்றவானந்த மெய்தற்கியைவதை யிம்மையிற்று னே யனுபவமாகப்பெற்றும். பெறவே; தானயலாகாது தானேதானுதற்கையந்திரி பில்லாமையைத் தேர்ந்தாம். இந்நூற்பெயர் ஆன்மாவினது திருவிளையாட்டை யுண ர்த்து நூலெனப் பொருடரலால், ஆறுமவேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையெ னக் காரணக்குறியாயிற்று.

லிங்கமெனல் அயலையெனில் திரிபுடிதோடமும் சுசாதிகாதிதோடமு மையமின்றி யெய்தற்பால வாத லின் மறுக்கற்பாற்று. இக்கருத்தை மறுப்பார் அந்தர் முக நாட்டக் கல்வி கல்லார்போலும்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிரபுலிங்கலீலை

## முகவுரை.



இந்நூற் றுணைசொலப்புகுவார், இந்நூல் முக்கியவிடயம மாயையும் அல்லமனு மாதலானும்; மாயையை யிதனை யெனற்கும் அல்லமனைச் சதமென்றற்கு மவரவர் தாய்தந்தைப் பெயர்களை காரணவிடுகுறியா நிற்றலானும்; அறிவேவடிவா விளங்குபவர்க்கன்றி யேனையோர்க்குப் புலப்படுதற் கரிதாதலினானும்; கல்விமேலீட்டி னாக்கம திரிசொல்லின்கண் ணாதலின் இந்நூலைத் திரிசொல்லாலாக்கியது கசடறக்கற்றோர்க் கிந்நூல் விடயத்தைக் காருண்ணியத்தால் விளக்கித் துக்கநிவிர்த்தி தடையற்றவானந்தம் மிகப்பெருக்கற்காதலினானும்; இது விடயமண்ணின் றழிபவர்க் கினிய பண்டங்காட்டித் தக்க அவுடதந் தருவார் போலு மாதலினானும்; ஆன்மாவாகிற தன்னையன்றிச் சச்சிதானந்த மில்லையெனலால் விழுமியது பயத்தலென்னுமழகும், ஏவர்க்குமு முடிவிட மிதுவாதலானும், இதனைமுடித்துக் காட்டலானும, முடித்துக்காட்டல் முடிவிடங்கூறலென்னும் உத்தியிரண்டும, பரசிவப்பிரமமென்னுங் கவியில் நிர்விகாரத்தில் விகாரந் தோன்றியதாக நாட்டி, முடிவில் விகாரமயமாகிய மாயையென்னுங் கற்பிதம் அல்லமனென்னும் நிர்விகாரத்தி லில்லாததாக நிறுத்தியது பழுதையிற் பாம்புபோலு மாதலால், தாஅனுட்டித் தனது சிறப்பென்னு மதமு மமைதற்கிடம்பெறு மாதலானு மிவற்றை நன்குணர்ந்த வனுபவிக ளாகவேண்டுமென்க.

# சாத்துகவிகள்.

இஃது

சென்னைச் சருவகலாசாலைத் தமிழ்த்தலைமைப்புலவர்

கோமளபுரம்

## இராஜகோபாலபிள்ளையவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

---

பதியினிலையிற் றெருளில பாசநிலையிற்
றலைபில பசுவி னீடு
விதியினிலையிற் றெனவுமைகையி னெல்லிக்
கனிபோல விளக்கி மேலோர்
மதியினிலைக் குறுபிரபு லிங்கலீலைப்
பெரிய மானூற் கொல்காத
துதியினிலையு றச்சொற்றுணைச் சசிதா
னந்தனெனுந் தூயமை யோனே.

---

இஃது

ஷை பிள்ளையவர்கள் மாணாக்கரும்

இயற்றமிழ்ப் போதகாசிரியருமாகிய

## மயிலை. சண்முகப்பிள்ளையவர்கள்

இயற்றிய

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

---

முக்காலத் துளசதுர்க் காமலமு னிராங்கார முன்னு
கஞ்ஞானத் தெழுது மூதுலகின் யாண்டும

சாற்றுகவிகள்.

எக்காலத் துமமிலநாம சத்தாய மாயை
யிணைந்து மமகார மோகினியி னிடத்தெழலும்
அக்காலத் துளகாதை யெனப்பல கற்பனைக
ளமைதரநஞ் சிவப்பிர காசப் பெருமானருள
இக்காலத் தப்பரிமே லழகரெனச் சச்சிதா
னந்தமெம் மிறைவ னியம்பினனே ருரையே.

---

இஃது
சென்னைமாநகரம்
இராயபுரம்
வே. கி. நாராயணசாமிப்பிள்ளையவர்கள்
இயற்றிய
அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

---

பூமேவும் பொழிற்றுறைமங் கலவீர
சைவ வெழிற் பூமானாகித்
தூமேவு மநெறிசெல் சிவப்பிரகா
சப்பெயர்கொள் தூயோன் சொற்ற
நாமேவும் பிரபுலிங்க லீலையெனு
நூற்குரையை நன்குரைத்தான்
காமேவு மீசூர்ச்ச சிதானந்த
னெனுமதுர கவிஞரேறே.

நேரிசை வெண்பா.

இலிங்கமே தானென் றிலங்கற் குபிர
புலிங்கலீ லைப்பெருநூற் பொங்கி—யொலித்தலினைக்
கண்டுரைசெய் தான்சச்சி தானந்தன் காண்போர்கற்
கண்டெனவே கொள்வார் களித்து.

## சாத்துகவிகள்.

மாபுலிங்கன் தானாய் வயங்குதிரு ஞான
பிரபுலிங்க லீலையெனும் பேர்நூற்—கரியதிறத்
தின்னுரைசெய் தான்புலவ ரேந்துசச்சி தானந்தன்
றன்னுரைநே ருண்டோ தகை.

---

இஃது.

அஷ்டாவதானம்

### பூவை. கலியாணசுந்தர முதலியாரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

---

தகைமிகுந்த ப்ரபுலிங்க லீலையெனுங்
கடற்படிந்து சார வீர
வகைமிகுந்த நீர்மடுத்துப் பொய்ப்புலமை
யெனும்பாந்தள் வாட ஞான
சிகைமிகுந்த புரையெனுமோர் தேன்மழையைப்
பொழிந்ததருட் செல்வப் பேற்றுற்
றிகைமிகுந்த புகழ்ச்சச்சி தானந்தக்
கருணைமுகில் சிறக்க தானே.

---

இஃது.

திருமூலர்மரபில சதாசிவப்பிரமயோகீசர் மாணாக்கர்

### தே. சுப்பராயமுதலியாரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

---

சிறந்திடு ஞானச் சிவப்பிர காசச் செம்மலன்
புடனக மகிழ்ந்து

சாந்துகவிகள்.

செப்புதற் கரிய வல்லமன் சரிதந் தெள்ளமிர்
    தந்தனைத் தெருட்டி
அறத்தினை விளக்கு பாயின மாக வறைந்தன
    னதனைக் குறவே
யாய்ந்துமே லுத்தி யனுபவப் படியே யகவிலக்
    கணமவழா தமைத்து
இறப்பிறப பயித்தை நீங்கியே சுகவாழ்
    வெளிதினி னடைந்திட வின்சத்
தினியநற் பொழிப்பு கருத்தொடு விருத்தி
    யெனுமுறை யிசைந்திட வுரைத்து
மறப்பிலா தளித்தா னண்ணலீ சூர்வாழ மாதவன்
    சச்சிதா னந்த மகிபனிவ் வுலகி
லடியார்க ளுய்ய பாரிபோற்
    பொழிந்தனன் மாதோ.

---

இஃது.

திருமுக்கூடலென்னுந் திருப்பதியில் சதாநிஷ்டரா யெழுந்தருளியிருக்கும்

ஸ்ரீமத். முனியப்பசுவாமிகள் மாணாக்கர்

மணிமங்கலம் திருவேங்கடமுதலியாரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

---

நந்தலில்லே தாந்தமகா வாக்கியமிங்
    கோங்கவரு ணலத்தெழுந்த
செந்தமிழிப் பிரபுலிங்க லீலைதனைச்
    சூளையொன்று தெரித்திட்டாளுஸ்

## சாத்துகவிகள்.

பந்தமிலப் பிரமமே சிவப்பிரகா
சையனெனப் படிவந் தாங்கி
வந்ததெனக் கடுக்கு மெழிற்
சச்சிதா நந்தகுரு மணியின் றம்மா.

அகம்பிரம மென்பதறி யாதவெறு மூடர்
சகம்பிரம மென்பதறிந் தோங்கவுரை—தந்தான்
மகம்பல வியற்றவுயர் மாநிடம தெல்லா
முகந்திவ ணுறுஞ்சச்சி தானந்த முனியே.

பேருலகு சித்திற் பிறங்குநிலை காட்டியருட்
சீருலவு தேசிகநற் சீயமே—நேரில்
அகம்பிரம மென்ன வறியா ரறியுந்
தகையிவ் வுரைதந்தான் றுள.

---

இஃது.

ஷை யுரையாசிரியர் மாணாக்கராகிய

## சென்னை. அ. முனிசுவாமிநாயகரவர்கள்

இயற்றிய

நேரிசையாசிரியப்பா.

---

கடல்சூ ழுலகின் கண்ணக னிலத்து
ளுடலேற் றுழல்பல் லுயிர்கண் மயக்கா
லொன்றையொன் றுக வுணர்ந்தவம் புரிந்து
வன் றுயர்க் கிடனாய் வருபிறப் பிறப்பாம்
வேலா வலயத் துழியே வீழ்ந்து
மாலான் மருண்டு வாளாஅக் கிடத்தலை
அரும்பரம் பொருள்கண் டகற்றுவான் மனித

சாற்றுகவிகள்.

வருவெறித் தென்ன வொளிர்துறை புங்கலத்
திடைசிவப் பிரகா சன்னென விலங்கி
யடைநெறி சைவ மதம்பதி றுறனுள்
வீர சைவம விசேடம தாசலின்
பாரமர் பாகிகள் பணிதரற் பொருட்டு
வொருமூன் றுயுட் பருவத் தாடே
திருச்சர தலமதிற சிவபிராஅன் றனை
மருக்கமழ பூங்கொடு மகிழ்ந்தருச் சித்தும்
பெருமிதச் சரும்பொன் பெண்பூ விவற்று
ளடைபய னென்றுயின் றென்றே யமிதர
ரடையுட னிலத்தி னசித்திடு காறுந்
துறவற நெறிவழா அ தருற்றித் துன்னிய
மரம்பொரு ளின்பம்வீ டடைதரற் பொருட்டா
யமைந்துள முதனூற் கருத்துணர்ந் தான்றோர்
சமைத்தனர் வழிநூற் சார்புநூ லிவற்றை
யறியா தெளிய நடையென மதித்தவை
மதிக்கும் புலவர் செருக்கினை மாழ்க
வியற்றமிழ்ப் புலமை யெளிதி னுணர்ந்து
புகழுடை யதுபிர புலிங்க லீலையாந்
திகழுமிந் நூற்குரை செய்குது மென்று
நீடுறு கல்வியி னிகரகத் தியனுய்ப்
பீடுறு சரவணப் பெருமா ளையன்
விரித்தன னுரையெழின் மாயைப் பாரவ
சரித்திடுங் கதிமட் டும்பின் றனயனுய்த்
தடித்திடுங் கந்த சாமி யையனும்
வடித்தன னுரைவச வண்ணர் வந்துறுங்
கதிவரை யினுமேற் கதிபதி னேழினுக்
கதிகரியா யுரை யறைவதற் கியலா
மற்போ யினரான் மாசறு ஞானங்

கற்றோர் பலருங் கவின்பெறு மிந்நூற்
குணாமுற் றிமொ றுரைத்தருள் கென்று
நிரைபரி பூரண நிலைதரு மிந்திர
பீடங் கரபாத் திரனாற் பிறங்கு
நாடரு மாதீ னத்தைத் தொடர்ந்து
வாழ்பிறை யாற்றரு ணாசலன் மலர்ப்பதந்
தாழ்ந்தருள் பெற்றுச் சரித்திடு மீசூர்
சச்சிதா நந்த தயாநிதி தன்னை
யுச்சி மீக்கரங் குவித்துற வழுத்தியே
வெண்டின ரருளால் வியந்துரை செய்தனைத்
தாண்டிடு மார்பிர கடனமுஞ் செய்தல
கேலாக் கனிப்போ டெவரு
மேலாக் கொளவே வெளியிட் டனனே.

துறைமங்கலம்

# சிவப்பிரகாசசுவாமிகள்

## சரித்திரம்.

தொண்டைநாட்டிலே சப்தபுரிகளுள் ஒன்றாய் விளங்குகின்ற காஞ்சீபுரியிலே (௨௯௫-வரு)த்துக்குமுன் தொண்டைமண்டலத்தார் மரபிலுள்ளோருக்குக் குருவாகவிருந்த குமாரசுவாமிபண்டாரமென்பவர் திருக்கார்த்திகைக்கு திருவண்ணாமலை யாத்திரை போகும்போது, வழியில் ஒருநந்தவனத்திற் பகலிறங்கிச் சிவபூசைசெய்து அன்று சாயங்காலம் அந்தத்தலம்போய்ச் சேர்ந்து ஈசானிய தீர்த்தத்தில் அநுஷ்டானஞ் செய்துகொண்டு பூசைப்பெட்டகமெங்கேயென்று தம்முடைய பரிசாரகரைக்கேட்க, அதற்கவர்கள் பகலிறங்கியிருந்த விடத்திற்றானே வைத்து மறந்துவந்ததாக விண்ணப்பஞ்செய்ய அப்பொழுது அவர் மிகவும் வியாகுலமுற்றவராய்; அந்தப்பரிசாரகரோடு உள்ளூர் மனிதனொருவனைக்கூட்டிப் பகலிறங்கியிருந்த இடம்வரைக்கும் போய்ச் சோதனைசெய்து வரும்படி சொல்லியனுப்பிப் பின்பு தாமும் தமதுமனைவியும் ஓரிடத்திற் றங்கியிருந்து நம்முடைய ஆத்மார்த்தமாகிய உடையவனைப் பிரியும்படி நேரிட்டதேயென்று சஞ்சலப்பட்டுக்கொண்டு அன்றிராமுழுதும் துயிலின்றிச் சிவத்தியானம் பண்ணிக்கொண்டிருக்கும்போது, இவரது புண்ணிய முதிர்ச்சியினாலே அண்ணாமலையார் ஒரு சங்கமராகத் திருவுருக்கொண்டு இவரிடத்திற்கு எழுந்தருளி நீர் மனோதுக்கமடையவேண்டிய தென்னவென்று கேட்க; இவர் தமக்கு நேரிட்டிருக்கும் ஆபத்தை விண்ணப்பஞ்செய்ய அதற்குச் சுவாமியானவர் நீர் அங்கம் வேறு இலிங்கம் வேறாக விருத்தலால் பிரியலாயிற்று. லிங்காங்க சம்பந்தியா யிருந்தால் இப்படிக்கு நேரிடமாட்டாதே யென்று வீரசைவ சமயாசார நெறிகளைக் கிரமப்படி போதித்து உமது பூசைப்பெட்டகம் உதயத்தில் வந்துசேரும். ஆகிலும் நீர் இதுமுதல் லிங்கதாரணஞ் செய்துகொள்ளுமென்று அநுக்கிரகிக்க, அதற்கிவர் எனதுசிஷர் பந்துக்கள் முதலானவர்களுக்கு இச்செய்கை விரோதமாக இருக்குமென்று விண்ணப்பஞ்செய்ய; அதுகேட்டுச் சுவாமியானவர் இந்தச்சிஷர் முதலியோ

ரால் உமக்கு யாதொரு பயனுமில்லை. ஆதலால், நாமுரைத்தபடியே சிவலிங்கதாரணஞ் செய்துகொண்டால் உம்மிடத்தில் மூன்றுபுத்திரரும ஒருபுத்திரியும் அவதரிப்பார்கள். அவர்களால் இகபரசாதகமுண்டென்று அருளிச்செய்ய அதற்கிவருடன்பட்டனர். அப்போது சுவாமியானவர் இந்த ஆலயத்திற்குத் தெற்கு வீதியிலிருக்கும் குருதேவரிடத்திற்குச் சென்று தாரணதீக்ஷை செய்துகொள்ளுமென்று அநுக்கிரகித்து இதைக் குருதேவருக்குந் தெரிவித்து அந்தர்த்தானமானார்.

பின்பு விடியற்காலத்திற் பூசைப்பெட்டகம் வந்துசேர்ந்தது. அப்பொழுது குருதேவர் உத்தரவின்படி அவரது அடியார்கள் இவரைத் தேடிவந்தழைக்க அவர்களுடனே மடம்போய்ச் சேர்ந்து குருதேவரைத்தரிசித்து அவராலே தாரணதீக்ஷை அநுக்கிரகிக்கப்பெற்றுத் திருக்கார்த்திகைத் திருவிழா நிறைவேறிய பின்பு கச்சிப்பதிக்கு வந்து சேர்ந்து தமது அநுஷ்டானத்தின்படியே சிஷருக்கும் தாரணதீக்ஷை செய்துகொண்டிருக்கும் காலத்தில் முன்பு அண்ணாமலையார் அநுக்கிரகித்தபடியே மூன்று புத்திரர்களும் ஒருபுத்திரியும் அவதரித்தார்கள். அவர்களுக்கு முறையே சிவப்பிரகாசமென்றும், வேலாயுதமென்றும், கருணைப்பிரகாசமென்றும், ஞானாம்பை யென்றும் நாமகரணஞ் செய்து உரியபருவத்தில் வித்தியாரம்பஞ் செய்வித்து வளர்த்துவரும் காலத்தில்; தந்தையாகிய குமாரசுவாமியையர் சிவலிங்கயிக்கமானார். பின்பு ஜேஷ்டராகிய சிவப்பிரகாசசுவாமிகள் தனது தாயாரையும் சகோதரர்களையும் அழைத்துக்கொண்டு அருணாசலம்போய்ச் சேர்ந்து குருதேவரைத் தரிசித்து அவ்விடத்திற் சிலகாலம் வாசஞ்செய்யும் நாள்களுள், ஒருநாள் அந்தச் சோணசைலத்தை வலம்வரும்போது சோணசைலமாலையென்று நூறு செய்யுள் தோத்திரஞ் செய்தருளினார்

இன்னும் இலக்கணப் பயிற்சிக்காகத் தக்ஷிணபோக வெண்ணித் தனது சகோதரர்களுடனே புறப்பட்டு வாலிகண்டபுரத்துக்குத் தெற்கே ஐந்துகடிகை தூரத்தில் துறைமங்கலமென்னும் கிராமத்துக்கு வடதுபக்கத்திலிருக்கும் ஓர் நந்தவனத்திலிறங்கிச் சிவபூசை செய்துகொண்டிருந்த செய்தியை அந்தக்கிராமாதிபதியாகியும் தாரணவானாகியும் குருலிங்க சங்கமத்தினிடத்தில் மிகுந்த அன்புள்ளவராகியு மிருந்த அண்ணாமலைரெட்டியார் கேள்வியுற்று அந்த நந்தவனத்துக்குவந்து அவரைத் தரிசித்தமாத்திரத்திலே அவருக்குப் பணிவிடைசெய்து அநுக்கிரகம் பெற வேண்டுமென்றெண்ணிச் சுவாமிகளைநோக்கி இவ்விடத்திற் சிலகாலம

வாசஞ்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து சுவாமிகளது அநுமதிபெற்றுத் தங்கள் குருவாகிய சென்னபசவையர் மடத்துக்கு அடுத்த மேல்புறத்தில் ஒருதிருமடங் கட்டிக்கொடுத்துத் தாமும் அவருக்குப் பக்திசெய்து கொண்டுவந்தார்.

சுவாமிகளும் அங்கே இரண்டுவருஷகாலவரையில் அண்ணாமலை ரெட்டியாருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக்கொண்டிருந்து, தாம் கொண்டகருத்தை நிறைவேற்றவேண்டித் தக்ஷிணம் போய்வரவேண்டுமென்று ரெட்டியாரிடத்திற்சொல்லிக்கொண்டு திருநெல்வேலிக் கெழுந்தருளியபோது அதன் கீழ்ப்புறத்தில் தாம்பிரபர்ணி நதியின்கரையி லிருக்கின்ற சிந்துபூந்துறையில் தருமபுரத்தாதீனத்தைச்சார்ந்த வெள்ளியம்பலவாண தம்பிரானென்பவர் இலக்கணத்தில் மிகுந்த வல்லவராயிருக்கின்றா ரென்பதைக்கேள்வியுற்று அவ்விடத்திற்சென்று அவரைக்கண்டமாத்திரத்தில் அவர் சிவப்பிரகாசசுவாமிகளைப் பார்த்து நீங்கள் நம்மிடத்திற்கு வந்தகாரியம என்னென்றுவினவ; அதற்குச்சுவாமிகள் இலக்கணங் கற்கவேண்டி வந்தோமென்றுசொல்ல அப்போது தம்பிரான் இவரது இலக்கியப்பயிற்சியை அறிதற்பொருட்டு (கு) என்றெடுத்து [ஊருடையானென்று] இடையில் வைத்துக் குவ்விறுதியாக ஒரு வெண்பா முடித்துக்காட்டுக வென்று கேட்க அதற்குச் சுவாமிகள் அருளிச்செய்த

வெண்பா.

> கூடக்கோடு வானெயிறு கொண்டார்க்குக் கேழன்
> மூடக்கோடு முன்ன மணிவார்க்கு—வடகோடு
> தேருடையான் றெவ்வுயிர்க்குத் தில்லைதோன் மேற்கொள்ள
> லூருடையா னென்னு முலகு.

என்று அருளிய வெண்பாவில் வடக்கோடுதேருடையானென்றதற்குத் தம்பிரான் மிகவும்வியந்து சிவப்பிரகாசசுவாமிகளைத் தழுவிக்கொண்டு தமது ஆசனத்திற்சமமாக விருக்கச்செய்து அவருடைய சகோதரர்களுக்கு ஐந்திலக்கணங்களையும் ஒருபக்ஷத்துக்குள்ளே பாடஞ்சொல்லி நிறைவேற்றிய பின்பு சுவாமிகள் தங்களுக்கு அண்ணாமலைரெட்டியார் கொடுத்த முந்நூறுபொன்னையும் குருதக்ஷிணையாக வைப்பித்து உபசாரஞ்சொல்ல; அதற்குத்தம்பிரான் நமக்கிது வேண்டாம்; திருச்செந்தூரில் ஒருதமிழ்ப்புலவர் நம்மை தூஷித்துக்கொண்டிருக்கிறார்; அவரைக் கல்வியிலவென்று நமமிடத்தில்வந்து வணங்கும்படி செய்விக்கவேண்டுமென்றுசொல்லச் சுவாமிகள் அதற்கிசைந்து தம்பிரானால் அனுப்பப்பட்ட

மாணாக்கரோடு தம்மும் திருச்செந்தூருக்குப்போய் முருகக்கடவுளைத் தரிசனஞ்செய்து பிரதக்ஷிணம வரும்போது, அந்தத் தமிழ்ப்புலவர் சுவாமிகளோடு கூடவந்த மாணாக்கரைக்கண்டு இவர் யாரென்றுகேட்க; அதற்கவர்கள் தம்பிரானிடத்திற் பாடங்கேட்டவரென்று சொன்னபோது; அந்தப்புலவர் தம்பிரானைத் தூஷிக்க ஒருவருக்கொருவர் கலகம் நேரிட்டு அப்போது புலவர் சிவப்பிரகாசசுவாமிகளோடு நூதனமாகப்பாடி வெற்றிக்கொள்வோமென்று நினைத்து; நீரோட்டயமகமாகப் பாடுகிறதென்றும் அப்படிப்பாடுகையில் நம்மிருவருள் தோல்வியடைகிறவர் பாடிமுடித்தவருக்கு அடிமையாகிறதென்றும் பேசிக்கொண்டு, இருவரும் பாடத் தொடங்கினார்கள். அப்போது சிவப்பிரகாசசுவாமிகள் திருச்செந்தினீரோட்டயமகவந்தாதியென (௩௦) கலித்துறைதோத்திரஞ் செய்துடனேமுடித்தார். அப்புலவருக் கொருபாடலும் நிரமபாமையால் தோல்வியடைந்து சுவாமிகளைவணங்கி அடிமையாயினேனென்றுசொல்ல; அப்புலவனையுங் கூட அழைத்துக்கொண்டு தம்பிரானிடத்திற்கு வந்து அடிமையாகச் செய்வித்ததால் தம்பிரான் திருவுளமகிழ்ந்து சுவாமிகளைப் பார்த்துத் தேவரீர் சிதம்பரத்தில் சிலகாலம் வாசஞ்செய்யவேண்டுமென்று கேட்க; அதற்கு உடன்பட்ட சிவப்பிரகாசசுவாமிகள் அவரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு அவ்விடத்திலுள்ள சிவஸ்தலங்கடோறுஞ் சென்று தரிசனஞ்செய்தபின்பு, துறைமங்கலம் வந்துசேர்ந்து அண்ணாமலைரெட்டியாருக்கு முன்போலவே அநுக்கிரகித்துக்கொண் டிருக்கும்போது தமதன்பராகிய அண்ணாமலைரெட்டியார் பொருட்டு அவரது கம்பத்தக் கிராமமாகிய வாலிகண்டபுரத்துக்கு வாயுமூலையிலிருக்கும் வெங்கைமா நகரத்தில் வந்தெழுந்தருளிய பழமலைநாதர்மீது தோத்திரமாக வெங்கைக்கோவை, வெங்கைக்கலம்பகம், வெங்கையுலா, வெங்கையலங்காரம் என்னும் நான்கு பிரபந்தமுஞ் செய்தருளியபின்னர், அண்ணாமலைரெட்டியாரை அழைத்துக்கொண்டு சிதம்பரத்திற்குப்போய் ஒரு திருமடங்கட்டுவித்து அதிற் சிலகாலம் வாசஞ்செய்திருந்து, பின்பு விருத்தாசலத்துக் கெழுந்தருளி பழமலைநாதர்பேரில் அந்தாதியும், பிக்ஷாடனநவமணிமாலையும், கொச்சககலிப்பாவும், பெரியநாயகியம்மைபேரில் (௧௩) கலித்துறையும், (௪௦) கழிநெடிலவிருத்தமும் திருவாய்மலர்ந்தருளிச் சிலகாலம் அவ்விடத்தில் வாசஞ்செய்யும்போது, ஒருநாள் மணிமுத்தாநதியின் கரையிலிராநின்ற தோட்டத்தி லுதிர்ந்து கிடந்த மனோரம்மியமாகிய ஒருமாம்பழத்தைச் சிவநைவேத்தியஞ் செய்யத்தக்கதென்று கையிலெடுத்துக்கொண்டு வருகையில், அதைக்கண்ட தோட்டககாரன்சுவாமிகள் மனவருத்தமுறும்படி கோபித்தபோது அருளிச்செய்த

வெண்பா.

அடுத்துவருந் தொண்டனுக்கா ளந்தகனைத் தாளா
லடர்த்ததுவுஞ் சத்தியமே யானு—லெடுத்தொரு
மாங்கனிக்கா வென்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்.

பின்பு வடதிசையை நோக்கிக் காஞ்சீபுரத்தைத் தரிசிக்கவரும் போது பேரூரவிசிரசியிலிருந்து சாந்தலிங்கசுவாமிகள் மார்க்கத்தில்வர அவரைக்கண்டு கூடவே அழைத்துக்கொண்டு பொம்மையபாளையத்துக்குச் சமீபமாக வந்தபோது சாந்தலிங்கசுவாமிகள் சிவப்பிரகாசசுவாமிகளைப்பார்த்து, நாம் சிவஞான சுவாமிகள் சன்னிதானத்துக்குப்போய்த் தரிசனஞ்செய்யவேண்டு மாதலால் அவர்பேரில் தோத்திரமாகச் சிலபாடல்கள் செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ததற்கு, அடியேன் நரஸ்துதி செய்கிறதில்லையென்று சொல்லிய அன்றிராத்திரி ஓரிடத்திற் றங்கி யிருந்தபோது, இவரது ஸ்வப்பனத்தில் முருகக்கடவுள் மயில்வாகனரூடராய் எழுந்தருளி ஒருபாத்திரத்தில் விடுபுஷ்பங்களைவைத்து இம்மலரை மாலையாகத்தொடுத்து நமக்கணியவேண்டுமென்று திருவாக்குச் செய்தபடியால்; விடியற்காலத்திலே சிவப்பிரகாசசுவாமிகள் நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு தாம் கண்டஸ்வப்னத்தைச் சாந்தலிங்கசுவாமிகளுக் கறிவிக்க அதற்கவர் தேவரீர் பாமாலைதொடுக்கக் கூடாதென்று சொல்லியபடியால் அப்பாமாலையே தொடுக்கவேண்டி குறிப்பித்தபடி யென்ற மாத்திரத்திலே பாலைய சுவாமிகள்பேரில் தாலாட்டு, நெஞ்சுவிடுதூது, கலம்பகம இம்மூன்று பிரபந்தமுஞ் செய்துகொண்டுபோய்ச் சன்னிதானத்தி லரங்கேற்றி ஞானோபதேசம்பெற்று அந்த ஞானசாரியரது கட்டளையின்படி தமது தங்கையாகிய ஞானம்மையைச் சாந்தலிங்கசுவாமிகளுக்கு விவாகஞ்செய்து கொடுத்துப் பின்னர் காஞ்சீபுரம்வந்து சிலகாலம் வாசஞ்செய்துகொண் டிருக்கும்போது மேற்சொல்லிய பாலைய சுவாமிகள்பேரில் பிள்ளைத்தமிழும், திருப்பள்ளியெழுச்சியும், அதிசயப்பத்துஞ், செய்தருளினார். மற்றொருகாலத்தில் அண்ணாமலைரெட்டியார் சுவாமிகளை விவாகஞ் செய்துகொள்ளும்படி பிரார்த்தித்தபோது அருளிய

கொச்சகக்கலிப்பா.

சேய்கொண்டா ருங்கமலச் செம்மனுடனே யரவப்
பாய்கொண்டான் வந்துதொழும பட்டீச் சுரத்தரனே

நோய்கொண்டா லுங்கொளலா நூறுவய தளவிருந்தும்
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே.

பின்பு கருணைப்பிரகாசசுவாமிகளை விவாகஞ்செய்துகொள்ளப் பிரார்த்தித்தபோது அவர் செய்தருளிய பாடல்.

நாணியென்பதை நாரியென் றுரைத்திடு நசையால்
வேணுவானது விளைந்துபோய்ப் புகுந்தது வென்றாற்
காணலாவதோ ருருவமெய் நாரியைக் கண்டால்
பூணுவார்மயல் காளைய ரென்பதும் புதிதோ.

என்று சொல்லிய பாடலின்கருத்தைச் சுவாமிகள் அறிந்து தனது சகோதரரிருவரையும் இல்லறத்தி லிருக்கச்செய்து தாம் துறவறமாக வெழுந்தருளியிருந்து, பிரபுலிங்கலீலை, சித்தாந்தசிகாமணி, வேதாந்த சூடாமணி, சிவப்பிரகாசவிகாசம், தர்க்கபரிபாஷை, திருக்கூவப்புராணம், சதமணிமாலை, நால்வர்நான்மணிமாலை, நிரஞ்சனமாலை, கைத்தலமாலை, அபிஷேகமாலை, இஷ்டலிங்கப்பெருங்கழிநெடில், குறுங்கழிநெடில், நன்னெறி, சிவநாமமகிமை, அன்றியும் திருப்பதிகம்பெற்ற தலங்களொவ்வொன்றுக்கு இரண்டிரண்டு வெண்பாக்களும் செய்தருளினர். இவர் சகோதரர் வேலைய சுவாமிகள் நல்லூர்ப்புராணம், இஷ்டலிங்கக் கைத்தலமாலை, கும்பகோணஞ் சாரங்கதேவசரித்திரமாகிய வீரசிங்காதனபுராணம், குகநமச்சிவாயமூர்த்திகள் சரித்திரமென்னும் நமச்சிவாய லீலை, கிருஷ்ணசரித்திரபாரிசாதலீலை, மயிலத்திரட்டைமணிமாலை, என்னும் இப்பிரபந்தங்கள் செய்தருளினர். இவரது கனிஷ்டராகிய கருணைப் பிரகாச சுவாமிகள் இஷ்டலிங்கவகவல், திருக்காளத்திப்புராணத்தில் சீகாளத்திச்சருக்கம் வரையிலுஞ் செய்தருளி வெங்கைமாநகரத்தில் (கஅ-ஆம்) வயதில் சிவலிங்கமிக்காயச் சமாதியானர். அப்போது யாத்திரையாக வெழுந்தருளியிருந்து வந்த சிவப்பிரகாசசுவாமிகள் செய்தருளிய

விருத்தம்.

முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுளைந்து கண்டசுவை முதிராச்சியாலே, தன்னியலை முழுதுமுணராத் தமையாமுன் னினைக்கவர்ந்து தடங்காளத்தி, மன்னவனுண் டாமெனது மாதவத்தின் வலிதிம மண்ணின்மீதே, யென்னுடன்வந் தவதரித்த விளைய கருணைப் பிரகாச னென்னுங் கோவே.

அப்பொழுது வேலையசுவாமிக ளருளிச்செய்த விருத்தம்.

ஆண்டதனை லெனையொவ்வாய் வித்தைதயினிற் றமயனினு மதிகமென்றே, பூண்டவுல கதனினுள்ளோர் புகல்வதுகேட் டிருந்துமென்ன புதுமைதானே, காண்டருகண் மணியேயநல் விளங் கருணைப் பிரகாசக் காளாய்நீதான், மாண்டனையென் றறிந்திருந் துமுயிர்தரித்தேன் யானுமிரு வன்னெஞ்சேனே.

பின்பு சிவப்பிரகாசசுவாமிகள் மிகவும் மகிமையோடிருந்து காளத்திப்புராணத்தில் கண்ணப்பர்சருக்கமும் நக்கீரர்சருக்கமும் செய்தருளி (௯௨-ஆம்) வயதிலே நல்காதூரில் பாலைய சுவாமிகளால் விடப்பட்டிருந்த மடத்திலே சிவலிங்கயிக்கமாய்ச் சமாதியாயிற்று.

அப்போது வேலையசுவாமிகள் அருளிச்செய்த வெண்பா.

அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
சொல்லு மிருவரிடைத் தோன்றியயான்—முல்லை
யருமபிற் பொலியு மணிமுறுவ னல்லாய்
கரும்பிற் கணுநிகாதுமேதன் காண்.

பின்பு காளத்திப்புராணத்தைப்பாடி நிறைவேற்றிப் பெருமத்தூர் மடத்தில் (௭௨-ஆம) வயதில் சிவலிங்கயிக்கமாய்ச் சமாதியாயினர்.







ஸ்ரீ கல்ஹார கிரியென்னும் திருத்தணிகையில் நிகமாகமோக்த ஸிவாத்வைத ஸித்தாந்த ப்ரவர்தக வீரமாஹேஸ்வரரும், ஜகவிம்ஸதி தீக்ஷாஷ்டாவரண பம்சாசார சதுஷ்ஷஷ்டி ஸ்ரீலஸம்பந்நரும், ஸச்சிதாநந்த ஸ்வரூபை கலிம்க நிஷ்டாம்பரரும் ஆகிய விரூபாக்ஷதேவர் ஸ்ரீசுப்ரஹ்மணிய ஸ்வாமி திருவருளினால் மஹிமையோடு பாம்திபராய் விளங்கி இருந்தனர். இவர்புத்திரர் முத்தையர், இவர்தநயர் ஸாமபஸிவையர், இவர் குமாரர் மஹாவித்வானாகிய கந்தப்பையர். திருத்தணிகை ஐங்கரமாலை, முருகர் தாலாட்டு, அநுபூதி, தயாநிதிமாலை, பிள்ளைத்தமிழ், கலம்பகம், உலா, மலைவெண்பா, சிலேடைவெண்பா, வெண்பாவந்தாதி, சந்நிதிமுறை, ஸ்தலபுராணம், வேலாயுதசதகம், திருப்பதியிலெழுந்தருளியிருக்கும் முருகக்கடவுளுக்கும் திருமாலுக்கும் சிலேடையந்தாதி, அபிஷேகமாலையுரை, பழமலையந்தாதியுரை, திருச்செந்திநீரோட்டகயமகவந்தாதியுரை இதுமுதலியன நூதனமாகச்செய்தருளினார், பின்பு இவர் தவத்தினாலும் ஞானசத்திதருடைய வரத்தினாலுந் தோன்றிய இவர் புதல்வர் புலவர்திலகராகிய சரவணப்பெருமாளையர், திருவள்ளுவநாயனார்குறள் உரை, திருவள்ளுவர் மாலையுரை, இலக்கணச்சுருக்கவினாவிடை, நன்னூற்காண்டிகையுரை, நைடதம் கைக்கிளைப்படலம்வரைக்கும் உரை, நாலடிநானூறுரை, வெங்கைக்கோவையுரை, குளத்தூர்ப்புராணம், கோளதீபிகை, அணியியல்விளக்கம், இயற்றமிழ்ச்சுருக்கம், பிரபுலிங்கலீலை மாயையினுற்பத்திகதிவரைக்கும் உரை இவைமுதலியன நூதனமாகச்செய்து அச்சிற்பதிப்பித்தனர். இவர்குமாரர் கந்தசுவாமியையரால் ஷை நைடதம் மற்றப்படலங்களுக்குரையும் வாதவூர் புராணவுரையும், பிரபுலிங்கலீலை வசவண்ணர்வந்தகதிவரையில் பதவுரையும் செய்தருளினார். மற்றையகதிகளுக்குரை ஈசூர் - கனகசு - சச்சிதானந்தபிள்ளையவர்களால் நிறைவேறலாயிற்று.

---





உ

கடவுள் துணை.

திருச்சிற்றம்பலம்.

# பிரபுலிங்கலீலையுரை.

## கணபதிகாப்பு.

சுரகுலாதிபன் றூயமலர் நந்தனம்
பெருக வார்கடல் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம்.

இதன்பொருள். சுரகுலாதிபன் - தேவர்குலத்துக்குத் தலைவனாகிய இந்திரனது —தூய்மலர்நந்தனம் - தூயமலர்களையுடைய பூங்காவானது— பெருக - ஓங்கும்படியாக —வார்கடல்பெய்தவயிற்றினோன - நெடியகடலைப்பெய்தவயிற்றையுடையோனாகிய அகஸ்தியமுனிவனது—கரகநீரை - கமண்டலத்திலுள்ளநீரை —கவிழ்த்த —மதகரி - மதயானையினது —சரணம் - திருவடியை —நாளும் - எந்நாளும் —தலைக்கு — அணியாககுவாம் - (யாம்) அணியாகச்செய்துகொள்ளுவாம். [எடுத்துக் கொள்ளப்பட்ட நூல் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு]. எ - று. பெருகவென் வினையெச்சம் கவிழ்த்தவென்பெயரெச்ச வினைகொண்டது.—யாமெனு மெழுவாய் - வருவிக்கப்பட்டது. விருத்திராசுரன் கடலுளொளித்திருந்தபோது தேவர்கள்கூடி வென்றிதல்பாறி அ..மை வெளிப

படுத்துதற் பொருட்டுக் கடனீர்முழுதும் உள்ளங்கையிலடக்கி ஆசமனஞ்செய்தலால்-வார்கடல்பெய்த வயிற்றினென்ருர்.—சீகாழியிலே வைக்கப்பட்ட இந்திரனது பூங்காவனம் மழையின்றிவாடுதல் கண்டு அவன் தன்னைப்பூசித்து வேண்டலால் சஃயகிரியிலே தவஞ்செய்திருந்த அகஸ்தியமுனிவனது கரகநீரைக் காகவடிவமாய்ச் சென்று கவிழ்த்துக் காவேரியாற்றை யுண்டாக்கினனென்பது காந்தபுராண கதையாதலின் இவ்வாறு அக்கடவுளுதவிச்சிறப்புச் சொல்லப்பட்டது. வார்கடல்பெய்தவயிற்றினனென்றமையால் அவனது கரகநீர் ஆறுதற்கு ஏற்புடைத்தாதல் குறிப்பிக்கப்பட்டது. தலை பலவவயவங்களினும் தலைமையுடைத்தாதலாலே - கரியின்றலையுடைய கடவுளைக்கரியென்ருர். தலைக்கணியாககலாவது - தலைக்குரியமுடிபோல் அதன்கண்ணே அது எப்போதும் இருக்கிறதாகச் சிந்தித்தல்.—ஒருகருமத்தைத் தன்னைவணங்கித் தொடங்கின் அதறகு விக்கின நீக்குவதற்கும், வணங்காது தொடங்கின் அதற்கு விக்கின மாக்குதற்கும், தலைவனுகி விக்கினேச்சுவரனெனப் பெயர்பெற்று நிற்றலின் சான்ருேரொழுக்கத்தின்படி முன்னே தனிவணக்கஞ்சொல்லப்பட்டது.



துதிகதிமுதல் இருபத்தைந்து கதிகளாலே இந்நூல் சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றுள் முதலிலே துதிகதி சொல்லப்பட்டது. அதனுள் பூவாயென்பது முதல் பரவைகேள்வனென்பது ஈருகிய பத்துப்பாட்டுகளாலே கடவுள்முதலியோரைக் குறித்துத் துதிசெய்து இதற்குமேல் அவையடக்க முதலியபிறவும் சொல்லப்படினுந் தலைமைபற்றித் துதிகதி யெனப்பட்டது.



முதலாவது

# துதிகதி

## சிவஸ்துதி.

பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன் கைகான் முடங்கு பொறியிலிதன், னாவா யொழுகிற் றெனவுலக மளந்த மாலு நான்முகனுங், காவா யெனநின் றேத்தெடுப்பத் தானே யுவந்தெங் கரதலத்தின், மேவா வமர்ந்த மாமணியைத் தொழுது வினைக்கு விடை கொடுப்பாம்.

(இ - ள்.) பூவாய் - மலர்கள்பொருந்திய —நெடுங்கோட்டுறு - நெடியமரக்கொம்பினது நுனியின்கண்ணேதங்கிய —பசுந்தேன் - பசியதேனானது —(தன்னைப்பெறத்தகுதியுடையவனுக்குக் கிடையாமல்)—கைகான்முடங்குபொறியிலிதன் - கைகளுங்கால்களு முடங்கிய அறிவில்லாதவனது —நாவாய் - நாவினிடத்தே —ஒழுகிற்றென - (தானேவந்து) ஒழுகினால் அதுபோல —உலகமளந்தமாலும் —நான்முகனும்—காவாயென - (அடியேங்களைக்) காத்தருளாயென்று —நின்று - (தன்னைப்பெறுதற்கு உரியவழியிலே) நின்று —ஏத்தெடுப்ப - துதிசெய்யாநிற்க —(அவரிடத்துச்செல்லாமல்)—தானேயுவந்து —எங்கரதலத்தில்-(தன்னைப்பெறமுயலுதற்குச் சாதனங்களில்லாத) எமதுஉள்ளங்கையிடத்து—மேவா - விரும்பி —அமர்ந்த - எழுந்தருளியிருக்கின்ற —மாமணியை - மாணிக்கத்தை —தொழுது —வினைக்கு - (எம்மைப்பிறவியில் அழுத்தி வருத்துகின்ற) கருமத்துக்கு —விடை - விட்டொழிதலை —கொடுப்பாம். எ - று. உபமேயத்தோடு பொருந்த உபமானத்திற்கும், உபமானத்தோடு பொருந்த உபமேயத்திற்கும் வேண்டுஞ்சொற்கள் வருவிக்கப்பட்டன. தேனினது இனிமையும், அருமையும், தோன்ற - பூவாயென்றும், நெடுங்கோட்டுறுவென்றும் கூறினார்.—தேனுக்குப் பசுமை - பதனழியாமை. கைகான் முடங்கென்றதனால் - ஏறமாட்டாமையும் பொ

றியில்யென்றதனுல் பிறரால் கொணர்விக்கமாட்டாமையும் பெறப்பட்டன. ஒழுகிற்றென்றது - ஒழுகினுலென்னும் பொருளில்வந்தது. காரணனை உலகமளந்தமாலென்றும், பிரமனை நான்முகனென்றும், கூறலால் சொலலுதற்கருந்தகை யோனென்பது குறிப்பிக்கப்பட்டது. உம்மையிரண்டும் எண்ணின்கணின்ற உயர்வுசிறப்பு. காவாவென்னும் எதிர்மறைவினைமுற்று; வேண்டிககோடற் பொருட்டாய் உடம்பாட்டேவற் பொருளில் வந்தது. அப்படிப்பட்ட கடவுள்; தானே பக்குவநோக்காது வருதற்குக்காரணம் பேரருளுடைமையாம். சாதனம் பத்திமுதலியன. மாமணி - உவமையாகுபெயா. நல்வினையும் பிறவிகரு வதுவாகலின் வினையெனப் பொதுப்படக்கூறினர்.—இல்லாதபொருளை உவமானமாக்கலால் இல்பொருளுவமையணி. இது முடவனுக்குக் கொம்புத்தேன் கிடைக்குமோ என்கிற உலகவழக்கைப்பற்றிவந்தது. வடநூலார் அபூதோவமையென்பர்.

சுத்தசாத்துவிக சுயஞ்சைதன்யசொப்பிரகாசமே இஷ்டலிங்கமெனக்காட்டவும், அலையராசத நாமதங்களுக்கு கெட்டாதெனக் குறிப்பிக்கவும் வந்தவர், மாலுமயனு மேத்தெடுப்பத் தானேயுவந்தெங்கரதலத்தின் மேவாயமர்ந்த மாமணியென்றுா. இங்ஙனமன்றேல் புராணகதையா முடியும். இஃதிங்கலிங்கபேதாபேத ரகிதநிலையை யுணர்ந்துநூலாதலாற் பொருந்தாதெனக. சுயஞ்சோதிபோ லியல்பாக வொளியுடைத்தாதலின் மாமணியென் றுவமித்தார். (௩)

## தேவிஸ்துதி.

ஆதி பகவன் றனதாட றணிப்பான் பணிய வவ்விறைவன்
பாத மிறைஞ்சு மதற்குநெற்றிப பகையு மல்குற் பகையுமாரு
சீத மதியு மரவுமவிழுஞ செயற்கு முவகை செயாமலலை
மாது பணியு மதற்குமன மகிழு முமையை வணங்குவாம.

(இ - ள்.) ஆதிபகவன் - கடவுள் —தனது - தன்னிடத்துண்டாகிய—வூடல் - பிணக்கை —தணிப்பான் - தணித்தற்பொருட்டு —பணிய - வணங்க —அவ்விறைவன் - அந்தத்தலைவன் —பாதம் - தன்பாதங்களை—இறைஞ்சுமதற்கும் - வணங்குகின்ற செயலுக்காகவும் —நெற்றிப்பகையும் - தனது நெற்றியிலேயே பகைக்கப்பட்டதும் —அல்குற்பகையும் - அல்குலாலேபகைக்கப்பட்டதும் —ஆம் - ஆகிய —சீதமதியும் - குளிர்ச்சி

பொருந்தியபிறையும் —அரவும் - பாம்பும் —விழுஞ்செயற்கும் - வணங்குகின்ற செயலுக்காகவும் —உவகைசெயாமல் - மகிழ்ச்சிசெய்யாமல் —அலேமாது - 'தன்மாற்றாளாகிய கங்காதேவி —பணியுமதற்கு - வணங்குகின்றசெயலுக்காகவே —மணமேவிய பாகம் - இடவாகத்திலுற —உமையை—வணங்குவாம. எ-று. முததொழிற்குரிய மூவர்க்கும் முதலாய்நிற்கின்றோனாதலின் ஆதிபகவனென்றார். பின் அலேமாதுபணியவென்றதனால் - தன் மாற்றாளாகிய அலேமேல்வைத்திருக்கின்றானென்பதுபற்றி ஊடல்நிகழ்ந்ததெனக் குறிக்கப்படுகின்றது. தான் யாவராலும் வணங்கப்பட்டுத் தன்னால் வணங்கப்படுதற்கு ஒருவரும் இல்லாத தலைமையோனென்னுஞ் சிறப்புத்தோன்ற, அவ்விறைவனென்றார். நெற்றிப்பகை அல்குற்பகை இரண்டும் - அன்மொழித் தொகைகள். இவ்விரண்டும் வழிவம்பற்றிச் சொல்லப்படுதலின், அரவு அதன்படத்தொப்புமைபற்றிக் கொள்ளப்பட்டது. அலே - நீருக்காதலால் - ஆகுபெயர். மதிமுதலியனவை தாமாக வணங்கிலவாயினும், கடவுள்வணங்கும்போது அவன்முடியிலிருந்து அடியிலுறுதல்பற்றி வணங்கினவாகச்சொல்லப்பட்டன. [கடவுளாலே தொடங்கப்பட்ட ஊடலொழிந்தல் மற்றொருகாரணவுதவியால் எளிதின் முடிதலின் எளிதினமுடிபணி. (சூத்திரம்) "எளிதின் முடிபு தாமெடுத்ததோர் காரியம் பிறிதொருகாரணம்பெற்று நன்காவதாம்." என்பது இலக்கணமாதலின். நெற்றிப்பகை அல்குற்பகையெனச் சொல்லப்பட்டவற்றோடு சம்பந்தமுடைய மதியரவுகளை அம்முறையே சொல்லுதலால் நிரனிறையணி. (சூ) "நிரனிறைநிரனிறுத்தப்படு பொருள்கட் கியைபுடையவற்றை யம்முறை யிசைப்பதுவே" இலக்கணமாதலின். உமாதேவிக்கு முயற்சியின்றி மாதருள் வணங்கலாகிய விருப்பம் கிடைத்தலால் இன்பவணி. (சூ) "இன்பமூவகைத்தென வியம்பு வரவை விரும்பப்படுபொருண் முயலாதுமேவலும்" என்பது இலக்கணமாதலின். இதனால் உமாதேவியைக் குறித்துக் கவிக்கு உண்டாகிய ஆர்வத்துக்கு உவகைச்சுவை அங்கமாதலால் - சுவையணி. இங்ஙனம் பலவணியும் சேர்ந்து வருதலால் - சேர்வையணியாமெனக்கொள்க.]

ஞானசத்தியே நிவிர்த்தியாதலின் அதனைவணங்கப்புகுந்த விந்நூலாசிரியர் புராணசம்மதத்தையொட்டி யிவ்வைதிகங்கற்பித்தாரென்க. (௨)

## கணபதிவ்துதி.

**மா**ரனெடுத்து வளைக்குமொரு கரும்பை யொடித்து மலர்சிதறி
நாரி யடுத்த வளிமாலை குலையத் துரகது நயந்தோடி

வீர மனத்து வினைப்பாகர் குறிப்பி னொழுகி விளையாடு
மீர மதிச்செஞ் சடைக்களிநல் யானை யிணைத்தா ளேத்துவாம்.

(இ-ள்.) மாரன் - மன்மதனாலே —எடுத்து —வளைக்கும் - வளைக்கப்பட்ட —ஒருகரும்பை - (ஒப்பற்ற கருப்புவில்லாகிய) ஒருகரும்பை—ஒடித்து—மலர் - (அவ்வில்லி னெய்யப்படு மலரம்புகளாகிய) மலர்களை —சிதறி - இறைத்து —நாரியடுத்த - (அவ்வில்லுக்கு) நாணையடுத்த—அளிமாலை - (வண்டொழுங்காகிய) வண்டுக்கூட்டத்தை —குலைய - கலைந்துபோக—துரந்து - துரத்தி —நயந்து - விரும்பி —ஓடி —வீரமனத்து வினைப்பாகர் - வீரத்தன்மைபொருந்திய மனத்தையுடைய இருவினையொப்பினராகிய (அஞ்சாமைபொருந்திய) மனத்தைக்கொண்டு செய்யப்படுகின்ற தொழிலையுடைய ஆதோரணரது —குறிப்பினொழுகி - கருத்தின்படி சென்று —விளையாடும் - விளையாடுகின்ற —ஈரமதிச்செஞ்சடை - குளிர்ச்சிபொருந்திய பிறையைத்தாங்கிய செய்யசடையையும் —களி - களிப்பையுமுடைய —நல்யானை - நல்லயானையினது —இணைத்தாள் - உபயபாதங்களையும் —ஏத்துவாம் - துதிசெய்வாம். எ - று. கடவுளர் முனிவர் முதலிய யாவரையும் பெண்ணாசையினுட்படுத்தி அவரை வெல்லுதற்குச் சாதனமாகலின் - ஒருகரும்பென்றார். இருவினையொப்பாவது ; நல்வினைப்பயனாகிய ஆக்கத்தினும், தீவினைப்பயனாகிய கேட்டினும் கருத்துவேறுபடாமை. பாகர் கருத்தின்படிசெல்லலாவது ; அவர்கருத்தறிந்து அதற்கியையச்செல்லுதல். தன்வயத்தனாய் நின்றும் அங்ஙனஞ் செல்லுதல் ஓர்விளையாட்டாமாதலின், விளையாடுமென்றார். தின்னுதற்பொருட்டுக் கரும்பையொடித்தலும், மலர்களைக் காணின் விளையாட்டாக வாரியிறைத்தலும், மதநீருண்ணுதற்கு மொய்க்கவருகின்ற வண்டுகளைத் துரத்தலும், பாகர்குறிப்பின்வழி செல்லுதலும் யானைகளுக்குச் சாதித்தன்மையாதலின் இவ்வாறு சொல்லப்பட்டது. சொல்லவே - இக்கடவுள் மற்றைக்கடவுளர்போல் காமவேட்கையினுட்படாத நிலையினனென்பது கருத்து. [யானைமுகக்கடவுளுக்கும், யானைக்கும், வேற்றுமையிருக்க ஒற்றுமையை ஒற்றுதலால் ஒற்றுமை யுயர்வு நவிற்சியணி. உருவகவுயர்வு நவிற்சியணியெனவும்படும். யானைக்கு ஈரமதிச் செஞ்சடை அதிகமாகச் சொல்லுதலால் - மிகையொற்றுமையுருவகமாம். (கு) "உயர்வுநவிற்சியாம் புலத்தினைவிடுத்துப் புலங்கொளிதன்னையேபுகல்வது பாவலர் மேம்படுநவிற்சியால் வீவிலதாகும்." இவ்

வுயர்வு நவிற்சிக்குக் கரும்புமுதலிய * சிலிஷ்டரூபகங்கள் அங்கங்களாத லின் - உறுப்புறுப்பிக்கலவையணி.]

உருவிலியை மாரனெனவும், கரும்பை வில்லெனவும், அளிமாலையை நாரியெனவும், மலரை யம்பெனவுங் கற்பித்துக்கூறுதல் புராணசம்மதங்களுக்கியல்பாதலினிந்தக்கனேசவணக்கத்தையு மதனோ டொட்டுக.()

## சுப்பிரமணியஸ்துதி.

பாக.மொருபெண் குடியிருக்கும் பரம னணியிற் பரித்தமணி, நாக நுழைவுற் றுடல்சுருண்டு கிடந்து நகுவெண் டலைப் புழையிற், போக மெல்லத் தலைநீட்டிப் பார்த்து வாங்கப் போகுமொரு, தோகை மயில்வா கனப்பெருமா னிணைத்தாட் கமலந் தொழுதிடுவாம்.

(இ-ள்.) பாசம் - பாதியுடம்பின்கண்ணே —ஒருபெண் - பார்வதியானவள் —குடியிருக்கும் - நிலைத்திருக்கப்பெற்ற —பரமன் - கடவுளாலே—அணியில் - ஆபரணம்போல்—பரித்த - தாங்கப்பட்ட—மணிநாகம் மணியையுடையபாம்பு —நகுவெண்டலைப்புழையில் - சிரிக்கின்ற வெண்டலையினது துளையில் —நுழைவுற்று - நுழைந்து —உடல்சுருண்டு கிடந்து—போக - புறத்திற்போதற்பொருட்டு —மெல்ல - மெள்ள —தலை - தலையை — நீட்டிப்பார்த்து —வாங்க - உள்வாங்காநிற்க —போகும் - (அக்கடவுளிடத்தே) செல்லுகின்ற —தோகைமயில்வாகனப் பெருமான் - கலாபத்தையுடைய மயிலாகியவாகனத்தையுடைய முருகக்கடவுளது —துணைத்தாட்கமலம் - இரண்டுபாதங்களாகிய தாமரைமலர்களை—தொழுதிடுவாம் - வணங்குவாம். எ-று. இளையபிள்ளையாராதலின் அஞ்சாது கடவுளிடத்து வாகனத்தோடு செல்லுதற்கு இயைபுண்டாயிற்று. [அம்மயிலைக்கண்ட பாம்பின்சாதித்தன்மையைச் சொல்லுதலால், தன்மைநவிற்சியணி. (சூ) "தன்மைநவிற்சியோர் பொருண்மையையுள்ளவா றின்புறப்புகல்வதா மென்மனூர் புலவர்." என்பது இலக்கணமாதலின்.] இதுவும் புராணசம்மதம். (௪)

---

* சிலிஷ்டரூபகம் ; ஒருசொல்லே விஷயமாகிய உபமேயத்துக்கும், விஷயியான உபமானத்துக்கும் ஆதல்.

## அல்லமதேவஸ்துதி.

கலையை மதிக்கும் புலவர்தமைச் சித்தர் குழாத்தைக் கடவுளரை
நிலையை மதிக்கு முனிவரரைத் திசைமா முகனை நிரைவளையாச்
சிலையை மிதிக்கு நெடியோனை விழுங்கி யுமிழாத் திறன்மாயை
தலையை மிதிக்கு மல்லமன்செங் கமல மலர்த்தா டலைக்கணிவாம்.

(இ-ள்.) கலையை - அறுபத்துநாலுகலைகளையும் —மதிக்கும் - உணர்கின்ற —புலவர்தமை - வித்வான்களையும் —சித்தர்குழாத்தை - சித்தரது கூட்டத்தையும் —கடவுளரை - தேவரையும் —நிலையை - தத்துவநிலையை —மதிக்கும் - ஆராய்கின்ற —முனிவரரை - முனிவோரையும் —திசைமாமுகனை - நான்முகனையும் —நிரைவளையா - பெண்வடிவமாக —சிலையை - கல்லை —மிதிக்கும் - அடியால் மிதித்த —நெடியோனை - நாரணனையும் —விழுங்கி - உட்கொண்டு —உமிழா - (பின்) உமிழ்தல்செய்யாத —திறல் - வலிமையையுடைய —மாயை - மாயையினது —தலையை —மிதிக்கும் - மிதித்துநிற்கின்ற —அல்லமன் - அல்லமதேவனது செங்கமலமலர்த்தாள் - செந்தாமரை போலுந்திருவடிகளை —தலைக்கு- நமது தலையின்கண்ணே —அணிவாம் - சூடுவாம். எ - று. அறுபத்துநாலுகலைகள்; வேதமுதலியன. சித்தர்குழாமென்றது; காயசித்திபெற்ற சத்தியநாதர் முதலோரையும், இவரை இறைவராகக்கொண்ட நவகோடிசித்தரையும். கடவுளரென்றது; பதினெண்கணங்களிலே இந்திரன்முதலிய தேவர்களை யுணர்த்துஞ்சொல்லாயினும் மற்றைக்கணங்களையும் தழுவநிற்றலின், உபலக்ஷணம். தத்துவநிலை - நிலமுதலாகிய இருபத்தைந்து தத்துவங்களையும் அதனதன் காரணங்களுள் ஒடுக்கிக்கொண்டு சென்றால் காரணகாரியங்களிரண்டுமின்றி முடிவாய் நிற்கின்றபொருள். முனிவரர்; வசிஷ்டர்முதலியோர். திசைநான்காதலின் - நான்முகனைத் திசைமுகனென்றார். நிரைவளை - நிரையாகஇடப்பட்ட வளையல்களையுடையவளெனவிரிதலின் - அன்மொழித்தொகை. நிரை - ஒழுங்கு. இராமாவதாரத்தில் அகலிகைக்குக் கௌதமர்சாபத்தால்வந்த கல்வடிவத்தைக் காற்றுகளால் மாற்றினமையின் - சிலையைமிதிக்கு மென்றார். இம்மிதிக்குமென்றது - இறந்தகாலத்தில் வருதலின் காலவழுவமைதி. அப்புலவர் முதலியோரைத் தனுகரணபுவனபோகங்களாய் வியாபித்து உள்ளடக்கி விடாதுநிற்றலின் விழுங்கி யுமிழாவெ

ன்ருர். மாயைதலையை மிதித்தலாவது ; அவளுக்கு உட்படாது கீழ்ப் படுத்திநிற்றல். தலையைமிதிக்குந் தாளெனக் கூட்டுக.

புலவர்முதல் நெடியோனிறுவாக் கிடந்தவர்களை விழுங்கி யுமிழாத்தி றன்மாயையென்றது ; உபாதிரகிதரல்லனென்றற்கும், மாயைதலையுமிதி க்கு மல்லமனென்றது ; மாயாசகிதனல்லனெனற்குமென்க. (௫)

## வசவஸ்துதி.

வெள்ள வேணிப் பெருந்தகைக்கி யாஞ்செய் யடிமை மெ ய்யாகக், கள்ள வேடம் புனைந்திருந்த கள்வ ரெல்லாங் களங்கம ற, முள்ள மோடு மெய்யடியா ராக வுள்ளத் துள்ளுமருள, வள்ள லாரும் வசவேசன் மலர்த்தா டலையால் வணங்குவாம.

(இ - ள்.) வெள்ளவேணி - கங்கையைத்தாங்கிய சடையையுடைய — பெருந்தகைக்கு - கடவுளுக்கு —யாஞ்செய் - எம்மாலே செய்யப்படுகின் ற —அடிமை - பொய்யடிமையானது —மெய்யாக - மெய்யடிமையாதற் பொருட்டு —கள்ளவேடம் - பொய்க்கோலத்தை —புனைந்திருந்த - தரி த்துவந்திருந்த —கள்வரெல்லாம் - திருடரெல்லாம் —களங்கமறுமுள்ள மோடு - மாசற்ற நெஞ்சத்தோடு —மெய்யடியாராக —உள்ளத்து - தனது திருவுளத்தில் —உள்ளும் - நினைத்தருளிய —அருள்வள்ளலா கும் - கருணையாலுளதாகின்ற கொடையையுடையோனாகிய —வசவேச ன் - வசவேசனது —மலர்த்தாள் - தாமரைமலர்போலுந் திருவடிகளை— தலையால் —வணங்குவாம். எ - று. பெருந்தகை ; பெரியதகைமையுடை யோனெனவிரிதலின், அன்மொழித்தொகை. மெய்யாக வணங்குவா மெனக்கூட்டிமுடிக்க. பின்மெய்யாகவெனலால் பொய்யடிமை யெ னப்பட்டது. களவுசெய்தற்பொருட்டு வழுதுணங்காய்களைச் சிவலிங்கங் கள்போல் வஸ்திரங்களிலே மறைத்துக்கட்டிக்கொண்டு தன்மடத்திற்கு ள்ளேவந்ததிருடரைப் பந்தியிலிருத்திப் பூசைசெய்யச்சொன்னபோது அவர் அஞ்சி விழிப்பதுகண்டு அக்கருணாநிதிக்குத் தவறுவாராமல் அவ ரைத்தனது சற்பாவனையினாலே மெய்யடியாராக்கினனென்பது வசவசரி த்திரத்தில் சொல்லப்படுகின்றது. [இவ்விசேஷணம் எமதுபொய்யடிமை யையும் மெய்யடிமையாக்க வல்லவனென்னுங்கருத்தை உட்கொண்டிரு த்தலால், கருத்துடையணி. "கருத்துடை கருத்துடைவிசேடணத்தியல் வது." என்புது இலக்கணமாதலின்.]

வழுதுணங்காய்களைச் சிவலிங்கமாகச்செய்த மகிமைபற்றி வசவண்ண னை வணங்கியதாகக்கூறியதென்க. இதுவும்புராணசம்மதம். (௬)

## சென்னவசவஸ்துதி.

பங்க வளற்று வழிமாற்றி யொரு நல்வழியைப் பகர்வார்போற்
றங்கண் மதியிற் பலபிதற்றுஞ் சமய ருரைக டமைநீக்கி
யங்க நிலையிற் றிலிங்கநிலை யிற்றென் றருளும் வீரசைவ
சிங்க நிலைத்த வருட்சென்ன வசவன் றிருத்தாள் சிரத்தணிவாம்.

(இ - ள்.) பங்கவளற்றுவழி - பழுதாகிய சேற்றுவழியை —மாற்றி - ஒழித்து—ஒருநல்வழியை —பகர்வார்போல் - சொல்பவர்போல்—தங்கண்மதியின் - தங்களுடையபுத்திகளுக்குத் தோன்றியவாறே —பலபிதற்றும் - (தேசதேசிகளைக்குறித்துப்) பலவகைப்படப்பிதற்றுகின்ற — சமயருரைகடமை - சமயவாதிகளுடைய சொற்களை —நீக்கி - ஒழித்து— அங்கநிலை - அங்கத்தினதுநிலை —இற்று - இத்தன்மைத்து —இலிங்கநிலை - இலிங்கத்தினதுநிலை —இற்று - இத்தன்மைத்து—என்று —அருளும் - தெரிவித்தருளிய —வீரசைவசிங்கம் - வீரசைவத்திற் சிறந்தோனாகிய —நிலைத்தவருள் - நிலைபெற்ற வருளையுடைய —சென்னவசவன் - சென்னவசவேசனது —திருத்தாள் - அழகியபாதங்களை —சிரத்து - முடியின்மீது —அணிவாம் - தரிப்பாம். எ - று. பங்கம்; குழைசேறெனின் இருபெயரொட்டாக்குக. பகர்வார்போல் அருளுமெனக் கூட்டி ஒப்பணியாக்குக. "ஒப்பெனப்படுவ துண்மைவேற்றுமை யுடம்பாடுடையவல் பொருளொடு புகழ்பொருட் கொருசாற்றன்மையி னொப்புமையுரைப்பதாம்." என்பது இலக்கணமாதலின். தங்கண் மதியினென்றமையால் வேதாகமவளவையிற்பட்டவை யல்லவென்றதாயிற்று. பலபிதற்றல்; அவரவரோடு மாறுபட்டபிரமாணங்களையும், யுத்திகளையும் கற்பித்துக்கூறுதல். இங்ஙனங்கூறித் தமக்கும் பிறர்க்கும் கேடுசெய்தலாற் பிதற்றுமென்றார். சமயரென்றது; காட்சியொன்றையே பிரமாணமாகக் கொள்ளுமுலோகாயதன் முதலோரை. அங்கநிலை; அங்கம்—தூலசூக்குமகாரண மெனமூன்றாய் நிற்றலும், இலிங்கநிலை; இலிங்கம்—இஷ்ட ப்ராண பாவமென மூன்றாய் நிற்றலும் பிறவுமாம். அம்மெய்ப்பொருள்விளங்க நூல்செய்து யாவர்க்கும் விளக்கினாராதலின், அருளுமென்றார். சிங்கமென்பது; சிறப்புப்பொருளில் வந்தது.

தங்கண்மதியிற் பலபிதற்றல்;' அல்லவில்லையெனற் கியைவதை யாமுண்டெனக் கொண்டுவாதித்தல். அங்கம்; சோபாதிகம் நிருபாதிக

மெனவும், லிங்கம்; கற்பிதான்மாவெனவும் நிருவிகற்பான்மாவென வும் பெயர்பெறும். புராணசம்மத வைதீகமாக்கிச் சென்னவசவனை யும் வணங்கியதென்க. (எ)

## மடிவாலமாச்சையஸ்துதி.

**வா**ர்க்குங் குமமென் முலைபாக னடியா ரறுவை மாசடித்து த, நீர்க்குஞ் செயல்போல் விச்சலமன் னவன்றன் சேனை செய்பி ழையைத், தாக்குங் கரவாள் கொடுசின்ன பின்னமாகத் தடிந்தி ட்டுப், போக்குங் கருணை மடிவால மாச்சன் பொன்னங் கழல் போற்றி.

(இ - ள்.) வார்க்குங்குமமென்முலை - கச்சிறுக்கிச் செஞ்சாந்தணியப் பெற்ற மெல்லிய முலையினளாது—பாகன் - கூறினனாகிய கடவுளுடை ய —அடியார் - தொண்டரது—அறுவை - ஆடைகளிலுள்ள —மாசு - அழுக்கை —அடித்து - அவற்றைக் கல்லின்மேலறைந்து —தீர்க்குஞ் செயல்போல் - போக்குகின்ற செயல்போல்—விச்சலமன்னவன்றன்— விச்சலராஜனது —சேனை - சேனையினுலே —செய் - செயப்பட்ட— பிழையை - குற்றத்தை —தாக்குங்கரவாள்கொடு - வெட்டுதற்குரிய கை வாளைக்கொண்டு —சின்னபின்னமாக —தடிந்திட்டு - அச்சேனையைத் துணித்து —போக்கும் - போக்கிய —கருணை - அருளையுடைய —மடி வாலமாச்சன் - மடிவாலமாச்சையனது —பொன்னங்கழல் - பொன் போலுந்திருவடிகளை —போற்றி - துதிசெய்வாம். எ - று. மென்மை; இங்கேவழுவழுப்புக்குணம். வார்க்குங்குமமுலை; அன்மொழித்தொகை. கல்யாணபுரியிலே வசவேசனது மடாலயத்திலுள்ள அடியார்களது ஆடைகளைச்சுத்தப்படுத்தல் தனது திருப்பணியாதலின் ஒருநாள் அவற் றைக்கொண்டுசெல்லும்போது ஒருபவியானவன் அவற்றைத்தீண்டின மைகண்டு அவனைக் கைவாளினுல் துணித்து அதுகேட்டு விச்சலராஜன் தன்னைக்கொலைசெய்யும்படி சேனையைவிட அதனையும் அழித்தலால் இவ்வாறுகூறினுர். அப்பிழையைப்போக்காவிடிற் செய்தோர்க்கு நரக ம்வருமாதலின், போக்குங்கருணையென்முர். போற்றியென்பது; தொ ழிற்பெயராய்நின்றது. இங்கே மாசுதீர்த்தலாகிய வுபமானமும், பிழை போக்கலாகிய வுபமேயமும், ஒருபொருட் செயலேயாதலின் ஒன்றி லொப்பணியெனப்படும்.

இதுவும் புராணசம்மத வைதீகமுறைப்படி மடிவாலமாச்சையனைத் துதித்ததென்க. (அ)

## நால்வர்ஸ்துதி.

பெண்ணிற் கரசு தானாக வென்பு பெருநீற் றறைபிரச
வண்ணக் கமல மலர்ப் பொய்கை யாகச் செங்கன் மாழையாய்
நண்ணச் சிறிய நரிகண்முடங் குளையப் பரியாய் நகர்புகுதப்
பண்ணற் குரிய வமுதுறழ்முத் தமிழ்நால் வரையும் பணிகுவாம்.

(இ - ள்.) என்பு - எலும்பானது —பெண்ணிற்கரசாக - பெண்களுக்கு அரசியாகவும் —பெருநீற்றறை - பெரியசுண்ணவறையானது —பிரசவண்ணக்கமலமலர்ப் பொய்கையாக - தேனையும் அழகையும் உடையதாமரை மலர்களையுடைய குளமாகவும்—செங்கல்—மாழையாய்நண்ண-பொன்னாய்ப்பொருந்தவும்—சிறியநரிகள் —முடங்குளையப்பரியாய் - மடங்கிய புறமயிரையுடைய குதிரைகளாய் —நகர் - மதுரைநகரத்தில் —புகுத - செல்லவும் —பண்ணற்குரிய - செய்தற்குரிய —அமுதுறழ் - அமிர்தம் போல்கின்ற —முத்தமிழ் - இயலிசைநாடகமென்னு மூவகைப்பட்ட தமிழ்ப்பதிகங்களை அருளிச்செய்த —நால்வரையும் - சம்பந்தர் அப்பா சுந்தரர் மாணிக்கவாசகர் என்கிற நால்வரையும் —பணிகுவாம் - வணங்குவாம். எ - று. தான் - அசை. பெண்ணிற்கரசாதல்; உருவத்தால் பெண்களிற்சிறந்தவளாதல். இது திருமயிலையில் அங்கம்பூம்பாவையாயது. பொய்கையாதல் ; தண்ணென்றிருத்தல். இது சைனர் அரசனைக்கொண்டு வைப்பித்தது. உரியவென்பெயரொச்சக்குறிப்பு தமிழென்னும் பெயர்கொண்டது. இந்நால்வரும் முறையே திருக்கடைக்காப்பு, தேவாரம், திருப்பாட்டு, திருவாசகம் இந்நான்குஞ்செய்து சைவத்திற்குச் சமயாசாரியராய் நிற்றலின் இங்ஙனந்தொகைசெய்து கூறினாரேனும் முன்சொல்லப்பட்ட அவ்விசேடணங்களுன்களோடும் இந்நால்வரையுந் தனித்தனிக்கூட்டுக. இதுநிரனிறையணி. மகத்துவங்காரணமாக நால்வரையும் வந்தித்ததென்க. (கூ)

## அடியார்பொதுஸ்துதி.

பரவை கேள்வன் றிருத்தொண்டத் தொகையு ளடியார் ப
த்தியெலா, முருவ மாகு நஞ்சோம நாதன் றுதியு ளுறுசரண
ரரவ வணியா னடியார்கண மற்றை யவர்க ளனைவருந்தாம், வி
ரவி நாளு மிருப்பவிடங் கொடுக்கு முள்ளம் விரிந்தன்றே.

(இ - ள்.) பரவைகேள்வன் - பரவைக்குநாயகனாகிய சுந்தரமூர்த்திநாயனாரது —திருத்தொண்டத்தொகையுள்-திருத்தொண்டத்தொகைப்பா

டலுளிருக்கின்ற —அடியார் - தொண்டர்களும் —பத்தியெலாம் —உருவமாகும் - ஒருவடிவாகக்கொண்ட —நஞ்சோமநாதன் - நமதுசோமநாதா ராத்திரியினது —திதியுளுறு - துதிப்பாடலுளிருக்கின்ற—சரணர் - தொண்டர்களும் —அரவவணியான் - பாம்பை அணியாகவுடைய கடவுளது —அடியார்கள் - தொண்டர்களாயுள்ள—மற்றையவர்கள் - அவ்விரண்டிலும் அடங்காதவர்களும் ஆகிய—அனைவரும் —விரவி - கலந்து—நாளும் - எந்நாளும் —இருப்ப - இருத்தற்கு —உள்ளம் - எமது நெஞ்சமானது —விரிந்து — இடம் - இடத்தை —கொடுக்கும். எ - று. சைவநூலாட்சிக்கேற்க அடியாரென்றும், வீரசைவநூலாட்சிக்கேற்கச் சரணரென்றுங் கூறினர். குருபத்தி, லிங்கபத்தி, சங்கமபத்தி அனைத்துமடங்குதற்குப் பத்தியெலாமென்றார். அவையுருவமாகுதல் ; அந்தக்கரணங்களும், ஞானேந்திரியங்களும், கருமேந்திரியங்களும் அவற்றின் வழிநிற்றல். மனம் நியாயநூலோரால் அணுருபமெனப்படுதலால் விரிந்தென்றார். [அனைவருமெனப்பட்ட பெரிய வாதேயத்தினும் மனமாகிய வாதாரத்தைப் பெரிதாகச் சொல்லலால் ; பெருமையணி." பெருமையிடனிடத்துளதி னவ்வாமையாம்." என்பது இலக்கணமாதலின்.] சைவத்திலும் வீரசைவத்திலுமுள்ள வடியார்களை வணங்கியதென்க (கO)

## நூல்செய்தவர் பெயரும் நுதலியபொருளும்.

தண்ணிலவு புனைசடிலத் திறைபுகழல் லமதேவன் சரிதத் தீம்பால், புண்ணியரஞ் செவிவாயிற் றமிழ்ச்சங்கத் தான்முகந்து புகட்டினுல், எண்ணரிய புகழுமலயத் திருந்தவனோர் வடிவெடுத்தா னென்று கூறப், பண்ணியமுந் தமிழ்க்கவிதைச் சிவப்பிரகா சப்பெருமபேர் படைத்து ளானே.

(இ - ள்.) தண்ணிலவு - குளிர்ச்சிபொருந்தியசந்திரனை—புனை - தரித்த —சடிலத்து - சடையையுடைய —இறை - கடவுளால் —புகழ் - புகழப்படுகின்ற —அல்லமதேவன் - அல்லமதேவனது —சரிதத்தீம்பால் - சரித்திரமாகிய தித்திப்புப்பொருந்திய பாலை —புண்ணியர் - புண்ணியத்தையுடையவரது —அஞ்செவிவாயில் - உட்செவியாகிய வாயில்—தமிழ்ச்சங்கத்தால் - தமிழ்ச்செய்யுளாகிய சங்கினுல் —முகந்து - மொண்டு —புகட்டினன் - புகவிட்டான்—எண்ணரிய - எண்ணக்கூடாத —புகழ் - கீர்த்திகளையுடைய —மலயத்து - பொதியமலையின்கண்ணே எழுந்தருளியிருக்கின்ற —இருந்தவன் - பெரியதவத்தோனுகிய அகஸ்தி

யமுனிவன் —ஒர்வடிவெடுத்தானென்றுகூற - (இப்படி) ஒருதிருவுரு வெடுத்து வந்தானென்று சொல்லும்படிக்கு —பண்ணிய - (தன்னாலே) செய்யப்பட்ட —முத்தமிழ்க்கவிதை - இயலிசைநாடகமென்னு மூவகைத் தமிழ்ப்பாடல்களையுமுடைய —சிவப்பிரகாசப் பெரும்பேர்படைத்துளான் - சிவப்பிரகாசனென்னும் பெரியதிருநாமத்தைப்படைத்திருக்கின்றவன். எ - று. ஆல் - ஏ - அசைகள். அகஞ்செவி ; அஞ்செவி யெனவும், புகலிடு ; புகட்டெனவும் ஆயின. எண்ணக்கூடாத கீர்த்திகளாவன ; விந்தமடக்கினமை, கடல்குடித்தமை, இல்வலவாதாவிகளைக் கொன்றமை, தென்பூமியைவடபூமியோடு சமஞ்செய்தமை, தமிழ்வளர்த்தமை முதலியவற்றான் வந்தவை. [சரிதமுதலியவற்றிலே பான்முதலியவற்றை ஆரோபித்தலால், உருவகவணி." உருவகமறைவிலதாய வேற்றிடத்திற், கேற்றப்படுபொருள் சிறப்புறுத்துவதாம்." என்பது இலக்கணமாதலின்.] இது சிறப்புப்பாயிரமாதலின் இவர்சகோதரரில் ஒருவர் செய்திருக்கலாம். இது நூல்செய்தோனது நாமங்கூறல். (கக)

## அவையடக்கம்.

அடலுறு மல்லம னரிய சீரொடு
படுதலி னயந்துபா ராட்டும் பன்முறை
மடனிரு முலகமென் மொழியை வந்துவாக்
கடலினு மூழ்குவர் கால மொன்றினே.

(இ - ள்.) அடலுறும் - வலிமையான்மிகுந்திருக்கின்ற —அல்லமன் - அல்லமனது —அரியசீரொடு - அரிதாகியபுகழோடுகூடி —படுதலின் - தோன்றுதலால் —மடனிரும் - அறியாமையினீங்கிய —உலகம் - உலகமானது — என்மொழியை - எனதெளியசெய்யுளையும் —பன்முறை - பலகாலும் —நயந்து - விரும்பி —பாராட்டும் - கொண்டாடும் —காலம் - விசேடகாலத்தோடு —ஒன்றின் - பொருந்துமாயின் — உவர்க்கடலினும் - உப்புக்கடலிலும் —வந்து —மூழ்குவர் - மனிதர் முழுகுவர் (ஆதலால்). எ - று. கடவுளராலும் வெல்லக் கூடாத மாயையை வெல்லுதலால் அடலுறுமென்றார். மொழி - ஆகுபெயர். அதனிழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. அரியசீரொன்றதற்கேற்ப - எளியவென வருவிக்கப்பட்டது. இங்கே உலகமென்றது ; உயர்ந்தோரை. விசேடகாலம் ; கிரகணகாலமுதலியவை. எளியமொழிக்கும் உவர்க்க

டனுக்கும் பிம்பப் பிரதிபிம்பபாவஞ் சொல்லுதலால், எடுத்துக்காட்டணி. "எடுத்துக்காட் டுருவாக்கியத்திடைவடி, வெதிர்வடிவெனப் பொதுத்தன்மையை யிசைப்பதாம்." என்பது இலக்கணமாதலின். மேலாய வான்மலாபத்தைநோக்கி யிந்நூலை யேற்றல். (கஉ)

## படலத்தொகை.

நாற்கதி தருமிடர் கடந்து நச்சுநர்
பார்க்கதி முதலிரு பதைந் தாங்கதி
மேற்கதி பெறவருள் விளங்கு மல்லமன்
சீர்க்கதி யிருபதோ டைந்துஞ் செப்புவாம.

(இ - ள்.) நச்சுநர் - (தன்னை) விரும்பியோர் —நாற்கதி - தேவகதி மனிதகதி விலங்குகதி நரககதி எனப்படுகின்ற நான்குகதிகளாலும் —தரும் - தரப்படுகின்ற —இடர் - துன்பங்களை —கடந்து —பார்க்கதிமுதல் - பிருதிவிதத்துவமுதலிய —இருபத்தைந்தாங்கதி - இருபத்தைந்து தத்துவங்களுக்கும் —மேல் - மேலாகிய —கதி - முத்தியை —பெற —அருள்விளங்கும் - கருணையால் விளங்குகின்ற —அல்லமன் - அல்லமனது —சீர் - புகழையுடைய —கதி இருபதோடைந்தும் - இருபத்தைந்து கதிகளையும் —செப்புவாம் - சொல்லுவாம். எ - று- இருபத்தைந்து தத்துவஙகளாவன ; பூதங்கள் - ரு. ஞானேந்திரியஙகள் - ரு. கருமேந்திரியங்கள் - ரு. தன்மாத்திரைகள் - ரு. புருடன், மான், அகங்காரம், மனம் - மூலப்பகுதி - ரு. நச்சுநர்பெறச் செப்புவாமெனக்கூட்டுக. பிறவியெண்ணிறந்த பதத்தவாயினும் அவற்றினுயர்வு தாழ்வை விளக்க, நாற்கதியென்றார். (கங)

## சம்பந்தம்.

கன்றிய வைரிகள காதுங் காதையும்
வன்றுயர் மதனநோய் வளர்க்கு மாற்றமும்
புன்றொழி லினாவறும் பொழுது போக்கது
மன்றநு ளல்லம னமல லீலையே.

(இ - ள்.) (இது)—கன்றிய - வெதுப்புற்ற —வைரிகள் - பகைவராயினோர் —காதும் - (தம்மெதிரிகளைக்) கொலைசெய்த —காதையும் - சரித்திரமும் —வன்றுயர்மதனநோய் - வலியதுயரைச்செய்கின்ற காமநோ

யை—வளர்க்கும் - பெருக்குகின்ற—மாற்றமும் - சரித்திரமும்—புன்றொ ழிலினர் - இழிதொழிலுடையோர் —வரும்பொழுது - வீண்காலத் தை—போக்கலும் -போக்குதற்கு ஏதுவாகியசரித்திரமும்—அன்று - அ னறுரும் —அருள் - அருளையுடைய—அல்லமன் - அல்லமனது—அமலலீ லை -மாசில்லாத திருவிளையாட்டு. எ - று. மாற்றம் - போக்கல் - ஆகு பெயர்கள். [இவ்வமலலீலையில் வைரிகள் காதுங்கதை முதலியவற் றினது தன்மையினில்லாமை பிரசித்தமாயிருக்கையில், அன்றென்றவி லக்கு இந்தநூல் அவைபோலாது உயிர்க்குறுதி யெளிதிற்பயப்பதென் னுங் கருத்துத்தோற்றுதலால், விலக்கணி. "விலக்கறி கருத்துடை வி லக்கினைச் சொல்வதாம்." என்பது இலக்கணமாதலின்.] அமலலீலை யாவது ; விகற்பமின்றித் தான்மாத்திரம் விளங்கலே. (கச)

## அதிகாரிகள்.

புறங்கறை யொழுகுசெம் புண்ணி லீயென
வறுங்கதை புல்லியர் கொள்வர் மாமல
ருறுங்களி வண்டினல் லமனொண் கதையைப்
பிறந்துள பயன்பெறு பெரியர் கொள்வரே.

(இ-ள்.) புறம் - புறத்தே —ஒழுகு - ஒழுகுகின்ற —கறை - உதிரத் தையுடைய —செம்புண்ணில் - சிவப்புற்றபுண்ணில் — மொய்க்கும் —ஈ யென - ஈக்கள்போல் —வறுங்கதை—பயனில்லாத கதையை —புல் லியர் - சிறியோராயினோர் —கொள்வர் —மாமலர் - தாமரைமலரில் மொய்க்கும் —உறுங்களிவண்டின் - மிக்ககளிப்புடைய வண்டுகள்போ ல்—அல்லமன் - அல்லமனது —ஒண்கதையை - ஒள்ளியகதையை— பிறந்துளபயன் - மனிதராய்ப்பிறந்ததற்குப்பயனை —பெறு - பெறு தற்குரிய —பெரியர் - பெரியராயினோர் —கொள்வர். எ - று. மா - தி ரு. உபமேயங்களுக்கேற்ப உபமானங்களிலே வேண்டுஞ்சொற்கள் வ ருவிக்கப்பட்டன. பிறந்துளபயனாவது ; அயலைத்தானாகக் காணுமை யை. (கரு)

## பிரயோசனம்.

மயலறு ஞான்றுநோன் மூல்கு மன்பெறு
மியலெழுத் தெழுதுகோ லங்க லிங்கமாம்

வியனிலந் தளவுகோன் மதிவி ளக்கினை
யயர்வறத் தூண்டுகோ லமல லீலையே.

(இ-ள்.) அமலலீலை - இவ்வமலனதுலீலையானது—மயலளற்று - மய க்கமாகிய சேற்றுக்கு — ஊன்றுகோல் —மல்கும் - நிரம்பிய —அன் பெனும் - குருலிங்கசங்கம பத்தியெனப்படுகின்ற —இயலெழுத்து - இ லக்கணமுடையவெழுத்தை —எழுதுகோல் —அங்கலிங்கமாம் —வியனி லத்து - விரிவானநிலத்திற்கு —அளவுகோல் —மதிவிளக்கினை - அறிவா கிய விளக்கை —அயர்வற - சோர்வுநீங்க —தூண்டுகோல் —ஆகும். எ-று. இங்ஙனங்கூறவே, இதுகேட்டற்கு மயக்கநீங்கலும், பத்திபெறுதலும், அங்கலிங்கவளவுகாண்டலும், தத்துவஞானமுறுதலும் பயனாதலறிக. அங்கலிங்கங்களுள்; அங்கமானது ஸ்தூலமுதலிய மூன்றாய்நிற்றலன் றிப் பத்தஸ்தலம் - கரு, மாஹேசுவரஸ்தலம் - கூ, பிரசாதிஸ்தலம் - எ, பிராணலிங்கஸ்தலம் - ரு, சரணஸ்தலம் - ச, ஐபிக்கியஸ்தலம் - ச, ஆக அறுவகைப்பட்டு நாற்பத்துநான்காய்விரிந்தும், இலிங்கமானது - இஷ் டமுதலிய மூன்றாய் நிற்றலன்றி ஆசாரலிங்கஸ்தலம் - கூ, குருலிங்கஸ் தலம் - கூ, சிவலிங்கஸ்தலம் - கூ, ஜங்கமலிங்கஸ்தலம் - கூ, பிரசாதலி ங்கஸ்தலம் - கூ, மஹாலிங்கஸ்தலம் - கூ, குருஸ்தலம் - க, லிங்கஸ்தலம் - க, ஜங்கமஸ்தலம் - க, என ஆறும்மூன்றுமாக ஒன்பதுவகைப்பட்டு ஐம்பத்தேழாய் விரிந்தும், நூற்றொருஸ்தலங்களாக நிற்றலால் அங்கலிங் கமாம் வியனிலமென்றார். இவையெல்லாஞ் சித்தாந்தசிகாமணியிற் கா ண்க. அமலலீலை - வடநூன்முடிபு. [மயன்முதலியவற்றிலே சேறுமுத லிய வற்றையும், இவ்வமலலீலையிலே ஊன்றுகோன் முதலியவற்றையும் ஆரோபித்தலால் உருவகவணி.]

மயலளறனூன்றுகோலில் மயலாவது; பொருளல்லவற்றைப் பொரு ளாகக்கோடலே. அங்கலிங்க மாநிலமென்னாது வியனென்றடைகொடுத்த து; லட்சியார்த்தத்தாலன்றி யேனையவளவைகளாற் கணிக்கப்படாமை பற்றியென்க. சுருதியுத்தியநுபவமூன்றானு வாய்த்த சுவாநுபூதிப்பிரத் யட்சஞ் சோர்வுறாது வளர்தற்குத் தூணைக்கருவியாகிநிற்றலின் மதிவிளக்கி னையயர்வறத்தூண்டுகோ லமலலீலையென்றார். (கசு)

விடையம்.

நன்றிகொ ளடிகளுன் குறைநடந்துபோ
யென்றனி நாவினின் றெழுமிச் செய்யுளான்

வென்றிகொ ளல்லமன் சீர்த்தி மென்பயன்
கன்றலி லன்பராங் கன்றை யூட்டுமால்.

(இ - ள்.) என்றனிநாவினின்று - எனதொப்பற்ற நாவினின்றும்—எழும் - தோன்றுகின்ற —இச்செய்யுளான் - இக்காப்பியமாகிய பசுவானது —நன்றிகொள் - நன்மைகொண்ட —அடிகணான்கு - நான்கடிகளாகிய நாலுபாதங்களைக் கொண்டு —உற - மிகவும் —நடந்துபோய் —வென்றிகொளல்லமன் - வெற்றியைக்கொண்ட அல்லமனது —சீர்த்தி மென்பயன் - புகழாகியமெல்லியபாலை —கன்றலில் - பதனழிதலில்லாத —அன்பராங்கன்றை - சிவபத்தர்களாகியகன்றுகளை —ஊட்டும் - உண்பிக்கும். எ - று. [பாட்டடிகண்முதலியவற்றிலே பசுவடிகண்முதலியவற்றை யேற்றுதலால் உருவகவணி.]

பதனழிதலில்லாமையாவது; நினைப்புமறப்புக்கிடை நிற்றலே. சீர்த்தி மென்பயனாவது; அறிவன்றி யுயிரும் பரமு முளவேல் ஆனந்தமன்றிச் சிற்றின்பமும் பேரின்பமு முளவாம். அறிவேசமஷ்டிவியஷ்டி யுபாதிகளாயின் ஆனந்தமே சமஷ்டி வியஷ்டி யுபாதிகளாகலாமெனவும், அறிவன்றிச் சோதனையாதிமூன்று முயிர்பரமின்றெனின், ஆனந்தமன்றிச் சிற்றின்பபேரின்ப பேதமின்றாம். சித்தசடபேதபாதலால் சமஷ்டி வியஷ்டியுபாதிக ளறிவுமானந்தமுமாகா வெனவும், அறிவன்றியானந்தம் வேறெனின் அறிவன்றி யறியாமையிருக்கவேண்டும். இன்றெனின் அறிவேயானந்தமாகவேண்டும். ஆனந்தமே யறிவாகவேண்டுமெனவும் பிரிதிவாதித்துண்மை விளக்குநிலையை. (கஎ)

இனிமூன்றுபாட்டுகளால் உற்பத்தி சொல்லப்படுகின்றது.

பரசிவம் பிரம மென்னப் பட்டொரு திரிவு மின்றி
யுரைமன மிறந்து நின்ற வொருசிவ லிங்கந் தன்னின்
வருமுயர் சதாசி வன்றான் மற்றவன் றனைப் பொருந்து
மருமைகொண் ஞான சத்தி யவர்களாற் சிவனு திப்பன்.

(இ - ள்). பரசிவம் —பிரமம் —என்னப்பட்டு - என்றுசொல்லப்பட்டு —ஒருதிரிவும் - யாதொருவிகாரமும் — இன்றி - இல்லாதாகி —உரைமனம் - வாக்கையும் மனத்தையும் —இறந்து - கடந்து —நின்ற - (சச்சிதாநந்தசொரூபமாய்) நின்ற —ஒருசிவலிங்கந்தன்னின் - ஒருசிவலிங்கத்தினின்றும் —உயர் - உயர்வாகிய —சதாசிவன் —வரும் - தோன்றுவ

ன் —அவன்றனை - அவனை —அருமைகொள் - அருமைகொண்ட —ஞானசத்தி —பொருந்தும் - பொருந்துவள் —அவர்களால் - அவர்களினின்றும்—சிவன் உதிப்பன். எ - று. தான் - மற்று - அசைகள். பரசிவம் பிரமமென்னப்பட்டதென்றாரேனும் பரசிவமெனப்படுவது ; சித்தாந்த நூல்களாலெனவும், பிரமமெனப் படுவது ; வேதாந்த நூல்களாலெனவுங் கொள்க.

பரசிவம் பிரமமெனல் ; பரியாயநாமமாதலின் ஒருபொருட்கிளவி. இஃதறியாதார் மதஸ்தரைப்போல் வறியசொல்லாற் பேதித்து வழக்கிடுதல்போலும். ஒருகிரிவுமில்லாச் சிவலிங்கமெனல் ; சுசீரிமுதலியவற்றால் முரணுறுதெய்தற்பாலதை. இங்ஙனமாய நிர்விகாரசிவலிங்கத்திற் சதாசிவன்முதலிய பஞ்சமூர்த்திகளும் பஞ்சசத்திகளு மெய்தியது, கானனீர் கிளிஞ்சல் வெள்ளி கயிற்றிற்பாம்பு என்றுறபோலுமன்றோ ? ஆதலினிவையனைத்துங் கற்பிதமென்றருத்தாபத்தியாற்கான " ஒருகிரிவுமின்றி யுமைமணமிறந்துநின்ற வொருசிவலிங்கந்தன்னிலென்றார். பிரமமொன்றேமெய் ஏனையவனைத்தும்பொய் எனற்குமுரணென்னை ? கண்டபடி கதைகட்டிப்பிதற்றலொழிக. (கஅ)

சாற்று மச் சிவனுக் கிச்சா சத்தியவ் விருவ ராலும்
தோற்றுவ னுருத்தி ரன்றான் சொல்லிய விவற்குச சத்தி
மாற்றருங் கிரியை யென்பர் மற்றிவ ரிருவர் பாலும்
போற்றுறு மரியு திப்பன் பொறியவன் சத்தி யாமால்.

(இ - ள்.) சாற்றும் - மேற்சொல்லப்பட்ட —அச்சிவனுக்கு —இச்சாசத்தி —(சத்தியாவாள்)—அவ்விருவராலும் - அவ்விருவரினின்றும் —உருத்திரன் —தோறறுவன் - தோன்றுவன் —சொல்லிய - சொல்லப்பட்ட —இவற்கு - இவ்வுருத்திரனுக்கு —மாற்றரும் - மாற்றப்படாத—கிரியை - கிரியாசத்தியை —சத்தியென்பர் —இவரிருவர்பாலும் - இவ்விருவரினின்றும் —போற்றுறும் - (உலகைக்) காக்கின்ற —அரி - நாரணன் —உதிப்பன் - தோன்றுவன் —பொறி - திருமகள் —அவன் சத்தியாம். எ - று. தான் - மற்று - ஆல் - அசைகள். தோற்றுவனென்னும் பிறவினை தன்வினைப்பொருளில் வந்தது. இதுவுமது. (கக)

அத்திரு மாலு மாவு மளிப்பவன் றுதிப்பன் வண்டு
மொய்த்திசை முரலுஞ் செங்கேழ் முளரிவா லயன வற்குச

சத்திவெண் கமலை யன்னோர் தரவரு முலகத் தோற்ற
மித்தனங் குருகு கேச னினைவுமாத் திரையி னுமால்.

(இ - ள்.) அத்திருமாலும் - அந்தாரணனும் —மாவும் - திருமகளு ம் —அளிப்ப - ஈன்றிட —வன்டு —மொய்த்து —இசை - இசைபோல் —முரலும் - ஒலிக்கப்பெற்ற —செங்கேழ் - சிவப்புநிறத்தையுடைய —முளரிவானவன் - தாமரைமலரிலிருக்கின்றபிரமன் —வந்து உதிப்பன் - தோன்றுவன் —அவற்கு - அவனுக்கு —வெண்கமலை-நாமகள்—சத்தி - சத்தியர்வள் —அன்னோர் - அவ்விருவருங்கூடி —தர - படைக்க—உலகம் - உலகமும்—தோற்றம் - எழுவகைத்தோற்றமும் —வரும் - உண்டாகும் —நித்தன் - அழிவில்லாதவனும் —நங்குரு - நமதுகுருவுமாகிய—குகேசன் - அல்லமதேவனது —நினைவுமாத்திரையின் - நினைப்பினளவிலே ஆம். எ - று. எல்லாவற்றிற்கும் குகேசனது சங்கற்பமே காரணமென்றபடி.

பரசிவம்பிரமமென்னப்பட்டென்னுங் கவிமுத லிக்கவிகாறுமுள்ள வந்தர்முக கருத்து; சகுணநிர்க்குணங்கழன்ற தானென்னுநிலை தனக்கதோமுகத்ததாய நிர்க்குணம் வாய்த்த வவசரத்துப் பரசிவம்பிரமமெனவும், அந்தந்தானென்னுநிலையே தனக்கதோமுகத்ததாய சகுணம்வாய்த்த வவசரத் தறிவானந்த வையிக்கியமெனப்படலாற் சதாசிவமெனவும், அவ்வையிக்கியம்வாய்த்தல் சுத்தஞானத்தாலாதலின் ஞானசத்தியெனவும், இங்ஙனமாகநில்லா ததோமுகத்ததா யறிவானந்தமேகமெனற் கிடையூறு வாய்த்தவவசரத்து அந்தத்தானென்னுநிலை மகேஸ்வரனெனவும், அங்ஙனம் பேதமுறச்செய்தசத்தி யிச்சாசத்தியெனவும், அந்தத்தானென்னுநிலை இங்ஙனமாகநில்லாதிதனினு மதோமுகத்ததா யறிவுதானெனலை மறந்தவவசரத்து ருத்திரனெனவும், இங்ஙனமாக மாறச்செய்தது கிரியாசத்தியெனவும், இந்தத்தானென்னுநிலை இதனினுமதோமுகத்ததாயயல் தானென்னும் பிராந்தியை யாதோர் விக்கினமு மெய்தாது காக்குமவசரத்து விஷ்ணுவெனவும், இங்ஙனங் காத்தற்கியைவதாநின்ற சத்திக்கு இலக்குமியெனவும், இவ்வண்ணங்கீழ்ப்பட்டிதுவாகக் காணப்பட்ட இந்தத் தானென்னுநிலை யிதனினு மதோமுகத்ததா யயல்தானென்னும் பிராந்தியை ஸ்தூலமாகச்செய்யுமவசரத்துப் பிரமனெனவும், அங்ஙனமாக்கற் கியைந்தசத்தியை சரஸ்வதியெனவுங் கொள்க. இவையனைத்து நினைவுமாத்திரையினுமா லென்றதனுற் சற்பிதமெனவு முபக்கிரமசிருஷ்டியெனவு மெண்ணற்கிடம்பெற்றும். இங்ஙனமன்றி வேறாகவுரைகொளின் முரணும். (உ0)

அல்லமதேவன்சிறப்பு.

ஆக்குறுஞ் செயலவொன்றே யயன்றனக் காக்க லோடு
காக்குறுஞ் செயலி ரண்டுங் கண்ணனுக் காக்கல் காத்தல்
போக்குத லென்றிம் மூன்றும் புராந்தகற் களித்த வர்க்கு
நீக்கரு மிறைமை நல்கி நிறுவினன் குருகு கேசன்.

(இ - ள்.) குரு - நமதுகுருவாகிய —குகேசன் - அல்லமதேவன் —அயன்றனக்கு - பிரமனுக்கு —ஆக்குறுஞ்செயலவொன்றே - படைக்குந்தொழி லொன்றனையே —கண்ணனுக்கு - நாரணனுக்கு —ஆக்கலோடு - படைத்தலோடு —காக்குறுஞ்செயல் - காக்குந்தொழிலுமாகிய —இரண்டும் - இரண்டையும் —புராந்தகற்கு - உருத்திரனுக்கு —ஆக்கல் காத்தல் போக்குதலென்று - படைத்தலும் காத்தலும் அழித்தலுமெனப்படுகின்ற —இம்மூன்றும் - இம்மூன்றையும் —அளித்து - கொடுத்து —அவர்க்கு - அம்மூவருக்கும் —நீக்கரும் - மாற்றப்படாத —இறைமை - தலைமையை —நல்கி - தந்து —நிறுவினன் - வைத்தனன். எ - று.

மனதால் விளையும் பந்தமகலாக்காறுந் தூலதேகம் வந்துவந்தகலலெல்லையின்மையின் இம்மூவரது கிருத்தியந் தூலதநுபற்றியன்றே? அன்றேல்; சூக்குமதநுபற்றியெனச் சுருதியுத்தியநுபவமிருக்கவேண்டும். அங்ஙனமின்றே, ஆதலின் பந்தவிளைவுபற்றி மனமெனவுளதாகவும், நாசம்பற்றியிலதாகவுஞ் சோடலெவர்க்கு முடன்பாடாம். மனோவிளைவு மகேஸ்வரனுக்கும், மனோநாசம் சதாசிவனுக்கு மியல்பாயெய்தி இருப்பதா லதனைக் குறிப்பிற்காண விங்ஙன மொழிந்தாரென்க. (உக)

முதலாவது - துதிகதி முற்றிற்று.

கதி - க - இற் கவி - உக.





## இரண்டாவது

# கைலாசகதி.



வெள்ளிமால் வரையி னுச்சி வீற்றிருந் தருளு முக்கண்
வள்ளலா ரொடுசூ ளுற்று மதரரி நெடுங்கட் செவ்வாய்ப்
பிள்ளைவாண் மதிநு தற்றம் பிராட்டியல் லமனைக் காண்பான்
கள்ளமா யையைஞா லத்து விடுத்தவக் கதியு ரைப்பாம்.

(இ - ள்.) வெள்ளி - வெள்ளிமயமாகிய —மால் - பெருமைபொருந்திய —வரையின் - கைலாசகிரியினது—உச்சி - சிகரத்தின்கண் —வீற்றிருந்து - அரசிருந்து —அருளும் - (உயிர்களுக்கு) அருள்செய்கின்ற—முக்கண் - மூன்றுகண்களையுடைய—வள்ளலாரொடு - சிவனாருடனே—சூளுற்று - சபதஞ் செய்துகொண்டு —மதர் - களிப்புப்பொருந்திய —அரி - அரிகளையுடைய —நெடுங்கண் - நெடியகண்களையும் —செவ்வாய் - செய்யவாயையும் —பிள்ளை - குழந்தையாகிய —வாள் - காந்திபொருந்திய —மதி - சந்திரன்போலுள்ள—நுதல் - நெற்றியையுமுடைய —தம்பிராட்டி - தமது தேவியானவள் —அல்லமனை - அல்லமதேவனை—காண்பான் - காணுதற்பொருட்டு —கள்ளமாயையை - வஞ்சகம்பொருந்திய மாயையை —ஞாலத்து - பூமியின்கண் —விடுத்த - அனுப்பினமையைச் சொல்லுகின்ற —அக்கதி - அந்தக்கதியை —உரைப்பாம் - சொல்லுவாம். எ - று.

மேல் துதிகதியிற்குறித்த தானென்னுநிலை அத்தியாரோபத்தால் எல்லாமாயும், அபவாதத்தால் அல்லவுமாயு மிருப்பதாகத் தொனித்தலின் எல்லாமாநிற்குமவசரங் கைலாயபதியெனவும், அல்லவாநிற்கு மவசர மல்லமனெனவுங் காரணவிடுகுறியாகக்கொண்டு இங்கே யெல்லாமாநிற்கு மவசரத்திற் சத்தன் சத்தியென்றிரண்டாக்கிக் கூறத்தொடங்கினா ரென்பது கருத்து. (க)

(இதுமூ. ஆறுபாட்டுகளாற் கைலைச்சிறப்புகூறுகிறார்.)

இயங்குவ நிற்ப வான யாவையுங் கலைமா தோடு
முயங்குபு முன்ன மீன்ற முளரிவா னவன்வ குத்து
வியன்புவி யண்டந் தன்னுள் விதித்தனன் றருமி டங்கள்
வயங்கெழு மசுரர் நாகர் வானவர் முதலி யோர்க்கும்.

(இ - ள்.) இயங்குவநிற்பவான - சரங்களுமசரங்களுமான —யாவையும் - எல்லாவற்றையும் —கலைமாதோடு - நாமகளோடு —முயங்குபு - கூடி —முன்னம் - ஆதிகாலத்திலே —ஈன்ற —முளரிவானவன் - நான்முகக்கடவுள் —வியன்புவியண்டந்தன்னுள் - விசாலமாகிய பிருதிவியண்டத்துள் —வயங்கெழும் - வெற்றிபொருந்திய —அசுரர் நாகர் வானவர் முதலியோர்க்கும் - தானவர் உரகர் தேவர் முதலியோர்க்கும் —தருமிடங்கள் - தகுதியானவிடங்களை —வகுத்து - பாகுபாடுசெய்து —விதித்தனன் - நிருமித்தான். எ - று. (உ)

நான்முக வண்டந் தன்று ணனிசிறந் தொப்பி கந்த
தூன்முக விழிக ளாற்கண் டும்பர்க ளுவகை பூப்பத்
தான்மிகு மருளான் மேனி சாத்திய பேரா னந்தக்
கூன்முக மதிய ணிந்த கொற்றவன் கைலைக் குன்றம்.

(இ - ள்.) தான் —மிகும் - வளர்கின்ற —அருளால் - கருணையினாலே —மேனி - திருமேனியை —சாத்திய - தரித்துக்கொண்டிருக்கின்ற—பேரானந்தம்-நிரதிசயானந்தத்தையுடைய—கூன்முகமதியணிந்த - கோணிய வடிவத்தையுடைய பிறையைஅணிந்த —கொற்றவன் - கடவுளது —கைலைக்குன்றம் - கைலாசகிரியானது —உம்பர்கள் - தேவர்கள் —ஊன்முகவிழிகளால் - ஊனையுடைய முகக்கண்களாலே —கண்டு - பார்த்து —உவகைபூப்ப - மகிழ்கூர —நான்முகவண்டந்தன்னுள் - அப்பிரமாண்டத்தினுள்ளே —நனிசிறந்து - மிகச்சிறந்து —ஒப்பிகந்தது - உபமானமில்லதாயது. எ - று. சாத்தியகொற்றவன் ஆனந்தக்கொற்றவன் - அணிந்தகொற்றவன் எனக்கூட்டுக. (ந)

கொள்ளைவண் டிழிந்து தாது குடைந்துழக் குழவு டைந்து, கள்ளழிந் தொழுகு செம்பொற் கடுக்கைவேய்ந் தில

கு வேணி, வள்ளல்வெண் புகழ்தி ரண்ட வளங்கெழு கை
லைக் குன்றில், வெள்ளிவந் தத்தி யாச மாகவே விளைந்த தம்மா.

(இ - ள்.) கொள்ளை - கொள்ளைகொள்ள —வண்டு - வண்டுகளானவை —இழிந்து —தாது - பொடியிலே —குடைந்து - மூழ்கி —மூக்கு - நாசியினால் —உழ - கிண்ட —உடைந்து - முறுக்கவிழ்தலினாலே —கள் - தேனானது —அழிந்து - வழிந்து —ஒழுகும் - ஒழுகுகின்ற —செம்பொற்கடுக்கை - செம்பொன்போலுள்ள கொன்றைமலர்களை —வேய்ந்து - சூடப்பெற்று —இலகு - விளங்காநின்ற —வேணி - சடையையுடைய —வள்ளல் - கடவுளது—வெண்புகழ் - வெள்ளியபுகழ்களானவை—திரண்ட - குவிந்தாகிய —வளங்கெழு - வளம்பொருந்திய —கைலைக்குன்றில் - கைலாசகிரியின்கண்ணே —வெள்ளி - வெள்ளியானது —வந்து —அத்தியாசமாகவே - ஆரோபமாகவே —விளைந்தது. எ - று. அம்மா - வியப்புக்குறிப்பு. உடைந்து - உடைதலா லென்கிற பொருளில்வந்தது. அத்தியாசம ; இப்பியை வெள்ளியெனவறிதல்போல் ஒன்றை மற்றொன்றாக வறிவது. [புகழ்மையையேற்றி அத்தியாசமாகவே விளைந்ததென வெள்ளியை மறுத்தலால்ஒழிப்பணி. "ஒழிப்பு வேறொப்ப[illegible]னற்றலி லொன்றொழிப்பது" என்பது இலக்கணமாதலின்.] (௪)

கண்பிசைந் தொருசே யின்னுங் கலுழினுந் தனைக்கொ டுப்
பன், மண்பிசைந் துண்ட மாயன் மறித்திட வலிய னல்ல,
னண்பிசைந் திறைவ னுக்கே நாமிட னவ மென்று, பண்பிசை
ந் தலைதி ரண்ட பரிசினின் றிடுமக் குன்றம்.

(இ - ள்.) அக்குன்றம் - அந்தக்கைலாசகிரியானது —ஒருசேய் - ஒருகுழந்தையானது —இன்னும் —கண்பிசைந்து - கண்களைப்பிசைந்து —கலுழினும் - அழுதாலும் —தனைக்கொடுப்பன் —மண்பிசைந்து - மண்ணைப்பிசைந்து —உண்ட —மாயன் - நாரணன் —மறித்திட (கொடேலெனத்) தடுத்தற்கு —வலியனல்லன் - சமர்த்தனல்லன் —(ஆதலால்) —நண்பிசைந்து - நட்புக்கு இசைந்து —இறைவனுக்கே - அக்கடவுளுக்கே —நாம் இடனவமென்று —பண்பிசைந்து -தன்குணத்தோடு பொருந்தி —அலை - பாற்கடலானது —திரண்ட - குவிந்தாகிய —பரிசின் - உருவம்போல் —நின்றிடும். எ - று. அலை - பரிசு - இரண்டும் ஆகுபெயர்கள். இன்னுமென்றது ; முன்னொருகாலத்தே பாலுக்குப் பாலகன்வேண்டியழுதிடப் பாற்கடலீந்த பிரா னென்கையைக்காட்டி நின்

றது. குணம்; வெண்ணிறமுதலியன. வெண்மைமுதலியவற்றின் சம்பந்தத்தால் அக்குன்றத்தை அவ்வலை திரண்டவடிவாகக் குறித்ததால், தற்குறிப்பணி. "தற்குறிப் பல்பொருட் டன்மையி னியைபாற் புகழ்பொரு ளதனையப் பொருளெனக் குறிப்பது." என்பது இலக்கணமாதலின். (ரு)

ஒழுகுறு மருவி யீட்ட மொலியினு னகுவெண் டிங்கள்
பழகுறு முடற்க ளங்காற் பாகசா தனன்கூர்ங் கோட்டு
மழகளி றுமிழ்ம தத்தான் மலர்மிசைக் கடவு ளூர்தி
யழகுறு நடையா லன்றி யறிதரப் படாவக் குன்றில்.

(இ - ள்.) அக்குன்றில் - அம்மலையில் —ஒழுகுறும் - ஒடுகின்ற —அருவியீட்டம் - வெள்ளங்களின்கூட்டம்—ஒலியினால் - ஓசையினாலும்—நகுவெண்டிங்கள் -விளங்காநின்ற வெள்ளிய சந்திரனது—பழகுறுமுடற்களங்கால் - வடிவிலேதங்கிய களங்கத்தினாலும் — பாகசாதனன் - இந்திரனது —கூர்ங்கோட்டு - கூரியகொம்புகளையுடைய —மழகளிறு - இளமைபொருந்திய யானையானது —உமிழ்மதத்தால் - சொரிகின்ற மதத்தினாலும் —மலர்மிசைக்கடவுளூர்தி - மலர்மேலிருக்கின்ற பிரமனது வாகனமானது —அழகுறுநடையால் - அழகுபொருந்தியநடையினாலும் —அன்றி - அல்லாமல் —அறிதரப்படா - அறியப்படுவனவல்ல. எ-று. அன்றியறிதரப்படாவெனவே, இக்காரணங்களாலே அறியப்படுகின்றன வென்றதாயிற்று. பொதுக்குணமாகிய வெண்மையினாலே அம்மலையிலே மறைபட்ட அருவி முதலியவற்றுக்கு முறையே ஒலிமுதலிய காரணங்களாலே வேற்றுமை காணப்படுதலால், மறையாமையணி. "மறையா மைய்யே யொப்புமை யான்மறை வேற்றுமை யேதுவால் வெளிப்படுவதுவே" என்பது இலக்கணமாதலின்.] (சா)

விளங்கொளி துளும்பு மந்த வெள்ளியங் கிரியி னுச்சி, துளங் கொளி விரிக்குஞ் செம்பொற் சுடர்மணிச் செய்குன்றொன்று, களங்கறு பராரைத் துய்ய கருப்புரக் குவாலின் மீது, வளங்கெழு சுடரோன் றற்று வயங்குதல் போலு மன்றே.

(இ - ள்.) விளங்கொளி - விளங்குகின்றவொளியானது —துளும்பும் - ததும்புகின்ற —அந்தவெள்ளியங்கிரியின் - அந்தக்கைலாசகிரியினது —உச்சி - சிகரத்தின்கண்ணே —துளங்கு - அசைகின்ற —ஒளி - கதிர்களை —விரிக்கும் - பரப்புகின்ற —செம்பொன் - செம்பொன்னாலு

ம் —சுடர்மணி - கிரணங்களையுடைய மாணிக்கங்களாலும் ஆகிய —செய்குன்றொன்று - கிரீடாசைலமொன்று —(வயங்குதல்) - விளங்குதலானது —களங்கறு - மறுவில்லாத —பராரை - பரிய அரையையுடைய —துய்ய் - தூய்தாகிய —கருப்புரக்குவாலின்மீது - கர்ப்பூரராசியின்மேல்—வயங்கெழுசுடரொன்று - வளம்பொருந்திய தீபமொன்று —உற்று - தங்கி —வயங்குதல்போலும் - விளங்குதல்போலும். எ - று. அன்று - ஏ - அசைகள். சுடருக்கு வளம்; தூண்டப்படாமை, மழுங்காமை, அலையாமைமுதலியவை. வயங்குதல், முன்னும் கூட்டப்பட்டது. [அச்செய்குன்று விளங்குதலை இச்சுடர் விளங்குதலாகக் குறித்தமையால் தற்குறிப்பணி.] (எ)

அரசாட்சிமண்டபசிறப்பு.

இனையதிக் கைலை வெற்பி லிறையர சிருக்கை யொன்றுண்
டனையதை யணிய மாட்டா தப்புறம் போயி னானென்
றெனையிகழ் பவர்க ளில்லை யிலங்குமம் மண்ட பத்தின்
றனிவள மனந்த னாலுஞ் சாற்றிடற் கரிது மாதோ.

(இ - ள்.) இனையது - இப்படிப்பட்டதாகிய —இக்கைலைவெற்பில் - இக்கைலாசகிரியினிடத்து —இறையரசிருக்கையொன்று - கடவுளது அரசாட்சிமண்டபமொன்று —உண்டு —அனையதை - அம்மண்டபத்தை —அணியமாட்டாது - வர்ணிக்கமாட்டாமல் —அப்புறம் - அதன்பிற்பட்டதைச் சொல்லுதலிலே —போயினானென்று - சென்றானென்று —எனை —இகழ்பவர்கள் —இல்லை.— இலங்குமம் மண்டபத்தின் - விளங்காநின்ற அம்மண்டபத்தினது —தனிவளம் - ஒப்பற்றவளமானது —அனந்தனாலும் - (ஆயிரநாக்களையுங் குறைவற்ற புலமையையுமுடைய) ஆதிசேஷனாலும் —சாற்றிடற்கரிது - சொல்லப்படுதற் கரிதாகும் (ஆதலால்). எ - று. மாது - ஓ - அசைகள். [எனையிகழ்பவர்களில்லை யென்றது; அனந்தனாலுஞ் சாற்றிடற்கரிது என்ற வாக்கியப்பொருளைக்கொண்டு சாதிக்கப்படுதலால் செய்யுட்குறியணி. "செய்யுட்குறியே பதப்பொருள்வாக்கியப் பொருளிவற்றேதுவொன் றுவதாமென்ப." என்பது இலக்கணமாதலின்.] (அ)

வேறு.

ஆதனத்திருத்தற்சிறப்பு.

அன்ன மண்டபத் தங்கணை னோர்பகன்
மின்னு செம்மணி வேதிகை யொன்றன்மேன்

மன்னு செங்கதிர் மண்டலத் துற்றன
னென்ன வந்தங் கிருந்தன னென்பவே.

(இ - ள்.) அன்னமண்டபத்து - அப்படிப்பட்ட மண்டபத்தில் — அங்கணன் - கடவுள் — ஓர்பகல் - ஒருநாள் — வந்து — அங்கு — மின்னு - விளங்காநின்ற — செம்மணி - பதுமராகமணிகளாலாகிய — வேதிகையொன்றன்மேல் - ஒருமேடையின்மேல் — மன்னு - (உலகம்) நிலைபெறுதற்கு ஏதுவாகிய — செங்கதிர்மண்டலத்து - சூரியபிம்பத்திலேபோல் — உற்றனனென்ன - தங்கினனென்றுசொல்ல — இருந்தனன். எ - று. என்ப - ஏ - அசைகள். அங்கணன், அழகியகண்ணனன். கண்ணிற்கு அழகு, அருள். மண்டலத்தென்றவிடத்தே கண்ணுருபும் உவமையுருபும் விகாரத்தால் தொக்குநின்றன. [கடவுளது செம்மணிவேதிகையினிருப்புக்கு, அவனது சூரியமண்டலத்தி னிருப்பை உவமானமாக்கலால் ஒப்பணி. (எ)

இதுமுதல் ஆறுபாட்டுகளிற் கடவுள் சிறப்பு.

குழவி யாயுடற் கூனிந ரைத்தநோா
விழவு வாண்மதி வேணியின் மேவுறக்
கிழவி யாகிக் கிரிக்கோன் மகப்பெறு
மழகு நீர்மக ளாயிடை வாழவுற.

(இ - ள்.) குழவியாகி - பிறையாகி — உடற்கூனி - உடலில்வளைவுற்று — நரைத்தது - வெளுத்ததாகிய — விழவு - உற்சவகரமாயுள்ள — வாள் - ஒளிபொருந்திய — ஓர்மதி - ஒருசந்திரன் — வேணியில் - சடையின்கண்ணே — மேவுற - பொருந்தாநிற்கவும் — கிழவியாகி - உரியவளாகி — கிரிக்கோன் - மலையரசனது — மகப்பெறு - குழந்தையெனப்பெற்ற — அழகு - அழகையுடைய — நீர்மகள் - கங்கையானவள் — ஆயிடை - அந்தச்சடையினிடத்து — வாழ்வுற - வாழாநிற்கவும். எ - று. மலையரசனுக்கு கங்கையும் பார்வதியும் புதல்விகளென்பது சிலபுராணங்களி லிருத்தலின், கிரிக்கோன் மகப்பெறுமென்றதற்கு இங்ஙனம் பொருள்கூறப்பட்டது. அன்றி, பார்வதிகரத்திற் பிறந்தமைபற்றிச் சொல்லப்பட்டதெனின், கிரிக்கோனதுமகவாகிய உமைபெற்றவெனவுரைத்துக்கொள்க. [குழந்தையாயிருந்தும் கூனுற்று நரைத்துளதென்றும், கிழவியாயிருந்தும் மகவெனப்பெற்று அழகுடையளாயிருக்கின்றதென்றும், பகைமை தோன்றலால் முரண்பொலியணிகள். "முர

ண்போலிய்யே மூரண்வினைந் தழிவதாம்" என்பது இலக்கணமாதலி ன்.] இதுமுதல் ஆறுபாட்டுகளிலுள்ள மேவுறமுதலிய வினையெச்சங்க ள் ஏழாம்பாட்டில் இருந்தவென் வினைகொண்டு முடிந்தலால் குளகமெனப்படும். "குளகம் பல பாட்டொருவினை கொள்ளும்" என்முரா கலின். (௧0)

அங்கி யென்றற் கடுப்பமே னோக்கிய
செங்க ணொன்று திருநுதல் சேர்தரத
திங்க ளென்றுந் தினகர னென்றும்வா
ழங்கண் மல்கரு ளுண்மடை போன்றுற.

(இ - ள்.) அங்கியென்றற்கு - நெருப்பெனப்படுதற்கு —அடுப்ப - பொருந்த—மேனோக்கிய—செங்கணொன்று - செய்யவிழியொன்று —திருநுதல் - அழகிய நெற்றியினிடத்தே —சேர்தர - சேர்ந்திராநிற்கவும் —திங்களென்றும் - சந்திரனெனப்படும் —தினகரனென்றும் - சூரியனெனப்படும் —வாழ் - வாழ்கின்ற —அங்கண் - அழகியகண்களிரண்டும் —மல்குமருள் - பெருகுகின்ற அருள் (வெள்ளத்துக்கு) —மடை போன்றுற - மதகுகள்போன்றிராநிற்கவும். எ - று. [நீர் கீழ்நோக்கலும், நெருப்பு மேனோக்கலும், உடைமையின்; செங்கணாகிய காரியத்திற்கு அதன்காரணமாகிய அங்கியோடு ஒத்தமேனோக்குதல் கூறலால் தகுதியணி. "தகுதி காரணத்தொடு காரியந்தகுதலும்" என்பதிலக்கணமாதலின். என்றென்றவிரண்டும் செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தன. பின்னிருவிழிகளையும் அருண்மடைகளாகக் குறித்ததால் தற்குறிப்பணி. (௧௧)

எண்ணு மன்ப ரிதயமென் புட்படு
கண்ணி போன்றுவார் காதிடைத் தோடுற
நண்ணு மாதுமை நன்னுதற் பொட்டென
வண்ண நீல மணிமிடற் றென்றுற.

(இ - ள்.) எண்ணும் - தியானஞ்செய்கின்ற —அன்பர் - அடியார்களது —இதயமென்புள் - நெஞ்சங்களெனப்படுகின்ற பறவைகள் —படு - படுகின்ற —கண்ணிபோன்று —வார்காதிடை - நெடிய செவிகளிடத்து —தோடு - தோடுகளானவை —உற - தங்காநிற்கவும் —நண்ணு மாது - அடுத்தமாதாகிய —உமை - உமாதேவியினது —நன்னுதல் - நல்ல நெற்றியிடத்து —பொட்டென —கஸ்தூரிதிலகமானதுபோல் —வ

ண்ணீலம் - கருநிறமுடைய நஞ்சக்கறையானது —மணிமிடற்று - அ
ழகியகண்டத்தினிடத்து —ஒன்றுற - பொருந்தாநிற்கவும். எ - று. க
ண்ணி; பறவைகளைப்பிடித்தற்கு வைக்கப்படுவதோர் கயிற்றுமுடி.
தோட்டை அக்கண்ணியாகக் குறித்தலால், தற்குறிப்பணி. இத் இ
தயமென்புள்ளென்ற உருவகத்தாற் பிழைப்பிக்கப்பட்டது. அன்பர்
கள் அத்தோட்டையே ஒழிவின்றி நினைக்கின்ற ரென்பதாம். திலகம்
நெற்றிக்கு எப்படியோ அப்படிநஞ்சக்கறை கழுத்துக்கு அழகுசெய்கி
ன்றதென்க. [இது.ஒப்பணி.] (௪உ)

நகந்த ருங்கொடி கண்களை நாணியே
முகந்தி ரும்பு முறையிற் றிரும்புமான்
மகிழ்ந்தி டங்கதிர் வீர மழுவலந்
தகுந்த குந்தகு மென்று தயங்குற.

(இ - ள்.) நகம் - மலையினாலே —தரும் - தரப்பட்ட —கொடி - பூங்
கொடியினது —கண்களை —நாணியே - நாணுதலாலேதான் —முகம் -
முகமானது —திரும்புமுறையின் - திரும்புமுறைப்படி —திரும்புமான் -
திரும்புமானனது —மகிழ்ந்து —இடம் - இடதுகையிலும் —கதிர் - கிர
ணத்தையுடைய —வீரமழு - வீரம்பொருந்திய மழுவானது —தகுந்தகு
ந் தகுமென்று - தகுந் தகுந் தகுமென்று ஒலிசெய்து எரிதலினாலே (அ
ப்படிதிரும்புதல்) தகுந்தகுந்தகுமென்று (சொல்வதுபோன்று) —வல
ம் - வலதுகையிலும் —தயங்குற - விளங்காநிற்கவும். எ - று. கொடி
க்குமலையிற்றோன்றலு முண்மையின் - உமையை; நகந்தருங்கொடியெ
ன்றார். இது ஒற்றுமையுயர்வு நவிற்சி. முகந்திரும்புதற்கு ஏதுவாகாத
நாணுதலை ஏதுவாகக்குறித்தலால் ஏதுத்தற்குறிப்புஅணி. தகுந்தகுந் தகு
மென்றது; ஒலிக்குறிப்பையும், துணிவுப்பொருளையும், பற்றிவந்த அடு
க்கு. அப்படி யொலித்துக்கொண்டெரிகிற மழுவை அவ்வாறு சொல்
வதாகக் குறித்தலால் பொருட்டற்குறிப்பு. இதற்கு முன்னைத் தற்
குறிப்பு அங்கம், ஏந்தியோன் சொல்லுதலை மழுவின்மேலேற்றினர். ()

சொற்றெ ரிந்த சுடர்மணி கங்கண
முற்றி லங்க வொருகருங் கேழலின்
பற்றி ருந்த மதாணியிற் பட்டெனப்
புற்ற ருங்கலை யுற்றனை பொற்புற.

(இ - ள்.) சொற்றெரிந்த - வியாகரணநூல்களைத்தெரிந்த —சுடர்ம
ணி - விளங்காநின்றமணியையுடைய —கங்கணம் - (சேஷன்வடிவமாகி

ய) கிங்கணமானது —உற்று - (கையினிடத்துப்) பொருந்தி —இலங்க - விளங்காநிற்கவும் —ஒருகருங்கேழலின் - ஒருகரியபன்றியினது —பல் - கோடானது —மதாணியின் - பதக்கம்போல் —திருந்த - (மார்பினிடத்துச்) சீர்பெறுநிற்கவும் —புல் - புலியினுலே —தரும் - தரப்பட்ட —கலை - உடையானது—அரை - அரையை—உற்று - அடைந்து —பட்டென - பட்டாடைபோல்—பொற்புற - அழகுசெய்யாநிற்கவும். எ-று. சொல் - ஆகுபெயர். சொற்றெரிந்தவென்றவிசேஷணத்தால் சேஷகங்கணமென்பது குறிப்பிக்கப்பட்டது. ஒருகருங்கேழல் ; இரணியாக்ஷனைக்கொன்ற வராகம். புலி, தாருகவனத்து முனிவரால் விடப்பட்டது. அதனுரி உடையாதலிற்கலையென்றார். [பின்னையவிரண்டும் ஒப்பணிகள்.] (கச)

புரத்தை வென்ற நகைக்குமென் போதினேன்
சிரத்தை வென்றசெங் கைக்குஞ் சிலைமத
னெரித்த கண்ணிற்கு மின்றெனக் கூற்றுடேஉத
தரித்த வீரக் கழலொடு தாளுற.

(இ - ள்.) புரத்தை - முப்புரங்களை —வென்ற - (தீக்கொளுவி)வென்ற—நகைக்கும் - சிரிப்புக்கும் —மென்போதினேன் - மெல்லிய தாமரைமலரிலிருக்கின்றபிரமனது —சிரத்தை - தலையை —வென்ற - (கிள்ளி) வென்ற —செங்கைக்கும் —சிலைமதன் - கருப்புவில்லையுடைய மன்மதனை —எரித்த - எரித்து (வென்ற)—கண்ணிற்கும்—இன்றென - (இப்படிஒருவிருது) இல்லையென்னும்படிக்கு, கூற்று - யமனை—அடேஉ - கொன்று —தரித்த - தரிக்கப்பட்ட —வீரக்கழலொடு —தாள் - திருவடி —உற - பொருந்தாநிற்கவும். எ - று. மதனையென்னு மிரண்டனுருபுவிகாரத்தாற்றொக்கது. (கரு)

கடவுளிடத்துஉமையிருந்தமை.

இருந்த வாகி யிடத்தி லிருந்தனள்
பரந்த வானும் படியு முயிர்களு
மொருங்கு தோன்ற வுதவிக் கருவுறீஇ
வருந்தி லாத மணிவயிற் றன்னையே.

(இ - ள்.) இருந்த - வீற்றிருந்த —ஆதியிடத்தில் - கடவுளிடப்புறத்தே—பரந்தவானும் - அகன்றவிண்ணுலகமும்—படியும் - மண்ணுலகமும்—உயிர்களும் - (இவற்றிலுள்ள)வுயிர்களும்—ஒருங்குதோன்ற - ஒரு

சேரத்தோன்ற—உதவி - என்றும்—கருவுநீஇ - சூலுற்று—வருந்தி லாத—மணிவயிற்று - அழகியவயிற்றையுடைய—அன்னை - தாயாகிய உமையாள்—இருந்தனள். எ - று. ஏ - ஈற்றசை. உயர்வு சிறப்பும்மை வருவிக்கப்பட்டது. [சூலுற்றுவருந்தலாகிய பிரசித்தகாரணமில்லாதிருந்தும், உலகுயிரனைத்தும் ஒருங்குதோன்ற உதவலாகிய காரியம் பிறத்தலைச் சொல்லுதலால் பிறிதாராய்ச்சியணி. "பிறிதாராய்ச் சியைப்பேசி னுலகறி காரண மிலாதுறக் காரியம் பிறத்தலும்." என்பது இலக்கணமாதலின். இதற்கு இச்சா மாத்திரமாகிய வேறுகாரண முண்மை அறிக.]()

இதுமுதல் ஒன்பதுபாட்டுகளில் உமாதேவிசிறப்பு.

இறைவ னங்க ணெனுமுச் சுடர்களு
முறவு கொண்ட விருளெனு மோதிமே
லறவ னென்றவவ் வண்ணல் புனைந்தரு
ணறவு மிழ்ந்த நறுமலர் தாழ்ந்திட.

(இ - ள்.) இறைவன் - கடவுளது—அங்கணெனும் - அழகியகண்களெனப்படுகின்ற—முச்சுடர்களும் - சந்திரனும், சூரியனும், அக்கினியும், ஆகிய மூன்றொளிகளும்—உறவுகொண்ட - நட்புக்கொள்ளப் பெற்ற—இருளெனும் - இருளெனப்படுகின்ற—ஓதிமேல் - கூந்தலின் மேல்—அறவனென்ற - தருமவடிவினனெனப்பட்ட—அவ்வண்ணல் - அத்தலைவனாலே—புனைந்தருள் - அலங்கரித்தருளப்பட்ட—நறவுமிழ்ந்த - தேனைச்சொரிகின்ற—நறுமலர் - வாசனைபொருந்தியமலர்மாலையானது—தாழ்ந்திட - தொங்காநிற்கவும். எ - று. கூந்தலிலே இருண்மையையேற்றலாலும், அதற்குமுச்சுடருறவை அதிகமாகச்சேர்த்தலாலும் மிசையொற்றுமை யுருவகவணி. கடவுளதுபார்வை ஒழிவின்றி அக்கூந்தலின்மேலே வைக்கப்பட்டுள தென்பதுகருத்து. தருமவடிவினனென்றது; அறவாழியந்தணனென்றதனாலும் அறிக. நறுமலர்முல்லை மல்லிகைமுதலியன. அது மாலையை உணர்த்தலின் ஆகுபெயர். அண்ணல்புனைந்தருளெனவே, கடவுளுக்குத்தேவிமேலுள்ள ஆர்வமிகுதிகாட்டப்பட்டதாயிற்று. இதுமுதல் ஒன்பதுபாட்டுகளி லுள்ள தாழ்ந்திட முதலியவெச்சங்கள் அடுக்கிப்பத்தாம்பாட்டில் இருந்தவென் பெயரொச்ச வினைகொண்டு முடிதலால் குளகம். (கஎ)

ஏற்று வார்கொடி யெந்தை சடைப்பிறை
யாற்றுள் வீழ்வுற் றிறப்பதற் கெணுற

தோற்ற மேவு சுடர்த்திரு நெற்றியின்
ஞாற்று மோர்மணிச் சுட்டி நலந்தர.

(இ - ள்.) ஏற்றுவார்கொடி - நெடிய இடபக்கொடியையுடைய —எந்தை - கடவுளது —சடைப்பிறை - வேணியிலுள்ளபிறையானது —ஆற்றுள்-(அவ்விடத்திருக்கின்ற) கங்காநதியுள் —வீழ்வுற்று - விழுந்து —இறப்பதற்கு —எண்ணுற - நினையாநிற்க —தோற்றமேவு - வடிவம்பொருந்திய —சுடர் - ஒளியையுடைய —திருநெற்றியில் —ஞாற்றும் - தொங்கவிடப்பட்ட —ஓர்மணிச்சுட்டி - ஒருரத்நச்சுட்டியானது —நலந்தர - அழகுசெய்யாநிற்கவும். எ - று. [அப்பிறைக்கு அவ்வெண்ணுதலின் சம்பந்தமில்லாதிருக்க அதனைச் சொல்லுதலால் தொடர்புயர்வு நவிற்சியணி.] (௧௮)

ஈச ஞர்முக மென்னு முளரியி
லாசை கூரு மளிவிழிக் காரருள்
வாச மாமலர் வாய்க்கிள வெண்ணகை
தேசு லாமணி யாகச் சிறந்துற.

(இ - ள்.) ஈசஞர்முகமென்னுமுளரியில் - கடவுளது முகமெனப்படுகின்றதாமரைமலரிடத்து —ஆசைகூரும் - ஆசைமிகுகின்ற —அளிவிழிக்கு - வண்டுகளாகிய கண்களுக்கு —ஆரருள் - நிறைவுற்ற அருளும்— வாசமாம் - வாசனையுடைத்தாயிருக்கின்ற —மலர்வாய்க்கு - செவ்வல்லி மலர்போலுள்ள வாய்க்கு —இளவெண்ணகை - சிறியவெள்ளிய சிரிப்பும் —தேசுலாம் - ஒளிதவழ்கின்ற —அணியாக - ஆபரணங்களாக —சிறந்துற - சிறந்துதோன்றாநிற்கவும். எ - று. [முகத்திலே முளரியையும், விழியிலே அளியையும் ஆரோபித்தலால் உருவகவணி.] தேவியார் கை கடவுண்முகத்திலே இடைவிடாது செல்கின்றதென்பது கருத்து. மற்றையவயவங்களுக்குப்போல் கண்களுக்கும், வாய்க்கும், அணியில்லாமையின் முறையே அருளும் புன்னகையும் அணியாக உருவகஞ்செயப்பட்டன. (௧௯)

மாணைப் பூணபுனை மற்றை யுறுப்பெனப்
பூணுட் பட்டிடா தோலையின் பூணென
யாணர்ச் செம்பொ னிலங்கொளி யோலைமேற்
காணக் காதெனும் வள்ளை கவின்செய.

(இ - ள்) யாணர் - அழகிய—செம்பொன் - செம்பொன்னாலாகிய—இலங்கொளி - விளங்குகின்றகதிரையுடைய —ஓலைமேல் - கர்ணபத்திரங்

களின் மேலே—காண - காணப்படுகின்ற—அக்காதெனும்வள்ளை - அந்தக் காதுகளெனப்படுகின்ற பெயரையுடைய வள்ளைகளானவை—மாண - மாட்சிமைப்பட—பூண் - ஆபரணங்களால்—புனை - அலங்கரிக்கப்பட்ட—மற்றையுறுப்பென - கைகால் முதலிய அவயவங்கள்போல—பூண் - ஆபரணத்துக்கு—உட்பட்டிடாது - உட்படாமையினாலே—ஓலையின் - அக்கர்ணபத்திரங்களது—பூணென - ஆபரணங்கள்போல—கவின்செய - அழகுசெய்யாநிற்கவும். எ - று. பூணெனக்காலெனமுடிக்க அக்காதெனச்சுட்டு சிறப்புப்பொருளில்வந்தது. காதுகளை அப்பூண்களாகக் குறித்தலால் தற்குறிப்பணி. மற்றையுறுப்புகளுக்கு அவற்றினணிகள்போல் இக்காதுகள் தம்மோலைகளுக்கு அழகுசெய்கின்றனவென்பதாம். காதெனும்வள்ளை யென்றமையின்; இவைகாதுகளல்லவள்ளைகளே யெனப் பொருள்படுதலின், அபன்றுதியணியும். (௨௦)

ஓங்கு வாவுடை யும்ப னயனரி
தாங்கு மாவி தணந்தொழி நாளினும்
வாங்குறு மெழிலின மங்கல நாணொளி
தேங்கு பூணர செனச் சிறந்திட.

(இ - ள்.) ஓங்கு - உன்னதமாகிய—உவாவுடை - யானையையுடைய—உம்பன் - தேவனாகிய இந்திரனும்—அயன் - பிரமனும்—அரி - நாரணனும்—தாங்கும் - தம்மாலே தாங்கப்படுகின்ற—ஆவி - உயிர்களானவை—தணந்து - உடல்களினின்றும் பிரிய—ஒழிநாளினும் - அழியவருங் காலத்தும்—வாங்குறு - களையப்படாத—எழில் - வலியையுடைய—மங்கலநாண் - மங்களசூத்திரமானது—ஒளிதேங்கு - ஒளியால்நிறைந்த—பூண் - ஆபரணங்களுக்கு—அரசென்ன - அரசுபோல—சிறந்திட - சிறந்துவிளங்கவும். எ - று. தணந்து, தணப்பவென்பொருளில்வந்தது. இம்மூவருயிரிழப்புக்கூறவே தண்டாபூபிக நியாயத்தால் ஒழிந்ததேவர்முதலியோரழிவுங்கூறப்பட்டதாயிற்று. அக்காலத்தைச் சர்வசங்காரகாலமென்பர். அச்சங்காரத்தொழில் செய்பவனாதலின் கடவுளுக்கும், அவன்சத்தியாதலின் தேவிக்கும், நித்தியத்துவமுண்மை அறிக. அம்மங்கலநாணைத் தலைமைபற்றிப் பூணரசாகக்குறித்தலால் தற்குறிப்பு. (௨௧)

அரவு லாவுசடை யண்ணலைப் பிணிப்ப தான்
பரவு மூனறிறி பாடவின் பாறும

பொருவில் கொங்கைப் புகழெனப் பொங்கொளி
மருவு மார மணிவடந் தாழ்ந்திட.

(இ - ள்.) அரவுலாம் - பாம்புகளுலாவுகின்ற—சடை - சடிலத்தையு டைய—அண்ணலே - கடவுளை—பிள்ளை - (திருஞானசம்பந்தரென்னும்) பிள்ளை—பருவமூன்றினில் - மூன்றுவயதிலே,—பாட - (தமிழ்வேதம்)பா டும்படிக்கு—இன்பால் - மதுரமாகியஞானப்பாலை—தரும் - கொடுத்தரு ளிய—பொருவில்கொங்கை - ஒப்பில்லாத முலைகளினது—புகழென - கீ ர்த்திபோல—பொங்கொளிமருவும் - மிக்கவொளிபொருந்திய—ஆரமணி வடம் - முத்துமணிகளின்வடமானது—தாழ்ந்திட - (அவற்றின் மீது) தொ ங்காநிற்கவும். எ - று. தான் - அசை. ஆரமணி, இருபெயரொட்டு. சீ காழியிலே அப்பிள்ளை உமையவளாலே தரப்பட்டபாலுண்டவளவிலே, தோடுடையசெவியனெனப் பாடத்தொடங்கலால் இவ்வாறுகூறினார். இது அபூர்வமாதலின் புகழுக்கு ஏதுவாயிற்று. கொங்கைகளின் மே லுள்ள முத்துவடத்தை வெண்மைமுதலிய குணம்பற்றி, அவற்றை அதா ரங்களாகவுடைய புகழாகக் குறித்தலால் தற்குறிப்பணி. (௨௨)

பறந்தி டாமணி வண்டு படுமலர்
சிறந்த நீல மலரொடு சீர்பெற
மறந்தி டாது மறைமுடி யின்பொரு
ளறைந்து பைங்கிளி முன்கை யமர்ந்திட.

(இ - ள்.) பறந்திடா - பறவாத—மணிவண்டு - ரத்நவளையல்களாகிய கரியவண்டுகள்—படு - ஒலிக்கின்ற—மலர் - தாமரைமலர்—சிறந்த—நீல மலரொடு - நீலோற்பலமலரோடுகூடி— சீர்பெற - அழகுபெறாநிற்கவு ம்—பைங்கிளி - பச்சைக்கிளியானது—மறைமுடியின்பொருள் - வேதா ந்தப்பொருளை—மறந்திடாது, - மறவாமல்—அறைந்து - சொல்லிக்கொ ண்டு—முன்கை - முன்னங்கையில்—அமர்ந்திட - தங்காநிற்கவும். எ - று. மலர் ; தலைமைபற்றித் தாமரைமலருக்கு ஆக்கப்பட்டது. அம்மலருக்கும் உமையவள்கைக்கும் பேதமுளதாக அபேதத்தை அத்தியவசயித்தலால், ஒற்றுமை யுயர்வுநவிற்சியணி. இதற்கு மணிவண்டென்னுஞ் சிலேஷ்டரூ பகம் அங்கம். வேதாந்தப்பொருள் மகாவாக்கியார்த்தம். (௨௩)

தோடு டைப்பரன் றேன்மனை யாட்டிதன்
பாலடுத்திடல் வாரெனும் பட்டமா

மேனு டுக்கது விளங்கவொண மேகலை
நூலி டைக்குறு நோய்புரி யாதுற.

(இ - ள்.) தோலுடைப்பரன் - தோலாகிய உடையையுடைய கடவுளது—தொன்மனையூட்டிதன்பால் - பழமையாகியமனைவியிடத்து—அடுத்தது - (இது) வந்தது—எவ்வாறெனும் - எந்தவழியாலென்று வியக்கத்தக்க—பட்டு - பட்டாடையானது—அரைமேல்—உடுத்து - உடுக்கப்பட்டு—விளங்க - விளங்காநிற்கவும்—ஒண்மேகலை - ஒள்ளிய மேகலாபரணமானது—நூலிடைக்கு - நூல்போற்சிறிய இடைக்கு—உறு - (கூந்தல் முலைகளின் பாரத்தினாலே) வருகின்ற—நோய் - நோயை—புரியாதுற - செய்யாதுநிற்கவும். எ - று. உடுத்தென்றது; செயப்பாட்டுவினைப்பொருளில் வந்தது. அடுத்ததெவ்வாறெனும் பட்டெனவே, விலைமதிக்கப்படாச்சிறப்பிற்றென்றதாயிற்று. தகுதியில்லாத தோலுடைப்பரன் மனைவிக்கும் அப்பட்டாடைக்கும் சேர்க்கைசொல்லலால் தகாமையணி. "தகாமைமுரணுருக் காரியத்தோற்றமுந் தகாதவைகூடலும்." என்பது இலக்கணமாதலின். உறுதிசெய்தலால் நோய்புரியாதுறவென்றார். (உ௪)

புத்த னிச்சம படினும் பொறாமையை
யெய்ந்து மற்றை யிருமணந் தம்மியி
லத்தன் வைத்த வடிக்கம லங்களின்
முத்த ரிச்செஞ் சிலம்பு முழங்குற.

(இ - ள்.) புத்தனிச்சம்படினும் - புதிய அனிச்சமலர் படினும்—பொறாமையை - பொறுக்கமாட்டாமையை— எய்ந்தும் - அறிந்திருந்தும்—அற்றையிருமணத்து - அந்நாளிலே நிகழ்ந்தபெரிய விவாககாலத்திலே—அம்மியில் - அம்மிக்கல்லின்மீது—அத்தன் - கடவுளால்—வைத்த - வைக்கப்பட்ட—அடிக்கமலங்களில் - பாதாரவிந்தங்களிலே—முத்து - முத்துகளை—அரி - மணிக்கற்களாகவுடைய—செஞ்சிலம்பு - செம்பொற்சிலம்புகள்—முழங்குற - ஒலிசெய்யாநிற்கவும். எ - று. அனிச்சம் - ஆகுபெயர். அம்மலர்மோப்பக்குழைவதாயினும், அவ்வடிக்கு நெருஞ்சிப்பழம் போலுதலால் பொறாமைசொல்லப்பட்டது. அம்மியில்வைத்தல்; கையினாலேதீண்டி அதன்மென்மையை அறிந்தபின்னிகழ்ந்ததாதலின் எய்ந்துமென்றார். அடியின்மென்மை யுணர்ச்சியாகிய தடையுளதாகவும் அதனை அம்மியில்வைத்தலாகிய காரியம்பிறத்தலைச் சொல்லுதலால், பிறிதா

ராய்ச்சியணி. விவாககறபவிதி அங்ஙனஞ்செய்தற்கு ஏதுவாயிற்று. சேரத்தசாத அடிக்கும் அம்மிக்கல்லுக்குஞ் சேர்க்கை சொல்லப்படுதலால் தகாமையணியுந் தோன்றுகிறது. (௨௫)

இதுமுதல் - ௨௨ - பாட்டுகளில் - மகாசபை கூடுதற்சிறப்பு.

இருந்த வாரரு ளெம்பெரு மாட்டிபாற்
குரும்பை நாணுமென் கொங்கைப் பொறையினால்
வருந்து நூற்பக வன்ன மருங்குலா
ரரம்பை மாத ரளப்பில ரெய்தினார்.

(இ - ள்.) இருந்த - (இப்படிப்பட்டசிறப்புடன்)னிருந்த—ஆரருள் - நிறைந்த அருளையுடைய—எம்பெருமாட்டிபால் - உமாதேவியினிடத்து—குரும்பை - தென்னங்குரும்பைகள்— நாணுமென் - (இவற்றைக்காணின்) நாணுமெனப்படுகின்ற— கொங்கைப்பொறையினால் - முலைகளின் பாரத்தினாலே—வருந்தும் - வருந்துகின்ற—நூற்பகவன்ன - நூற்பிளவுபோற்சிறிய—மருங்குலார் - இடையையுடையவராகிய—அரம்பைமாதர் - தெய்வமகளிர்—அளப்பிலர் - எண்ணிசகையில்லாதவர்களாய்—எய்தினார் - அடைந்தார்கள். எ - று. (௨௬)

வேறு.

முல்லை யங்தொடை யருந்ததி முதலெழு முனிவ
ரில்லறம்புரி துணைவிய ராமெழு வருமபோய
வல்ல ருமபெனக் குவிமுலைப் பனிமலை மகளைச்
சொல்ல ருந்துதி செய்துவாழ்த் தெடுத்தனர் தொழுது.

(இ - ள்.) எழுமுனிவர் - வசிட்டரை முதலாகவுடைய ஏழுமுனிவர்களும்—இல்லறம்புரி - மனையறத்தைச்செய்தற்கு—துணைவியராம் - துணையாதலை யுடையவராகிய—முல்லையந்தொடை - முல்லைப்பூமாலையையுடைய—அருந்ததிமுதல் எழுவரும்போய்—வல்லரும்பென-சூதாடுகருவியோ தாமரையரும்போ வென—குவி - குவிந்த—முலை - முலைகளையுடைய—பனிமலைமகளை - பார்வதியை—தொழுது - இறைஞ்சி—சொல்லருந்துதி - சொல்லுதற்கரிய தோத்திரங்களைச்செய்து—வாழ்த்தெடுத்தனர் - மங்கல வாழ்த்துப்பாடினார்கள். எ - று. முல்லைமாலை கற்புடையார்க்கு உரித்தாதலின், அருந்ததிமுதலியோர்க்குச் சொல்லப்பட்டது. வல்லரும்பென்ற விடத்தே ஐயவோகாரங்கள் தொக்குநின்றன. (௨௭)

அன்ன மொன்றறி யாமுடிக் கங்கையை யறிந்து
துன்ன வந்தல மருமெகி னங்களின் றொகுதி
யென்ன வம்புயத் தொருசத கோடியிந் திரைகண்
முன்ன டைந்துவெண் கவரிக ளிரட்டினர் முறையால்.

(இ - ள்.) அம்புயத்து - தாமரைமலர்களிலிருக்கின்ற—ஒருசதகோடி - நூறுகோடியென்னுந் தொகையையுடைய—இந்திரைகள் - திருமகளிர்—அன்னமொன்று - ஓரன்னப்பறவையால்—அறியா - தேடிக்காணப்படாத—முடி - (கடவுளது) முடியிலுள்ள—கங்கையைஅறிந்து—துன்ன - (அதனை) நெருங்கும்படி வந்து—அலமரும் - சுழல்கின்ற—எகினங்களின் றொகுதியென்ன - அன்னப்பறவைகளின் கூட்டம்போல—முன்னடைந்து—வெண்கவரிகள் - வெண்சாமரங்களை—முறையால் - முறைமையோடு கூடி—இரட்டினர் - இருபுறத்தும் வீசினார்கள். எ - று. அன்னமொன்றென்றது; நாரணனோடுகூறுற்று அன்னவடிவங்கொண்டு சென்று அம்முடியைக்காணாதுமீண்ட பிரமனை. வெண்மை சுழலல் முதலிய நிமித்தங்களால் இரட்டப்பட்ட சாமரங்களை அவ்வன்னக் கூட்டமாகக் குறித்தலால், தற்குறிப்பணி. சதகோடியென்னுந் தொகைச்சொல் மிக்க பன்மையைக்காட்ட வந்தது. பின் வருந்தொகைச்சொற்களும் இப்படியே அண்டந்தோறுமிருந்துவருதலால் பலராதல்அறிக. (உஅ)

அரவு கௌவிய கதிரெனப் பட்டசாந் தாற்றி
பரவை யல்குல்வெண் முத்தவா ணகைக்கொலை பயில்விற்
புருவ மென்மலர்க் குழற்சசி கோடிகள் புகன்று
மருவி யம்பிகை மருங்குநின் றசைத்தனர் மன்னோ.

(இ - ள்.) பரவையல்குல் - பரப்பாகியஅல்குலையும்—வெண்முத்தவாணகை - வெள்ளியமுத்தம்போல் ஒளிபொருந்தியபற்களையும்—கொலைபயில்விற்புருவம் - கொலைத்தொழிலிற் பழகிய வில்லுப்போலுள்ள புருவங்களையும்—மென்மலர்க்குழல் - மெல்லியமலர்களால் அலங்கரிக்கப்பட்ட கூந்தலையும் உடைய—சசிகோடிகள் - கோடியிந்திராணிகள்—புகன்று - சென்று—மருவி - பொருந்தி—அம்பிகைமருங்குநின்று - உமாதேவிபக்கத்தினின்று—அரவுகௌவிய - பாம்பினாலே கௌவப்பட்ட—கதிரெனப்பட்ட - சுடரென்று (கண்டோரால்) சொல்லப்பட்ட—சாந்தாற்றி - சிற்றாலவட்டங்களை—அசைத்தனர். எ - று. மன் - ஓ அசைகள். பதுமராகத்தாற்செய்யப்பட்டவற்றிற்குச்சூரியனையும், முத்துக்களாற்செ

யப்பட்டவற்றிறகுச்சந்திரனையும், கொள்ளவேண்டுதலாலே கதிரென ப்பொதுப்படக்கூறினர். கண்டோர் அச்சிற்றுலவட்டங்களை அக்கதி ர்களென்றுமயங்கலால், மயக்கவணி. "மயக்கங்கவினுர்சம் மதவொப்பு மையினுன் மறைபுலத்திடைப் புலங்கொளிநுகர்வாகும்." (௨௯)

எடுத்து வீணைக ளுளர்நரம பிதுமிட றிதுவென்
றடுத்த கேள்வராம பிரமரு மறிவரி தாகப்
படத்த பாம்பணி பரன்புடை மாதுசீர் பாட்டிற்
றொடுத்து வாலிய கலைமடந் தையர்பலர் துதித்தார்.

(இ-ள்.) பலர் - பலராகிய—வாலியகலைமடந்தையர் - வெண்ணிறமுடைய சரஸ்வதிகள்—வீணைகளெடுத்து—உளர்நரம்பிது - தெறிக்கப்பட்ட தந்தியினெலியிது—மிடறிது - கண்டத்தினெலி இது—என்று—அடுத்த -(அவரோடு) நெடுங்காலமாகப்பழகிய—கேள்வராம் - கணவர்களாகிய—பிரமரும் - நான்முகர்களும்—அறிவரிதாக - அறிதல் கூடாததாக—படத்தபாம்பணி - படத்தையுடைய பாம்புகளை அணிந்த—பரன்புடை - கடவுளருகிலிருக்கின்ற—மாதுசீர் - உமாதேவியினதுபுகழை—பாட்டில்—தொடுத்து - பிரயோகித்து—துதித்தார். எ - று. நரம்பு - மிடறு - ஆகுபெயர்கள். ஒப்புமையினலே கண்டத்தொலி நரம்பொலிகளுக்கு விசேஷந் தோன்றுமையால் பொதுமையணி. "பொதுமையொப்புமையாற் சிறப்பொளிப்பதாம்." என்பது இலக்கணமாதலின். (௩0)

செப்ப மைந்ததண் ணுமையிசை தாளமென் சிறுதாட்
டுப்ப மைந்தவொண் சதிதழீஇச் சுவைய பல்காய
முப்ப மைந்தவின் கறியென நடித்தன ருழையோ
டொப்ப மைந்தகண் ணுருத்திர கணிகைய ருவந்து.

(இ-ள்.) உழையோடு - மான்கண்களோடு—ஒப்பு - ஒப்புமை—அமைந்த - நிறைந்த—கண் - கண்களையுடைய—உருத்திரகணிகையர்—உவந்து - மகிழ்ந்து—சுவைய - வேறுவேறு ருசியினவாகிய—பல்காயம் - பலவகைப்பட்ட காயங்களும்—உப்பு - உப்பும்—அமைந்த - அளவொத்த—இன்கறியென-இனியகறி அவற்றைப்போல்—செப்பமைந்த - சொல்லமைந்த—தண்ணுமை - மத்தளவொலியையும்—இசை - இராகவொலியையும்—தாளம் - தாளவொலியையும்—மென்சிறுதாள் - மெல்லிய சிறிய அடிகளது—துப்பமைந்த - நன்மைபொருந்திய—ஒண்சதி - அழகி

யமிதிப்பையும்—தழீஇ - தழுவி—நடித்தனர் - ஆடினர். எ-று. தண்ணுமை, தாளம், உழை, ஆகுபெயர்கள். பலவகைப்பட்டகாயங்கள்; மிளகுமுதலியன. எப்படி இன்கறி அளவொத்தபலகாயங்களையும் உப்பையுந் தழுவியதோ அப்படி உருத்திரகணிகையர் தண்ணுமையொலி முதலியவற்றைத்தழுவி நடித்தனரென்க. ஒப்பணி. (௩௧)

எந்தை பாலுமை முக்குணங் களுமுரு வெடுத்து
வந்த மாதர்களருகுநின றனர்பணி மகிழூஉ
வந்த மாதருட் டமோகுண மாதுமை யருளாற்
சந்த மாயையென் பெயர்கொடு தருக்கிநின் றனளே.

(இ-ள்.) எந்தைபாலுமை - கடவுளிடத்திருக்கின்ற உமாதேவியினது—முக்குணங்களும் - சத்துவகுணம் ரஜோகுணம் தமோகுணம் எனப்படுகின்ற முக்குணங்களும்—உருவெடுத்துவந்த - வடிவங்கொண்டுவந்த—மாதர்கள்—பணிமகிழூஉ (அவளுக்குக்) குற்றேவல்செய்தலிலே மகிழ்ந்து—அருகுநின்றனர்—அந்தமாதருள்—தமோகுணமாது—உமையருளால்—சந்தம் - அழகையும்—மாயையென்பெயர் - மாயையெனப்படுகின்றபெயரையும்—கொடு - கொண்டு—தருக்கிநின்றனள் - செருக்குற்றுநின்றாள். எ-று. ஏ-அசை. (௩௨)

தெள்ளு வார்திரைக் கங்கையுங் கங்கையுஞ் சிறிய
பிள்ளை யாகிய மதியமு மதியமும் பெரிது
துள்ளு மோரிள நௌவியு நௌவியுந் தொடர்பு
கொள்ளு மாறவ ணெருங்கின வுருத்திர குழாங்கள்.

(இ-ள்.) உருத்திரகுழாங்கள் - உருத்திரருடைய கூட்டங்கள்—தெள்ளுவார்திரை - தெளிவாகியநெடிய அலைகளையுடைய—கங்கையுங் கங்கையும்—சிறியபிள்ளையாகிய—மதியமுமதியமும் - சந்திரனுஞ் சந்திரனும்—பெரிதுதுள்ளும் - மிகவுந்துள்ளுகின்ற—இள - இளமைபொருந்திய—நௌவியு நௌவியும் - மானுமானும்—தொடர்புகொள்ளுமாறு - உறவுகொள்ளும்படியாக—அவண் - அச்சபையிடத்து—நெருங்கின. எ-று. ஓர் - அசை. உருத்திரகுழாமென்றது, குமரகோட்டமென்பதுபோல் முடிந்தது. (௩௩)

சங்க மொன்றுட னொன்றுதாக் குறவொளி தழைக்குந
துங்க நேமிபு ன்னவா யுறவலை சுருட்டும

பொங்கு வேலைவந் தெனவரிக் கணங்களற் புதத்த
வெங்க ணுயகன் பேரவை யிடத்துவந் திறுத்த.

(இ - ள்.) அரிக்கணங்கள் - நாரணருடையகூட்டங்கள்—சங்கமொன்றுடனென்று—தாக்குற - தாக்காநிற்கவும்—ஒளிதழைக்கும் - ஒளிபெருகுகின்ற—துங்கம் - உயர்ச்சிபொருந்திய—நேமியும் - சக்கரங்களும்—அனனவாயுற - அப்படியேதாக்குகின்றவையாயுறுநிற்கவும்—அலைசுருட்டும் - அலைகளைச்சுருட்டுகின்ற—பொங்குவேலைவந்தென - பொங்கியகருங்கடலானது வந்தாற்போல—அற்புதத்த - ஆச்சரியகரங்களாகி—எங்கணுயகன் - எமதுகடவுளது—பேரவையிடத்து - மகாசபையிடத்து—வந்து—இறுத்த - சேர்ந்தன. எ - று. (௫௪)

முகங்க ணான்கிலு நான்மறை விதிமுறை முழங்க
வுகந்து கையிரு நான்குநான் குச்சியிற் குவியச்
சகந்த ருஞ்செயற் பிரமர்க ளளப்பிலர் தையல்
பகுந்த மேனிய னவையிடைப் புகுந்தனர் பரவி.

(இ - ள்.) அளப்பிலர் - எண்ணிலராகிய—சகந்தருஞ்செயல் - உலகத்தைப்படைக்குந்தொழிலையுடைய—பிரமர்கள்—முகங்கணான்கிலும் - நாலுமுகங்களிலும்—நான்மறை - நாலுவேதங்களும்—விதிமுறை - விதியொழுங்கின்படி—முழங்க - ஒலியாநிற்கவும்—நான்குச்சியில் - நாலுதலைகளிலும்—உகந்து - உயர்ந்து—கையிருநான்கும் - எட்டுக்கைகளும்—குவிய - கூம்பாநிற்கவும்—தையல்பகுந்தமேனியன் - உமையினுலே பங்கிட்டுக்கொளப்பட்ட மேனியுடையகடவுளது—அவையிடை - சபையில்—பரவி—புகுந்தனர். எ - று. (௫௫)

அயனு மாயனு மெனினுயர்ந் தவரென்ப தன்றிக்
கயிலை நாயக னமர்திரு வோலக்கங் காண்பா
னயன மாயிர மிலாமையி னதிகனு னென்று
வயிர வான்படை யிந்திர ரெண்ணிலர் வந்தார்.

(இ - ள்.) எண்ணிலர் - எண்ணிலராகிய—வயிரவான்படை - வச்சிரமாகிய உயர்வுபொருந்தியஆயுதத்தையுடைய—இந்திரர்—அயனும் - பிரமனும்—மாயனும் - நாரணனும்—எனினுயர்ந்தவரென்பதன்றி - என்னைக்காட்டிலும் உயர்ந்தவரென்றுசொல்வது மாத்திரமன்றி—(உயர்ந்தவரல்லர்)—கயிலைநாயகன் - கடவுள்—அமர் - தங்கிய—திருவோலக்கம் -

அரசிருப்பை—காண்பான் - காணுதற்கு—நயனமாயிரம் - ஆயிரங்கண்களை—இலாமையின் - (என்போ) லுடையரல்லாமையால்—அதிகன் - (அவரைக்காட்டிலும்) உயர்ந்தவன்—நானென்று - நானென்றுதனித்தனி நினைத்துக்கொண்டு—வந்தார். எ - று. உயர்ந்தவரல்லரென்றது, சொல்லெச்சம். அதிகனென்றதை காண்பானயனமாயிரமிலாமையி னென்றவாக்கியப்பொருளினாலே சாதித்தலால் செய்யுட்குறியணி. ()

உரகர் சித்தர்கள் வித்தியா தரர்சுர ருயர்கிம்
புருடர் மெய்க்கதிர் முதலிய கோடிசை புரப்போர்
நிருதர் மற்றுளார் விழிபிதுங் கிடவுட னெருங்க
வரத னத்திரு வோலக்கங் காணிய வந்தார்.

(இ - ள்.) உரகர் - நாகர்—சித்தர்கள்—வித்தியாதரர்—சுரர் - தேவர்—உயர்கிம்புருடர் - உயர்வுபொருந்திய கிம்புருஷர்—மெய்க்கதிர்முதலியகோள் - வடிவத்தையுடைய சூரியன்முதலிய கிரகங்கள்—திசைபுரப்போர்-திக்குப்பாலகர்—நிருதர் - அரக்கர்—மற்றுளார் - மற்றுமுள்ளவர்களும்—விழிபிதுங்கிட—உடனெருங்க - உடம்புகள்சுருங்க—வரதன் - கடவுளது—அத்திருவோலக்கம் - அத்திருச்சபையை—காணிய - தெரிசித்தற்கு—வந்தார். எ - று. மற்றுளாரென்றதனால், இயக்கர்முதலியோரையுங்கொள்க. (கள)

அழிவு மாக்கமு முரையினாற் செயும்வலி யடைந்தார்
மொழியும் யாக்கையு மனமுநல் லறங்களின் முயன்று
கழியு மாறுமுக் காலமு முளர்தளை கழன்றார்
பழியி லாவதிட் டாதிமா முனிவரர் பரந்தார்.

(இ - ள்.) அழிவும் - கேடும்—ஆக்கமும் - பெருக்கமும்—உரையினால் - வாய்ச்சொல்லினாலே—செயும் - (பிறர்க்கு) உண்டாக்காநின்ற—வலியடைந்தார் - வலிமையை அடைந்தவரும்—மொழியும் - வாக்கும்—யாக்கையும் - காயமும்—மனமும்—நல்லறங்களில்—முயன்று - முயலுதலாலே—கழியுமாறு - ஒழியும்படி—முக்காலமும் - செலவுநிகழ்வெதிரென்கின்றமூன்றுகாலங்களும்—உளர் - உள்ளவரும்—தளைகழன்றார் - பாசபந்தநீங்கினவரும் ஆகிய—பழியிலா - நிந்தையில்லாத—வதிட்டாதிமாமுனிவரர் - வசிட்டனைமுதலாகவுடைய முனிவர்கள்—பரந்தார் - பரவினார்கள். எ - று. வாக்குமுதலியமூன்றும் நல்லறங்களின் முயலலாவது; கடவுளைத் துதித்தல் தியானித்தல் அருச்சித்தல் முதலியவை. (கஅ)

குழவி பால்குடிப் பதுகடல் குடிப்பது குழவி
பழகு மாறுணன் மண்ணெடுத் துண்பது படைப்பு
முழுது மோர்தளர் நடைமகச் செயலெனு முரண்கொள்
வழுவி லாவருட் கணங்களெண் ணிகந்தன வந்த.

(இ - ள்.) (இப்பூதங்களுடைய)—குழவி - குழந்தையினது—பால்குடிப்பது - முலைப்பால் குடித்தல்—கடல்குடிப்பது - கடலைக்குடித்தல்போல்வதாகும—குழவி - குழந்தையினது - பழகுமாறுணல் - கற்கும்படி சோறுண்ணுதல்—மண்ணெடுத்துண்பது - பூமியையெடுத்து விழுங்குதல்போல்வதாகும்—ஓர்தளர்நடைமக - ஒருதத்தடிநடையையுடைய பிள்ளையினது—செயல் - விளையாட்டுத்தொழில்—படைப்புமுழுதும்-படைப்பனைத்தும் போல்வதாகும்—எனும் - எனப்புகழப்படுகின்ற—முரண்கொள் - வல்லமையைக்கொண்ட—வழுவிலாவருள் - தவறுதலில்லாதகருணையையுடைய - கணங்கள்-பூதக்கூட்டங்கள்—எண்ணிகந்தன - எண்ணிக்கையில்லாதனவாகி—வந்த - வந்தன. எ - று. சிறியபூதங்களின் புகழ்ச்சியாலே பெரியபூதங்களின் புகழ்ச்சிதோன்றுதலால், வஞ்சப்புகழ்ச்சியணி. (௩௯)

செருக்கொ டுஞ்சிவ நிந்தைசெய் வாய்க்கிலை தீர்வு
விரிக்கி னென்றுமுன் சிறுவிதி தலையற வெட்டி
யெரிக்கு நல்கிந தனைசெயா மறிமுக மியைத்துத்
தருக்கி நின்றவவ் வீரன்வந் தொருபுடை சார்ந்தான்.

(இ - ள்.) செருக்கொடும் - செருக்கினால்—சிவநிந்தைசெய்வாய்க்கு - கடவுளை நிந்தித்தவாய்க்கு—விரிக்கின் - (வேதாகமங்களை) விரித்துப்பார்க்கில்—தீர்வு - பிராயச்சித்தம்—இலையென்று—முன்—சிறுவிதிதலை - (சிவநிந்தைசெய்த) தக்கனதுதலையை—அறவெட்டி—எரிக்குநல்கி - நெருப்புக்குக்கொடுத்து—நிந்தனைசெயாமறிமுகம் - நிந்தைசெய்யாத ஆட்டுமுகத்தை—இயைத்து - பொருத்தி—தருக்கிநின்ற - களித்துநின்ற—அவ்வீரன் - அந்தவீரபத்திரன்—வந்து—ஒருபுடை - ஒருபக்கத்தை—சார்ந்தான். எ - று. வேதத்திலே நாரணன் யாகவடிவின னென்றும், கடவுள் யாகத் தலைவனென்றுஞ் சொல்லப்பட்டிருக்க நாரணனை அதற்குத்தலைவனுக வைத்துக் கடவுளை நிந்தித்தலால், தக்கனுக்கு அந்தண்டனை செயலாயிற்றென்க. (௪0)

காதி யாயிர மால்களைப் பிழிந்துமாங் கனிபோற்
கோது வீசினுங் கடல்கவிழ்த் தனையசெங் குருதி
பாதி யாயினு நிரம்புறாக் கபாலபா ணியனாய்
மாது பாகிய னவையிடைப் புகுந்தனன் வடுகன்.

(இ - ள்.) ஆயிரமால்களை - சகசிரநாரணரை—காதி - கொன்று—மாங்கனிபோற்பிழிந்து —கோதுவீசினும் - கோதுகளையெறிந்தாலும்—கடல்கவிழ்த்தனைய - கடலைக்கவிழ்த்தால் அதுபோற்பெருகுவதாகிய—செங்குருதி - செய்ய உதிரத்தினாலே—பாதியாயினும் - பாதியளவாயினும்—நிரம்புறா - நிறைதலில்லாத—கபாலபாணியனாய் - பிரமகபாலத்தைக்கையிலேயுடையவனாகி—மாதுபாகியன்-கடவுளது—அவையிடை - சபையின்கண்ணே—வடுகன் - வைரவன்—புகுந்தனன். எ - று. கபாலத்துக்குச் சொல்லப்பட்டவிசேடணைப் பொருளால்அக்கபாலத்தின் பெருமைதொனிக்கின்றது. (சக)

வீர மாதருக் கில்லையென் றுரைப்பதென் விளங்க
வீர மாதென வறிகிலி ரோவென விளம்பி
வீர யோகினி வெள்ளமோ டமர்பொர விரும்பும
வீர காளியும் புகுந்தன ளவையிடை விரைந்து.

(இ - ள்.) அமர்பொர விரும்பும் - போர்செய்தற்கு விரும்புகின்ற—வீரகாளியும்—மாதருக்கு - பெண்டிர்களுக்கு—வீரமில்லையென்று—உரைப்பதென் - சொல்லுதற்குக்காரணம்யாது—வீரமாதென - வீரத்தன்மையுடைய மாதென்று —விளங்கவறிகிலிரோவென - நன்றாகவறிகிலீரோவென்று—விளம்பி - சொல்லிக்கொண்டு—வீரயோகினிவெள்ளமோடு - வீரத்துவம்பொருந்திய ஏவன்மகளிர்கூட்டத்தோடு கூடி—அவையிடை - சபையினிடத்து—விரைந்து—புகுந்தனள். எ - று. யாவராலும் வெல்லப்படாத தாருகன் முதலியோரை வெல்லலால் இவ்வாறுகூறி வந்தனளென்க. (சஉ)

ஊன்று ஞானமோ டுயர்வுயி ராகநல் லொழுக்க
மூன்று காலெனக் கொண்டரன் முகத்தினை முறுவ
லேன்று மாறுகின் றுடினன் சுடரவ னிருளைப்
போன்று மாயையைத் தொலைத்திடு பிருங்கியென் புனிதன்

(இ - ள்.) சுடரவன் - சூரியனானவன்—இருளைப்போன்று —மாயையை—தொலைத்திடு - நீக்குதல்செய்த—பிருங்கியென்புனிதன் -பிருங்கியெ

னப்படுகின்றமுனிவன்—ஊன்று - (நல்வழியிலே) ஊன்றப்பட்ட—ஞானமோடு—உயர்வயிராகம் - உயர்வாகிய வைராக்கியத்தையும்—நல்லொழுக்கம் - பரிசுத்தமான ஆசாரத்தையும்—மூன்றுகாலெனக்கொண்டு - தனது மூன்றுகால்கள்போலக்கொண்டு—அரன்முகத்து - கடவுளதுமுகத்திலே—இளமுறுவல் - புன்னகையானது—தோன்றுமாறு - உண்டாகும் வண்ணம்—நின்று—ஆடினன். எ - று. வீட்டுநெறிசெல்லுதற்கு ஞானமுதலியன சாதனங்களாதலின் காலெனக்கொண்டென்றார். ஒப்பணி. (௬௩)

படிகொண் மாமுடிக் கங்கணத் திறைபதம் படுமொண்
முடிகள் யாவையும் படுகழ னந்தியெம் முதல்வ
னடிக ளேந்துகை யுறவடித் தொதுக்கியவ் வவையைக்
கடிகொண் மாலையம் பிரம்பொடு திரிந்தனன் களித்து.

(இ - ள்.) படிகொள் - பூமியைக்கொண்ட—மாமுடி - பெரியதலையையுடைய—கங்கணத்து - சேஷகங்கணத்தையுடைய—இறை - கடவுளது—பதம்படு - திருவடிகளிலே படுகின்ற—ஒண்முடிகள்யாவையும் - ஒளிபொருந்திய கிரீடங்களெல்லாம்—படு - படப்பெறுகின்ற—கழல் - திருவடிகளையுடைய—நந்தியெம்முதல்வன் - நந்தியாகியஎம்முடையதலைவனானவன்—ஏந்து - தாங்குகின்ற—கை - கைகளிலே—அடிகள்—உற - பட—அடித்து—அவ்வவையை - அச்சபையிலுள்ளாரை—ஒதுக்கி -(இருமருங்கிலும்) விலக்கி—கடிகொள் - மணங்கொண்ட—மாலையம்பிரம்பொடு - பூமாலையையுடைய பிரப்பங்கோலொடு—களித்துத் திரிந்தனன். எ - று. (௬௪)

பெய்யு மாமழை முகிலெனப் பெரியவாய் முழவந்
துய்ய மாமதி யனையவெண் சுரிமுக சங்க
மைய வாணனும் பாநுகம் பப்பெய ரவனுங்
கையும் வாயுமொத் ததிர்த்தனர் செவிகரங் கவிழ்ப்ப.

(இ - ள்.) ஐயவாணனும் - அழகியவாணாசுரனும்—பாநுகம்பப்பெயரவனும் - பாநுகம்பனெனப்படுகின்ற பெயரையுடையவனும்—பெய்யுமாமழைமுகிலென - பெய்யப்படுகின்ற பெருமழையையுடையமேகம்போல—பெரியவாய் - பெருங்குரலையுடைய—முழவம் - முழவவாத்தியங்களையும்—துய்யமாமதியனைய - களங்கமில்லாதநிறைமதியேபோலுள்ள—வெள்-

வெள்ளிய—சுரிமுகசங்கம் - சுழிந்தமுகத்தையுடையசங்குகளையும்—செவிகரங்கவிழ்ப்ப - (யாவரும்) கைகளாலே காதுகளை மூடிக்கொள்ளாநிற்க—கையும் வாயுமொத்து - கைகளாலும் வாய்களாலுமொத்து—அதிர்த்தனர் - முழக்கினூர்கள். எ - று. வாய் ஆகுபெயர். வாணுசுரனுக்கு, ஆயிரங்கைகள். பானுகம்பனுக்கு ஆயிரம்வாய்கள். முன் வாணனும் பானுகம்பனும் சொல்லப்பட்டமுறையே பின்முழவமும் சங்கமும் அதன்பின் கையும் வாயும் சொல்லப்படுதலால், நிரனிறையணி. (சரு)

துதிப்ப ரோர்சிலர் பாடுவ ரோர்சிலர் துள்ளிக்
குதிப்ப ரோர்சிலர் கைகளாற் றேளிணை கொட்டி
யதிர்ப்ப ரோர்சிலர் நெக்குநெக் குருகிநெஞ் சகமெய்
விதிர்ப்ப ரோர்சில ராயின ரவையிடை மிடைந்தோர்.

(இ - ள்.) அவையிடைமிடைந்தோர் - சபையிடத்துநெருங்கியோர்களில்—சிலர் துதிப்பர் —சிலர் பாடுவர்—சிலர் துள்ளிக்குதிப்பர் —சிலர்கைகளாற்றேளிணைகொட்டி அதிர்ப்பர்—சிலர்நெஞ்சகநெக்குநெக்குருகி—மெய்விதிர்ப்பர்—ஆயினர். எ - று. (சகு)

படைக்க லங்களி னொளியிமை யவரொளி பரித்த
தொடைக்க லங்களி னொளியரம் பையர்பணைத் தோளி
னிடைக்க லங்களி னொளியெலா மிருளிறை மிடற்றி
னடைக்க லம்புக நிறைந்தன பரந்தபே ரவையில்.

(இ - ள்.) பரந்தபேரவையில் - விரிந்தபெரியசபையின்கண்ணே—படைக்கலங்களின் - (நானாவித) ஆயுதங்களினது—ஒளி - காந்தியும்—இமையவர் - தேவர்களது—ஒளி - சரீரகாந்தியும்—பரித்ததொடைக்கலங்களின் - தாங்கப்பட்ட பொன்னரிமாலைகளது—ஒளி - காந்தியும்—அரம்பையர் - தேவமகளிரது—பணைத்தோளினிடை - வேய்போலுந்தோள்களிடத்துள்ள—கலங்களின் - ஆபரணங்களினது—ஒளி -காந்தியும் ஆகிய—எலாம் - இவையெல்லாம்—இருள்—இறைமிடற்றில் - கடவுளதுகண்டத்தின் கண்ணே—அடைக்கலம்புக—நிறைந்தன. எ - று. அடைக்கலம்புகல் ; பகைவரை அஞ்சியோர் காக்கவல்லோரைஅடைந்து அவருடைமையாய்நிற்றல். கண்டத்தின்மாத்திரம் நஞ்சக்கறைகாணப்படுதலால், இவ்வாறுகூறினூர். (சஎ)

இதுமுதல் - ௧௧ - பாட்டுகளில் கடவுளுக்குந்தேவிக்கும்
வாக்குவாதம்.

இன்னண மவையிடை யிருந்த வெம்பிரான்
றன்னொடு வினவுமோர் தகைமை யுன்னுபு
கன்னலு மமுதமுங் கைப்ப வெம்முடை
யன்னை தன் வாய்திறந் தறைதன் மேயினாள்.

(இ - ள்.) இன்னணம் - இப்படிப்பட்டசிறப்புடன்—அவையிடையி ருந்த - சபைநடுவேயிருந்த —எம்பிரான்றன்னொடு - கடவுளை—வினவு மோர்தகைமை - வினவப்படுவதொருகாரியத்தை—உன்னுபு - நினைத் து—கன்னலும் - சர்க்கரையும்—அமுதமும் - அமிர்தமும்—கைப்ப - கை ப்பனவாக —எம்முடையன்னை - எமதுதாயானவள் —தன்வாய்திறந் து—அறைதன்மேயினாள் - சொல்லலுற்றாள். எ - று. சர்க்கரைக்கும் அமிர்தத்திற்கும் கைப்பின்சம்பந்தமில்லாதிருக்கஅதைச்சொல்லுதலால், தொடர்புயர்வுநவிற்சியணி. (௪௮)

தலைவநின் னவையிடைச் சார்ந்த விப்பெரு
நலனுடை யவரெலா நணுகி வெம்பவத்
தலைகில ராகியின் படைவ ரோவலா
னிலையில ரோவிது நிகழ்த்துவா யென்றாள்.

(இ - ள்.) தலைவ - முதல்வனே—நின்னவையிடைச்சார்ந்த - உனது சபையிடத்துவந்திருக்கின்ற —இப்பெருநலனுடையவரெலாம் - இப்பெ ரியசம்பத்தையுடையவர்யாவரும்—வெம்பவத்து - வெவ்வியபிறவியிடத் து—நணுகி - பொருந்தி—அலைகிலராகி—இன்படைவரோ - முத்தியைச் சேர்வாரோ—அலால்—நிலையிலரோ - பிறவியில்அலைவாரோ—இதுநிக ழ்த்துவாயென்றாள் - இதைச்சொல்லுவாயாகவென்றாள். எ - று. ஒகா ரமிரண்டும் ஐயவினாவில்வந்தன.

சத்தி சத்தனைநோக்கி ஐம்பத்துமூன்றுங்கவிவரையிலும் வினவிய சம்பாஷணையைப்பற்றிய தென்பதுகருத்து. (௫௧)

விளங்கிழை நன்றுநின் வினாவென் றெந்தைமண்
ணளந்தவ னயன்முத லாயி னோருமின்

புளங்கொளு நாமரூ பத்தொ டொன்றுறத்
தளைந்துள கிரியையாற் சார்கிலா ரென்றான்.

(இ - ள்.) எந்தை - எமதுகடவுள்—விளங்கிழை - விளங்காநின்ற ஆபரணத்தையுடையவளே —நின்வினு - உனதுவினவானது —நன்றென்று - நன்றாயிருந்ததென்று —மண்ணளந்தவன் - நாரணன் —அயன் - பிரமன்—முதலரியினோரும்—உளங்கொளும் - உள்ளத்திலே கொள்ளப்பட்ட—நாமரூபத்தொடு - பெயர்வடிவுகளோடு —ஒன்றுற - பொருந்த—தளைந்துள - பந்தித்துள்ள —கிரியையால் - வினையுயிருக்கையினலே—இன்பு - பேரின்பத்தை—சார்கிலாரென்றான் - அடையமாட்டாரென்றான். எ - று. (ருo)

வேறு.

அனையதே ளுமரூபக் கிரியைக ளனைத்தும் வெல்ல
நினைவுறு சூழ்ச்சி யொன்று நீயெனக் குரைத்தி யென்னப்
பனிமலை தவஞ்செய் தீன்ற பவளவாய் மடந்தை கூற
நனையவிழ் கொன்றை வேணி நம்பன்மற் றிதனைச் சொல்வான்.

(இ - ள்.) அனையதேல் - அப்படிப்பட்டதாயின் —நாமரூபக்கிரியைகளனைத்தும்வெல்ல—நினைவுறுசூழ்ச்சியொன்று-கருதப்பட்ட உபாயமொன்று—நீ—எனக்கு—உரைத்தியென்ன - சொல்லென்று—பனிமலை - மலையரசனல்—தவஞ்செய்து—ஈன்ற-பெறப்பட்ட—பவளவாய்மடந்தை - பவளம்போலுள்ளவாயையுடையமாது—கூற - சொல்ல—(அதற்கு)—நனையவிழ் - அரும்பவிழ்ந்த —கொன்றை - கொன்றைமாலையைச்சூடிய—வேணி - சடையையுடைய—நம்பன் - கடவுள்—இதனைச்சொல்வான். எ - று. மற்று - அசை. (ருக)

போகபூ மியினிற் போக தனுவினாற் பொருந்த லாகா
தேகமா மின்ப சித்தி யியம்புறிற் கரும பூமி
யாகமா னதுகொண் டன்றி யாதலான் ஞாலத் தெய்தி
யோகமா நெறியி னின்றே ருண்மைசா தித்துக் கொள்வர்.

(இ - ள்.) ஏகமாம் - ஐக்கியமாகின்ற—இன்பசித்தி - பேரின்பப்பேற்றை —இயம்புறில் - சொல்லுங்கால்—கருமபூமி - கருமபூமியின்கண்ணே—ஆகமானதுகொண்டன்றி - (மக்க) ளுடம்பைக்கொண்டேயன்றி பெறுதல்லாமல்—போகபூமியினில் —போகதனுவினல் - போகவுடம்பைக்கொ

ன்று—பொருந்தலாகாது - அடைதல் கூடாது—ஆதலால்—ஞாலத்தெ
ய்தி - பூமியிலே பிறந்து—யோகமாநெறியினின்றோர் - யோகமாகியமார்
க்கத்திலே நின்றவர்—உண்மை - தத்துவஞானத்தை—சாதித்துக்கொள்
வர் - நிறைவேற்றிக்கொள்வார். எ - று. (௫உ)

என்றிது கொழுநன் கூற விளங்கொடி யனைய தாயி
னொன்றொரு மக்கண் ஞாலத் துவமையின் ஞான சித்தி
நன்றுற வுணர்த்த வல்ல குரவன்யார் நவிறி யென்னக்
குன்றணி மதிய மொப்பக் குனித்தவன் கூற லுற்றான்.

(இ - ள்.) என்று—இது-இந்தவாக்கியத்தை—கொழுநன்கூற - தன்க
ணவனாகியகடவுள்சொல்ல—இளங்கொடி - இளமைபொருந்திய பூங்கொ
டிபோல்பவள்—அனையதாயின் - அப்படிப்பட்டதானால்—ஞாலத்து - பூ
மியின்கண்ணே—ஒன்றொருமக்கள் - ஒவ்வொருமனிதர்—உவமையில் -
ஒப்பில்லாத—ஞானசித்தி - ஞானநிலைப்பேற்றை—நன்றுற - நன்றாக அ
டையும்படி—உணர்த்தவல்ல - போதிக்கவல்ல—குரவன் - ஆசாரிய
ன்— யார்— நவிறியென்ன - சொல்லென்றுவினவ —அணிமதியமொப்
ப—(முடியிலே) தரிக்கப்பட்டபிறைபோல்வளைய—குன்றுகுனித்தவன்-
மேருமலையை வளைத்த கடவுள்—கூறலுற்றான் - சொல்லத் தொடங்கினா
ன். எ - று. (௫௩)

தொல்லையி லுயர்சுஞ் ஞானி தூய்நிராங் காரனென்போ
ரெல்லையி றவங்கள் செய்ய வெமது மெய் வடிவத் தானே
யல்லம நாம மைந்த னாயின மனையான் றன்னை
வில்லுறழ் நுதலாய் காண்டன் மிகவுனக் கரிய தென்றான்.

(இ - ள்.) தொல்லையில் - பண்டொருகாலத்திலே—உயர் - உயர்வா
கிய—சுஞ்ஞானி—தூய் - பரிசுத்தமாகிய—நிராங்காரன்—என்போர் - எ
ன்றுசொல்லப்படுகிறதாய்தந்தைகள்—எல்லையில் - அளவில்லாத—தவங்
கள்செய்ய - தவங்களைச்செய்தலினாலே—எமதுமெய்வடிவத்தான் - எம்
முடைய தத்துவசொரூபத்தினால்—அல்லமநாம மைந்தனாயினம் - அல்ல
மனென்னும்பெயரையுடைய புதல்வனாயினம்—அனையான்றன்னை - அ
ப்படிப்பட்ட அல்லமனை—வில்லுறழ்நுதலாய் - விற்போலுள்ள நெற்றி
யையுடையவளே—காண்டல் - காணுதல்—உனக்கு—மிக—அரியதென்
றான். எ - று.

சுஞ்ஞானி ; பொருளைப்பொருளாகக்கொள்ளும்ஞானமுடையவன். நி ராங்காரன் ; அல்லதையானெனக்கோடல்தவிர்வோன். எமதுமெய்வடி வமெனலால் பொய்வடிவமொன்றுளதாகப்பெற்றும். பெறவே மாயாசகி தம் மாயாரகிதமென்றாயிற்று ஆகவே மெய்வடிவ மல்லமனெனவும் பொ ய்வடிவம்யானெனவுங் குறிப்பிக்கக்கண்டாம். எனதுபொய்வடிவத்துக் கியைந்தசத்திகீயாதலின் உன்றற்காண்டற்கரியனல்லமனென்பார் " அ னையான்றன்னை வில்லுறழ்நுதலாய்காண்டல் மிகவுனக்கரியதென்று " னென்றார். சகுணத்தைப்பற்றி நிர்க்குணமெய்தல் தானென்பதற்குக்கற் பிதமேனும் வஸ்துசித்தாந்தமின்றியக்க ணிலதமொற்றம்வருவது பற்றிச் சகுணமாக்கவேண்டியதாயிற்று அங்ஙனஞ்சகுணமாக்குழிஅநேககோடி நிறை சத்திகளுளவாகக்காண்டலி னவையனைத்தையுந்தொகை யொரு மையாகப் பொய்யுருவிசத்தியாக்கி அச்சத்தியாகியபுடைபெயர்ச்சிக்கு வினைமுதலொன்று வேண்டுவதாலதனைச்சத்தனுக்கியிங்கே கூறப்புகுந்த தென்க. எமதெனக்கிழமைப் பொருட்கியைந்த அதுவென்னு முருபுதந் ததால் மெய்வடிவஞ்சுயஞ்சோதியெனவும் பொய்வடிவங்கற்பனுவடிவ மெனவும் பொருள்படுகின்றது. விமலைகதியில் - ௨௭ - ங்கவியிற்பரஞ்சோ திதிரண்டுகுழவியாகின னல்லமனெனலால் இங்கேயெமதுவடிவந்தா னே அல்லமநாம மைந்தனுயினனெனல்பொருந்தும். எமதுமெய்வடிவ த்தானே எனச்சொல்லியுரைகோடலும், ஆயினமெனத்தன்மைப்பன் மையாக்கலும் பொருந்தாதென்க. பொருந்துமெனின் மாறுகொளக் கூ றலெனற்கியையும் எமதுமெய்வடிவமும் பொய்வடிவமும் யாமல்ல எம் மைத்தவிரவுமில் என்றகருத்தையுணரார்போலும். (௩௪)

என்றலு மிமைய வல்லி யெனக்கரி தென்ப தென்கொ
லுன்றனி யல்ல மன்ற னுண்மையை யறிய வேண்டி
னின்றவர் தமக்கெ லாமு மெளிதென நெகிழ்ந்து ரைப்ப
வன்றினர் புரமெ ரித்த வணிநகை யாளன் சொல்வான்.

(இ - ள்.) என்றலும்-என்றுசொல்லியவளவிலே—இமையவல்லி -உ மாதேவியானவள்—எனக்கு - (எல்லாவற்றுக்குங்காரணமாய்நிற்கிற) எ னக்கு—அரிதென்பது-அரிதென்றுசொல்லுதற்குக்காரணம்—என் - யா து—உன்றனியல்லமன்றன் - உன்கூறாகியஒப்பற்ற அல்லமனது—உண் மையை—அறியவேண்டின் —நின்றவர்தமக்கெலாமும் - (எனக்கேயன் றி இச்சபையின்கண்ணே) நின்றோர்யாவர்க்கும்—எளிதென - (அதுசெ

ய்வது) எளிதென்று—நெகிழ்ந்து - கலங்கி—உரைப்ப - சொல்லவும்—அன்றினர்புரம் - பகைவரதுபுரங்களை—எரித்த—அணிநகையாளன் - அழகிய சிரிப்பையுடையவன் —சொல்வான். ஈ - று. கொல் - ஏ - அசைகள்.

வல்லியென்பது உவமையாகுபெயர். (௫௫)

முனிவுறேல் வறிய வுன்றன் மொழியள வல்லன் மாதே
வினைதபு மன்ப ரன்பால் வேண்டிய வடிவ னாகி
யனையவர் விழியிற் றோன்றி யருளுவ னலம தேவன்
றனதியல் பியாவ ராலுஞ் சாற்றிடற் கரிய தென்றான்.

(இ - ள்.) மாதே—முனிவுறேல் - கோபஞ்செய்யேல்—வறியவுன்றன் மொழியளவல்லன் - வீணாகவுன்சொல்லளவிலேநிற்பவனல்லன் —வினைதபுமன்பர் - வினைகளைஒழித்துநின்றஅன்பராலே —அன்பால் — வேண்டிய - வேண்டப்பட்ட —வடிவனாகி —அனையவர்விழியிற்றோன்றி - அவரதுகண்முன்னேகாணப்பட்டு —அருளுவன் —அலமதேவன்றனதியல்பு—யாவராலும் —சாற்றிடற்கு - சொல்லுதற்கு —அரியதென்றான். ஏ - று. மாது - ஓ - அசைகள். நின்றவர்தமக்கெலாமுமெளிதென்றலால் முனிவுறேலென்றான்.

மொழியளவாவது; உண்டு இல்லை ஆம் அல்லஎனப்பிரிதிவாதிக்குமெல்லையை. அல்லனெனல்; இவற்றிற்குடன்படாமையை. வினைதபுதலாவது; இருவினைக்குடன்படாத நாட்டத்தை. அனையவர்விழியாவது; அவஸ்தாத்திரியநெறித்தாகாநோக்கத்தை. அலமதேவன் றனதியல்பாவது; ஞானஞ்ஞானங்களுக்குத் தட்டாநிலையை. (௫௬)

மெய்ம்மையிம் மாற்ற மாகும் வேறுளார்க் கியான்செய் மாயை
பொய்ம்மலி செயலிற் றப்பிப் போமெனிற் காண்ப லென்னா
வம்மலை மகட ருக்கி யறைதலு நின்ற னற்றன்
மைம்மலி குழலாய் காண்கு மென்றிது வள்ளல் கூறும்.

(இ - ள்.) வேறுளார்க்கு - (அவ்வல்லமனின்) வேறாயுள்ளவர்க்கு—யான் செய்மாயை - என்னாலே செய்யப்படுகிறமாயையானது—பொய்ம்மலிசெயலின் - பொய்யாணிறைந்த செயலினின்றும்—தப்பிப்போமெனின் - (அவனிடத்தே) தப்பிப்போமாகில்—இம்மாற்றம் - இச்சொல்—மெய்ம்மையாகும்—காண்பலென்னா - காண்பேனென்று—அம்மலைமகள் - அ

வ்வுமாதேவி—தருக்கியறைதலும்-செருக்குற்றுச் சொல்லியவளவில்—நி ன்றனுற்றல்-உனது வல்லமையை—மைம்மலிகுழலாய்-கருமையால் நிறை ந்த கூந்தலையுடையவளே—காண்குமென்று-பார்ப்போமென்று—இது - இச்சொல்லை—வள்ளல் - கடவுள்—கூறும் - சொல்லுவான். எ-று. வே றுளார்; அயனரியரன்முதலாயினோர். இம்மாற்றமென்றது முன்னே உ ன்றன்மொழியளவல்லவெனனப்பட்டதை.

இங்கே மாயையெனல்; ஆவதையாகாததாகவும் ஆகாததையாவதாக வுஞ் செய்யுங்கடனுகடனசாமர்த்தியத்தை. பொய்ம்மலிசெய்லாவது; இ ங்ஙனமாயசாமர்த்தியத்தை யேற்றற்கியைந்த புடைபெயர்ச்சியை. அது பொய்க்கோ மெய்க்கோ? மெய்க்கெனின் கடத்துக் குபாதானமாகிய ம ண்ணுக்கு நான்குகாலத்தும் அபாவமெய்தவேண்டும் எய்தற்கியையாமை யால் கடமென்னு முபாதேயமெய்தற் பாலதாகும் ஆதலின் பொய்ம்மலி செயலேயெனல் பொருந்தும். (ருஎ)

இன்னணஞ் சூளி யம்பி யினிவறி திருத்தி யாயிற்
பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலை மடவாய் தோல்வி
நின்னிடை வருமென் றண்ண னிகழ்த்தலு மிமைய வல்லி
யென்னுமை தவறு தென்று நெடுமொழி யிசைத்துப் பின்னர்.

(இ - ள்.) பொன்னவிர்சுணங்கு - பொன்போல்விளங்காநின்றதேம ல்—பூத்த - படரப்பெற்ற—புணர்முலை - நெருங்கிய முலைகளையுடை ய—மடவாய் - மாதே—இன்னணம்-இவ்வண்ணமாக—சூளியம்பி -பிரதி ஞ்ஞைசொல்லி—இனி -இதுமுதலாக—வறிதிருத்தியாயின் - சும்மாவிரு ப்பையாயின்—தோல்வி - தோற்பு—நின்னிடை - உன்னிடத்து —வரு மென்று—அண்ணல் - கடவுள்—நிகழ்த்தலும் - சொல்லியவளவிலே—இ மையவல்லி - பார்வதிதேவியானவள்—என்னுமை - எனதுசொல்—தவ றுதென்று- ஒருபோதும்பழுதுபடாதென்று—நெடிமொழியிசைத்து - த ன்மேம்பாட்டினையைச்சொல்லி—பின்னர் - (அதன்) பின்பு. எ - று.
இமையவல்லி அன்மொழித்தொகை. (ருஅ)

(மாயையைப்பூமிமேல்விடுதல்.)

ஆயிடை யருகு நின்ற தமோகுண வடிவ மாகு
மாயையை விளித்து நீபோய் மண்ணிடை யல்ல மப்பேர்

நாயகன் றனைய றிந்து நணுகுதி யென்று கூறி
யேயின ளவள்வ ணங்கி யினையதொன் றியம்ப லுற்றாள்.

(இ - ள்.) ஆயிடை - அந்தச்சபையினிடத்திலே—அருகுநின்ற - பக்கத்தினின்ற —தமோகுணவடிவமாகுமாயையை —விளித்து - அழைத்து—மண்ணிடை - பூமியிடத்து —நீபோய் —அல்லமப்பேர் நாயகன்றனை - அல்லமனென்னும் பெயரையுடையநாயகனை—அறிந்து —நணுகுதியென்றுகூறி-(இவ்விடத்துக்கு)வரக்கடவாயென்றுசொல்லி—ஏயினள் - அனுப்பினாள்—அவள்வணங்கி—இனையதொன்று- இப்படிப்பட்டதொன்றை—இயம்பலுற்றாள் - சொல்லத்தொடங்கினாள். எ - று. நாயகன்றனையறிந்தெனலால்; அவனைக் காமவேட்கையில் வசப்படுத்தி அவன் கருத்தையறிந்து வாவென்று குறிப்பித்ததாயிற்று. நணுகுதியென்னு முன்னிலைவினை நணுகிடென்னுமேவற்பொருளில்வந்தது.

யாதோர்புடைபெயர்ச்சிக்குமியையாதோன் சத்தனெனவே சாத்துவிதமுதலியமுக்குணப்புடைபெயர்ச்சிக் கியைவதுசத்தியெனத்தானேயமைதலின் இங்கேதமோகுணவடிவமாகுமாயையென்றார். (௫௯)

(மாயைகூறுறவு.)

அல்லம னியல்ப றிந்தங் கணைகுவ னழுவு மாயின்
வல்லிதின் வலிந்து பற்றி யீர்த்திவண் வருவ லென்று
சொல்லின ளொருசூள் வேலை சுவறவுண் டிடுவ லென்று
புல்லிய வெறும்பொன் றாற்றல் புகல்வது போல வன்றே.

(இ - ள்.) அல்லமனியல்பறிந்து-அல்லமனதுதன்மையைஅறிந்து—அங்கு —அணைகுவன் - கூடுவேன் —நழுவுமாயின் - அகப்படாமற்போவானாகில்—வல்லிதின் வலிந்துபற்றி - மிகவும் வலிமைசெய்துபற்றி—ஈர்த்து - இழுத்துக்கொண்டு—இவண் - இவ்விடத்துக்கு—வருவலென்று - வருவேனென்று —ஒருசூள்சொல்லினள் - ஒருபிரதிஞ்ஞையைச்சொன்னாள் —புல்லியவெறும்பொன்று - ஒருசிற்றெறும்பானது —வேலை - கடலை —சுவற - வற்றும்படி —உண்டிடுவலென்று - குடித்துவிடுவேனென்று—ஆற்றல்புகல்வதுபோல - (தன்னிடத்தில்லாத)வல்லமையைச்சொல்லுவதாயின் அதுபோல. எ - று. அன்று - ஏ - அசை. ஆயினென்றது சால்லெச்சம். அப்படிப்பட்டதோரெறும்பு இல்லாமையால்; இல்பொருளுவமை.

அருமைதோன்ற புல்லிய வெறும்பொன்றாற்றல் புகல்வதுபோல வென்றதனால் அவளதுசூள் பயனிலுவமை யணியெனினுமமையும். (௬௦)

(அவள் பூமியடைவு.)

தன்னள வறியா ணமாழ்கித் தண்மதி தவழும் வேணி
முன்னவ னவையு ணின்று மொழிந்தவச் சூண்மு டிப்பான்
பன்னக முடிப ரித்த பார்மிசைச் செலவை நெஞ்சத்
துன்னின ளெய்தி னளவ் வொளியிழை மாயை மாதோ

(இ - ள்.) அவ்வொளியிழைமாயை - விளங்காநின்ற ஆபரணத்தையுடைய அர்த்தமாயையானவள்—தன்னளவறியாள் - தனதளவை அறியாதவளாய்—மாழ்கி - மயங்கி—தண்மதிதவழும்வேணி - குளிர்ச்சிபொருந்திய சந்திரன்தவழ்கின்ற சடையையுடைய—முன்னவன்-கடவுளது—அவையுணின்று-சபையிலேநின்று—மொழிந்த - (தன்னாலே) சொல்லப்பட்ட—அச்சூள் - அந்தப்பிரதிஞ்ஞையை—முடிப்பான் - முடித்தற்பொருட்டு—பன்னகமுடிபரித்த - ஆதிசேஷனதுமுடியினாலேதாங்கப்பட்ட—பார்மிசை - பூமியின்மேல்—செலவை - செல்லுகையை—நெஞ்சத்து—உன்னினள் - நினைத்தவளாகி—எய்தினள் - (அதனை) அடைந்தாள். எ - று. மா து-ஓ-அசைகள்.

தன்னளவறியாது மாழ்கலாவது; தனதறிவு உபாதிசகிதத்ததெனக் காணாதுமயங்கலே. (௬௧)

கைலாசகதி - முற்றிற்று.

ஆ கதி - உ-க்கு திருவிருத்தங்கள். அஉ.



மூன்றாவது

# மாயையினுற்பத்திகதி.

பூதலத்தைப் பொருந்துபு மாயையென்
றோதலுற்ற வொருபிடி நுண்ணிடை
மாதவத்தர் மனங்கள் கலங்குறச்
சாத முற்று வளர்ந்தமை சாற்றுவாம்.

(இ - ள்.) மாயையென்றோதலுற்ற - மாயையென்று சொல்லப்படுகி ற—ஒருபிடி நுண்ணிடை-ஒருகைப்பிடியளவாகிய நுண்ணியஇடையையு டையவள்—பூதலத்தை-பூலோகத்தை—பொருந்துபு-அடைந்து —மாத வத்தர்மனங்கள் - முனிவர்களுடையநெஞ்சங்கள்—கலங்குற-கலங்கும்ப டி—சாதமுற்று - பிறந்து—வளர்ந்தமை - வளர்ந்த செய்தியை —சாற்று வாம் - சொல்லுவாம். எ - று.

நுண்ணிடை அன்மொழித்தொகை. (க)

(இது முதல் நான்குபாட்டுகளில் நாட்டுச்சிறப்பு.)

களங்க வெண்மதி நெஞ்சங் கவற்றுமோர்
துளங்கு சங்குடைத் தோன்றன் மணத்தணி
வளங்கொண் மண்மகண் மார்பின் மதாணிபோல்
விளங்கு மென்ப விளவல தேயமே.

(இ - ள்.) களங்கவெண்மதி - களங்கத்தையுடைய வெள்ளியசந்திர னது—நெஞ்சம்-மனத்தை—கவற்றும் - சவல்விக்கின்ற—ஓர்துளங்குசங் குடை - ஒப்பற்றஒளிசெய்கின்ற சங்கத்தையுடைய—தோன்றல் - நார ணனது —மணத்து - விவாககாலத்திலே —அணி - அலங்கரிக்கப்பட் ட —வளங்கொள் - பலவளங்களையுங்கொண்ட—மண்மகள் - பூமிதேவியி னது—மார்பில்- மார்பிலேயுள்ள—மதாணிபோல் - பதக்கம்போல்—விள வலதேயம்—விளங்கும். எ - று. என்ப-ஏ-அசைகள். கவலுதலுக்குத் தன்களங்கமில்லாமையே ஏதுவாகலால் கவற்றுமென்றார். வளங்களா

வண ; நிலவள நீர்வளங் குடிவளமுதலியன. பூமிக்குப் பேரழகுசெய்தல் பற்றி விளவலதேசத்தை அப்படிப்பட்டபதக்கமாகக் குறித்தலால் தற்குறிப்பணி. (உ)

வாவி யாவு மதன்பெருந் தூணிசெய்
யாவு மார னெடுக்குஞ் சிலையிடங்
காவெ லாமவன் காகள சாலைகள்
பூவை மார்மனை போர்க்கள மென்பவே.

(இ - ள்.) வாவியாவும் - குளங்களெல்லாம்—மதன்பெருந்தூணி - மன்மதனது பெரிய அம்புக்கூடுகளாகும் —செய்யாவும் - வயல்களெல்லாம்—மாரனெடுக்குஞ்சிலையிடம் - அம்மன்மதனாலே எடுக்கப்படுகிற விற்சாலைகளாகும்—காவெலாம் - சோலைகளெல்லாம—அவன் காகளசாலைகள் - அவனதுதிருச்சின்னச்சாலைகளாகும்—பூவைமார்மனை - மங்கையர்வீடுகளெல்லாம்—போர்க்களம் - (அவனது) போர்க்களங்களாகும். எ - று. என்ப-ஏ-அசைகள். அவனென்பது பின்னுங்கூட்டப்பட்டது. [குளங்களெல்லாந்தாமரைநீலோற்பலங்களுக்கும், வயல்களெல்லாம் கரும்புகளுக்கும், சோலைகளெல்லாம் குயில்களுக்கும், மங்கையர் வீடுகளெல்லாம், காமலீலைகளுக்கும், இடங்களாயிருக்கின்றனவென்பவற்றை வேறுவிதங்களாலே கூறலால் பிறிதினவிற்சியணி. "பிறிதினவிற்சியேபெறப்படும் பொருளைப் பிறிதொரு நடைகொளப்பேசுவதாகும்" என்பது இலக்கணமாதலின். இதனால் அந்நாடு விண்ணுலகம்போல் தொலைவில் போகந்துய்த்துவாழ்தற்கிடனுயுள தென்பது ஒலிக்கின்றது. (௩)

பொறைக்க யிற்றிற் புகழையின் சொல்லெனும்
விறற்க யிற்றின் விருந்தைக் குரவர்சொன்
மறைக்க யிற்றின் மனத்தைத் திருவைநல்
லறக்க யிற்றி னசைப்பவ ரெங்குமே.

(இ - ள்.) பொறைக்கயிற்றின் - பொறுமையாகிய கயிற்றினாலே—புகழை - புகழையும் —இன்சொல்லெனும் விறற்கயிற்றின் - இனியசொல்லாகிய வெற்றிபொருந்திய கயிற்றினாலே—விருந்தை - விருந்தினரையும்—குரவர்சொன்மறைக்கயிற்றின் - ஆசாரியராலே உபதேசிக்கப்பட்ட வேதாந்தப்பொருளாகிய கயிற்றினாலே—மனத்தை - நெஞ்சையும்—நல்லறக்கயிற்றின் - நல்லவறமாகிய கயிற்றினாலே—திருவை - செல்வத்தையு

ம்—அசைப்பவர்-கட்டுவோர் —எங்கும் - அந்நாடெங்கும்(உளர்.)எ - று. ஏ - அசை. உளரென்பது அவாய்நிலையால்வந்தது. "ஒறுத்தார்க்கொரு நாளையின்பம்பொறுத்தார்க்குப் பொன்றுந்துணையும் புகழ்." என்றலால் பொறுமையுடையாரிற்புகழ்நீங்கமாட்டாமையறிக. "அறத்தினூங்காக்க முமில்லையதனை மறத்தலினூங் கில்லைகேடு" என்றலால்அறஞ் செல்வத்தி ற்குக்காரணமாமாறுகாண்க. பொறை முதலியவற்றில் கயிறுமுதலிய வற் றின் றன்மைகளை ஆரோபித்தலால் உருவகவணி. (௪)

வறிய னுவன் வடதிசை மன்னவ
னறிவி லாள னனந்தனு மாவனோர்
சிறிய னுவன் சிலைமதன் பூம்பொழில்
வெறியு லாவும் விளவலத் தெய்தினே.

(இ - ள்.) பூம்பொழில் - மலர்ச்சோலைகளது—வெறியுலாவும் - மண முலவாநின்ற —விளவலத்தெய்தின் - விளவல தேசத்தை அடைந்தா ல்—வடதிசைமன்னவன் - குபேரன்—வறியனுவன் - தரித்திரனுவா ன் —அனந்தனும் - ஆதிசேஷனும் —அறிவிலாளனுவன் - மூடனுவா ன்—சிலைமதன் - கருப்புவில்லையுடைய மன்மதன்—ஏர்சிறியனுவன் - கு ரூபியாவான். எ - று. ஏ - அசை. இவ்வாறுகூறவே அந்நாட்டோர் செல்வமுதலியவற்ருல் -குபேரன் முதலியோரினு மிக்கவரென்றதாயி ற்று. [குபேரன் வறியவனுகை முதலியவற்றை நாட்டுதற்பொருட்டு விளவலத்தெய்தினெனலால், உய்த்துணர்வைப்பணி. "உய்த்துணர்வைப் பேயொன்றை நாட்டுதற்பொருட்டிங்ஙன மாயினெனக் குறிப்பதுவே" என்பது இலக்கணமாதலின். (௫)

இது முதல் கச - பாட்டுகளில் நகரச்சிறப்பு.

இணையி லாத விளைய வளம்பல
நணுகி வாழும் விளவல நாட்டிலவ்
வணியி னுப்ப ணழுத்தும் விலையிலா
மணியின் மேவும் வனவசை மாநகர்.

( இ - ள்.) இணையிலாத - ஒப்பில்லாத—இனையவளம்பல - இப்படி ப்பட்டவளங்கள் பலவற்றையும்—நணுகி - பொருந்தி—வாழும் - —வாழ் கின்ற—விளவலநாட்டில்—வனவசைமாநகர்—அவ்வணியினுப்பண் - அ ப்பதக்கத்தினடுவே—அழுத்தும் - பதிக்கப்பட்ட—விலையிலாமணியின்-

விலையில்லா நாயகமணிபோல் — மேவும் - பொருந்தும். எ - று. பல வு மென்னுமுற்றும்மை விகாரத்தாற் றொக்கது. இங்கே அவ்வணியெ ன்றது, முன்னே மண்மகண்மார்பின் மதாணியென்றதைச் சுட்டி நின் றது. பூமிக்கு அந்நாடுபோல் அந்நாட்டுக்கு இந்நகரம் அழகுசெய்கின்ற தென்றதாயிற்று. வனவசைநகரத்தை நாயகமணியாகக் கூறவே மற் றைநகரங்களெல்லாம் சுற்றிலுள்ள மணிகள்போலுமென்பது பெறப்பட் டது. வனவசைமாநகரத்தை அந்நாயக மணியாகக் குறித்தலால், தற்கு றிப்பணி. (சு)

படிக்கு ளீரப் பலாப்பழுத் தொண்புவி
வெடித்த வாயின னந்தன் மணிவயி
லடுத்து வானத் தமர்மதி யைத்தொடாக்
கடுத்த வேள்குடைக் காம்பெனத் தோன்றுமால்.

(இ - ள்.) படிக்குள் - நிலத்தினுள்ளே—ஈரப்பலா - வேர்ப்பலாக்கா ய்—பழுத்து—ஒண்புவிவெடித்தவாயில் - நன்மைபொருந்தியபூமிவெடி த்தவழியால்—அனந்தன் - ஆதிசேஷனது—மணி - சிரோரத்தினத்தின து—வெயில் - கதிரானது—வானத்தமர்மதியை - ஆகாசமத்தியத்திலே தங்கிய பூரணசந்திரனை—அடுத்து - சேர்ந்து—தொடா - தொட்டு—கடு த்த - (விரகநோயினர்மேற்) கோபமுற்ற—வேள்குடை - மன்மதன்கு டையினது—காம்பென - காம்புபோல்—தோன்றும். எ - று. ஆல் - அசை. மன்மதனுக்குக் குடையாதலின் சந்திரனை வேள் குடையென் றார்.. அம்மணிக்கதிரை அக்குடைக்காம்பாகக் குறித்தலால், தற்குறிப் பணி. இதனால் அந்நிலம் எந்நிலத்தினு மிக்க செழுமையுடைத்தென்பது தொனிக்கின்றது. (எ)

நறவ விழ்ந்த நறுமலர் தோறும்வண
டுறவ ருந்தி யிருளுற்றொ டுங்குமா
லறவர் தங்க ளகந்தொறு மையமுண்
டுறவா தங்குகை துன்னுதல் போலவே.

(இ - ள்.) வண்டு - வண்டுகளானவை—அவிழ்ந்த - மலர்ந்த—நறுமலர் தோறும் - பரிமளம்பொருந்திய ஒவ்வொருமலரிலும்—நறவு - தேனை—உ றவருந்தி - மிகவுமுண்டு—இருளுற்று - தங்கூடுகளைச்சேர்ந்து—ஒடுங் குவ - அடங்கும்—அறவர்தங்களகந்தொறும் —இல்லறத்தோரது மனை

தோறும் —ஐயமுண் - பிச்சையேற்றுண்ட —துறவர் - துறவறத்தோர்—தங் குகைதுன்னுதல்போல - தமதுகுகைகளிலே அடங்குதல்போல
எ - று. ஏ - அசை. ஒப்பணி. (அ)

வாவிச் செங்க மலங்களில் வல்லிருண்
மேவித் துஞ்சி விடிதரு காலையிற்
காவிற் சென்று களிவண் டினங்குயில்
கூவத் தண்மதுக் கொள்ளைகொண் டுண்ணுமால்.

(இ - ள்.) களிவண்டினம்—வாவி - தடாகங்களிலுள்ள—செங்கமலங்களில் - செய்யதாமரைமலர்களிலே—வல்லிருள் - இராப்பொழுது—மேவித்துஞ்சி - விரும்பித்துயில்கூர்ந்து —விடிதருகாலையில் —காவிற்சென்று - சோலையுட்புகுந்து—குயில்கூவ - (அவ்விடத்துள்ள) கோகிலங்கள் கூவாநிற்க —தண்மது - குளிர்ச்சிபொருந்தியதேனை —கொள்ளைகொண்டு—உண்ணும். எ - று. ஆல் - அசை. ஒரூரிலேபுகுந்து அவ்விடத்தேயுள்ளவற்றையெல்லாம் பிறர் கொள்ளைகொள்ளுங்கால் அவ்வூரார்கூவுவராதலின் குயில்கூவவென்றார். (கூ)

பெடையொ டுற்றுப் பிரிவில்பைங் கிள்ளைகள்
குடியி ருக்குங் குளிர்பொழில் வாய்மலர்ப்
பொடியு திர்க்கில வேலளி போய்வயன்
மடையு டைக்கு மதுப்பெரு வெள்ளமே.

(இ - ள்.) பெடையொடுற்று - தம்பேடுகளோடுகூடி —பிரிவில் - பிரியாத—பைங்கிள்ளைகள் - பச்சைக்கிளிகள்—குடியிருக்கும் - வாசஞ்செய்தற்கிடமாகிய—குளிர்பொழில்வாய் - குளிர்ச்சி பொருந்தியசோலையிடத்து—மலர்ப்பொடி - பூந்தாதுவை —அளிபோய் - வண்டுகள்சென்று—உதிர்க்கிலவேல் - உதிர்க்காதிருக்குமாயின்—மதுப்பெருவெள்ளம் - (அம்மலர்களிலிருந் தொழுகுகின்ற) தேனினதுபெரியவெள்ளமானது—வயன்மடை - கழனிகளின்மடைகளை—உடைக்கும். எ - று. ஏ-அசை. உதிர்த்துச்சேறுக்கிவிடுதலால், உடைக்கின்றதில்லையென்றதாயிற்று. தேன்பெருவெள்ளம் வயன்மடையுடைத்தற் பொருட்டு வண்டுகள்மலர்ப்பொடி உதிர்க்கிலவாயினெனக் குறித்தலால், உய்த்துணர்வணி. (கய)

சேலு லாவித் திரியு நதிப்புனன்
மாலி யானை மறையக் கதிர்த்தலைச்

சாலி நீடித் தழைத்து விளைவயல்
காலி னோடிக் கடிது விழுமரோ.

(இ - ள்.) சேலுலாவித்திரியும் - கெண்டைகள விளையாடித்திரிதற்கி டமாயிருக்கின்ற—நதிப்புனல் - ஆற்றுநீரானது—மாலியானை - பெரிய யானையானது—மறைய - மறையுமளவாக—கதிர்த்தலை - கதிர்களைத்தலை களிலேயுடைய—சாலி - செந்நெற்பயிர்களானவை—நீடி - ஓங்கி—தழை த்துவிளை - செழித்துவிளைகின்ற—வயல் - கழனிகளிடத்து—காலினோடி - கால்களாலோடி—கடிது - விரைவிலே—விழும். எ - று. அரோ-அசை. ஆற்றுக்காற் பாய்ச்சற்சிறப்பு. (கக)

வரிக்க யல்செங் கமலம் வரிவளை
யிருக்கை யான்மல ரம்பினை யேந்தலால்
விரிக்கு மஞ்சிறை மென்னடைப் புள்வயல்
செருக்கு வின்மதன் செங்கை நிகர்க்குமால்.

(இ - ள்.) விரிக்குமஞ்சிறை - விரிக்கின்ற அழகிய சிறைகளையும்—மெ ன்னடை - மெல்லியநடைகளையுமுடைய—புள்-பறவைகளையுடைய—வ யல் - கழனியானது—வரிக்கயல் - (மச்சரேகையும்) நெடியமீனும்—செ ங்கமலம்- (பதுமரேகையும்) செந்தாமரைமலரும்—வரிவளை -(சங்கரேகை யும்) நெடியசங்கும்—இருக்கையால் - இருத்தலாலும்—மலரம்பினை - (ம லர்களையுடையநீரை) மலர்களாகியகணைகளை—ஏந்தலால் - தாங்குதலாலு ம்—செருக்குவின்மதன் - கருப்புவில்லையுடையமன்மதனது—செங்கைநி கர்க்கும் - செய்யகரம்போலும். எ - று. ஆல்-அசை. மன்மதன் உத்த மநாயகனுதலால் அவன்கைக்கு மச்சரேகைமுதலியனவுடைமை சொல் லப்பட்டது. சிலேடைபற்றிவருதலால், புணர்நிலையொப்பணி. (கஉ)

நளிர்க டற்றுயி னாரணன் றன்னுருக்
கொளவ ளிப்பவர் கையிற் கொடுத்திடும்
வளைபி றக்கு மிடமென வுண்புனற்
குளம னைத்துங் குடவளை மொய்க்குமால்.

( இ - ள். ) நளிர்கடற்றுயில் - தண்ணியகடலின்கண்ணேதுயில்கின் ற—நாரணன்— தன்னுருக்கொள - தனதுசாரூப்பியத்தைப்பெற—அ ளிப்பவர்கையில் - எவருக்குக்கொடுப்பினும் அவர்கையிலே—கொடுத்தி டும் - (அவனாலே) கொடுக்கப்படுகின்ற—வளை - சங்குகளானவை—பிற

க்குமிடமெனத் - தோன்று மிடங்கள்போல் —வண்புனற்குளமனைத்து ம் - வளம்பொருந்தியநீரையுடைய தடாகங்களனைத்திலும்— குடவளை - குடம்போலுள்ள சங்குகளானவை—மொய்க்கும்- எ - று. ஆல் - அசை. அக்குளங்களை அப்படிப்பட்ட இடங்களாகக்குறித்தலால், தற்குறிப்பணி. அக்குளத்துச்சங்குகள் பாஞ்சசன்னியம் போலுளவென்பது கருத்து. (௧௩)

வேறு.

தாழ்ந்தோ ருயர்வ தொன்றுமிக வுயர்ந்தோர் தாழ்வ தொன்றுமறந், சூழ்ந்தோ ருரைக்கு முறைகண்டா மதில்சூழ் கிடந்த தொல்லகழி, தாழ்ந்தோ ரனந்தன் மணிமுடிமே னின்றன் றுயர்ந்து தடவரையைச், சூழ்ந்தோர் வரையி னுதிப்பவன்றாட் கீழ் நின் றதுபோய்ச் சூழெயிலே.

(இ - ள்.) தாழ்ந்தோருயர்வதொன்றும்—மிகவுயர்ந்தோர் தாழ்வதொன்றும்—அறஞ்சூழ்ந்தோர் - அறநூல்களை ஆராய்ந்தோரால்—உரைக்கும் - சொல்லப்பட்ட—உரை - வாக்கியபிரமாணத்தை—கண்டாம் - அறிந்தோம்—மதில்சூழ்கிடந்த - மதிலைச்சூழ்ந்துகிடந்த—தொல்லகழி - பழமையாகிய அகழியானது—தாழ்ந்து - தாழ்ந்தமையினாலே - ஒரனந்தன்மணிமுடிமேல் - ஒப்பற்றஆதிசேஷனதுமணியையுடையமுடியின் மேல்—நின்றன்று-நின்றது—சூழெயில் - (அந்நகரத்தைச்) சூழ்ந்துள்ளமதிலானது—உயர்ந்து - உயர்ந்தமையால் —தடவரையைச்சூழ்ந்து - மேருவைவலம்வந்து—ஓர்வரையின் - உதயகிரியினின்றும்—உதிப்பவன் - உதயஞ்செய்பவனது—தாட்கீழ் - அடியின்கீழ்—போய்—நின்றது. எ - று. ஏ-அசை. மதில் சூரியமண்டலவுரையு முயர்த்தப்பட்டும், அகழி நாகலோகவரையுந்தாழ்த்தப்பட்டு மிருத்தலின், உயர்தல் மதிலின்கண்ணும், தாழ்தல் அகழியின்கண்ணும் அரோபிக்கப்பட்டன. முதலடியிலே சொல்லப்பட்ட அவர்ணியமாகிய பொதுப்பொருளைப் பின்மூன்றடிகளிற் சொல்லப்பட்ட வர்ணியமாகிய சிறப்புப்பொருளைக்கொண்டு சாதித்தலால், வேற்றுப்பொருள்வைப்பணி. (௧௪)

சொற்போர் புரிவர் நான்மறையா றங்க முணர்ந்த தெர் முகுலத்தோர், விற்போர் புரிவர் நெடியசிலை யிராம னனைய விறல்வேந்தர், பொற்போர் புரிவர் பிறர்பொருளுந் தம்போற் பேணிப் புரிவணிகர், நெற்போர் புரிவ ரந்நகரில் வேளாண் குலத்து நெறியினரே.

(இ - ள்.) அந்நகரில்—நான்மறை - நாலுவேதங்களையும்—ஆறங்கம் - (அவற்றி)றங்கங்களையும்—உணர்ந்த - கற்றறிந்த—தொழுகுலத்தோர் - அந்தணர்—சொற்போர் - சொற்களாலே செயப்படும்போரை—புரிவர்-செய்வர்—நெடியசிலை-நீட்சிபொருந்தியவில்லினையுடைய—இராமனனை ய - இராமன்போலும்—விறல் - வெற்றியையுடைய—வேந்தர் - அரசரா யினோர்—விற்போர் - விற்களாலே செயப்படும்போரை—புரிவர் - செய் வர்—பிறர்பொருளும் - பிறருடையபொருள்களையும்—தம்போல் - தம்மு டையவைபோல்—பேணி - காப்பாற்றி—புரி - (வாணிபஞ்) செய்கின் ற—வணிகர் - வணிகராயினோர்—பொற்போர் - பொன்களாலே செயப் படும் போரை—புரிவர் - செய்வர். வேளாண்குலத்து - வேளாண்மை யோடுகூடியகுலத்தினது—நெறியினர் - மரபிலே தோன்றியோர்—நெ ற்போர் - நெற்களாலே செயப்படும்போரை—புரிவர் - செய்வர். எ - று. ஏ - ஈற்றசை. புரிவரெனமுன்வந்த சொற்பொருளே பின்வந்தமையால், பின்வருவிளக்கவணி. "பின்வருவிளக்கே முன்வருவிளக்கச் சொல்லே பொருளே யிரண்டுமே பின்வரல்." (கரு)

உடுப்போர்க் குடுக்குந் துகில்களா லுண்போர்க் குண்ணு ம் பொருள்களாற், றொடுப்போர்க் கெடுக்கு மலர்களா லணிவோ ர்க் கணியுஞ் சுடரிழையா, லடுப்போர்க் கடுக்கு மனைகளாற் குறைபா டுடைய தன்றதுதான், கொடுப்போர்க் கிரப்பா ரில் லாத குறையொன் றுளது கூறுங்கால்.

(இ - ள்.) அதுதான் - அந்நகரந்தான்—உடுப்போர்க்கு—உடுக்குந்து கில்களால் - உடுத்தற்குவேண்டும் ஆடைகளாலும்—உண்போர்க்கு—உ ண்ணும்பொருள்களால் - உண்ணுதற்குவேண்டும் பண்டங்களாலும்—தொடுப்போர்க்கு - கட்டுவோர்க்கு—எடுக்குமலர்களால் - எடுத்தற்கு வேண்டுமலர்களாலும்—அணிவோர்க்கு - அலங்கரித்துக் கொள்வோர்க் கு—அணியுஞ்சுடரிழையால் - அணிதற்குவேண்டும் ஒளியினையுடைய ஆ பரணங்களினாலும்—அடுப்போர்க்கு - குடியிருப்போர்க்கு—அடுக்குமனை களால் - குடியிருத்தற்குவேண்டும்வீடுகளாலும்—குறைபாடுடையதன்று- குறைபடுதலையுடையதன்று—ஆயின்—கொடுப்போர்க்கு—இரப்பாரி ல்லாத—குறையொன்று—உடைத்து—கூறுங்கால் - சொல்லுமிடத்து. எ - று. கொடுப்போர்க்கு இரப்பாரில்லாத குறையொன்றுடைத்தெ ன்ற நிந்தையால், யாவரும் பெருஞ்செல்வத்தராய் வாழ்கின்றாரென் னும் புகழ்ச்சிதோன்றலால், வஞ்சப்புகழ்ச்சியணி. (கசு).

ஈச னளித்த வொருகோட்டி யானைக் கியாங்க ளிணையாயின்
வாச வனைத்தாங் கீரிருகோட் டியானை யெம்மை மானுமெனும்
பாச வுரற்கால் யானையொடு பாண்டி லிழுக்கும் பகடுயரிற்
றேசி னிரதப் பரிசிறந்த வென்னும் பரிக டெருவகலா.

(இ - ள்.) ஈசனளித்த - கடவுளாலே தரப்பட்ட—ஒருகோட்டியானைக்கு - ஒருகொம்பையுடையயானைக்கு—யாங்கள் - (இரண்டுகொம்புகளையுடைய) யாங்கள்—இணையாயின்—வாசவனைத்தாங்கு - இந்திரனைச்சுமக்கின்ற—ஈரிருகோட்டியானை - நாலுகொம்புகளையுடைய யானையானது—எம்மைமானும் - எங்களையொக்கும்—எனும் - என்றுகளிக்கின்ற—பாசவுரற்கால் - கயிற்றாற்கட்டப்படுகிற உரல்போலுங் கால்களையுடைய—யானையோடு - யானைகளோடு—பாண்டிலிழுக்கும் - (இரண்டுருளைகளையுடைய) சகடங்களையிழுக்கின்ற—பகடு - கடாக்கள்—உயரின் - (தம்மி) னுயருமாயின்—தேசினிரதப்பரி - (ஒருருளையையுடைய) சூரியரதத்தை யிழுக்கிறகுதிரைகள்—சிறந்த - (ஒன்றனையுமிழுத்துச்செல்லாத எம்மிற்)சிறந்தனவாகும்—என்னும் - என்றுகளிக்கின்ற—பரிகள் - குதிரைகளானவை—தெருவகலா - வீதிகளினீங்காவாம். எ - று. யானையொடுபரிகளெனக் கூட்டுக. தேசு - ஆகுபெயர். பாண்டில், தேசினிரதமென்றதனையானே இரண்டுருளை ஒருருளையென்பன குறிப்பாற் பெறப்பட்டன. இணையாயின் மானுமெனவும், உயரின் சிறந்தவெனவும் சொல்லுதலால், உய்த்துணர்வைப்பணி. (௧௭)

மறையுங் கலைகள் பற்பலவு முழங்கு மொலியு மங்கலஞ்செய்
பறையுங் குழலும் யாழுமியம் பொலியுங் கரியும் பரிமாவு
நிறையுந் தெருவி லோடுமணித் தேரி னொலியு நிறைகடலி
னறையுந் திரையிற் சென்றுவிசும் பமரர் செவியி னடைந்திடுமால்

(இ - ள்.) மறையும் - வேதங்களும்—கலைகள்பற்பலவும் - அறுபத்துநான்குகலைகளும்—முழங்குமொலியும் - முழங்குகின்ற ஓசையும்—மங்கலஞ்செய் - சுபகாரியங்கள் செய்கின்ற—பறையும் - தோற்கருவிகளையும்—குழலும் - துளைக்கருவிகளையும்—யாழும் - நரப்புக்கருவிகளையும்—இயம்பு - முழக்குகின்ற—ஒலியும் - ஓசையும்—கரியும்பரிமாவும் - யானைகளுங்குதிரைகளுமாகியவிவற்றால்—நிறையும் - நிறைந்திருக்கின்ற—தெருவிலோடும் - வீதியின்கண்ணேஓடுகின்ற—மணித்தேரின் - மணிகளையுடைய தேர்களது—ஒலியும் - ஓசையும்—நிறைகடலின் - (நீரா) னிறை

ந்தகடலினது—அறையும் - (கரையை) மோதுகின்ற—திரையிற்சென்று - அலைகள்போலொன்றோடொன்று தொடர்ந்துசென்று—விசும்பமரர்செவியின் - வானத்திலுள்ளதேவரதுகாதுகளை—அடைந்திடும். எ-று. ஆல் - அசை. அத்தேவரது செவிகளுக்கும் இவ்வொலிகளுக்கும் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தலால், தொடர்புயர்வு நவிற்சியணி. இதுவும் ஒப்பணியுஞ் சேர்ந்துவருதலால், சேர்வையணி.(கஅ)

வேயை நகுமென் சுடர்த்தொடிய தோண்மா துமையை விடைகொண்டு, பேயு மகன்று வரற்கரிய கைலை மலையைப் பிரிந்தெய்தித், தூய மனமுங் கலங்கவருந் தவர்வேள் குவவுத் தோள்வீங்க, மாயை பிறந்த வனவசைமா நகரின் வளத்தை யார்சொல்வார்.

(இ - ள்.) வேயைநகுமென் - (இவை) மூங்கிலைப்பழிக்கின்றனவெனப்படுகிற—சுடர்த்தொடியதோள் - ஒளிபொருந்திய வளைகளை அணிந்த தோள்களையுடைய—மாதுமையை - உமாதேவியிடத்து—விடைகொண்டு - உத்தரம்பெற்றுக்கொண்டு—பேயுமகன்றுவரற்கரிய - பேயும் விட்டுநீங்கிவருதற்கரிய—கைலைமலையைப்பிரிந்து—எய்தி - (இப்பூமியை) அடைந்து—அருந்தவர் - முனிவரானவர்—தூயமனமுங்கலங்க - பரிசுத்தமாகியமனதிலே கலங்குதலடையவும்—வேள் - மன்மதனுனவன்—குவவுத்தோள்வீங்க - குவிவாகிய தோள்களிற் பூரித்தலடையவும்—மாயைபிறந்த—வனவசைமாநகரின் வளத்தை—யார்சொல்வார். எ - று. உமையையென்றது, உருபுமயக்கம். இடவளந்தெரியாதிடுகொட்டி னியங்குகின்ற பேய்க்கு மின்பஞ்செய்தலின் பேயுமகன்றுவரற் கரியுவென்றார். யாரெனவே ஒருவரும் இல்லையென்றதாயிற்று. (கக)

• இது மூ மூன்றுபாட்டுகளில் அந்நகரரசன் சிறப்பு.

இம்மா நகரிற் கரசாகி யிருந்து வாழ்வோ
னம்மால் புணருஞ் செயன்மா தரையாகம் வைத்தல்
சும்மா புகழன்றென விந்தையைத் தோளில் வைத்தோன்
கைம்மாறு வேண்டா மழைபோன் மமகார னென்பான்.

(இ - ள்.), இம்மாநகரிற்கு - இந்தவனவசைமாநகரத்திற்கு—அரசாகியிருந்து—வாழ்வோன்—அம்மால் - அந்நாரணன் —புணருஞ்செயன்மாதரை - கூடுஞ்செயலுக்குரியமாதரை—ஆகம்வைத்தல் - மார்பின்கண்

ணேவைத்திருத்தல் —சும்மா - வீணும் —புகழன்றெனை - புகழைத்தரு வதன்றென்று சொல்லும்படி—விந்தையை - வெற்றித்திருவை—தோ ளில்வைத்தோன்—கைம்மாறுவேண்டா - எதிர்நன்றியை விரும்பாத— மழைபோல் - மேகம்போல்கின்ற —மமகாரனென்பான் - மமகாரனென் று சொல்லப்படுகிற பெயருடையவன். எ - று. புகழைத்தருவதை ப்புகழென்றார். இதுபோல் அதுபுகழுக்குக் காரணமாகாமையால் சும்மா புகழன்றெனவென்றார். (உ0)

இறைதா னளக்குந் திறல்வேந்தர்க் கரிய சீரான்
குறைதா னிரக்கு மவர்க்கோடிக் குறுக நிற்பா
னிறைதான வெற்பு மணிநாகமு நின்று தாங்கும்
பொறைதா னெடுக்கு மிகுமாற்றல் பொருந்து தோளான்.

(இ - ள்.) இறைதானளக்கும - (தனக்குக்) கப்பங்களைச்செலுத்துகின்ற—திறல்வேந்தர்க்கு - வெற்றியையுடைய அரசர்க்கு—அரியசீரான் - காணுதற்கரிய மேம்பாட்டையுடையவன்—குறைதானிரக்குமவர்க்கு—குறையைத்தீர்க்கும்படி யிரப்பவர்க்கு —ஓடிக்குறுகநிற்பான் - விரைந்து போய்க்காணும்படி எளியனாய் நிற்பவன்—நிறைதானவெற்பும் - நிறைந்த மதத்தையுடைய மலைபோலுள்ள அஷ்டகஜங்களும் —மணிநாகமும்-மணியையுடையநவநாகங்களும்--நின்றுதாங்கும்-நின்றுசுமக்கின்ற—பொறை- பூமிபாரத்தை—தானெடுக்கும் - தானொருவனேசுமக்கின்ற —மிகுமாற்றல் பொருந்து - மிகுந்தவலிமைபொருந்திய—தோளான் - தோளையுடையவன். எ - று. நிறைதானவெற்பு ; அன்மொழித்தொகை. (உக)

இரப்பார் வரினோ ரடிஞால மெளிய தன்றிக்
கரப்பார் கரக்கும் பொருளன் றெனவீகை கற்றே
யுரைப்பா ருரைக்கு முரையாவும் புகழில் வைத்தோன்
றரைப்பா லுவமை யிலையாகத் தருக்கி வாழ்வோன்.

(இ - ள்.) இரப்பார்வரின் - (இப்பூமியை) யிரப்பவர்வந்தால்—ஞாலம் - இப்பூமியானது —ஓரடி (நாரணனுக்கு) ஓரடியுளடங்கியது—எளியதன்றி - எளியதல்லாமல்—கரப்பார்கரக்கும்பொருளன்று - உலுத்தராலே மறைத்துவைக்கப்படுகிற பொருளுமன்று—என - என்று நினைக்கும்படி—ஈகைகற்றே - கொடுத்தலைக்கற்று—உரைப்பாருரைக்குமுரையாவும் - சொல்லுவோராலேசொல்லப்படுகின்ற சொற்களையெல்லாம் —புகழில்வைத்தோன் - (தனது) புகழிலே வைத்தவன்—தரைப்பால் - ம

ண்ணுலகில்—உவமையில்லையாக—தருக்கிவாழ்வோன் - செருக்குற்றுவாழ் வோன். எ - று. அம்மறைத்து வைக்கப்படுகிறபொருள்; பொன்மணிமு தலியன. பொருளுமென்னுமெச்சவும்மை தொக்குநின்றது. ஓரடிமண் ணெவ்வளவு மேலும் அரியதுமன்று எனநினைப்பனென்றபடி. அப்படிப் பட்ட ஈகைகற்றலால் அவ்வுரையாவும் புகழில் வைக்கப்பட்டன. "உரை ப்பார் ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன் றீவார்மே னிற்கும்புகழ்" என்றமையானுமறிக. (உஉ)

(இதுமுதல் இரண்டுபாட்டுகளில் அவன்மனைவி சிறப்பு.)

அன்னான் மனைவி வணர்வார் குழலைய வேற்கண்
மின்னார் மருங்கு றளர்ந்தொல்கி மெலிய விம்மிப்
பொன்னார் சுணங்கு விரிபூண் முலைப்பூங் கொம்பன்னா
ளின்னா ரமுத மொழிமோ கினியென்னும் பேராள்.

(இ - ள்.) அன்னான்மனைவி - அப்படிப்பட்ட மமகாரனுடையமனைவி யானவள்—வணர்வார்குழல் - வணங்கிய நெடிய கூந்தலையும்—ஐயவேற்க ண் - அழகியவேல்போலுங்கண்களையும்—மின்னார்மருங்குறளர்ந்தொல்கி மெலிய - மின்னுங்கொடிபோலுள்ளஇடையானது தளர்ந்து அசைந்து வாடும்படி—விம்மி - பருத்து—பொன்னார்சுணங்குவிரி - பொன்போல் கின்றதேமல்படரப்பெற்ற—பூண்முலை - ஆரங்களைக்கொண்டமுலைகளை யுமுடைய—பூங்கொம்பன்னாள் - மலர்க்கொம்புபோல்பவள்—இன்னார முதமொழி - இனிமையானிறைந்த அமிர்தமபோலுஞ் சொல்லையுடை ய—மோகினியென்னுமபேராள் - மோகினி யெனப்படுகிற பெயரையு டையவள். எ - று. (உ௩)

ஒன்றான நம்பன் மருங்கா யிழையுய்த்த மாயை
குன்றாத வாற்றன் முனிவோ ருளங்குன்று மாறு
பொன்றாத பொற்பிங் கிவள்பூங் கருப்போந்து பெற்றா
ளென்றா லிவளுக் கிணையா வினியாரைச் சொல்வாம்.

(இ - ள்.) ஒன்றான - (வேதமுடிவிற்சொல்லப்பட்ட) ஒரேபொரு ளான—நம்பன்மருங்கு - கடவுளதுபக்கத்திருக்கின்ற—ஆயிழை - உமா தேவியால்—உய்த்தமாயை - விடப்பட்ட மாயையானவள்—குன்றாதவா ற்றல் - தளராதவலிமையையுடைய—முனிவோருளம் - முனிவரது மன

ம்—குன்றுமாறு - தளரும்படியாக—பொன்றுதபொற்பு - கெடாதவழ கை—இங்கு - இப்பூமியின்கண்—இவள்பூங்கரு - இவளதுபொலிவுபொ ருந்திய கருப்பத்திலே—போந்து - வந்து—பெற்றுளென்றால்—இவளுக் கிணையா - இவளுக்குஉபமானமாக—இனியாரைச்சொல்வாம். எ - று. ஆயிழை; ஆராய்ந்துகொள்ளப்பட்டஅணியையுடையவளென விரிதலின், அன்மொழித்தொகை. அப்படிப்பட்டமாயை அப்படிப்பட்ட அழகை, இவள் கருப்பத்தையடைந்து பெற்றுளென்ற வாக்கியார்த்தத்தினல் இ வளுக்கொப்பில்லை என்னலைச்சாதித்தலால், செய்யுட்குறியணி. (உச)

வேறு.

(அவ்விருவரும மகவுக்காக நோற்றமை.)

இமமம காரனு மோகினி யென்னு
மைம்மலி மென்குழல் வாள்விழி மாது
மம்மக வின்மையி னாரஞ ரெய்தி
மெய்ம்மெலி நோன்பு விளைத்தன ரன்றே.

(இ - ள்.) இமமமகாரனும்—மைம்மலிமென்குழல் - கருமையானிறைந் த மெல்லிய கூந்தலையும்—வாள்விழி - வாள்போலுங் கண்களையுமுடை ய—மோகினியென்னுமாதும்—அம்மகவின்மையின் - அழகியபிள்ளையில் லாமையால்—ஆரஞரெய்தி - நிறைந்ததுன்பத்தை அடைந்து—மெய்ம்மெ லிநோன்பு - உடல்வாடுதற்கு ஏதுவாகியவிரதத்தை—விளைத்தனர் - செ ய்தார்கள். எ - று. அன்று-ஏ-அசைகள். உடல்வாடுதல்; உண்டிசுருக்க ன் முதலிய வற்ருலென்க.

மமகாரம்; எனதல்லதையெனதாகக்கோடல். மோகம்; பிரியமல்லா ததைப்பிரியமாகக்கோடல். இவ்விரண்டையு மாண்பெண்ணுகக்கற்பித் தது, இதிகாசமாக்கவேண்டி. (௬௫)

(அவள் கருவில் மாயையுற்றமை.)

முன்னிய நோன்புசெய் மோகினி மாதின்
றன்னுத ரத்துமை தண்ணரு ளாலே
மன்னியன் மாரன் வலப்புய மாடக்
கன்னிகை மாண்ய கருப்ப மடைந்தாள்.

(இ -ள்.) முன்னியநோன்புசெய் - (பயன்) கருதப்பட்ட விரதத்தை ச்செய்த—மோகினிமாதின்றன்னுதரத்து - மோகினியாகியமாதினதுவயி

ற்றிலே—உமைதன்னருளாலே - உமாதேவியினது தண்ணியஅருளினு லே—மன்னியன்மாரன் - அரசியலையுடையமன்மதனது—வலப்புயமாட - வலதுதோள்துடிக்க—கன்னிகைமாயை - கன்னிகையாகியமாயையானவள்—கருப்பமடைந்தாள் - கருப்பத்தைச்சேர்ந்தாள். எ - று. ஆடவருக்குத் தோள்வலந்துடிப்பதுபின்வருமகிழ்ச்சிக்கு அறிகுறியாதலின் மாரனுக்குவலப்புயமாடிற்றென்க.

மாயை ; பொருளல்லதைப்பொருளாகக்கொள்ளும்பிராந்தி. (உகூ)

(கருப்பகாலக்குறி.)

முத்தணி கொங்கை முகங்கள் கறுத்தாள
மெய்த்திரு மேனி விளர்த்து நரமபு
பைத்தன மீது பரப்ப விருந்தாள்
பொய்த்துயில் கொண்டு புளிக்கு முவந்தாள.

(இ - ள்.) முத்தணிகொங்கைமுகங்கள் - முத்துவடத்தால் அலங்கரிக்கப்பட்டமுலைகளின்முகங்கள் —கறுத்தாள்—மெய் - வடிவத்தைப்பற்றிய—திருமேனி - அழகியநிறமானது—விளர்த்து—நரமபு - நரம்புகளானவை—பைத்தன - பசுமையுற்றனவாகி—மீதுபரப்ப - (அந்நிறத்தை) மேலே பரப்பாநிற்க—இருந்தாள்—பொய்த்துயில்கொண்டு - பொய்த்தூக்கங்கொண்டு—புளிக்கும் - புளிஞ்சுவையுடையவற்றிற்கும்—உவந்தாள் - மகிழ்ந்தாள். எ - று. முத்து - ஆகுபெயர். கறுத்தலாகிய உயர்திணை தொடர்ந்தசினைவினை அத்திணை முதலோடுமுடிந்தது. முலைமுகங் கறுத்தன் முதலிய சூலுற்றோர்தன்மையைச் சொல்லுதலால், தன்மைநவிற்சியணி. (உஎ)

(கரு வுயிர்த்தமை.)

இன்னண மையிரு திங்க ளிருந்து
பின்னரு மோகினி பெண்மக வீன்று
டன்னிகர் கின்ற சலஞ்சல மொன்றிங்
கின்னொளி முதலினை யீன்றதை யொததே.

(இ - ள்.) இன்னணம் - இவ்வண்ணமாக—ஐயிருதிங்களிருந்து - பத்துமாதமிருந்து—பின்னரு - பின்பு—மோகினி—பெண்மகவீன்றாள் - பெண்பிள்ளையைப் பெற்றாள் —தன்னிகர்கின்றசலஞ்சலமொன்று - தனக்குத்தானே ஒப்பாயுள்ளவலம்புரிச் சங்கமொன்று —இங்கு —இன்னொளி

முத்தினை - இனியவொளியையுடையவொருமுத்தை —ஈன்றதையொத்து: எ-று. பின்னர், உகரச்சாரியை பெற்றது. மோகினி அம்மகவீன்றமை க்குச்சலஞ்சலம் இன்னொளி முத்தீன்றமை உபமானமாதலால், ஒப்பணி.

இவ்விருவர் பாலுமாயையுதித்ததெனல்; மமகாரமுமோகமுமேலிட்ட வவசரத்திலுதிப்பது பிராந்தியெனக்குறிப்பிக்க, மோகினிபெண்மகவீன் றாளென்றார். (உஅ)

(பிறந்தழி விழாவெடுத்தமை.)

சங்கொடு தண்ணுமை சச்சரி தாளம்
வங்கியம் வெந்துடி வார்முர சங்கண்
மங்கல மங்கை மகப்பெறு நாளி
லங்கசன் வெம்முர சென்னவதிர்ந்த.

(இ-ள்.) சங்கு - சங்கமும்—தண்ணுமை - மத்தளமும்—சச்சரி - பிரமதாளமும்—தாளம் - தாளமும்—வங்கியம் - ஊதுகொம்பும்—வெந்துடி - விருப்பஞ்செய்கின்றவுடுக்கையும்—வார்முரசங்கள் - வாரால்இறுக்கப்பட்டமுரசங்களும்—மங்கலமங்கை - நன்மைபொருந்திய மோகினியானவள் —மகப்பெறுநாளில் - பிள்ளைபெற்றநாளிலே —அங்கசன்வெம்முரசென்ன-மன்மதனதுவெவ்வியமுரசமாகியகடல்போல—அதிர்ந்த - ஒலித்தன. எ-று. ஒடு - இசைநிறை. கடலை அதற்குரியசொல்லாற் சொல்லாமற் பிறிதோராற்றாற் கூறுதலால், பிறிதினவிற்சியணி. இது ஒப்பணிக்கு அங்கம். (உகூ)

(இதுவுமது.)

தூண்டொளி போன்மக டோன்ற வுவப்புற்
றாண்டகை மன்னவ னந்தணர் கொள்ளப்
பூண்டுகின் மாமணி பொன்னில மற்றும்
வேண்டின யாவும் வெறுப்ப வளித்தான்.

(இ-ள்.) ஆண்டகைமன்னவன் - ஆண்டன்மையையுடைய மமகாரராசனானவன் —தூண்டொளிபோல் - தூண்டப்பட்ட விளக்குப்போல்—மகள்—தோன்ற—உவப்புற்று - மகிழ்ச்சியடைந்து —அந்தணர்கொள்ள—பூண் - ஆபரணமும்—துகில் - ஆடையும்—மாமணி - பெரியரத்நமும்—பொன் - கனகமும்—நிலம் - பூமியும்—மற்றும் - பிறவும்—(ஆகியவி

வற்றுள்)—வேண்டினயாவும் - (அவரால்) விரும்பப்பட்டவைகளையெல்லாம்—வெறுப்ப - வெறுக்கும்படி—அளித்தான்—கொடுத்தான். எ-று.

வேறு.

(அப்போது மன்மதன்செயல்)

இங்கொரு மாயை யென்னு மெழின்முளை தோன்றலோடும்
பொங்குறு முவகை நெஞ்சம் பொறுக்கல ளுகி யெய்யும்
வெங்கணை மழையுந் தூவு மென்மலர் மழையு மொன்று
வெங்கணு மதன வேணின் றிடையறச் சொரிந்தா னம்மா.

(இ - ள்.) இங்கு - இவ்விடத்தில்—ஒருமாயையென்னும் - ஒருமாயையென்றுசொல்லப்படுகிற—எழின்முளை - அழகினது முளையானது—தோன்றலோடும்-தோன்றியமாத்திரத்தே—பொங்குறுமுவகை - மிகுகின்றமகிழ்ச்சியை —நெஞ்சம்பொறுக்கலளுகி - நெஞ்சினிடத்தே பொறுக்கமாட்டாதவளுகி—எய்யும் - (தன்னுலே) செலுத்தப்படுகின்ற—வெங்கணைமழையும் - வெவ்விய அம்புகளின்மாரியும் —தூவும் - இறைக்கப்படுகின்ற—மென்மலர்மழையும் - மெல்லியமலர்களின்மாரியும்—ஒன்று - ஒன்றுக—மதனவேள் - மன்மதனைவன்—எங்கணுநின்று - எவ்விடத்துந்தானொருவனேநின்று—இடையற - ஒழிவில்லாமல்—சொரிந்தான் -(மலர்களைச்) சொரிந்தான்—அம்மா - ஆச்சரியம். எ - று. எழின்முளை தோன்றலோடுமெனவே, உயர்வொப்பில்லாத அழகே ஒருபெண்வடிவங்கொண்டு பிறந்ததென்றதாயிற்று. ஒருவனே ஒரேகாலத்தில் எங்கு நிற்றலும் துன்பஞ்செய்வதாகிய கணைமழையும் இன்பஞ்செய்வதாகிய மலர்மழையும் ஒன்றேயாதலும் அபூர்வங்களாதலின், அம்மாவென்றார்.

பிராந்திரூபமான மாயை யுதித்ததுகாரணமாகக் காமனெய்தியசேட்டை யினையதெனக்கூறியதென்பது. (கக)

(அப்போது தவஞ்செய்வோர்க்கு நேரிட்ட இடையூறு.)

கண்ணக னிலத்த கங்கைக் கரையிலு முழையி டத்தும்
புண்ணிய வனத்து மெய்திப் புற்றுமாய் மரமா யுற்றுந்
தண்ணிய புனலிற் றீயிற் சார்ந்துமூண் டுயிறு றந்து
பண்ணிய தவத்தோர் நெஞ்சும் பதைத்தன மயலின் மூழ்கி.

(இ - ள்.) (அப்படிசொரிந்தகாலத்து)—கண்ணகனிலத்த - இடமகன்றநிலத்திலுள்ளனவாகிய—கங்கைக்கரையிலும்—முழையிடத்தும் - மலைக்

குகையிடத்தும் —புண்ணியவனத்தும் —எய்தி - சென்று —புற்றுமாய் - மேலேபுற்றுமூடவும்—மரமாய் - மேலேமரமுளைக்கவும் —உற்றும்-யோகத்திலிருந்தும் —தண்ணியபுனலில் - (பனிக்காலத்திலே) குளிர்ந்தநீரிலும்—தீயில் - (வேனிற்காலத்திலே) பஞ்சாக்கினிநடுவிலும் — சார்ந்தும் - சேர்ந்தும்—ஊண்டுயி றுறந்து - ஆகாரநித்திரைகளை ஒழித்து—பண்ணிய - செய்யப்பட்ட —தவத்தோர் - தவத்தையுடைய முனிவரது—நெஞ்சும் - மனங்களும்—மயலின்மூழ்கிப்பதைத்தன. எ - று. ஆய் இரண்டும், வினையெச்சத்திரிபு. புண்ணியவனம், நைமிசமுதலியன.

அச்சேட்டையாலெய்தும்பய னினையதெனக்கூறியதென்பது. (௯௨)

(அவர் அதற்குக் காரணமாராய்ந் திருந்தமை.)

ஐம்பெரும் பூத மெல்லா மடுக்கழிந் தொழியும் போதுங்
கம்பமி னமது நெஞ்சங் கலங்கிய தென்னை கொல்லோ
வம்புறு செயலீ திங்கு வந்தவா றெவ்வா றென்றுச்
செம்பொரு ளுணர்ந்த சீர்சால் செய்தவ ரிருந்த காலை.

(இ - ள்.) ஐம்பெரும்பூதம் - பஞ்சமகாபூதங்களும்—எல்லாம் - அவற்றைப்பற்றியசராசரங்களும்—அடுக்கழிந்தொழியும்போதும் - நிற்குநிலைகுலைந்து அழியவருகிறமுடிவுகாலத்திலும்—கம்பமில் - நடுக்கமில்லாத—நமதுநெஞ்சம்—கலங்கியதென்னைகொல் - (இப்போது) கலங்கியதற்குக் காரணம யாதோ —வம்புறுசெயலீது - அபூர்வமாகிய இச்செய்கையானது—இங்குவந்தவாறு - இங்கேவந்தவழி—எவ்வாறென்று - எவ்வழியென்று—செம்பொருளுணர்ந்த - தத்துவப்பொருளை அறிந்த—சீர்சால்- சீரால்நிறைந்த—செய்தவர் - முனிவர்—இருந்தகாலை - இருந்தசமயத்து. எ - று. ஓ - அசை.

அவ்விபரீதம் வருதற்கேதென்னையெனவிசாரணைபிறந்ததென்க.(௯௩)

(அப்போது தூர்வாசர்வந்தமை.)

தளர்ந்துழி யுதவுங் கல்வி தானெனத் துருவா சப்பேர்
கொளுந்தனி முனிவர் கோமான் குறுகலு முனிவ ரெல்லா
முளங்களி வரநின் றேதி யுயர்தவி சிடையி ருத்தி
வளங்கெழு மலர்க டூவி வந்தனை செய்து சொல்வார்.

(இ - ள்.) தளர்ந்துழி - சோர்வுற்றவிடத்து—உதவுங்கல்விதானென - உதவுகின்றவித்தைபோல—துருவாசப்பேர்கொளும் - தூர்வாசனென்கி

ற நாமதேயத்தைக்கொண்ட—தனி - ஒப்பற்ற —முனிவர்கோமான் - முனிவர்களிற்சிறந்தவன்—குறுகலும் - தம்மிடத்துச் சமீபித்தலும்—முனிவரெல்லாம்—உளங்களிவர - (அவர்) மனமகிழும்படி—நின்று—வந்தி - துதிசெய்து—உயர்தவிசிடையிருத்தி - உயர்வாகிய ஆசனத்தின்மேலிருந்தருளப்பண்ணி—வளங்கெழுமலர்கள் - சிறப்புப்பொருந்தியமலர்களை—தூவி -(அவர்திருவடிகளிலே) சொரிந்து—வந்தனைசெய்து - தொழுது—சொல்வார் - (இதனைச்) சொல்வார். எ - று. சோர்வுற்றவிடத்துதவலாவது ; ஆபத்துவேளையிலே வந்து அதனைநீக்குதற்கான உபாயத்தைத் தருதலாம். (௯௪)

(முனிவர்கள் வினா.)

என்றுமெம் முள்ள மெல்லா மெழுதிய விளக்குப் போல
நின்றிடு மின்றென் கொல்லோ நிலைதடு மாறு நின்ற
தென்றன்முன் னிருந்த செய்ய சிறுசுடர் போல வைய
நன்றிதை யுணரு மாறு நவின்றருள் செய்தி யென்றார்.

(இ - ள்.) ஐய - ஐயனே—என்றும் - எக்காலத்திலும்—எம்முள்ளமெல்லாம - எம்முடைய மனங்களெல்லாம்—எழுதியவிளக்குப்போல - சித்திரதீபம்போல—நின்றிடும் - அசையாதிருக்கும்—இன்றென்கொல் - இன்றைக்கு என்னகாரணத்தினலோ—தென்றன்முன்னிருந்த - மந்தானிலத்தின்முன்னிருந்த—செய்யசிறுசுடர்போல - செவ்வையாகிய சிறியவிளக்குப்போல —நிலைதடுமாறுநின்ற - அசைகின்றன—நன்று - நன்றாக—இதையுணருமாறு - இதனையாங்கள் அறியும்படி—நவின்று - சொல்லி—அருள்செய்தியென்றார் - அருள்செய்யென்றார். எ - று. ஓ - அசை. மெல்லியநடையதாய் அவிக்கமாட்டாமைபற்றித் தென்றல் சொல்லப்பட்டது. ஒப்பணி. (௯௫)

(அதற்கு அவருத்தரம்.)

சங்கரி யொருகு ளாற்றன் றமோகுண வடிவ மாயை
மங்கையை விடுப்ப வன்னுள் வனவசை நகரிற் பிள்ளைத்
திங்களி னுதித்தா ளின்று செய்தவக் கிழமை பூண்டீ
ருங்கணெஞ் சதனு லாற்ற லுடைந்ததென் றவனு ரைத்தான்.

(இ - ள்.) செய்தவக்கிழமைபூண்டீர் - செயப்படுகின்ற தவவுரிமையை மேற்கொண்டவரே—சங்கரி - பார்வதியானவள்—ஒருகுளால் -(க

டவுளோடு செயப்பட்ட) ஒருசபதத்தினால்—தன்றமோகுணவடிவம் - தனதுதமோகுணவடிவமாகிய —மாயைமங்கையை - மாயையென்னும் பெயருடைய மங்கையை—விடுப்ப - அனுப்ப—அன்னாள் - அவள்—வன் னைசநகரில்—இன்று—பிள்ளைத்திங்களின் - இளஞ்சந்திரன்போல்—உ தித்தாள் - பிறந்தாள்—உங்கணெஞ்சு—அதனால்—ஆற்றலுடைந்ததென் று - வலிமையழிந்ததென்று—அவன் - அம்முனிவன்—உரைத்தான் - (அவர்களுக்குச்) சொல்லினான். எ - று. (௩௬)

(அதனை அங்கீகரித்தமை.)

அருந்தவ முனிநீ கூறிற் றுண்மையே யன்றி யெங்கள்
பெருந்தவ முயலு நெஞ்சம் பிறழ்தராற் கேது வில்லை
யிருந்துளம் வருநதி யாய்ந்த வெம்மிடை யைய மெல்லாம்
பரிநதன வருளா னீயெம் பால்வரு கையினா லென்று.

(இ - ள்.) அருந்தவமுனி - செய்தற்கரிய தவத்தையுடைய முனி யே—நீகூறிற்று - உன்னாலேசொல்லப்பட்டது—உண்மையே—அன்றி - அல்லாமல்—பெருந்தவமுயலும் - பெரியதவத்தை முயலுகின்ற—எங்க ணெஞ்சம் - எம்முடையமனங்கள்—பிறழ்தராற்கு - கலங்குதற்கு—ஏதுவி ல்லை - வேறொருகாரணம் இல்லை—இருந்து - (இங்கே) யிருந்து—உளம் வருந்தி - நெஞ்சம் வருத்தமுற்று—ஆய்ந்த - ஆராய்ந்த—எம்மிடையைய மெல்லாம் - எம்மிடத்துள்ள சந்தேகமெல்லாம்—அருளால்—நீ—எம்பா ல் வருகையினால் - எம்மிடத்து எழுந்தருளலால்—பரிந்தனவென்று -க ளையப்பட்டனவென்று சொல்லி. எ - று. வினைமுற்று - செயப்பாட் டு வினைப்பொருளில் வந்தது. (௩௭)

(அதனை விரித்துரைத்தமை.)

முனிவரர் துருவா சப்பேர் முனிவர்கோன் றனைவ ழுத்திப்
பனிமலை வல்லி யேவப் பட்டெழின் மாயை யென்னும்
வனிதையிவ் வுலகில் வந்த வாறுநீ விரித்தி யாங்க
ளினிதுணர் வுறுமா றேது கென்றலு மவனு ரைப்பான்.

(இ - ள்.) முனிவரர்—துருவாசகப்பேர் - தூர்வாசனெனப்படுகின் ற பேயரையுடைய—முனிவர்கோன்றனை - முனிவரிற்சிறந்தோனை—வ ழுத்தி - துதித்து—பனிமலைவல்லி - உமாதேவியினாலே—ஏவப்பட்டு -

செலுத்தப்பட்டு—எழில் - அழகையுடைய—மாயையென்னும்—வனிதை - மாது—இவ்வுலகில்—வந்தவாறு - வருதற்கு உண்டாகியகாரணத்தை—யாங்கள்—இனிது - இனிதாக—உணர்வுறுமாறு - அறியும்படிக்கு—நீ—விரித்து—ஓதுகென்றலும் - சொல்லுகவென்றலும்—அவன்—உரைப்பான் - சொல்லுவான். எ - று. (௬அ)

(அவ்வாறுரைத்தமை.)

கயிலையோ லக்கத் துற்ற கண்ணுத லல்ல மன்ற
னியல்பினை யறிக நேற்று யென்றுமை யுடனுரைப்ப
மயிலிய லறிவ லென்று மாயையை விளக்கைக் காண்பான்
பயிலிரு ளினைவிடுத்த பரிசென விடுத்தா ளன்றே.

(இ - ள்.) கயிலை - கயிலாசகிரியில்—ஓலக்கத்துற்ற - திருக்கூட்டத்திலிருந்த—கண்ணுதல் - கடவுள்—அல்லமன்றனியல்பினை - அல்லமனது தன்மையை—அறிதநேற்றுயென்று - நீ அறியமாட்டாயென்று—உமையுடன்—உரைப்ப - சொல்லினராக—மயிலியல் - மயில்போலுஞ்சாயலையுடையஅவ்வுமையானவள்—அறிவலென்று-அறியமாட்டுவேனென்று—விளக்கை—காண்பான் - கண்டுவருதற்பொருட்டு—பயிலிருளினைவிடுத்தபரிசென - அதுஇல்லாதவிடத்தேதங்கிய இருளைவிடுத்தவிதம்போலுமென—மாயையைவிடுத்தாள். எ - று. கண்ணுதல், மயிலியல், அன்மொழித் தொகைகள். (௬௯)

(அவ்விடையூறு நீக்குமாறு கூறினமை.)

காரண மிதுவே யெங்கோன் கைலையை விடுத்து மாயை
தாரணி தனில்வ ரற்குத் தக்கவம் மாயை யென்னு
மாரண விடங்க லந்த மயக்கமல் லமனென் றிட்ட
பேரணி கலுழன் றன்னை நினைந்திடிற் பெயரு மன்றே.

(இ - ள்.) மாயை—எங்கோன்கைலையைவிடுத்து - எமதுகடவுளதுகைலாசத்தைவிட்டு—தாரணிதனில் - பூமியில்—வரற்கு - வருதலுக்கு—காரணம்—இதுவே—தக்க - (அப்படிவருதலுக்குத்) தகுந்த—அம்மாயையென்னும்—மாரணவிடம் - மரணத்தைச் செய்கின்ற நஞ்சானது—கலந்த - கலத்தலாலாகிய—மயக்கம்—அல்லமனென்றிட்ட—பேரணி - பேரையணிந்த—கலுழன்றன்னை - கருடனை—நினைந்திடின் - தியானித்தால்—பெ

யரும் - நீங்கிப்போம். எ - று. அன்று - ஏ - அசைகள். காருடமந்திர தியானத்தால் விஷரோகம் தீர்தலின் இங்ஙனம் ரூபகஞ்செயப்பட்டது.

(இதுவுமது.)

பிணிதப வேண்டில் வாழுநாள பெரிதுற வேண்டிற் செல்வ
மணிதர வேண்டிற் கல்வி யறிதர வேண்டில் வானம்
பணிதர வேண்டின் முத்திப் பயன்பெற வேண்டி லென்று
மிணையுறு மல்ல மப்பே ரெந்தையை நினைப்ப ரொன்று.

(இ - ள்.) பிணிதபவேண்டில் - நோய்கெடவேண்டினும்—வாழ்நாள் பெரிதுறவேண்டில் - ஆயுள்மிகுதியாயுறவேண்டினும் —செல்வமணிதரவேண்டில் - செல்வமடையவேண்டினும் —கல்வியறிதரவேண்டில் - கல்வியைக்கறகவேண்டினும்—வானம்பணிதரவேண்டில் - விண்ணுலகத்தார்வணங்கவேண்டினும் —முத்திப்பயன் பெறவேண்டில் - முத்தியாகிய பயனைப் பெறவேண்டினும் —என்றும்—இணையறும் - ஒப்பறறிருக்கின்ற—அல்லமப்பேர் - அல்லமனென்னும் பெயரையுடைய—எந்தையை - எம்முடையசுவாமியை —நினைப்பரொன்று - தியானஞ்செய்வாரொன்று. எ - று. (சக)

புகன்றவ ருளத்திற் றுன்பம் போக்குபு துருவா சன்று
னகன்றுதன் னிடத்த டைந்தா னன்றுதொட் டருந்த வத்தோர்
மகிழ்ந்தரு ளல்ல மனறன் மலரடி மனத்திற் றங்கி
யுகந்தவன் புகழாய் வந்த வாறெலா முரைக்க லுற்றார்.

(இ - ள்.) புகன்று - சொல்லி —அவருளத்திற்றுன்பம - அவரதுமனத்திலுள்ளதுக்கத்தை—போக்குபு - நீக்கி—துருவாசன்றுன்—அகன்று - (அவ்விடத்து) நீங்கி—தன்னிடத்தடைந்தான்—அன்றுதொட்டு - அத்தினந்தொடங்கி—அருந்தவத்தோர்—மகிழ்ந்து—அருளல்லமன்றன் - அருள்வடிவாகியஅல்லமனது—மலரடி - தாமரைமலர்போ லுள்ளதிருவடிகளை—மனத்தில்—தாங்கி—உகந்து-விரும்பி—அவன்புகழாய்—வந்தவாறெலாம் - வந்தவிதமெல்லாம் —உரைக்கலுற்றார் - சொல்லலுற்றார். எ-று.

(அது நீங்கினமை.)

நெஞ்செனு மகவி லன்பா நெய்நிறைத் துள்ளு மென்னும்
பஞ்சுறு திரியி னுச்சி பற்றிட வல்ல மப்பே

ரஞ்சுட ரிலக வேற்றி யருந்தவர் மாயை யென்னுந்
துஞ்சிரு ளகன்றி ருந்தார் தொல்லைமா தவங்கள் செய்து.

(இ - ள்.) நெஞ்செனுமகலில் - மனமாகியதகளியின்கண்—அன்பாநெய்நிறைத்து—பத்தியாகிய நெய்யைநிரப்பி—உள்ளமென்னும் - கருத்தாகிய—பஞ்சுறுதிரியினுச்சி-பஞ்சாலியன்றவர்த்தியினுச்சியில்—பற்றிட—அல்லமப்பேர் - அல்லமனெனப்படுகின்றபெயரையுடைய—அஞ்சுடர் - அழகியவிளக்கை—இலகவேற்றி - விளங்கும்படி ஏற்றி—அருந்தவர் - முனிவர்—மாயையென்னும் - மாயையாகிய—துஞ்சிருளகன்று - அழிவுக்கு ஏதுவாகிய இருணீங்கப்பெற்று—தொல்லைமாதவங்கள் - பழையமாதவங்களை—செய்து—இருந்தார். எ - று. உருவகவணி. (சந)

மந்தர கிரிப்பேர் பெற்ற மதந்தெறி கடல்போ லையர்
சிந்தனை கலங்கி மெல்லத் தெளிந்தமை தெரிந்து ரைத்தாம்
வந்துமண் பிறந்த வன்றே மாதவர் மனங்க லக்கும்
வெந்திறன் மமகா ரன்றன் மகடிறம் விளம்ப லுற்றும்.

(இ - ள்.) மந்தரகிரிப்பேர்பெற்றமத்து - மந்தரகிரியென்னும் பெயரைப்பெற்றமத்தினால்—எறி - கலக்கப்பட்ட—கடல்போல்—ஐயர்சிந்தனை - முனிவரதுமனங்கள்—கலங்கி—மெல்லத்தெளிந்தமை - மெள்ளத்தெளிந்தவிதத்தை—தெரிந்துரைத்தாம் - தெரிந்துசொல்லினேம்—மண் - பூமியினிடத்து—வந்துபிறந்தஅன்றே—மாதவர்மனம் - முனிவரதுமனத்தை—கலக்கும் - கலக்கிய—வெந்திறல் - வெவ்வியவலிமையையுடைய—மமகாரன்றன் - மமகாரராஜனது—மகடிறம் - புதல்வியினதுசெய்தியை—விளம்பலுற்றும் - சொல்லத்தொடங்கினேம். எ - று. ஒப்பணி.

(தந்தைநாமகரணமுதலியசெய்தமை.)

காந்தம் வலியு மிரும்புபோற் கண்க டன்னோ டுறப் பிணித்து
நேர்ந்த மனமோ ரணுவென்ன னியாய மன்றென் றம்மனத்திற
போந்த வாசைப் பெருங்கடலைப் புகட்டு மகளைக் கண்டுவந்து
வேந்தன் மாயை யெனுநாமம் விளம்பிச் சிறப்புப் பலசெய்தான.

(இ - ள்.) காந்தம் - காந்தக்கல்லினாலே—வலியும் - ஈர்க்கப்படுகின்ற—இரும்புபோல் - இரும்பானதுஅதனோடுபோல்—கண்கள் - பார்வைகள்—தன்னோடுற—பிணித்து - கட்டிக்கொண்டு—நேர்ந்தமனம் - (யாவு

ங்கொள்ளுதற்கு) இயைந்தமனம்—ஒரணுவென்னல் -(நியாயநூலோர்) ஒருபரமாணுரூபமென்றுசொல்லுதல் —நியாயமன்றென்று —அம்மனத்தில்—போந்த—(தன்னைப்பற்றி) உண்டாகிய —ஆசைப்பெருங்கடலை - ஆசையாகியபெரியகடலை—புகட்டும் - புகவிடுகின்ற —மகளைக்கண்டு—உவந்து - மகிழ்ந்து—வேந்தன் - மமகாரராசன்—மாயையெனுநாமம்—விளம்பி - சொல்லி—பலசிறப்பு - மற்றுமுள்ளபலசடங்குகளையும் —செய்தான். எ - று. ஒப்பணியும், ஆசைக்கடலாகியபெரியஆதேயத்தினும்மனமாகியஆதாரத்தைப் பெரிதாகக்காட்டலால், பெருமையணியும்சேர்வை.

(இதுமுதல் - ச - பாட்டுகளில் மோகினிமகளைவளர்த்தமை.)

**மா**யைப் பெயர்கொண் மகளைநறு மஞ்ச டிமிர்ந்து கணைக்காலி
னேயக் கிடத்தி நீராட்டி யிணைக்க ணுந்தி நீறூதி [தழுவி
நேயத் துகிலின் மெய்துடைத்து நெகிழுமென் முலையோ டுறத்
வாயிற் றிவலை கொடுதேய்த்து மண்பொட் டணிந்து நீறிட்டு.

(இ - ள்.) மாயைப்பெயர்கொண்மகளை—நறுமஞ்சடிமிர்ந்து - பரிமளமஞ்சள்பூசி —கணைக்காலினேயக்கிடத்தி - கணைக்கால்களின் மேற்பொருந்தக்கிடத்தி—நீராட்டி—இணைக்கணுந்தி - இரண்டுகண்களிலுமஅதுவிழாமலொதுக்கி —நீறூதி - உச்சிநீரையூதி —நேயத்துகிலின்மெய்துடைத்து—விருப்பஞ்செயப்பட்ட ஆடையினாலே உடம்பைத்துடைத்து —நெகிழ்மென்முலையோடுறத்தழுவி - தளர்ந்தமெல்லியமுலைகளோடு சேரத்தழுவி —வாயிற்றிவலை கொடுதேய்த்துமண்பொட்டணிந்து - வாயினெச்சிற்றுளிகொண்டிழைத்துநிலப்பொட்டிட்டு—நீறிட்டு - திருநீற்றுக்காப்பிட்டு. எ - று. தன்மைநவிற்சியணி. இதுமுதல் நான்குபாட்டுக்கள் ஒருதொடர். (சகூ)

**க**ண்ணிற் கமைய மையெழுதிக் காற்குச் சதங்கை பொற் றண்டை, நண்ணப் புனைந்து பொன்னரைஞா ணடுவிற் பூட்டிப் புலியுகிர்சேர், வண்ணப் பசும்பொ னணிமார்பில் வனைந்து சிறுமென் றொடிசேர்த்திப், பெண்ணிற் கரசி திருநுதற்பொற் பிறைமேற் சுட்டி யொன்றணிந்து.

(இ - ள்.) கண்ணிற்கமையமையெழுதி - கண்களுக்கு (அழகு) நிறையஅஞ்சனந்தீட்டி—காற்குச்சதங்கை பொற்றண்டை நண்ணப்புனைந்து-கால்களுக்குச்சதங்கைகளையும் பொன்னாலாகிய தண்டைகளையும் பொருந்து

ம்படி அணிந்து—பொன்னரை ஞாணவிற் பூட்டி - பொன்னாலாகிய சூ டிசூத்திரத்தை இடையிலே பூட்டி—புலியுகிர் சேர்வண்ணப்பசும்பொன ணிமார்பில்வனைந்து - புலிநகஞ்சேர்ந்த அழகிய பசிய பொன்னாலாகிய பதக்கத்தைமார்பிலே அணிந்து—சிறுமென்றொடிசேர்த்தி - சிறிய மெ ல்லிய வளையல்களைச் சேர்த்தி — பெண்ணிற்கரசி - பெண்களுக்கு அரசி யாகிய அவளது—திருநுதற்பொற்பிறைமேற் சுட்டியொன்றணிந்து - அ ழகிய நெற்றியாகிய பொன்னிற முடைய பிறையின்மேலே சுட்டியொ ன்று கட்டி. எ - று. வளையலுக்கு மென்மை வழுவமைப்பு. இதுவும் அவ்வணி. (எஎ)

போக்கும் பொருளாற் கண்மிச்சில் போக்கி யன்பான் மு லையூட்டித், தூக்கும் பவளக் காற்பசும் பொற் றொட்டின் மலியக் கிடத்தியே, பார்க்குஞ் சுவைவா னமுதமே பார்வேந் தணியே யென்றுயரந், தீர்க்குங் கரும்பே கண்மணியே திருவே யென்று சீராட்டி.

(இ - ள்.) போக்கும்பொருளாற்கண்மிச்சில் போக்கி - போக்குதற்கு ரியபொருளினலே பார்வையால் வந்தகுற்றத்தைப் போக்கி—அன்பான் முலையூட்டி - ஆசையோடுமுலைப்பாலையுண்பித்து —தூக்கும்பவளக்காற்ப சும்பொற்றொட்டின்மலியக்கிடத்தி - தூக்கப்பட்ட பவளக்கால்களையுடை ய பசிய பொன்னாலாகிய தொட்டில் நிறையும்படி படுக்கவைத்து —பார் க்குஞ் சுவைவானமுதமே - பார்த்துமகிழ்கின்ற சுவையையுடைய திவ்வி யமான அமிர்தமே—பார்வேந்தணியே - உலகத்தை ஆளுகிற அரசனுக் கு அழகுசெய்பவளே—என்றுயரந்தீர்க்குங்கரும்பே - எனது (மகவில்லை யென்னும்) துக்கத்தை ஒழித்த கரும்பே—கண்மணியே—திருவே—என் று —சீராட்டி. எ - று. போக்கும்பொருள் ; செஞ்சோற்றுநீர் முத லியன். (எஅ)

மிடிய னொருசெய் யாளனச்செய விளையக் காக்குஞ் செயல் போலப், படியில் கல்வி விரும்பினேன் பாடம போற்று மதுபோ ல, வொடிவில் செங்கோன் மனுவேந்த னுலகம் புரக்கு முறை போலக், கொடிய நோன்பு செய்தீன்ற கொடியை வளர்த்தாண் மோகினியே.

(இ - ள்.) மிடியன் - வறியனுகிய—ஒருசெய்யாளன்-ஒருவயலையுடை யவன் —அச்செய்விளைய - அவ்வயல்பயன்றரும்படி —காக்குஞ்செயல்

போல - காப்பாற்றுகின்றசெய்கைபோலவும—படியில்கல்வி - ஒப்பில்லா தவித்தையை—விரும்பினேன்—பாடம்போற்றுமதுபோல - பாடத்தை க்காப்பாற்றுகின்றசெய்கைபோலவும் —ஒடிவில்செங்கோல் - கெடுதலி ல்லாதசெங்கோலையுடைய—மனுவேந்தன் - மனுநூல்வழிநடக்கின்ற அர சன்—உலகம்புரக்கு முறைபோல - உயிர்களைக் காப்பாற்றுகின்ற செய் கைபோலவும் —மோகினி —கொடியநோன்புசெய்கின்ற - வருத்தத்திற் கேதுவாகியவிரதங்களைச்செய்து பெற்ற—கொடியை - பூங்கொடிபோன் றமகளை—வளர்த்தாள். எ - று. மனு, கொடி, ஆருபெயர்கள். மோகினி அம்மிடியன்முதலியோர்செய்முதலியவற்றைப்போல் மகளை ஒழிவின்றி த் தன்மனமுழுதும் அவளிடத்தேவைத்து நல்லனவெல்லாஞ்செய்து தீய னவெல்லாம் போக்கி வளர்த்தலின் இங்ஙனம் உவமித்தார். (௯௬)

(இதுமுதல் நான்குபாட்டுகளில் மாயைவளர்ந்தசிறப்பு.)

கள்ள மாயை தன்னெழில்போற் கண்ட தில்லையென்னமிக, வுள்ளம் வியந்து தலையசைப்ப தொப்ப வசையுஞ் சுடர்பார் த்து, மெள்ள விரலொன் றனைச்சுவைத்து மிளிர்பூஞ் சதங்கை த் தாளுதைத்து, விள்ளு மலர்வாய் குவித்தழுது மீள நகைத்து ங் கிடக்குமால்.

(இ - ள்.) கள்ளமாயைதன்னெழில்போல் - வஞ்சகமுடையமாயை யினழகுபோல் —கண்டதில்லையென்ன - (யான்) பார்த்ததில்லையென் று—மிகவுள்ளம்வியந்து - மிகவும் உள்ளத்திலே ஆச்சரியப்பட்டு—தலைய சைப்பதொப்ப - சிரமசைப்பதுபோல—அசையும்—சுடர்பார்த்தும் - வி ளக்கைப்பார்த்தும் —விரலொன்றனை —மெள்ளச்சுவைத்தும்—மிளிர்பூ ஞ்சதங்கை - விளங்குகின்ற அழகிய சதங்கையையுடைய—தாளுதை த்து - கால்களையுதைத்துக்கொண்டு—விள்ளுமலர்வாய்-விரிந்தமலர்போ லும்வாயை—குவித்தழுதும்—மீளநகைத்தும் - திரும்பச்சிரித்தும்—கிடக் கும். எ - று. ஆல் - அசை. அவ்விளக்கை அப்படிதலையசைப்பதாகக் குறித்தலால், தற்குறிப்பணியும், சுடர்பார்த்தல் முதலியசூழ்ந்தைசாதித் தன்மையைச்சொல்லுதலால், தன்மைநவிற்சியணியும் சேர்ந்துவந்தன.

மாயை கவிழ முகங்கவிழ்ந்த மதன னிருந்தா னவளிருப் பப், போய சிலையொன் றெடுத்தெழுந்தான் பொன்னு லியன்ற பாவையெழ, மேய வணங்க வேண்டாந்தான் வேந்தன் பயந்த ம.

கணடப்பத், தூய தவஞ்செய் தைந்தவித்த துறவி னோர்பா லோடினான்.

(இ - ள்.) மாயை—கவிழ - முகங்கவிழ்பருவமடைய —முகங்கவிழ்ந்த மதனன் - (அதற்கு முன்னே நாணத்தால்) முகங்கவிழ்ந்துகிடந்தமன்மதன்—இருந்தான் - உட்கார்ந்தான்—அவள்—இருப்ப - உட்காரும்பருவமடைய —போயசிலையொன்று - (அவன்) கைவிட்டுப்போனவில்லொன்றை—எடுத்து—எழுந்தான் —பொன்னலியன்றபாவை-பொன்னினலாகிய பாவைபோலுள்ள அவள்—எழ - எழுந்துநிற்கும்பருவமடைய —மேயவனங்கவேள் - விரும்பப்பட்ட அம்மன்மதன்—நடந்தான் —வேந்தன் பயந்தமகள் - அரசனீன்ற மகளாகிய அவள்—நடப்ப - நடக்கும்பருவமடைய—தூயதவஞ்செய்து - பரிசுத்ததவத்தைச்செய்து—ஐந்தவித்த - ஐந்தாசையுமொழித்த—துறவினோர்பால் - முனிவரிடத்துக்கு—ஓடினான். எ - று. பின் பின்னாகச்சொல்லப்பட்ட மன்மதனது இருத்தல் முதலியவற்றுக்குமுன் முன்னாகச்சொல்லப்பட்ட மாயையினதுகவிழ்தன்முதலியவற்றைக்காரணங்களாகச்சொல்லலால், காரணமாலையணி. (நக)

குழலும் யாழு மினியவெனக் கூறு வண்ண மென்கனிவாய் மழலை மொழிந்து முடற்கின்ப மருவ வோடி மேல்விழுந்தும் விழையு மமிழ்தின் மிகவினிமை விளைய நுகருஞ் சுவையடிசில் செழிய சிறுகை யாலளைந்துஞ் செய்தாண் மோக மீன்றோரை.

(இ - ள்.) குழலும் - புள்ளாங்குழலிசையையும்—யாழும் - வீணையினிசையையும் —இனியவெனக்கூறுவண்ணம் - இன்பந்தருவனவென்று சொல்லாதபடி —மென்கனிவாய் - மெல்லியகனிபோலுள்ள வாயினல்—மழலைமொழிந்தும் - உருத்தெரியாச்சொற்களைப்பேசியும்—உடற்கின்பமருவவோடி - உடம்புக்கு இன்பமுண்டாகவோடி —மேல்விழுந்தும்—விழையுமமிழ்தின் - விரும்பப்படுகின்ற அமிர்தத்தைக்காட்டிலும்—மிகவினிமைவிளைய - மிகவும் இன்பம்பயக்க—நுகருஞ்சுவையடிசில் - உண்ணப்படுகின்ற அறுசுவையுண்டியை—செழியசிறுகையால் - செழுமைபொருந்திய சிறியகைகளால்—அளைந்தும் - குழப்பியும்—ஈன்றோரை - ஈன்றோருக்கு—மோகஞ்செய்தாள். எ - று. குழல் - யாழ் - ஆகுபெயர்கள். ஈன்றோரையென்றது உருபுமயக்கம். திருக்குறளில் "குழலினிதியாழினி தென்ப தம்மக்கண் மழலைச்சொற் கேளாதவர்" எ-ம். "மக்கண்மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர் சொற்கேட்டலின்பஞ் செவிக்கு"

எ - ம். "அமிழ்தினுமாற்ற வினிதேதம்மக்கள் சிறுகையளாவிய கூழ்." எ - ம், சொல்லப்பட்டமைகாண்க. தன்மை நவிற்சியணி. (நஉ)

பரவு பெருஞ்சீ ரல்லமனைப் பற்ற வந்த மதியாற்றன்
னுருவ நிழலைப் பற்றநினை ந்தோடியோடிக் கலுழ்ந்திடுவாள்
பொருவின் மதிய மேன்முனிந்து பொங்கு மழலை வீசாமன்
மருவி யுறவு கொள்வாள்போல் வாவா வென்ன வழைத்திடுவாள்.

(இ - ள்.) பரவுபெருஞ்சீரல்லமனை - (உலகமுழுதும் பரவியபெரியசீ ரையுடைய அல்லமனை—பற்றவந்தமதியால் - பிடிக்கவந்தமதிபோன்ற மதியினலே —தன்னுருவ நிழலைப்பற்றநினைந்து - தனதுவடிவத்தின் சாயையைப்பிடிக்க நினைந்து—ஓடியோடி—கலுழ்ந்திடுவாள் - அழுவாள். பொருவின்மதியம் - ஒப்பில்லாத சந்திரனனவன்—மேல் - பிற்காலத்தில்—முனிந்து - கோபித்து—பொங்குமழலைவீசாமல் - கொதிக்கின்ற நெருப்பை வீசாதிருக்கும்படி—மருவி - அடுத்து —உறவுகொள்வாள்போல்—வாவாவென்ன அழைத்திடுவாள். எ - று. மதி; ஆகுபெயர். அது குறிப்பினலே பேதைமையையுணர்த்தி நின்றது. உருவநிழலைப்பற்றன் முதலிய தன்மை நவிற்சியும், அப்படியழைப்பவளிடத்தே அவ்வுறவுகொள்ளாது தன்மையைக் குறித்தலால் *தற்குறிப்பும் சேர்ந்துவந்தன. ()

(அவள் பெதும்பைப் பருவமடைந்தமை.)

மாதிப் பரிசு தந்தைதாய் மகிழ வளர்வுற் றரசிருந்த, நீதிக் கிழவ னிறப்பவவ னெறிசே ரிளஞ்சே யவன் றவிசின், மீதுற் றதுபோன் முன்முளைத்த வெண்பல் விழவே றெயிறுதிப்பப், பேதைப் பருவங் கடந்துமேற் பெதும்பைப் பருவ நண்ணினாள்.

(இ - ள்.) மாது - மாயையானவள்—இப்பரிசு - இவ்விதமாக —தந்தைதாய்மகிழ—வளர்வுற்று - வளர்ந்து—அரசிருந்த - அரசுசெய்திருந்த—நீதிக்கிழவனிறப்ப - அரசனவனிறக்க—அவனெறிசேர் - அவன் வழியிற்றோன்றிய —இளஞ்சேய் - இளம்புதல்வனனவன் —தவிசின் மீதுற்றதுபோல் - அவனது சிங்காதனத்தின்மே லிருக்கிறதுபோல் —முன்முளைத்தவெண்பல்விழ—வேறெயிறுதிப்ப - (அது இருந்தவிடத்தே)வேறுபல்முளைக்க—பேதைப்பருவங்கடந்து—மேல் - (அதற்கு) மேல்வருவதாகிய —பெதும்பைப்பருவம் —நண்ணினள் - அடைந்தாள்.

எ - று. ஒப்பணி. பேதை ; ஏழாண்டளவிற்று. பெதும்பை ; பன்னிரண்டாண்டளவிற்று. (௫௪)

('அப்பருவச் சிறப்பு.)

செய்ய வல்ல கம்மியன்செய் சிங்கஞ் சுமந்த மணியணைமேற், பைய வந்து மணிமௌலிப் பார்வேந் திருக்கும் பரிசுபோல், வெய்ய குதம்பை வளர்த்தகல விழுநீர் வள்ளைக் காதினிடைத், துய்ய பசும்பொன் மணிகுயின்ற துணைத்தோ டமைய த் தோன்றினள்.

(இ - ள்.) செய்யவல்லகம்மியன்செய் - பண்ணவல்ல கம்மாளனாலே பண்ணப்பட்ட —சிங்கஞ்சுமந்த மணியணைமேல்—மணிமௌலி - மணிகளாலாகிய கிரீடத்தையுடைய—பார்வேந்து - அரசனானவன்—பைய்வந்து - மெள்ளவந்து—இருக்கும்பரிசுபோல் - கொலுவிருக்குந்தன்மைபோல்—வெய்யகுதம்பை - வெவ்விய தக்கைகளானவை—வளர்த்தகல—விழுநீர் - மேம்பாட்டுக்குணத்தையுடைய—வள்ளைக்காதினிடை - வள்ளைபோலுள்ள காதுகளிடத்து —துய்யபசும்பொன் - பரிசுத்தமானபசிய பொன்னிலே—மணிகுயின்ற - மணிகள் பதித்துச்செய்யப்பட்ட—துணைத்தோடமைய - ஒன்றற்கொன்று ஒப்பாகிய குண்டலங்கள்பொருந்த—தோன்றினள். எ - று. வருத்தப்படுத்திவளர்த்தலின், வெய்யகுதம்பையென்றார். ஒப்பணி. (௫௫)

(இதுமுதல் மூன்றுபாட்டுகளில் அப்பருவத்தின்வளர்ச்சி.)

மட்டுக் கணைவே ளரணாக வளர்த்த குழற்கா டலர்விரவிக் கட்டுற் றதுநம்பரன்களத்திற் கடுவும் விழிகள் சிறிதுற்ற, முட்டித் துறவாம் பறவைமயன் முடியிற் படுதன் மெல்லமறைந், தெட்டிப் பார்ப்ப வெனமுகங்கொண் டெழுந்த மார்பி னிளமுலைகள்.

(இ - ள்.) மட்டுக்கணை - தேனையுடையமலரம்புகளையேந்திய—வேளரணாக - மன்மதனுக்குவனதுர்க்கமாக—வளர்த்த - வளர்க்கப்பட்ட—குழற்காடு - கூந்தற்காடானது—அலர்விரவி - (பழியொடுகலந்து)மலரொடுகலந்து—கட்டுற்றது - (காவலையுற்றது) கட்டப்படுதலையுற்றது—விழிகள் - கண்களானவை—நம்பரன்களத்திற்கடுவும் - நமதுகடவுளதுகண்டத்திலுள்ளநஞ்சத்தின்குணத்தையும்—சிறிதுற்ற - சிறிதுபொருந்தின—இளமுலைகள்—துறவாம்பறவை - துறந்தோராகியபறவைகள்—முட்டி - முட்டு

ற்று—மயன்முடியிற்படுதல் - மயக்கமாகியகண்ணியிலேஅகப்படுதலை—மறைந்து—மெல்ல—எட்டிப்பார்ப்பவென - எட்டிப்பார்ப்பனபோல்—முகங்கொண்டு—மார்பில்—எழுந்த - புறப்பட்டன. எ - று. மலை, காடு, மதில், அகழி என அரணம் நான்காதலின், இங்கேகாட்டரண் சொல்லப்பட்டது. இது உருவகம். கடு - துறவு - ஆகுபெயர்கள். நஞ்சத்தின்குணம் வருத்துதல். நஞ்சமாகிய உபமானத்தின்குணத்தை விழியாகிய உபமேயத்தில் ஆரோபித்தலால், காட்சியணி. அப்போது புறப்படுகிற முலைகளை அப்படி எட்டிப் பார்ப்பனவாகக்குறித்தலால், தற்குறிப்பணி. இதற்கு உருவகம் அங்கம். (௫௬)

அன்ன நடையு மன்னமிலா வையர் நடையுந தளர்வெய்தக், கன்னி நடகரு நடைகற்றாள் கரும்பு கசக்கு மொழிபெற்றாண், மன்னு மலர்வீழ் சுரும்பனைய மைந்தர் பார்வைக் குறிப்புணர்ந்தாள், தன்னை யரிய ளெனவறிந்து தானே மனததிற் றருக்குற்றாள.

(இ - ள்.) அன்னநடையும்—அன்னமிலாவையர்நடையும் - அன்னத்தைவிட்டமுனிவரதொழுக்கமும்—தளர்வெய்த-சோர்வடையும்படி—கன்னி - மாயையானவள் —நடக்குநடைகற்றாள் —கரும்புகசக்குமொழி பெற்றாள் - கரும்பைக்கசப்பிக்கின்ற சொற்களைப்பெற்றாள்—மன்னுமலர்வீழ் - (வளத்தால்) மிக்கமலரின்கண்ணேவீழ்கிற—சுரும்பனைய - வண்டுகள்போல்கின்ற —மைந்தர்பார்வைக்குறிப்பு - காளையரதுபார்வையின்குறிப்பை—உணர்ந்தாள் - அறிந்தாள்—(அதனால்) தானேதன்னை அரியளெனவறிந்து —மனத்தில் —தருக்குற்றாள் - செருக்கையடைந்தாள். எ - று. அவர்ணியங்களாகிய அவ்விரண்டுநடைகளுக்கும் தளர்வெய்தலாகிய ஒருதருமத்தில் முடிவுசெய்தலால், ஒப்புமைக்கூட்டவணி. கசக்குமென்றது பிறவினைப்பொருளில்வந்தது. கசப்பித்தற்சம்பந்தத்தைக் கற்பித்தமையால், உயர்வுநவிற்சியணி. மலர்க்குவளம்; தேனும் பொடியும் வாசனையும். இவைபோல உபமேயத்தில் வடிவும் அழகும் இளமையுங்கொள்க. குறிப்பு; தன்மேற் காதற்கருத்து. இங்கே ஒப்பணி. செருக்கு; வடிவமுதலியவற்றால் பிறமகளிரை யெல்லாந் தன்னிற்றாழ்ந்தவராகமதித்தல். (௫௭)

இந்தக் கன்னி மதிமுழுநோக் கெய்திச் செவ்வாய் வலியடைந்து, சந்தச் சிங்கந தனையடுக்க தக்க வரவின் வலிசார்ந்து, முந

ணைதக் கொடிமீ னத்தலைவன் முனிவ ராரும் பகைவெல்லக், கந்
தப் பகழி பலவேழக் கருப்புச் சிலையிற் றொடுத்தனனால்.

(இ - ள்.) இந்தக்கன்னி - இந்தமாயையினது —மதிமுழுநோக்கெய்தி - சந்திரன்போலுள்ள முகத்தின்முழுப்பார்வையைப்பெற்று —செவ்வாய்வலியடைந்து - சிவப்புநிறம்பொருந்திய வாயினது வலிமையையடைந்து—சந்தச் சிங்கந்தனையடுத்த தக்கவரவின்வலிசார்ந்து - அழகியசிங்கம்போலுள்ள இடையினை அடுத்த தகுதியுடைய அரவுபோலுள்ள அல்குலினதுவலியையுஞ்சேர்ந்து—முக்ணைதக்கொடிமீனத்தலைவன் - முதன்மையாகிய மீனக்கொடியையுடைய மன்மதனானவன் —முனிவராரும்பகைவெல்ல - துறவோராகிய பகைவரைவெல்லுதற்பொருட்டு—கந்தப்பகழிபல - மணத்தையுடைய மலரம்புகள்பலவற்றை —வேழக்கருப்புச்சிலையில் - வேழமாகியகருப்புவில்லிலே—தொடுத்தனன். எ - று. ஆல் - அசை. வேழக்கரும்பு - இருபெயரொட்டு. முகமுதலியவை மதிமுதலிய உபமானச்சொற்களாலே சொல்லப்படுதலால், உருவகவுயர்வு நவிற்சியணி. வர்ணிக்கப்படுகிற மன்மதன் செய்தியில் கன்னியிலிருக்கிறசந்திரனது முழுப்பார்வையும் அங்காரகபலமும் சிங்கத்திலேயிருக்கிற ராகுவலியுமாகிய கோசாரபலன்பார்த்துப் போர்க்குச்செல்லுகிற அரசரது செய்திதோன்றலால், சுருக்கநவிற்சியணி. (ருஅ)

(மங்கைப்பருவ மடைந்தமை.)

பாக மாகப் பொங்கியெழும் பதமே போலப் பொங்குமெழின்
மோக மாயை தன்பருவ முன்னி முடிவேந் தயனுமா
லாகு மாட மொன்றுபுரிந் ததன்கட் கல்வி பற்பலவும்
போகு மாதர் பலர்சூழப் போற்றி யிருப்பச் செய்தனனால்.

(இ - ள்.) பாகமாகப்பொங்கியெழும்பதமேபோல-பக்குவமாகப்பொங்கியெழுகின்ற அன்னம்போல—பொங்குமெழில் - பொங்குகின்றவளர்ச்சியையுடைய —மோகமாயைதன்பருவமுன்னி - மோகத்தைச் செய்கின்ற மாயையினதுபருவத்தை நினைந்து—முடிவேந்து - கிரீடத்தையுடையஅரசனானவன் —அயனுமாலாகும் - நான்முகனுங்கண்டு மயங்கத்தக்க—மாடமொன்றுபுரிந்து-ஒருகன்னியாமாடஞ்செய்து —அதன்கண்—கல்விபற்பலவும் - (கற்பிக்கப்பட்ட) நானாவித வித்தைகளையும —போகுமாதர்பலர் - (அவற்றை) முடிவுறக்கற்றுவல்ல மகளிர்பலரும்—சூழ - சூழ்ந்துநிற்க —போற்றியிருப்ப - (அவரோடு) சிந்தித்துக்கொண்டிருக்கும்ப

டி—செய்தனன். எ - று. ஆல் - அசை. அவ்வன்னம் உண்ணுதற்கு எப்படியோ அப்படி இவள்வளர்ச்சி அநுபவித்தற்குத் தகுந்ததானமை யறிக. இதனால் மங்கைப்பருவ மடைந்தமை பெறப்பட்டது. பற்பலவித்தைகளாவன ; அக்ஷரலக்ஷணமுதலிய அறுபத்துநாலுகலைகள். போற்றியிருப்பவென்றதனால், அவையெல்லாம் முன்னரோ ஐயாண்டுதொடங்கிக்கற்பிக்கப்பட்டமை பெறப்பட்டது. (ருக)

வேறு.

(இதுமுதல் ஐந்துபாட்டுகளில் அவள்பொழுதுபோக்கு.)

வாய்த்துள வம்மணி மாட நண்ணுபு
பாத்தொடை பற்பல பயின்றுந் தந்திரி
நாத்தனி யாழைமா ணுக்க னென்றுதான்
பேர்த்துளர் விரல்களாற் பேசு வித்துமே.

(இ - ள்.) வாய்த்துள - (தனக்குத்) தகுந்துள்ள—அம்மணிமாடம் - அவ்வழகியமாடத்தை—நண்ணுபு - அடைந்து—பாத்தொடைபற்பலபயின்றும் - பலபலவாகியபாமாலைகளை அப்பியசித்தும் —தந்திரிநா - நரம்பாகியநாவையுடைய—தனியாழை - ஒப்பற்றவீணையை—மாணுக்கனென்று- தனக்கு மாணுக்கனென்று சொல்லும்படி —பேர்த்துளர்விரல்களால் - அசைத்துத்தடவுகின்ற அங்குலிகளாலே—பேசுவித்தும். எ - று. இது முதல் ஐந்துபாட்டுகள் ஒருதொடர். யாழ்வாசித்தலை வேறு பிரித்துக்கூறலால், பாத்தொடைபற்பலவென்றது - யாழின்றி மிடற்றுற்பாடப்பட்டவற்றை. அவையாவன ; ஏழிசைகளின் முறைவழுவாது பைரவிமுதலாகிய முப்பத்திரண்டு இராகங்களாலும் அமைத்துப்பாடப்பட்ட பாட்டுகள். ஏழிசைகளாவன ; குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. முப்பத்திரண்டு ராகங்களாவன ; பைரவி, தேவக்கிரியை, மேகரஞ்சி, குறிஞ்சி, பூபாளம், வேளாவளி, மலகரி, பௌளி, ஸ்ரீராகம், இந்தோளம், பல்லதி, சாவேரி, படமஞ்சரி, தேசி, லலிதை, தோடி, வசந்தம், ராமக்கிரியை, வராளி, கைசிகம், மாளவி, நாராயணி, குண்டக்கிரியை, கூர்ச்சரி, பங்காளம், தன்னியாசி, காம்போதி, கௌளி, நாட்டை, தேசாக்ஷரி, காந்தாரி, சாரங்கம் என்பனவாம். பயின்றென்றமையால் பாடும்போது கண்ணிமைத்தன்முதலிய குற்றங்களின்றிப் பாடுதல் வல்லசிறப்பும் குறிப்பிக்கப்பட்டது. " கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா, பண்ணவை வாய்தோன்றுபற்றெரியா, வெண்

ணிவிவை, கள்ளார்நறுந்தெ ரியற் கைதவனேகந்தருவ, ருள்ளாளப்பாட லுணர்." தனியாழென்றதனல்; பேரியாழ், மகரயாழ், செங்கோட்டி யாழ், சகோடயாழ், என்றிறநான்கினுள்ளே சிறப்புடைய பேரியாழெ ன்பதும், அது இலக்கணப்படி தண்டு, பத்தர், நரம்பு, முறுக்காணி, கொ ழுவாணி முதலிய வெல்லாம் அமைந்துள்ளதென்பதும் பெறப்படும். இவற்றிற்கு நரம்புகள், பேரியாழிற்கு, உக. மகரயாழிற்கு, கஎ. சகோ டயாழிற்கு, கசு. செங்கோட்டியாழிற்கு, எ. எனவறிக. பேர்த்தென மிகுத்துக்கூறுதலால், பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு எனப்படுகின்ற எட்டுகலை த்தொழில்களையுஞ் செய்தல் பெற்றும். அவற்றுள் பண்ணல்; பாடநினைக் கப்பட்டபண்ணுக்கு இணை கிளை பகை நட்பான நரம்புகள் பெறுந் தன் மை மாத்திரை அறிந்து கட்டுதல். பரிவட்டணை; அக்கட்டப்பட்ட நரம்பை அகவிரலாலும் புறவிரலாலும் அநுகரணஞ்செய்துதடவிப்பார்த்தல். ஆ ராய்தல்; ஆரோகண அவரோகணவகையால் இசையைத் தெரிதல். தை வரல்; அதுசுருதி யேற்றுதல். செலவு; ஆளத்திலே நிரம்பப்பாடுதல். கை யூழ்; பாடநினைக்கப்பட்ட வண்ணத்திலே சந்தத்தைவிடுதல். விளையாட் டு; வண்ணத்திற் செயப்பட்டபாடலெல்லாம் இன்பம் பிறக்கப்பாடுதல். குறும்போக்கு; குடகச்செலவும் துள்ளற்செலவும் பாடுதல். அன்றியும் வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடை எனப்படுகின்ற எண்வகை இசைக்கரணஞ் செய்தலுங் கொள் ளப்படும். பேசுவித்தென்றதனல் மிடற்றோசையும் எழாலும் வேற்றுமை காணப்படாமை அறிக. (கூ0)

அங்கொரு மடவர லதிர்ப்பத் தண்ணுமை
மங்கையர் சிலரிசை மரபிற் பாடுறக்
கொங்கவிழ் மலரளி குமுறத் தென்றலாற்
பைங்கொடி யசைதல்போற் பாடி யாடியும்.

(இ - ள்.) அங்கு—ஒருமடவரல்-ஒருமங்கையானவள்—தண்ணுமைய திர்ப்ப -மத்தளத்தை முழக்காநிற்க—மங்கையர்சிலர் —இசை - இராக ங்களை—மரபிற்பாடுற - முறைமைப்படி பாடாநிற்க—பைங்கொடி - ஒரு பசுங்கொடியானது—கொங்கவிழ்மலர் - மணம் விரிந்தமலரின் கண்—அ ளிகுமுற-வண்டுஒலிசெய்யாநிற்க—தென்றலால்—அசைதல்போல்—பா டியாடியும் - பாடிக்கொண்டு நடித்தும். எ - று. குமுறல்போற்பாடியு ம அசைதல்போ லாடியுமெனக்கூட்டப்படுதலால், நிரனிறையணி. இத

ஞேடுகூடி ஒப்பணிவந்தது. இச்செய்யுளில் மத்தளமுழக்குதற்கும் இசை பாடுதற்கும் மகளிரையே கூறுதலாலும், பாகமாகவென்னுஞ் செய்யுளினு ம் கல்விபற்பலவும் போகுமாதர் பலர்சூழப்போற்றி யிருப்பவென்ற மை யாலும் இவளது சங்கீதபரதங்களுக்குரிய ஆடலாசிரியன், பாடலாசிரிய ன், யாழாசிரியன், தண்ணுமையோன், குழலோன்முதலியோரும் மகளி ரேயாமாறுபெறப்பட்டது.

பரதமிவட்குச் சிறந்ததாக மேற்கூறப்படுதலின், அதனியல்பு சிறிதுகூ றுகின்றாம். கூத்து இருவகைப்படும். என்னை? "கூத்தின்வகையே கு றைவறநோக்கி னேத்தும்வகையா விருவகைப்படுமே." அவைதாம் "சா ந்திக்கூத்தும் விநோதக்கூத்துமென் றய்ந்துறவகுத்தன னகத்தியன்று னே." என்றாராகலின். அவற்றுள் சாந்திக்கூத்துநால்வகைத்து. என் னை? "சாந்திக்கூத்தே தலைவனின்ப மேந்திநின்றாடியவீரிருநடமவை சொக்கமெய்யே யவினயநாடக மென்றிப்பாற்படூஉ மென்மனார்புலவர்." என்றாராகலின். அந்நான்கனுள் சொக்கக்கூத்தாவது; சுத்தநிருத்தம். அதுநூற்றெட்டுக் கரணமுடைத்து. மெய்க்கூத்தாவது; தேசி, வடுகு, சிங்களம். இவை அகச்சுவையாகிய முக்குணம்பற்றி எடுத்தலின் அகமா ர்க்கமெனப்படும். அவினயம்; கதைதழுவாது பாட்டுகளின் பொருள் தோன்றக் கைகாட்டி வல்லபஞ்செய்யுங்கூத்து. நாடகம்; கதைதழு விவருங்கூத்து. இனி விநோதக்கூத்து அறுவகைத்து. என்னை? "விநோ தக்கூத்தே குரவைகலிநடங் குடக்கூத்துக்கரண நோக்குத்தோற்பா வை" என்றாராகலின். அவற்றுள் குரவை; கைகோத்தாடுவது. கலி நடம்; கழாய்க்கூத்து. குடக்கூத்து; மாயனாடல். கரணம்; படிந்த வாடல். நோக்கு; பாரமு நுண்மையு மீயமு முதலாயின. தோற்பா வை; தோலாற்பாவைசெய்தாட்டுவது. இன்னும் வசைக்கூத்தோடு ஏழென்பாருமுளர். இவ்வேழும் இழிகுலத்தோராடற்குரியன.

இனி வென்றி, வசை, விநோதம் எனப்படுகிற பலவகைக்கூத்தையும் புணர்க்கப்படுகின்ற விலக்குப்பாட்டெழுவகைத்து. வேந்துவிலக்கு, படை விலக்கு, ஊர்விலக்கு என. அவ்விலக்குறுப்பாய்வருவன பதினான்குவ கைப்படும். என்னை? "விலக்குறுப்பென்பது விரிக்குங்காலை பொருளும் யோனியும், விருத்தியுஞ் சந்தியுஞ்சுவையுஞ் சாதியுங்குறிப்புஞ் சத்துவ மு மவினயமுஞ்சொலுஞ்சொல்வகைவண்ணமும் வரியுஞ்சேதமுமுளப்ப டத்தொகைஇ யிசையவெண்ணினீரேழாகும்" என்றாராகலின். அவ ற்றுள் பொருள் நால்வகைப்படும். என்னை? "அறம்பொருளின்பம்வீடெ

ண நான்குந் திறம்படுபொருளெனச்செப்பினர்புலவர்.'' என்றாராகலின். யோனிநால்வகைப்படும். என்னை ? '' உள்ளோற்குள்ளதுமில்லோற்குள்ளது முள்ளோற்கில்லதுமில்லோற்கில்லதுமெள்ளாதுணைத்தலியோனியாகும்'' என்றாராகலின். விருத்திநால்வகைப்படும். சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி என. சந்தியைந்துவகைப்படும். முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என. சுவைஒன்பதுவகைப்படும். என்னை? '' உவகைநகையே யவலம்வெகுளி பெருமிதமச்ச மிளிவரன்மருட்கை நடுநிலையெனச்சுவையொன்பஃதென்ப '' என்றாராகலின். சாதிநால்வகைத்து. அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என. குறிப்பாவது ; அச்சுவைகளைக்கருதுமத்துணையே மெய்மைத்தாய்த் தன்கட் டோன்றுவது. சத்துவமாவது ; அக்குறிப்பின்கணிகழ்கின்ற நிகழ்ச்சி. அது பத்துவகைப்படும். மெய்ம்மயிர்சிலிர்த்தல், கண்ணீர்வார்தல், நடுக்கமடுத்தல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விளித்தல், வெம்பல், சாக்காடு, குரற்சிதைவு என. அவினயம் இருபத்துநாலுவகைப்படும். வெகுண்டோனவினயம், ஐயமுற்றோனவினயம், சோம்பினோனவினயம், களித்தோனவினயம், உவந்தோனவினயம், அழுக்காறுடையோனவினயம், இன்பமுற்றோனவினயம், தெய்வமுற்றோனவினயம், ஞஞ்ஞையுற்றோனவினயம், உடன்பட்டோனவினயம், உறங்கினோனவினயம், துயிலுணர்ந்தோனவினயம், செத்தோனவினயம், மழைபெய்யப்பட்டோனவினயம், பனித்தலைப்பட்டோனவினயம், வெயிற்றலைப்பட்டோனவினயம், நாணமுற்றோனவினயம், வருத்தமுற்றோனவினயம், கண்ணோவுற்றோனவினயம், தலைநோவுற்றோனவினயம், அழற்றெறப்பட்டோனவினயம், சீதமுற்றோனவினயம், வெப்பமுற்றோனவினயம், நஞ்சுண்டோனவினயம் என. சொல் மூன்றுவகைப்படும். உட்சொல், பூதச்சொல், ஆகாயச்சொல் என. என்னை ? '' நெஞ்சொடுகூறல் கேட்போர்க்குரைத்த றஞ்சம்வரவறிவுதானேகூறலென் றம்மூன்றென்ப செம்மைச்சொல்லே '' என்றாராகலின். சொல்வகைநான்கு வகைப்படும். சுண்ணம், சுரிதகம், வண்ணம், வரிதகம் என. என்னை ? '' சுண்ண நான்கடிசுரிதகமெட்டடி. வண்ணநான்குவரிதக மென்றொன் கெண்ணியவடித்தொகையெய்தவும்பெறுமே. '' என்றாராகலின். வண்ணம் மூவகைப்படும். பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ணம் என. வரி எட்டுவகைப்படும். என்னை ? '' கண் கூடுகானலுள் வரிபுறவரி இவர்வரியைந்தோடொன் றுவுரைப்பிற் காட்சிதேர்ச்சியெடுத்துக்கோளென மாட்சியின்வரூஉமெண்வகைத்தே'' என்றாராகலி

ன். சேதமாவது ; " ஆரியந்தமிழெனுஞ் சீர்நடமிரண்டினு மாதிக்கதை
யை யவற்றிற்கேற்பச் சேதித்திடுவது சேதமென்றுகும்."

இனித்தேவராடியபதினேராடலாவன. க்டவுளுக்கு பாண்டரங்கம்,
கோடுகொட்டி, உ. திருமாலுக்கு மல், அல்லியம், குடம், ௩. முருக
வேளுக்கு குடை, க. மதனவேளுக்கு பேடு, க. திருவுக்கு பரவை,
க. விந்தைக்கு மரக்கால், க. இந்திராணிக்கு கடையம், க. சத்த
மாதருக்கு துடி, க. ஆ கக.

இன்னும் கூத்திற்குரியன. பாடலும், வாச்சியமும், பாடற்பயனும்,
தாளமும், அத்தாளத்தின் வழிவருந்தூக்கும், செய்முறையும் சொல்ல
ப்படுகின்றன. அவற்றுள் பாடல் ; அகக்கூத்துக்குக்கந்தமுதலியனவும்,
புறக்கூத்துக்குத் தேவபாணிமுதலியனவும் உரியன. வாச்சியம் ; கீதா
ங்கம், நிருத்தாங்கம், உபயாங்கம் எனமூவகைத்து. பாடற்பயன் எட்
டு. என்னை ?"இன்பந்தெளிவேநிறைவேடொளியேவன்சொலிறுதிம
ந்தமுச்சமென வந்தவெட்டும்பாடலின்பயனே" என்றுராகலின். தாள
ம்; கொட்டும் அசையும், தூக்கும் அளவும், இயையப்புணர்ப்பது. என்னை?
" கொட்டுமசையுந்தூக்குமளவு மொட்டப்புணர்ப்பதுபாணியாகும்." புறக்
கூத்திற்கு அரைமாத்திரையுடைய ஏகதாளமுதல், பதினாறுமாத்திரைக
ளையுடைய பார்வதிலோசனமீறுகிய நாற்பத்தொருதாளங்களும் உரிய
ன. அகக்கூத்திற்கு ஆறன்மட்டம் எட்டன்மட்டமுதலியவை உரிய
ன. தூக்கென்பது ; இத்தாளங்களின் வழிவருஞ்செந்தூக்கு முதலிய
வேழாம். என்னை ? " ஒருசீர்செந்தூக் கிருசீர்மதலை மூச்சீர்துணிபு நாற்
சீர்கோயி லைஞ்சீர்நிவப்பே யறுசீர்கழாலேயெழுசீர்நெடுந்தூக் கென்மனுர்
புலவர் " என்றுராகலின். உட்சொன்முதலியமூன்றையும் அவிநயத்
தோடேநாட்டிச்செய்யுமிடத்துச் செய்முறை நான்குவகைப்படும். கை
யுங் கருத்து மிடமுஞ் சரீரமுமென. அவற்றுள் கை இரண்டுவகையா
ம். பிண்டி, பிணையல் என, அவற்றுள் பிண்டியாவது ஒற்றைக்கை.
அது முப்பத்துமூன்றுவகைப்படும். பதாகை, திரிபதாகை, கத்திரிகை,
தூபம், அராளம், இளம்பிறை, சுகதுண்டம், முட்டி, கட்கம், சூசி,
கவகோசிகம், காங்கூலம், கபித்தம், விற்பிடி, குடங்கை, அலாபத்தி
ரம், பிரமரம், தாம்பிரசூடம், பைசாசம், முகுளம், பிண்டி, தெரிநிலை, மெ
ய்ந்நிலை, உன்னம், மண்டலம், சதுரம், மான்றலை, சங்கு, நண்டு, இ
லதை, கபோதம், மகரமுகம், வலம்புரி என. பிணையலாவது ; இ
ரட்டைக்கை. அது பதினைந்துவகைப்படும். அஞ்சலி, புட்பாஞ்சலி,
பதுமாஞ்சலி, கபோதம், கர்க்கடகம், சுவத்திகம், கடாவர்த்தம், நிட

தம், தோரம், உற்சங்கம், புட்புடம், மகரம், சயந்தம், அபயாத்தம், வர்த்தமானம் என. இவையெல்லாம் இங்கேவிரிக்கிற்பெருகுமாதலிற் சுருக்கிக்காட்டப்பட்டன. சங்கீதவிகற்பங்களையெல்லாம் பெருநாரை பேருங்குருகு முதலிய இசைத்தமிழ்நூல்களிலும், பரதவிகற்பங்களையெல்லாம் முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம் முதலியநாடகத்தமிழ்நூல்களிலும் காண்க. (சுக)

வருமுலை யிறைக்கிணை யாக வந்துறக்
கரமெனு மேவலன் புடைக்குங் காட்சிபோல்
விரைமல ரோதிமேன் மிஞிறி ரைந்தெழப்
பருமணி குயின்றமென் பந்த டித்துமே.

(இ - ள்.) வருமுலையிறைக்கு-வளர்கின்றமுலையாகியஅரசனுக்கு — இணையாக - நேராக—வந்துற - வாராநிற்க—கரமெனுமேவலன் - கையாகிய (அவ்வரசனுடைய) சேவகன் —புடைக்குங் காட்சிபோல் - அடித்துத்துரத்துந்தோற்றம்போல் —விரைமலரோதிமேல் - மணம்பொருந்திய மலரணிந்த கூந்தலின்மேலே —மிஞிறிரைந்தெழ - வண்டுகளொலித்தெழும்படி —பருமணிகுயின்ற - பருத்தமுத்துகளிற்செயப்பட்ட —மென்பந்தடித்தும் - மெல்லியபந்துகளை அடித்தும. எ - று. மிஞிறிரைந்தெழவென்றதனால் கூந்தலவிழ்தல் பெறப்பட்டது. பந்தடித்தலை அங்கனம் புடைத்தலாகக்குறித்தலால், தற்குறிப்பணி. இதற்குஉருவகம் அங்கம். (சுஉ)

பூந்தொடை வார்குழல் புனைந்து நல்விரைச்
சாந்தமு நானமுந் தயங்கப் பூசியு
மேந்திழை பலவுறுப் பிசையத் தாங்கியு
மாந்துறு சுவைபல வகைய மாந்தியும்.

(இ - ள்.) பூந்தொடைவார்குழல்புனைந்தும் - மலர்மாலையைநெடியகூந்தலிற்சூடியும்—நல்விரைச்சாந்தமும் - நல்லமணமுடையசந்தனத்தையும் —நானமும் - கஸ்தூரியையும் —தயங்கப்பூசியும் - விளங்கும்படி பூசியும்—பலவுறுப்பிசைய - பலவவயவங்களுக்கும்பொருந்த —ஏந்திழைதாங்கியும் - அணிதற்குத் தகுதியாகிய ஆபரணங்களை அணிந்தும்— மாந்துறுசுவைபலவகைய - குடித்தற்குத் தகுதியாகிய பலவகைச் சுவையையுடைய பானங்களைக் குடித்தும். எ - று. (சுங)

தீங்கனி பாலொடு செம்பொற் பஞ்சரந்
தாங்குறு பைங்கிளி யூட்டித் தன்மொழி
யாங்கது பயில்வுற வளித்துங் கற்பகப்
பூங்கொடி யனையவள் பொழுது போக்குநாள்.

(இ - ள்.) தீங்கனி - தித்திப்பாகியபழங்களை—பாலொடு—செம்பொற்பஞ்சரம் - செம்பொன்னலாகியகூண்டினுலே—தாங்குறு - தாங்கப்படுகிற—பைங்கிளி - பச்சைக்கிளியை—ஊட்டி - உண்பித்து—தன்மொழி - தன்சொல்லை—அதுபயில்வுற - அதுகற்கும்படி—அளித்தும் - கொடுத்தும்—கற்பகப்பூங்கொடியனையவள் - கற்பகமலர்வல்லிபோல்பவள்—பொழுதுபோக்குநாள் - காலங்கழித்துவருநாளில் (ஒருநாளில்). எ - று. ஆங்கு - அசை. (கூச)

(இதுமுதல் எட்டுப்பாட்டுகளில் மணத்தலைவனைத் தேர்தல்.)

தென்னவன் செம்பியன் சேரன் கொங்கண
மன்னவன் மாளுவன் மகத நாட்டிறை
யென்னுமிங் கிவர்தமுள் யாவர் கண்ணதோ
கன்னிதன் மணவினைக் கடனென் றுன்னியே.

(இ - ள்.) தென்னவன் - பாண்டியன்—செம்பியன் - சோழன்—சேரன்—கொங்கணமன்னவன்—மாளுவன் - மாளுவதேசத்தரசன்—மகதநாட்டிறை - மகததேசத்தரசன்—என்னும் - எனப்படுகின்ற—இங்கு - இவ்வுலகத்திலுள்ள—இவர்தமுள்—யாவர்கண்ணதோ - எவரிடத்ததோ—கன்னிதன்மணவினைக்கடனென்று - என்புதல்வியினதுவிவாகத்தொழிற்கடனென்று—உன்னி - நினைத்து. எ - று. (கூரு)

ஆய்ந்திருந் தனன்மம கார னயிடைப்
போநதன னவன்குரு வாகப் போற்றுறுஞ்
சாந்தவாங் காரனு தகுதிப் பேரினேன்
வேந்தனு மெதிர்கொளீஇ விதியிற் றாழ்ந்தனன்.

(இ - ள்.) மமகாரன்—ஆய்ந்திருந்தனன் - ஆலோசித்திருந்தானாக—அவன்—குருவாக - தனக்குக்குருவாக—போற்றுறும் - வழிபடுகின்ற—சாந்தவாங்காரனும - சாந்தத்தையுடையஅகங்காரனாகிய—தகுதிப்பேரினேன் - யோக்கியமான நாமத்தையுடையவன்—ஆயிடை - அவ்விடத்

து —போந்தனன் - வந்தான் —வேந்தனும் - அவ்வரசனும் —எதிர்கொளீஇ - எதிர்கொண்டு அழைத்து—விதியிற்றொழுந்தனன் - விதிப்படிவணங்கினான். எ - று. (கூகூ)

மன்னவன் வநதன மரபிற் கொண்டவன்
கன்னித னெழினலங் காணப் போயினா
னன்னவ ளெதிர்நடந் தாரி யன்றனைச்
சென்னியின் வணங்குபு சிறப்பு செய்தனள்.

(இ - ள்.) அவன் - அவ்வாசிரியன்—மன்னவன்வந்தனம் - அரசனது வழிபாட்டை —மரபிற்கொண்டு - முறைப்படிஅங்கீகரித்து —கன்னிதனெழினலம் - மாயையினது வளர்ச்சியையும் நற்குணத்தையும்—காணப்போயினான் - காணுதற்பொருட்டு (அவளிருக்கின்றவிடத்திற்) சென்றான் —அன்னவள் - அவள் —எதிர்நடந்து —ஆரியன்றனை - ஆசாரியனை—சென்னியின்வணங்குபு - தலையால்வணங்கி—சிறப்புசெய்தனள் - பூசைசெய்தாள். எ - று. (கூஎ)

மாந்தளி ராலிலை வயங்கு கோங்கரும்
பேந்தெழின் மணமல ரெய்தி யற்புதப்
பூந்துணர் வல்லிநேர் பொன்னைக் கண்டவ
னோர்ந்தனன் காரண மாதென் றுன்னியே.

(இ - ள்.) மாந்தளிர் மாந்தளிரையும்—ஆலிலை - ஆலிலையையும் —வயங்குகோங்கரும்பு - விளங்குகின்றகோங்கினதுஅரும்புகளையும்—ஏந்தெழின்மணமலர் - தாங்கப்படுகிற அழகையுடையதாமரைமலரையும்—எய்தி - அடைந்து —அற்புதப்பூந்துணர்வல்லிநேர் - ஆச்சரியகரமாகிய பூங்கொத்தையுடையஒருகொடிபோல்கின்ற—பொன்னை - அத்திருவை—கண்டு—அவன் - அவ்வாசிரியன் —உன்னி - ஆலோசித்து—காரணமாதென்று - ஒருகாரணத்தால் அவதரித்த மாதென்று —ஓர்ந்தனன் - அறிந்துகொண்டான். எ - று. கைம்முதலியவற்றை தளிர்முதலிய உபமானச்சொற்களாலே சொல்லுதலால், உருவகவுயர்வுநவிற்சியணி. மணா ; தலைக்குறைவிகாரம். விஜாதீயமான தளிரிலையரும்புமலர்கள் ஒருகொடியின் கண்ணே காணப்படின்அபூர்வமாமாதலால்,அற்புதப்பூங்கொடியென்றார்

மாதரு வுறுகுறி மதித்த றிந்தவ
னாதர வொடுமுடி யரசை நோக்கியின்

கோதையை யார்கொலோ தோளிற் கொள்பவ
ரோதுக வென்றலு முரைத்தன் மேயினன்.

(இ - ள்.) மாதுருவுறுகுறி - மாயையினதுவடிவத்திலுள்ளகுறியை—மதித்தறிந்தவன் - சிந்தித்துஅறிந்தவன்—முடியரசை - கிரீடாதிபதியாகிய அரசனை—ஆதரவொடுநோக்கி - ஆசையாற்பார்த்து—நின்கோதையை - உன்புதல்வியை —தோளிற்கொள்பவர் - பாணிக்கிரகணம்பண்ணுவோர்—யார் —ஓதுகவென்றலும் - சொல்லுகவென்றவளவில் —உரைத்தன் மேயினன் - (அவன்) சொல்லத்தொடங்கினன். எ - று. குறியாவன ; கரதலரேகை முதலியன. (கூகூ)

உணர்ந்தில னடியனே னொருநங் கோதைதன்
மணந்தனக் குரியவர் மனிதர் வானவர்
கணங்களு ளொருவரைக் கருத்திற் றேர்ந்துநீ
யிணங்குற வெனக்கிவ ணியம்பு கென்றனன்.

(இ - ள்.) அடியனேன் —உணர்ந்திலன் - அறிந்திலேன் —மனிதர்வானவர்கணங்களுள்-மனிதருடையவுந் தேவருடையவுங்கூட்டங்களுள்—ஒருநங்கோதைதன்மணந்தனக்குரியவர் - நம்முடைய ஒருபெண்ணினது விவாகத்துக்குரியவராகிய—ஒருவரை—நீகருத்திற்றேர்ந்து - நீதிருவுளத்தறிந்து—இணங்குற - பொருந்த—எனக்கு—இவணியம்புகென்றனன் - இங்கேசொல்லுகவென்றான். எ - று. (எ0)

கொங்கவிழ் தொடையினாய் கூன்கொக் கன்றுவான்
கங்கையை யடைவது கடவு ளன்னமே
மங்கையை யணைபவர் மனித ரல்லர்நஞ்
சங்கர னேயிவ டலைவ னென்றனன்.

(இ - ள்.) கொங்கவிழ்தொடையினாய் - மணம்விரிகின்ற மாலையையுடைய அரசனே—வான்கங்கையையடைவது - ஆகாசகங்கையைச்சேரவல்லது—கூன்-கூனையுடைய—கொக்கன்று—கடவுளன்னமே - தெய்வத்தன்மைபொருந்தியஅன்னமேயாம்--மங்கையையணைபவர் - இப்பெண்ணைச்சேரவல்லவர்—மனிதரல்லர்—நஞ்சங்கரனே- நமதுகடவுளே—இவள் - இவளது—தலைவனென்றனன். எ - று. (எக)

மாலுநான் முகனுநா டரிய வள்ளலிவ்
வேலவார் குழலினாட் கெளிய னேவென

வாலமார் மிடற்றினே னன்பர் வேண்டிய
கோலமாய் நணுகுமீ துண்மைக் கூற்றென்றான்.

(இ - ள்.) மாலுநான்முகனும்—நாடரிய - தேடியறிதற்கரிய —வள்ளல் - கடவுள்—இவ்வேலவார்குழலிணட்கு - இச்சாநந்தம்புசியநெடிய கூந்தலையுடையவளுக்கு—எளியனேனென —ஆலமார்மிடற்றினேன் - நஞ்சம்பொருந்தியகண்டத்தையுடையகடவுள் —அன்பர்வேண்டிய —கோலமாய் - வடிவினனாகி—நணுகும் - சேருவன்—ஈது —உண்மைக்கூற்றென்றான் - நிசமானசொல்லென்றான். எ - று. (எஉ)

(அவளுக்கு உபதேசஞ்செய்தமை.)

இன்னண மரசனே டியம்பி மாயையாங்
கன்னியை விளித்தவள் கருத்தி ணங்குறச்
செந்நிலை தனையுப தேசித் தேகினான்
றன்னிகர் குருபரன் றனதி டத்தரோ.

(இ - ள்.) இன்னணம் - இன்னவண்ணமாக—அரசனோடு—இயம்பி- சொல்லி —மாயையாங்கன்னியை —விளித்து - அழைத்து—அவள்கருத்து —இணங்குற - பொருந்த —செந்நிலைதனை - செவ்வையான அனுஷ்டானத்தை—உபதேசித்து —தன்னிகர்குருபரன் - தன்னைத்தானொத்த தேசிகோத்தமன்—தனதிடந்து—ஏகினான். எ - று. உபதேசித்தெனவே தீக்ஷைசெய்தமையும் பெறப்பட்டது. (எங)

குருவருண் மொழிநெறி கொண்டு மாயைதான்
வரவன வசைநகர் மதுகை நாதனைப்
பரவின ளருச்சனை பயின்று பூசனைக்
கருவிகண் முழுவதுங் கடைப்பி டித்தரோ.

(இ - ள்.) மாயை —குரு - ஆசாரியனது—அருண்மொழிநெறி - உபதேசவாக்கியவழியை —கொண்டு - உட்கொண்டு —வரவனவசைநகர் - உயர்வாகியவனவசைநகரிலுள்ள—மதுகைநாதனை - மதுகேசுரனை —பூசனைக்கருவிகண்முழுவதும் - பூசோபகரணங்களனைத்தையும்—கடைப்பிடித்து - குறைவறச் சம்பாதித்துக்கொண்டு—அருச்சனைபயின்று—பூசித்து—பரவினள் - வழிபட்டாள். எ - று. (எச)

ஆக கதி-ங-இ திருவிருத்தங்கள்-கருச.

மாயையினுற்பத்திகதி முற்றும்.



நான்காவது

# மாயைபூசைக்கதி

வேறு.

பதியை மேவுறுங் காதனெஞ் சகத்தினுட் பதித்து
மதுகை நாதனை வரன்முறை வரிவிழி மாயை
யுதய காலையிற் பூசைசெய் நாள்களு ளொருநாள்
விதியை யோதுவன் குவிமனத் தவர்கொள விரித்து.

(இ - ள்.) வரிவிழிமாயை - வரிபரந்தவிழிகளையுடையமாயை—பதியை மேவுறுங்காதல்-பிராணநாயகனை யடையவேண்டுமென்னுமிச்சையை—நெஞ்சகத்தினுட்பதித்து - தனதிதயத்திருத்தி—மதுகைநாதனை-மதுகேசுவரரை —வரன்முறை - வேதாகமவிதிப்படி —உதயகாலையிற் பூசைசெய்நாள்களுள் - உதயகாலத்திற் பூசைசெய்துவருநாள்களுள்—ஒரு நாள்விதியை - ஒருநாள்செய்விதியை—குவிமனத்தவர்கொள - குவிந்தமனத்தையுடையசான்றோர்கொள்ளும்படி—விரித்து - யான்விவரித்து—ஓதுவன் - சொல்லுவன். எ - று (க)

விதுவைச் சேய்மையிற் கண்டலர் குவளைகண் மெலிய
முதிர்விற் பூணிள முலையெழின் மாயைநன் முகமா
மதியைச் சேர்தரு வரிக்கருங் குவளைகண் மலரக்
குதிரைத் தேரவ னெழுந்தனன் குணதிசைக் குன்றில்.

(இ - ள்.) விதுவைச்சேய்மையிற்கண்டு - சந்திரனைத்தூரத்திற்கண்டு—அலர்குவளைகண்மெலிய - மலர்கின்ற நீலோற்பலங்கள்வாடவும்—முதிர்விற்பூணிளமுலை - மிகுந்தவொளிபொருந்திய அணிகளணிந்தவிளமையாகியதனங்களையுடைய —எழின்மாயைதன் - அழகுபொருந்தியமாயையின்—முகமாமதியை - முகமாகியசந்திரனை —சேர்தருவரிக்கருங்குவளைகண்மலர - சேர்ந்தவரிபொருந்தியகண்களாகிய நீலோற்பலங்கள்மலரவும்—குதிரைத்தேரவன் - பச்சைக்குதிரைபூண்டவிரதத்தையுடையசூரியன்—குணதிசைக்குன்றிலெழுந்தனன் - கிழக்குத்திசைக்கணுள்ளவுதயகிரியிலுதித்தனன். எ - று. (உ)

அனைய காலையி லன்னமென் றூவிபெய் யணைமேற்
றனியண் மாமயில் போற்றுயின் றவடுயி றணந்து
வினையி னுன்மலி மஞ்சனச் சாலையுண் மேவி
யினிய வாசநீ ராடினள் சேடிய ரேந்த.

(இ - ள்.) அனையகாலையில் - அப்பொழுது —அன்னமென் றூவிபெய் யணைமேல் - அன்னத்தின்மெல்லிய விறகாற்பதனமைத்துச்செய்தசயனத்தின்மீது —தனியண்மாமயில்போல் - தமியளாகிப்பெருமைபொருந்திய வொருமயிலைப்போல்—துயின்றவள் - துயில்செய்தவளாகியமாயையானவள்—துயிறணந்து - விழித்துக்கொண்டு—வினையினுன்மலி - தொழில்நிறைந்த —மஞ்சனச்சாலையுண்மேவி - ஸ்நானசாலைக்குட்சென்று—சேடியரினியவாசநீரேந்த - பணிவிடைப்பெண்களினியவாகத்தூய்மைசெய்து வாசமூட்டிய புனலெடுத்தேந்த —ஆடினள் - ஸ்நானஞ்செய்தனள். எ - று. (௩)

விலைவ ரம்பறி யாமணிக் கோவைசூழ் விளிம்பு
கலைய ணிந்தொரு தலைமுலை மேலலங் கரித்தாண்
முலையொ டிந்துகில் கண்டநாண் முதற்றொடர்ந் தன்றோ
விலகு றுங்கலை வல்லவர் கடபடா மென்றல்.

(இ - ள்.) (பின்பு) விலைவரம்பறியா - விலையிவ்வளவென்றறியப்படாத—மணிக்கோவைசூழ - இரத்னக்கோவைசூழ்ந்த —விளிம்பு - கரையையுடைய —கலையணிந்து - பட்டாடையுடுத்து —ஒருதலை - அவ்வாடையினொருமுன்றானையை—முலைமேலலங்கரித்தாள் - தனங்களின்மீதழகுபெறவணிந்தனள் —முலையொடிந்துகின்கண்டநாண்முதற்றொடர்ந்தன்றே - அவளதுதனங்களோடு பொருந்தியவாடையைக்கண்டநாள்தொடங்கியல்லவா—இலகுறுங்கலைவல்லவர் - தருக்கசாஸ்திரங்கற்றுப்பிரசித்தமாயிருக்குந்தார்க்கிகாள்—கடபடாமென்றல்-கடபடாமென்றுதாகரித்தல்எ-று.

கலைவல்லவர்கடபடாமென்றல்; கடத்திற்படமும் படத்திற்கடமும் அந்நியோந்நியாபாவமெனவாதித்தலை. இக்கருத்தைமாற்றி இங்கேகடபடாமெனக்கூறியதென்க. (௪)

மணிய மைந்தபொற் பாதுகை யொருத்திமுன் வைப்பப்
பிணிய விழ்ந்தசெந் தாமரைப் பதங்கொடு பெயர்ந்தே

யணிய ணிந்திடு மண்டபத் தணைமிசை யமர்ந்தாள்
பணிய ணிந்திடு மங்கைய ரடைந்தனர் பலரே.

(இ - ள்.) ஒருத்தி - ஒருசேடியானவள் —மணியமைந்தபொற்பாதுகை - பொன்னினாற்செய்து இரத்தினங்கள்பதித்த மிதியடிகளை—முன்வைப்ப - கொணர்ந்துமுன்னேவைக்க —பிணியவிழ்ந்தசெந்தாமரைப்பதங்கொடு - மாயையானவள்கட்டவிழ்ந்த செங்கமலமலரையொத்தபாதங்களிற்றொடுத்துக்கொண்டு—பெயர்ந்து - நடந்துபோய் —அணியணிந்திடுமண்டபத்து - பூஷணமணிகின்ற அலங்காரமண்டபத்தில்—அணைமிசையமர்ந்தாள் - ஆசனத்தில்வீற்றிருந்தனள்—பணியணிந்திடுமங்கையர்பலர்- அணியணியும்வண்ணமகளிர் பலர்—அடைந்தனர் - அவ்விடத்தையடைந்தனர். எ - று. (ரு)

மாரவேள்சிலை வளைந்திடப் பூட்டிய வண்டு
நாரி யோர்தலை நெகிழ்த்துவிட் டெனவொரு நாரி
கார வாமலர்க் குழற்சடை கைபுனை தியற்றி
வீர வேனெடுங் கண்ணிதன் முதுகுற விடுத்தாள்.

(இ - ள்.) மாரவேள் - மன்மதன் —சிலைவளைந்திடப்பூட்டியவண்டுநாரி - தனதுவில்வளையும்படிபூட்டியவண்டாகியநாணியின்—ஓர்தலைநெகிழ்த்துவிட்டென - கீழ்க்குதைப்பூட்டைக்கழற்றிவிட்டதுபோல—ஒருநாரி- ஒருவண்ணமகள்—காரவாமலர்க்குழல் - மலர்புனைந்தகருமையாகியவளகத்தை—சடைகைபுனைந்தியற்றி-பின்னியலங்கரித்து —வீரவேனெடுங்கண்ணிதன் - சௌரியத்தையுடையவேலையொத்தநெடியகண்களையுடைய மாயையின்—முதுகுறவிடுத்தாள்—முதுகிற்றொங்கவிடுத்தனள், எ - று.()

பின்னும் வேணிவார் குழலெனுங் கரியபே ரரவ
முன்ன மார்தரு சுடர்களை யுமிழ்ந்திடு முறைபோற்
கன்னி வாணுதன் மிசைக்கதிர் பிறையொடு கவினப்
பொன்ன வாஞ்சுணங் கவிர்முலை யொருத்திகை புனைந்தாள்.

(இ - ள்.) பின்னும்வேணி-பின்னிவிடப்பட்டசடாரூபமாகிய —வார்குழலெனுங்கரியபேரரவம் - நெடியகூந்தலெனப்படுகிற கரிய பெரும்பாம்பானது—முன்னமார்தருசுடர்களை - முன்னேவிழுங்கிய சூரியசந்திரர்களை—உமிழ்ந்திடுமுறைபோல்-உமிழ்ந்திட்டுவைத்தமுறைபோல —பொன்னவாஞ்சுணங்கணிமுலையொருத்தி - பொன்போலுந்தேமலாற்பிரகாசி

க்கின்றமுலைகளையுடையவொருபெண்—கன்னிவாளுதன்மிசை - மாயை யினதுசாந்திபொருந்தியநெற்றியின்மேல்—கதிர்பிறை - சூரியப்ரபை சந்திரப்ரபை யென்றுசொல்லப்பட்டவணிகளை—கவின - அழகுற—கைபுனைந்தாள் - அலங்கரித்தாள். எ - று. ஒடு - அசை. (எ)

ஓதி யாகிய வறன்மிசைச் சுவடுற வூர்ந்து
தீதி லாதவொண் சந்தனத் திலகவெண் மதிக்குப்
போது மோர்சிறு பாம்பென மயிர்வகிர்ப் பொருந்தச்
சோதி மாமணிச் சுட்டியொன் றொருத்தி தூக்கினளால்.

(இ - ள்.) தீதிலாதவொண்சந்தனத்திலகவெண்மதிக்கு - களங்கமில்லாதவொள்ளிய சந்தனப்பொட்டாகியவெண்மையாகிய சந்திரனைக்கவர்தற்கு—ஒதியாகியவறன்மிசை-கூந்தலாகியகருமணலின்மேல்—சுவடுறவூர்ந்து - வடுப்படச்சென்று—போதுமோர்சிறுபாம்பென-செல்லுகின்றவொருசிறுபாம்புபோல—மயிர்வகிர்ப்பொருந்த - மயிர்வகிலேபொருந்தும்படி —சோதிமாமணிச்சுட்டியொன்று - ஒளிபொருந்தியமாணிக்கச்சுட்டியொன்றை —ஒருத்தி - ஒருபெண் —தூக்கினள் - தொங்கவிட்டனள். எ - று. ஆல். அசை. (அ)

வேன லம்பதி கொலைவிட மூட்டிய வெவ்வேன்
மான வஞ்சன மெழுதிய விழிபொர வரலாற்
றான தன்பகை தனைத்துணை கொண்டுறு தகைபோற்
பான லஞ்செவி மிசையணிந் தனளொரு பாவை.

(இ - ள்.) வேனலம்பதி - மன்மதனது—கொலைவிடமூட்டியவெவ்வேன்மான - கொலைசெய்யு நஞ்சுபூசப்பட்டகொடிய வேல்போல —அஞ்சனமெழுதியவிழி - மையிடப்பட்டகண்ணானது—பொரவரலால்-தன்னோடு போர்செய்யவருதலினாலே—அதன்பகைதனை - அக்கண்ணின் பகையாகிய குவளைமலரை —தான்றுணைக்கொண்டுறுந்தகைபோல் - தான்பிடைத்துணையாகச் சேர்த்துவைத்திருக்கின்றதகைமைபோற்றோன்ற —பானல் - குவளைமலரை—ஒருபாவை - ஒருபெண்—அஞ்செவிமிசையணிந்தனள் - அழகியகாதின்மேற்சூடினாள். எ - று. (௯)

அடுத்து மாதவ மழிமினென் றனங்கவே டமக்கு
விடுத்த வோலையைக் கண்கடம் மேற்பழி விளம்பிற்

கொடுத்த வேண்மிசை நிந்தைகூ றுதற்குவைத் திருத்தல்
கடுத்து வாழ்தர வொருத்திபொன் னோலைகா தணிந்தாள்.

(இ - ள்.) அடுத்து - துறவோரையடுத்து—மாதவமழிமினென்று - அவரதுபெரியதவத்தை யழியுங்களென்று —அனங்கவே டமக்குவிடுத்த வோலையை - மன்மதனாலேதங்களுக்கு அனுப்பப்பட்டவோலைச்சுருள்களை—கண்கள் - கண்களானவை—தம்மேற்பழிவிளம்பின் - யாரேனுந்தம்மேல்நிந்தைசொல்வாராயின் —கொடுத்து - அவ்வோலைகளையவர்கையிற்கொடுத்து—அவ்வேண்மிசை - அந்தமன்மதன்மேல் —நிந்தைகூறுதற்கு - நிந்தைசொல்வதற்கு—வைத்திருத்தல்கடுத்து - தம்மருகேவைத்திருத்தலொத்து—வாழ்தர - தோன்றும்படிக்கு—ஒருத்தி—பொன்னோலை- பொன்னோலைச்சுருள்களை—காதணிந்தாள் - காதுகளிலேதரித்தாள். எ-று.

தன்னை நிந்தைசெய் வெண்ணகை மேற்பழி சார
மன்னி யங்கது நிகரற வாழ்மனை வாய்தன்
முன்னி றந்திடு வேனென ஞான்றுகொண் முறைமை
யென்ன வெண்மணி மூக்கணி யொருத்திநின் றிட்டாள்.

(இ - ள்.) தன்னைநிந்தைசெய்வெண்ணகைமேல் - தன்னையிகழ்கின்ற வெள்ளியநகையின்மேல் —பழிசார - நிந்தைசேரும்படி —மன்னி - நிலைபெற்று—அங்கதுநிகரறவாழ் - அப்பல்லானதுஒப்பறவாழ்கின்ற —மனைவாய்தன்முன் - வீடாகிய வாயின்முன்னேசென்று —இறந்திடுவேனென - சாவேனென்று—ஞான்றுகொண்முறைமையென்ன - நான்றுகொள் முறைமையதுபோற்றோன்ற —வெண்மணிமூக்கணி - வெள்ளைமுத்துக்கோத்தமூக்கணியை—ஒருத்திநின்றிட்டாள். எ - று. (கக)

கற்றை யங்குழ னறுமலர்த் தொடையொடு கனமா
யுற்ற ணங்குமென் றிலகுபூண் பிடித்ததை யொப்ப
விற்ற யங்குவா ணுதலெழின் மாயைதன் மிடற்றிற்
பொற்ற டந்தகட் டணியொரு மடவரல் புனைந்தாள்.

(இ - ள்.) கற்றையங்குழல் - கற்றையாயுள்ளகூந்தலானது—நறுமலர்த்தொடையொடு - நல்லமலர்மாலையோடு —கனமாயுற்று - பாரமாயுறுதலாலே —அணங்குமென்று - வருந்துமென்று —இலங்குபூண்பிடித்ததை யொப்ப - விளங்காநின்ற பொற்பூண் சேர்த்ததையொப்பாக—விற்றயங்குவாணுதலெழில் - விற்போற்றோன்றுகின்ற காந்திபொருந்திய நெற்றி

யையும் அழகையு முடைய—மாயைதன்மிடற்றில் - மாயையினுடையகண் டத்தில்—பொற்றடந்தகட்டணி - பொன்னாற் செய்யப்பட்ட பரப்பாகிய தகட்டுவடிவத்தையுடையூவணியை—ஒருமடவரல் - ஒருபணிப்பெண்— புனைந்தாள் - தரித்தாள். எ - று. (கஉ)

கன்னி யத்தழ்வந் தினமணிக் கற்கட கத்தின்
மன்னி யுற்றதற் புதமென வளைபல காக்க
வின்னு தற்கருங் கண்மட மாதுகை விளங்கப்
பொன்னி னற்கட கம்புனைந் தனளொரு பூவை.

(இ - ள்.) கன்னியத்தம்வந்து - மாயையினதுகைகள்வந்து, கன்னிராசியிலிருக்கின்ற அஸ்தநக்ஷத்திரம்வந்து —இனமணிக்கற்கடகத்தின்மன்னியுற்றது - ஒருசாதியாயுள்ளமணிக்கற்களையுடைய கடகத்தினுள்ளேநிலைபெற்றது, கூட்டமாகியமுத்துக்கள்போன்றகற்கடகராசியிலேநிலைபெற்றிருக்கிறது—அற்புதமென - ஆச்சரியமென்று சொல்லவும் —வளைபலகாக்க - வளைகள்பலவற்றையுங்காக்கவும்—வின்னுதல் - விற்போன்ற நெற்றியையும்—கருங்கண் - கரியகண்களையும்—மடம் - பேதைமையையுமுடைய—மாது - மாயையினது—கை - கைகளிலே—விளங்க - விளங்கும்படி— பொன்னினற்கடகம் - பொன்னுலாகியநல்லமணிக்கடகத்தை —ஒருபூவை - ஒருமங்கையானவள்—புனைந்தனள் - அணிந்தனள். எ - று. கன்னியத்த மென்பதுமுதல் உற்றது என்பதுவரையில் சிலேடை. (கங)

ஆயு மின்சுவை தரச்செலுங் கையுட னடுத்து
வாயி னொண்கவின் கா்ணிய மருவுறு மாபோன்
மாயை தன்கையிற் பொற்கட கத்தின்முன் வனைந்தா
டூய செம்பவ ளங்களைக் கோததொரு தோகை.

(இ - ள்.) ஆயுமின்சுவை - ஆராய்ந்துகொள்ளப்பட்ட இனியவறுவகைச் சுவைகளையுடையவுணவுகளை—தரச்செலும - தருதற்குச் செல்லுகின்ற—கையுடனடுத்து - கையோடுகூடிச்சென்று—வாயினொண்கவின் காணிய - வாயினதுஒள்ளிய அழகைக்காணுதற்பொருட்டு —மருவுறுமாபோல் - சேர்ந்திருக்குமாறுபோல—மாயைதன்கையில் - மாயையினது கையில்—பொற்கடகத்தின்முன்—தூய - குற்றமில்லாத—செம்பவளங்களைக்கோத்து—ஒருதோகை - ஒருமயில்போல்பவள்—வனைந்தாள் - கட்டினாள். எ - று. (கச)

மங்க லத்தொழி லாடவர் மனநடக் கிற்காக்
குங்கு மப்பெருஞ் சேற்றினைக் குறித்திடு கற்போன்
மங்கை யர்க்கொரு திலகமா கியவெழின் மாயை
கொங்கை யிற்புனைந் தனளொரு பெண்மணிக் கோவை.

(இ - ள்.) மங்கலத்தொழிலாடவர்மனம் - சுபமானசெய்கைகளையுடையசாலையரதுமனங்கள்—நடக்கிற்கா - நடத்தற்பொருட்டாக—குங்குமம் -செஞ்சார்ந்தாகிய—பெருஞ்சேற்றினைக்குறித்து—இடுசெற்போல்—இடப்பட்டகற்கள்போறமுன்ற —மங்கையர்க்கொருதிலகமாகிய - ஸ்திரீகளுக்குத் திலகம் போற்சிறந்தவளாகிய—எழின்மாயை - அழகையுடைய மாயையினது—கொங்கையில் - முலைகளின்மேல்—ஒருபெண்—மணிக்கோவை-நவமணிவடங்களை—புனைந்தனள் - அலங்கரித்தாள்.எ-று.(௧௫)

பாயும் வெண்டிரைக் கருங்கட னிலச்சுமைப் பாயபி
ளாயி ரமபடங் களுந்திறை யிட்டன வனைய
மீயி லங்கொளி விரிமணி மேகலை வேய்ந்தாண்
மாயை மங்கைத னல்குலி னொருதிரு மடந்தை.

(இ - ள்.) பாயும்வெண்டிரைக்கருங்கடனிலச்சுமைப்பாயபின் - பாய்கின்றவெள்ளியஅலைகளையுடைய கடலாற்சூழப்பட்ட நிலத்தைத்தலைச்சுமையாகவுடைய சேஷனது—ஆயிரமபடங்களும் - ஆயிரம்படங்களாலும்—திறையிட்டனவனைய - அரசிறையிடப்பட்டதுபோல்வனவாகிய—மீயிலங்கொளிவிரிமணிமேகலை - மேலாகவிளங்காநின்றகதிர்களைவிரிக்கின்ற மணிகளாலாகிய மேகலாபரணத்தை —ஒருதிருமடந்தை - திருமகள்போன்ற ஒருமாது —மாயைமங்கைதன் - மாயையினது —அல்குலின் - அல்குலின்மேல்—வேய்ந்தாள் - அலங்கரித்தாள். எ - று. (௧௬)

கறைய டிக்களி யானையின் வரவினைக் கண்டு
மறுகி னுற்றவ ரிரிதர மணிமருங் கிடல்போ
லுறுத வத்தின ரறிந்தன ரோடவொண் ணுதற்கு
நறும லர்ப்பதந் தணிந்தனள் சிலம்பொரு நங்கை.

(இ - ள்.) கறையடிக்களியானையின் - உரல்போலுமடிகளையும் களிப்பையுமுடைய யானையினது—வரவினைக்கண்டு - வருதலைக்கண்டு—மறுகினுற்றவரிரிதரர் - வீதியிற்சஞ்சரிக்கின்றவர்கள்அறிந்தோட—மணி - ம

ணிகளை—மருங்கிடல்போல் - இருபக்கத்திலுங்கட்டுதல்போல—உறுதவ த்தினர் - மிக்கதவத்தையுடையமுனிவர்—அறிந்தனரோட - தெரிந்து ஒடும்படிக்கு—ஒண்ணுதற்கு - ஒள்ளியநுதலையுடைய மாயைக்கு—ஒருந ங்கை - ஒருபணிப்பெண்—நறுமலர்ப்பதத்து - நல்லமலர்போன்ற அடிக ளிலே—சிலம்பு - சிலம்பை—அணிந்தனள். எ - று. (௧எ)

கூடை மென்மலர் மணத்தினு லறிந்தனைதக் குறுகப்
பாடும் வண்டினஞ் சூழ்தல்போ லிளைஞர்கண பரப்பத்
தேட ரும்பொரு ளனையவட் குறுநறுந் தேய்வை
பீடு றுங்குவி முலைக்கணிந் தனளொரு பேதை.

(இ - ள்.) கூடைமென்மலர் - குடலையகத்துள்ளமெல்லிய மலரை—ம ணத்தினுலறிந்து—அதைக்குறுக - அதைச்சேர—பாடும் வண்டினமும் - இராகங்களைப் பாடுகின்றவண்டினங்களானவை—சூழ்தல்போல் —இளை ஞர்கண்பரப்ப —ஆடவர்கள்கண்களைச்செறிக்க —தேடரும்பொருளனை யவட்கு - சம்பாதித்தற்கரியபொருள்போல்பவளுக்கு —உறுநறுந்தேய் வை - மிக்கநல்லசந்தனக்குழம்பை—பீடுறும - பெருமைபொருந்திய—கு விமுலைக்கு - குவிந்தமுலைகளிடத்தே —ஒருபேதை —அணிந்தனள் - பூசி னுள். எ - று. (௧அ)

நின்றன் விம்பமே நினக்கெதி ரன்றிவே றில்லை
யென்று கண்கொளத் தெளிந்தபே ராடியொன் றெடுத்தா
குன்றெ னுங்குவி முலையவ ளெதிர்கொடுங் குழைமேற் [ள்
சென்று சென்றுபா யரிமதர் மழைக்கண்ணோர் தெரிவை.

(இ - ள்.) நின்றன்விம்பமே - உனதுவடிவமே—நினக்கெதிர் - உனக் குபமானமாகும்—அன்றி - அஃதல்லாமல்—வேறில்லை - பிறிதொன்றில் லை—என்று - என்றுகாண்பிப்பவள்போல—கண்கொள - கண்களாற்கா ணும்வண்ணம் —தெளிந்தபேராடியொன்று - தெளிந்தவொருபெரிய க ண்ணுடியை —குன்றெனுங்குவிமுலையவளெதிர் - மலைகளெனப்படுகின்ற குவிந்தமுலைகளையுடையவள் முன்னே—கொடுங்குழைமேல் - வளைவாகிய குழையையுடையசெவிகளின்மேல் —சென்றுசென்றுபாய் —அரிமதர்ம ழைக்கண் - அரிகளையும் களிப்பையும் குளிர்ச்சியையுமுடைய கண்களையு டையவளாகிய —ஓர்தெரிவை - ஒருமாது —எடுத்தாள் - தாங்கினுள். எ - று. (௧௬)

வீர வேள்வளை யாதசெங் கரும்பவன் வில்லி
ஞரி மேலிடா மலர்மறு விலாநகை மதியங்
காரு ருதமின் கடற்பிற வாதவின் னமுதம்
வேரி லாதபூங் கொடியென விளங்கினள் மாயை.

(இ - ள்.) வீரவேள்வளையாதசெங்கரும்பு - வீரத்துவத்தையுடையமன் மதனுலே வளைக்கப்படாத செங்கரும்பும் —அவன்வில்லிஞரிமேலிடாமல ர் - அவன்வில்லினதுநாணின்மேல் தொடுக்கப்படாதமலரும்—மறுவிலா நகைமதியம் - களங்கமில்லாதவொளியையுடைய சந்திரனும் —காருருத மின் - மேகத்தைச்சேராதமின்னலும்—கடற்பிறவாதவின்னமுதம் - க டலிலேதோன்ருதவினிதாகியவமுதமும் —வேரிலாதபூங்கொடியென - வேரில்லாதமலர்வல்லியுமென்றுசொல்ல—மாயைவிளங்கினள். எ - று.

மாத ரிவ்வகை யணியலு மதுகைநா யகன்றன்
பாத தாமரை யருச்சனைப் பொருள்கள்பற் பலவு
நீதி யாலமைந் தனவினி நிகரிலெம் பிராட்டிப்
போது வாயென வொருமட மாதெதிர் புகன்ருள்.

(இ - ள்.) மாதரிவ்வகையணியலும் - பணிப்பெண்களிவ்வண்ணமலங்க ரித்தலும்—மதுகைநாயகன் - மதுகேஸ்வரனது—பாததாமரை-பாததா மரைக்குச்செய்யப்பெறும்—அருச்சனைப்பொருள்கள் - பூஜோபகரணங் கள்—பற்பலவும் - பலபலவும்—நீதியாலமைந்தன - முறைமையால்நிறை ந்தன —இனி —நிகரிலெம்பிராட்டி - ஒப்பில்லாத எம்முடையதலைவி யே—போதுவாயென - பூசைக்குச்செல்லுவாயாகவென்று—ஒருமடமா து - இளமையையுடையவொருமங்கையானவள் —எதிர்புகன்ருள் - எதி ரேநின்றுசொல்லினுள். எ - று. (௨௧)

மயி லெழுந்தென வெழுந்தனள் கோமகள் வாழ்த்திக்
குயிலெ ழுநதென வெழுந்தன மடந்தையர் குழாங்க
ளியிலெ ழுநதென வெழுந்தன நூபுரத துழனி
வெயி லெழுநதென வெழுந்தன மணியணி விளக்கம்.

(இ-ள்.) கோமகள்-மாயை—மயிலெழுந்தென-மயிலெழுந்ததுபோல— எழுந்தனள்—குயிலெழுந்தென-கோகிலங்களெழுந்ததுபோல—மடந்தை யர்குழாங்கள் - மகளிர்கூட்டங்கள்—வாழ்த்தி - அவளைவாழ்த்தெடுத்து—

எழுந்தன —நூபுரத்துழனி-அவரடிச்சிலம்போசைகள்—துயிலெழுந்தென - தூக்கத்தினின்றுமெழுந்தாற்போல்— எழுந்தன—மணியணிவிளக்கம் - மணிகளாலாகிய ஆபரணங்களினது காந்திகளானவை—வெயிலெழுந்தென - வெயில்தோன்றுவதுபோல்—எழுந்தன. எ - று. (உஉ)

பொன் னிலங்கிய சிவிகைமுன் கொணர்ந்தனர் பொறு
மன்னி யங்கதை யேறினள் மதர்விழி மாயை [ப்போர்
சின்னம் வெண்பணி லம்பணை தண்ணுமை திமிலை
முன்னி ரைந்தன மதியெழக் கடன்முழங் குதல்போல்.

(இ - ள்.) பொறுப்போர் - சுமப்போர் —பொன்னிலங்கிய - பொன்னாற்செய்யப்பட்டுவிளங்குகின்ற —சிவிகை - தண்டிகையை —முன்கொணர்ந்தனர் —அங்கு —மதர்விழிமாயை - களிப்புப்பொருந்தியகண்களையுடையமாயை—மன்னி - விருப்பமுற்று —அதையேறினள் - அச்சிவிகையிலேறினள்—சின்னம் - திருச்சின்னங்களும் —வெண்பணிலம் - தவளச்சங்கங்களும—பணை - பேரியும்—தண்ணுமை - மத்தளமும்—திமிலை - பம்பையும்—மதியெழ-சந்திரனுதயஞ்செய்ய—கடல்—முழங்குதல்போல் - ஒலித்தல்போல்—முன்னிரைந்தன-அவள்முன்னே ஒலித்தன.எ-று.உ௩)

ஆன்றி ரட்டுறுங் கண்ணன்வாய்க் குழலிஃ தணிபூண்
மான்றி ரட்டுறு மெனக்குழ லூதினர் மலர்விற்
கோன்றி ரட்டிய வமுதனை யாண்முனங் குறுகி
மூன்றி ரட்டிய முகமுடை முருகனு முருக.

(இ - ள்.) கண்ணன்வாய்க்குழல் - கோபாலனதுவாயாலூதப்பட்ட புள்ளாங்குழலானது —ஆன்றிரட்டுறும் - பலவிடங்களிலுஞ்சிதறிநின்றபசுக்களை ஒரிடத்திற்சேர்ப்பதாகும் —இஃது - இப்புள்ளாங்குழலோவெனின்—அணிபூண் - அலங்கரிக்கப்பட்ட ஆபரணங்களையுடைய—மான்றிரட்டுறும் - மான்போலுள்ளமகளிரைச்சேர்ப்பதாகும் —என - என்றுசொல்லும்படிக்கு —மலர்விற்கோன்றிரட்டிய - அழகியகருப்புவில்லையுடைய மன்மதனாலே திரட்டியெடுக்கப்பட்ட —அமுதனையாள் - அமுதம்போல்பவளாகிய மாயைக்கு —முனங்குறுகி - முன்னேசிலமங்கையர்சென்று —மூன்றிரட்டியமுகமுடை - மூன்றையிரட்டுதலாலாகிய ஆறுமுகத்தையுடைய —முருகனும்—உருக - உள்ளங்குழையும்படி—குழல் - புள்ளாங்குழலை—ஊதினர். எ - று. (உச)

வயங்கு மாயையங் கரும்பினிற் றாழ்ந்தவர் மாவி
னுயர்ந்த மாதரா ரூற்றிருந் தொழூகுகண் மலரை
நயந்து சூழ்தரு மளியினண் ணினர்பிறர் காலா
லியங்கு மாதிரு புடையினு மிடையற வீண்டி.

(இ - ள்.) வயங்கும் - விளங்காநின்ற—மாயையங்கரும்பினில் - மாயை யாகியஅழகியகரும்பினின் றும் —தாழ்ந்தவர் - தாழ்ந்தவரும்—மாவினுயர் ந்தமாதரார் - திருமகளினு முயர்ந்தவருமாகியமகளிர் —ஊற்றிருந்தொழு குகண்மலரை - தன்னுள்ளே ஊற்றாகவிருந்துஒழுகாநின்றதேனையுடைய மலரை—நயந்துசூழ்தருமளியின் - விரும்பிச்சூழ்கின்றவண்டுகள்போல— பிறர்காலாலியங்கும் - பிறருடையகால்களாலேசெல்லுகின்ற—மாது - மா யையினுடைய —இருபுடையினும் - இருபுறத்தும் —இடையற - இடை வெளியில்லாமல்—ஈண்டி - நெருங்கி—நண்ணினர் - சூழ்ந்தனர். எ - று.

வேளளித்தனன் றன்குடை யெனக்குடை விதிர்க்கும்
வாளெ னப்பிறழ் மதர்நெடுங் கண்ணிபான் மருவக்
காள மொத்தகண் மடந்தையர் பலரிளங் கமுகின்
பாளை யொத்தவெண் கவரிவீ சினரிரு பாலும்.

(இ - ள்.) வேள் - மன்மதனானவன்—தன்குடை - தனதுசந்திரனாகிய குடையை—அளித்தனனென - இவளுக்குக்கொடுத்தானென்றுசொல் லும்படிக்கு—குடை - வெள்ளைக்குடையானது—விதிர்க்கும்வாளென - அ சைக்கப்பட்டவாள்போல —பிறழ் - புரளுகின்ற —மதர்நெடுங்கண்ணிபா ல் - களிப்பையு நெடுமையையுமுடையகண்ணையுடையமாயையின்பக்கத் தில்—மருவ - பொருந்த—காளமொத்தகண்மடந்தையர்பலர் - நஞ்சம் போலுங்கண்களையுடையமகளிர்பலர்—இளங்கமுகின்பாளையொத்த—வெ ண்கவரி - வெண்சாமரைகளை—இருபாலும் - இரண்டுபக்கத்திலும்—வீசி னர். எ - று. (உகூ)

காமவெந்தழன் மூட்டல்போற் கடிமலர்ச் சிவிறி
தாம சைந்தன பொய்க்கணை சொரிந்துவிற் றடக்கைக்
கோம கன்றிரூந் திழையுள மறிதல்போற் குறுகிப்
பூம டந்தையை வென்றவர் பூமழை பொழிந்தார்.

(இ - ள்.) காமவெந்தழல் - காமமாகியவெவ்வியநெருப்பை—மூட்டலை போல் - மூட்டுதல்போல் —கடிமலர்ச்சிவிறி - மணம்பொருந்திய மலர்க

ளாற்செய்யப்பட்டவிசிறிகள் —அசைந்தன—விற்றடக்கைக்கோமகன் - கருப்புவில்லேந்திய நெடியகையினையுடைய மன்மதனானவன் —பொய்க்கணைசொரிந்து - பொய்யம்புகளைச்சொரிந்து —திருந்திழையுளமறிதல்போல் - மாயையினுடையகருத்தையறிதல்போல—பூமடந்தையையென்றவர் - அழகினால்திருமகளையென்றமகளிர்—குறுகி - நெருங்கி—பூமழை - மலர்மாரியை—பொழிந்தார் - சொரிந்தனர். எ - று. தாம் - அசை. (உ௭)

பாகு வெள்ளிலை சந்தனங் குங்குமம் பளித
மோகை மான்மதம் வண்டிமிர் நறுமல ரொலியல்
பேர்கெ ழும்பணிப் பெட்டிமென் றுகிலுடைப் பேழை
தோகை மார்பலர் மருங்கினிற் சுமந்துபோ யினரால்.

(இ - ள்.) பாகுவெள்ளிலை - பாக்குவெற்றிலையும் —சந்தனம் - சந்தனமும்—குங்குமம் - செஞ்சாந்தும்—பளிதம் - பச்சைக்கர்ப்பூரமும்—ஓகை மான்மதம - மகிழ்ச்சியைச்செய்கின்றகஸ்தூரியும் —வண்டிமிர்நறுமலரொலியல் - வண்டுகளொலிக்கின்ற நல்லமலர்மாலையும் —பேர்கெழும்பணிப்பெட்டி - பெருமைபொருந்திய ஆபரணப்பெட்டியும் —மென்றுகிலுடைப்பேழை - மெல்லியவஸ்திரங்களையுடைய பெட்டியுமாகியவிவற்றை —தோகைமார்பலர் - பலமகளிர் —மருங்கினிற் சுமந்துபோயினர். எ - று. ஆல் - அசை. (உ௮)

கொங்கை யங்குவி முகிழ்விழிக் கயலிதழ்க் குமுத
மங்கை யம்புய முந்தியஞ் சுழியிவை யடுத்துப்
பொங்கு றுங்கவி னீர்பெரு காற்றினைப் புரையு
மங்க லந்திகழ் வுறுமணி மாளிகை மறுகு.

(இ - ள்.) கொங்கையங்குவிமுகிழ் - முலைகளாகியஅழகியகுவிந்ததாமரையரும்புகளும்—விழிக்கயல் - கண்களாகியகெண்டைகளும்—இதழ்க்குமுதம் - வாயாகியஆம்பலும்—அங்கையம்புயம் - அழகியகைகளாகியதாமரைமலர்களும்—உந்தியஞ்சுழி - நாபியாகியசுழிகளும்—இவையடுத்து - ஆகியவிவைகளையடுத்து—மங்கலந்திகழ்வுறும் - சுபம்விளங்குகின்ற—மணிமாளிகை - அழகியவீடுகளையுடைய—மறுகு - வீதி—பொங்குறும் - மேற்படுகின்ற —கவினீர்பெருகு - அழகாகியநீர்பெருகாநின்ற—ஆற்றினைப்புரையும - ஆற்றையொக்கும். எ - று. (உ௯)

திங்கள வாணுதன் மடந்தையர் செஞ்சிலம் பொலியுஞ்
சங்கி ேனாடணி கலன்களின் சிற்றெலி தாமுங்
கொங்கு லாமலர்த் தொடையளி யிசைகளுங் குழுமிப்
பொங்கு மாழியிற் பஃறுளி பெருகுதல் போன்று.

(இ - ள்.) திங்கள்வாணுதல் - சந்திரன்போ லொளிபொருந்தியநெற்றி யையுடைய—மடந்தையர் - மகளிரது—செஞ்சிலம்பொலியும்—செம்பொற்சிலம்போசையும்—சங்கினோடு - வளைகளோடு—அணிகலன்களின் சிற்றொலிதாமும் - ஆபரணங்களினது சிறியவொலியும்—கொங்குலாம் - பரிமளமுலாவுகின்ற—மலர்த்தொடையளியிசைகளும் - மலர்மாலைகளினுள்ள வண்டுகளினோசையும்—குழுமி - கூடி—பஃறுளிபெருகுதல்போன்று - பலநீர்த்துளிகள்சேர்ந்துபெருகுதலையொத்து—ஆழியின் - கடல்போல—பொங்கும் - மிகுந்தொலிக்கும். எ - று. (௫௦)

துன்று பெண்படை சூழ்வர மாயையந் தோகை
வென்றி யங்கனன் மழுவினேன் விழியினால் வேளைக்
கொன்ற தென்னெனக் கேட்பமென் றுளவலி கொண்டு
சென்று றுஞ்செய லென்னவத் தெருவிடைச் சென்றாள்.

(இ - ள்.) துன்றுபெண்படைசூழ்வர - இவ்வாறுநெருங்கியமகளிர்சேனைசூழ்ந்துவாராநிற்க—மாயையந்தோகை - அழகிய தோகைபோல்பவளாகியமாயை—வென்றியங்கனன்மழுவினேன் - வெற்றியைக்கொண்டு அழகாகப்பிரகாசிக்கின்றமழுவேந்தியபரமசிவன்—விழியினால் - நெற்றிக்கண்ணினால்—வேளை - மன்மதனை—கொன்றதென்னென - கொன்றதற்குக்காரணமியாதென்று—(அவரைக்) கேட்பமென்று—உளவலிகொண்டு - தைரியங்கொண்டு—சென்றுறுஞ்செயலென்ன - போகின்றசெயல்போல—அத்தெருவிடை - அவ்வீதியினிடத்து—சென்றாள் - போயினாள். எ - று. (௫௧)

வேறு.

அரிமதர் மழைக்கணல் லரிவை தன்புடை
வருமட வரலியா வனப்பு காண்டலு
மெரிபுரை விழியரி யேறு போல்பவர்
கரிநுகர் வெள்ளிலங் கனியை யொத்தனர்.

(இ - ள்.) அரிமதர்மழைக்கண் - அரிகளையும் களிப்பையும் குளிர்ச்சியையுமுடைய கண்களையுடைய—நல்லரிவைதன்புடை - நல்லமாயையினது

பக்கங்களில்—வரும் - சூழ்ந்து வருகின்ற—மடவரலியர் - மகளிரது—வனப்புகாண்டலும் - அழகைக்கண்டவளவில் —எரிபுரைவிழி—தீப்போலுள்ள கண்களையுடைய—அரியேறுபோல்பவர் - ஆண்சிங்கத்தையொத்தஆடவர் —கரிநுகர்வெள்ளிலங்கனியை - யானையாலுண்டுமிழப்பட்டவிளாம்பழத்தை—ஒத்தனர். எ - று. (௩௨)

இடையொரு சற்றுவா ணுதல்சற் றேழையர்
படைவிழி சற்றுவாய்ப் பவளஞ் சற்றிணைக்
குடமொரு சற்றிவண் கொள்ளை கொள்ளநம
புடைபெய ரறிவெலாம் போயிற்றே யென்பார்.

(இ - ள்.) நம்புடைபெயரறிவெலாம் - நன்னடைக்குக்காரணமாகியநமதுவிரிந்தஅறிவையெல்லாம் —ஏழையர் - மகளிரது —இடையொருசற்று - இடையொருசிறிதும்—வாணுதல்சற்று - ஒளிபொருந்தியநெற்றியொருசிறிதும்—படைவிழிசற்று - வாள்போலுள்ளவிழியொருசிறிதும்—வாய்ப்பவளஞ்சற்று - வாயாகியபவளமொருசிறிதும் —இணைக்குடமொருசற்று - இரண்டுகுடம்போன்றமுலைகளொருசிறிதும் —இவண்கொள்ளைகொள்ள - இவ்விடத்திலே கொள்ளைகொள்ளுதலாலே—போயிற்றேயென்பார் - அவைமுழுதுமபோயிற்றேஇனியென்செய்துமென்பார்கள். எ - று.)

இனத்தியல் பாமறி வென்ப துணமையே
மனத்துயர் செயுமயன் மாற்று நீறுதா
னனிச்சமெல் லடியினா் நுதல டுத்தலும்
பணித்துடல் வெதும்புமால் படுத்தலா லென்பார.

(இ - ள்.) அறிவு - மனிதர்க்குள்ளஅறிவு—இனத்தியல்பாம் - அவர்சேர்ந்திருக்குமினத்தினதுஇயல்பினையுடையதாகும்—என்பது - என்றுசொல்லப்படுவது—உண்மையே - சத்தியமே —மனத்துயர்செயுமயல் - மனோதுக்கத்தைச்செய்கின்ற காமமயக்கத்தை—மாற்றுநீறு - நீக்குகின்றவிபூதி —அனிச்சமெல்லடியினர்நுதலடுத்தலும் - அனிச்சமலரினுமெல்லிய அடியையுடையாரதுநெற்றியைச்சார்ந்தவளவில்—மால்படுத்தலால் - காமமயக்கத்தைச்செய்தலால்—உடல் - எம்முடம்புகள்—பனித்துவெதுமபும் - வியர்த்துவேகின்றன —என்பார் - என்றுசொல்லுவார். எ - று. தான் - அசை. (௩௪)

தொல்லைநஞ் சடர்துயர் சொல்லக் காத்தவன்
வல்லிபங் குடையருண் மதுகை நாயகன்
செல்லுமங் கையர்விழி நஞ்சு செய்வதுஞ்
சொல்லுது மவனொடு தொழுதுநா மென்பார்

(இ - ள்.) வல்லிபங்குடை - உமாதேவியைத்தனது பாதியுடம்பின்கண்ணேயுடைய—அருண்மதுகைநாயகன் - அருள்வடிவினனாகியமதுகேஸ்வரன் —தொல்லை-முன்னொருகாலத்திலே—நஞ்சடர்துயர்சொல்ல—நஞ்சம்வருத்தலாலுண்டாகிய துன்பத்தைச்சொல்ல—காத்தவன் - அத்துன்பத்தைநீக்கிக்காத்தவன்— (ஆதலால்) —செல்லு மங்கையர்விழிநஞ்சு செய்வதும் - மாயையோடு செல்லுகின்ற மகளிரது கண்ணாகிய நஞ்சுசெய்யுந்துன்பத்தையும்—நாம் —தொழுது - வணங்கி —அவனொடுசொல்லுது மென்பார் - அம்மதுகேசனோடுசொல்லுவோமென்பார். எ - று. (௫௫)

இக்குழுமகளிருள் யார்வ னப்பினன்
மிக்கவ ளெனத்தமை வினவி னொரெதிர்
முக்கனி களுட்சுவை முதிர்ச்சி பெற்றுள
தெக்கனி யதனைநீ ரியம்புவீ ரென்பார்.

(இ - ள்.) இக்குழுமகளிருள் - இக்கூட்டமாகியமங்கையருள்—யார்வனப்பினன்மிக்கவளென - அழகிற்சிறந்தவள் எவளென்று—தமைவினவினொரெதிர் - தம்மைக்கேட்பவர்க்குஎதிர்மொழியாக —முக்கனிகளுள் - மா வாழை பலா வென்னுமூன்று கைப்பழங்களுள்—சுவைமுதிர்ச்சிபெற்றுளது - முதிர்ந்தமதுரமுள்ளது—எக்கனி - எந்தப்பழம்—அதனை—நீர்—இயம்புவீரென்பார் - சொல்லுங்களென்பார். எ - று. (௫௬)

கரும்பினு மினியசெங் கயற்க ணாரிளங்
குரும்பையும் பயன்படாக் கோவை தன்னையும்
விரும்பின முலகர்முன் வீணி னெஞ்சகம்
வருந்துத னகைதரு மடமையே யென்பார்.

(இ - ள்·) கரும்பினுமினிய - கரும்பினுமிகவின்பஞ்செய்கின்ற—செங்கயற்கணார் - சிவந்தகயல்போலுங்கண்களை யுடையமகளிரது—பயன்படா - நமக்குபயோகமாகாத —இளங்குரும்பையும் - ஸ்தனங்களாகிய இளங்குரும்பையையும் —கோவைதன்னையும் - அதரமாகியகோவைக்க

ணியையும்—விரும்பினம் - விரும்பினேமாய் —உலகர்முன் —வீணினெ ஞ்சகம்வருந்துதல் - பயனில்லாமல் மனம்வருந்துதற்குக்காரணம் —ந கைதருமடமையேயென்பார் - யாவரும்நகைக்கத்தக்க நம்முடையஅறி யாமையே யென்பார். எ - று. (௩எ)

விடங்குலா மதர்விழி விரைத்தண் பூங்குழ
னுடங்குநூ லிடைப்பிறை நுதற்பொற் கொம்பனார்
குடங்கநா ணுறுமிளங் குவவுக் கொங்கைபோ
லுடம்பெலா மூடினு முய்யலா மென்பார்.

(இ - ள்.) விடங்குலாமதர்விழி - விஷம்பொருந்தியமதர்த்தகண்களையு ம்—விரைத்தண்பூங்குழல் - பரிமளம்பொருந்தியதண்ணியமலர்வனைந்தகூ ந்தலையும் —நுடங்குநூலிடை - துவள்கின்ற நூல்போலுள்ளஇடையையு ம்—பிறைநுதல் - பிறைபோலுள்ளநெற்றியையுமுடைய—பொற்கொம்ப னார் - பொன்னலாகிய பூங்கொம்புபோல்பவர் —குடங்கள்—நாணுறும் - நாணத்தக்க —இளங்குவவுகொங்கைபோல் - இளமையையும்திரட்சி யையுமுடையதமதுமுலைகளைமூடியதுபோல —உடம்பெலாமூடினுல்-தே கமுழுவதையுமூடினுல் —உய்யலாமென்பார் - பிழைக்கலாமென்பார்க ள். எ - று. (௩அ)

இவ்வணங் கருத்தழிந் திளைஞர் மாழ்குறக்
கொவ்வையங் கனியிதழ்க் கோதை மாரொடு
மௌவலங் குழலெழின் மாயை யென்பவ
ளவ்வரன் கோயிலி னருகு போயினள்.

(இ - ள்.) இவ்வணம் - இத்தன்மையாக —கருத்தழிந்து —இளைஞர் மாழ்குற - காளையர்மயங்காநிற்க—கொவ்வையங்கனியிதழ் - கொவ்வைக் கனிபோன்ற அழகியஅதரத்தையுடைய —கோதைமாரொடும் - மங்கை யரோடும்—மௌவலங்குழல் - மல்லிகைமாலையணிந்த அழகிய கூந்தலையு டைய—எழின்மாயையென்பவள் - அழகியமாயையென்றுசொல்லப்படுப வள் —அவ்வரன்கோயிலினருகு-அந்தமதுகேசர்கோயிலினருகே—போ யினள். எ - று. (௩கூ)

சிவிகையி னிழிந்துதன் சென்னி தாங்கிய
குவிகையி னொடுபுகாக் கோபு ரத்துள்வெண்

கவிகைய னெனுமம காரன் கன்னிகட்
செவிகையி னணிபர னெதிர்சென் றுளரோ.

(இ - ள்.) வெண்கவிகையனெனும் - தவளக்குடையை யுடையவனெ ன்றுசொல்லப்படுகின்ற —மமகாரன்கன்னி - மமகாரவரசனதுபுதல்வி யானவள் —சிவிகையினிழிந்து - தண்டிகையினின்று மிழிந்து—தன்செ ன்னிதாங்கியகுவிகையினெடு - தனதுதலையாற்றுங்கப்பட்டகுவிந்தகையு டனே—சோபுரத்துள்புகா - கோபுரவாயிலுட்புகுந்து—கட்செவி - சர்ப் பகங்கணத்தை—கையினணிபரன் - திருக்கரங்களினணிகின்ற மதுகேச ரது—எதிர்சென்றுள் - சந்நிதியிற்சென்றுள். எ-று. அரோ-அசை. (சo)

வேண்டிய வனைத்தையு மேவன் மெல்லிய
ராண்டரு குறவமைத் தளிப்ப மாயைதான்
காண்டகு நுதல்விழிக் கடவுட் கன்புளம்
பூண்டன ளருச்சனை புரிதன் மேயினுள்.

(இ - ள்.) மாயை - அப்படிசென்றமமகாரன்புதல்வி —வேண்டியவ னைத்தையும் - அப்பூசைக்குவேண்டிய உபகரணங்களையெல்லாம் —ஏவ ன்மெல்லியர் - பணிவிடைசெய்யும்பெண்கள்—ஆண்டு - அவ்விடத்தில்— அருகுறவமைத்து - பக்கத்திலேநிறைத்துக்கொண்டு—அளிப்ப - உதவாநி ற்ப —காண்டகுநுதல்விழிக்கடவுட்கு - காணத்தக்க நெற்றிக்கண்ணையு டைய மதுகேசருக்கு—அன்புளம்பூண்டனள் - மனத்தின்கண்அன்புபூண் டவளாகி —அருச்சனைபுரிதன்மேயினுள் - பூசைசெய்யத்தொடங்கினுள். எ - று. தான் - அசை. (சக)

ஆதிய வரன்முறை செய்த ருக்கிய
மாதிய கொடுபர னணிந்தி ருந்தபூ
வாதிய களைந்துமந் திரம றைந்துநம்
மாதியை மஞ்சன மாட்டன் மேயினுள்.

(இ - ள்.) ஆதிய - பூசைக்குமுதலிலேசெய்யவேண்டிய சடங்குகளை யெல்லாம்—வரன்முறைசெய்து - விதிப்படிசெய்து—அருக்கியமாதியகொ டு - அருக்கியமுதலானவைகளைக்கொண்டு —பரனணிந்திருந்தபூவாதியக ளைந்து - கடவுளணிந்தமலர்முதலானவைகளைக்கழித்து—மந்திரமறைந்து- மந்திரஞ்சொல்லி—நம்மாதியை - நமதுகடவுளை —மஞ்சனமாட்டன்மே யினுள் - திருமஞ்சனமாட்டத்தொடங்கினுள். எ - று. (சஉ)

வேறு.

தயிலமுட ளனிடத்தைந் தையமுத நறுநெய்பா றயிர்
செ ழுந்தேன், வயலினெழு கரும்புடைத்துக் கொள்சாறு பழ
ம் பிழிந்த மதுரச் சாறு, புயலளவு தாழையிள நீர்நறுஞ்சந்
தனக்குழம்பு போற்று நூலி, னியலினமை தபனமிவை யொ
ன்றன்பி னென்றுமுறை யிறைவற் காட்டி.

(இ - ள்) தைலம் - எண்ணெயும்—ஆனிடத்தைந்து - பஞ்சகவ்வியமு
ம்—ஐயமுதம் - பஞ்சாமிர்தமும்—நறுநெய் - நல்லநெய்யும்—பால் - பா
லும்—தயிர் - தயிரும்—செழுந்தேன் - செழித்ததேனும்—வயலினெழு -
வயலிலேயெழுகின்ற —கரும்புடைத்துக்கொள்சாறு - கரும்பையுடைத்
தெடுத்துக்கொண்டவிரதமும்—பழம்பிழிந்தமதுரச்சாறு - கனிகளைப்பி
ழிந்ததித்திப்பையுடையவிரதமும்—புயலளவு - மேகமண்டலத்தையளா
விய—தாழையிளநீர் - தெங்கினிடத்துக்கொண்ட இளநீரும்—நறுஞ்சந்
தனக்குழம்பு - பரிமளத்தையுடைய சந்தனக்குழம்பும்—போற்றும்
போற்றுகின்ற—நூலினியலினமை - வேதாகமவிதிப்படியமைந்த—தப
னம் - ஸ்தபனகலசநீரும்—இவை - இவைகளெல்லாம்—ஒன்றன்பினொ
ன்று—முறை - முறையாக—இறைவற்காட்டி - மதுகேசருக்கு அபி
ஷேகித்து. எ - று. (௬௩)

சங்குலவு மென்கைநெடுஞ் சுடரிலைவேல் விழிமாயை சா
ம்பற் பூத்து, மங்கலமா கியமேனி முழுவதுஞ்சந் தனத்திரளை
மலியச் சாத்தித், திங்களெனு மொருசிறுகூன் முதுகிப்பி யீன்
றதெனச் சினவெள் ளேற்றான், கங்கைமுடி மீதினில்வெண் ணி
லவெறிக்கு நித்திலவக் கதையு மிட்டாள்

(இ - ள்.) சங்குலவுமென்கை - வளைகளுலாவுகின்ற மெல்லியகைகளை
யும்—நெடுஞ்சுடரிலைவேல்விழி - நெடியதும் ஒளியதும்தகட்டுவடிவினது
மானவேல்போலுள்ள விழிகளையுமுடைய —மாயை— சாம்பற்பூத்தும் -
நீறுமேற்பூத்தும் —மங்கலமாகியமேனிமுழுவதும் - மங்களகரமாயுள்ள
திருமேனியனைத்தும்—சந்தனத்திரளை - சந்தனவுருண்டைகளை —மலிய
ச்சாத்தி - நிறைய அப்பி—திங்களெனுமொருசிறுகூன்முதுகிப்பி - சந்திர
னெனப்படுகின்றசிறியதும்வளைந்த முதுகினதுமான ஒருசிப்பியினுலே—
ஈன்றதென - பெறப்பட்டதென—சினவெள்ளேற்றான் கங்கைமுடிமீதி

னில் - முனிவையுடையவெள்ளிய இடபவூர்தியையுடைய கடவுளது கங்கையைத்தரித்த தலையின்மேல் —வெண்ணிலவெறிக்கும் - வெள்ளியசந்திரிகையைப்பரப்புகின்ற— நித்திலவக்கதையுமிட்டாள் - முத்தாலாகிய அக்ஷதையுமிட்டாள். எ - று. (சச)

பிறைதவழு நெடுஞ்சடையெம் பெருமானைச் சார்ந்துசர்
ப்ப பிராந்தி மேவ, நறுமலர்மென் றொடைமாலை பலவணைந்து
கூர்ங்கோட்டு நால்வாய்ச் சீற்றக், கறையடியி னுரிசுமந்த தி
ருமேனி யழகுறநுண் கலைபு னைந்திட், டிறைவனெலும் பணி
நாண வவிர்மணிப்பூண் பற்பலவு மெடுத்த ணிந்தாள்.

(இ - ள்) பிறைதவழுநெடுஞ்சடையெம் பெருமானை - பாலசந்திரன் தவழுகின்ற நெடியசடையினையுடைய எமதுகடவுளை—சார்ந்து - அடுத்து —சர்ப்பபிராந்திமேவ - சர்ப்பமென்னுமயக்கமுண்டாக —நறுமலர்மென்றொடைமாலைபலவணைந்து - நறியமலராலாகியது மெல்லியதுமாகிய தொடுக்கப்பட்டமாலைகள் பலதரித்து—கூர்ங்கோட்டு - கூரியமருப்புகளையும்—நால்வாய் - தொங்குகின்றவாயையும்—சீற்றம் - கோபத்தையும்—கறையடி - உரல்போலுள்ள அடிகளையுமுடையயானையினது—ஈருரிசுமந்த - உரிக்கப்பட்டபோர்வையைத்தாங்கிய—திருமேனியழகுற—நுண்கலைபுனைந்திட்டு - நுண்ணிய இழையினாலாகிய ஆடையைத்தரித்து—இறைவன் - கடவுளது—எலும்பணிநாண - எலும்பாகிய ஆபரணங்களெல்லாநாணும்படி —அவிர்மணிப்பூண் - விளங்குகின்றமணியினாலாகியஆபரணங்கள்—பற்பலவும் - பலபலவும்—எடுத்தணிந்தாள். எ - று. (சரு)

நற்றாமங் கமழ்நித்திய கல்லியாணி மணாளர்க்கு நானஞ்
சாத்திப், பெற்றானங் கடிதலிலாக் கறிமருவு போனகங்கள்
பிச்சை யல்லான், மற்றொன்றென் றில்லாத பெருந்தகைக்கு நி
வேதித்து வண்டு கிண்டி, யுற்றாதுங் கடிமலர்மென் குழன்ம
டவாள் வெள்ளிலையு முவந்த ளித்தாள்.

(இ - ள்.) நற்றாமங்கமழ் - நற்புகைகமழ்கின்ற—நித்தியகல்லியாணிமணாளர்க்கு - நித்தியகல்யாணியென்னும்பெயரையுடையஉமாதேவியினது மணத்திற்குரியகணவற்கு—நானஞ்சாத்தி-கஸ்தூரியணிந்து—ஊனம்பெற்று—கடிதலிலா —களையப்படுதலில்லாத —கறிமருவுபோனகங்கள் - கறிகள்பொருந்திய உண்டிகளை—பிச்சையல்லால் - பிச்சையுண்டியன்றி—

மற்றொன்றில்லாதபெருந்தகைக்கு - மற்றோருண்டியில்லாதகடவுளுக்கு—நிவேதித்து—வண்டுகின்டியுற்று - வண்டுகளானவைகிண்டிக்குடியிருந்து —ஊதும் - ஊதுகின்ற—கடிமலர்மென்குழன்மடவாள் - மணத்தையுடையமலரையணிந்த மெல்லியகூந்தலையுடையமாயை—உவந்து - மகிழ்ந்து—வெள்ளிலையுமளித்தாள் - தாம்பூலமுங்கொடுத்தாள். எ - று. ()

நறியபுகை செழுஞ்சுடர்மென் சிவிறியொடு வெண்கவரி நாடு மாடி, நெறிமுறையி னெடுங்கடல்போ லியமுழங்க நின்றுதவி நிமலன் றன்னைப், பிறைநுதலிவ் வகைபூசை புரிந்துதுதி பலசெய்து பெருகு மன்பான், மறைபுகலு மஞ்செழுத்து மறைந்துவலம் வந்துமுனம் வணங்கிப் பின்னர்.

(இ - ள்.) நறியபுகை - பரிமளதூபமும் —செழுஞ்சுடர் - செழியதீபமும்—மென்சிவிறி - மெல்லியவிசிறியும்—வெண்கவரி - வெள்ளியசாமரமும் —நாடுமாடி - நிழல்பார்க்கின்றகண்ணாடியும்—நெறிமுறையின் - விதிப்படி—நெடுங்கடல்போலியமுழங்க - நெடியகடல்போல் வாத்தியமுழங்க —நின்றுதவி - முன்னின்றுசமர்ப்பித்து —நிமலன்றன்னை - கடவுளை—பிறைநுதல் - பிறைபோலுள்ளநெற்றியையுடைய மாயையானவள்—இவ்வகைபூசைபுரிந்து —துதிபலசெய்து —பெருகுமன்பால் - மிகுகின்ற பக்தியினால்—மறைபுகலும் - வேதத்தாற்சொல்லப்படுகின்ற —அஞ்செழுத்துமறைந்து - பஞ்சாட்சரியையுஞ்சொல்லி —வலம்வந்து —முனம்வணங்கி - எதிர்வணங்கி—பின்னர். எ - று. (சஎ)

அன்பினுள முருகிவிழி சொரிநீரா லெழுதியமை யழிந்திருப்பப், பொன்புரையும் வடிவமயிர் பொடிப்பவெயர் வானுதலின் பொட்ட ழிந்து, மின்புரையு நெடுஞ்சடிலப் பொன்மலையி னைந்த வெள்ள மூழ்கி, யின்பினடிப் பவளென்ன வந்துநட நவிலரங்கி லெய்தி னாள்.

(இ - ள்.) அன்பினுளமுருகி - அன்பினால்மனமுருகி —விழிசொரிநீரால் - கண்களாற்சொரியப்பட்டநீரால்—எழுதியமையழிந்திருப்ப - எழுதியிருக்கின்றமைகளைந்திருக்க—பொன்புரையும் - பொன்போலுள்ள—வடிவம் - திருமேனியிலுள்ள —மயிர்பொடிப்ப - உரோமங்கள்சிலிர்க்க—வெயர்வால் - வேர்வையினாலே—நுதலின்பொட்டழிந்து - நெற்றித்திலகமழிந்து—மின்புரையும் - மின்னல்போலுள்ள —நெடுஞ்சடிலப்பொன்மலையின் - நெடியசடையையுடைய பொன்மலைபோலுள்ளகடவுளது—

ஆனந்தவெள்ளமூழ்கி - சிவானந்தவெள்ளப்பெருக்கினுள்மூழ்கி—இன்பி னடிப்பவளென்ன - அந்தவின்பத்தால்கூத்தாடுகிறவள்போல—வந்து— நடநவிலரங்கில் - நிருத்தஞ்செய்கின்றசபையில் —எய்தினள் - அடைந் தாள். எ - று. ஆல் - அசை. (சஅ)

அரங்கினிடை நடநவிலுஞ் செயற்கேற்ப வுடையணிந்தி ட் டரும்பை வென்ற, குரும்பைமுலை யிணைவம்பு கொண்டணிந் து தவங்களெல்லாங் கொள்ளை கொள்ளுங், கருந்தடங்கண் மல ர்க்கோதைச் சிற்றடியிற் கைபுனையக் கற்ற மாதர், சுரும்புமுர ன் மல்லிகைமென் போதனைய சிறுசதங்கை துளங்க வார்த் தார்.

(இ - ள்.) கைபுனையக்கற்றமாதர் - கையாலலங்கரிக்கக்கற்றபணிப் பெண்கள் —அரங்கினிடை - நிருத்தமண்டபத்தினடுவே —நடநவிலுஞ் செயற்கேற்ப - நடனஞ்செய்யுந் தொழிற்குத்தக —உடையணிந்திட்டு - ஆடையையுடுத்திட்டு—அரும்பைவென்ற - கோங்குதாமரைமுதலியவரு ம்புகளைவெற்றிகொண்ட —குரும்பைமுலையிணை - தென்னங்குரும்பை போலுள்ளமுலைகளை —வம்புகொண்டணிந்து - கச்சினாலிறுக்கி —தவங்க ளெல்லாங் கொள்ளைகொள்ளும் - தவங்களையெல்லாங்கூட்டுண்கின்ற—க ருந்தடங்கண்மலர்க்கோதை - கரியபெரியகண்களையும் மலராலாகியமாலை யையுமுடையாளது—சிற்றடியில் - சிறியஅடிகளிலே—சுரும்புமுரன்மல் லிகைமென்போதனைய - வண்டுகளொலிக்கின்றமல்லிகையினதுமெல்லி யமலர்கள்போலுள்ள—சிறுசதங்கை - சிறியசதங்கைக்கோவைகளை—து ளங்க - ஒலிசெய்யும்படி—ஆர்த்தார் - கட்டினார்கள். எ - று. (சகூ)

மாயைமுலைக் கிணையெனவென் முன்றானும் வந்ததென வலக்கைத் தாளம், போயிடக்கைத் தாளமதைப் பொறாமையி னாற் றாக்குதல்போற் புடைத்தொலிப்ப, வாயுரைக்கு மொழி போலத் தண்ணுமைசெங் கைகளால் வார்த்தை சொல்ல, மேயகலைப் பெண்விளர்ப்ப வெழின்மாத ரிசைபாட வீணை கொண்டு.

(இ - ள்.) மாயைமுலைக்கிணையென - மாயையினுடையமுலைகளுக்குஒ ப்பாவேனென்று —என்முன் —தானும்வந்ததென - தானும்வந்ததென்

றுகினைத்து—பொருமையினுல்—வலக்கைத்தாளம்போய்—இடக்கைத் தாளமதை - இடதுகைத்தாளத்தை—தாக்குதல்போல்—புடைத்து - அடித்து—ஒலிப்ப - ஒலிசெய்யாநிற்கவும்—வாயுரைக்குமொழிபோல - வாயாற்சொல்லப்படுகின்ற சொற்கள்போல—தண்ணுமை - மத்தளமானது—செங்கைகளால்—வார்த்தைசொல்ல - வார்த்தைசொல்லாநிற்கவும்—மேயகலைப்பெண்விளர்ப்ப - விரும்பப்பட்டகலைமகளானவள்நாணும்படி—எழின்மாதர் - அழகினையுடையமகளிர்—வீணைகொண்டு—இசைபாட - பண்பாடாநிற்கவும். எ - று. (௫௦)

என்னொருகை யொடுமற்போா புரிகவென நிற்பவள்போ லிடையி னோர்கை, மன்னியுற வைத்தொருகை நீட்டியர னெதிர்நின்று மாயை வல்லி, கன்னன்மதன் றனைவருக வெனவிளித்தல் போற்றழங்கக் காற்ச தங்கை, பொன்னினிய லொருபாவை நடிக்கின்ற தென்னநடம் புரிய லுற்றாள்.

(இ - ள்.) மாயைவல்லி - கொடிபோன்றமாயை—என்னொருகையொடு—மற்போர்புரிகவென - நீர் கைச்சண்டைசெய்யவருவீராகவென்று—நிற்பவள்போல்—இடையின் - இடையின்கண்—ஓர்கை - ஒருகையை—மன்னியுறவைத்து - பொருந்தவைத்து—ஒருகைநீட்டி—அரனெதிர்நின்று - மதுகேசர்சந்நிதியில்நின்று—கன்னன்மதன்றனை - கருப்புவில்லையுடையமன்மதனை—வருகவென - இங்கேஅஞ்சாமல்வாவென்று—விளித்தல்போல் - அழைத்தல்போல—காற்சதங்கை—தழங்க - ஒலிசெய்யாநிற்க—பொன்னினியலொருபாவை - பொன்னாற்செய்யப்பட்டவொருபதுமையானது—நடிக்கின்றதென்ன - நடனஞ்செய்கின்றதோவென்றுமயங்கும்படி—நடம்புரியலுற்றாள் - நாட்டியஞ்செய்யத் தொடங்கினாள். எ - று. (௫௧)

வேறு.

தண்ணுமை விளங்கலுறு தாளமிசை யெல்லாம்
வண்ணமலர் மெல்லடி வழிச்சதியி னிற்பக்
கண்ணிணைகொள் பல்வளைய கைவழி நடப்பப்
பெண்ணமுத மன்னவள் பெயர்ந்தன ணடித்தாள்.

(இ - ள்.) தண்ணுமை - மத்தளவோசையும்—விளங்கலுறுதாளம் - விளங்காநின்றதாளவோசையும்—இசை - இராகத்தோசையும்—எல்லாம்-

ஆகியவிவையெல்லாம் —வண்ணமலர்மெல்லடிவழிச்சதியினிற்ப - அழகி யமலர்போல மெல்லியஅடிகளின்வழித்தாகிய அடைவைக்கொத்துநிற்க வும் —கண்ணிணை - இரண்டுகண்களின்பார்வைகளும்—கொள்பல்வளை ய - பலவளையல்களைக்கொண்ட—கைவழி - கைகளின்வழியே—நடப்ப - நடவாநிற்கவும்—பெண்ணமுதமன்னவள் - பெண்களுள்அமிர்தம்போற்சி றந்தவளாகியமாயை—பெயர்ந்தனள் - புடைபெயர்ந்து—நடித்தாள் - ந டனஞ்செய்தனள். எ - று. (ருஉ)

வாயுரைசெய் சொற்பொருண் மலர்க்கர முரைப்ப
மீயுயர் விசும்பினெழு மென்புளொலி யெல்லாம்
பாயொளிய பஞ்சுறு பதத்துற மிதித்துப்
பேயொடு நடித்தவிறை பித்துற நடித்தாள்.

(இ - ள்.) வாயுரைசெய்சொல்-வாயாற்சொல்லப்பட்டசொற்களின்—பொருள் - பொருளை—மலர்க்கரம் - மலர்போலுள்ளகைகளானவை—உரைப்ப - உரைசெய்யாநிற்க—மீயுயர்விசும்பின் - மேலாகியுயர்ந்த ஆகாசத்தின்கண்—எழும் - செல்லுகின்ற —மென்புளொலியெல்லாம் - மெல்லிய பறவைகளினோசை யெல்லாம்—பாயொளியபஞ்சுறு - பரவுகின்ற வொளியையுடையசெம்பஞ்சுற்ற—பதத்து - அடிகளிலிருந்து—உற - உண்டாக—மிதித்து —பேயொடுநடித்தவிறை - பேய்களோடாடியகடவுள்—பித்துற - மயங்கும்படி—நடித்தாள் - ஆடினாள். எ - று. (ருங)

அந்தண னிருங்கலை யணங்கினை யுமிழ்ந்தான்
செநதிருவை நேமியிறை சீயென வெறுத்தா
னிந்திர னருஞ்சசியை யெண்ணிலன் மறந்தான்
பைந்தொடி நடிப்பநரர் பட்டதெ னுரைப்பாம்.

(இ - ள்.) பைந்தொடிநடிப்ப - மாயையானவளிங்ஙனம் நடனஞ்செய் யாநிற்க—(அதைக்கண்டு)—அந்தணன் - பிரமன்—இருங்கலையணங்கி னை - பெருமைபொருந்தியகலைமகளை—உமிழ்ந்தான்—நேமியிறை - நார ணன்—செந்திருவை - திருமகளை—சீயென - யாவருஞ்சீயென்றுசொல் லும்படி —வெறுத்தான் —இந்திரன் —அருஞ்சசியை-அரியஇந்திராணி யை—எண்ணிலன் - நினையாதவனாகி—மறந்தான்—(கடவுளர்செய்தியே யிவ்வாறாயின்)—நரர்பட்டது - மானிடர்பட்டபாடுகளை—என்னுரைப்பா ம் - என்னசொல்லுவாம். எ - று. (ருச)

பொன்னெயிலி னொன்றிய புழைக்குண்முகம் வைத்துந்
துன்னிமுனர் நின்றவவர் தோளிடை யிவர்ந்து
மின்னென நடம்புரியு மெல்லியன் மருங்கு
லென்னும்வெளி காணிய விடர்ப்படுவர் மைந்தர்.

(இ - ள்.) மைந்தர் - காளையர்—பொன்னெயிலின் - பொன்னினாலாகிய மதிலின்கண்—ஒன்றியபுழைக்குள் - பொருந்தியதுவாரங்களுள்—முகம்வைத்தும் - முகத்தைவைத்தும்—துன்னிமுனர்நின்றவவர் - நெருங்கிமுன்னேநின்றவரது—தோளிடையிவர்ந்தும் - தோளின்மேலேறியும்—மின்னெனநடம்புரியும் - மின்னற்கொடிபோலாடல்செய்கின்ற—மெல்லியல் - மாயையினது —மருங்குலென்னும்வெளி - இடையாகிய ஆகாசத்தை —காணிய - காணுதற்பொருட்டு —இடர்ப்படுவர் - துன்பப்படுவர்கள். எ - று. (ருரு)

பற்றுமன மோடியிரு பார்வையினு மெய்தி
மற்றைய புலன்களை மறந்துநட மாடும்
பொற்றொடியை நண்ணவுயர் பொன்மதி லுறுப்பி
னுற்றபொறி போலசை வொழிந்திளைஞர் நின்றார்.

(இ - ள்.) பற்றுமனமோடி - விஷயங்களைப்பற்றுகின்ற மனமானது ஒடி—இருபார்வையினுமெய்தி - இரண்டுபார்வையிலும் அடைந்து—மற்றையபுலன்களைமறந்து - மற்றவிஷயங்களைமறந்து—நடமாடும் - நடிக்கின்ற—பொற்றொடியைநண்ண - மாயையையடையாநிற்க—உயர் - உயர்வாகிய —பொன்மதிலுறுப்பின் - பொன்னாலாகிய மதிலினதுறுப்பின்கண்ணே—உற்ற - தங்கிய—பொறிபோல் - பதுமைகள்போல—அசைவொழிந்து—இளைஞர் - காளையர்—நின்றார். எ - று. (ருசு)

இளங்கொடி மருங்குலவ ளின்னண நடிப்பக்
களங்கனியை வென்றமணி கண்டனை யருச்சித்
துளங்குளி ரருந்தவ னுவந்திறை யணிந்த
வளங்கெழு முசந்தமலர் மாலையொ டளித்தான்.

(இ - ள்.) இளங்கொடிமருங்குலவள் - இளங்கொடிபோலும் இடையையுடையவளாகியமாயை—இன்னணம் - இத்தன்மையாக—நடிப்ப - ஆடுகையில் —களங்கனியைவென்றமணிகண்டனையருச்சித்து - களவின்

பழத்தைவென்றகரியகண்டத்தையுடையகடவுளைப்பூசித்து —உளங்குளி ர் - தண்மையானஉள்ளத்தையுடைய—அருந்தவன் - வேதியனானவன்— உவந்து - மகிழ்ந்து—இறையணிந்த - கடவுளணிந்த—வளங்கெழுமு - வள ம்பொருந்திய—சந்தம் - சந்தனத்தை—மலர்மாலையொடு—அளித்தான் - கொடுத்தான். எ - று. (ருஎ)

வணங்கிமது கேசனிரு மாலியம தேற்றங்
கணங்குமட வாருட னரங்கிடை யிருந்தா
ணுணங்கிழை மருங்குன்மிக நோமென விரைந்து
பிணங்குறு சதங்கையழு பிள்ளையி னடங்க.

(இ - ள்.) அணங்கு - மாயை—வணங்கி - தொழுது—மதுகேசனிரு மாலியமது - மதுகேசனதுதிருமாலியத்தை—ஏற்று - பிரசாதமாகக்கைக் கொண்டு—மடவாருடன் - மகளிருடனே —அரங்கிடை - நாட்டியமண் டபத்திலே—நுணங்கிழை மருங்குல் - நுண்ணியநூல்போலுள்ள விடை யானது—மிகநோமென - மிகவருந்துமென்று—இரைந்து - கூவி—பி ணங்குறு - பிணக்குற்ற —சதங்கை - சதங்கையினோசை —அழுபிள்ளையி ன் - அழுதபிள்ளையடங்குதல்போல —அடங்க —இருந்தாள். எ - று. அங்கு - அசை. (ருஅ)

மைத்தட நெடுங்கணிள வல்லிநிகர் மாயை
பத்தியொ டருச்சனை பயின்றதை யறிந்தா
னித்தனுல கெங்கணு நிறைந்தவ னநாதி
முத்தனரு ளல்லம முதற்பெயரி னானே.

(இ - ள்.) மைத்தடநெடுங்கண் - மையிடப்பட்டவிசாலமாகியநீண்டக ண்களையுடைய —இளவல்லிநிகர்மாயை - இளங்கொடியையொத்தமா யை— பத்தியொடு—அருச்சனைபயின்றதை - பூசைசெய்துவருவதை—நி த்தன் - அழிவில்லாதவனும்—உலகெங்கணுநிறைந்தவன் - உலகமனைத்தி னுநிறைந்தவனும்—அநாதி - தோற்றமில்லாதவனும் —முத்தன்-இயல்பா கவேபாசங்களினீங்கினவனுமாகிய —அருளல்லமமுதற்பெயரினான் - அ ருளையுடைய முதன்மையாகிய அல்லமனென்னும்பெயரையுடையவன்— அறிந்தான் - உணர்ந்தான். எ - று. (ருகூ)

மாயைபூசைகதி - முற்றிற்று.

ஆ. கதி - ௬ - க்கு - திருவிருத்தங்கள்—உகரு



ஐந்தாவது

# பிரபுதேவர்வந்தகதி.

நிரந்தர மடியார் வேண்டு நினைவெலா நிரப்பா நின்ற:
பெருந்தகை யல்ல மையன் பெயர்ந்தொரு மனித னாகி,வருந்துறு
மயன்ம னத்தால் வந்தனை புரிந்தா டன்பாற்,பொருந்துறு பவன்
போற் செய்த புணர்ப்பினைப் புகன்று ரைப்பாம்.

(இ - ள்.) நிரந்தரம் - எப்பொழுதும் —அடியார்வேண்டுநினைவெலாம் - அடியவர் எண்ணுகின்ற எண்ணமனைத்தையும் —நிரப்பாநின்ற - நிறைவேற்றுகின்ற —பெருந்தகை - பேரருளையுடைய —அல்லமையன்— பெயர்ந்து - தன்னியல்பினின்றும்வேறுபட்டு —ஒருமனிதனாகி—வருந்துறுமயன்மனத்தால் - வருந்துகின்றமயக்கத்தையுடையமனத்தோடு —வந்தனைபுரிந்தாடன்பால் - பூசித்தமாயையினிடத்து—பொருந்துறுபவன்போல் - உடன்படுபவன்போல—செய்த —புணர்ப்பினை - செய்தியை— புகன்றுரைப்பாம் - விரித்துச்சொல்லுவாம். எ - று. வருந்துறவென்பது, மெலித்தல் விகாரம். (க)

தாமுறு நுகர்வும் வீடுந் தந்திட வல்லன் றானே
யாமென வியம்ப லாலே யல்லம தேவ னுண்மை
நாமமு மறைய வேறோர் நாமமுற் றம்மா யைக்குக்
காமிய வினைப்ப யன்றான் கடைப்பிடித் தருள வெண்ணி.

(இ - ள்.) தாமுறும் - (உயிர்கள்) தம்மாலனுபவிக்கப்படுகின்ற—நுகர்வும் - போகத்தையும்—வீடும் - முத்தியையும்—தந்திடவல்லன் - கொடுக்கவல்லவன்—தானேயாமெனவியம்பலாலே - தானேயாமென்றுயாவருஞ்சொல்லுதலாலே—அல்லமதேவன் —உண்மைநாமமுமறைய - அல்லமனென்னும் உண்மையானபெயருமறையும்படி—வேறோர்நாமமுற்று - மத்தளிகனென்னும் வேறொருபெயரையுமடைந்து—அம்மாயைக்கு—காமி

யவினைப்பயன் - காமியபூசைக்குத்தக்க பயனை —தான்—கடைப்பிடித் தருளவெண்ணி - உறுதியாக அருளிச்செய்யநினைத்து. எ - று.

பந்தத்தையு முத்தியையு நுகர்வும் வீடுமென்றூர். காமியவினைப்பயனெ ன்றதனால் நிட்காமியவினைப்பயனுளதாகப்பெற்றும்.பெற்றதால்காமியவி னைப்பயன் நுகர்வும், நிட்காமியவினைப்பயன்வீடுமெனக்கண்டாம். வீடெ னல் ; அறிவைச்சுகித்தல். பந்தமெனல் ; அயலைச்சகித்தலெனக்கொள்க.

கதந்தரு திருநு தற்றீக் கண்ணினு னீறு பட்ட
மதன்செயல் செய்ய வன்னோன் வடிவுதான் கொண்ட தென்ன
முதிர்ந்தழ கொழுகு மாறு முகங்களுட் சிறந்த வொன்றோ
டெதிர்ந்துள முருக னென்ன விளமையோ டழகு வாய்ப்ப.

(இ - ள்) திருநுதல் - (பரமசிவன்தனது) அழகியநெற்றியின்கண்ணு ள்ள—கதந்தரு - வெப்பமாகிய —தீக்கண்ணினல் —நீறுபட்ட - பஸ்மமா ன—மதன்செயல்செய்ய - மன்மதனதுதொழிலைச்செய்தற்பொருட்டு— அன்னோன்வடிவு - அவனதுவடிவத்தை—தான்கொண்டதென்ன - தா ன்கொண்டதுபோலவும்—அழகுமுதிர்ந்தொழுகும் - அழகுமிகுந்தொழு குதற்கிடமாகிய—ஆறுமுகங்களுள் - ஆறுமுகங்களுள்ளும்—சிறந்தவொ ன்றோடு - சிறந்தவொருமுகத்தோடு - இளமையோடழகுவாய்ப்ப - இள மையுமழகுந் தன்னிடத்தேபொருந்த—எதிர்ந்துளமுருகனென்ன - தோ ற்றியமுருகனைப்போலவும். எ - று.

வடிவால் மன்மதனையும், இளமையால் முருகனையும் உவமித்ததால், ஒப்பணி. (ரு)

அவிர்சடை முனிவர் மாத ரழுங்குறக் கொண்ட கோலங்
கவினுமிவ் வடிவங் கொள்ளக் கற்றுமுன் விட்ட தென்னக்
குவிமுலை மகளி ராவி கூட்டுணுங் கோல மென்னப்
புவியுறு மிரவி யென்னப் பொங்கொளி யுருவொன் றுற்றுன்.

(இ - ள்.) அவிர்சடைமுனிவர்மாதர் - விளங்காநின்றசடையையுடை ய முனிவரதுமகளிர் —அழுங்குற - மயங்கிவருந்துதற்பொருட்டு —கொ ண்டகோலம் - கொண்டபிக்ஷாடனவடிவம் —கவினும் - அழகுசெய்கி ன்ற—இவ்வடிவங்கொள்ள - இந்தவடிவத்தைக்கொள்ளுதற்கு —முன் கற்றுவிட்டதென்ன - முன்பழகிவிட்டதுபோலவும்—குவிமுலைமகளிர் - குவிந்தமுலைகளையுடைய மங்கையரது—ஆவி - உயிரை—கூட்டுணுங்கோ

லமென்ன - கொள்ளைகொள்ளும்வடிவம்போலவும்—புவியுறுமிரவியெ ன்ன - பூமியின்கண் அடைந்தசூரியன்போலவும் —பொங்கொளியுரு வொன்றுற்றான் - மிக்க வொளியையுடைய வொருவடிவங்கொண்டா ன். எ - று.

விட்டதென்ன, கோலமென்ன, இரவியென்ன, உருவொன்றுற்றா ன் என்பது, தற்குறிப்புவமையணி. (௪)

விளிம்புற நடுக்க ளங்கம் வீழ்ந்துசூழ மதியொன் றுண்டேல்
வளங்கெழு மயிரொ ழுங்கு வள்ளல் வாண்முக நிகர்க்குந்
துளங்குறு முந்தி மேற்போய் மார்பிடைத் தோன்று ரோம
மிளங்கரு நளின முண்டே லேய்க்குமென் றியம்ப நின்றான்.

(இ - ள்.) நடுக்களங்கம் - நடுவிலுள்ளகளங்கமானது—விளிம்புற - ஓர த்திற்பொருந்த—வீழ்ந்துசூழ் - விழுந்துசூழ்ந்த—மதியொன்றுண்டேல் - ஒருசந்திரனுளதாயின்—(அது)வளங்கெழு - வளம்பொருந்திய—மயிரொ ழுங்கு - மயிரொழுங்கினையுடைய—வள்ளல் - அல்லமனது—வாண்முகம் - ஒளியையுடையமுகத்தை—நிகர்க்கும் - ஒக்கும்—இளங்கருநளினமுண் டேல் - இளமைபொருந்திய கருந்தாமரை மலரொன் றுளதாயின் (அ து)—துளங்குறுமுந்திமேற்போய் - ஒளிசெய்கின்ற நாபியின்மேற்சென் று—மார்பிடைத்தோன்றுரோமம் - மார்பினிடத்தேதோன்றுகின்றமயி ர்ச்செறிவை—ஏய்க்கும் - ஒக்கும்—என்றியமப - என்றுசொல்லும்ப டி—நின்றான். எ - று.

முகத்துக்கும், மார்புரோமத்துக்கும் உவமைகூறப்புகுந்த இங்ஙனமா யமதியும் நளினமுமெங்குமின்மையின், இல்பொருளுவமையணி. (ரு)

விலைவரம் பறியா வாடை விரித்துடுத் தரையி லங்க
மலைவரும் புதிய சாந்த மான்மதங் காத நாறக்
கலைவரம் பறிந்து ளோர்தங் கருத்தினுக் கரிதா யென்புன்
றலைவருங் கமலப் பொற்றா டம்பிரான் மலியச் சாத்தி.

(இ - ள்.) கலைவரம்பறிந்துளோர்தங்கருத்தினுக்கரிதாய் - அறுபத்து நாலுகலைகளினெல்லையை அறிந்துள்ளவரது கருத்திற்கெட்டாததாயிருந் தும் —என்புன்றலைவரும் - எனதுபுல்லியதலையின்கண்ணேவரத்தக்க— கமலப்பொற்றாள் - கமலம்போலழகியதிருவடிகளையுடைய—தம்பிரான்- அல்லமன்—விலைவரம்பறியாவாடை - விலையினளவறியப்படாதபீதாம்ப

ரத்தை—அரையிலக்க - அரையில்விளங்கும்படி —விரித்துடுத்து—மலைய ரும்புதியசந்தம் - பொதியமலையிலுண்டாகிய புதிய சந்தனத்தையும்—மா ன்மதம் -கஸ்தூரியையும—காதநாற - காதம்வரைக்கும்வாசனைவீசும்ப டி—மலியச்சாத்தி - திருமேனிமுழுவதுநிறையப்பூசி. எ - று. இப்பாட் டுமுதல் - ௬ - பாடல்வரைக்குமொருதொடர்பு. (௬)

துளிர்த்ததண பொழிலிற் றேமாந் தடஞ்சினைக் குயின் முகம்போற், றுளித்தலை முகில்க வற்றுஞ் சுரிகுழற் சிகழி யா ர்த்திட், டளிதொடர் மாலை வேய்ந்தவ் வலங்கலைக் குறு வோர்க் கெல்லாம, வெளிற்றுரைப் பொருள்போற் றோன்ற மெ ன்றலைச் சாத்த ணிந்து.

(இ - ள்.) துளிர்த்ததண்பொழிலில் - துளிர்த்ததண்ணியசோலையில்— தேமாந்தடஞ்சினை - தேமாவினதுபெரியகிளையில் வாசஞ்செய்கின்ற—கு யின்முகம்போல் - குயிலினதுமுகத்தைப்போல—துளித்தலைமுகில் - கா ர்காலமேகத்தை—கவற்றும் - வருத்துகின்ற—சுரிகுழற்சிகழியார்த்திட்டு- சுருண்டதலைமயிரைமுடியாகக்கட்டி —அளித்தொடர்மாலைவேய்ந்து - வ ண்டுகள் தொடராநின்ற மாலையைச்சூடி—அவ்வலங்கல் - அந்தமாலையான து—நோக்குறுவோர்க்கெல்லாம - பார்க்கின்றவர்க்கெல்லாம் —வெளிற் றுரைப்பொருள்போற்றோன்ற - வெளிப்படையானசொல்லிலுள்ளபொ ருள்போலக்காணும்படி—மென்றலைச்சாத்தணிந்து - மெல்லியதலைச்சாத் துதரித்து. எ - று. தலைச்சாத்து ; தலைப்பாகையென கிராமியமாக வழ ங்குகின்றது. (எ)

களத்திடை யிருப்பி னுண்மை காண்குவ ரென்ன வாலங் குளத்திடை வாங்கி வைத்த கொள்கைபோற் றிலதந் தீட்டி யொளித்தனி மதிதன் பாங்க ருரோணியோ டொருபெண் கூட் டளித்துற வைத்த தென்ன வணிமணி செவிகக ணிந்து. [டி

(இ - ள்.) களத்திடையிருப்பின் - கழுத்தினிடத்திலிருந்தால் —உண் மைகாண்குவரென்ன - தனதுசொரூபத்தைத் தெரிந்துகொள்வார்களெ ன்று—ஆலம் - நஞ்சத்தை—வாங்கிக்குளத்திடைவைத்தகொள்கைபோ ல் - எடுத்து நெற்றியினிடத்துவைத்த செய்கைபோல —திலதந்தீட்டி - கஸ்தூரிப்பொட்டிட்டு—ஒளித்தனிமதி - ஒளியையுடைய ஒப்பற்றசந்தி ரனவன்—தன்பாங்கர் - தன்னிருபுறத்திலும் —உரோணியோடு —ஒ ருபெண் - அவளுக்குநிகராகிய மற்றொருநக்ஷத்திரத்தை —கூட்டி —அ

ளித்து - காப்பாற்றி—உறவைத்ததென்ன - பொருந்தவைத்திருத்தல் போல—அணிமணி - அழகியகுண்டலமணியை—செவிக்கணிந்து - காது களிலேதரித்து. எ - று. (அ)

விலையில்வெண் டரளக் கோவை வீரசங் கிலிகே யூர
மிலகுசெம மணிப்பொன் னாழி யிவைமுத லாய வெல்லாக்
கலனுமொண் கவினெ னுஞ்செங் கனலிற்பெய் நறுநெ யென்ன
மலைவினங் குருகு கேசன் வயங்குறுப் பெலாம ணிந்து.

(இ - ள்.) விலையில் - விலையில்லாத—வெண்டரளக்கோவை - வெள்ளி யமுத்துமாலையும்—வீரசங்கிலி - வீரசங்கிலியும்—கேயூரம - வாகுவலய முமம—இலகுசெம்மணிப்பொன்னாழி - விளங்காநின்றசெய்ய மணியழுத் திய பொன்மோதிரமும்—இவைமுதலாய - இவற்றைமுதலாகவுடைய— எல்லாக்கலனும் - எல்லா ஆபரணமும்—ஒண்கவினெனுஞ் செங்கனலிற பெய் - ஒள்ளிய அழகென்கின்றசிவந்தநெருப்பிற்பெய்கின்ற —நறுநெ யென்ன - நல்லநெய்போல—மலைவினஙகுருகுகேசன் - மலைவிலாதநமது குருவாகிய அல்லமதேவர்—வயங்குறுப்பெலாமணிந்து - ஒளிபொருந்தி ய அவயவமெல்லாந்தரித்து. எ - று. (௯)

இந்திர திருவிற் கேற்ற விலக்கண முழுதும் வாய்த்த
சுந்தர குமரற் காவா விதனைத்தான் சுமப்ப தாக
வந்துள தெதுகொ லோவென் றெண்ணிமா னிடரம யங்க
சிந்தையின் முதுகின் பாறறண் ணுமையொன் றுநிகழத் தாங்கி.

(இ - ள்.) இந்திரதிருவிற்கேற்ற - தேவேந்திரனுடையசெல்வத்தை யனுபவித்தற்கேற்ற—இலக்கணமுழுதும்வாய்த்த - சுந்தரகுமரற்கு - அ ழகியவிபவாடவனுக்கு—ஆஆ—இதனைத்தான்சுமப்பதாக - இந்தமத்தள த்தைச் சுமப்பதற்கு ஏதுவாக—வந்துளது - வந்திருக்கிறவூழ் —எதுகொ லோவென்று - யாதோவென்று—எண்ணி - நினைத்து—மானிடர்மயங்க - மனிதர்திகைக்கும்படி—சிந்தையின்முதுகின்பால் - பழிப்பில்லாதமுதுகி னிடத்து—தண்ணுமையொன்று - மத்தளமொன்று—நிகழத்தாங்கி-தோ ன்றச்சுமந்து. எ - று.

தகுதியாய அணியாலலங்கரிக்கப்பெற்றுத் தகாததாய தண்ணுமையை முதுகில்தாங்கல்சொல்லுதலால், தகாமையணி. என்னை " தகாமை மூர னுருக் காரியத் தோற்றமுந் தகாதனவ கூடலும் " என்றிலக்கணமிருத் தலின் (௧௦)

சென்றருண் மதுகை நாதன் றிருமுன்வான் சுடர்வ லஞ்சூழ், குன்றுறழ் கொடிநெ டும்பொற் கோபுரத் தெதிர்போய் நின்று, மன்றிடை நவில்கூத தாடி யத்தளத் தொழில்கைக் கொண்டா, னென்றுள மருள வெங்கோ னெறிந்துதண் ணுமைய திர்த்தான்.

(இ - ள்.) சென்று—அருண்மதுகைநாதன்றிருமுன் - அருளையுடையமதுகேசரதுசந்நிதியில்—வான்சுடர் - ஆகாசத்திலியங்குகின்றசந்திராதித்தர்—வலஞ்சூழ் - சுற்றிவரப்பட்ட—குன்றுறழ்-மேருபோலுள்ள—கொடிநெடும்பொற்கோபுரத்து - கொடிகள்கட்டிவைத்திருக்கப்பட்டநெடியபொற்கோபுரவாயிலுக்கு—எதிர்போய்நின்று—மன்றிடைநவில்கூத்தாடி - சபையினிடத்தேசெய்யப்பட்ட கூத்தாட்டையுடையவன்—மத்தளத்தொழில் கைக்கொண்டானென்று—உளமருள - யாவருமனமயங்க—எங்கோன் - அல்லமதேவன்—தண்ணுமை - மத்தளத்தை—எறிந்து-கையெறிந்து—அதிர்த்தான் - முழக்கினன். எ - று. (கக)

உரலசைந திடாத டுக்கி யுறியினெய் யெடுத்த யின்றோன்
குரலசைந் தூது மோர்வேய்ங் குழன்மொழி மாதா மாழ்கச்
சிரலசைந் தாடா நின்ற சிறகர்போன் மதத ளத்தை
விரலசைந தறைத லன்றி மெய்யசை யாம னின்றான்.

(இ - ள்.) உரலசைந்திடாதடுக்கி - உரல்களையொன்றன்மேலொன்று அசையாதடுக்கி—உறியினெய்யெடுத்து—அயின்றோன் - உண்டவனாகிய கண்ணனது—குரலசைந்தூதும - கண்டமசைந்தூதப்பட்ட—ஓர்வேய்ங்குழல் - ஒருபுள்ளாங்குழலிசைபோன்ற—மொழி - சொற்களையுடைய—மகளிர்—மாழ்க - மயங்கும்படி—சிரலசைந்தாடாநின்றசிறகர்போல் - மீன்குத்திப்பறவையின்கண்ணே அசைந்தாடாநின்றசிறகைப்போல—மத்தளத்தை—விரலசைந்தறைதலன்றி - கைவிரலசைந்துதாக்குதலன்றி—மெய்யசையாதுநின்றான். எ - று.

ஏனையர்போலல்லாதுடலஞ் சுழுறுஞ்சலியாமல்தண்ணுமை முழக்கலின், வியப்பணி. (கஉ)

சுந்தமெய்ஞ் ஞான னந்தசு சூரியன் கரத்தா லாக்கு
மத்தள முகின்மு ழக்க நடித்துது மயில்கேட் டமமா

வித்தளை மனிதர் கையா லெஞ்செவிப் படாதிருந்த
புத்தொலி யிதுவென் றுள்ளம் வியந்திது புகலு மன்றே.

(இ - ள்.) சுத்தமெய்ஞ்ஞானனந்தச்சூரியன் - சச்சிதானந்தசொரூபமாகியசூரியன்—கரத்தாலார்க்கும - தன்கைகளால்முழக்கப்படுகின்ற — மத்தளமுகின்முழக்கம் - மத்தளமாகியமேகத்தினதோசையை —நடித்துறுமயில்கேட்டு - நடனஞ்செயதிருக்கின்றமாயையாகியமயில்கேட்டு—அம்மா—இத்தளைமனிதர்கையால் - இந்தப்பூமியின்கணுள்ளமாந்தர்கையினால் —எஞ்செவிப்படாதிருந்த —புத்தொலியிதுவென்று - புதியவோசையிதுவென்று—உள்ளம்வியந்து —இதுபுகலும - இதனைச்சொல்லும். எ - று. அன்று - ஏ - அசைகள்.

மயில்போன்றவளை மயிலெனல், உவமையாகுபெயர். (கரு)

மோட்டிள முலையி ரின்ன தண்ணுமை முழக்கங் காதாற்
கேட்டில மிவ்வா றுண்டென் றுரைப்பவுங் கேட்டி லேமால்
வேட்டுல கனைத்து நின்று வியக்குமிவ் விஞ்சை கற்றுக்
காட்டிய வவன்யாா கொல்லோ காணகவென் றணங்கு ரைத்தாள்

(இ - ள்.) மோட்டிளமுலையீர - உயர்வும் இளமையும்பொருந்தியமுலையையுடையவர்களே—இன்னதண்ணுமைமுழக்கம் - இப்படிப்பட்டமத்தளவோசையை—காதாறகேட்டிலம்—இவ்வாறுண்டென்றுரைப்பவும் - இப்படி ஒன்றுண்டென்றுசொல்லவும்—கேட்டிலேம் —உலகனைத்தும்- உலகத்தாரனைவரும் —வேட்டுநின்று - இச்சித்துநின்று —வியக்கும் - ஆச்சரியப்படத்தக்க —இவ்விஞ்சைகற்று - இந்தவித்தையைக்கற்றறிந்து—காட்டியவவன்யார் —காண்கவென்று —பேரய்ப்பார்ப்பீராக வென்று—அணங்குரைத்தாள் - மாயைசொல்லினுள். எ - று.

ஆல் - அசை. கொல்லோ—ஐயம். (கசு)

மாதர்வல் விரைந்து சென்று மத்தள முழக்கு நின்ற
சோதியை விழியாற் றாஞ்செய் தொல்லைமா தவத்தாற் கண்டு
காதொடு பொருது மீளுங் கயனொடுங் கருங்கட் செவ்வாய்க்
கோதைதன் மருங்கின மீண்டு வந்திது கூற லுற்றார்.

(இ - ள்.) மாதர்வல்விரைந்துசென்று - அம்மகளிர் ஓடிப்போய்—மத்தளமுழக்கிநின்றசோதியை - மத்தளம் அடித்துக்கொண்டுநின்ற அல்லமனை—விழியால் —தாஞ்செய்தொல்லைமாதவத்தால் - முற்பிறப்பிற்றம்மர்

லேசெய்யப்பட்ட பெருந்தவத்தால் —கண்டு —காதொடுபொருதுமீளுங் கயனெடுங்கருங்கண் - செவிகளோடுபோர்செய்து திரும்புகின்றவையும் கயல்போல்கின்றவையுமான நெடிய கரியகண்களையும் —செவ்வாய் - செய்யவாயையுமுடைய—சோதை - மாயையினது—மருங்கின்மீண்டுவந்து - அருகேதிரும்பிவந்து—இதுகூறலுற்றாள் - இதைச்சொல்லத்தொடங்கினாள். எ - று.

அல்லமனைச்சோதியெனல், உவமையாகுபெயர். (கரு)

கற்றதன் விஞ்சை போலக் கவினுநாங் கண்ட தில்லை
விற்றொழி லனங்க வேளே மேனிகொண் டடைந்தா னென்ன
வுற்றனை னொருவ னென்ன வொண்டொடி விளிமி னென்றாள்
மற்றவர் விளித்து வந்து மாயைமா தெதிர்வி டுத்தார்.

(இ - ள்.) கற்றதன்விஞ்சைபோல - கற்கப்பட்டதனதுமத்தளவித்தைபோலவே—கவினுநாங்கண்டதில்லை - அழகையும்யாம்கண்டிலேம்—விற்றொழிலனங்கவேளே - விற்போர்த்தொழிலைச்செய்கின்றவடிவமில்லாத மன்மதனே—மேனிகொண்டடைந்தானென்ன - வடிவங்கொண்டடைந்தான்போல —ஒருவனுற்றனனென்ன - ஒருவன்வந்திருக்கின்றானென்றுசொல்ல—ஒண்டொடி - மாயையானவள்—விளிமினென்றாள் - அழையுமென்றாள்—அவர் —விளித்துவந்து - அழைத்துவந்து —மாயைமாதெதிர் விடுத்தார். எ - று. மற்று - அசை.

ஒண்டொடி ; அன்மொழித்தொகை. (கசு)

அந்நிலை யலம னாமத் தண்ணலைக் கண்ட போதே
செந்நில முருநீர் போலச் செல்விமான் மயமே யாகிப்
பொன்னவி ரொருபூம் பாவை போன்றசை வறவி ருந்தாள்
கன்னல்வின் மதவே ளெய்து கையிளைத் தருகு நின்றான்.

(இ - ள்.) அந்நிலை - அக்கோலங்கொண்டநிலையையுடைய—அலமனாமத்தண்ணலை - அல்லமனெனப்படுகின்றநாமத்தையுடையதலைவனை—கண்டபோதே—செந்நிலமுருநீர்போல - செம்மண்ணிலத்திலேவிழுந்த நீர்போல—செல்வி - மாயை—மான்மயமேயாகி - அவரினின்றும் உண்டாகியகாமவேட்கை மயமாகி —பொன்னவி ரொருபூம்பாவைபோன்று - பொன்னாற் செய்யப்பட்டுவிளங்காநின்றவோரழகிய பாவைபோல—அசைவறவிருந்தாள் - அசைவில்லையாகவிருந்தாள்—கன்னல்வின்மதவே

ன் - கருப்புவில்லையுடைய மன்மதன்—எய்து - அம்புகளை அவள்மேலே செலுத்தி—கையிளைத்தருகுகின்றான். எ - று. (கஎ)

மயக்குமென் பதுபோய் மாயை மயங்குமென் றிடவி ருப்ப
வியக்குநின் றேயம் யாது வீரவே ளனையா யின்பம்
பயக்குநின் பெயர்யா தெங்குப் பயின்றுறை குவைசொல் லென்
நயக்குமென் மொழியார் கேட்ப ஞானவா ரிதியு ரைக்கும். [று

(இ - ள்.) மயக்குமென்பதுபோய் - மாயையானவளையு மயக்குமெ ன்றுசொல்லப்படுவதுபோய்—மயங்குமென்றிடவிருப்ப - நீரனேமயங்கு மென்றுசொல்லும்படியிருக்க—நயக்குமென்மொழியார் - விரும்பப்படுகி ன்ற மெல்லியசொற்களையுடையமகளிர்—வியக்குநின்றேயம்யாது - மெச் சப்படுகின்றநினதுதேசமெது—வீரவேளனையாய் - வீரத்தன்மையையு டையமன்மதன்போலழகுடையவனே—இன்பம்பயக்குநின்பெயர்யாது- இன்பத்தைத்தருகின்றநினதுபெயரெது—எங்குப்பயின்றுறைகுவை - எ ங்கேபழகியிருப்பாய்—சொல்லென்று - சொல்லென்று—கேட்ப - வினு வ —ஞானவாரிதியுரைக்கும் - ஞானக்கடலாகிய அல்லமர்சொல்லுவார். எ - று. (கஅ)

செல்லுறழ குழலீர் தேய மோபர தேயஞ் சூளால்
வல்லவ ரொன்ன வந்தோர் வலிநிலை யல்ல வென்னு
மல்லம னென்பே ரென்று மன்புசெய் பவரி டத்திற் [ன்.
புல்லுவன் றொடர்பி லாம லென்றனன் பொய்ம்மை யில்லா

(இ - ள்.) செல்லுறழ்குழலீர் - மேகம்போலுள்ளகூந்தலையுடையீர்— தேயமோபரதேயம் - எனதுதேசமோஅன்னியதேசம்—(முத்தியுலகமெ ன்றபடி) —சூளால்வல்லவரொன்னவந்தோர்வலி - சபதத்தால்வல்லவரொ ன்றுவந்தவரது வல்லமைகளை —நிலையல்லவென்னும் - நிலையல்லவென்று சொல்லுகின்ற —அல்லமனென்பேர் —அன்புசெய்பவரிடத்தில் —என் றும்புல்லுவன் - எந்நாளுஞ்சேர்ந்திருப்பேன் —தொடர்பிலாமலென்றன ன் - வேறோர்குடும்பத்தொடர்ச்சியில்லாமலென்றான் —பொய்ம்மையில் லான் - மெய்ம்மையையுடையவனாகிய அல்லமதேவன். எ - று.

பரதேயமெனற்குபயார்த்தம் ; மேலாயதேயம். அதாவது, இனிப்பூர் வபட்சப்படுத்தற் கியையாததேயம். எனவே,சிதாகாயமெனப்பெற்றாம். பொய்ம்மையில்லானெனல் ; உபாதிசகிதனல்லனெனக்காட்டற்கு.(கக)

உலகுள விஞ்சை யெல்லா முணர்ந்தவெம் பிராட்டி தன்பால
மலைவற விஞ்சை கற்றோ தமமொடு மருவி யபபாற்
செலவினை யொழிந்தி ருந்தி செலவமோ டைய வென்று
விலவித ழமுத மன்று ரியம்பின ரிணங்கும வணணம.

(இ - ள்) உலகுளவிஞ்சையெல்லாம - உலகத்தின்கண்ணுள்ள கல்விக ளையெல்லாம்—உணாநத - அறிநத—எம்பிராட்டிதன்பால - எமதுதலைவி யிடத்து—மலைவற - ஐயந்திரிபிலலையாக—விஞ்சைகற்றோ தமமொடு - வித்தைகளைககற்றவரோடு— மருவி - பொருந்தி —அபபாற்செலவினையொழிந்து - வேறேரிடத்திற்போதலைவிட்டு —செலவமோடு—ஐய—இருந்தி யென்று - இருவென்று—இலவிதழமுதமனனா —இலவமலாபோல அதரத்தையுடையஅமிாதம்போலபவா—இணஙகும்வணணம - உடன்படுமவிதம—இயமபினா - சொலலினா. எ - று. (உ0)

தனகனி வாயதி றநது சாறறவேண டியசொல லெலலா
மினகுழு வனைய மாதா விளமபலு மகிழவுற றீது
புனசடை மதுகை நாதன பூசனைப பயனென றெணணி
யினகுழன மொழிம டநதை யிருநதன ளுனாயா டாமல.

(இ - ள்.) இனகுழன்மொழிமடநதை - இனியவேணுநாதமபோலுள்ளசொறகளையுடையமாயை —தன்கனிவாயதிறந்து சாறறவேணடியசொல்லெல்லாம் - தனதுகொவ்வைககனிபோனறவாய்திறந்துசொல்லவேணடியசொல்லெல்லாம் —மின்குழுவனையமாதா - மினனறகொடிததிரளபோலுள்ளமகளிா—விளம்பலும் - சொல்லலும்—மகிழவுறறு—ஈது - இச்சொல்லின்றனமை — புன்சடைமதுகைநாதன் பூசனைபபயனெனறெணணி - புல்லியசடையையுடைய மதுகேசரது பூசையினபயனென்று நினைத்து—உனாயாடாமல் - ஒனறுமபேசாமல—இருநதனள எ - று. (உக)

மோகினி தவஞ்செய் தீனற முகிழமுலை மாயை தன்கைப்
பாகுவெள ளிலைய ளித்துப பரிநதரு குறும டைபபைப
போகியென் பவளசி றநத போகிபோ னடித்து நின்ற
யோகிதன கரதத ளிபபித் துரியன பலவுஞ் செய்தாள்.

(இ - ள்.) அருகுறும் - பக்கத்திலேயிறகினற —அடைப்பைப்போகியென்பவள் - வெற்றிலைப்பை பிடித்திருக்கிற போகியெனப்படுகின்றவள் —தவஞ்செய்து —மோகினியீன்ற - மோகினியினாலேபெறப்பட்ட—

முகிழ்முலைமாயைதன் - தாமரையரும்புபோலுள்ள முலைகளையுடையமா
யையது—கை - கையின்கண்—பரிந்து - விரைந்து—பாகுவெள்ளிலை -
பாக்குவெற்றிலைகளை—அளித்து - கொடுத்து—சிறந்தபோகிபோல்—நடி
த்துநின்ற—யோகிதன் - அல்லமரது—கரத்து - கைகளின்கண்—அளிப்
பித்து - கொடுப்பித்து—உரியனபலவும - செய்தற்குரியபலவரிசைகளு
ம—செய்தாள். எ - று. (உஉ)

அடிக்கம லங்கள போற்று மடியவர் வேண்டி ற்றெல்லாங்
கொடுத்தருள் கருணை வள்ளல் கொண்டகோ லத்திற் கேற்
நடிப்பவ ளுதலாலே நாமவேற் றடங்கண மாயை [ப
யெடுத்துத வுறுவ தங்கை யேற்றன னிழிந்து ளோன்போல்

(இ - ள்.) அடிக்கமலங்கள்போற்றுமடியவர்வேண்டிற்றெல்லாம் - த
ன்னுடையதிருவடித்தாமரைகளைப் புகழ்கின்ற அடியவராலேவேண்டப்
பட்டபொருண்முழுதும்—கொடுத்தருள் - தந்தருளுகின்ற—கருணைவள்
ளல் - அருட்கொடையினனாகிய அல்லமதேவன்—கொண்டகோலத்திற்
கேற்ப - தானெக்கோலங்கொண்டானோ அக்கோலத்திற்குஏற்கும்வண்
ணம்—நடிப்பவனாதலாலே - ஆடுவோனாதலால்—நாமவேற்றடங்கண்மா
யை - அச்சத்தைத்தருமவேல்போலுள்ள பெரியகண்களையுடையமாயை
யால்—எடுத்துதவுறுவது - எடுத்துக்கொடுக்கப்பட்ட தாம்பூலத்தை—இ
ழிந்துளோன்போல் - தாழ்ந்தசாதியான்போல—அங்கையேற்றனன் -
உள்ளங்கையால்வாங்கிக்கொண்டனன். எ - று. (உ௩)

விடைகொடி யமலன் றன்னை விடைகொடு புறம்போந் தங்க
மடக்கொடி மதவேள் வாளி மருமமபாய்ந் துருவ நைந்து [ண
நடக்கரி தாகி யம்பொ னகைமணிச் சிவிகை யூர்ந்து
தொடிக்கைநுண் ணிடைமரு ருங்குற் றேழியா ருழச் சென்றாள்.

(இ - ள்.) மடக்கொடி - இளம்பூங்கொடிபோல்பவள்—விடைக்கொ
டியமலன்றன்னை - இடபக்கொடியையுடையகடவுளிடத்து —விடை
கொடு—அனுஞையைபெற்றுக்கொண்டு—புறம்போந்து - புறத்தில்வந்து—அ
ங்கண் - அவ்விடத்து—மதவேள்வாளி - மன்மதபாணங்கள் —மருமம்பா
ய்ந்துருவ - மார்பிலேபட்டுருவ—நைந்து—நடக்கரிதாகி - நடத்தற்குவலி
யில்லாதவளாகி —அம்பொனகைமணிச்சிவிகையூர்ந்து - அழகியபொன்
னாலும் ஒளிபொருந்திய மணியாலுஞ் செய்யப்பட்ட தண்டிகையிலேறி—
தொடிக்கை - வளையல்களிடப்பட்டகைகளையும்—நுண்ணினமருங்குல் -

நுண்ணியநூல்போற்சிறுத்த இடையையு முடைய —தோழியர் —சூழ-சுற்றிவர—சென்ருள் - போயினுள். எ - று. (உச)

நண்ணிவெண் குடைவேந் தன்பா னடம்புரி தொழிற்கி சைந்த
தண்ணுமை யல்ல மன்றன் சதுருரைத் துடனி ருப்பக்
கண்ணகன் ஞாலங் காக்குங் காவல னிசைவு கொண்டு
பெண்ணமு தனைய மாயை பிறங்குதன் மாடம் புக்காள்

(இ - ள்.) வெண்குடைவேந்தன்பானண்ணி - வெண்கொற்றக்குடையினையுடைய அரசனிடத்துச்சென்று —நடம்புரிதொழிற்கிசைந்த —தண்ணுமையல்லமன்றன் - மத்தளத்தொழில்வல்லஅல்லமனது—சதுருரைத்து - திறமையைச்சொல்லி—உடனிருப்ப - அவன்தன்னுடனிருக்கும்படி—கண்ணகன்ஞாலங்காக்குங்காவலன் - இடமகன்றபூமியைக்காக்கின்ற அரசனது —இசைவுகொண்டு - அநுமதிபெற்றுக்கொண்டு —பெண்ணமுதனையமாயை - பெண்வடிவாகச் செய்யப்பட்ட அமுதம்போல்கின்ற மாயையானவள் —பிறங்குதன்மாடம்புக்காள் - விளங்காநின்றதனது உபரிகைக்குட்சென்ருள். எ - று. (உரு)

வலம்புரி வளைய னந்த மருங்குசூழ்ந் துறச்சி றந்த
சலஞ்சல மிருப்ப தென்னத் தமனிய மணிமா டத்திற்
பொலங்குழை மகளிர் சூழப் பூந்தவி சிருந்து விஞ்சை
நலந்தெரி பவள்போ லெங்க ணம்பனோ டுரைவி ழைந்தாள்.

(இ - ள்.) வலம்புரிவளையனந்தம் - வலம்புரிச்சங்குகள்பல—மருங்குசூழ்ந்துற - தன்னருகேசூழ்ந்துகொண்டிருக்க—சிறந்தசலஞ்சலம் - அவற்றிற்சிறந்தஓர்சலஞ்சலச்சங்கம் —இருப்பதென்ன —தமனியமணிமாடத்தில் - பொன்னுலு மணியாலுஞ்செய்யப்பட்ட உபரிகையில்—பொலங்குழைமகளிர் - பொன்னினுற்செய்யப்பட்ட குழையையணிந்த மகளிர்—சூழ - தன்னைச்சூழ்ந்திருக்க —பூந்தவிசிருந்து - மாயைமலராணைமேலிருந்து—எங்கணம்பனோடு - எம்முடையகடவுளாகியஅல்லமரோடு —விஞ்சைநலந்தெரிபவள்போல் - அவனதுமத்தளவித்தையின் குணத்தை ஆராய்ச்சிசெய்பவள்போல—உரைவிழைந்தாள் - பேசுதல்விரும்பினுள். ()

நினைவவன் புணர்ச்சி மேற்று நெடுங்கணோக் கனங்க னன்று
னினிமிகு மழலின் மேற்று நாவெறுங் கூற்றின் மேற்று

புனைமலர் வணர்வார் கூந்தற் பொற்றொடிக் கிதனு லன்றே
மனமொழி மெய்யொ ருங்கு மங்கைய ரரிய ரென்பார்.

(இ - ள்.) புனைமலர்வணர்வார்கூந்தற்பொற்றொடிக்கு - அலங்கரிக்கப்பட்ட மலரையுடையநெடிய கூந்தலையும் பொன்னாலாகியவளைகளையுமுடையமாயைக்கு—நினைவு—அவன்புணர்ச்சிமேற்று - அவ்வல்லமரது சையோகத்தின் மேலதாயிற்று —நெடுங்கணுக்கு - நெடியகண்களின்பார்வை—அனங்கனன்னுன் - மன்மதன்போல்பவனது —நனிமிகுமழகின்மேற்று - மிக்க அழகின்மேலதாயிற்று—நா - வாய்—வெறுங் கூற்றின்மேற்று - பயனில்சொல்லின்மேலதாயிற்று—இதனுலன்றோ—மனமொழிமெய்யொருங்கு - மன மொழி மெய்கள்ஒருமைப்பட்ட—மங்கையர்—அரியரென்பார் - அரியரென்றுசொல்லுவார்கள் உலகுளோர். எ - று.

பொற்றொடி - அன்மொழித்தொகை. (உஎ)

தீதறு கழைக்க ரும்பிற் றீஞ்சுவை யிரத நீத்துக்
கோதினை விரும்பிக் கொள்ளுங் கொள்கைபோ னவி யின்கட்
போதுறு மதம்வி டுத்துப் புன்மலங் கொளளு மாபோற்
பேதையெம் பிரானுன் முத்தி பெறுதுபுன் போகம வேட்டாள.

(இ - ள்.) பேதை - மாயையானவள்—தீதறுகழைக்கரும்பின் - குற்றமற்றகழையாகியகரும்பினின்றும்—தீஞ்சுவையிரதம் - மாதுரியமுடைய சாற்றை—நீத்து - தள்ளிவிட்டு—கோதினை —விரும்பி—கொள்ளுங்கொள்கைபோல் - கொள்கின்றசெயல்போலவும்—நாவியின்கண் - கஸ்தூரிமிருகத்தினிடத்து —போதுறு - வாராநின்ற —மதம்விடுத்து - கஸ்தூரியைவிட்டு—புன்மலம் - புல்லியமலத்தை —கொள்ளுமாபோல் - கொள்ளுமாறுபோலும் —எம்பிரானுல் - அல்லமரால் —முத்திபெறுது —புன்போகம்வேட்டாள் - புல்லியபோகத்தைவிரும்பினுள் எ - று. (உஅ)

ஒன்றிரண் டொழிய வாளி யுளவெலா மாரன் றூர்த்தான்
குன்றிரண் டனைய கொங்கைக் கோமக ளாற்று ளாகி
மின்றிரண் டனைய மேனி விமலன்மேற் சாய்ந்து வீழ்வாள
பொன்றிரண் டனைய மாதர் பொருந்தலா னுணி நின்றுள்.

(இ - ள்.) ஒன்றிரண்டொழிய - ஒன்றிரண்டுதவிர—வாளியுளவெலாம் - பாணமுள்ளனவெல்லாம் —மாரன் றூர்த்தான் - மன்மதனிறைத்தா

ன்—குன்றிரண்டனையகொங்கைக்கோமகள் - இரண்டுமலைகள்போலுள்ளமுலைகளையுடைய வரசன் மகள்—ஆற்ருளாகி - பொருளாகி—மின்றிரண்டனையமேனி - மின்னலானதுதிரண்டுருக்கொண்டதுபோல் விளங்குகின்றதிருமேனியையுடைய—விமலன்மேற்சாய்ந்துவீழ்வாள் - அல்லமர்மேற்சாய்ந்துவீழவெழுங்கருத்தினள்—பொன்றிரண்டனையமாதர் - திருமங்கையர்கூடி நிற்பதுபோற்ருேன்றுகின்றமகளிர்—பொருந்தலால் - அவ்விடத்திருத்தலால் —நாணிநின்ருள் - வீழாதுநாணிநின்ருள். எ - று.

ஒன்றிரண்டொழியவாளி என்பதற்கு ; இடைகொல்லுதல்செய்யும்பாணமொழியவென்பதுகருத்து. (௨௯)

தளிரியல் காமத் தீயிற் சருகுபட் டாற்ருளாகி
யுளநிகர் மகளிர் சில்லோ ருடன்வர வெழுந்துட் போகி
யளிமல ரளகஞ் சோர வணிமுலை துகில்வி லங்க
வளமலி யணையின் மீது வாயுயிர் பெறிந்து வீழ்ந்தாள்.

(இ - ள்.) தளிரியல் - தளிர்போலுள்ளநிறமுடைய மாயையானவள்—காமத்தீயில் —சருகுபட்டு - சருகாய்ப்பட்டு—ஆற்ருளாகி - பொருளாகி—உளநிகர்மகளிர்சில்லோர் - தன்மனம்போல்கின்றமகளிர்சிலர் —உடன்வர —எழுந்துட்போகி - எழுந்துள்ளேசென்று —அளிமலரளகஞ்சோர - வண்டுகள்மொய்க்கப்பட்ட மலரையணிந்த கூந்தல்சோர—அணி - அழகிய—முலைத்துகில்விலங்க - முலைமேலாடை விலங்க —வளமலியணையின்மீது - வளத்தானிறைந்தமலரணையின்மேல் —வாயுயிர்ப்பெறிந்து - வாயால்மூச்செறிந்து—வீழ்ந்தாள். எ - று.

காமத்தீ - உருவகம். (௩0)

வேறு.

அள்ளிக கொளும்பே ரழகனரு ணாமம புகலு மவாவாலு
முள்ளக் கருதலை யுயிர்போலு மகளிர்க் குணர்த்த முளத்தாலு
மெள்ளப் பவள வாய்திறந்து வீடே தலமன் மேவுதற்குப்
பிள்ளைப் பிறைவா ணுதன்மடவீ ரொன்ருள் பிறரை வென்ருளே.

(இ - ள்.) பிறரைவென்ருள் - அல்லமனல்லாத ஆடவரைவென்றமாயை—அள்ளிக்கொளும்பேரழகன் - கைகளான்மொண்டுகொள்ளத்தகும் பேரழகையுடையவனது—அருணாமம்புகலும் - (இஷ்டத்தை) அருளாநின்றநாமத்தையுச்சரிக்கவேண்டுமென்கின்ற —அவாவாலும் - ஆசையினு

லும—உள்ளக்கருத்தை—உயிர்போலுமகளிர்க்கு - உயிர்போற்சிறந்த தோழியர்க்கு—உணர்த்துமுளத்தாலும - சொல்லவேண்டுமென்கின்றநி னைப்பினலும்—மெள்ளப்பவளவாய்திறந்து—அலமன்மேவுதற்கு - அல் லமன்குடியிருத்தற்கு—வீடேது—பிள்ளைப்பிறைவாணுதன்மடவீரென்று ள் - இளம்பிறைபோலும்ஒள்ளியநெற்றியையுடையதோழிகளேயென்று ள். எ - று. (௩௧)

இறங்கு துறையி னீர்தாயிற் றென்ன மாயை யிடத்துமயல், பிறந்த பொழுதே யுயிரளவாய் நின்றதென்னும் பெற்றிமையை, யறிந்து மகளிர் நின்கருத்தை யறிய வுணர்த்தி லல்லமற்குச், சிறந்த மனையொன் றளிக்குதுமென் றுரைத்துப் பின்னுஞ் செப்புவார்.

(இ - ள்.) இறங்குதுறையின் - இறங்கியநீர்த்துறையிலே—நீர்தாயிற் றென்ன - நீர்துதலுண்டாயினற போல—மாயையிடத்து—மயல் - கா மவேட்கையானது—பிறந்தபொழுதே—உயிரளவாய்நின்றதென்னும்பெ ற்றிமையை - உயிரெவ்வளவோ அவ்வளவாய் நின்றதென்னுந்தன்மை யை—அறிந்து—மகளிர் - அத்தோழியர்—நின்கருத்தை—அறிய - யாம றிய—உணர்த்தின் - அறிவிப்பாயாகில்—அல்லமற்கு—சிறந்தமனையொ ன்று—அளிக்குதுமென்றுரைத்து - கொடுப்போமென்றுசொல்லி—பின் னுஞ்செப்புவார் - மேலுஞ்சொல்லுவார். எ - று. (௩௨)

காமமுளை தோன் றிற்றுனக்கென் றெங்கள் கருத்திற் றோன்றிற் வாம மணிமே கலைமருங்குல் வடிவேன் மருட்டு மதர்விழியா [று
யாமு நினது நெஞ்சகமும் வேற லேநின் னிதயத்திற்
சேம மதனை நாணுமற் செப்பு கென்றார் திருந்திழையார்.

(இ - ள்.) வாமமணிமேகலைமருங்குல் - அழகியமணிகளாலாகியமேகலை யாற்சூழப்பட்டஇடையையும்—வடிவேன்மருட்டுமதர்விழியாய் - வடிக் கப்பட்ட வேலெனக்கண்டோரைமருள்விக்கின்றகளிப்புப் பொருந்தியக ண்களையுமுடையவளே—காமமுளை - காமத்தின் அங்குரமானது—உன க்குத்தோன்றிற்றென்று—எங்கள்கருத்திற்றோன்றிற்று—யாமும்—நின் துநெஞ்சகமும் - உனதுமனமும்—வேறலேம் - ஒருபொருளேயாவோ ம்—நின்னிதயத்திற்சேமமதனை - உன்னுள்ளத்திலேகாவல்செய்யப்பட் டிருப்பதை—நாணுமல்—செப்புகென்றார் - சொல்வாயாகவென்றார்—தி ருந்திழையார் - திருந்தியஅணிகலத்தையுடையவர். எ - று. (௩௩)

கன்னித் தன்மை யழியுமெனு நாணு முலகங் காக்குமொரு, மன்னற் குரிய மகளென்னும பெருமை தானு மத்தளிகன், றன்னைப் புணர்ந்தா ளென்றுவருந தகாத மொழியுந தன்னுளத்தி, லுன்னிக் கருங்கண் மடமாயை யொன்று முரையா திருந்தனளால்.

(இ-ள்.) கன்னித்தன்மை யழியுமெனுநாணும் - தனதுகன்னிமை கெடுமென்றுண்டாகியநாணத்தையும் —உலகங்காக்குமொருமன்னர்க்குரியமகளென்னும்பெருமைதானும் - உலகத்தையளிக்கின்றஅரசனுக்குமகளென்றுசொல்லப்பட்டுவருகின்ற பெருமையையும் —மத்தளிகன்றன்னைப்புணர்ந்தாளென்னு மொருதகாதமொழியும் - மத்தளக்காரனைக்கூடினளென்றுபின்வரக்கடவதாகிய பழிச்சொல்லையும்—தன்னுளத்தில்—உன்னி - ஆலோசித்துக்கொண்டு —கருங்கண்மடமாயை - கரியகண்களையுமடப்பத்தையுமுடையமாயையானவள் — ஒன்றுமுரையாதிருந்தனள் - எதிர்மொழியொன்றுஞ்சொல்லாதிருந்தாள். எ-று. ஆல் - அசை. (ருச)

இறைவி யொன்று முரையாமல் வாளாவிருப்ப வேவல்புரிந்துறவி னின்ற சகளையெனு மாது பிராட்டி யுரையொடுதான் பிறவு மின்று வேறுபட்டா ளென்னே பெண்ணே யறியேனென் றறிவு கலங்கி யொருவுகலா விலாசி யணங்கை வினவினள்.

(இ-ள்.) இறைவி - மாயையானவள்—ஒன்றும் - ஓர்சொல்லும்—உரையாமல் - சொல்லாமல்—வாளாவிருப்ப - சும்மாவிருக்க—ஏவல்புரிந்து - ஏவற்பணிசெய்து—உறவினின்ற - உறவினைக்கொண்டுநின்ற —சகளையெனுமாது—பிராட்டி - நம்பெருமாட்டி—உரையொடு - வாய்ச்சொல்லோடு —பிறவும் - மற்றைச்செய்கைகளும் —இன்று - தன்னிடத்தில்லையாக—வேறுபட்டாள் - வேற்றுமையடைந்தாள் —பெண்ணே —என் - இதற்குக்காரணம்யாது—அறியேனென்று —அறிவுகலங்கி - உணர்வுமயங்கி —ஒருவுகலாவிலாசியணங்கை - அவளைவிட்டு நீங்காதிருக்கின்றவிலாசியென்னப்பட்டஅணங்குபோல்வாளை—வினவினள். எ-று. (ருரு)

இனியான் மறைப்ப தென்கொனுமக் கின்றுவந்த வல்லமனுங், தனிநாயகன்பே ரழகென்னு நறவை யுண்டு தரியாமற், கனிவாய் மடந்தை யுளம்மழிந்தா ளென்று விலாசி கட்டுரை

க்க, முனியா ளியைந்து புன்னகைகொண் டிருந்தாண் மாயை முகங்கவிழ்ந்து.

(இ - ள்.) நுமக்கு - உங்களுக்கு —இனியான்மறைப்பது—என் - யாது—இன்றுவந்த—அல்லமனூர்தனிநாயகன் - அல்லமனெனெப்பற்ற ஆட்வனது—பேரழகென்னும்—நறவையுண்டு - மதுவைக்குடித்து—தரியாழல் - பொறுக்கமாட்டாமல் —கனிவாய்மடந்தை - கொவ்வைப்பழம்போலுள்ளவாயையுடையமாயை —உளமழிந்தாளென்றுவிலாசிகட்டுரைக்க - கருத்தழிந்தாளென்றுவிலாசியென்பவள்சொல்ல—மாயை — இயைந்து- (அதற்கு) சம்மதித்து—முனியாள் - கோபஞ்செய்யாளாகி —முகங்கவிழ்ந்து—புன்னகைகொண்டிருந்தாள். எ - று. (௯௬)

மாயை யிடையை யுளண்முலையான் மற்றை மாதர் போலெ ன்று, தூயமதிஞ ரனுமிதித்துச் சொல்லு மருங்குற் றோகை தான், வாயி னிளவெண் ணகைதோன்ற வாளா விருப்பக் க ண்டுமய, லாயி னுடைய ளெனமாத ரறிந்தா ரருத்தா பத்தியி னல்.

(இ - ள்.) மாயை—இடையையுளள் - மருங்குலையுடையள் —முலையால்—மற்றைமாதர்போலென்று—தூயமதிஞர் - தார்க்கிகரால்—அனுமிதித்து - அனுமானத்தாலறிந்து —சொல்லும - சொல்லப்படுகின்ற—மருங்குல் - இடையையுடைய—தோகை - மயில்போல்பவள்—வாயினிளவெண்ணகை—தோன்ற - தோன்றுநிற்க —வாளாவிருப்ப-சும்மாவிருக்க—கண்டு - அதுநோக்கி —ஆயின் - ஆராயுமிடத்து —மயலுடையளென - காமவேட்கையை யுடையளென்று—அருத்தாபத்தியினல் —மாதர்-தோழியர்—அறிந்தார். எ - று.

அருத்தாபத்தியாவது; நித்தியவுபவாசியை அவனதுபாரித்தவுடலாலிரவிற்கரந்துண்பானெனன்றுணர்கை. அஃதிருவகைப்படும், திஷ்டாருத்தாபத்தி சிரவணருத்தாபத்தியென. அவற்றுளிதுதிருஷ்டாருத்தாபத்தி. அனுமானமாவது; காரியத்தாற் காரணமுண்டெனக்கோடலே. அதுமூவகைப்படும். பிரிதிக்ஞை ஏது திட்டாந்தமென. (௯௭)

வல்லி யுள்ள மறிந்தனமிம் மாயைதனையு மயக்கவல்ல
வல்ல மன்றன் கருத்தையினி யறிய வேண்டு மென்றவர்தாஞ்

சொல்ல வொல்லை மதமானி யென்பாளா யானத் தோன்றறனை
மெல்ல வுள்ள மறிவலெனச் சென்றாள் விநோத விமலன்பால்.

(இ - ள்.) வல்லியுள்ளமறிந்தனம் - இம்மாயையினதுகருத்தையறிந்தேம்—இம்மாயைதனையுமயக்கவல்ல —அல்லமன்றன்கருத்தையினியறியுவேண்டுமென்று —அவர்தாஞ்சொல்ல - அந்தத்தோழியர்சொல்ல—ஒல்லை - விரைவில்—மதமானியென்பாள்—யான்—அத்தோன்றறனை - அந்த அல்லமனை—மெல்லவுள்ளமறிவலென - மெள்ளக்கருத்தையறிந்துவருவேனென்று — விநோதவிமலன்பால் - அச்செலவுக்கேற்றதிருவிளையாட்டையுடையஅல்லமனிடத்தில்—சென்றாள் - போயினாள். எ - று.

மாயைதனையுமென்பதிலும்மை இழிவுசிறப்பு. (௬அ)

மங்கை வருமவ் வரவையறிந் தவளோர் மாற்றம் வருத்திடுமுன், றங்கு மனையிற் சென்றிருப்ப னுங்க டலைவி யெனத்தேடிற், றிங்க ணுதல்வெண் ணகைக்கருங்கட் செவ்வாய்த் திருவே செப்புகவென், றெங்க டலைவ னியம்பமத மானி யியம்பன் மேயினாள்.

(இ - ள்.) எங்கடலைவன் - அல்லமதேவன் —மங்கைவருமவ்வரவையறிந்து - மதமானிதன் னிடத்திறகுவரும் அவ்வரவின்காரணத்தையறிந்து—அவளோர்மாற்றம் வருத்திடுமுன்-அவளொருசொல்சொல்வதற்குமுன் —தங்குமனையிற்சென்றிருப்பன் - நானிருங்கியிருக்குமிடத்துக்குப்போயிருப்பேன் —நுங்கடலைவியெனத்தேடில் —திங்கணுதல் - பிறைபோலுள்ளநெற்றியையும்—வெண்ணகை-வெள்ளியபற்களையும—கருங்கண் - கரியகண்களையும்—செவ்வாய் - செய்யவாயையுமுடைய—திருவே- திருமகள்போல்பவளே—செப்புகவென்று - சொல்வாயாகவென்று—இயம்பன்மேயினாள் - சொல்லத்தொடங்கினாள். எ - று. (௬௯)

வீடு புறநீ வேணடற்க வைய வெமது விளங்குமணி
மாட நினதே யிவணுறைக வரசர் கோமான் மகளிதய
பீட மதனி லுனைவிடா திருத்தி யிருந்தாளா பிரிவறநீ[டவே.
கூட வுறையும் விருப்புடைய ளென்றாள் குறிப்பு வெளிப்ப

(இ - ள்.) ஐய —வீடுபுறநீவேணடற்க - வீட்டைப்புறத்திலே நீவிரும்பாதொழிக—எமது —விளங்குமணிமாடம் - விளங்காநின்ற மணிகளாலாகிய மாடமானது—நினதே - உன்னுடையதே —இவணுறைக - இவ்விட

த்திருப்பாயாக—அரசர்கோமான்மகள் - அரசர்க்கரசன்புதல்வி—இதய பீடமதனில் - தனதுநெஞ்சமாகிய பீடத்தின்கண்ணே—உனைவிடாதிருத்தியிருந்தாள்—பிரிவற - பிரிவில்லாமல் —நீ —கூட - தன்னோடுகூட—உறையும்விருப்புடையளென்றாள் - இருக்கவேண்டுமென்னும் ஆசையுடையவளாளென்றுசொல்லினாள் —குறிப்பு - அவள்குறிப்பு —வெளிப்பட. எ - று. (சஎ)

ஒன்று மில்லே னானீவிர் மிகவு முடையீ ரும்மிறைவி
வென்றி யரசர் குலமடந்தை சாதி யறியா விகிர்தன்யா
னன்றி மகளிர் நீயிர்நான் மைந்த னென்று லடாதம்மா [னான்.
வென்று முங்க ளுட னுறைவென் றெந்தை நகைகொண் டியம்பி

(இ - ள்.) நானொன்றுமில்லேன் - நானொருபொருளு முடையேனல்லேன்—நீவிர்மிகவுமுடையீர் - நீரெல்லாப்பொருளுமிகவுமுடையீர்—உம்மிறைவி - உங்கள்தலைவி —வென்றியரசர்குலமடந்தை - வெற்றியையுடையவேந்தர்குலத்திற்பிறந்தபெண்—சாதியறியாவிகிர்தன்யான் - யான் இன்னசாதியென்றுஅறியப்படாதவேறுபாட்டையுடையவன்—அன்றிநீயிர்மகளிர் - அல்லாமலுநீங்கள்பெண்டிர்கள் —நான்மைந்தனென்றல் - நானாடவனென்றல்—என்றுமுங்களுடனுறைவு - என்றைக்குமுங்களுடனேயிருத்தல்—அடாதென்று - தகாதென்று—எந்தை - அல்லமதேவன்—நகைகொண்டியம்பினான்-புன்சிரிப்புக்கொண்டுசொல்லினான். எ-று.

நள்ளா தொழியி னன்றியவ ணட்டா ளாயிற் பினைப்பேத
ங், கொள்ளா ளொருவர் மாட்டுமெனி லுயிர்போற் சிறப்பிற்
கொண்டவுனை, யெள்ளா ளென்ன வேண்டுமோ வென்சொ லெல்
லா மிருந்தறிதி, வள்ளா லெனவின் மொழிபுகன்றாண் மாற்ற ம
றிந்த மதமானி.

(இ - ள்.) மாற்றமறிந்தமதமானி - பேச்சில்வல்லமதமானியென்பாள்—வள்ளால் - அல்லமதேவனே —அவள் - அந்தமாயையானவள் —நள்ளாதொழியினன்றி - சினேகம்பண்ணாவிட்டாலல்லாமல் —நட்டாளாயின் - சினேகம்பண்ணாளேயானால்—ஒருவர்மாட்டும் - ஒருவரிடத்தும்—பினைப்பேதங்கொள்ளாள் - பின்புவேறுபாடுகொள்ளாள்—எனில் - என்றல்—உயிர்போல்—சிறப்பிற்கொண்டவுனை - சிறந்தபொருளாகக்கொள்ளப்பட்டவுன்னை—எள்ளாளென்னவேண்டுமோ - இகழ்ச்சிசெய்யாளென்றுசொல்லவேண்டுமோ —என்சொலெல்லாம் —இருந்தறிதியென - சில

காலமிருந்தறியாயாயென்று— இன்மொழிபுகன்றாள் - இன்சொல்சொல்லினாள். எ - று. (௪௨)

**கா**ரிற் சிறந்த மலர்க்குழலாய் நின்சொ லெல்லாங் கவர் பொருளைப், பாரித் திருந்துந் தேறுகிலேன் பணியொன் றொருவர் பாற்புரிவோர், தூரத் திருந்து வருங்காலந் துணிந்து வருத றுணிவென்று, நாரிக் கிணங்கு மவன்போல நடித்து விடுத்து நழுவுவோன்.

(இ - ள்.) நாரிக்கிணங்குமவன்போல - மாயைக்குஉடன்படுவோன் போல—நடித்து - ஆடி —விடுத்துநழுவுவோன் - விட்டுப்போகுமல்லமதேவன்—காரிற்சிறந்தமலர்க்குழலாய் - மேகம்போற்சிறந்த மலர்களைமுடித்த கூந்தலையுடையவளே—நின்சொலெல்லாம்—கவர்பொருளை - உபயார்த்தங்களை—பாரித்திருந்த - பரப்பியிருந்தனை—தேறுகிலேன் - அவற்றினுண்மையைத்தெரிகிலேன்—ஒருவர்பால் - ஒருவரிடத்து—பணியொன்றுபுரிவோர் - ஒருதொழிலைச்செய்வோர்—தூரத்திருந்து - தூரமானவிடத்தேகுடியிருந்து—வருங்காலந்துணிந்து - தாம்தொழில்செய்தற்குவருங்காலத்தைத் துணிந்து—வருதல் - வருவது—துணிவென்றான். எ-று.

**ம**ன்னர் மன்னன் மகடிருவோ லக்கங் காணு மைந்தரோ
டுன்னை யுன்று மவளல்ல டலைவ னாக வுன்னினளா
லென்ன வன்ன மனையாய்நுந் தலைவிக் கியற்கை யுயர்த்திடுதல்
முன்ன மென்ன வடங்கியொழு குறுத லெனக்கு முறையென்றான்

(இ - ள்.) மன்னர்மன்னன்மகள் - அரசர்க்கரசன்மகள் —திருவோலக்கங்காணு மைந்தரோடு - திருச்சபையைக்காணும்ஆடவரோடு —உன்னையுன்னுமவளல்லள் - உன்னையொருவனாகநினைப்பவளல்லள்—தலைவனாகவுன்னினளென்ன - முதல்வனாகநினைத்தாளென்றுசொல்ல—அன்னமனையாய் - அன்னம்போலுநடையையுடையவளே—நுந்தலைவிக்கியற்கை - உங்களுடையதலைவிக்குச் சுபாவகுணம்—உயர்த்திடுதல் - உயர்த்திச்சொல்லுதல்—முன்னமென்னவடங்கியொழுகுறுதல் - முன்போலவேயடங்கிநடத்தல்—எனக்கு முறையென்றான். எ - று. ஆல் - அசை.

**சொ**ற்போர் செய்து மறைப்பதினி யென்னும் யாங்க டொழுமிறையா, நிற்போய் நின்னை யெதிர்ந்தளவே கரியுண் விளவி

ணிறையழிந்தாள், கற்போ னின்ற வருந்தவருங் காணு முன்ன முனைக்கண்ட, கற்போ னின்று தடுமாற நினைப்போ லிருந்த தலைவியே.

(இ - ள்.) நாம் - இருவரும் —சொற்போர்செய்துமறைப்பது - சொற்களாலேபோர்செய்து மறைக்கத்தக்கது —இனியென் - இனியாது— யாங்கடொழுமிறையாநிற்போய் - எங்களால்வணங்கப்படுந்தலைவனாக நிற்பவனே —கற்போனின்றவருந்தவரும் - மலைபோற்சலியாதுநின்றஅரியதவத்தினரும—காணுமுன்னம் - தன்னைக்காணுதற்குமுன்பு —உனைக்கண்டகற்போனின்று - உன்னைக்கண்டதாண்போலேநின்று—தடுமாற- மயங்க—நினைப்போலிருந்த - உன்னைப்போல் கலங்காதுநின்ற—தலைவி- மாயை —நின்னையெதிர்ந்தளவே - உன்னையெதிர்ப்பட்டவளவில்—கரியுண்விளவின் - யானையாலுண்ணப்பட்டவிளாம்பழம்போல —நிறையழிந்தாள் - உள்ளீடழிந்தாள். எ - று. (ருடு)

என்று மங்கை கூறுதலுந் தலைவி யிதய நீயறிவை, யன்றி இன்று புதியன்யா னறிவ னோவிங் காப்தமா, நின்ற வுன்றன் மொழிகேட்கு மதுவே யெனக்கு நெறியென்றான், குன்றை வென்ற குவிமுலையாள களிப்ப வெமையாட் கொள்ளுவோன்.

(இ - ள்) என்றுமங்கைகூறுதலும - என்றுமதமாணிசொல்லுதலும்— தலைவியிதயம் - மாயையினதுகருத்தை—நீயறிவை - நீயறிவாய்—அன்றி - அல்லாமல்—இன்றுபுதியன்யான் - இன்றைக்குப்புதியவனாய்வந்தநான்— அறிவனோ - அறியமாட்டுவனோ—இங்கு—ஆப்தமாநின்றவுன்றன் - உண்மைகூறுபவளாயிருந்தவுனது—மொழி - சொல்லை—கேட்குமதுவே - பிரமாணமாகக்கேட்டுநடத்தலே —எனக்குநெறியென்றான் - எனக்குவழியென்றுசொல்லினான்—குன்றைவென்ற - மலையைவெற்றிகொண்ட —குவிமுலையாள் - குவிந்ததனத்தையுடையமாயையானவள்—களிப்ப - மகிழும்படி—எமையாட்கொள்ளுவோன். எ - று. (ருசு)

நல்ல சகுன மென்னவெதிர் கண்டு வந்தாய் நம்பிநீ, வல்ல வசுரர் சுரர்முனிவ ரெல்லா மியங்கு மாயையைப்போர, புல்லி னெளிய னெனப்புல்ல நின்று மெனப்புன் முறுவலொடு, சொல்லி மகிழ்வு கொண்டிறைவி பான்மீண் டனளச் சுடராடுநாடியே.

(இ - ள்.) நம்பி - ஆடவரிற்சிறந்தோனே —நீ —நல்லசகுனமென்ன வெதிர்கண்டுவந்தாய் - வல்ல வசுரர்சுரர்முனிவரெல்லாம் - வல்லவசுரரு

ய அசுரரும் சுரரும் முனிவருமாகியயாவரும்—மயங்குமாயையை ய. மயங்கு தறகிடனுகியமாயையை—ஓர் புல்லினெளியளென - ஒருதிரணம்போலெ ளியளெனும்படி—புல்ல - தானுய்வந்துதழுவ—நின்றுயென—புன்முறுவலொடு - சிறுநகையோடு—சொல்லி—மகிழ்வுகொண்டு—அச்சுடர்த்தொடி - அக்காந்திபொருந்தியவளைகளையுடையவள்—இறைவிபால் - தலைவியிடத்து—மீண்டனள் - திரும்பிவந்தாள். எ - று. (சஎ)

அங்கு மாயை மதமானி சென்ற தற்பி னகந்தளர்ந்து
மங்கை வாய்மை கூறிபுடம் படுக்கு மோமன் மகடனக்குப்
பங்க மாமென் றென்னுயிரைச் சீறி யகலப் பண்ணுமோ
விங்கு நானென் செய்வனென வறியே னென்ன விருந்தயர்
[வாள்.

(இ - ள்.) அங்கு—மாயை—மதமானிசென்றதற்பின் - மாதமானியென் பவளல்லமனிடத்திற்குப்போனபின்பு—அகந்தளர்ந்து - மனஞ்சோர்ந்து—மங்கை - அத்தோழி—வாய்மைகூறி - உண்மையைச்சொல்லி—உடம்படுக்குமோ - சம்மதிக்கச்செய்வாளோ—மன்மகடனக்குப்பங்கமாமென்று - அரசன்மகளுக்குப்பழுதாமென்று—என்னுயிரை - என்னுயிர்போற்சிறந்தவனை—சீறி - கோபித்து—அகலப்பண்ணுமோ - நீங்கச்செய்வாளோ—இங்கு—நான்—என்செய்வனென-இவ்விரண்டுளெதுசெய்வாளென்று—அறியேனென்ன—இருந்தயர்வாள்-இருந்துசோர்வாள்.(சஅ)

என்னை வறிந்து போயினள சந்து பொருந்தா தெய்துமோ, வன்னோ வரசன் மகளென்ன வஞ்சி யழக னகலுமோ, வின்னே ரன்ன நினைவின்றி யெனையே நினைந்திட் டிருக்குமோ, பொன்னே டுறமும வாண்முகங்கண் டலது துயரம போகாதே.

(இ - ள்.) என்னைவறிந்துபோயினள் - எனதுகாமநோயையறிந்துசென்றவள்—சந்துபொருந்தாதெய்துமோ - தூதுபொருந்தாமல்வந்துவிடுவாளோ—அன்னோ - ஐயோ—அரசன்மகளென்ன - ராஜபுத்ரியென்று—அஞ்சி—அழகன் - அழகையுடைய அவ்வல்லமன்—அகலுமோ - நீங்குவானோ—இன்னேரன்னநினைவின்றி - இப்படிப்பட்டநினைப்பில்லாமல்—எனையே நினைந்திட்டிருக்குமோ - என்னையே நினைத்துக்கொண்டிருப்பானோ—பொன்னேடுறமும்வாண்முகங்கண்டலது - பொன்போன்ற

காந்திபொருந்திய (அவனது) முகத்தைக்கண்டாலல்லது —துயரம்போ காது. எ - று. ஏ - அசை. (சஙு)

என்னப் பலவு நினைந்துமட மாயை யிருப்ப விருளைமார்
மின்னற் கருங்க ணிடனுடைக் குறிக ணல்ல விளங்குதலாற்
கன்னிக் குவகை கைகூடு மென்ன விருக்குங் காலைதனி [ளால்,
லன்னப் பெடைபோ னடந்துமத மானி களிப்புற் றடைந்தன

(இ - ள்) என்னப்பலவுநினைந்து - என்றுபலவகையுநினைந்து—மடமா யையிருப்ப - இளமைபொருந்தியமாயையானவளிருக்க —இருளைமார் - தோழிகள் —மின்னற்கருங்கணிடனுடை - பிரகாசிக்கின்றகரியவிடதுகண் துடிப்பதினுலும் —குறிகணல்லவிளங்குதலால்-நல்லசகுனங்கள்காணப்ப டுதலாலும்—கன்னிக்கு-மாயைக்கு —உவகை - மகிழ்ச்சி —கைகூடுமென் ன—இருக்குங்காலைதனில் - இருக்கும்போது—மதமானி —அன்னப்பெ டைபோனடந்து-பெட்டையன்னம் போனடந்து—களிப்புற்றடைந்தன ள் - மகிழ்ச்சிகொண்டுசேர்ந்தாள். எ - று. ஆல் - அசை. (ருo)

வண்டா மரைபோன் முகமலர்ந்து வந்தாள் சென்ற மதமானி
கண்டார் மகளி ரவனுள்ளங் காயோ பழமோ கழறென்றூர் •
தண்டார் வளைமென் குழன்மடவீர் பழமே யென்று சாற்றினுள்
கொண்டா ருவகை யவர்மாயை யுவகை யாரோ கூறுவார்.

(இ - ள்.) சென்றமதமானி - தூதாகப்போனமதமானியென்பவள் — வண்டாமரைபோல்-வளம்பொருந்தியதாமரைமலர்போல—முகமலர்ந்து- முகமலர்ச்சியடைந்து—வந்தாள்—கண்டார்மகளிர் - அவள்வரவைக்கண் டவராகிய மகளிர் —அவனுள்ளம் - அவ்வல்லமன்கருத்து —காயோபழ மோ—கழறென்றூர் - சொல்லென்றூர்கள்—தண்டார்வளைமென்குழன்ம டவீர் - குளிர்ந்தமலர்மாலையையணிந்தமெல்லிய கூந்தலையுடையதோழிக ளே—பழமேயென்று—சாற்றினுள் - சொல்லினுள்—அவர் - அத்தோழி கள்— உவகைகொண்டார் - மகிழ்ச்சிகொண்டார்கள்— மாயையுவகை-மா யைகொண்டமகிழ்ச் சியை—யாரோகூறுவார்-யார்சொல்லுவார்கள். எ-று.

காயோபழமோவெனல்; கைகூடிற்றே இல்லையோவெனக்குறிப்பித் தலை. (ருக)

மன்ன னறியி னென்னுமோ வறியோ மிதனை மறைமினெனப்
பன்னி மகளி ருளத்தடக்கிக் கங்குல் வரவு பார்த்திருந்தா

ரன்ன மனையா ளல்லமன்ற னுடம்பா டுரைத்த வம்மொழியே
கன்னன் மதவே ளெய்தபசும் புண்ணின் மருந்தாக் களிப்புற்றாள்

(இ - ள்.) இதனை-இச்செய்தியை—மன்னனறியின் —என்றுமோ-யா தாமுடியுமோ —அறியோம் —மறைமினென - மறையுங்களென்று —ப ன்னி - சொல்லி —மகளிர்— உளத்தடக்கி - மனதிலடக்கி —கங்குல்வர வு -இரவினை துவருதலை—பார்த்திருந்தார்—அன்னமனையாள் - அன்னம் போன்ற நடையையுடையாளாயை—அல்லமன்றன் - அல்லமனுடைய—உ டம்பாடுரைத்த - சம்மதியைச்சொல்லிய —அம்மொழியே —கன்னன் மதவேள் - 'கருப்புவில்லை யுடையமன்மதனால் —எய்த - எய்யப்பட்ட் அம்பினாலுண்டாகிய—பசுமபுண்ணின் - பசியபுண்ணிற்கு —மருந்தா-ஔ ஷதமாகவெண்ணி—களிப்புற்றாள். எ - று. (நிஉ)

புனலின் விளையா டிருமைந்தர் தம்மு ளெழுந்து போயோ டிப், புனலின் விழுவான் போல்விழுந்த தொளிஞா யிறுபோய்ப் புணரியிடைப், புனலின் விழுந்து மூழ்குபுவந தெழுவான் போ லக் குணதுகட்ற், புனலின் மிசைவந தெழுந்ததிருள் பருகிப் புதுவெண் டிங்களே.

'(இ - ள்.) புனலின்விளையாடிருமைந்தர் - நீர்விளையாடுதற்றொழிலையு டையஇரண்டுபிள்ளைகள்—தம்முளெழுந்து - தமக்குள்ளேஒருவன்சபதத் தாலெழுந்து—போயோடி -ஓடிப்போய்—புனலின்விழுவான்போல் - நீ ரிலேவிழுகிறவன்போல—ஒளிஞாயிறு - பிரகாசத்தையுடையசூரியன்— புணரியிடை - மேலைக்கடலில் —போய் —விழுந்தது —புனலின்விழு ந்து - நீரிலேவிழுந்து —மூழ்குபுவந்து - முழுகிவந்து —எழுவான்போ ல —எழுகின்றமற்றொருவன்போல —இருள்பருகி - இருளையுண்டு—புது வெண்டிங்கள் - புதியவெண்மைபொருந்தியசந்திரன் —குணதுகடற்புன லின்மிசை - கீழ்க்கடனீரின்மேல் —வந்தெழுந்தது - வந்துதயமாயிற்று. எ - று. (நிங)

தொக்க கமலம் வாய்மூடக் கள்ளுண் டிடருஞ் சுரும்பின ங்கண், மொய்க்கு நறுமென் குவளைவாய் திறந்த முகிறுஞ் சிளம் பொழிலிற், புக்க மணிநீர்க் கயத்திரைதேர் குருகு விண்மீன் பூ த்தனவாற், செக்க ரொனுஞ்செந தீயினிடைப் பொரிந்து தெறி த்த பொரிபோல.

(இ - ள்.) தொக்க - நெருங்கிய—கமலம் - தாமரைமலர்கள்—வாய்மூ

ட - குவிந்தவளவில்—கள்ளுண்டு - மதுபானஞ்செய்து—இடறும் - மய ங்குகின்ற—சுரும்பினங்கள் - வண்டின்கூட்டங்கள்—மொய்க்கும் - மொ ய்க்கின்ற—நறுமென்குவளை - நறியமிருதுவாகிய உற்பலமலர்கள்—வாய் திறந்த - மலர்ந்தன—முகிறுஞ்சிளம்பொழிலில் - மேகமண்டலத்தையளா வுகின்ற இளஞ்சோலையினிடத்தில் —மணிநீர்க்கயத்து - அழகியநீரையு டையதடாகத்தில்—இரைதேர் - உணவைநாடாநின்ற—குருகு - நாரைக ள்—புக்க - அடைந்தன—செக்கரெனும்-செவ்வானமாகிய —செந்தீயினி டை - சிவந்தநெருப்பினிடத்தில்—பொரிந்து—தெறித்த பொரிபோல— விண்மீன்பூத்தன - ஆகாயத்தினிடத்தில் நட்சத்திரங்கள்தோன்றின. எ - று. ஆல் - அசை. செக்கரெனுஞ்செந்தீ, உருவகவணி. (ருச)

தூய சோதிப் பகலவன்போய் மேலைப் புணரி தோய்ந்திடலு
மாயை நாமங் கொண்டிருந்த மணிமென் கலாப மயிலைவா
னுய கோம்பி கண்டுசினந் துடலஞ் சிவப்புற் றடங்கல்போன்
மேய மாலைப் பொழுதிலிருஞ் செக்கர் தோன்றி வீந்ததால்.

(இ - ள்.) தூய - பரிசுத்தமாகிய—சோதி - பிரகாசத்தையுடைய - பகலவன் - சூரியன்—போய்—மேலைப்புணரி - மேற்குச்சமுத்திரத்தி ல்—தோய்ந்திடலும் - முழுகியவளவில் —மாயைநாமங்கொண்டிருந்த - மாயையென்னும்பெயரைக்கொண்டிருந்த —மணிமென்கலாபம் - ரத்நங் களிழைத்த சிறந்தமேகலையாகிய, அழகியதுமெல்லியதுமாகிய தோகை யையுடைய—மயிலை—வானுயகோம்பி - ஆகாசமாகிய பச்சோந்தி —க ண்டு—சினந்து - கோபித்து—உடலம் - சரீரம்—சிவப்புற்று - சிவந்து— அடங்கல்போல்—மேய - பொருந்திய—மாலைப்பொழுதில்—இரும் - பர ந்த—செக்கர் - செவ்வானம்—தோன்றி—வீந்தது - அடங்கியது. எ - று.

மயில்போல்பவளை மயிலெனல் ; உவமையாகுபெயர், வானுயகோம்பி ; உருவகவணி. (ருரு)

காலை யரும்பிப் பகலெல்லாம் போதா யிருந்த காமமலர்
மாலை மலர்ந்து பொறும லொரு மாயை நாம மணிவல்லி
மூலை யிருந்து புறம்போந்து விரிவெண் ணிலாமென் முற்றத்திற்
பீலி மஞ்ஞை யெனவீழ்ந்து மதநோய் மிகவாய் பிதற்றுமால்.

(இ - ள்.) காலையரும்பி - காலைப்பொழுதில் அரும்பி—பகலெல்லாம்— போதாயிருந்த - மலரும்பருவத் தரும்பாயிருந்த—காமமலர் - காமமாகிய

பூ—மாலைமலர்ந்து - மாலைப்பொழுதில் மலர்ந்ததினால்—பொறாமல் - சகி க்காமல்—ஒரு - ஒப்பற்ற—மாயைநாமம் - மாயையென்னும் பெயரையு டைய—மணிவல்லி - அழகியகொடியானது—மூலையிருந்து—புறம்போந் து - வெளியேவந்து—விரிவெண்ணிலாமென்முற்றத்தில் - பரந்த வெண் மையாகிய நிலாமுற்றத்தில்—பீலிமஞ்ஞையென - கலாபத்தையுடைய ம யிலைப்போல்—வீழ்ந்து—மதநோய்மிக - காமவிகாரமதிகப்பட—வாய்பி தற்றும். எ - று. ஆல - அசை. காமமலர் ; உருவகவணி. (கூசு)

**தா**ய்வா யுடைந்து மிகுந்தலையை மோதி மோதிச் சலித்தலறக்
காய்வாய் நிலவே யுடன்பிறந்தா ளிருந்து வாழுங் கடிமனையை
நீவா னெழுந்து வந்தழிப்பா யென்று லந்தோ நிலையின்றித்
தேய்வாய் நின்னோ டியைபில்லா வென்னை யென்ன செய்யாயே.

(இ - ள்.) நிலவே—நீ—தாய்வாயடைந்து - தாயினிடத்திற்றோன்றி—மிகுந்தலையை மோதிமோதிச் சலித்தலறக்காய்வாய் - அவள்மிகவுந்தலை யைமோதி மோதிவெறுத்து அலறும்படிகோபிப்பாய். [பெருகி அலையை வீசிவீசி அலைந்து ஒலிக்கும்படி சந்திரிகையை வீசுவாயென்பது கருத்து] (அன்றியும்)—உடன்பிறந்தாள் - கூடப்பிறந்தவளாகியதிருமகள்—இருந் து—வாழும் - வாசஞ்செய்கின்ற —கடிமனையை - வாசனைபொருந்திய தாமரைமலராகிய காவலைக்கொண்ட வீட்டை—வான் - ஆகாசத்தில்—எழுந்துவந்தழிப்பாயென்றால்—அந்தோ - ஐயோ—நிலையின்றித்தேய்வா ய் - என்றுமொருதன்மைத்தாயிராது தேய்பவனே—நின்னோடு - உன் னுடனே —இயைபில்லா - யாதொருசம்பந்தமுமில்லாத —என்னை —எ ன்னசெய்யாய். எ - று.

நீவானெழுந்தென்பதில் - வகரமாசெதுகை. (கூஎ)

**தக்**கன் மகத்தி லொருஞான்று தாளிற் படுநீ தலையேறி
மிக்க முனிவர் மந்திரநீ ரிறைப்ப வின்று மீணடிலாய்
நக்கன் பவள வாய்ப்பட்டுக் களத்தே யிறங்கு நஞ்சுநினை
யொக்கு மென்ப தறியாமை யன்றோ வொளிர்வெண் மதியமே.

(இ - ள்.) ஒளிர்வெண்மதியமே - பிரகாசியாநின்ற வெள்ளியசந்திர னே—தக்கன்மகத்தில் - தக்கனுடையயாகத்தில்—ஒருஞான்று - ஒருநா ள்—நக்கன் - கடவுளுடைய—தாளிற்படுநீ - பாதத்திற்பட்டநீ—தலையே றி—மிக்கமுனிவர் - சிறந்த தவத்தினர்—மந்திரநீரிறைப்ப - மந்திரசலத்

தையிறைக்கவும்—இன்னும்—மீண்டிலாய் - இறங்கவில்லை—பவளவாய்ப் பட்டு - (அவனது) பவளம்போற் சிவந்த வாயிற்பட்டு—களத்தே - கண்டத்திலே—இறங்கும் - இறங்குகின்ற—நஞ்சு - விஷம்—நினை - உன்னை—ஒக்குமென்பது—அறியாமை. எ - று. (ருஅ)

அங்க மதினஞ் சிருத்திஞே னங்க மல்லா வவிர்சடை மேற்
றங்க நினைவைத் திட்டதுநின் கொடுமை கருதித் தானன்றே
பொங்கு மமுத கலையென்ன நின்னைப் புகறல் வெண்டிங்கா
ளிங்கு மனிதர் காராட்டை வெள்ளா டென்ப தொக்குமால்.

(இ - ள்.) வெண்டிங்காள் - வெண்மையாகியசந்திரனே —அங்கமதில் - கண்டத்தினிடத்தில் —நஞ்சிருத்திஞேன் - விஷத்தைவைத்தபரமசிவன்—அங்கமல்லா - உபாங்கமாகிய—அவிர்-பிரகாசியாநின்ற —சடைமேல்—தங்க - பொருந்த —நினைவைத்திட்டது - உன்னைவைத்தது —நின்கொடுமைகருதித்தானன்றே - உனதுதீமையைநினைத்தேயல்லவா—பொங்கும் - பிரகாசியாநின்ற—அமுதகலையென்ன - அமுதகிரணத்தையுடையவனென்று—நின்னை - உன்னை—புகறல் - சொல்லுதல் —இங்கு - இவ்வுலகத்தில் —மனிதர் —கார் - கருமையாகிய —ஆட்டை —வெள்ளாடென்பதொக்கும் - வெள்ளாடென்றுசொல்வதற்கொப்பாகும். எ - று. ஆல் - அசை.

காராட்டைவெள்ளாடென்பதொக்குமெனல்; மங்கலம். (ருகூ)

உருப்ப மிகுவன் றழல்சி வப்புற் றுலகர் காண வொளிதரவு, நெருப்பு வெண்மை யென்பதுநன் னியாயர் நின்னைக் குறித்தன்றே, பொருப்பு நறுஞ்சந் தனச்சேறு புலர்ந்து பொரியப் பூவணையும், விருப்ப மலருங் கொளுந்த வழல் வீசி யெழுந்த வெண்டிங்காள்.

(இ - ள்.) பொருப்பு - பொதியமலையிற்பிறந்த—நறுஞ்சந்தனச்சேறு - நல்லசந்தனக்கட்டையாலாகியகுழம்பு —புலர்ந்து - உலர்ந்து—பொரிய - பொரியும்படியாகவும்—பூவணையும் - புஷ்பசயனமும—விருப்பமலரும் - விருப்பத்தைச்செய்யும்பூமாலைகளும—கொளுந்த - எரியும்படியாகவும்—அழல்வீசியெழுந்த வெண்டிங்காள் - அக்கினியைச்சொரிந்துஉதித்த வெண்மையாகிய சந்திரனே —உருப்பமிகுவன்றழல் - வெப்பமிகுந்தஅக்கினி—சிவப்புற்று - சிவந்து—உலகர்காண - உலகத்தார் .(பிரத்யக்ஷமாக

க்) காணும்படி—ஒளிதரவும் - பிரகாசியாநிற்கவும்—நன்னியாயர் - நல்லதார்க்கீகர்—நெருப்பு—வெண்மையென்பது - வெள்ளைநிறத்தையுடைதென்றுசொல்வது —நின்னைக்குறித்தன்றோ - உன்குணத்தையாராய்ந்தல்லவா. எ - று.

செந்தழலைப்போற் சுடுதலின் மதியைவெண்டழலெனத்தார்க்கீகர் கூறுதல் முரணியைபணி - ஞாயங்காரணமாகவாதித்தலின் தார்க்கீகரை நன்னியாயரென்றார். (சுo)

இன்றோ ருலகி லெனக்கொன் றுபிறர்க்கொன் றாகி யிருக்கின்றாய், நன்றோ வுனக்கு மதியமே ஞாயி றேபோல் வாழாமன், முன்றோ கையர்க ளியாவரையு மொப்பக் காணு முயற்சியா, லன்றோ தேய்ந்து போகின்று யந்தோ வதனை யறியாயோ.

(இ - ள்.) மதியமே - சந்திரனே—இன்று-இப்பொழுது—ஒருலகில் - ஒருலகத்தினிடத்தே —எனக்கொன் றுபிறர்க்கொன்றாகியிருக்கின்றாய் - எனக்கொருதன்மையாகவும் மற்றவர்களுக்கொரு தன்மையாகவுமிருக்கின்றாய் —நன்றோவுனக்கு - (இப்படியிருத்தல்) உனக்குநன்மையா —முன் - முற்காலத்தில் —தோகையர்களியாவரையும் - மனைவியர்கள் இருபத்தேழுபேரையும்—ஒப்பக்காணுமுயற்சியால்-சமமாகநோக்காதசெய்கையால்—அன்றோ—ஞாயிறேபோல் - சூரியன்போல—வாழாமல் —தேய்ந்துபோகின்றாய்—அந்தோ - ஐயோ—அதனை - அக்காரியத்தை —அறியாயோ. எ - று.

முன்றோகையர்க ளியாவரையு மொப்பக்காணுமுயர்ச்சியினு லன்றோ தேய்ந்து போகின்றுயெனறகு நீயுதயமாகுங்காலுனக்கெதிரிற் காணப்படுநாயகனையகலாமங்கையர்க்குப் பிரியமாகவும் அகன்றமங்கையர்க்கு வெறுப்பாகவு நீகாணப்படுதலின் மாதந்தோறுந்தேய்ந்து போகின்றுயெனப்பொருள்சொள்ளினு மொருசாரமையும். (சுக)

கொல்லா நோன்பு முனிமலையிற் றோன்றி யென்னைக் கொல்கின்றாய், பொல்லா மந்த மாருதமே யென்னோ கருணை பூண்டிலாய், சொல்லாய் திருப்பாற் கடலினிடைத் தோன்றுங் கடுவிற் றன்குணமே, யல்லா லமுத குணமுண்டோ நின்னை வெறுப்ப தறிவன்றே.

(இ - ள்.) பொல்லாமந்தமாருதமே-கொடிதாகிய இளந்தென்றலே—கொல்லாநோன்புமுனிமலையில் - கொல்லாவிரதத்தையுடைய அகஸ்திய

முனிவாசஞ்செய்கின்றபொதியமலையில்—தோன்றி - பிறந்தும்—என்னை க்கொல்கின்றாய் —என்னே - யாதுகாரணமோ —கருணைபூண்டிலாய் - அருளையடையவில்லை —சொல்லாய் —திருப்பாற்கடலினிடை —தோன்றுங்கடுவில் - பிறந்தவிஷத்தினிடத்தில்—தன்குணமேயல்லால் - அதனது தீயகுணமேயல்லாமல்—அமுதகுணமுண்டோ— (ஆதலால்) நின்னை வெறுப்பதறிவன்று-உன்னைவெறுத்துச்சொல்வதறிவல்ல. எ - று.

தோன்றியுமென்பதிலும்மை எஞ்சியது. தென்றற்காற்றுஇவளுக்குத் தீமையாத்தோற்றலின் கடுவிற்றன்குணமே யல்லாலமுத குணமுண்டோவெனவெறுத்தல் ; இயைபுநவிற்சியணி. (கூஉ)

உயிர்த்த பொழுதே நின்குரல்கே ளாமுன் னோடிற் றீன்றதாய். நயத்தின் வளர்த்த தாய்குரல்கேட் டலுமே நடுங்கத் துரந்ததாற், பயத்த மலர்ப்பூக் காவகத்தி லிருந்து பல்காற் கூவினாற், செயிர்த்து நின்னைக் குயிலேநான் வெறுத்தல் செப்ப வேண்டுமோ.

(இ - ள்.) குயிலே—உயிர்த்தபொழுதே - பெற்றபொழுதே—ஈன்ற தாய் - பெற்றதாய்—நின்குரல்கேளாமுன் - உன்னோசைகேளாமுன்னமே—ஓடிற்று - ஓடிவிட்டது—நயத்தின் - இன்பத்தின்—வளர்த்ததாய் - செவிலித்தாய்—குரல்கேட்டலுமே-உன்னோசையைக்கேட்டவளவில்—நடுங்க - அஞ்ச—துரந்தது - உன்னைத்துரத்திவிட்டது—பயத்த - பிரயோசனத்தைச்செய்யாநின்ற—மலர் - புஷ்பத்தையுடைய—பூங்காவனத்தில் - பூஞ்சோலையினிடத்தில்—இருந்து—பல்காற்கூவினால் - பலதரங்கூவினால்—செயிர்த்து - கோபித்து—நின்னை - உன்னை—நான்வெறுத்தல் - நான்வெறுத்துச்சொல்லுதல்—செப்பவேண்டுமோ - சொல்லவேண்டுமோ. எ - று.

குயிலானது ஈன்றதாய்க்கும் வளர்த்ததாய்க்கும் வெறுப்புத்தருதல் போல் எனக்கும் வெறுப்புத்தருதலால் தன்மைநவிற்சியணி. (கூந)

கன்னற் சிலையா யென்மனத்தைக் கலக்குங் காளை கவின் கண்டு, முன்னிற் பதற்கு நாணியோ விங்கே நின்று முனிகின்றாய், தன்னிற் பெரிய ரில்லையெனு மவனைச் சமரிற் றாக்காம, னன்னர்த் தனிரின் மெலியாளை யடர்த்தா யாண்மை நன்றரோ.

(இ - ள்.) கன்னற்சிலையாய் - கருப்புவில்லையுடைய மன்மதனே—கவின்கண்டு - அழகைப்பார்த்து—முன்னிற்பதற்கு—நாணியோ - இலச்

பூ—மாலைமலர்ந்து - மாலைப்பொழுதில் மலர்ந்ததினால்—பொறாமல் - சகிக்காமல்—ஒரு - ஒப்பற்ற—மாயைநாமம் - மாயையென்னும் பெயரையுடைய—மணிவல்லி - அழகியகொடியானது—மூலையிருந்து—புறம்போந்து - வெளியேவந்து—விரிவெண்ணிலாமென்முற்றத்தில் - பரந்த வெண்மையாகிய நிலாமுற்றத்தில்—பீலிமஞ்ஞையென - கலாபத்தையுடைய மயிலைப்போல்—வீழ்ந்து—மதநோய்மிக - காமவிகாரமதிகப்பட—வாய்பிதற்றும். எ - று. ஆல - அசை. காமமலர் ; உருவகவணி. (ருசு)

**தா**ய்வா யுடைந்து மிருந்தலையை மோதி மோதிச் சலித்தலறக்
காய்வாய் நிலவே யுடன்பிறந்தா ளிருந்து வாழுங் கடிமனையை
நீவா னெழுந்து வந்தழிப்பா யென்றா லந்தோ நிலையின்றித்
தேய்வாய் நின்னோ டியைபில்லா வென்னை யென்ன செய்யாயே.

(இ - ள்.) நிலவே—நீ—தாய்வாயடைந்து - தாயினிடத்திற்றோன்றி—மிருந்தலையை மோதிமோதிச் சலித்தலறக்காய்வாய் - அவள்மிகவுந்தலையைமோதி மோதிவெறுத்து அலறும்படிகோபிப்பாய். [பெருகி அலையை வீசிவீசி அலைந்து ஒலிக்கும்படி சந்திரிகையை வீசுவாயென்பது கருத்து] (அன்றியும்)—உடன்பிறந்தாள் - கூடப்பிறந்தவளாகியதிருமகள்—இருந்து—வாழும் - வாசஞ்செய்கின்ற —கடிமனையை - வாசனைபொருந்திய தாமரைமலராகிய காவலைக்கொண்ட வீட்டை—வான் - ஆகாசத்தில்—எழுந்துவந்தழிப்பாயென்றால்—அந்தோ - ஐயோ—நிலையின்றித்தேய்வாய் - என்றுமொருதன்மைத்தாயிராது தேய்பவனே—நின்னோடு - உன்னுடனே —இயைபில்லா - யாதொருசம்பந்தமுமில்லாத —என்னை —என்னசெய்யாய். எ - று.

நீவானெழுந்தென்பதில் - வகரமாசெதுகை. (ருஎ)

**த**க்கன் மகத்தி லொருநான்று தாளிற் படிந்து தலையேறி
மிக்க முனிவர் மந்திரநீ ரிறைப்ப வின்னு மிணடிலாய்
நக்கன் பவள வாய்ப்பட்டுக் களத்தே யிறங்கு நஞ்சுநினை
யொக்கு மென்ப தறியாமை யன்றோ வொளிர்வெண் மதியமே.

(இ - ள்.) ஒளிர்வெண்மதியமே - பிரகாசியாநின்ற வெள்ளியசந்திரனே—தக்கன்மகத்தில் - தக்கனுடையயாகத்தில்—ஒருநான்று - ஒருநாள்—நக்கன் - கடவுளுடைய—தாளிற்படிந்து - பாதத்திற்பட்டு—தலையேறி—மிக்கமுனிவர் - சிறந்த தவத்தினர்—மந்திரநீரிறைப்ப - மந்திரசலத்

தையிறைக்கவும்—இன்னும்—மீண்டிலாய் - இறங்கவில்லை—பவளவாய்ப் பட்டு - (அவனது) பவளம்போற் சிவந்த வாயிற்பட்டு—களத்தே - கண் டத்திலே—இறங்கும் - இறங்குகின்ற—நஞ்சு - விஷம்—நினை - உன் னை—ஒக்குமென்பது—அறியாமை. எ - று. (ருஅ)

அங்க மதினஞ் சிருத்தினே னங்க மல்லா வவிர்சடை மேற்
றங்க நினைவைத் திட்டதுநின் கொடுமை கருதித் தானன்றே
பொங்கு மமுத கலையென்ன நின்னைப் புகறல் வெண்டிங்கா
ளிங்கு மனிதர் காராட்டை வெள்ளா டென்ப தொக்குமால்.

(இ - ள்.) வெண்டிங்காள் - வெண்மையாகியசந்திரனே —அங்கமதி ல் - கண்டத்தினிடத்தில் —நஞ்சிருத்தினேன் - விஷத்தைவைத்தபரம சிவன்—அங்கமல்லா - உபாங்கமாகிய—அவிர்-பிரகாசியாநின்ற —சடை மேல்—தங்க - பொருந்த —நினைவைத்திட்டது - உன்னைவைத்தது —நி ன்கொடுமைகருதித்தானன்றே - உனதுதீமையைநினைத்தேயல்லவா— பொங்கும் - பிரகாசியாநின்ற—அமுதகலையென்ன - அமுதகிரணத்தையு டையவனென்று—நின்னை - உன்னை—புகறல் - சொல்லுதல் —இங்கு - இவ்வுலகத்தில் —மனிதர் —கார் - கருமையாகிய —ஆட்டை —வெள்ளா டென்பதொக்கும் - வெள்ளாடென்றுசொல்வதற்கொப்பாகும். எ - று. ஆல் - அசை.

காராட்டைவெள்ளாடென்பதொக்குமெனல்; மங்கலம். (ருகூ)

உருப்ப மிகுவன் றழல்சி வப்புற் றுலகர் காண வொளிது
ரவு, நெருப்பு வெண்மை யென்பதுநன் னியாயர் நின்னைக் கு
றித்தன்றே, பொருப்பு நறுஞ்சந் தனச்சேறு புலர்ந்து பொ
ரியப் பூவணையும், விருப்ப மலருங் கொளுந்த வழல் வீசி யெழுந்
த வெண்டிங்காள்.

(இ - ள்.) பொருப்பு - பொதியமலையிற்பிறந்த—நறுஞ்சந்தனச்சேறு - நல்லசந்தனக்கட்டையாலாகியகுழம்பு —புலர்ந்து - உலர்ந்து—பொரிய - பொரியும்படியாகவும்—பூவணையும் - புஷ்பசயனமும்—விருப்பமலரும் - விருப்பத்தைச்செய்யும்பூமாலைகளும—கொளுந்த - ஏரியும்படியாகவும்— அழல்வீசியெழுந்த வெண்டிங்காள் - அக்கினியைச்சொரிந்துஉதித்த வெ ண்மையாகிய சந்திரனே —உருப்பமிகுவன்றழல் - வெப்பமிகுந்தஅக்கி னி—சிவப்புற்று - சிவந்து—உலகர்காண - உலகத்தார் (பிரத்யக்ஷமாக

க்) காணும்படி—ஒளிதரவும் - பிரகாசியாநிற்கவும்—நன்னியாயர் - நல்லதார்க்கீகர்—நெருப்பு—வெண்மையென்பது - வெள்ளைநிறத்தையுடைதென்றுசொல்வது —நின்னைக்குறித்தன்றோ - உன்குணத்தையாராய்ந்தல்லவா. எ - று.

செந்தழலைப்போற் சுடுதலின் மதியைவெண்டழலெனத்தார்க்கீகர் கூறுதல் முரணியைபணி - ஞாயங்காரணமாகவாதித்தலின் தார்க்கீகரை நன்னியாயரென்றார். (சு0)

இன்றோ ருலகி லெனக்கொன்று பிறர்க்கொன் ருகி யிருக்கின்ருய், நன்றோ வுனக்கு மதியமே ஞாயி றேபோல் வாழாமல், முன்றோ கையர்க ளியாவரையு மொப்பக் காணு முயற்சியா, லன்றோ தேய்ந்து போகின்று யந்தோ வதனை யறியாயோ.

(இ - ள்.) மதியமே - சந்திரனே— இன்று-இப்பொழுது—ஒருலகில் - ஒருலகத்தினிடத்தே —எனக்கொன் றுபிறர்க்கொன்ருகியிருக்கின்ருய் - எனக்கொருதன்மையாகவும் மற்றவர்களுக்கொரு தன்மையாகவுமிருக்கின்ருய் —நன்ரேவுனக்கு - (இப்படியிருத்தல்) உனக்குநன்மையா —முன் - முற்காலத்தில் —தோகையர்களியாவரையும் - மனைவியர்கள் இருபத்தேழுபேரையும்—ஒப்பக்காணுமுயற்சியால்-சமமாகநோக்காதசெய்கையால்—அன்றோ—ஞாயிறேபோல் - சூரியன்போல—வாழாமல் —தேய்ந்துபோகின்ருய்—அந்தோ - ஐயோ—அதனை - அக்காரியத்தை —அறியாயோ. எ - று.

முன்றோகையர்க ளியாவரையு மொப்பக்காணுமுயர்ச்சியினு லன்றோ தேய்ந்து போகின்ருயெனற்கு நீயுதயமாகுங்காலுனக்கெதிரிற் காணப்படு நாயகனையகலாமங்கையர்க்குப் பிரியமாகவும் அகன்றமங்கையர்க்கு வெறுப்பாகவு நீகாணப்படுதலின் மாதந்தோறுந்தேய்ந்து போகின்ருயெனப்பொருள்கொள்ளினு மொருசாரமையும். (சுக)

கொல்லா நோன்பு முனிமலையிற் றேன்றி யென்னைக் கொல்கின்ருய், பொல்லா மந்த மாருதமே யென்னே கருணை பூண்டிலாய், சொல்லாய் திருப்பாற் கடலினிடைத் தோன்றுங் கடுவிற் றன்குணமே, யல்லா லமுத குணமுண்டோ நின்னை வெறுப்ப தறிவன்றே.

(இ - ள்.) பொல்லாமந்தமாருதமே-கொடிதாகிய இளந்தென்றலே — கொல்லாநோன்புமுனிமலையில் - கொல்லாவிரதத்தையுடைய அகஸ்திய

முனிவாசஞ்செய்கின்றபொதியமலையில்—தோன்றி - பிறந்தும்—என்னை க்கொல்கின்றாய் —என்னே - யாதுகாரணமோ —கருணைபூண்டிலாய் - அருளையடையவில்லை —சொல்லாய் —திருப்பாற்கடலினிடை —தோன்றுங்கலில் - பிறந்தவிஷத்தினிடத்தில்—தன்குணமேயல்லால் - அதனதுதீயகுணமேயல்லாமல்—அமுதகுணமுண்டோ— (ஆதலால்) நின்னை வெறுப்பதறிவன்று-உன்னைவெறுத்துச்சொல்வதறிவல்ல. எ - று.

தோன்றியுமென்பதிலும்மை எஞ்சியது. தென்றற்காற்றுஇவளுக்குத்தீமையாத்தோற்றலின் கலிற்றன்குணமே யல்லாலமுத குணமுண்டோவெனவெறுத்தல் ; இயைபுநவிற்சியணி. (சு உ)

உயிர்த்த பொழுதே நின்குரல்கே ளாமுன் னேடிற் றீன்றதாய். நயத்தின் வளர்த்த தாய்குரல்கேட் டலுமே நடுங்கத் துரந்ததாற், பயத்த மலர்ப்பூக் காவகத்தி லிருந்து பல்காற் கூவினாற், செயிர்த்து நின்னைக் குயிலேநான் வெறுத்தல் செப்ப வேண்டுமோ.

(இ - ள்.) குயிலே—உயிர்த்தபொழுதே - பெற்றபொழுதே—ஈன்ற தாய் - பெற்றதாய்—நின்குரல்கேளாமுன் - உன்னோசைகேளாமுன்னமே—ஓடிற்று - ஓடிவிட்டது—நயத்தின் - இன்பத்தின்—வளர்த்ததாய் - செவிலித்தாய்—குரல்கேட்டலுமே-உன்னோசையைக்கேட்டவளவில்—நடுங்க - அஞ்ச—துரந்தது - உன்னைத்துரத்திவிட்டது—பயத்த - பிரயோசனத்தைச்செய்யாநின்ற—மலர் - புஷ்பத்தையுடைய—பூங்காவனத்தில் - பூஞ்சோலையினிடத்தில்—இருந்து—பல்காற்கூவினால் - பலதரங்கூவினால்—செயிர்த்து - கோபித்து—நின்னை - உன்னை—நான்வெறுத்தல் - நான்வெறுத்துச்சொல்லுதல்—செப்பவேண்டுமோ - சொல்லவேண்டுமோ. எ - று.

குயிலானது ஈன்றதாய்க்கும் வளர்த்ததாய்க்கும் வெறுப்புத்தருதல் போல் எனக்குமவெறுப்புத்தருதலால் தன்மைநவிற்சியணி. (சுஙு)

கன்னற் சிலையா யென்மனத்தைக் கலக்குங் காளை கவின்கண்டு, முன்னிற் பதற்கு நாணியோ விங்கே நின்று முனிகின்றாய், தன்னிற் பெரிய ரில்லையெனு மவனைச் சமரிற் றாக்காமல், னன்னர்த் தளிரின் மெலியாளை யடர்த்தா யாண்மை நன்றரோ.

(இ - ள்.) கன்னற்சிலையாய் - கருப்புவில்லையுடைய மன்மதனே—கவின்கண்டு - அழகைப்பார்த்து—முன்னிற்பதற்கு—நாணியோ - இலச்

வைப்பட்டோ—இங்கேநின்று—முனிகின்றாய் - கோபிக்கின்றாய்—நின்னிற் - நன்னைக்காட்டிலும்—பெரியாரில்லையெனும் - அழகிலுயர்ந்தவரில்லையென் றெண்ணும்—அவனை - அவ்வல்லமனை—சமரில் - போரில்—தாக்காமல் - தோற்கச்செய்யாமல்—நன்னர் - நல்ல—தளிரின் - துளிரைவிட—மெலியாரை - மெல்லியராகியமாதரை—அடர்த்தாய் - பொருதாய்—ஆண்மை - ஆண்பிள்ளைத்தன்மை—நன்று - நனறாயிருந்தது. எ - று. அரோ - அசை.

வறியோரைவாட்டாது எளியோரைவாட்டல் மன்மதனுக்கியைதலின் இயைபு நவிற்சியணி. (கூச)

என்று புலம்பி மயன்முதிர்ந்து மாயை யிரங்கி யிருந்தயர மன்றன் மலர்பெய் மெல்லணைப்பூம் பள்ளி யறையின் மதமானி சென்று நம்பி யல்லமனை முன்றந் திருத்தித் தேனாயூண் வென்றி மடங்கற் கிடுதல்போ லவளை விடுத்தா ளவ்வறையுள்.

(இ - ள்.) என்றுபுலம்பி - இப்படிசொல்லிப் பிரலாபித்து —மாயை—மயல்முதிர்ந்து - மயக்கமதிகரித்து—இரங்கி - அழுது—இருந்து—அயர - மனஞ்சோர—மன்றல் - வாசனைபொருந்திய—மலர்பெய் - புஷ்பங்களால் நிறைத்த —மெல் - மிருதுவாகிய - அணை - சயனத்தையுடைய—பூம் - பொலிவுபொருந்திய —பள்ளியறையில் —மதமானி —சென்று - போய்—நம்பி - ஆடவரிற்சிறந்த—அல்லமனை—முன்றந்திருத்தி - முன்னே அழைத்துக்கொண்டுவந்திருக்கச்செய்து —தேனாயூண் - தவளையாகியவுணவை —வென்றிமடங்கற்கு - வெற்றியைக்கொண்டசிங்கத்திற்கு —இடுதல்போல் - உண்ணவைத்தல்போல்—அவளை - அம்மாயையை—விடுத்தாள் . அனுப்பினள்—அவ்வறையுள் - அப்பள்ளியறையினிடத்தே. எ - று.

தேனாயூண் வென்றிமடங்கற்கிடுதல்போல, அறையுளல்லமன்முன் அவளை விடுத்தாளெனல் ஒப்பணி. (கூரு)

வேறு.

வேனினன் பகலின் வெய்யபா லையுணீர் வேட்டவ னந்நிலத் துறுநீர், தானெதிர் கண்டு பருகவோ டுதல்போற் றண்மலரணைமிசை யமர்ந்த. ஞானநல் விளக்கை விழியுறக் கண்டு நகையொடு திருமுக மலர்ந்து, பானலங் கண்ணி புணர்முலை விம்மப் பரிந்துமேல் விழுந்துபுல் லினளால்.

(இ - ள்.) வேனில் - கோடைக்காலத்தில் —நண்பகலில் - உச்சிப் பொழுதில்—வெய்ய - வெப்பத்தையுடைய —பாலையுள் —நீர்வேட்டவன் - தாகங்கொண்டவன்—அந்நிலத்துறுநீர் - அப்பாலைநிலத்திலுள்ளநீராகியகானலை—தான்—எதிர்கண்டு—பருக - குடிக்க—ஒடுதல்போல் —தன் - குளிர்ச்சிபொருந்திய—மலரணைமிசை - புஷ்பசயனத்தின்மீது—அமர்ந்த - இருந்த—ஞானநல்விளக்கை - நல்லஞானதீபமாகிய அல்லமனை—விழியுறக்கண்டு - கண்கள்நிரம்பக்கண்டு—நகையொடு - புன்சிரிப்போடு—திருமுகமலர்ந்து - அழகிய முகமலர்ச்சியையுடையவளாய்—பானலங் கண்ணி - நீலோர்பலத்தை யொத்த கண்ணையுடையவளாகியமாயை—புணர்முலைவிம்ம - நெருங்கியஸ்தனங்கள் பூரிக்க—பரிந்து - விரும்பி—மேல்விழுந்து—புல்லினள் - அணைத்துக்கொண்டாள். எ - று.

தற்பிரியத்தையன்றி வேறொன்றின்றெனக் காட்டக் கானனீரை யுவமித்ததென்க. (௬௬)

நாடிய வாடி நிழலென வணைமே னண்ணுறத் தோன்றிய விறையை, யோடினள் விழுந்து தழுவுறத் தழுவ வுருமையா லணைமிசை விழுந்தே, யாடியி னிழலைப் பற்றநீட் டியகை யாடியிற் றாக்கநின் றழுது, வாடுறு மழலைப் பேதையே போல வருந்தினண் மதர்விழி மாயை.

(இ - ள்.) மதர்விழிமாயை - களித்தவிழியையுடைய மாயை—நாடிய - பார்த்த—ஆடிநிழலென - கண்ணாடியிற் காணப்படுகிற பிரதிபிம்பத்தைப் போல்—அணைமேல் - சயனத்தின்மேல்—நண்ணுற - பொருந்த—தோன்றிய-காணப்பட்ட—இறையை-அல்லமனை—ஒடினள் - ஒடி—விழுந்து —தழுவுறத்தழுவ —உருமையால் - கையிலகப்படாமையால் —அணைமிசை - சயனத்தின்மேல் —விழுந்து —ஆடியினிழலை - கண்ணாடியின்பிரதிபிம்பத்தை —பற்ற-பிடிக்க —நீட்டியகை —ஆடியிற்றாக்க - கண்ணாடியிற்பட —நின்றழுது - அழுதுநின்று —வாடுறும - வாடுகின்ற —மழலை - மழலைச்சொல்லையுடைய —பேதையேபோல - இளங்குழந்தைபோல —வருந்தினள்-வருத்தமுற்றாள். எ-று.

தற்பிரிதிபலனமே வுபாதித்திரியமாகக் காண்டலன்றி வேறின்றெனக் காட்ட ஆடிநிழலை யுவமித்ததென்க. (௬௭)

சொல்லரு மழகன் றிருவுரு விழியிற் றோன்றலான் மீளவு மெழுந்து, புல்லினண மலர்மென் கைகளால் வெளியைப் புல்

லலபோற் சுவைத்தனள் வெறுவாய், வல்லியிவ் வாறு வெளியைய
க் குற்று வள்ளறன் கைப்படா மையினு, லல்லம னலனீ ருருவெ
ளி யென்ன வயிர்த்தன ளுண்மையை யன்றே.

(இ - ள்.) சொல்லருமழகன் - சொல்லிலடங்காத வழகையுடையஅல்லமனது—திருவுரு - வடிவம் —விழியிற்றோன்றலால் - கண்ணிற்காணப்படலால்—மீளவும் - மறுபடியும்—எழுந்து—மலர்மென்கைகளால் - மலர்போன்றமெல்லியகைகளால் —வெளியைப்புல்லல்போல் - வெளியைஅணைத்தல்போல —புல்லினள் - அணைத்தாள் —சுவைத்தனள்வெறுவாய் - வெறுவாயைச்சுவைத்தாள்—வல்லி - மாயை—இவ்வாறு - இப்படியாக —வெளியயக்குற்று - வெளியைக்கண்டுமயங்கி —வள்ளல் - அல்லமன்—தன்கைப்படாமையினால் - தன்கையிலகப்படாமையினால் —அல்லமனலன் —உருவெளியென்ன - இதுஉருவெளித்தோற்றமென்று —உண்மையை - அவனதுமெய்யாகியவடிவை —அயிர்த்தனள் - சந்தேகித்தாள். எ - று. அன்று - ஏ - அசைகள்.

நொரகாயபேதம்... அல்லமனாகக் காண்டலைக்குறிப்பிக்க வெளியைப்புல்லல்போலென் றுவமித்தார். வல்லி ; உவமையாகுபெயர். (சு அ)

அருந்தவ நெடுநாண் முயன்றுதான் பெற்ற வமுதைதவாய்
வைத்திடு மளவிற், கரந்தவ றுதல்போ லல்லம தேவன் கட்புல
த் துற்றுமென் றோளிற், பொருந்துற வெளிபோல் வராமையா
ற் றீயிற் புழுவெனப் பதைபதைத் தரிவை, வருந்தினள் காம
மல்லம னன்றி வடிவுளா ரியாரகட ந்திடுவார்.

(இ - ள்.) அருந்தவம் - செய்தற்கரியதவத்தை —நெடுநாள் —முயன்று - செய்து—பெற்ற - தான்பெற்ற—அமுதைவாய்வைத்திடுமளவில்—கரம் - கை—தவறுதல்போல்—அல்லமதேவன்—கட்புலத்துற்றும்-கண்ணிடத்திற்றோன்றியும்—மென்றோளில் - மெல்லியதோளிடத்தில்—பொருந்துற - அணைக்க —வெளிபோல் —வராமையால் - அகப்படாமையால்—தீயில் - நெருப்பினிடத்தில்—புழுவென - புழுப்போல—பதைபதைத்து—அரிவை - மாயை— வருந்தினள் - வருத்தமுற்றாள்—காமம்-காமத்தை—அல்லமனன்றி—வடிவுளார் - உருவமுடையவர்கள் —யார்கடந்திடுவார் - யார்நீக்குவார்கள். எ - று.

அல்லமதேவனோல முருவெளித்தோற்றமெனக் காட்ட அல்லமதேவன் கட்புலத்துற்று மென்றோளிற் பொருந்துற வெளிபோல் வராமையாலென்றார். (சுகூ)

கன்னிகை யென்று மிறைமக ளென்றுங் கருதிடா தவாவி ளைந் திட்டு, மென்னிணை முலைகண் மார்புறத் தழுவி யிதழ்சுவைத் தணைமிசைப் புணர்வுற், றின்னலி லின்பக் கடலிடை மூழ்க வியவன் றனைற் பெற்றிலே னென்று, தன்னக நைந்து வெய்துயிர்ப் பெறிந்தா டவத்தனா யலைத்தவம் மடந்தை.

(இ - ள்.) தவத்தனா யலைத்தவம்மடந்தை - துறவினனைவருத்தியவம் மாயை கன்னிகையென்றும் - விவாகமில்லாதவளென்றும் — இறைமக ளென்றும் - இராசபுத்திரியென்றும் — கருதிடாது - ஆலோசியாது — அவாவிளைந்திட்டும் - ஆசையைச்செய்தும் — என் - என்னுடைய — இணைமுலை - இரண்டாகியஸ்தனங்கள் — மார்புறத்தழுவி - மார்பினிடத்திற்பொருந்தவணைத்து — இதழ்சுவைத்து - அதரபானஞ்செய்து — அணைமிசை - சயனத்தின்மீது — புணர்வுற்று - புணர்ந்து — இன்னலில் - துன்பமில்லாத — இன்பக்கடலிடை - இன்பக்கடலினிடத்தில் — மூழ்க — இவன்றனைல் - இவ்வல்லமனைல் — பெற்றிலேனென்று - பெற்றுக்கொள்ளவில்லையென்று — தன்னகநைந்து - தன்மனதுநொந்து — வெய்துயிர்ப்பெறிந்தாள் - வெய்விய பெருமூச்சுவிட்டாள். எ - று. (௭௦)

பொழிந்திழி மழையால் வளிநனைந் திடுமேற் புகைநதெழு மெரியில்வான் வேமேன், முழங்குவெண் டிரைப்பே ராழி யக் கலய முனிவனை யழுத்துமே னஞ்ச, மெழுநரன் றன்னை வருத்துமேன் மயக்க மெய்துவ னல்லமதேவ, னொழிந்த வர் தம்மை யொழிவற மயக்கு மொருத்தியு மவன்றனை மயக்கும்.

(இ - ள்.) பொழிந்து - மேகத்தாற் பெய்யப்பட்டு — இழி - விழாநின்ற — மழையால் - சலதாரைகளால் — வளி - காற்று — நனைந்திடுமேல் - நனையுமாகில் — புகைந்தெழும் — எரியில் - நெருப்பினல் — வான்வேமேல் - ஆகாயம்வேகுமாகில் — முழங்கு - சத்தியாநின்ற — வெண்டிரை - வெண்மையாகிய அலையையுடைய — பேராழி - பெரியகடல் — அக்கலயமுனிவனை - அவ்வகத்தியனை — அழுத்துமேல் - அழுந்தப்பண்ணுமாகில் — நஞ்சம் - விஷம் — எழுந்து — அரன்றன்னை - பரமசிவனை — வருத்துமேல் - துன்பப்படுத்துமாகில் — அல்லமதேவன் — மயக்கமெய்துவன் - மயக்கமடைவான் — ஒழிந்தவர்தம்மை - அவ்வல்லமனல்லாதவரை — ஒழிவற -

எப்பொழுதும்—மயக்கும் - மயக்காநின்ற —ஒருத்தியும் - மாயையும்—அவன்றனைமயக்கும் - அவ்வல்லமனைமயக்குவாள். எ - று.

மழையால் வளிநனைதலும் அக்கினியாலாகாயம் வேதலும் கருங்கடலகத்தியமுனியை யமிழ்த்தலும் விஷமானது சிவனைவதைத்தலு மெங்ஙனமின்றோ அதுபோல, மாயையா லல்லமன்மயங்கானெனல் முரணியையணி. (எக)

விண்ணினைக் குத்திக் கையினைப் பவர்போல் வேனெடுங்
கண்ணியங் கிருந்த, வண்ணலைத் தழுவித் தழுவிமெய் வரு
ந்தி யவசமுற் றணைமிசை யுறங்கி, யெண்ணுறு நினைவா லவ
ன்புணர்ந் ததுபோ லின்கன வொன்றுகண் டெழுந்தாள், க
ண்ணக னிலத்தி னிருள்குடிப் பவனுங் கருங்கடன் முகட்டி
னி லெழுந்தான்.

(இ - ள்.) விண்ணினை - ஆகாயத்தை —குத்திக்கையினைப்பவர்போல்—வேனெடுங்கண்ணி - வேலையொத்தநெடியகண்களையுடையமாயை—அங்கிருந்த—அண்ணலை - அல்லமனை—தழுவித்தழுவி —மெய் - சரீரம்—வருந்தி—அவசமுற்று - பரவசப்பட்டு —அணைமிசை - சயனத்தின் மீது—உறங்கி—எண்ணுறுநினைவால் - முன்னெண்ணிய நினைப்பினால்—அவன் - அவ்வல்லமதேவன்—புணர்ந்ததுபோல்-கூடியதுபோல—இன்- இனிய—கனவொன்றுகண்டெழுந்தாள்—கண்ணகநிலத்தில் - இடமகன்றவுலகத்தில்—இருள்குடிப்பவனும் - சூரியனும்—கருங்கடன்முகட்டினில் - கரியகடலின்மேல்—எழுந்தான் - உதித்தான். எ - று.

உபமானமு முபமேயமுமொத்திருத்தலின் ஒப்பணி. (எஉ)

காலையின் மாலை வார்குழன் மாதர் கண்டிளை செய்வளல்
லமன்றன், கோலமென் சொல்வேன் விழியெதிர் தோன்றிக்
குறுகிலென் கைப்படா னதனாற், சாலவு நைந்து துயின்ற
னன் கனவிற் றடமுலை குழைநதிடப் புல்லி, வேலுநல் லரு
ள்செய் துன்னைநா னென்றும் விடுகிலே னென்றன னென்
குருள்.

(இ - ள்.) காலையில் - உதயகாலத்தில் —மாலைவார்குழல் - பூமாலையணிந்த நீண்டகூந்தலையுடைய —மாதர்கண்டு - தோழிகளைக்கண்டு—

உலாசெய்வள - சொல்லுவாள் - அல்லமன்றன் - கோலமென்சொல்லே ன் - விளையாட்டையென்சொல்வேன் - விழியெதிர்தோன்றி - கண்ணெ திரேதோன்றி - குறுகில் - கிட்டினால் - என்கைப்படான் - என்கைக்கு க்கப்படான் - அதனால் - சாலவும் - மிகவும் - நைந்து - வாடி - துயின் றனன் - நித்திரைசெய்தேன் - கனவில் - நடம் - பருத்த - முலை - குழைந்திடப்புல்லி - குழையவணைத்து - மேலும் - மறுபடியும் - நல்ல ருள்செய்து - நல்லகிருபைசெய்து - உன்னை - நான் - யான் - என்றும் - எப்பொழுதும் - விடுகிலேனென்றனன் என்றாள். எ - று. (எரு)

அருந்தவ மழிக்கு மழகுடை யணங்கிற் ககப்படா வி றலினன் யாரோ, புரந்தர னயன்மால் சுரர்முனி வரர்கிம் பு ருடர்வித் தியாதர ரென்னப், பரந்தவர் தமமு ளலனிவ னொ ருவன் பாரத்திடிற் பராபர னென்று, திருந்திழை மகளிர் ம னத்துளே வியந்து தெரிவையோ டுரைத்தன்மே யினரால்.

(இ - ள்.) அருந்தவம் - துறவினரதிபதவத்தை - அழிக்கும் - அழிக் கின்ற - அழகுடை - அழகையுடைய - அணங்கிற்கு - இம்மாயைக் கு - அகப்படா - உட்படாத - விறலினன் - வெற்றியை யுடையவன் - யாரோ - புரந்தரன் - இந்திரன் - அயன் - பிரமன் - மால் - விஷ்ணு - சுரர் - தேவர்கள் - முனிவரர் - கிம்புருடர் - வித்தியாதரர் - என்ன - எ ன்றுசொல்ல - பரந்தவர் தம்முளலன் - விரிந்தவிவருள்சேர்ந்தவனல் லன் - இவனொருவன் - இவன்தனியானவன் - பார்த்திடில் - பராபரனெ ன்று - மேலானகடவுளென்று - திருந்திழைமகளிர் - திருந்தியவணிகளை யுடைய தோழிகள் - மனத்துளே - வியந்து - அதிசயித்து - தெரிவை யோடு - மாயையுடனே - உரைத்தன்மேயினர் - பேசத்துடங்கினார். எ - று. ஆல் - அசை.

பராபரமெனல்; பரம் அபரமெனலே. பரம் அறிவு, அபரம் அறியா மையெனக்கொண்டு இடைநிறுதலெனக்காண்க. (எசு)

ஆசையின் றுளத்தின் மிகவளர்ப் பதற்கா யலமம னிவ் வகை நடித்தான், பேசுறு கனவின் பயனுனக் குறைப்பிற் பின்புனை மெய்யுற வணைவன், வாசமென் குழலா யென்றவண் மனத்தின் வருத்தமற் றிடவுறி துரைத்தார், காசணி மரு ங்குன் மடந்தையர் மாயை கவலைதீர துள்ளுறீ களித்தாள்.

(இ - ள்.) ஆசைநின்னுளத்தில் - உன்னுள்ளத்திலாசையை—மிகவளர்ப்பதற்காய் - அதிகப்படுத்துவதற்காக—அல்லமன்—இவ்வகைநடித்தான் - இவ்விதமாகவிளையாடினன் —பேசுறு - சொல்லிய —கனவின்பயன் - கனவின்பிரயோசனத்தை —உனக்குரைப்பில் - உனக்குச்சொல்லில்—பின்பு - மறுபடியும்—உனை-உன்னை —மெய்யுறவணைவன் - சரீரத்திற்பொருந்தக்கூடுவான்—வாசமென்குழலாயென்று - வாசனை பொருந்தியமெல்லியகூந்தலையுடையமாயையேயென்று —அவள்மனத்தில் - மாயையினதுஉள்ளத்தில்— வருத்தமற்றிட - வருத்தநீங்க—அறிந்து-ஆலோசித்து—காசணி - மேகலையணிந்த —மருங்குல் - இடையையுடைய—மடந்தையர் - தோழிகள்—உரைத்தார் - சொன்னார்கள்—மாயை—கவலைதீர்ந்து - துக்கநீங்கி —உள்ளேகளித்தாள் - மனதினுள்ளேசந்தோஷித்தாள். எ - று. (எரு)

இன்னண மாயை மாதிடை நிகழ்ந்த வியலபினை மோகினி சிலர்போய்ப், பன்னுற வறிந்து மானமீக் கூரப் பருவரற் கடலிடைப் படிந்து, தன்னொரு மகள்வாழ் மாளிகை யெய்தித் தனையையைப் பாங்கிமா ரொடுகூ, யென்னிது செய்தா யையகோ பேதா யென்றுளைந் தின்னன புகன்றாள்.

(இ - ள்.) இன்னணம் - இப்படியாக —மாயைமாதிடை - மாயையென்னும் பெயரையுடைய பெண்ணினிடத்து—நிகழ்ந்த - நடந்த— இயல்பினை - செய்கையை—சிலர்போய் - சிலதோழிகள்போய்—பன்னுற - சொல்ல—மோகினி - மோகினியென்னுந்தாய்—அறிந்து —மானமீக்கூர - அபிமானமதிகரிக்க —பருவரற்கடலிடைப்படிந்து - துன்பக்கடலில்மூழ்கி—தன்னொருமகள்வாழ் - ஒப்பற்றதன்மகள்வாழாநின்ற—மாளிகையெய்தி - உப்பரிகையையடைந்து— தனையையைப் பாங்கிமாரொடுகூய் - தோழிகளோடு மகளையுமழைத்து —என்னிதுசெய்தாய் - என்னகாரியஞ்செய்தாய்—ஐயகோ—பேதாயென்று - அறிவில்லாதவளே யென்று—உளைந்து - மனம்வாடி—இன்னனபுகன்றாள் - இவைகளைச்சொன்னாள். எ - று.

மானமு முயிரு மொருங்குநில் லாத வழியுயிர் தன்னையே விடுத்துத், தானுறு பொருளாய் மானமே கொளுமுன் றந்தைதன் செவிப்படி லென்னும், பானுவு மதியு மியங்குறு மளவும் பழியிது வழிவழி வராதோ, யானுனை வருந்தி யீன்றது மிதற்கோ வென்செய்தாய் பாவியென் றிசைப்பாள.

(இ - ள்.) மானமுமுயிரும—ஒருங்குகில்லாதவழி - ஒன்றாகநில்லாதவி டத்து—உயிர்தன்னையேவிடுத்து - உயிரைவிட்டு—தானுறுபொருளாய் - தானடையவேண்டியபொருளாக—மானமேகொளும-மானத்தையேகா க்கும்—உன்றந்தைதன - உன்பிதாவினது—செவிப்படிலென்னும - கா தில்வீழ்ந்தால்யாதாகும்—பானுவுமதியுமியங்குறுமளவும் - சூரியசந்திரர்க ளுள்ளவரைக்கும்—பழியிது - இப்பழியானது—வழிவழிவராதோ - சந் ததிதோறும்வழங்காதோ—யானுனை - உன்னைநான்—வருந்தி - வருந்த ப்பட்டு—ஈன்றதுமிதற்கோ - பெற்றதுமிதற்குத்தானோ—ஏன்செய்தா ய்பாவியென்று - பாவியென்னகாரியஞ்செய்தாயென்று—இசைப்பாள்- சொல்லுவாள். எ - று. (எஎ)

குரவர்தா மியைந்து கொடுத்தில ராயிற் குமரவே ளனையவ ரேனு, மருவரா நிற்பர் தந்தைதாய் தங்க ளாணையி னெழுகன் னியர்தா, முருவிலா ரெனினுங் குரவருண் மகிழ்வுற் றுதவுறி னனையவர் தமமைப், பரவுவான் கடவு ளாகவே நினைந்து பணபொடும் பயிலுவ ரன்றே.

(இ - ள்.) தந்தைதாய்தங்கள் - மாதாபிதாக்களது—ஆணையினெழுகு- ஆக்கினைவழியினடக்கும்—கன்னியர்தாம்-விவாகமில்லாதபெண்கள்—கு ரவர்தாமியைந்து - மாதாபிதாக்கள்சம்மதித்து—கொடுத்திலராயில்-கொ டுக்காவிட்டால்—குமரவேளனையவரேனும் - முருகவேளையொத்த ஆட வராயினும்—அருவராநிற்பர் - அருவருப்பார்கள்—உருவிலாரெனினும் - குரூபிகளாயினும்—குரவருண்மகிழ்வுற்று - தாய்தந்தையர் சந்தோஷித் து—உதவுறின் - கொடுக்கில்—அனையவர்தம்மை - அவ்வாடவரை—பர வு - துதிக்கப்படும்—வான்கடவுளாகவேநினைந்து-மேலாகியதேவனாகவே ஆலோசித்து—பண்பொடும் - இனிமையோடும்—பயிலுவர் - கூடிவாழ் வார். எ - று. (எஅ)

மணம்புரி வதன்முன் குரவரா ணையினு மணவினை முற் றிய பின்ன, ரிணங்குற வருள்செய் கொழுநனு ணையினு மிருப் பர்தம் வயமில ரென்று, மணங்கனை யவாதா மென்பதை யறி ந்து மடாதவிச் செயலினைச் செய்தாய், பிணங்குவா ரிலையென் றிருந்தனை போலும் பேதைநீ யென்றுதாய் முனிந்தாள்.

(இ - ள்.) அணங்கனையவர்தாம் - தெய்வமகளினை யொத்தஸ்திரீகளு ம்—மணம்புரிவதன்முன் - கல்யாணஞ்செய்தற்குமுன்னே—குரவரா

லையிலும் - தாய்தந்தையரது ஆக்ஞையிலும்—மணவினைமுற்றிய பின்னர்—கலியாணஞ்செய்தபின்பு—இணங்குறவருள்செய் - தன்வசப்படுதலைச்செய்யாநின்ற—கொழுநனுணையினும் - கணவனது ஆக்ஞையிலும் - இருப்பர் - நிற்பார்கள்—தாமவயமிலரொன்றும் - எப்போதும் தன்வசத்தினரல்லர்—என்பதை - என்றுசொல்லப்படுவதை—அறிந்தும் - தெரிந்திருந்தும்—பேதை - அறிவில்லாதவளே—நீ—அடாதவிச்செயலினைச்செய்தாய் - உனக்குத்தகாத இக்காரியத்தைச் செய்தாய்—பிணங்குவாரிலையென்று - உன்னைக்கோபிப்பாரில்லையென்று—இருந்தனைபோலும்—என்று—தாய் - தாயாகிய மோகினி - முனிந்தாள் - கோபித்தாள். எ - று. (எசு)

**தா**ன்செயுந் தவறுந் தாய்செயு முனிவுந் தன்மனந் தனை
நனி வருத்த, நான்செயவ தென்னென் றிருநில நோக்கி நா
ணினீர் விழியுக விருந்தா, டென்செயமென் மொழியாண் மோ
கினி கண்டு சினந்தவிர்ந் தகங்கரைந் துன்மேன், மான்செயும
விழியாய் பிழையிலை யென்றனண் மனங்கரை வன்னைபோ லு
ண்டோ.

(இ - ள்.) தேன்செய்மென்மொழியாள் - தேன்போலுமதுரமாகியசொல்லையுடையமாயை—தான்செயுந்தவறும் - தான்செய்தகுற்றமும்—தாய்செயுமுனிவும் - தாய்செய்கின்றகோபமும்—தன்மனந்தனை - தன்மனதை—நனிவருத்த - மிகவும்வருத்த—நான்செய்வதென்—(இதற்கு) நானென்னசெய்வேன்—என்று—நாணி - வெட்கமுற்று—இருநிலநோக்கி - (தலைவணங்கி) பெருமைபொருந்தியபூமியைப்பார்த்து—நீர்விழியுக - கண்ணீர்சிந்த—இருந்தாள்—மோகினி—கண்டு - அதைப்பார்த்து—சினந்தவிர்ந்து - கோபநீங்கி—அகங்கரைந்து - மனமுருகி—மான்செயும்விழியாய் - மானினதுகண்போன்றகண்ணையுடையமாயையே—உன்மேல்—பிழையிலையென்றனள் - குற்றமில்லையென்றுசொன்னாள்—மனங்கரைவு - மனதுகரைதலில்—அன்னைபோலுண்டோ - தாய்போலொருவருண்டோ. எ - று. (அ0)

**ம**ங்கைமீர் நீயிர் சூழ்ந்தனி ரிருந்தும் வளைதரு வேலியில்
பயிர்போ, லெங்கட மடந்தை நிறையழிந் தொழிய வென்
செய்தீர் பாவிகா ளென்று, எங்குறு மடவார சொல்லொமொழி

ராட்டி யருளொடு கேண்மதி மதனா, லுங்குல மடந்தை யுயிர
விடா திருந்த துன்றவ மென்றுரைந்த துரைத்தார்.

(இ - ள்.) மங்கையீர் - தோழிகளே —நீயிர்சூழ்ந்தனரிருந்தும் - நீங்கள்சூழ்ந்திருந்தும —வளைசரு - வளைந்த —வேலியில் - வேலியில்லாத—பயிர்போல்—எங்கடமடந்தை-எங்கள்பெண்ணாகியமாயையினது—நிறையழிதொழிய-கற்பழிந்துநீங்க—என்செய்திர் - என்னகாரியஞ்செய்தீர்கள்—பாவிகாள்—என்றாள் - என்றுசொன்னாள் —அங்குறுமடவார் - அவ்விடத்திருந்ததோழிகள்—சொல்வர்—எம்பிராட்டி - வுங்கள்தலைவியே—அருளொடுகேள்—மதனால் - மன்மதன் செய்யுந்துன்பத்தால்—உங்குலமடந்தை - உங்கள்குலப்பெண்ணாகியமாயை —உயிர்விடாதிருந்தது—உன்றவமென்று—நைந்துரைத்தார் - மனமவருந்திச் சொன்னார்கள். எ - று. மதி - முன்னிலை அசை. (அக)

பாங்கியர் பகரச் சினஞ்சிறி தவிந்து பாங்கியர் குழுவி
னுட் சிறப்புற், றோங்கிய சகளை தன்முக நோக்கி யுரைப்பள்
மோகினியெனு மரசி, பூங்கணை மதவே ளனையவல லமனை
ப் புறத்தினின் றகற்றிடா தெங்க, ளீர்ங்கதிர் முகமெல் லியி
ன்முனம் விடுத்தா யென்கொலோ வெனவவ ளுரைப்பாள்.

(இ - ள்.) பாங்கியர்பகர - (இப்படித்) தோழிகள் சொல்லியவளவில்—மோகினியெனுமரசி - மோகினியென்று சொல்லப்பட்டராசஸ்திரீ —சினஞ்சிறிதவிந்து - கோபஞ்சிறிதுநீங்கி —பாங்கியர்குழுவினுள் - தோழியர்கூட்டத்துள்—சிறப்புற்றோங்கிய - மிகவுஞ்சிறந்த—சகளைதன்முகநோக்கி - சகளையின்முகத்தைப்பார்த்து—உரைப்பள் - சொல்லுவாள்—பூங்கணைமதவேளனைய - புஷ்பபாணத்தையுடைய மன்மதனையொத்த—அல்லமனை—புறத்தினின்றகற்றிடாது - வெளியேநின்றுதுரத்திவிடாமல்—எங்கள் - எங்களுடைய —ஈர்ங்கதிர்முகம் - சீதளகிரணத்தையுடைய மதிபோன்ற முகத்தையுடைய—மெல்லியன்முனம் - மாயையின்முன்னே—விடுத்தாய் - அனுப்பினாய் —என்கொலோவென - இது என்னகாரணமோவென்று சொல்ல—அவளுரைப்பாள் - சகளைசொல்லுவாள். எ - று. (அஉ)

மானிடப் பிறவி யரிதெனி லரசர் மக்களா குதலரி ததனி,
னூனுறுப் பமைத லரிதினி லரிதா லுணர்வொடு போகங்க

னுகர்த, ருமெனப் பெரியர் கூறலா லன்னாய் தவம்பல மு
யன்றுநீ பெற்ற, மீனெனப் பிறழுங் கண்ணியை வெகுண்டு
வெறுப்பது தகாதென வுரைத்தாள்.

(இ - ள்.) மானிடப்பிறவி - மனிதராய்ப்பிறத்தல் —அரிது-கிடைத்த
ற்கரிது—அதில் - அப்படிபிறத்தலிலும்—அரசர்மக்களாகுதல் - அரசர்பி
ள்ளைகளாய்ப்பிறத்தல் —அரிது-கிடைத்தற்கரிது —அதனில் - அப்படிபி
றத்தலிலும்—ஊனுறுப்பமைதலரிது - அவயவங்கள்குறைவின்றிப்பிறத்த
ல்கிடைத்தற்கரிது—அதில்-அப்படிகிடைத்தாலும் —உணர்வொடுபோக
ங்களுகர்தல் - அறிவுடனேயிருந்துபோகத்தையனுபவித்தல் —அரிது-கி
டைத்தற்கரிதாகும்—எனப்பெரியர்கூறலால் - இப்படியென்றுபெரியோ
ர்சொல்லுதலால்—அன்னாய் —தவம்பலமுயன்றுநீபெற்ற - நீஅனேகதவ
ங்களைச்செய்துபெற்ற — மீனெனப்பிறழுங்கண்ணியை - மீன்போலப்புர
ளாநின்றகண்களையுடையமாயையை —வெகுண்டு - கோபித்து —வெறு
ப்பது —தகாதெனவுரைத்தாள்-உனக்குத்தகுதியன்றென்றுசொன்னாள்
எ - று. ஆல் - தான் - அசைகள். (அங)

மோகினி சகளை புகன்மொழி கேட்டு முகமலர்ந் தென்ற
வப் பயனும், பாகெனு மொழியா டவறிலள யாழோர் பயின்மண
ண மரசர்மேற் றென்ப, ராகவி லிவளுக் கல்லமன் ருனே யருமணத்
தலைவனங் கவன்பாற், போகமவேண்டியவா கொள்கெனப் புகன்று புகன்றனள பின்னுமோர் மாற்றம்.

(இ - ள்.) மோகினி —சகளைபுகன்மொழிகேட்டு - சகளைசொல்லிய
சொற்களைக்கேட்டு—முகமலர்ந்து—என்றவப்பயனும்-என்றவத்தினதுபி
ரயோசனமாகிய —பாகெனுமொழியாள் - பாகையொத்தசொல்லினையு
டையமாயை—தவறிலள் - குற்றமுடையவளல்லள்—யாழோர்பயின்மண
ம் - காந்தருவவிவாகம் —அரசர்மேற்றென்பர் - அரசர்களுக்குரித்தென்
றுசொல்லுவார்கள்—ஆகலில் — இவளுக்கல்லமன்ருனே —அருமணத்த
லைவன் - அரியவிவாகத்திற்குரியநாயகன் —அங்கவன்பால் - அவனிடத்
தில் —போகம்வேண்டியவாகொள்கென - வேண்டியவாறுபோகத்தைய
னுபவிக்கவென்று—புகன்று - சொல்லி —பின்னும்—ஓர்மாற்றம் - ஓர்
சொல்—புகன்றனள் - உரைத்தாள். எ - று. (அச)

உலகெலா மறிய வதுவைசெய் காறு முலகமன் னவனறி
யாமற், றிலகவா ணுதலா ளொழுக்கநீர் *மறைமின் றேமொழி

பீரிவ டுமை, நலமெலா துமதே யாதலா லுமக்கு நான்சொல்வ
தென்னெனு மகளுக், கலகிலா வுவகை செய்துபோ யினடன் ன
கத்திலுண் முனிவுற வந்தாள்.

(இ - ள்.) தேமொழியீர் - மதுரமாகியசொல்லையுடையதோழிகளே— உலகெலாமறிய - உலகமுழுவதுமறியும்படி—வதுவைசெய்காறும் - கலியாணஞ்செய்யுமளவும்—உலக[illegible]றியாமல் - உலகத்தாரும் அரசனும்அறியாமல் —திலகவாணுதலாள் - திலகத்தையணிந்தவொள்ளியநெற்றியையுடைய மாயையினது— ஒழுக்கம் - செய்கையை—நீர்—மறையின் - மறையுங்கள் —இவள்-இவளது —தீமைநலமெலாநுமதே - நன்மையுந்தீமையும்உமதாகும் —ஆதலால்— நுமக்கு - உங்களுக்கு—நான்சொல்வது—என்னெனு - என்னவென்று —மகளுக்கு—அலகிலா - அளவில்லாத—உவகைசெய்து-மகிழ்ச்சியைச்செய்து—போயினள்—தன்னகத்தினுள் - தன்மனதில் —முனிவுறவந்தாள் - கோபம்பொருந்தவந்தவளாகிய யோகினி. எ - று. (அரு)

என்பிழை பொறுமலன்னையோ டென்பா லிருந்தவரோசொ
லினுந்தான், லன்புடை யன்னை முனியுமோ வென்ன வறைந்தன
ளை மாயைகேட் டுறைவாள், பொன்புரை சகளே நங்குரு வுனக்கு
புராரியே தலைவனென் றிருப்பப், பின்பிது நீசெய் தனையெ
னி னின்னைப் பிழைசொல்வார் மேற்பிழை யுணடோ.

(இ - ள்.) மாயை —என்பிழைபொறுமல் - என்குற்றத்தைப்பொறுக்காமல்—அன்னையொடு - தாயுடனே —என்பாலிருந்தவரோ - என்னிடத்திலிருந்ததோழிகளே—சொலின் - சொன்னால்—அதனால்—அன்புடையன்னை - என்னிடத்தில்ஆசையையுடையதாய் —முனியுமோவென்ன - கோபிப்பாளோவென்று—அறைந்தனள்-சொல்லினள்—பொன்புரை-இலக்குமியையொத்த—சகளே—கேட்டுறைவாள் -(மாயைசொல்லியவைகளைக் )கேட்டுச்சொல்லுவாள்—நங்குரு- (சாந்தவாங்காரனென்னும் பெயரையுடைய) நம்முடையகுருவானவர் — உனக்கு—புராரியே - பரமசிவனே — தலைவனென்றிருப்ப - நாயகனென்றுசொல்லியிருக்கவும் —பின்பு—இதுநீசெய்தனையெனில் - இந்தக்காரியத்தை நீசெய்தாயாகில்—நின்னை-உன்னைக்குறித்து — பிழைசொல்வார்மேல்-குற்றஞ்சொல்லுமவரிடத்தில்—பிழையுண்டோ' குற்றமுண்டோ. எ - று. (அசு)

மானனை யாய்நந் தாயறிந் தமையான் மறைந்தது நொய்துபட் டன்றிக, கோனிதை யறிவ னெனினெளி தாமோ கோமள வல்லிநீ கேண்மோ, போனது போக வினியவன் றன்னைப் புறத்தினில் விடுவதே யறிவு, தானென வுரைத்தாண் மாயைகேட் டயர்ந்து தாங்கருந் துயரமோ டிருந்தாள்.

(இ-ள்.) மானனையாய் - மானையொத்தமாயையே—நந்தாயறிந்தமையால் - நாமுடையதா யறிந்தபடியால்—நொய்துபட்டு - அற்பமாய்—மறைந்து—அன்றி - அல்லாமல்—கோனிதையறிவனெனில் - இதைஅரசன் அறிவானாயின்—எளிதாமோ—கோமளவல்லி - அழகியகொடியையொத்தமாயையே—நீகேண்மோ - நீகேட்பாயாக—போனதுபோக - இனியவன்றன்னை - இனிமேலாகிலும் அவ்வல்லமனை—புறத்தினில்விடுவதே - அப்புறப் படுத்துவதே—அறிவுதானெனவுரைத்தாள்-விவேகமென்றுசொன்னாள்—மாயைகேட்டு—அயர்ந்து - சோர்ந்து—தாங்கருந்துயரமோடு - சகித்தற்கரியதுன்பத்துடனே—இருந்தாள். எ - று.()

அல்லம னறிந்து நுந்திரு மடந்தைக் கடுத்ததென் புகலெனச் சகளை, வல்லிநின் மாயை வலையிடைப் பட்ட மறையெலா மிறைமனை நிறைந்த, தொல்லைநல் வினையா லறிந்திலன் வேந்த னொருவனும யாமுய்ய வேண்டிச், சொலநுவ தொன்றுண் டையநீ புறத்தோர் சூழலி லிருந்தனன் றென்றாள்.

(இ-ள்.) (பின்பு) அல்லமனறிந்து—நுந்திருமடந்தைக்கு - உங்கள் திருமகளையொத்தமாயைக்கு—அடுத்ததென்புகலென - நேரிட்டகாரியமென் சொல்வாயென்று கேட்க—சகளை - சகளையென்னுந்தோழியானவள்—வல்லி - கொடியையொத்தமாயை—நின் - உன்னுடைய—மாயைவலையிடைப்பட்ட—மறையெலாம் - இரகசியங்களெல்லாம்—இறைமனைநிறைந்த - அரசன்வீடு நிரம்பின—தொல்லைநல்வினையால் - பழையபுண்ணியத்தால்—வேந்தனொருவனும் - அரசனொருவன் மாத்திரம்—அறிந்திலன்—யாமுய்யவேண்டி - நாமெல்லாம்பிழைக்கவேண்டி—சொல்லுவதொன்றுண்டு—ஐயநீ—புறத்தோர்சூழலில் - வெளியிலோரிடத்தில்—இருந்தனன்றென்றாள் - இருப்பது நல்லகாரியமென்று சொன்னாள். எ - று.

0

வல்லிக்கொடிபோல்பவளை வல்லியென்றது; உவமையாகுபெயர்.()

மாயையை யகன்று னடக்கககா லெழுமோ வாயிடை மா
ற்றமொன் றுண்டோ, போயொரு விடய முணமனம் வருமோ
பொருந்துறும பகலிர வுளவோ, காயமு முயிருங் கலந்துவா
ழ் வுறுமோ கண்டன மெனவெனை யொருவா, நீயறி வுறவிங்
குரைப்பவ ருளரோ நேரிழா யென்றன னண்ணல்.

(இ - ள்.) மாயையயகன்றால் - மாயையைவிட்டுநீங்கினால்—நடக்கக்
காலெழுமோ—வாயிடை - வாயினிடத்தில்—மாற்றமொன்றுண்டோ -
ஓர்சொல்வருமோ—போயொருவிடயம் - ஒருவிஷயத்தினிடத்திலேபோ
ய்—உணமனம்வருமோ - மனம்உண்ணுதற்குச் செல்லுமோ—பொருந்து
றும்பகலிரவுளவோ - பொருந்திய இராப்பகலுள்ளனவாருமோ—காயமு
முயிருங்கலந்துவாழ்வுறுமோ - உடலும் உயிருஞ் சேர்ந்தின்பமனுபவிக்கு
மோ—கண்டனமெனவெனையொருவர் - என்னையொருவர் கண்டோ
மென்று—நீயறிவுறவிங்குரைப்பவருளரோ - இவ்விடத்தில்நீயறியச்சொ
ல்லுவாருண்டோ —நேரிழாயென்றனனண்ணல் - பெண்ணேயென்று
சொன்னான் அல்லமன். எ - று மாயையென்றது - பிரகிருதியை.

இங்கே மாயையென்றது ; அறிவின்புடைபெயர்ச்சியை. அன்றேல்
ஒருமுதலாகவேண்டும். இல்லாமையின் பொருந்தாதென்க. மாயையை
யகன்றாலெனலை முதனிலைத்திபமாக்குக. அப்புடைபெயர்ச்சி பிரவிர்த்
தி நிவிர்த்தியெனவிரண்டாம். நிவிர்த்தியேனும் பிரவிர்த்தியைக் கெ
டுக்கவந்த வவசரத்ததாதலின் அதுவுங்கூடாதென்பார், மாயையயகன்
றாலென்றார். சிதாகாயம்,சிவம். அதின் சலனம்போற்காண்கை, சிற்சத்தி.
அச்சலனப்பிரதிபலனமே யனந்தபேதகோடிநிறை சித்தாகவும், சடமா
கவுங் காண்கை மாயாசத்தி. இவ்விருவகை சத்தியாற்சற்றுஞ்சிதாகாய
ஞ் சனியாது சலிப்பதுபோற்காண்டல் பகிர்முகத் தாதலானும், அதன்
புறமில்லாமையானும் பொருந்தாதென்க. இதுபகிர்முகத்தோ டந்தர
முகத்திற்கு மியைதலின் இயைபுநவிற்சியணி. அகன்றாலெனலாலாறு
காரமு மெதிர்மறைக்கும். அகலாக்காலென்னில் ஒகாரமெய்தா வுடன்
பாட்டு வினைமுற்றிற்கு மியையுமென்க. தூலமுதல் பிரகிருதிகாறுமு
ள்ள வவ்வவற்றின் புடைபெயர்ச்சியனைத்தும் மாயையை யகலில் நிகழா
வெனப்படலா லத்தியாசவுபாதியெனக்கண்டாம். காணவே பிரதிபிம்
போபாதியும் அவிச்சின்னோபாதியு மாயாகாரியமெனப் பெற்றும். அறி
வயனுட்டத்தில் வருத்தஞ் சற்றும் பிலப்படாதென்க. (அகூ)

கருத்தினை யறியா தவன்மொழி தனக்குக் காட்டிய பொருளையே கொண்டு, விரைத்துணர் மலர்மென் குழலினாள் புணரும் விதியுள தென்னிலெங்கொடியைத், தரித்தவ ணொருநீ யிருப்பினு முனக்குத் தருமிதி லையம்வேண் டாவென், றுரைத்தனள் கருணை யென்றுசெய் குவனென் றுழன்றவ ளன்னையை நோக்கி.

(இ - ள்.) கருத்தினையறியாது - அவன்நினைப்பின் பொருளையறியாமல்—அவன்மொழி - அவ்வல்லயன்சொல்—தனக்குக்காட்டிய பொருளையேகொண்டு - தனக்கறிவித்த அர்த்தத்தையே மனதிற்கொண்டு—விரைத்துணர்மலர் மென்குழலினாள் - வாசனைபொருந்திய பூங்கொத்தை யணிந்த மெல்லிய கூந்தலையுடைய மாயையை—புணரும் - கூடும்—விதியுளதென்னில் - ஊழுள்ளதாகில்—எங்கொடியை - எங்கள்பெண்ணை—தரித்தவணொருநீயிருப்பினும் - ஒருவனாகியநீ எவ்விடத்தில் நிலைபெற்றிருப்பாயாயினும்—உனக்குத்தரும் - கொண்டுவந்துனக்குக்கொடுக்கும்—இதிலையம்வேண்டாவென்று - இந்தக்காரியத்தில் சந்தேகம் வேண்டுவதில்லையென்று—உரைத்தனள் - சொல்லினாள்—கருணையென்று செய்குவனென்று - எப்போதுகிருபைசெய்குவானென்று—உழன்றவள் - திரிந்தவளாகியசகலை—அன்னையைநோக்கி - அல்லமனைப்பார்த்து. எ-று.

இங்கே கருத்தெனல்; அந்தர்முக நாட்டத்தை. இருப்பினுமென்பதி லும்மை இழிவுசிறப்பு. உனக்கென்பதி லேகாரமெஞ்சியது. கொடி, உவமையாகுபெயர். (௯௦)

சகலையிவ் வாறு மொழிதர நங்காய் சாலவு நன்றுநன் றென்று, நகைமதி தவழுஞ் செஞ்சடை மதுகை நாயகன் றிருமுனஞ் சென்று, முகிழ்முலை நடிக்கும் பொழுதுதன் செயல்செய் முயற்சியி னின்றனன் றனக்குத், தருமென வளர்பே ரறிவினோர் றன்னைத் தானலா தறிதரப் படாதான்.

(இ - ள்.) சகலையிவ்வாறுமொழிதர - இப்படியாகச்சகலைசொல்ல—நங்காய் - பெண்ணே—சாலவுநன்றுநன்றென்று - மிகவும்நல்லகாரியம் நல்லகாரியமென்று சொல்லி—நகைமதி - வெள்ளியசந்திரன்—தவழும்—செஞ்சடை - சிவந்தசடையையுடைய—மதுகைநாயகன் - மதுகேசனது—திருமுனஞ்சென்று - சந்நிதியில்வந்து—முகிழ்முலை - அரும்பை

யொத்தமுலைகளையுடையமாயை —நடிக்கும்பொழுது - ஆடும்பொழுது— தன்செயல்செய்முயற்சியினின்றனன் - தன்தொழிலைச் செய்யுஞ் செய்கையிலிருந்தான்—தனக்குத்தகுமென - இதுதனக்குத்தக்கதென்று—வளர்பேரறிவினால் - வளராநின்றபெரிய அறிவினால்—தன்னைத்தானலாது—அறிதரப்படாதான் - அறியப்படாதவனாகிய அல்லமன். எ - று.

நன்று நன்றெனல் ; உவப்பாலெய்திய வடுக்கு. முகிழ்முலை, சினைப்புறத்துப் பிறந்தவன்மொழித்தொகை. தன்னைத்தானலா தறிதரப்படாதானெனல் ; அறிவேவடிவா விளங்கலை. தன்னைத்தானலாது -தன்னைத்தானறியவேண்டுவதன்றி—அறிதரப்படாதான் -வேனையவற்றுளொன்றாலு மறியப்படாதவன் எனப்பொருள்கொள்க. பேரறிவென்றது வளரொன்றாமிகையால் அனுபவநிலைக்குத்தக்கவாறு வளர்தலெனப்பெற்றாம். தனக்குத் தகுமெனநின்றனனென முடிக்க. அறியவேண்டுவதெனல், இசையெச்சம். (கூக)

பிரபுதேவர்வந்தகதி முற்றிற்று.

ஆ கதி - ரு - ஹ - திருவிருத்தங்கள - ருபஅ -

ஆறாவது

# விமலைகதி

வேறு.

அமலை யேவ வகனிலத் தெய்துபு
சமல மாயை தனக்கருண் மூர்த்தியா
நிமல னல்லம னீதியை யன்பினால்
விமலை கூறிய வண்ணம் விளம்புவாம்.

(இ - ள்.) அமலையேவ - பார்வதிஅனுப்ப — அகனிலத்தெய்துபு - அகன்பூமியினிடத்தில்வந்து — விமலை - ரஜோகுணவடிவமாகியவிமலையானவள் — சமலமாயைதனக்கு - மலத்தோடுகூடியவளாகியமாயைக்கு — அருண்மூர்த்தியாம் - அருள்வடிவினளாகிய — நிமலனல்லமன் - நின்மலனாகியஅல்லமனது — நீதியை - ஒழுக்கத்தை — அன்பினால் - பத்தியோடு — கூறியவண்ணம் - சொல்லியதன்மையை — விளம்புவாம் - சொல்லுவாம். எ - று.

கூறியவண்ணம், கூறியபடியென வினையெச்ச மாக்காதழி வழுவாம். ஆயிற்றென்னும் வினை யெஞ்சியது. (க)

மதுகை நாதனை நாடொறு மாயைதா
னதிக வந்தனை யாற்றிந மல்லம
னுதவு மான்மனத் தோங்க விருந்தன
டிதிக ளெண்ணில செல்ல நிலத்திலே.

(இ - ள்.) மதுகைநாதனை - மதுகேசுவரனை — நாடொறும் - தினந்தோறும் — மாயை — அதிகவந்தனையாற்றி - மிகுந்தபூசனையைச்செய்து — நமல்லமன் - நம்முடையஅல்லமதேவன் — உதவு - கொடுத்த — மால் - மயக்கம் — மனத்தோங்கவிருந்தனள் - மனத்திலதிகரிக்கவிருந்தாள் — திதிகளெண்ணிலசெல்லநிலத்திலே - பூமியினிடத்திலெண்ணில்லாதநாள்கள்போக. எ - று. (உ)

ஆய காலையி லம்பிகை ஞாலமேன்
மாயை போய்நெடு நாளினும் வந்திலள்
போயி ராதவட் கொண்டிவண் போதென
வேயி னாள் விமலையை யென்பவே.

(இ - ள்.) ஆயகாலையில் - இப்படியாகவிருந்தநாளில்—அம்பிகை - உமாதேவி—ஞாலமேல் - பூமியினிடத்து—மாயைபோய் —நெடுநாள் - அனேகநாளாயிற்று—இனும்வந்திலள் - இன்னமும்வரவில்லை—போய் - நீ அவ்விடத்திற்குச்சென்று—இராது - தாமசப்படாது—அவட்கொண்டு - அவளையழைத்துக்கொண்டு —இவண்போதென - இவ்விடத்தில்வாவென்று—நல்விமலையை—ஏயினாள் - அனுப்பினாள். எ - று.

இனுமெனல், இடைக்குறை. போதுகவென்றற்பாலது, போதென்றாயது கடைக்குறை. ஏவினாளெனல்; ஏயினாளென்றாயது எதுகைத்திரிபு என்ப-ஏ-அசைகள். (௩)

கறையில் சோதிக் கயிலையி னின்றுநம்
மிறைவி யேவ விறைஞ்சி வருமுலைப்
பொறையி னால்விழுந் தாளெனப் பூமிசை
மறுவி லாமதி போல்பவள் வந்தனள்.

(இ - ள்.) கறையில்சோதிக் கயிலையினின்று - களங்கமில்லாதபிரகாசத்தையுடைய கயிலாசத்திலிருந்து—நம்மிறைவியேவ - நம்பிராட்டியாகியபார்வதியனுப்ப —இறைஞ்சி - (அப்பார்வதியை) வணங்கி—வருமுலை - வளர்ந்துவருகின்றமுலையினது —பொறையினால் - பாரத்தினால் —விழுந்தாளென - விழுந்தாளென்றுசொல்லும்படி —பூமிசை - பூமியின்மீது—மறுவிலாமதிபோல்பவள் - களங்கமில்லாதசந்திரனையொத்தவள் —வந்தனள். எ - று.

முலைப்பொறையாற் கீழேவிழுந்ததாகக் குறித்தலால், தற்குறிப்பணி. விழுந்தாளென, விழுந்தாளெனத்தகைத்தோவதுபோலவென் றுரைகூறல் சிறப்பு. (௪)

வந்து பொன்னெயில் வட்ட வளவளை
நந்து பொன்மணி மாட நணுகியே
சந்த மாயை தனதெதிர் நின்றனள்
கந்த மென்மலர்க் கற்பக வல்லிபோல்.

(இ - ள) வந்து—பொன்னெயில்வட்ட - பொன்னாற்செய்தமதில்சூழ்ந்த—வனவசை - வனவசைஎன்னும் நகரினிடத்தில் —நந்து-செல்வமிகுந்த—பொன்மணி - பொன்னாலும்மணியினாலுஞ்செய்யப்பட்ட—மாடம்-உபரிகையினிடத்து —நணுகி - சேர்ந்து —சந்தம் - அழகையுடைய —மாயைதனதெதிர் - மாயைக்கெதிரே—கந்தம் - வாசனைபொருந்திய—மென்மலர் - மெல்லியமலரையுடைய—கற்பகவல்லிபோல் - கற்பகக்கொடிபோல—நின்றனள். எ - று.

பொன்னெயில்வட்டம், பொன்மதிலை வட்டமாகவுடைய எனல் சிறப்பு. (ரு)

நின்ற போதெதிர கண்டு நிலவுல
கன்று போலுமில் வாயிழை வாழிட
மென்று மாயை யெழுந்து தொழுதணை
யொன்று மேவி யிருப்ப வுதவினள்.

(இ - ள.) நின்றபோது - இப்படியாகநின்றபோது—எதிர்கண்டு - எதிரேபார்த்து —இவ்வாயிழை - இம்மாது —வாழிடம் —நிலவுலகன்றுபோலும - பூலோகமல்லாதுபோலும் —என்று-இப்படியென்றுலோசித்து—மாயையெழுந்து—தொழுது - வணங்கி—அணையொன்று - ஓராசனம்—மேவியிருப்ப - விரும்பியிருக்க—உதவினள் - கொடுத்தாள். எ - று.

ஆயிழை ; அன்மொழித்தொகை. (சு

அருகி ருந்த வணைய ிருவரு
மிருக ரங்களு மேந்து மணியென
வுருவ மைந்திவ ணுைத்தன ெனச்சூழ
புரம டந்தையர் புந்தி வியந்தனர்.

(இ - ள்.) அருகிருந்த - சேர்ந்திருந்த—அனையரிருவரும் - அதந்தன்மையராகியவிரண்டுமாதரும் —இருகரங்களும் - இரண்டுகைகளும்—ஏந்துமணியென - ஏந்தியரத்தினம்போல—உருவமைந்து - அழகமைந்து—இவணுைத்தனரென்று - இவ்விடத்தொத்திருந்தாரென்று—சூழ் - சூழ்ந்த—புரமடந்தையர் - அந்நகரத்துமாதர்கள் —புந்திவியந்தனர் - புத்தியிலதிசயித்தார்கள். எ - று.

ஏந்துமணியென வென்றதனால், ஒப்பணி. (எ)

மாயை வந்த மடந்தையை நோக்கியே
நீயி ருந்ததெங் குன்பெயர் யாதுநீ
மேய தன்மையென் னென்று வினவலுந்
தேயு நுண்ணிடைச் செப்புதன் மேயினாள்.

(இ-ள்.) மாயை—வந்தமடந்தையை - வந்தமாதை—நோக்கி - பார்த்து—நீயிருந்ததெங்கு - நீவாசஞ்செய்ததெவ்விடம்—உன்பெயர்யாது - உன்பெயரேது—நீமேயதன்மையென்னென்று - நீவந்தகாரியம்யாதென்று—வினவலும் - கேட்டவளவில்—தேயுநுண்ணிடை - தேய்ந்தநுண்ணிய விடையையுடைய விமலை—செப்புதன்மேயினாள் - சொல்லத்தொடங்கினாள். எ-று.

நுண்ணிடை, வினைப்புறத்துப்பிறந்தவன்மொழித்தொகை. (௫)

கயிலை யென்னிடங் கற்பக வல்லியென்
பெயரி யம்பின் விமலை பெருங்குல
சயில மங்கைநின் றன்புடை யேவினாள்
வியனி லந்தனில் வந்துனை மேவினேன்.

(இ-ள்.) கற்பகவல்லி - கற்பகக்கொடியையொத்தமாயையே—என்னிடம் - நான்வாசஞ்செய்யுமிடம்—கயிலை—என்பெயரியம்பின் - என்பெயரைச்சொல்லில்—விமலை—பெருங்குலச்சயிலமங்கை - பெருமைபொருந்திய இமயமலையின்புதல்வியாகிய பார்வதி—நின்றன்புடை - உன்னிடத்தில்—ஏவினாள் - அனுப்பினாள்—(ஆதலால்) வியனிலந்தனில் - விசாலமாகிய பூமியினிடத்தில்—வந்து—உனைமேவினேன் - உன்னையடைந்தேன். எ-று.

கற்பகவல்லி; உவமைபுறத்துப்பிறந்தவன்மொழித்தொகை. (௬)

என்ன மன்மக ளெம்பெரு மாட்டிதான்
மன்னும் வெந்துயர் மக்கட் பிறப்பினேன்
தன்னை யுன்னிநின் றன்னை விடுத்ததென்
பன்னு கென்னப் பகர்தரன் மேயினாள்.

(இ-ள்.) என்ன - என்றுசொல்ல—மன்மகள் - இராசபுத்திரியாகிய மாயையானவள்—எம்பெருமாட்டி - எமதுதலைவியாகிய பார்வதி—மன்னும்வெந்துயர் - நிலைபெற்றவெவ்விய துக்கத்தையுடைய—மக்கட்பிறப்

பினேன்றன்னை - மானிடப்பிறப்பையுடைய என்னை—உன்னி - நினைத்து —நின்றன்னை - உன்னை —விடுத்ததென் - அனுப்பியது யாதுகாரணம்—பன்னுகென்ன - சொல்வாயென்றுகேட்க —பகர்தரன்மேயினுள் - (விமலை) சொல்லத்தொடங்கினாள். எ - று. (௧0)

வேறு.

அல்லமன் வலிநிலை யறிந்து வாவென
நல்லுமை நினைவிட நன்றென் றெங்கைநீ
வல்லமை பேசியிம் மண்ணில் வந்தபின்
சொல்லிய நின்பெருஞ் சூண்ம றந்தனை.

(இ - ள்.) அல்லமன்வலிநிலை - அல்லமனது வலியினிலைமையை—அறிந்துவாவென—நல்லுமை - நன்மையிருந்த உமாதேவி —நினைவிட - உன்னையனுப்ப—நன்றென்று - நல்லதென்று—எங்கைநீ - என்தங்கையாகியநீ—வல்லமைபேசி - சபதஞ்சொல்லி—இம்மண்ணில் - இப்பூவுலகத்தில் —வந்தபின்—சொல்லிய - அக்கயிலையிற்சொல்லிய — நின்பெருஞ்சூள் - உனதுபெரியசபதத்தை—மறந்தனை - மறந்தாய். எ - று. (கக)

நின்னையு மறிந்திலை நீயென் றாலிவ
னுன்னுறு மனமொழி யுறாத வல்லமன்
றன்னைநீ யறிவுறு தன்மை யுண்டுகொல்
கன்னிமா துமைதம கலையை யல்லையோ.

(இ - ள்.) கன்னி - மாயையே—நீ—நின்னையும் - உன்னையே—அறிந்திலையென்றால்—இவண் - இவ்விடத்து—உன்னுறும் - நினையாநின்ற—மனமொழியுறாத - மனவாக்கிற்கெட்டாத—அல்லமன்றன்னை - அல்லமனை—நீ —அறிவுறுந்தன்மையுண்டுகொல் - அறியுந்தன்மையுண்டோ—மாதுமை - உமாதேவியினது—தமகலையையல்லையோ - தமோகுணாம்சமல்லவா நீ. (கஉ)

ஓடுற மருந்தயின் றுறங்கல் போலுமை
யாடிய சூண்மறந் தயர்ந்தி ருந்தலா
னாடிநின் றனைத்தரற் கென்னை நல்லுமை
யேடவிழ் மலர்க்குழா லேவினு ளென்றாள்.

(இ - ள்.) ஏடவிழ்மலர்க்குழால் - இதழ்கள்விரிந்தபூவையணிந்தகூந்தலையுடையமாயையே—ஓடுறமருந்தயின்று -(ஒருவன்)ஒடுதற்குமருந்தை

யுண்டு —உறங்கல்போல் - நித்திரைசெய்தல்போல —உரையாடிய சொல்லிய—சூள் - சபதத்தை—மறந்து —அயர்ந்திருத்தலால் - சோர்ந்திருத்தலினால் —நாடிநின்றனைத்தரற்கு-உன்னைத்தேடியழைத்துவருதற்கு—என்னை—நல்லுகைம-நன்மைமிகுந்தஉமாதேவி—ஏவினாளென்றாள் - அனுப்பினாளென்றுசொன்னாள். எ - று.

குழால் ; சினைப்புறத்துப்பிறந்த வன்மொழித்தொகை. (௧௩)

கதிரொழு பகலெனக் கண்டி டாதுதன்
மதியெழு மிரவென மனந்தெ ளிந்துதன்
றிதியொடு நினைவுமோர் சிறிது றிந்தனள்
விதியுண ரிறைமகள் விமலை சொல்லினால்.

(இ - ள்.) விதியுணரிறைமகள் - ஞாயநூல்களையறிந்தஅரசன்மகளாகிய மாயை—விமலைசொல்லினால் —கதிரொழுபகலென - சூரியனுதயமாகியபகலிற்கண்டபொருள்போல—கண்டிடாது - அறியாது—தன்மதியெழுமிரவென -குளிர்ந்தசந்திரனுதயமாகியஇரவினிற்கண்டபொருள்போல—மனந்தெளிந்து —தன்றிதியொடுநினைவும் - தனதுபூர்வஸ்திதியுடனேதான்செய்துவந்தசபதத்தையும்—ஓர்சிறிது—அறிந்தனள். எ - று. (௧௪)

மூலகா ரணனெனச் சிலர்மொ ழிந்திடு
மாலுமோர் மானிடப் பிறப்பில் வந்துதன்
சீலமோர்ந் திலனெனிற் சிறிய பேதைநான்
ஞாலமேன் மயங்குத னவிறல் வேண்டுமோ.

(இ - ள்.) மூலகாரணனென - பிரபஞ்சத்திற்கு மூலகாரணனென்று—சிலமொழிந்திடும் - சிலசமயத்தோரால் சொல்லப்படும்—மாலும் - திருமாலும்—ஓர் மானிடப்பிறப்பில்வந்து-இராமனாகஅவதரித்து—தன்சீலமோர்ந்திலனெனில் - தனது பூர்வநிலையையறிந்திலனென்றால் —சிறியபேதைநான் - மிகவுமறியாமையையுடையவளாகியநான்—ஞாலமேன் மயங்குதல் - இவ்வுலகத்தில் மயங்குதலை—நவிறல்வேண்டுமோ - சொல்லவேண்டுமோ. எ - று.

ஓர் மானிடப்பிறப்பாவது ; ராமாவதாரத்தை. வேண்டுமோவென் பதிலோகாரம் எதிர்மறை. வல்லி ; அன்மொழித்தொகை. (௧௫)

அல்லம ணியல்பெலா மறியப் பூந்துணா
வல்லியின் குமுதவாய் மலர்ந்து கூறனள

சொலலினன் றிணையடி தொழுத மாதொடு
வில்லுறழ் நறுநுதல் விமலை கூறுவாள்.

(இ - ள்.) அல்லமனியல்பெலாம் - அல்லமனதுஸ்வபாவகுணங்களை யெல்லாம்—அறிய—பூந்துணர்வல்லி - பூங்கொத்தையுடையகொடியை யொத்த விமலையே—நின்குமுதவாய்மலர்ந்து - குமுதத்தையொத்த வுன் றிருவாய்மலர்ந்து—கூறென - சொல்லென்று—சொல்லினன்று—இணை யடிதொழுதமாதொடு - தன்னுபயபதங்களைத்தொழுத மாயையுடன்— வில்லுறழ் நறுநுதல் - வில்லையொத்த அழகியநெற்றியையுடைய—விமலை கூறுவாள். எ - று. (௧௬)

கயிலையி னுமையொடு கண்ணுதற் பிரான
செயலுறு மல்லமன் செய்தி கூறலு
மயலுற விருந்துநா னறிந்து ளேனதை
மயிலியல் கேளென வகுத்தன் மேயினள்.

(இ - ள்.) கயிலையின்—உமையொடு - உமாதேவியுடன்—கண்ணுதற் பிரான் - நெற்றிக்கண்ணையுடையபரமசிவன்—செயலுறுமல்லமன் - எ ல்லாசெயலையுமுடையஅல்லமனது—செய்திகூறலும் - சரித்திரங்களைச்சொ ல்லவும்—அயலுறவிருந்துநான் - நான்பக்கத்திலிருந்து—அறிந்துளேன் - அறிந்திருக்கின்றேன்—அதை - அச்சரித்திரத்தை—மயிலியல்கேளென - மயிலினதுசாயலையுடையமாயையேகேளென்று—வகுத்தன்மேயினள் - விரித்துச்சொல்லத்தொடங்கினள். எ - று.

மயிலியல் ; அன்மொழித்தொகை. (௧எ)

வேறு.

படியில் வள்ளி காவையெனும் பதியிற் றனக்கு நிக
ரில்லா, னொடிவில் கருணை நிராங்கார னென்னு முண்மைப்
பெயரினன், மடிவில் கற்பி னவன்றேவி மாசு தீர்ந்த சுஞ்ஞா
னி, கடியின மறையா கமவிதிகள் கண்ணுற் றறிய வொரு
குவார்.

(இ - ள்.) படியில் - இவ்வுலகத்தில்—வள்ளிகாவையெனும்பதியில் - வ ள்ளிகாவையென்னுமூரில்—தனக்குநிகரில்லான் - தனக்கொப்பில்லாதவ னாகிய — ஒடிவில்கருணை - இடையறாதகிருபையையுடைய —நிராங்கார

னென்னுமுண்மைப்பெயரினன் —மடியில்கர்பின்-கெட்டாதகறலையுடைய —அவன்றேவி-அந்நிராங்காரன்மலையாள்—மாகுதீர்த்தகுஞ்ஞானி-குறநீங்கியசுஞ்ஞானியென்பாள் —கடிவில் - நீக்கப்படாத—மறையாகமவிதிகள் - வேதாகமவிதிகளை-கண்ணுற்று - இவர்களைப்பார்த்து—அறிய - உலகத்தார்தெரிந்துகொள்ள—ஒழுகுவார் - நடப்பார்கள். எ - று. (கஅ)

மெய்ம்மை சிவமே யல்லாது விரியு முலகம் பொய்யெ ன்பார், ரிம்மை மறுமை நிலையல்ல வென்ன நிகழ்ந்த கருத்தி னோர், செம்மை நெறியிற் புறமொடகந் திரியுங் கரணங் காமா தி, பொய்ம்மை வினையி லவாகுருநூல் பொருளாய்த் துணி ந்து வீடெய்ப்பார்.

(இ - ள்.) மெய்ம்மைசிவமே - சிவமேஉண்மை —அல்லாது - அஃதல்லாததாயிருக்கிற—விரியும் - விரிந்த—உலகம்பொய்யென்பார—இம்மை மறுமைநிலையல்லவென்ன - இருபிறப்பும்அழியப்படுவதென்று—நிகழ்ந்த கருத்தினோர் - கொண்டகருத்தையுடையவர்கள்—செம்மைநெறியில் - நல்லநெறியில்லாத—புறமொடகம் - அகத்தும்புறத்தும்—திரியுங்கரணம் - திரியாநின்றமனாதிகளும்—காமாதி - காமமுதலானதுகளும்—பொய்ம்மை வினை - பொய்யாகியசெய்கையும்—இலவர்-இல்லாதவாகள்—குரு-ஞானாசாரியனுபதேசிக்கப்பட்ட—நூல்-சாஸ்திரத்தைதபே—பொருளாய்த்துணிந்து - வஸ்துவாகநிச்சயித்து —வீடெய்ப்பார்-மோக்ஷத்தையிச்சிப்பார்கள் .எ - று.

சிவத்தின்பிரிதிபலனமுலகென்றுணர்த்த மெய்ம்மைசிவமேயல்லாது விரியுமுலகம்பொய்யென்முர். அல்லாது - அல்லாமல்—செம்மைநெறியில் - தமதுஸ்வாநுபூதிநிலையில்—புறமொடகந்திரியும் - சுறங்குபோலகம்புறத்திலலைந்துதிரியும்—கரணம் - மனதும் —காமாதிபொய்ம்மைவினை - காமக்குரோதமுதலியபொய்ச்சேட்டைகளும்—இல்லவர் - இல்லாதவாகளாய் - குரு - ஆசிரியருபதேசத்தையும் —நூல்.பிரபலசுருதியையும்—பொருளாய் - உறுதிப்பொருளாக —துணிந்து - ஐயந்திரிபின்றித்துணிந்து—வீடெய்ப்பார் - நிரதிசயானந்தத்தைவிரும்புவர் எனப்பொருள்கோடல், சிறப்பு. ஆதியென்றதனல், குரோதலோபமுதலியவற்றைக்கொள்க. பொய்ம்மை வினையென்றது ; மித்தியாத்தியாசமுதலிய வெண்ணங்கைவினையினையுங்கோடற்கென்க. (கக)

இனைய ராகி யிருக்குநா ளில்வாழ்க் கையினின் றிடு தலாற், றனைய ரின்னிம யானெஞ்சு தளாவான் போன்று தி

ராங்கார, ஏிீனையுந் தியான மில்லாத நெஞ்சு ஞான மில்லா
த, விீனையும போலு மக்களிலா மிக்க வாழ்வென் றியம்பியே.

(இ - ள்.) இனையராகி - இத்தன்மையராகி—இருக்குநாள் - இருக்குங்காலத்தில்—இல்வாழ்க்கையினின்றிடுதலால் - இல்லறத்திலிருத்தலால்—தனையரின்மையால் - புத்திரரில்லாமையால்—நெஞ்சந்தளர்வான் போன்று - மனந்தளர்பவனையொத்து—நிராங்காரன்—மக்களிலா - பிள்ளைகளில்லாத—வாழ்வு—நினையும்-நினையாநின்ற—தியானமில்லாத—நெஞ்சும்-மனத்தையும்—ஞானமில்லாத—வினையும் - கர்மத்தையும்—போலும் - ஒக்கும்—என்றியம்பி - என்றுசொல்லி. எ - று.

தியானமாவது ; உலகெதுயாபாரெண வவற்றினுண்மைவிளங்குமாறும் மனநிறறலே. ஞானமில்லாதவினையாவது ; சரியைகிரியையோடுகிர்த்தியங்களை. (உ0)

இந்த வுலகிற் குதவியா யியன்ற தொழில்கள் பலசெய்யு, மைந்தன் வேணடு மெனநிற்போன் மககட் பதடி யாகு வா, னந்த வுலகிற் காநினைபபோ னறங்கூா மகனு மத்துவி தா, னந்த முதவு மகவிருப்போன் ஞானி யாகு மெனவெ ணணி.

(இ - ள்.) இந்தவுலகிற்குதவியாய்—இயன்றதொழில்கள்பலசெய்யும் - தகுந்தபலதொழில்களைசசெய்கின்ற—மைந்தன்வேண்டுமெனநிறபோன் - புத்திரன்வேண்டுமென்றிருபபவன்—மக்கட்பதடியாகுவான் - மனிதருக்குட்பதராவான்—அந்தவுலகிற்காநினைப்போன் - மேலுலகிறகென்றுநினைக்குமவன்—அறங்கூர்மகனும் - தருமமிகுந்தஆண்மகனுவான்—அத்துவிதானந்தமுதவும் - ஒன்றாகியவானந்தத்தைக்கொடுக்கும்—மகவிருப்போன் - புத்திராபேஷையுடையவன்—ஞானியாகும்—என்றெண்ணி - என்றுநினைத்து. எ - று.

இயன்றதொழில்கள் ; அருந்தல்பொருந்தல்களுக்கியைந்த தொழில்களை. அந்தவுலகிற்காநினைத்தல் ; சாமியத்தவங்களை. அத்துவிதானந்தமுதவல் ; நிட்காமியதவப்பேற்றை. (உக)

உடமபைப் பொறியைக் கரணத்தை யுயிரைத் தானென் றுழலாம, லடங்கத் துறந்து தனையறிந்து பேதா பேத மென்றுமயல், கடந்திட் டிருக்கும பரமுத்தி காட்டும புத

ல்வன் வேண்டுமென, விடும்பைப் பிறவி நோய்தணிப்ப வெ
ண்ணு மனத்தா னெண்ணினான்.

(இ - ள்.) இடும்பை - துன்பத்தைச்செய்யும—பிறவிநோய்தணிப்ப - பிறவித்துன்பத்தைக்கெடுக்க —என்னுமனத்தான் - என்னுகின்றமனதையுடையநிராங்காரன்—உடம்பை - சரீரத்தை —பொறியை-ஐம்பொறிகளை—கரணத்தை - மனாதிகளை—உயிரை - பிராணவாயுவை—தானென்றுழலாமல் - தானென்றுநினைத்துத்திரியாமல்—அடங்கத்துறந்து - அவைமுழுதுமொழித்து—தனை - தன்னை—அறிந்து—பேதாபேதமென்னும —மயல்கடந்திட்டிருக்கும் - மயக்கம்நீங்கியிராநின்ற —பரமுத்திகாட்டும - மேலானமோக்ஷத்தையறிவிக்கும் —புதல்வன்வேண்டுமென - புத்திரன்வேண்டுமென்று—எண்ணினான். எ - று.

தலையறிதலாவது ; சொப்பிரகாசத்தைத்தானெனக்காண்டலே. பேதாபேதமென்னுமயல் ; உருவகவணி. அர்த்தவாதம், உபாசனாபரவாதம், ஸ்துதிபரவாதம், உபசாரிகவாதம், சகுணசாதுர்ஸவாதம், சாதிவியத்திவாதம் என்னுமிவற்றைப்பேதவாதமெனவும்; காரணகாரியவாதம், அம்சாம்சிகவாதம், விம்பப்பிரதிவிம்பவாதம், குணகுணிவாதம், விகாரவாதம், என்னுமிவற்றையபேதவாதமெனவுங் கூறுப. இவ்விருவகைவாதங்களையும் பிராந்தியென்றது ; தானென்னுநிலை இவற்றிற்குட்படாமையாலும் பேதநிலையைநிக்ரகிக்க அபேதநிலைதோன்றினமையாலுமென்க. இங்கேவுயிராவெனல் ; சிதாபாசனை. (உஉ)

இரண்டோ டிரண்டு மூவிரண்டை யிரண்டா றிரண்
டு மீமிசையென, ணிரண்டோ டிரண்டு கொண்டிருந்த விதழ்
ப்பங் கயங்கள் கடந்துபோ, யிருந்த குளத்தின் மேலோ
ரா யிரத்தோட் டமல கமலமிசை, யிருந்த சோதி தனைக்க
ண்டெம் மெண்ண முடிப்பே மெனவெழுந்து.

(இ - ள்.) இரண்டோடிரண்டு - நான்கும் —மூவிரண்டு - ஆறும்—ஐயிரண்டு - பத்தும —ஆறிரண்டு - பன்னிரண்டும் —மீமிசை - இவற்றின்மீது—எண்ணிரண்டு - பதினாறும்—இரண்டு - இரண்டும —கொண்டிருந்த - ஆகியவிவ்வெண்களைக்கொண்டிருந்த —இதழ்ப்பங்கயங்கள் - இதழ்களையுடையஆறுதாரகமலங்களையும் —கடந்துபோய் - தரிசித்துச்சென்று—இருந்தகுளத்தின்மேல் - நெற்றியின்மீதிருந்த—ஓராயிரத்தோட்டு - ஒப்பற்றஆயிரமிதழ்களையுடைய—அமலகமலமிசை - நின்மலமாகியக

மலத்தின்மேல்—இருந்தசோதிதனைக்கண்டு - வீற்றிருக்கின்றசோதிவடிவமாகியசிவத்தைத்தரிசித்து—எம்மெண்ணமுடிப்பேமெனா - எம்முடைய எண்ணத்தைநிறைவேற்றுவோமென்று—எழுந்து. எ - று. ஆறுதாரகமலங்களுக்குஇதழ்களாவன ; மூலாதாரத்திற்கு - ௪, சுவாதிட்டானத்திற்கு - ௬, மணிபூரகத்திற்கு - ௰, அநாகதத்திற்கு - ௰௨, விசுத்திக்கு - ௰௬. ஆக்ஞைக்கு - ௨. ஒடு - அசை. (௨௩)

வேறு மொருவ னுடனிருப்பும் வேண்டா தவத்திற் கென்பதொடு, மாறாய் மனையுங் கொழுநனும்போய் வனத்திற் கமலா சனத்திருந்து, தேறார் புனல்போற் றெளிந்தமனந் திறந்துந் திறவா விழியொடுந்தம், பேறா மிட்ட லிங்கத்திற் பிறழா தமையும படிவைத்து.

(இ - ள்.) தவத்திற்கு—வேறுமொருவனுடன் - அந்நியமாகியவொருவனுடனே—இருப்பும் - இருத்தலும்—வேண்டா - கூடாது —என்பதொடு—மாறாய் - என்றுசொல்வதற்குமாறாய்—வனத்தில் —மனையுங்கொழுநனும்போய் - ஸ்திரீயும்புருஷனுமாகச்சென்று —கமலாசனத்திருந்து-பத்மாசனத்திலிருந்து —தேறார்புனல்போல் - தேற்றாங்கொட்டையாற்றெளிந்தநீர்போல—தெளிந்த-பிரபஞ்சவாழ்க்கையினின்றுதெளிந்த —மனம் - மனதை—திறந்துந்திறவாவிழியொடு - சமநோக்கத்தோடு —தம்பேறும் - தமதுதவப்பயனாகிய—இட்டலிங்கத்தில் —பிறழாது-தப்பாது—அமையும்படிவைத்து - பொருந்தும்படிவைத்து. எ - று. (௨௪)

தறிபோ லுடல் நேரிருந்து தயங்கு மருங்கி னிருநாடி, நெறிபோய் மீளும் வளியதனை நிறுவி நடுநா டியிற் செலுத்தி, யறிவோர் சிறிதுஞ் சலியாம லன்னப் பெயர்மந் திரமாறிக், குறிபோ லிருந்த வொருகுறியைக் குறித்துக் கொண்டங் கிருந்தனரால்.

(இ - ள்.) தறிபோல் - ஸ்தம்பத்தைப்போல்—உடலம் - சரீரம்—நேரிருந்து - நேராகவிருந்து—தயங்கும் - பிரகாசிக்கும்—மருங்கினிருநாடி - இடைபிங்கலையென்னு மிருநாடியின் —நெறிபோய்மீளும் வளியதனை - வழியேபோய்திரும்புங்காற்றை—நிறுவி - கும்பித்து—நடுநாடியிற் செலுத்தி - சுழிமுனையிற்செலுத்தி—அறிவு—ஓர் சிறிதுஞ்சலியாமல் - எவ்வளவுமசையாமல்—அன்னப்பெயர்மந்திரமாறி - அம்சமந்திரத்தை மாறிக்

கொண்டு— குறிபோயிருந்த - குறிகடந்திருந்த—ஒருகுறியை - ஒருவஸ்துவை—குறித்துக்கொண்டு - நாடிக்கொண்டு —அங்கிருந்தனர் - அவ்வனத்திலிருந்தார்கள். எ - று. ஆல், அசை.

குறிபோயிருந்தவொருகுறியாவது ; வாச்சியார்த்தநெறித்தாகின்ற நிலையை. (௨௫)

வாயு நிற்ப மனநின்று மனந்தா னிற்பப் பொறிநின்று
பாய பொறிக ணிற்பவிடர் படுபுன் புலன்க ணின்றனவா
லாய புலன்க ணின்றமையா லகிலந் தோன்று துள்ளத்தே
தூய பரமா னந்தபரஞ் சோதி தோன்றக் கண்டிருந்தார்.

(இ - ள்.) வாயுநிற்பமனநின்று - பிராணவாயுவானது நிற்க அதன்பின்பு மனதுநின்று—மனந்தானிற்பப் பொறிநின்று - மனதுநிற்க ஐம்பொறிகள்நின்று —பாயபொறிகள்நிற்ப - பரவியபொறிகள்நிற்க —இடர்படு - துன்பப்படாநின்ற —புன்புலன்கள் - அற்பமாகிய விஷயங்கள்—நின்றன - தோன்றுதிருந்தன —ஆயபுலன்கணின்றமையால் - ஆகியவிஷயங்கள் தோன்றுதிருந்தமையால் —அகிலந்தோன்றுது - பிரபஞ்சந்தோன்றுமல் —உள்ளத்தே - அகத்தினிடத்தே—தூய - பரிசுத்தமாகிய—பரமானந்த பரஞ்சோதி - பரமானந்தஸ்வரூபமாகிய பரமசிவம் —தோன்றக்கண்டிருந்தார் - தரிசனமாகப் பார்த்திருந்தார்கள். எ - று.

தூயபரமானந்தபரஞ்சோதி தோன்றக்கண்டிருந்தாரெனல் ; லட்சியார்த்தமெனக்குறிக்கவென்க. (௨௬)

ஒருங்கு மனமோ டினையசிவ யோக சமாதி நவதிங்க
ணிரம்ப விருந்த காலத்து நெற்றி மிசையிற் பரஞ்சோதி
திரண்டு குழவி யுருவாகிச் சென்று புறமுற் றிடவதனை
விருப்பு மிருவர் தாமுமுடன் விழிக டிறந்து கண்டனரால்.

(இ - ள்.) ஒருங்குமனமோடு - ஒடுங்கியமனத்தோடு—இனைய - இத்தன்மையவாகிய— சிவயோக சமாதி—நவதிங்கள் - ஒன்பதுமாதம்—நிரம்ப - பூர்ணமாக —இருந்தகாலத்து —நெற்றிமிசையில் - நெற்றியின்மேல்—பரஞ்சோதி - பரசிவம்—திரண்டகுழவியுருவாகி - குழந்தைவடிவாகக்கூடி—சென்றுபுறமுற்றிட - வந்துபுறத்திலிருக்க—அதனை - அக்குழந்தையை —விரும்புமிருவர்தாமும் - இச்சித்திருந்தவிருவரும் —உ

டன் - அப்பொழுதே—விழிகடிறந்துகண்டனர் - கண்களைவிழித்துக் கண்டார்கள் எ - று. ஆல் - அசை.

இங்கேயொருங்குமணமானது ; இவ்விருவர்மனைமுநிலையிற் பேதியாது நிறறலை. அல்லமனைப்பரஞ்சோதிநிரஞ்சகுழவியுருவானுனெனலை ; அன்பருக் குபாதிரகிதனுநின்று இங்ஙனமாய ஸ்வாநுபூதிப்பிரத்யட்ச நிலைவிளக்கிவந்ததா லேறறபாலதாமென்க. அறிவினதுபிராந்தியே முத்தநுவாதலைமறைந்ததுகோடற்கு. ஞாயஞ் சோதனைபொருத்தமுளவாயிருக்கப் பிராந்திரகிதத்திலறிவே பரஞ்சோதியாகத் திரணைகுழவியாதற்கு முரணென்னை ? அகம்புறமொத்தஸ்வாநுபூதிப்பிரத்யட்சமென்பார் அதனை யிரும்புமிருவர்தாமு முடன்விழிகடிறந்துகண்டனரென்றார். (உஎ)

வெம்மை யொழிந்து நிலத்திழிந்து விளங்கு கதிரோ பனிநீங்கி, யெம்மை யாள வருமதியோ விடுமிந் தனங்க ளுகராத, செம்மை யொளிவான் பேரழலோ தெரியா தென்ன வொளிர்ந்தவர், தம்மை யறியா வுவகையுளந் தழைப்பச் சோதி மதலையே.

(இ - ள்.) அவர்தம்மை - அத்தாய்தந்தையரிருவரை —அறியா - ஒருபோதுமறியாத—உவகை - சந்தோஷமானது—உளர்தழைப்ப - உள்ளத்திலதிகரிக்க —சோதிமதலை - பரசிவமாகிய குழந்தை —வெம்மையொழிந்து - வெப்பநீங்கி —நிலத்திழிந்து - பூமியில்வந்து —விளங்கு கதிரோ - பிரகாசியாநின்றசூரியனோ—பனிநீங்கி - பனியின்றி —எம்மை யாள - எங்களையாளவேண்டி—வருமதியோ - வந்தசந்திரனோ — இடுமிந்தனங்களுகராத - இடாநின்ற விறகுகளைத்தகியாத —செம்மையொளிவான்பேரழலோ - செய்யசாந்தியை யுடையபெரிதாகிய அக்கினியோ—தெரியாதென்ன - அறியக்கூடாதென்று சொல்லும்படியாக —ஒளிர்ந்தது - பிரகாசித்தது. எ - று. (உஅ)

அலைந்து பிறப்பி லாங்கார வஞ்ஞா னிகளா மானிடரு மலிந்த சுரரு முனிவரரு மற்றை யோரும் பெறுவரோ தொலைந்த மாயை நிராங்கார சுஞ்ஞா னிகள்போன் மலவிருளை நலிந்து வளர்சச் சிதாநந்த நந்தா விளக்கா மதலையையே.

(இ - ள்.) தொலைந்தமாயை - மாயைநீங்கிய —நிராங்காரசுஞ்ஞானிகள்போல்—மலவிருளை—நலிந்து - கெடுத்து—வளர் - வளராநின்ற—சச்

சிதானந்த - சச்சிதானந்தஸ்வரூபமாகியும்—நந்தா - கெடாத—விளக்கா
ம் - தீபமாகிய—மதலையை - குழந்தையை—அலைந்துபிறப்பில் - பிறப்பி
லலைந்து—ஆங்காரவஞ்ஞானிகளாம்—மானிடரும் - மனிதரும்—மலிந்த
சுரரும் - நிறைந்ததேவர்களும்—முனிவரரும் - முனிவர்களும்—மற்றை
யோரும்—பெறுவரோ - பெறுவார்களோ. எ - று.

சச்சிதானந்தம் - சச்சிதானந்தமென்னுமிலக்கணம்—நந்தா - குன்று
த—விளக்காம் - விளக்குப்போல்வதாகிய—மதலையை-குழந்தையை, என
ப்பொருள்கோடல் சிறப்பு. (௨௯)

பேரா னந்தம் பிள்ளையாய்ப் பெற்ற வெவர்க்கு விடயத்து
ளோரா னந்தம் பெற்றுடனே யொழியு முலகா தமனையநாம
நேரா வியமப லாகுமோ நிகர்தாந் தமிற் ருமென்று
வாரா ரிளமென் முகிழ்முலைநன் மடவா யுரைப்ப தன்றியே.

(இ - ள்.) வாரார் - கச்சணிந்த—இளமென்முகிழ் - இளமைபொருந்
திய மிருதுவாகிய அரும்பையொத்த—முலைநன்மடவாய் - தனங்களையு
டையாளையே—பேரானந்தம் - பெரியவானந்தத்தை—பிள்ளையாப்
பெற்றவர்க்கு - புத்திரனாகப்பெற்ற அங்கிராங்கார சுஞ்ஞானிகளுக்
கு—நிகர்தாந்தமிற்றுமென்று - ஒப்புமைதங்களுக்குள் தாங்களென்
று—உரைப்பதன்றி - சொல்லுவதல்லாமல்—விடயத்துள் - விஷயங்க
ளுக்குள்—ஓரானந்தம்பெற்று - ஓர் ஆனந்தத்தையடைந்து—உடனே
யொழியும் - அப்பொழுதேநீங்கும்—உலகாதம்மை - உலகத்தாரை—நா
ம்—நேராவியம்பலாகுமோ - ஒப்பாகச்சொல்லக்கூடுமோ. எ - று. (௩௦)

பண்டு பாசந் தபுசிலரும் பரஞ்சோ தியைத்தாந் தம்முளே
கண்டு வாழ்வு பெறுநரலாற் கண்ணிற் காட்டு மவரில்லை
தொண்டு படுமிந் நிராங்கார சுஞ்ஞா னிகடம் முட்கண்டு
கொண்ட வொளியை யுலகுய்யக் குழவி யாக்கிக் காட்டினரால்.

(இ - ள்.) பண்டு - பூர்வத்தில்—பாசந்தபு - பாசநீங்கிய—சிலரும் - சி
லபெரியோர்களும்—பரஞ்சோதியை - பரமசிவத்தை—தாம் - தாங்க
ள்—தம்முளே - தமக்குள்ளே—கண்டு - தரிசித்து—வாழ்வுபெறுநரலா
ல் - வாழ்வடைந்தார்களல்லாமல்—கண்ணிற்காட்டுமவரில்லை - கண்ணிற்
காண்பித்தவர்களில்லை—தொண்டுபடும் - அடிமைப்படும்—இந்நிராங்கா
ரசுஞ்ஞானிகள்—தம்முட்கண்டுகொண்ட - தம்முள்ளேகண்ட—ஒளி

யை - சோதியை — உலகுய்ய - உலகங்களெல்லாம்பிழைக்க — குழவியாக்கி - குழந்தையாக்கி — காட்டினர் - காட்டினார்கள். எ - று. (௯௧)

சங்குந் தெய்வ துந்துமியுந் தழங்க மலர்மா மழைபொழிந்த
வெங்குந் திசைகள் விளங்கினகன் றீன்ற மலடுந் தறிதளிர்த்த
பங்கங் கலந்த புனறெளிந்த பதகர் மனமுந் தெளிந்தவருள்[ள.
பொங்குந் துறவர் மனமகிழ்ந்த புனிதன் மகவாய்த் தோன்றுநா

(இ - ள்.) புனிதன் - பரமசிவன் — மகவாய் - குழந்தையாய் — தோன்றுநாள் - உதித்தநாளில் — சங்குந்தெய்வதுந்துமியும் — தழங்க - ஒலிக்க — மலர்மாமழைபொழிந்த - பெருமைபொருந்திய புஷ்பவருஷம்வருஷித்தன — எங்குந்திசைகள்விளங்கின - திசைகளெங்கும் பிரகாசித்தன — கன்றீன்றமலடு - மலடுகள்கன்றையீன்றன — தறிதளிர்த்த - ஸ்தம்பங்கள்துளிர்த்தன — பங்கங்கலந்தபுனறெளிந்த - சேறுகலந்தசலங்கள்தெளிந்தன — பதகர்மனமுந்தெளிந்த - பாபிகள்மனதுந்தெளிந்தன — அருள்பொங்குந்துறவர்மனமகிழ்ந்த - அருள்நிறைந்த துறவிகள் மனமுஞ்சந்தோஷித்தன. எ - று

மாயையுதித்தகாலத் தெங்கும் பிராந்திமயமானாற்போல, அல்லமனுதித்தகாலத் தெங்கும்பிராந்திரகித மாயமதைத தெரிவித்ததென்க. (௯௨)

நையா மனத்து நிராங்காரன் ஞானத் திரளாம பிள்ளை தனை
மெய்யா முளக்க ணன்றியுமிவ் விழியுங் காணப் பெற்றனமென்
றெய்யா வுவகைக் கடன்மூழ்கி யேறான் மார்போ டுறத்தழீஇக்
கையா லெடுப்ப வெங்குநிறை கனவான் கனவா னொய்தாகி.

(இ - ள்.) நையா - வாடாத — மனத்து - மனதையுடைய — நிராங்காரன் — ஞானத்திரளாம்பிள்ளைதனை - ஞானவடிவாகியபிள்ளையை — மெய்யாமுளக்கணன்றியும் - உண்மையாகிய அகக்கண்ணல்லாமலும் — இவ்விழியும் - இந்தப்புறக்கண்ணினாலும் — காணப்பெற்றனமென்று - பார்க்கப்பெற்றோமென்று — எய்யா - தம்மையறியாத — உவகைக்கடல் - சந்தோஷசமுத்திரத்தில் — மூழ்கி — ஏறான் - கரையேறாதவனாய் — மார்போடுறத்தழுவி - மார்புடனே பொருந்தத்தழுவிக்கொண்டு — கையாலெடுப்ப — எங்குநிறைகனவான் - எங்குநிறைந்தகனவான் — கனவான் - கனவாயிருந்தான் — நொய்தாகி - இலேசாகி. எ - று.

ஊனக்கண்ணாலுங் காணப்பெறாது ; நிட்காமியதவப்பேற்றி னுறுதி யாலென்க. எங்குநிறைகனவானெனல் ; தானலாப்பொருளிடங்காலமி ன்மையைத் தெரிவித்தற்கென்க. (ருங)

செவ்வாய் ஞான மயில் கொழுநன் செந்தா மரைத்தாள்
வணங்குபு நம், மிவ்வாய் மகன தியல்பு நீ யியம்பா யென்ன வவன்
றெரிந்து, சைவா கமமு மாரணமுஞ் சாற்றற் கரிய நம்மகவை,
யெவ்வா றுரைப்ப னியான்மடவா யென்று வியந்து கூறுவான்.

(இ - ள்.) செவ்வாய் - சிவந்தவாயையுடைய—ஞானமயில் - மயிலையொத்தசுஞ்ஞானி—கொழுநன் - தன்புருஷனாகிய நிராங்காரனது—செந்தாமரைத்தாள் - சிவந்ததாமரைமலரையொத்த பாதங்களை—வணங்குபு - வணங்கி—நம் - நம்முடைய—இவ்வாய்மகனது - இந்தச்சிறந்தபிள்ளையினது—இயல்பு - தன்மைகளை—நீயியம்பாயென்ன - நீசொல்வாயென்றுகேட்க—அவன்றெரிந்து - அந்நிராங்காரனாராய்ந்து—சைவாகமமும் - சிவாகமங்களாலும்—ஆரணமும் - வேதங்களாலும்—சாற்றற்கரிய - சொல்லுதற்கருமையாகிய—நம்மகவை - நம்முடைய குழந்தையினது தன்மையை—எவ்வாறுரைப்பன்யான்-யானெப்படிசொல்லுவேன்—மடவாயென்று - மாதேயென்று—வியந்துகூறுவான் - அதிசயித்துச் சொல்லுவான். எ - று.

ஞானமயில் உவமைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. வினைய வாரணமுமாகமமு மென்றது ; அத்தியாரோபத்திற்கு மபவாதத்திற்கு முரணாமுறுநிலையைக் கூறுமைபற்றியென்க. (ருச)

நாம்பாரக் குழவி யாகாம னம்பாற் குழவி யாயினானு [னும்
நீம்பாற் கடலிற் றுயில்வோனுஞ் செந்தா மரைமே லுறைவோ
னாம்பார்க் கரிய வடிமுடியோன் றானே யைய மிதற்கில்லை
காம்பாற் புரிந்த தனையதோட் கனிவாய்த் தடங்க ணாயென்றான்

(இ - ள்.) காம்பாற்புரிந்ததனையதோள் - மூங்கிலினாற் செய்ததை யொத்ததோளையும்—கனிவாய் - கோவைக்கனியையொத்த வாயையும்—தடங்கணாய் - விசாலமாகிய கண்களையுமுடைய சுஞ்ஞானியே—நாம்—பார்க்குழவியாகாமல் - பூமியிற்குழந்தையாகப்பிறவாமல்—நம்பாற் குழவியாயினான் - நம்மிடத்திற் குழந்தையாகப்பிறந்தவன்—நீம்பாற்கட

விற்றுயில்வோனும் - மதுரமாகியபாற்கடலில் நித்திரைசெய்யுந் திருமா லும்—செந்தாமரைமேல்—உறைவோனும் - வாசஞ்செய்யும்பிரமனும்— பார்க்கரிய - காணக்கூடாத—அடிமுடியோன்றானே - அடியையுமுடி யையுமுடையபரமசிவனே (இவன்) —ஐயமிதற்கில்லை - இதற்குச்சந் தேகமில்லை—என்றான். எ - று. தாம் - அசை.

தடங்கண்ணுறையென்றது ; அன்மொழித்தொகை. (௬௫)

ஆன்ற மயல்செய் சையோகந் தன்றித் தவயோ கத் தினு, வீன்ற பொழுதிற் றன்மகனை யிருந்து சான்றோ னெ னக்கேட்டுத், தோன்று முவகைக் கடற்படிந்தாள் சுஞ்ஞா னித்தாய் பசும்பொன்மலை, போன்று வளர்ந்து மருங்குன்மிடி போக்க வறியா விளமுலையாய்.

(இ - ள்.) பசும்பொன்மலைபோன்று-பசியபொன்மலையையொத்து — வளர்ந்தும்—மருங்குன்மிடி - இடையின்வறுமையை— போக்கவறியா-நீ க்கவறியாத— இளமுலையாய் - இளமையாகிய முலையையுடைய மாயை யே—சுஞ்ஞானித்தாய்—ஆன்றமயல்செய் - மிகுந்தமயக்கத்தைச்செய்யு ம்—சையோகந்தன்றி - புணர்ச்சியினுலல்லாமல்—தவயோகத்தினுல்—ஈ ன்றபொழுதில் - பெற்றபொழுதில் —தன்மகனை—சான்றோனெனக்கே ட்டு - பெரியோனென்றுசொல்லக்கேட்டதனுல்—தோன்றும - உண்டா கிய—உவகைக்கடற்படிந்தாள் - சந்தோஷக்கடலில்மூழ்கினுள். எ - று. இருந்து - அசை.

ஈன்றபொழுதினு மென்ற வும்மை எஞ்சியது. இங்ஙனமாயமக்கட் பேற்றினருமையை “ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச் சான்றோ னெனக்கேட்ட தாய்.” என்பதனுற்காண்க. இருந்தெனற்குப் பருவகாலம் வருமளவு மிருந்தெனப் பொருள்கொள்க. (௬௬)

வேறு.

பித்த நெஞ்சக மோடுதம் மதியி னென்றை யறைந்திது மெய்த்து றும்பொரு ளென்றமோ வேத மாகம மோதுமென் றுததி கொண்டிரை செய்தெதி ரொன்றை நிந்தைசெய் சமயர் பித்தை யல்லெனு மல்லமாப் பிரபுவெ னும்பெய ரிட்டனர்.[தம்

(இ - ள்.) பித்தநெஞ்சகமோடு-மயக்கம்பொருந்திய மனதினுடனே— தம்மதியின் - தங்கள்புத்தியினுல் —ஒன்றையறைந்து - ஒருபொரு

லைச்சொல்லி—இது - இதுவே —மெய்த்துறும்பொருளென்று-உண்மை ப்பொருளென்று—அதை - அப்பொருளை—வேதமாகமமோதுமென்று-வேதாகமங்கள்சொல்லுமென்று—உத்திகொண்டுரைசெய்து - யுக்தியினு ற்சொல்லி —எதிரொன்றை - பிரத்தியக்ஷமாகியவொருபொருளை — நிந்தைசெய்சமயர்தம்.- தூஷிக்கின்ற சமயவாதிகளின் —பித்தையல்லெ னும் - மயக்கத்தையல்லவென்றுசொல்லும் —அல்லமாப்பிரபுவெனும்பெ யரிட்டனர். எ - று.

மத்தநெஞ்சகமென்றது ; அல்லதையாமெனக்கோடல் பற்றியென்க. சமயர்தம்பித்தாவது ; விதிமதிக்குப் பொருந்தாமைகூறலே. அல்லவெ ன்பதில் அகரங்கடைக்குறை. உத்திகொண்டுரைசெய்தலாவது ; ஒழுங் கின்றி வாதாடலே. (கள)

விளையி னுலொரு வன்தரு மேனி யாளன லாதொரு
மனித னுகி நடித்திடும் வடிவ னுதலி னல்லம
னினையு மாறு தவழ்ந்துபின் னின்று மெல்ல நடந்துபோய்
வனையு மாமணி மாளிகை மறுகி னுடல் பயின்றனன்.

(இ - ள்.) விளையினுலொருவன்தரும் - கடவுள்இருவினைகளைக்கொ ண்டுகொடுக்கப்பட்ட —மேனியாளனலாது - உருவமுடையவனல்லாம ல் —ஒருமனிதனுகிநடித்திடும் - அக்கடவுள்தானேயொருமனிதனுகியாடி க்காட்டும்—வடிவனுதலின் - திருவுருவையுடையவனுதலினால் —அல்லம ன்—நினையுமாறு - நினைத்தபடி —தவழ்ந்து —பின்னின்று - பின்புநின் று—மெல்லநடந்துபோய் —வனையுமாமணிமாளிகை - மாணிக்கங்களாற் செய்தபெரிய உபரிகைகளையுடைய—மறுகில் - வீதியில்—ஆடல்பயின்ற னன் - திருவிளையாடறசெய்தான். எ - று. (கஅ)

வருக வெங்கட மாவியே வருக கண்ணுக ரமுதமே
வருக வெங்குல தீபமே வருக கேடறு செல்வமே
வருக பாச விநைசனே வருக ஞான விநோதனே
வருக வென்றனை மகிழ்தர வந்து மேல்விழு மல்லமன்.

(இ - ள்.) வருகவெங்கடமாவியே - வரக்கடவாயெங்களுடையவுயி ரே —வருககண்ணுகரமுதமே - வரக்கடவாய் கண்ணாலுண்ணுமமிர்த மே—வருக - வரக்கடவாய் —எங்குலதீபமே—வருக - வரக்கடவாய்— கேடறுசெல்வமே - கெடாதஐசுவரியமே—வருக - வரக்கடவாய்—பாச

விசைனே - பாசத்தைக்கெடுப்பவனே —வருக - வரக்கடவாய்—ஞான விநோதனே - ஞானவிளையாட்டையுடையவனே —வருகவென்று - வரக்கடவாயென்றுசொல்லி —அனை - சுஞ்ஞானித்தாய் —உளமகிழ்தர - உள்ளஞ்சந்தோஷிக்க—வந்துமேல்விழும்-மேலேவந்துவிழுவான் —அல்லமன். எ - று. (௬௯)

மாயை யாலுள வாகிய வடிவு நாம மழித்துள
தாய வோர்பிர மந்தனை யறியு மாறறி வித்தல்போன்
மேய பேதைய மணலமை வீடு தாளகொ டழித்தனன்
போயு லாவுவன் மானிடன் போல வேவிளை யாடுவோன்.

(இ - ள்.) மானிடன்போலவே - மனிதனைப்போலவே —விளையாடுவோன் - திருவிளையாடல்செய்யுமல்லமன் —மாயையாலுளவாகிய - மாயையினாலுண்டாகிய—வடிவுநாமமழித்து - நாமரூபங்களைக்கெடுத்து —உளதாயவோர்பிரமந்தனை - உள்ளதாகியவொருவஸ்துவை —அறியுமாறறிவித்தல்போல் - அறியும்வழியறிவித்தல்போல —மேயபேதையர் - கூடியபேதைப்பருவப்பெண்கள் —மணலமை - மணலினாற்செய்த—வீடு - சிறுவீடுகளை— தாள்கொடழித்தனன் - தனதுதிருவடிகளாலழித்து—போயுலாவுவன். எ - று.

மாயாகாரியமெனக்காட்ட மாயையாலுளவாகிய வடிவுநாமமெனவும்; இலதாயமாயையெனவிளக்க ; உளதாயவோர் பிரமமெனவுங் கூறினரென்க. (௭௦)

நானி யக்கி னியங்குறு ஞால மென்றறி வித்தல்போற்
றானு ருட்டுநல் வீதியிற் றமனி யசசிறு தேரினை
யான டக்குரு நெஞ்சக மிதனை யொக்குறு மென்பது
போன மக்குயி ராயினேன் புதிய பம்பர மாடுமால்.

(இ - ள்.) நானியக்கினியங்குறும் - நானசைத்தாலசையும்—ஞாலமென்றறிவித்தல்போல் - இவ்வுலகமென்றுதெரிவித்தலைப்போல —நல்வீதியில்—தமனியச்சிறுதேரினை - பொன்னினாற்செய்யப்பட்டசிறுதேரை—தானுருட்டும் - தான்செலுத்துவான்—யானடக்குநெஞ்சகம் - யான்தேருதஉள்ளம் —இதனையொக்குறுமென்பதுபோல் - இதையொக்குமென்றுசொல்பவனைப்போல— நமக்குயிராயினேன் - நமக்குயிராயிருக்குமல்லமன்—புதிய - புதிதாகிய —பம்பரமாடும் - பம்பரமாடுவான். எ - று.

..ணியக்கினியங்குறுஞானமோம் நறிவித்தலெனல்; சைதன்யமின்றி யக்கன் உலகமெங்கனமுளதாமின்றியக்கன் எவ்வகைச்சித்துபேதங் களு மெங்கனமியங்குமெனவேக்குறித்தற்கென்க. யானடக்கரு நெஞ்ச மென்றது; சங்கற்பநாசமிலாதெனக்குறிக்க. (சக)

ஆடி யொன்றெதிர் கொண்டு தமையான வர்தெரி வார்களைப்போற்
கூடி யொண்குரு வெதிர்கொடு கொண்டு தன்பெரு விஞ்சைக
ணாடி யொண்கலை கற்றல்போ லுடை கம்பல செய்தனன்
நீடு ரும்பழ மறைகளும பேச ருமபுக ழாளனே.

(இ - ள்.) நீடுறும்பழமறைகளும்-பெருமைபொருந்தியபழையவேதங் களும் —பேசருப்புகழாளன் - சொல்லுதற்கரியபுகழையுடைய அல்லம ன்—ஆடியொன்றெதிர்கொண்டு - எதிரேயொருகண்ணாடியைக்கொண் டு—தமையானவர்தெரிவார்கள்போல் - தம்முடையமுகத்தைப் பார்க்கின் றவர்களைப்போல —கூடியொண்குரு-ஞானத்தையுடையகுருவைச்சேர்ந் து — எதிர்கொடுகொண்டு - அக்குருவை யெதிரேகொண்டு—தன்பெருவி ஞ்சைகள் - தன்னுடையபெரிதாகிய வித்தைகளை —நாடி - ஆராய்ந்து— ஒண்கலைகற்றல்போல் - ஒள்ளியநூல்களைக்கற்றுக் கொள்ளுதல்போல— நடகம்பலசெய்தனன் - பலகூத்துகள்செய்தான். எ - று.

எதிர்கொடு - எதிர்கொண்டு—கொண்டு- அழைத்துக்கொண்டுவந்து எ னப்பதப்பொருள் கொள்க. (சஉ)

தந்தை தாயுள மின்புறத் தனது பேரரு ளாலிள
மைந்த னாகி யிருந்தொரு வால லீலை நடித்தரு
ளெந்தை தானுல கெங்கணு மெய்தி மக்கட வல்வினை
சிந்து மாறு நினைந்திது செப்பல் மேயின னென்பவே.

(இ - ள்.) தந்தைதாயுளமின்புற-தாய்தகப்பன்மனஞ்சந்தோஷிக்க — தனதுபேரருளால் - தனதுபெரிதாகியவருளினால்—இளமைந்தனாகியிருந் து - இளம்பிள்ளையாகி யிருந்து—ஒருவாலலீலைநடித்தருள் - ஒருபாலியவி ளையாட்டை விளையாடிய—எந்தைதான் - எமது கடவுளாகியபிரபுதேவ ர்—உலகெங்கணுமெய்தி-உலகமுழுமையும்போய் —மக்கடம்வல்வினை - மனிதருடையவலியபாவங்களை —சிந்துமாறு - கெடுக்கும்படி —நினைந் து—இதுசெப்பன்மேயினன் - தாய்தந்தையரோ டிதுசொல்லத்தொடங் கினன். எ - று. (சங)

உங்கள் பாவனை யொருமையா லுருவ மாமக னாகிநா
னிங்கு மேவி யிருந்தன னினிந டந்துல கெங்கணுந்
தங்குமா தவர் முதலியோர தங்க ளெண்ண முடிப்பனென்
றெங்க ளாத னியம்பவவ் விருவ ரும்புகல் கின்றனர்.

(இ - ள்.) உங்கள் பாவனையொருமையால் - உங்களுடையவொருங்குபட்டநினைப்பினால்—உருவமாமகனாகிநான் - நான்புத்திரனாகவடிவங்கொண்டு—இங்குமேவியிருந்தனன் - இவ்விடத்திற்பொருந்தி யிருந்தேன்—இனிநடந்துலகெங்கணும் - இனியுலகமுழுமையும்போய்—தங்குமாதவர்முதலியோர்தங்கள் - அங்கங்குவசியாநின்ற முனிவர்முதலினோரது—எண்ணமுடிப்பனென்று - நினைப்பைநிறைவேற்றுவேனென்று—எங்களாதனியம்ப - எங்கள் கடவுளாகிய பிரபுதேவன்சொல்ல —அவ்விருவரும்புகல்கின்றனர் - அத்தாய்தந்தையரிருவருஞ் சொல்லுகின்றார்கள். எ - று. (சச)

பிறப்பெ னுங்கட லிற்படும் பிழை யேமுறு புணையனாய்
துறப்பின் வீடெனு மொண்கரை துன்னு றாதமிழ் வேமெனா
மறப்பி லாவிரு குரவரு மனமு ளைந்துரை செய்திடச்
சிறப்ப ஞான சிகாமணி தெளியு மாறுரை யாடினான்.

(இ - ள்.) பிறப்பெனுங்கடலிற்படும் - பிறவியென்னுங்கடலினுண்டாகிய—பிழையேம் - குற்றத்தையுடையவெங்களுக்கு—உறுபுணையனாய் - கிடைத்ததெப்பத்தையொத்தவனே—துறப்பின் - எம்மைநீங்குவையாயின்—வீடெனுமொண்கரை - மோக்ஷமென்னுமொள்ளிய கரையினிடத்தில்—துன்னுறாதமிழ்வேமெனா - சேராதமிழ்கி விடுவோமென்று—மறப்பிலாவிருகுரவரும் - மறவாததாய்தந்தையரிருவரும்—மனமுளைந்துரைசெய்திட - மனம்நைந்துசொல்ல—சிறப்ப - விளங்க—ஞானசிகாமணி - ஞான சிரோரத்நமாகிய அல்லமன் —தெளியுமாறுரையாடினான் - அவர்தெளியும்படிசொன்னான். எ - று. (சரு)

சற்று நும்மை யகன்றிடேன் றளரன் மின்மன மென்றுநான்
சொற்ற தைய முமக்கெனிற் றுணியுமாகம வேத நூல்
கற்று ளோரை வினைப்பிராங் கார ஞானிக டமையிவ
ணுற்ற வல்லம னகல்வனே வுமைமி னென்றுணர் மின்களே.

(இ - ள்.) சற்றுநும்மையகன்றிடேன் - சிறிதுபொழுதுமுங்களைவிட்டு

ங்கமாட்டேன் —தளரன்மின்மனமென்றும் - எப்போதுமனந்தளர வேண்டாம—நான்சொற்றதையமுமக்கெனில் - நான்சொல்லிய துங்களுக்குச் சந்தேகமாகவிருந்தால் —துணியுமாகமவேதநூல் - நிச்சயிக்கும் வேதாகமசாஸ்திரங்களை —கற்றுளோரைவினுய் - கற்றவர்களைக்கேட்டு—நிராங்காரஞானிகடமை - நிராங்காரசுஞ்ஞானிகளை —இவனுற்ற - இவ்விடத்திற்பொருந்திய —அல்லமன் —அகல்வனேல் - நீங்குவானுகில்—உரைமினென்று - சொல்லுங்களென்று—உணர்மின்கள் - அறியுங்கள். எ - று. (௪௬)

என்று பொன்றுமிவ் வுடன்முத லியாவும் வேறெனநீக்கு,
நின்ற தமமில்வே றலனெனு நிலையை நின்றுதா தான்மிய
மொன்று றும்பரி சுரைசெயூ வுணருமவ் வண்ண முணர்த்தினன்
பின்ற லின்றிய வல்லமாப் பிரபுவெ னுங்குரு ராயனே.

(இ ள்.) பின்றலின்றிய - பின்னிடுதலில்லாத —அல்லமாப்பிரபுவெனுங்குருராயன்—என்று - இப்படியென்றுசொல்லி—பொன்றுமிவ்வுடன்முதல் - இறக்குமிந்தச்சரீரமுதலாகிய —யாவும்வேறெனநீக்குபு-எவைகளையும்வேறாகத்தள்ளி—நின்றதம்மில்வேறலனெனும் - சேஷித்துநின்றதம்முள் வேறல்லனென்கிற—நிலையைநின்று - நிலையிலேயிருந்து—தாதான்மியம் - ததாத்மத்வம் —ஒன்றுறும்பரிசுரைசெயூ - ஒன்றுந்தன்மையைச்சொல்லி—உணரும்வண்ணமுணர்த்தினன் - அவரறியும்படியறிவித்தான். எ - று.

உபாதிநாட்டத்தாற் பலவாகக்காணப்படுதலின் ஆன்மாவை தம்மிலென்றும், தூலமுதற்பிரகிருதி வரையாயுள்ளவை யான்மாவல்லவெனக்கண்டுழிச் சமஸ்தவுயிரு மறிவாவிளங்கலின் நின்றதம்மில்வேறலனென்றும், அறிவுநாட்டத்தி லேகமேவாத்வைதம் வாய்த்தலின் தாதான்மிய மொன்றுறும்பரிசென்றும், அவர்களது சத்திக்களவாக மகாவாக்கியார்த்தத்தை யுணர்த்தினனென்பார்; உரைசெயூவுணரும்வண்ணமுணர்த்தினனென்றுங்கூறினர். பின்றலின்றியவல்லமனென்றது ; சர்வமுந்தானாக விளங்குதலைக்குறிக்க. இங்கே தாதான்மியமென்றது ; ஐக்கியத்தை. (௪௭)

தந்தை தாயில னாகிய தாணு வாகிய சங்கரன்
மைந்த னைய்மக வில்லெனு மனவ ருந்த மகற்றபு,

முந்து தேசிக னுமினன் முத்தி நல்கவு மெய்தினோ
ரிந்த மாதவ ரலதிலை யென்று மக்க டுதித்தனர்.

(இ - ள்) தந்தைதாயிலனாகிய - தாய்தந்தையில்லாதவனாகிய —தாணு வாகியசங்கரன் - எல்லாவற்றிற்குமாதாரமாகிய பரமசிவன் —மைந்தனா ய் - பிள்ளையாகி—மகவில்லெனும் - குழந்தையில்லையென்றெண்ணும் —ம னவருத்தமகற்றவும் - மனோதுக்கத்தைப் போக்கவும் —முந்துதேசிகனு மி - தேசிகோத்தமனாய்—நன்முத்திநல்கவும் - மேலான முத்தியைக்கொ டுக்கவும்—எய்தினோர் - கிடைக்கப்பெற்றவர்கள் —இந்தமாதவரலது - இந்தமகத்தாகியதவத்தையுடைய நிராங்காரசுஞ்ஞானிகளல்லாது —இ லையென்று - வேறொருவருமில்லையென்று —மக்கடுதித்தனர் - உலகத் தார் துதித்தார்கள். எ - று

• தந்தைதாயிலனாகிய சங்கரன் தாணுவாகிய சங்கரன் எனக்கூட்டிப் பொருள்கொள்க. (சஅ)

ஆதலா லெழி லல்லம னருளி னாலுறு கின்றது
வாத மாறுநன் முத்திதான் மலைத ருங்கொடி யறிதியென்
றோதி னானர னதுபொழு துடனி ருந்தன னென்றவண்
மேதை மாயை யறிந்திட விமலை கூறின ளென்பவே.

(இ - ள்.) ஆதலால்—எழில் - அழகையுடைய —அல்லமனருளினால் - அல்லமனதுகிருபையினால்— உறுகின்றது - வருகிறது—வாதமாறுநன்மு த்திதான் - வாதித்தலில்லாதநல்லமோக்ஷம்—மலைதருங்கொடி - பார்வதி யே—அறிதியென்று - அறிவாயாகவென்று—ஓதினானரன் - பரமசிவன் சொல்லினான்—அதுபொழுது - அப்பொழுது—அவண் - அவ்விடத்து— உடனிருந்தனனென்று - நானுங்கூடவிருந்தேனென்று —மேதை - பே றறிவையுடையவளாகிய—மாயையறிந்திட—விமலை—கூறினள் - சொன் னாள். எ - று.

எல்லாவழக்கு மிறந்தது முத்தியாதலால் வாதமாறுநன்முத்தியென் றார். கொடிபோல்பவளைக் கொடியென்றது; அன்மொழித்தொகை. ( )

ஞானி னெண்ணெ யெனப்பட ரிந்த னத்தெரி யென்னவாய்
வினாரு மென்மலர் மணமென விரவி யெங்கணு நிற்பினும
வள்ள லல்லம னன்பர்தம் மனம டைந்து விளங்குவன் [ல்.
தெளா ரு மின்சுவை யிம்முபா ழிரண்மு லைக்கணி னொழுகல்போ

(இ - ள்.) எள்ளினெண்ணெயென - எள்ளினிடத்தில்நெய்போலவு ம—படரிந்தனத்தெரியென்ன - மிருந்தகட்டைகளிடத்திலக்கினிபோல வும்—வாய்விள்ளும் - வாய்திறக்கும்—மென்மலர்மணமென - மெல்லியம லரினிடத்துவாசனைபோலவும்—விரவி - கலந்து—எங்கணுநிற்பினும் - எ வ்விடத்துமிருந்தாலும்—வள்ளலல்லமன் - கொடையையுடையோனாகிய அல்லமன்—தெள்ளுமின்சுவைவிம்மு - தெள்ளியவினியசுவைமிருந்த— பால் - பாலானது—திரண்முலைக்கணில் - திரண்டமுலையினிடத்தில்—ஒ ழுகல்போல்—அன்பாதம் - அடியார்களுடைய—மனமடைந்து - மனதிலி ருந்து—விளங்குவன் - காணப்படுவன். எ - று.

பால் முலைக்கண்ணி லொழுகுமாறுபோன்று, அல்லமன் அன்பரது மனதில் நிரதிசயானந்தமாக விளங்குவனென்றதனு லிஃதொப்பணி. எ ள்ளிலெண்ணெய் இந்தனத்தெரி மலர்மணம் என்னுமுவமை சர்வத் திலுஞ் சலட்சணமா வல்லமனிற்குநிலையைக் காட்டற்கென்க (ரு0)

விமலைகதி - முற்றுப்பெற்றது.

ஆ கதி - க - இ - திருவிருத்தங்கள் - ருருக.





ஏழாவது

# மாயைகோலாகலகதி.

நல்லெழில் விமலையி னன்ன நவின்றிட
முல்லைவெண் ணகைவரு முயற்சி யெண்ணியே
புல்லுவ னவனையென் றெழுந்த போதினி
லல்லம னகன்றமை யறியக் கூறுவாம்.

(இ - ள்.) நல்லெழில்விமலை - சிறந்தஅழகையுடையவிமலை —இன்னணம் - இப்படியாக — நவின்றிட - சொல்ல —முல்லைவெண்ணகை - முல்லையரும்பையொத்தவெள்ளியதந்தங்களையுடையமாயை—வருமுயற்சியெண்ணியே - தான்வந்தகாரியத்தையாலோசித்து —புல்லுவனவனையென்று - அவனைப்பிடித்துக் கொள்ளுவேனென்று—எழுந்தபோதினில்—அல்லமனகன்றமை - அல்லமனீங்கினதன்மையை —அறியக்கூறுவாம் - யாவருமறியச்சொல்லுவாம். எ - று.

வெண்ணகை ; அன்மொழித்தொகை. (க)

முகிழ்மதி யணிபவன் முதல்விக் கோதிய
வகைபெற விமலைதான் வகுப்ப மாயைகேட்
டகநெகிழ் வுற்றுநா மல்ல மப்பெருந்
தகைதனை யடைவதெவ் வாறுசாற் றென்றுள.

(இ - ள்.) முகிழ்மதியணிபவன் - பாலசந்திரனைச்சூடியபரமசிவன்—முதல்விக்கோதிய - பார்வதிக்குச்சொல்லியசரித்திரத்தை —வகைபெற விரிவுதோன்ற—விமலைதான்வகுப்ப - விமலைசொல்ல—மாயைகேட்டு—அகநெகிழ்வுற்று - மனந்தளர்ந்து —நாம் —அல்லமப்பெருந்தகைதனை - அல்லமனென்னும்பெரியோனை —அடைவதெவ்வாறு - சேர்வதெப்படி—சாற்றென்றாள் - சொல்லென்றுசொன்னாள். எ - று. (உ)

மழுவல முயரிய வள்ளல் வந்தனை
யழுகுற வியற்றினை யாயி னல்லமன்

விழியெதிர் தோன்றிநீ மனத்து வேண்டியா
தொழிவற நல்குவ னுனக்கென் றோதினாள்.

(இ - ள்.) மழுவலமுயரிய - வலதுபான் மழுவையணிந்த—வள்ளல் - பரமசிவனை—அறகுழ - அழகுபெற—வந்தனையியற்றினையாயின் - பூசை செய்வாயாகில் —அல்லமன்—விழியெதிர்தோன்றி - கண்முன்னேவந்து—நீமனத்துவேண்டியது - நீமனதினிடத்திவிருப்பியதை—ஒழிவற நல்குவனுனக்கென்றோதினாள் - உனக்குத்தவறாது கொடுப்பனென்று சொன்னாள். எ - று. (ரு)

முதல்வி நீ யுரைசெயு முன்ன மேயருண்
மதுகைநா யகன்றனை வழிபட் டேத்தினே
னதுதரும் பயனிலை யறிந்து ளேனெனப்
புதுமயன் மூழ்கினாள் புலர்ந்து கூறினாள்.

(இ - ள்.) முதல்வி - தலைவியாகியவிமலையே —நீயுரைசெயுமுன்னமே - நீசொல்லுமுன்னமே —அருண்மதுகைநாயகன்றனை - அருளையுடையமதுகேசுரனை —வழிபட்டேத்தினேன் - பூசைசெய்துதுதித்தேன்—அதுதரும்பயனிலை - அப்பூசைகொடுக்கும் பிரயோசனமில்லை—அறிந்துளேனென - அறிந்திருக்கின்றேனென்று —புதுமயன்மூழ்கினாள் - புதியமயக்கங்கொண்டவளாகிய மாயை —புலர்ந்துகூறினாள் - மனம் வாடிச்சொன்னாள். எ - று.

என்றும் புதிதாகக் காண்டலின், புதுமயலென்றார். (சு)

வெருவற விவளக விழியி லாமையாற்
பரசிவ பூசனைப் பயனி லென்றனை
யரகர வென்றுகா தங்கை வைதகிஃ
துரைசெயும் விமலைதன் னுளங்க லங்கியே.

(இ - ள்.) இவள் - இம்மாயை—வெருவற - அச்சமின்றி —அகவிழியிலாமையால் - ஞானநேத்திரமில்லாமையால் - பரசிவபூசனை—பயனிலென்றனள் - பிரயோசன மில்லையென்றுசொன்னாள் —அரகரவென்று—காதங்கைவைத்து - காதை உள்ளங்கையால்மூடிக்கொண்டு—விமலை—உளங்கலங்கி - மனங்கலங்கி —இஃதுரைசெயும் - இதுசொல்லுவாள் எ - று.

அகங்கையை அங்கையெனல்; விகாரம். (எ)

பயனிலை யருச்சனை பயின்று மென்றனை
யயனரி முதலிய வமரர்க் காயினு
நயமொடு சதாசிவ நாதன் பூசனை
முயலுத லன்றியோ ரெண்ண முற்றுமோ.

(இ - ள்.) அருச்சனைபயின்றும் - சிவபூசைசெய்தும்—பயனிலை - பிரயோசனமில்லை—என்றனை - என்றுசொன்னாய்—அயனரிமுதலிய - பிரமவிஷ்ணுக்கள்முதலாகிய—அமரர்க்காயினும் - தேவர்களுக்கானாலும்—நயமொடு - விருப்பத்தோடு —சதாசிவனுதன்பூசனை —முயலுதலன்றி - செய்தாலன்றி—ஓரெண்ணமுற்றுமோ - ஓர் எண்ணமாவது நிறைவேறுமோ. எ - று. (௬)

வாசவ னரியயன் வான நாட்டுளோர்
பாசமின் முனிவரர் பலரு மண்ணிடைப்
பூசனை விதிமுறை புரிந்த வாலயங்
காசணி யல்குலாய் காண்கி லாய்கொலோ.

(இ - ள்.) காசணியல்குலாய் - மேகலையையணிந்த அல்குலையுடைய மாயையே—வாசவன் - தேவேந்திரனும்—அயன் - பிரமனும்—அரி - விஷ்ணுவும்—வானநாட்டுளோர் - மற்றைத்தேவர்களும்—பாசமில் - பந்தமில்லாத—முனிவரர்பலரும் - பலமுனிவர்களும்—மண்ணிடை - பூமியினிடத்தில்—பூசனை - சிவபூசை—விதிமுறை - ஆகமப்படி—புரிந்த - செய்த—ஆலயம் - சிவாலயங்களை—காண்கிலாய்கொல் - பார்த்ததில்லையா. எ - று. (௭)

மலைமகள் சுரர மகளிர் பாற்கட
லலைமகண் முனிவரில் லறக்கி ழத்தியர்
கலைமகள் விழிநுதற் கடவுட் பூசையா
னிலைமைக ளடைந்தமை நினைந்தி லாய்கொலோ.

(இ - ள்.) மலைமகள் - உமாதேவியும்—சுரரமளிர் - தெய்வப்பெண்களும்—பாற்கடலலைமகள் - திருப்பாற்கடலிற்றோன்றிய திருமகளும்—முனிவரில்லறக்கிழத்தியர் - மாதவர்மனைவியரும்—கலைமகள் - சரஸ்வதியும்—விழிநுதற்கடவுட்பூசையால் - நெற்றிக்கண்ணையுடைய பரமசிவன்

பூசையினால்—நிலைமைகளடைந்தமை - பதங்கள் பெற்றதன்மையை—நி னைந்திலாய் - சிந்திக்கவில்லை. எ - று. கொல் - ஓ - அசைகள். (௭)

சித்தியு மாயுளுஞ் சிறப்புங் காமிய
புத்திய ரடைவரப் புத்தி நீக்கினோர்
முத்தியை யடைவரெம் முதல்வன் பூசையாற்
சத்தியஞ் சத்தியந் தளர்ம ருங்குலாய்.

(இ - ள்.) தளர்மருங்குலாய் - தளர்கின்ற இடையையுடைய மாயை யே —எம்முதல்வன்பூசையால - எமது தலைவனாகிய பரமசிவனது பூசையி னால்—சித்தியும் - அட்டமாசித்திகளையும் —ஆயுளும் - வாழ்நாளையும்—சி றப்பும் - மேன்மையையும்—காமியபுத்தியர் - காமியங்களில்விருப்பமு டையவர்—அடைவர் - பெறுவார்கள்—அப்புத்திநீக்கினோர் - அக்காமிய த்தைவிரும்பாதவர்கள் —முத்தியையடைவர் - மோக்ஷத்தைப்பெறுவா ர்கள் —சத்தியஞ்சத்தியம். எ - று.

காமியமாவது ; இம்மையில்செல்வம் மக்கட்பேறு முதலியவையும், ம றுமையில் சுவர்க்காதிபோகங்களுமாம்.

காமியபுத்தியர் ; காமியத்தவச்சித்தமுடையோனர. அப்புத்திநீக்கி னோர நிட்காமியத்தவத்தினரை. சத்தியஞ் சத்தியம் உண்மைவிளக்கவ ந்த அடுக்கு. (௮)

பீடுறு மானிடப் பிறப்பு வாய்த்துநல்
லேடவிழ் மலரினு லிறையைப் பூசியார்
பாடமை நாளெலாம் பாழ்க்கி றைப்பவர்
மூடரை யென்னுங்கான் முந்தி நிற்பரே.

(இ - ள்.) பீடுறும் - கிடைத்தற்கரிய—மானிடப்பிறப்புவாய்த்தும் - ம னிதப்பிறவிகிடைத்தும்—நல்லேடவிழ்மலரினால் - இதழ்கள்விரியாநின்ற நல்லபுஷ்பங்களினால் —இறையைப்பூசியார் - சிவனைப்பூசைசெய்யாரா கி —பாடமைநாளெலாம்-பெருமைபொருந்தியதங்களாயுளையெல்லாம்— பாழ்க்கிறைப்பவர் —மூடரையென்னுங்கால் - அறிவில்லாதவர்களையெ ன்னுமிடத்தில்—முந்திநிற்பர் - முதலிலெண்ணப்படுவோர்கள். எ - று.

பூசியார் ; வினையாலணையும்பெயர். (௯0)

காம்படு தோளிமுக் கண்ணன் றண்மலர்
தேம்படு மலர்கொடு பூசை செய்பவர்

பாம்பொடு பழுகிலாப் பரம னென்றவர்
பூம்பத மனமகிழ்ந் துலகம் போற்றுமே.

(இ - ள்.) காம்படுதோளி - மூங்கிலையொன்றதோள்களையுடையமாயை யே—முக்கண்ணன் - மூன்றுகண்களையுடைய பரமசிவனது—தாண்மலர் - பாததாமரைகளை—தேம்படுமலர்கொடு - வாசனைபொருந்தியபுஷ்பங்களைக்கொண்டு—பூசைசெய்பவர் - அருச்சிக்கின்றவர்களை—பாம்பொடுபழுகிலாபரமனென்று - சற்பாபரணமில்லாதசிவனென்று—அவர்பூம்பதம் - அவர்களுடையபொலிவாகியபாதத்தை—மனமகிழ்ந்து - மனஞ்சந்தோஷித்து—உலகம்போற்றும் - உலகத்தார்துதிப்பார்கள். எ - று.

தாண்மலரொன்னுமிடத்து தாமரைமலரையன்றி யேனையமலரன்றென்றும், தேம்படு மலரொன்னுமிடத்துப் பொதுப்படவெல்லா மலரொன்றுங்கொள்க. பரமசிவமாகப் பாவிப்பதைப் "பாம்பொடுபழுகிலாப் பரமனென்றவர், பூம்பதமனமகிழ்ந் துலகம் போற்றுமே." என்றார். (கக)

நோய்ப்பிறப் பிலாதகண் ணுதலைப் பூசியா
வாய்ப்புறத் தலைக்கொரு மதிபெ றாநரா
ளுய்ப்பிறப் புற்றதி னறிஞ ரொள்ளுறா
நாய்ப்பிறப் பாற்றவு நன்று நன்றரோ.

(இ - ள்.) நோய்ப்பிறப்பிலாத - நோயும்பிறப்புமில்லாத—கண்ணுதலை - பரமசிவனை—பூசியா - பூசைசெய்து—தலைக்கு—வாய்ப்புற - பொருந்த—ஒருமதிபெறா - ஒருசந்திரனைப்பெற்றுக்கொள்ளாத—நரனாய் - மனிதனாய்—பிறப்புற்றதின் - பிறப்படைந்திருத்தலைப்பார்க்கினும்—அறிஞர் - பெரியோர்களால்—எள்ளுறா - இகழப்படாத—நாய்ப்பிறப்பு—ஆற்றவும் - மிகவும்—நன்றுநன்று. எ - று. தலைக்கொருமதிபெறல் - சிவசாரூப்பியம்பெறுதல். எ - று.

கண்ணுதல்; அன்மொழித்தொகை. சான்றோராற்பழிக்கப்பட்டுச் சிவபூசையியற்றுவதில் பயனின்றென்பது கருத்து. பூசியாவென்பது உடன்பாட்டில் வந்தவினையெச்சம். நன்று நன்று. இழிவைக்குறிக்க வந்த வடுக்கு. (க௨)

பொருவிலி யாகமம் புகன்ற மந்திரக்
கிரியைகள் வழுவறக் கிளக்கு நல்லருட்

குருபர னருளினாற் கொண்டு செய்குநர
பரசிவ பூசனைப் பயனை நண்ணுவார்.

(இ - ள்.) பொருவிலியாகமம் - ஒப்பில்லாதசிவாகமங்களில் — புகல் - சொல்லிய — மந்திரக்கிரியைகள் - மந்திரங்களையுங்கிரியைகளையும் — வழுவறக்கிளக்கும் - குற்றமறவுபதேசிக்கும — நல்லருட்குருபரன் - அருளையுடையநல்லவாசாரியன் — அருளினால் - அநுக்கிரகத்தினால் — கொண்டு - பெற்றுக்கொண்டு — செய்குநர் - பூசைசெய்கின்றவர்கள் — பரசிவபூசனை - மேலாகியசிவபூசையினது — பயனை - பிரயோசனத்தை — நண்ணுவார் - அடைவார்கள். எ - று. (௪௬)

அண்ணலைம் முகங்களு மருளு மாகம
நண்ணிய விதிமுறை நன்கு செயயினு
மெண்ணரு மன்புளத் தில்லை யெனிற
பண்ணிய பூசனை பயன்ற ராதரோ.

(இ - ள்.) அண்ணல் - பரமசிவனது — ஐம்முகங்களும் — அருளாகமம் - தந்தவாகமத்தில் — நண்ணிய - பொருந்திய — விதிமுறை - விதிப்படி — நன்குசெய்யினும் - தவறுசெய்தாலும் — எண்ணருமன்பு - அளவிடப்படாதவன்பானது — உளத்து - உள்ளத்தினிடத்து — இல்லையெனில் - இல்லையாயில் — பண்ணியபூசனை — பயன்றராது - பிரயோசனத்தைக்கொடுக்காது. எ - று. அரோ - அசை. (௪௭)

பூசைசெய் தன்னையும பூசிக் கப்படு
மீசன தியல்பையு மிறைவன் பூசைசெய்
யாசறு பொருளையு மறிவ றிந்துயர்
தேசிக னருளினாற் றெளிய வேண்டுமால்.

(இ - ள்.) பூசைசெய் - அருச்சிக்கின்ற — தன்னையும் — பூசிக்கப்படும் - தன்னாற்பூசைசெய்யப்பட்ட — ஈசனதியல்பையும் - பரமசிவனதுதன்மையையும் — இறைவன்பூசைசெய் - பரமசிவனதுபூசைக்குவேண்டிய — ஆசறுபொருளையும் - குற்றமற்றதிரவியங்களையும் — அறிவறிந்துயர் - அறியத்தக்கவைகளையறிந்துயர்ந்த — தேசிகனருளினால் - ஆசாரியனதுஅநுக்கிரகத்தினால் — தெளியவேண்டும் - அறியவேண்டும். எ - று.

தன்னையும், இயல்பையும், பொருளையும், அறிந்தென்றது அறிவறிந்தென்றது ; சைதன்யமாகக் காணவேண்டுமெனற்கு. என்னை “ பு

சலோயு மதுமல பொருளுமதிதமையு, மிசலோயுடைமேயமுய முயமெய
ிமெனவே." என்றா ருத்துவராயர். (௧௫)

மந்திர தந்திர வுருக்கள் வந்தவோ
சிந்தனை புறவிட மந்திற் சென்றதோ
பைந்தொடி பூசனை பயனி லென்றநீ
நிந்தனை செய்ததென் னிகழ்த்து வாயென்றாள்.

(இ - ள்.) மந்திரதந்திரவுருக்கள்வந்தவோ - மந்திரதந்திரவுருக்களில்கூற ரூபங்கள்வந்தனவோ — சிந்தனை - மனது — புறவிடமந்திற்சென்றதோ - வெளிப்புலன்களிற்போயிற்றோ — பைந்தொடி - பசியவளையலையுடைய மாயையே — பூசனை - சிவபூசை — பயனிலென்று - பிரயோசனமில்லையென்று — நீநிந்தனைசெய்தது — என் - என்னகாரணம் — நிகழ்த்துவாயென்றாள் - சொல்லுவாயென்றுசொன்னாள். எ - று.

இவைசேதக்கிறுமென்றது ; வேதநெறித்தாச்சேதலே. (கசு)

என்றுநல் விமலமா தியம்பப் பூசையால்
வென்றிகொ ளல்லமன் விழியிற் றோன்றிய
நன்றியை யறிந்தில னருவி நிற்றலால்
வன்றுயர் மனமுற மாயை கூறுவாள்.

(இ - ள்.) என்று - இப்படியென்று — நல்விமலமாது - நல்லவிமலையா னவள் — இயம்ப - சொல்ல — பூசையால் - தான்செய்தசிவபூசையால் — வென்றிகொளல்லமன் - மாயையைக்கடந்தவல்லமன் — விழியிற்றோன்றிய - கண்ணிற்காணப்பட்ட — நன்றியை - உதவியை — அறிந்திலன் - அறியாதவளாய் — அருவிநிற்றலால் - அவ்வல்லமன் தன்கையிலகப்படாமையால் — வன்றுயர் - மிகுந்ததுன்பம் — மனமுற - மனத்திற்பொருந்த — மாயைகூறுவாள் - மாயைசொல்லுவாள். எ-று. (கஎ)

வேறு.

ஒன்றையு முணர்கி லேனு னெங்குரு வுரைத்த வாற்று
லின்றனை யிலிங்க பூசை யியற்றியும் பயனென் றில்லை
யென்றனள் பருவ முற்றோர்க் கிருமறை யுபதே சிப்ப
தன்றியவ் வனிதர்க் கோதி னதுபயன் படுவ துண்டோ.

(இ - ள்.) ஒன்றையும் - வேறொன்றையும் — உணர்கிலேறன் - நானறி யேனாதலினாலே — எங்குரு - எங்களாசாரியன் — உரைத்தவாற்றால் - சொன்னநெறியால் — இன்றாவு - இன்றையவரைக்கும் — இலிங்கபூசை - சிவபூசையை — இயற்றியும் - செய்தும் — பயனொன்றில்லை - பிரயோசனமொன்றுமில்லை — என்றனள் - என்றுசொன்னாள் — பருவமுற்றோர்க்கு - பக்குவப்பட்டோர்களுக்கு — இருமறை - பெரியார்கிரங்களை — உபதேசிப்பதன்றி - உபதேசிப்பதல்லாது — வன்மனிதர்க்கோரின் - அபக்குவர் களுபதேசித்தால் — அதுபயன்படுவதுண்டோ - அதுபிரயோசனப்படுமோ. எ - று.

இயற்றியும், என்பதிலும்மை யிழிவுசிறப்பு. (கஎ)

நெறிபல முறையு ரைந்து நினைந்திலள் தனை யந்தோ
மறுருறு மனத்த ளாகி மாயைமால் கொண்டிருந்தா
ளறிவிலார்க் கறிவிப் பார்கா மறிவில ராவ தொன்று
வெறிமலர் வணர்வார் கூந்தல் விமலைதன் மனந்த ளர்ந்து.

(இ - ள்.) நெறிபலமுறையுரைந்தும் - பலநெறிகளைமுறையாகச்சொல்லியும் — நினைந்திலளதனை - அக்காரியத்தைஆலோசித்திலள் — அந்தோ - ஐயோ — மறுருறுமனத்தளாகி - கலங்கியமனதையுடையவளாகி — மாயை — மால்கொண்டிருந்தாள் — மயக்கங்கொண்டிருந்தாள் — அறிவிலார்க்கு - அறிவில்லாதவர்களுக்கு — அறிவிப்பார் - அறிவிக்கின்றவர்கள் — அறிவிலராவதொன்று - அறிவில்லாதவராவதொன்று — வெறிமலர் - வாசனை பொருந்திய மலரையணிந்த — வணர் - தாழ்ந்த — வார் - நீண்ட — கூந்தல் - அளகத்தையுடைய — விமலை — தன்மனந்தளர்ந்து - தன்மனஞ்சோர்ந்து. எ - று. (கஅ)

இவண்மனங் கவன்றி ருந்த தினைநா னறிவ லென்று
குவிமுலை விமலை சொல்வாள் கோற்றொடி மடந்தாய் நின்மே
லவிழ்மல ரம்பு பட்ட தாயிருந் தன்றெ னக்கு
நவிலுதி மறையே லன்னை நகமக ளாணை யென்றாள்.

(இ - ள்.) இவண்மனம் - இம்மாயையினதுமனம் — கவன்றிருந்தது - கவலைகொண்டிருந்தது — இதனைநானறிவலென்று - இக்காரியத்தைநான் தெரிந்துகொள்வேனென்று — குவிமுலை - குவிந்தமுலையையுடைய — விமலைசொல்வாள் — கோற்றொடிமடந்தாய் - அழகியவளையலையுடையமாயை

யே—நின்மேல் - உன்மேல் —அவிழ்மலரம்பு - விரிந்தபுஷ்பபாணம்—ப ட்டதாயிருந்தன்று - பட்டதாயிருந்தது—எனக்கு—நவிலுதி - சொல்வா ய்—மறையேல் - ஒளிக்கவேண்டாம் —அன்னை - தாயாகிய —நகமகள் - பார்ப்பதியினது— ஆணையென்றாள். எ - று. (௨௦)

ஆணையை வெருவி மாயை யம்பலத் தாடா நின்ற
தாணுவு முளமயி ரும்புந தண்ணுமைத் தொழிலான் கண்கட்
கூணெனு மழகின் மிக்கா னொருவன்வந் தனனன் னானைக்
காணலு மெனைநான் காணே னென்றனள் கற்றா போல.

(இ - ள்.) ஆணையைவெருவி - ஆணைக்குப்பயந்து—மாயை—அம்பலத் தாடாநின்ற - சிதம்பரத்திலாடலைச்செய்கின்ற —தாணுவும் - சபாபதியு ம்—உளம்விரும்பும் - மனதிலாசைகொள்ளும் —தண்ணுமைத்தொழிலா ன் - மத்தளத்தொழிலையுடையவனும் —கண்கட்கு - கண்களுக்கு— ஊணெனும் - ஆகாரமென்றுசொல்லத்தக்க —அழகின்மிக்கான் - அழகி ன்மிகுந்தவனுமாகிய—ஒருவன்—வந்தனன் - வந்தான்—அன்னானை - அ ந்தன்மையையுடையவனை—காணலும் - கண்டவளவில் —எனைநான்கா ணேன் - நானென்னைக்காணேன்— என்றனள் - என்றுசொன்னாள்—க ற்றார்போல - ஞானிகளைப்போல.

எனைநான்காணேனென்றது, யோகமேபெலீட்டாலென்க (௨௧)

அல்லம னெனும வனை மவன்றனக் கலதென் னெஞ்சக்
கல்லுரு குறுதா முக்கட் கடவுளுக் கன்றி மேரு
வில்லுரு வாவ துண்டோ விளங்கிழாய் நின்னைக் காணு
நல்வினை யொன்றி ருப்ப நாலுயிர் தரித்தே னென்றாள்.

(இ - ள்.) அல்லமனும - அத்தன்மையையுடையவனதுபெயர் —அல் லமன்—அவன்றனக்கலது-அவனுக்கல்லாது —என்னெஞ்சக்கல் - என்ம னமாகியகல்—உருகுறாது - உருகாது—முக்கட்கடவுளுக்கன்றி - மூன்று கண்களையுடையபரமேஸ்வரனுக்கல்லாது—மேரு —வில்லுருவாவதுண்டோ - வில்லடிவாகுமோ —விளங்கிழாய் - விளங்குகின்ற ஆபரணத்தையுடைய மாதே—நின்னைக்காணும்-உன்னைப்பார்க்கவேண்டிய—நல்வினையொ ன்றிருப்ப - புண்ணியமொன்றிருத்தலால் —நாலுயிர்தரித்தேனென்று ள் - நானுயிர்தரித்திருந்தேனென்றாள். எ - று. (௨௨)

நீசவி லல்ல மன்வே னெடுங்கண்வா ணுதன்ம டந்தாய்
நானவி லல்ல மன்றா னச்சுமுன் றனக்குத் தக்க
மானிட வடிவங் கொண்டு வந்தனன் போது மன்னான்
ஞானநல் விழியி னன்றி நயந்துதன் னுண்மை காட்டான்.

(இ - ள்.) வேனெடுங்கண் - வேல்போன்றநெடியகண்களையும் —வாணுதல் - ஒளிபொருந்தியநெற்றியையுமுடைய —மடந்தாய்-மாயையே —நீநவிலல்லமன் - நீசொல்லியவல்லமன் —நானவிலல்லமன்றான் - நான்சொல்லியவல்லமனே —நச்சுமுன்றனக்குத்தக்க - விரும்புமுனக்கேற்க —மானிடவடிவங்கொண்டு - மனிதவடிவங்கொண்டு —வந்தனன்போது —அன்னான் - அவ்வல்லமன் —ஞானநல்விழியினன்றி - ஞானநேத்திரங்களுக்கல்லாது—நயந்து - விரும்பி —தன்னுண்மை - தன்மெய்வடிவத்தைக்காட்டான். எ - று.

இங்கே தக்கவெனற்கு ; காமியத்தவத்திற்குத் தக்க வெனக் கொள்க. (உ௫)

என்னநல் விமலை கூற விலங்கிலை நெடுவேற் கண்ணி
தன்னிக ரலமன் சச்சி தானந்த சம்பு வென்றா
யன்னவ னலனி வன்றான் மத்தள வல்ல மன்காண்
முன்னொடு பின்ம யங்க மொழிந்தனை யணங்கே யென்றாள்.

(இ - ள்.) என்ன - இப்படியென்று —நல்விமலைகூற-நல்லவிமலைசொல்ல —இலங்கிலை - பிரகாசியாநின்றவிலைபோன்ற —நெடுவேற்கண்ணி - நெடியவேலையொத்தகண்களையுடைய மாயை —தன்னிகரலமன் - தனக்குத்தானேயொத்தவல்லமன் —சச்சிதானந்தசம்புவென்றாய் - சச்சிதானந்தவடிவமாகியசிவனென்றாய்—அன்னவனலன் - அத்தன்மையையுடையவனல்லன் —இவன்றான் —மத்தளவல்லமன் - மத்தளத்தொழிலையுடையவல்லமன் —முன்னொடுபின்மயங்க - முன்னும்பின்னுமயங்க —மொழிந்தனை - சொன்னாய் —அணங்கேயென்றாள் - விமலையேயென்றாள். எ - று.

முன்னொடு பின்மயங்கலாவது ; அல்லவெனற்பாலதை யாமெனக்கோடலை. (உ௬)

வேண்டிய வடிவங் கொண்டு வேண்டிய வாறு செய்யு
மாண்டரு ளல்ல மற்கீ தாமென்று மாகா தென்றுங்

கொண்டரு ணினைது நெஞ்சாற் குறித்திடப் படுவ துண்டோ [ளா.
பூண்டிக ழிளமென் கொங்கைப் பொற்றொடி யென்று சொன்

(இ - ள்.) வேண்டியவடிவங்கொண்டு - தான்விரும்பிய உருவத்தை க்கொண்டு—வேண்டியவாறுசெய்யும் - வேண்டியபடிசெய்யும்—ஆண்டருளல்லமற்கு - யாவரையும்அடிமைகொண்டருளாநின்ற அல்லமனுக்கு—ஈதாமென்றும் - இக்காரியாகுமென்றும்—ஆகாதென்றும் - இக்காரியமாகாதென்றும்—கொண்டரு - மாறுபட்ட—நினதுநெஞ்சால் - உன்மனதினால்—குறித்திடப்படுவதுண்டோ—நிச்சயிக்கக்கூடுமோ—பூண்டிகழ் - ஆபரணங்கள் விளங்குகின்ற—இளமென்கொங்கை - இளமைபொருந்திய மிருதுவாகியமுலையையுடைய—பொற்றொடி - பொன்வளையலையணிந்தமாயையே—என்றுசொன்னாள். எ - று (உரு)

தருக்கமின் றுடனுரைத்த றகாதினி யரங்கி லென்றன்
கருத்துறு மனையன் றன்னைக் காட்டுவல் கண்டு நீபின்
புரைத்தரு ளினைய னென்ன வுணர்ந்தறி வரிய னென்று
தெரிந்தவ னாயி னன்னான் றிறலினைக் காண்ப லென்றாள்.

(இ - ள். தருக்கமின்றுடனுரைத்தல் - உன்னுடன்தர்க்கித்துப் பேசுதல்—தகாது—இனி - இனிமேல்—அரங்கில் - நடனசாலையில் —என்றன்கருத்துறும் - என்மனதிற்பொருந்திய—அனையன்றன்னை - அவ்வல்லமனை— காட்டுவல் - காட்டுவேன்—கண்டுநீ - நீஅவனைப்பார்த்து—பின்பு—உரைத்தருளினையனென்ன - இத்தன்மையனென்று சொல்வாயாக—உணர்ந்து (பலநூல்களிலும்) ஆராய்ந்து—அறிவரியனென்று - அறிதற்கரியனென்று —தெரிந்தவனாயின் - நீ முன்னறிவித்தவனேயாகில்—அன்னான்றிறலினை - அப்படிப்பட்டவனது வல்லமையை —காண்பலென்றாள் - பார்ப்பேனென்று சொன்னாள். எ - று. (உசு)

கண்டுகொண் மணியின் றன்மை காட்டுதற் கறிந்து ளோரைக்
கொண்டுசெல் பவர்போல் வந்த கோதையை யுடன்கொண் டே
பண்டுதன் பூசைக் கெய்தும் யரிசுபோன் மகளிர் சூழ்ந் [கிப்
தொண்டையங் கனிவாய் மாயை சுடர்மணிக் கோயில் புக்காள்.

(இ - ள்.) கண்டுகொண்மணியின்றன்மை - பார்த்துப்பெற்றுக்கொள்ளும் ரத்தினத்தின்குணத்தை,—காட்டுதற்கு - அறிந்துசொல்வதற்கு—அறிந்துளோரை - தெரிந்தவர்களை—கொண்டுசெல்பவர்போல் -

அணையுந் தம்பொருட்டு போகுபவர்போல—வந்தசோலைதனைய - கைலையிலிருந்து வந்தவிமலையை—உடன்கொண்டேகி - தன்னுடனழைத்துக்கொண்டுபோய்—பண்டு - முன்பு—தன்பூசைசெய்யும் பரிசுபோல்—தான்பூசைசெய்தற்குப் போகுந்தன்மைபோல—மகளிர்சூழ - மாதர்சூழ்ந்துவர—தொன்மையங்கனிவாய்மாயை - அழகியகோவைக் கனிபோன்ற அதரத்தையுடைய மாயை— சூடாமணி - பிரகாசம்பொருந்திய ரத்தினங்கள்பதித்த—கோயில்புக்காள் - மதுகேஸ்வரருடைய ஆலயத்திற் போயினாள், எ - று. (௨௭)

அருச்சனை முன்பு போனன் றுற்று மதுகை நாதன்
திருச்சர ணங்கள் போற்றிச் சேயரி நெடுங்கட் செவ்வாய்
விரைதுணர் மலர்மென் கூந்தல் விமலைமா தோடும் வந்து
திருத்தமண் டபம்பு குந்தா ணிரைவளைத் தளிர்க்கை மாயை.

(இ - ள்.) நிரைவளைத்தளிர்க்கைமாயை - வரிசையாகவளையல்களையணிந்த தளிர்போன்றகைகளையுடைய மாயை—அருச்சனை - பூசையை—முன்புபோல் - தான்முன்புசெய்துவந்ததுபோல—நன்றுற்று - நன்றாகச்செய்து—மதுகைநாதன் - மதுகேசுவரனுடைய—திருச்சரணங்கள் போற்றி - திருவடிகளைத்துதித்து—(பின்பு)—சேயரிநெடுங்கண் - செவ்வரிபரந்த நெடியகண்களையும்—செவ்வாய் - சிவந்தவாயையும்—விரைத்துணர்மலர்மென்கூந்தல் - வாசனைபொருந்தியகொத்தாகிய பூவையணிந்த மெல்லியகூந்தலையுமுடைய—விமலைமாதோடும் - விமலையோடும்—வந்து—நிருத்தமண்டபம்புகுந்தாள் - நடனமண்டபத்தினுள்ளே பிரவேசித்தாள். எ - று. (௨௮)

அல்லம னிவன்றான் றானென் றறிதர வறிதி ராமற்
சொல்லுக வெனவ டிக்குந் தோற்றம்போன் மத்த ளத்தை
வல்லவ னறைத லோடு மாயைநெஞ் சூச லாடச்
சில்லரி மணிச்சி லம்பு சிலம்புற வாடி னின்றாள்.

(இ - ள்.) அல்லமனிவன்றான்றானென்று - இவன்றானிவன்றானல்லமனென்று—அறிதர - அறியும்படி—வறிதிராமல் - சும்மாவிராமல்—சொல்லுகவென - சொல்லென்று—அடிக்குந் தோற்றம்போல் - அடிக்குங்காட்சிபோல—மத்தளத்தை—வல்லவன் - வல்லவனாகிய பிரபுதேவன்—அறைதலோடும் - (தாம்தாமென்று) அடித்தவளவில்—மாயை—நெஞ்சூசலாட - தன்மனதூஞ்சலாட—சில்லரி - சிலவாகியபரலையுடை

ய—மணிச்சிலம்பு - ரத்தினத்தினாற்செய்த சிலம்புகள்—சிலம்பும் - ஒலிக்கும்படி—ஆடுகின்றாள் - நடனஞ்செய்கின்றாள். எ - று. (உ௯)

முன்னுற நின்ற ஞான மூர்த்திமேல் விழியு மார்த்துப்
பின்னுற நின்ற மூர்த்தி மான்மிசைப் பெயரு நெஞ்சு
மன்னுற விருத்தி நின்று மாயைதா னடித்தாள் கண்டோர்
தன்னைய னமுமா னெஞ்சுந் தன்மிசை வந்து வீழ.

(இ - ள்.) முன்னுறநின்ற - முன்னேநின்ற—ஞானமூர்த்திமேல் - ஞானவடிவினனாகிய மதுகேசனிடத்து—விழியும் - பார்வையையும்—ஆர்த்து - பந்தனமடித்து—பின்னுறநின்ற - பின்னேநின்ற—மூர்த்திமான்மிசை - சிறந்தவடிவையுடையஅல்லமனிடத்து—பெயரும் - விஷயங்களிற்செல்லுந்தன்மையையுடைய—நெஞ்சும் - மனதையும—மன்னுறவிருத்தி - நிலைபெறவைத்து—நின்று —மாயைதான் - மாயையானவள் —கண்டோர்தன்னையனமும - தன்னைப்பார்க்கின்றவர்களுடையகண்களும்—மாநெஞ்சும - மயக்கமுற்ற மனமும்—தன்மிசைவந்துவீழ - தன்மேல்வந்துவிழும்படியாக—நடித்தாள் - நிர்த்தனஞ்செய்தாள். எ - று.

ஞானமூர்த்தியென்றது, முத்திமயத்தரத்தக்கதாகவும் மூர்த்திமான்மிசையென்றது, மோகத்தைவிளைவிப்பதாகவும் கருதிக்கூறியபெயரென்க. (௩0)

அரத்தம துறுப ளிங்கா யரிமதர் மழைக்கண் மாயை
கருத்துறு மாயத் தன்பாற் காணுறத் தோன்றி நின்றான்
வருத்துறு செயல்கொள் மாயை மருவிய குணம டுத்துப்
பரத்தினிற் றோன்று மென்று பகர்வது முண்மை யன்றே.

(இ - ள்.) அரி - இரேகைகளையும்—மதர் - செருக்கையும்—மழை - குளிர்ச்சியையுமுடைய—கண் - கண்களையுடைய —மாயை - மாயையினது—கருத்துறு மாம - மனத்திலுற்ற விரகம்—அரத்தமதுறுபளிங்காய்-செந்நிறஞ்சேர்ந்தபளிங்குக்கொப்பாய்—தன்பால்-தன்னிடத்தில் —காணுறத்தோன்றி - காணும்படிவிளங்கி—நின்றான் - (அல்லமன்) நின்றான்—வருத்துறு-வருத்துகின்ற—செயல்கொள்-செய்கையைக்கொண்ட—மாயை - மாயையினிடத்தில்—மருவிய - பொருந்திய —குணம் - சத்துவமுதலியகுணங்கள் —அடுத்து - சேர்ந்து —பரத்தினில் - பிரமத்தினிடத்தில்—தோன்றுமென்று-காணப்படுமென்று—பகர்வதும்-சொல்வதும் —உண்மையன்றே - மெய்மையன்றோ. எ - று.

ஆடியமெத்தது காட்டு மாறுபோன்று, பரமும் மாயைக்குக் காமிய நி ட்காமியத்திற் கியைந்தவாறு, காமியவல்லமனுகக் காணப்பட்டதென்க.

கூத்துக்குப் புகுந்த நம்பி கொட்டிக்கு நாணு றுமற்
சீர்த்தப்பு நடஞ் வின்று சிந்தைவே றாகி நின்றாள்
வார்த்தைக் குட் படாத ஞான வாரியை வாயாற் சொல்ல.
மூத்துக்கு மதியை வென்ற முகத்தியர் குழாதது ணாணி.

(இ-ள்.) கூத்துக்கு - ஆட்டுவித்தலின்பொருட்டு—புகுந்த - வந்த—நம்பி - அல்லமனது—கொட்டிக்கு - மத்தளவோசையின்வரிசைக்கு—சீர்த்தப்பு - சதிதப்பிய—நடநவின்று - நடனஞ்செய்து—நாணுறுமல் - (மாயையானவள்) வெட்கமுறுமல்—வார்த்தைக்குட்படாத - சொற்களுக் கெட்டாத—ஞானவாரியை - ஞானக்கடலாகிய அல்லமனை—வாயாற் சொல்ல—மூத்துக்கு - முதிர்ந்து குறையாநின்ற—மதியைவென்ற—சந்திரனைவென்ற—முகத்தியர்குழாத்துள் - முகத்தையுடைய மகளிர்கூட்டத்தில்—நாணி - வெட்கமுற்று—சிந்தை - மனது—வேறாகிநின்றாள் - வேறுபட்டுநின்றாள். எ - று.

ஏனையஞானம்போற, பூர்வபட்சப்படுத்தற கியையாமையின் வார்த்தைக்குட்பாடதவென விசேஷணந் தந்தார். (௬உ)

கையொடு செல்லா நின்ற கடைக்கணுன் மாயை காட்ட
வையனை விமலை கண்ணுற் றதிசய முடைய ளாகி
வையக மதனின் மிக்க மனிதரு ளினையன் போல
மெய்யழ குடையான் றன்னை வேறுகண் டிலனென் றுள்ளி.

(இ-ள்.) கையொடு—செல்லாநின்ற - போகாநின்ற—கடைக்கணுல்—மாயைகாட்ட - மாயையானவள்காண்பிக்க—ஐயனை - அல்லமனை—விமலை—கண்ணுற்று - பார்த்து—அதிசயமுடையளாகி - ஆச்சரியமுடையவளாகி—வையகமதனில் - உலகத்தில்—மிக்க - மிகுந்த—மனிதருள் - மனிதர்களுக்குள்ளே—இனையன்போல - இத்தன்மையையுடையவன் போல—மெய்யழகுடையான்றன்னை - உண்மையான அழகையுடையவனை—வேறுகண்டிலனென்று - வேறேகண்டதில்லையென்று—உள்ளி - ஆலோசித்து. எ - று. (௬௩)

மாறரு மலம னேயிவ் வடிவுகொண டவளசெய் பூசைப்
பேறரு ளுதற்குற் றானோ பெருந்தவத தாற்பி றந்த

வேறொரு மகனே யென்று விமலையை யத்த ளாகித்
தேறில ணிற்ப மாயஞ் செய்துநின் றனனெங் கோமான்.

(இ - ள்.) மாறரும் - விருப்பத்தைத்தருகின்ற — அலமனே - அல்லம னே — இவ்வடிவுகொண்டு - இவ்வுருவங்கொண்டு — இவள்செய்பூசை - இம்மாயைசெய்கின்ற பூசையினது — பேறருளுதற்கு - பலனைக்கொடுத்தற்கு — உற்றானே - வந்தானே — பெருந்தவத்தால் - பெரியதவத்தினால் — பிறந்த — வேறொருமகனேயென்று - மற்றொருபுருஷனேயென்று — விமலை — ஐயத்தளாகி - சந்தேகித்தவளாகி — தேறிலணிற்ப - தெளியாதவளாயிருக்க — மாயஞ்செய்துநின்றனன் - மயக்கஞ்செய்துநின்றான் — எங்கோமான் - எமதுதலைவனாகிய அல்லமன். எ - று.

. மாறரும் யாதொன்றானு மாறுதற்கரியவெனப்பொருள்கோடல் சிறப்பு. அன்றேல் தேற்றேகாரத்தாற பயனென்னை. (௩௪)

தமமில்வே லையினிற் செய்மைத் தடத்தொரு வனைக்கண் டன்னோ
னமைவுற வருதல் போத லையமுற் றறியார் போல
நிமலனை விகாரி யென்று நிகழ்நிரு விகாரி யென்றும்
விமலையே மயங்கு மென்னின் மாயையை வெறுப்ப தென்னே.

(இ - ள்.) தமமில்வேலையினில் - இருளில்லாதபொழுதில் — செய்மைத்தடத்து - தூரவழியில் — ஒருவனை — கண்டு - பார்த்து — அன்னோன் - அவன் — அமைவுற - பொருந்த — வருதல்போதல் - வருதலையும்போதலையும் — ஐயமுற்று - சந்தேகித்து — அறியார்போல - அறியமாட்டாதவர்போல — நிமலனை - அல்லமனை — விகாரியென்றும் - விகாரத்தையுடையமனிதனென்றும் — நிகழ் - பிரகாசியாநின்ற — நிருவிகாரியென்றும் - விகாரமில்லாதகடவுளென்றும் — விமலையே — மயங்குமென்னில் - மயங்குவாளாகில் — மாயையைவெறுப்பதென் - மாயையை வெறுத்துச்சொல்வதென்ன. எ - று.

விகாரம் மாயாசகிதமெனவும்; நிர்விகாரம் மாயாரகிதமெனவுங் குறிப்பிக்க விங்ஙனங்கூறியதென்க. கருவயப்படாதலின் விமலையேயெனத் தேற்றேகாரங்கொடுத்தார். (௩௫)

நீர்நிலை கோலாற் காணு நீர்மைபோ லிங்கு நின்றோன்
சீர்நிலை மாயை தன்னாற் றெளிவுற வறிவ லென்னு

வார்நிலை வடிவ மாயைக் கினையனே யலமனென்று
வாரிலை முலைமடந்தை வடிக்கணுற் காட்டினாளால்.

(இ - ள்.) நீர்நிலை - சலந்திருழுத்தை—கோலாகலநுமும் - கோலாலநி யும்—நீர்மைபோல் - தன்மைபோல —இங்குநின்றேன் - இவ்விடத்தில் நின்றவனது —சீர்நிலை - குணத்தின்றன்மையை —மாயைதன்னால் - மா யையினால் —தெளிவுற - சந்தேகமில்லாமல் —அறியலென்று - அறியே னென்று—ஏர்நிலைவடிவம - அழகினிருப்பிடமாகியவடிவத்தையுடைய— மாயைக்கு —இனையனே - இவனே —அலமனென்று - அல்லமனென் று—வார்நிலை - கச்சணிந்த —முலை - ஸ்தனத்தையுடைய —மடந்தை - விமலை —வடிக்கணால் - கூர்மைபொருந்தியகண்ணால் —காட்டினாள், எ - று. (௬௬)

கணணிற் கேட்குஞ் சீசால் கங்கணத் திறையவன் முன்னர்
கண்ணினாற் குமரர் நெஞ்சக் கட்டவிழ்த் தாடு வாட்டுக்
கண்ணினாற் கூற வந்த கைலைமா தறிந்தா ளன்னாள்
கண்ணினாற் கண்டு ஞானக் கண்ணினாற் காண்பான் றனை.

(இ - ள்.) கண்ணினாற்கேட்கும - கண்ணாலேகேட்கும்படியாகிய —சீர் சால் - சிறப்புமிருந்த —கஙகணத்திறையவன் - முன்னர்பாமபாகியகடக த்தையுடையமதுகேசனதுசந்நிதியில் —கண்ணினால் - தன்கணகளால்— குமரர் - காளையரது —நெஞ்சக்கட்டவிழ்த்து - மனவலிமைபநீக்கி —ஆடு வாட்கு - ஆடுகின்றமாயைக்கு —வந்தகைலைமாது - கைலாசத்திலிருந்து துவந்தவிமலை— கண்ணினாற்கூற - கணணினாலேகாட்ட —அன்னாள் - அந் தமாயையானவள்—ஞானக்கணணினாறகாண்பான்றனை - ஞானநேத் திரத்தினாற்காணப்பட்ட அல்லமனை— கண்ணினாற்கண்டு - கண்ணாலேபா ர்த்து—அறிந்தாள். எ - று.

ஞானக்கண்ணினாற காண்பான்றனை யென்றதனால், அன்னாளும் ஞானக் கண்ணினாற்கண்டறிந்தாளெனப் பொருள் கொள்க. (௬௭)

வல்லிதன் மனத்திற் காம மாய்ந்துவண் கைலைக் குன்றில்
சொல்லிய குணைஞ் சத்திற் றேன்றலுஞ் சுழன்றூ டிப்போ
யல்லமன் மீதுவீழ்வா ளாகமேல் வீழ்ந்து பற்றிப
புல்லிய நினைந்து சென்றாள் புல்லிய நெறியி னின்றாள்.

(இ - ள்.) புல்லியநெறியினின்றாள் - அற்பமாகியகாமத்தைக்கருதின

றவளாகிய—வல்லி - மாயை—தன்மனத்தில்—காமமாய்ந்து - ஆசைகெட்டு—வண்கைலைக்குன்றில் - வளம்பொருந்தியகைலாசகிரியில் —சொல்லிய—சூள் - சபதம—நெஞ்சத்தில் - மனதில்—தோன்றலும் - தோன்றியவளவில்—சுழன்ருடிப்போய் —அல்லமன்மீதுவீழ்வாளாக - அல்லமன்மேல்விழுகிறவள்போல —மேல்வீழ்ந்து —பற்றி - பிடித்து —புல்லிய - கட்டிக்கொள்ள—நினைந்து - நினைத்து—சென்ருள் - போனாள்.

மனத்திற் காமமாய்ந் தென்றமையாலும் சொல்லியசூணெஞ்சத்திற் ருென்றலு மென்றமையாலும் இவன் மத்தளக்கார வல்லமனன்றெனக் கருதியதாகக் கண்டாம். (௩௮)

கண்டனி னவள்க ருத்தைக் காரிகை மனத்திற் காம
முண்டல முணரக் காட்டி வழிக்கொள்வ லென்று ளத்திற்
கொண்டுகை தவறி வீழ்ந்த குடமென மத்த ளந்தான்
விண்டுக வெறிந்து போகட் டோடினன் விரைந்து வீரன்.

(இ - ள்.) வீரன் - அல்லமன் —அவள்கருத்தை - அம்மாயையினதுநினைவை—கண்டனன் - அறிந்து—காரிகைமனத்துள் - இம்மாயையினது மனத்துளிருக்கும்—காமம் - காமத்தை—மண்டலமுணரக்காட்டி - இவ்வுலகமறியச்செய்து—வழிக்கொள்வலென்று - போவேனென்று—உளத்திற்கொண்டு - மனதில்நினைத்து —கைதவறிவீழ்ந்தகுடமென - கைதப்பிவிழுந்தகுடம்போல—மத்தளம்—விண்டுக - உடையும்படி—எறிந்துபோகட்டு - எறிந்துவிட்டு —ஓடினன்விரைந்து-சீக்கிரமாகஓடினான். எ - று.

இத்தனை யாட்ட மெல்லா மிவட்கித னுலென் றெண்ணி
மத்தள மதனை வீசிப போகல்போல் வள்ளல் போகப்
பித்தடைந் தனன்கொ லென்று பித்துறீஇ மாத ரெல்லாங்
கைத்தளிர் விரன்மு டக்கிக் கவுளடி வைத்து நின்ருர்.

(இ - ள்.) இவட்கு - இம்மாயைக்கு—இத்தனையாட்டமெல்லாம்—இதனுலென்று—எண்ணி - நினைத்து —மத்தளமதனை - மத்தளத்தை—வீசி - எறிந்து—போகல்போல் - போவதுபோல—வள்ளல்போக - அல்லமதேவன்போக —மாதரெல்லாம் - ஸ்த்ரீகளெல்லாரும —பித்தடைந்தனன்கொலென்று - இவன் பைத்தியங்கொண்டானேவென்று —பித்துறீஇ - மயக்கங்கொண்டு—கைத்தளிர்விரல் - தளிர்போன்றகைவிரல்களை—முடக்கி—கவுளடி - கபோலமூலத்தில்—வைத்துநின்ருர். எ - று.

பறையடித் தின்று காறு மறைத்தவிப் பாவை செய்கை
பறையுடைத் தொழிந்து காலை பாரொலா மறியச் செய்தான்
கறையடிக் களிநல் யானைக் கருங்கழற் சீற்றத் துப்பி
னிறைமகட் குயிரி லாதென் றிருளையர் மனமு ழைந்தார்.

(இ-ள்.) பறையடித்து - வாத்தியமடித்து — இன்றுகாறும் - இன்றுவரையில் — மறைத்த — இப்பாவைசெய்கை - இம்மாயையினது செய்கையை — பறையுடைத்து - வாத்தியத்தையுடைத்து — ஒழிந்து - நீங்கி — காலை - அல்லமன் — பாரொலாம் - உலகமெல்லாம் — அறியச்செய்தான் — கறையடி - உரல்போன்ற அடிகளையும் — களி - செருக்கையுமுடைய — நல்யானை - நல்லயானையையும — கருங்கழல் - பெருமை பொருந்திய வீரக்கழலையும் — சீற்றத்துப்பின் - கோபத்தையும் வலியையுமுடைய — இறைமகட்கு அரசன்மகளாகிய மாயைக்கு — உயிரிலாதென்று — இருளையர் - தோழிகள் — மனமுழைந்தார் - மனம் வருந்தினார்கள். எ - று.

பாவைபோல்பவளைப் பாவையென்றது; உவமையாகுபெயர். (சுக)

சிலைமத னின்று செய்யுஞ் செருவினுக் கன்றி வெள்ளி
மலைதனி லியம்பு மாற்றம் வழுவிற்றென் றுளம ழிந்தாள்
கலவிசெய் தலைவ னீங்கக் கைப்பொருட் கழுதி ரங்கு
முலைவிலை மகளிர் போல முத்தவா ணகைப் பொற் கொம்பு,

(இ-ள்.) முத்தவாணகைப்பொற்கொம்பு - முத்தையொத்த ஒளிபொருந்திய பற்களையுடைய கற்பகப் பூங்கொம்புபோல்பவளாகியமாயை — சிலைமதன் - கருப்புவில்லையுடைய மன்மதன் — இன்றுசெய்யும் - இப்போதுசெய்கின்ற — செருவினுக்கன்றி - சண்டைக்கேயல்லாமல் — வெள்ளிமலைதனில் - கைலாசகிரியில் — இயம்புமாற்றம் - சொல்லியபிரதிக்ஞை — வழுவிற்றென்று - தவறியதென்றும் — கலவிசெய்தலைவன் - போகநாயகன் — நீங்க - நீங்குதலினாலே — கைப்பொருட்கு - கையில்வருந்திரவியத்துக்கு — அழுதிரங்கும் - துக்கிக்கின்ற — முலைவிலைமகளிர்போல - தாசிகளைப்போல — உளமழிந்தாள் - மனங்கலங்கினாள். எ - று.

செருவினுக்கன்றியு மென்பதிலும்மை, எஞ்சியது. (சுஉ)

மாலைவாய் மனையே போலு மாயைவாண் முகத்தைக் கண்டு
வேலுலாங் கருங்கட் செவ்வாய் விமலைமா தவளு ளத்திற்

சாலுமா றனுரா றிந்து தடங்கணாய் தளரே னின்
சீலநா யகன்போந் தேத்துந் தேடிநாங் காண்போ மென்றாள்.

(இ - ள்.) மாலைவாய் - மாலைக்காலத்து—மரையேபோலும் - தாமரை மலரையொத்த—மாயைவாண்முகத்தை - மாயையினது ஒளிபொருந்திய முகத்தை—கண்டு - பார்த்து—வேலுலாம் - வேல்வடிவமுலாவுகின்ற—கருங்கண் - கரியகண்களையும்—செய்வாய் - சிவந்தவாயையுமுடைய—விமலைமாது - விமலையானவள்—அவருளத்தில் - அம்மாயையினது உள்ளத்தில்—சாலும் - மிகவும்—ஆரஞர் - நிறைந்ததுக்கத்தை—அறிந்து—தடங்கணாய் - விசாலமாகிய கண்களையுடைய மாயையே—நீ—தளரேல் - வருந்தாதே—நின் - உன்னுடைய—சீலநாயகன்போம் - ஒழுக்கத்தையுடைய தலைவன்போகின்ற—தேத்தும் - இடந்தும்—தேடி—நாங்காண்போமென்றாள். எ - று.

தாமரையை, மரையென்றது ; விகாரம் - தேயததுமெனற்பாலது ; தேத்துமென்றாயது ; இடைக்குறை. (௪௩)

சிலைநுதல் விமலை சொல்லாற் றெளிந்துள மிறையை நோக்கிக்
கலைதொட ருழைபோன் மாயை காட்டினிற் றொடர்ந்துபோனாண்
மலர்தொட ரளிகள போல மாயையைத் தொடர்ந்து சென்றார்
கொலைபடு மயின் மாதருக் குழைபொரு தடங்க ணல்லார்.

(இ - ள்.) சிலைநுதல் - வில்லையொத்தநெற்றியையுடைய—விமலை - விமலையினது—சொல்லால்—தெளிந்துளம் - மனந்தெளிந்து—இறையை நோக்கி - அல்லமனைநாடிக்கொண்டு—கலைதொடருழைபோல் - ஆண்மானைத்தொடருகின்ற பெண்மான்போல—மாயை—காட்டினில்—தொடர்ந்துபோனாள்—கொலைபடும் - கொல்லுதலையுடைய—அயிலமர்த்து - வேலோடுயுத்தஞ்செய்து—குழைபொரு - காதுடன்போர்செய்கின்ற—தடங்கணல்லார் - விசாலமாகியகண்களையுடையஸ்த்ரீகள்—மலர்தொடரளிகள்போல - புஷ்பத்தைத்தொடருகின்ற வண்டுகள்போல—மாயையைத்தொடர்ந்து—சென்றார் - போனார்கள். எ - று. (௪௪)

மெய்த்தவம் பயின்று பெற்று வேந்தர்க்குங் கொடாமன் முகக
ணத்தலுக் கென்று வாளா வரசன்வைத் திருந்த பாவை
மத்தளி கன்பின் போனாண் மகடனை யந்தோ வானாடு
பத்திமெல் லைத்தி ருத்தல் பாவமென் றிகழ்ந்தார் கண்டோர்.

(இ - ள்.) அரசன் - மமகாரன் —மெய்த்தவம்பயின்று - உண்மையான தவத்தைச்செய்து—பெற்று —வேந்தர்க்குங்கொடாமல் - அரசருக்கும் விவாகஞ்செய்துகொடாமல்—முக்கணத்தனுக்கென்று - மூன்றுகண்களையுடையபரமசிவனுக்கென்று—வாளா - வீணாக—வைத்திருந்த—பாவை - பெண் —மத்தளிகன்பின்போனாள் - மத்தளங்கொட்டுவோன்பின்னே போனாள்—அந்தோ - ஐயோ —மகடூஉ - மகளை —ஆண்டுபத்தின்மேல் வைத்திருத்தல் - பத்துவருஷத்தின்மேல்கல்யாணஞ்செய்துகொடாமல் வைத்திருப்பது—பாவமென்று—இகழ்ந்தார் - இகழ்ந்தனர்—கண்டோர் - பார்த்தவர்கள். எ - று. (சரு)

**பா**வமும் பழியு நல்கும் பல்வகைப் புகழ றங்கள்
யாவையு மழிக்கு மெய்து மின்பமு மதனா லெய்து
நோவுநன் மரபுஞ் செய்யு நோன்புநல் லொழுக்கு மேன்மை
சாவுமென் னுறுமன் னிற்கு நயங்குறு புன் காம மென்பார்.

(இ - ள்.) நயங்கு - பிரகாசியாநின்ற—புன்காமம் - அற்பமாகியகாமமானது—பாவமும் பழியும் - பாவத்தையும்பழியையும் —நல்கும் - கொடுக்கும் —பல்வகைப்புகழறங்கள் - பலவகைப்பட்டகீர்த்தியையுந்தருமத்தையும்—யாவையும் - மற்றெவைகளையும் —அழிக்கும் - கெடுக்கும் —எய்தும் இன்பமும் - தன்னால்வருஞ்சிற்றின்பத்தையும் —அதனாலெய்துநோவும் - அவ்வின்பத்தால்வருந்துன்பத்தையும்—நன்மரபும் - நல்லபரம்பரையையும்—செய்யுநோன்பும்-செய்கின்றவிரதங்களையும் —நல்லொழுக்கும்-நல்லஒழுக்கத்தையும்—மேன்மை - மேம்பாட்டையும் —சாவும் - இறப்பையும்—என்னுறுமல் - என்னாதிருக்கும்படி—நிறகும் - நிலைபெறும்—என்பார் - என்று சொல்லுவார்கள். எ - று. (சசு)

வேறு.

**ப**ஞ்சின்மேன் மிதிப்பினும் பதைப தைக்குமென் பதங்க
ளஞ்சு றுளபரன் மிதிப்பதை நீருண வவாவாள்
விஞ்சு ஞாயிறு முதிர்கதிர் வெதுப்பினை வெருவாள்
நெஞ்சு யோகிமே லிருத்தியந் நினைவினை சென்றாள்.

(இ - ள்.) பஞ்சின்மேல்—மிதிப்பினும் - மிதித்தாலும் —பதைபதைக்கும் - பதைபதைக்கின்ற —மென்பதங்கள் - மெல்லியபாதங்கள்—பரன்மிதிப்பதை - பருக்கைக்கல்மேல் மிதிப்பதைக்குறித்து —அஞ்சுறு

ள் - அச்சமுற்றாள்—நீருணவவாவாள் - நீர்பருகுதலைவிரும்பாள் —ஞாயி று - சூரியனது —விஞ்சு - மிகவும்—முதிர் - முதிர்ந்த —கதிர் - கிரணங் களுடைய—வெதுப்பினை - வெப்பத்தைக்குறித்து —வெருவாள் - பய ப்படாள்—நெஞ்சு - மனதை—யோகமேலிருத்தி - அல்லமன்மேல்வை த்து—அந்நிலைவளை - அந்தமாயை—சென்றாள். எ - று.

நிலைவளை ; அன்மொழித்தொகை. (சஎ)

காம வெந்தழ லாலுடல் வெந்துளங் கரிந்த
கோம டந்தைய லாலலை மேல்வரு குளிர்தண்
பூம டந்தையப் பாலையிற் போமெனிற் புனலிற்
றாமி ளங்கயல் சுடுமணல் வீழ்ந்தெனத் தளரும்.

(இ - ள்.) காமவெந்தழலால் - வெவ்வியகாமாக்கினியால் —உடல் வெந்து - சரீரம்வெந்து—உளங்கரிந்த - உள்ளங்கருகிய—கோமடந்தைய லால் - ராஜபுத்திரியாகியமாயை யல்லாமல்—அலைமேல்வரும் - பாற்கட லிற்பிறந்த—குளிர்தண் - மிகவும் குளிர்ச்சிபொருந்திய—பூமடந்தை - ஸ்ரீ தேவியானவள் —அப்பாலையிற்போமெனில் - அப்பாலைநிலத்திற்போவா ளாகில்—புனலில் - சலத்தில்—தாமிளங்கயல் - தாவாநின்றஇளமைபொ ருந்தியகெண்டையானது—சுடுமணல்வீழ்ந்தென - சுடுகின்றமணலில் வீ ழ்ந்ததுபோல—தளரும் - சோர்வாள். எ - று.

கடலையலையென்றது, சினையாகுபெர். (சஅ)

பான லங்கருங் கண்ணிபோ கியகொடும் பாலை
யானை தன்புழைக் கைநிகர் துளியிடை விடாமல்
வான நின்றுபெய் யினுந்தழற் பட்டவல் லிரும்பின்
மேன கந்தெறி திவலைபோற் சுவறுறும் விரைந்து.

(இ - ள்.) பானலங்கருங்கண்ணி - நிலோற்பலமலரையொத்தகரியக ண்களையுடையமாயை —போகிய —கொடும்பாலை - கொடியபாலைநில ம்—யானைதன் - யானையினுடைய—புழைக்கைநிகர் - துதிக்கையையொ த்த—துளி - நீர்த்தாரைகளை—இடைவிடாமல் - ஓயாமல்—வானம் - மே கமானது—நின்றுபெய்யினும் - நெடுங்கால நின்றுபெய்தாலும் —தழற்ப ட்ட - அக்கினியிற்காயப்பட்ட—வல் - வலிய—இரும்பின்மேல்—நகந்தெ றி - நகத்தால்தெறித்த—திவலைபோல் - நீர்த்துளிபோல—விரைந்து - ஸீ க்கிரத்தில்—சுவறுறும் - சுவறிப்போம். எ - று. (சகூ)

மாலருந்திய போதுதன் வயிற்றிடை யிராதிப்
பாலை யன்றுட னுமிழ்ந்தில னின்மெய் பதைத்து
வேலை யின்றலை வீழ்ந்தத னாலுமுண் வெண்ணெ
யாலும் வெந்தழ றணிந்துயி ருய்குவ னலனே.

(இ - ள்.) மால் - நாரணன் — அருந்தியபோது - இவ்வுலகத்தையுண்ட பொழுது — தன்வயிற்றிடையிராது - தன்வயிற்றிலிராமல் — இப்பாலை - இந்தப்பாலைநிலத்தை — அன்று - அந்நாளில் — உடனுமிழ்ந்திலனேல் - உடனேயுமிழாவிட்டால் — மெய்பதைத்து - சரீரம்பதைத்து — வேலையின்றலை - சமுத்திரத்தினிடத்தில் — வீழ்ந்ததனாலும் — உண்வெண்ணெயாலும - வெண்ணெயையுண்டதினாலும் — வெந்தழறணிந்து - வெவ்வியதாபம்நீங்கி — உயிருய்குவனலன் - பிழைத்திருக்கமாட்டான். எ - று.

உமிழ்ந்திலனேலுயிருய்குவனலனென்றதனால் ; தகாமையணி. (௫0)

நாயி னாவினீர் சிறுமுயற் குருளைக ணக்கும்
தீய பாலையிற் றனைமறந் தவசத்திற் சென்ற
மாயை மாதுபின் றொடர்ந்துசென் மலர்முக மாதர்
வாயி னீரறீஇக் கண்கணீர் சுரந்தன வந்து.

(இ - ள்.) நாயினாவினீர் - நாயினது நாவிலுள்ளசலத்தை — சிறுமுயற்குருளைகள் - சிறியமுயற்குட்டிகள் — நக்கும் - நக்குகின்ற — தீயபாலையில் - கொடியபாலைநிலத்தில் — தனைமறந்து — அவசத்தில் - பரவசப்பட்டு — சென்ற - நடந்த — மாயைமாதுபின் - மாயையினதுபின்னே — தொடர்ந்துசெல் - தொடர்ந்துபோகின்ற — மலர்முகமாதர் - தாமரைமலர்போன்றமுகத்தையுடையமகளிர் — வாயினீரறீஇ - வாயில் சலமற்று — கண்கணீர் - கண்களில்சலம் — வந்து சுரந்தன. எ - று. (௫௧)

கான னீரெனச் சிறிதிடங் கடிதுசென் றிளைப்பார்
மான னார்சிலர் வாய்க்கடை நாவினால் வருடித்
தானை யோர்கர முகத்தெதிர் ரசைத்துமெய் தளர்வார்
வேனி லாகொடி தென்றுதம் விதியினை வெறுப்பார்.

(இ - ள்.) மானனார்சிலர் - மானையொத்தசிலஸ்த்ரீகள் — கானனீரென - கானலைச்சலமென்றுநினைத்து — சிறிதிடம் - கொஞ்சதூரம் — கடிதுசென்று - விரைந்துசென்று — இளைப்பார் — வாய்க்கடை - கடைவா

யை—நாவினால்—வருடி - தடவி—தானையோர்கரம் - ஒருகையால்முன் தானையை—முகத்தெதிரசைத்து - தங்கள்முகத்துக்கெதிரேவீசி —மெய் - சரீரம்—தளர்வார் —வேனில் - வேனிற்காலம்—ஆ—கொடிதென்று - கொடியதென்று —தம்விதியினை - தமதுவிதியை —வெறுப்பார். எ - று. (ருஉ)

மாத ரிவ்வணந் தொடர்ந்துபின் வரவெழின் மாயை
பாத தாமரை வருந்தின பாலையு ணடந்தவ்
வாதி நாயகன் றனை மறித் துதவிசெய் தறன்மெல்
லோதி யோடுற வாவமென் றுழைகண்முன் னேடும்.

(இ - ள்.) மாதர் - ஸ்த்ரீகள் —இவ்வணம் - இத்தன்மையாக— தொடர்ந்து—பின்வர - பின்னேவர—எழின்மாயை - அழகையுடைய மாயையினது —பாததாமரை - தாமரைமலர்போலுள்ளபாதங்கள் —பாலையுள் - பாலைநிலத்தில்—நடந்து—வருந்தின—(ஆதலால்) அவ்வாதிநாயகன்றனை - அவ்வல்லமதேவனை—மறித்து - தடுத்து—உதவிசெய்து—அறன்மெல்லோதியோடு - கருமணலையொத்த மெல்லியகூந்தலையுடையமாயையோடு—உறவாவமென்று - சிநேகமாவோமென்று—உழைகள் - மான்கள்—முன்னேடும் - முன்னேயோடும். எ - று.

மான்களிவர்களைக்கண்டு வெருண்டோடுங்காட்சி, அல்லமனைமறுத்து மாயைக்குறவாவமென்றேடுதல் போன்றிருத்தலின் தோற்றவணி.(ருங)

கூந்தன் மேல்விரி முகிறரக் கோபம்வாய் காட்ட
வேந்து கொங்கையின் வடமலை யருவியை யேய்ப்பக்
காந்த ளங்கைக டரவருங் காரெனக் கலாபம்
வாய்ந்த மஞ்ஞைகண் மகிழ்வந தனள்பெரு வனத்தில்.

(இ - ள்.) கூந்தல் - தலைமயிரானது—மேல்விரிமுகிறர - மேலே பரந்தமேகத்தினது தோற்றத்தைத்தருதலாலும்—கோபம்வாய்காட்ட - உதடானது இந்திரகோபத்தைக்காட்டலாலும் —ஏந்துகொங்கையின் வடம் - ஏந்தியஸ்தனங்களின் மேலிருக்கும் முத்துமாலைகள்—மலையருவியை—ஏய்ப்ப - ஒத்தலாலும்—காந்தளங்கைகடர - அழகியகைகள் காவின்மலரின்தோற்றத்தைத் தருதலாலும்—வருங்காரென - வருகின்றகார்காலமென்று—கலாபம் வாய்ந்த மஞ்ஞைகள் - தோகையுடையமயில்க

ள்—மகிழ - சந்தோஷிக்க—பெருவனத்தில் - பெரியகாட்டில் —வந்தன ள் - மாயைவந்தாள். எ - று.

கூந்தல் - வாய் - வடம் - கை - முதலியவதிஷ்டானங்களில் முகில்- கோபம் - மலையருவி - காந்தள் முதலியவாரோபங்களைக் கற்பித்தலால் உருவகவணி. (ருச)

சிங்க முங்கரி யும்பணி செயத்தவஞ் செய்யு
வங்கு றுந்தவர் மாயைதன் முலையிடை யாமா
தங்க முஞ்சிறு சிங்கமுங் கண்டுளந தளர்ந்து
பொங்கு றுந்துய ரோடெழுந் திரிந்துபோ யினரால்.

(இ - ள்.) சிங்கமும்—கரியும் - யானையும்—பணிசெய - தங்களுக்கு வேலைசெய்யும்படி—தவஞ்செய்யு - தவஞ்செய்து—அங்குறுந்தவர் - அவ்வனத்தில்வாசஞ்செய்கின்றமுனிவர்—மாயைதன் - மாயையினது— முலையிடையாம் - ஸ்தனமும் இடையுமாகிய—மாதங்கமும் - யானையையு ம்—சிறுசிங்கமும் - சிறுசிங்கத்தையும்—கண்டு - பார்த்து —உளந்தளர்ந் து - மனஞ்சோர்ந்து —பொங்குறுந்துயரோடு - மிகுந்ததுக்கத்துட னே —எழுந்து—இரிந்துபோயினர் - ஓடினார்கள். எ - று.

முலையையு மிடையையும், மாதங்கமாகவுஞ் சிங்கமாகவுங் கற்பித்த லால் உருவகநிரனிறையணி. (ருரு)

கொடிய வாள்வரி வேங்கையைக் கண்டமான் குழாம்போ
னெடிய வார்சடை முனிவரர் கலங்குறு நிலையுந
தொடியு லாவுமென் றோண்மட வார்வரு துயரு
முடியு மாறருள் செயநினைந் தனனருண மூர்த்தி. ருசு

(இ - ள்.) கொடிய - கொடிதாகிய —வாள்வரிவேங்கையை - வாள் போன்றவரிகளையுடையபுலியை—கண்ட - பார்த்த—மான்குழாம்போல்- மான்கூட்டங்கள்போல —நெடியவார்சடை - மிகவுநீண்ட சடைகளையு டைய—முனிவரர் - முனிவரிற்சிறந்தோர்—கலங்குறுநிலையும் - மனங்க லங்குகின்றநிலையும்—தொடியுலாவும் - வளைகளுலாவுகின்ற —மென்றோ ள் - மெல்லியகைகளையுடைய—மடவார்வருதுயரும் - ஸ்திரீகள்வருகின் றதுக்கமும்—முடியுமாறு - நீங்கும்படி—அருள்செயநினைந்தனன் —அரு ண்மூர்த்தி - அருள்வடிவாகிய அல்லமன். எ - று. (ருசு)

மாயை போகவோர் கணத்தினிற் றுரப்பனீர் மனத்தி
னோயு றீரென வொருமுனி போனின்று நுவன்று
தூய மாதவர்க் கருள்செய்து தொல்லைநல் லுருவாய்த்
தேயு நுண்மருங் கணங்கெதிர் தோன்றினன் சிரித்து.

(இ - ள்.) மாயைபோக - மாயைநீங்கும்படி—ஓர்கணத்தினில் - ஒரு க்ஷணத்தில் —துரப்பன் - ஓட்டுவேன் —நீர் - நீங்கள் —மனத்தில்— நோயுறீரென-வருத்தமுறவேண்டாமென்று —ஒருமுனிபோல் —நின்று அல்லமன்நின்று—நுவன்று - சொல்லி —தூயமாதவர்க்கு - பவித்ரமாகி யமுனிவருக்கு —அருள்செய்து - அனுக்கிரகஞ்செய்து —தொல்லைநல்லு ருவாய் - பழையஅல்லமனுய் —தேயுநுண்மருங்கு - தேய்ந்தநுண்ணியஇ டையையுடைய—அணங்கெதிர் - மாயைக்கெதிரே —சிரித்து —தோன் றினன். எ - று. (ருஎ)

பொங்கு மாரழல வெஞ்சுரம் புக்கபூ வையர்க்குக்
கங்கை யாறெதிர ந்தாலெனக் கண்ணெதிர் தோன்று
மெங்க ணாயகன் றிருவடித் தாமரை யிணையைத்
தங்க ளாகுலந் தீர்ந்துமெய் குளிர்தரச் சார்ந்தார்.

(இ - ள்.) பொங்குமாரழல் - மிகுந்தஅக்கினியானதுசொலிக்கின்ற— வெஞ்சுரம - வெவ்வியபாலைநிலத்தில் —புக்கபூவையர்க்கு - சென்றமாத ருக்கு—கங்கையாறெதிர்ந்தாலென - கஙகாநதியெதிர்ப்பட்டதுபோல— கண்ணெதிர்தோன்றும் - கண்ணுக்கெதிரேதோன்றிய—எங்கணாயகன் - எமதுதலைவனுகிய அல்லமதேவனது—திருவடித்தாமரையிணையை - அழ கியஉபயபாதாரவிந்தங்களை—தங்களாகுலந்தீர்ந்து - தங்கள்வருத்தம்நீங் கி—மெய்குளிர்தர - சரீரங்குளிர்ச்சியடையும்படி —சார்ந்தார் - அடைந் தார்கள். எ - று. (ருஅ)

பெருக ளாற்றினி லழுந்தியங் கெழுபவன் பிடித்த
கரநெ கிழ்த்துவிட் டகல்பவன் போலிளங் காளாய்
விரைம லாக்கணை பட்டுள் நையுமெல் லியலை
யருள றத்துறந் தனையென்கொ லென்றன ரவர்தாம்.

(இ - ள்.) இளங்காளாய் - இளமையையுடையஅல்லமனே—பெருகு - மிகுந்த—அளாற்றினில் - சேற்றில் —அழுந்தி - மூழ்கி—அங்கெழுபவன்-

அவ்விடத்திலின்றும்எழுந்திருக்கின்றவன்—பிடித்த - பிடிக்கப்பட்ட—கரநெகிழ்த்துவிட்டு - கையைநீக்கிவிட்டு—அகல்பவன்போல் - நீங்குகின்றவனைப்போல—விரைமலர்க்கணைபட்டு - வாசனைபொருந்தியபுஷ்பபாணம்பட்டு—உளைகையும் - மனம்வருந்துகின்ற—மெல்லியலை-மாயையை—அருளறத்துறந்தனை - அருளின்றிநீங்கினாய் —என்கொலென்றனர் - யாதோவென்றார்—அவர்தாம் - அம்மகளிர். எ - று. (ருக)

பற்றி யாயிடை விடுத்தது நீயிரோ பற்றி
யிற்றை நாளுமை விடுத்திலே னிதனையிவ் வுலக
முற்று மோதுறுந் தம்பிழை மொழிகுந ருளரோ
குற்ற நாடியே திலரிடை கூறுந ரல்லால்.

(இ - ள்.) பற்றி - பிடித்து—ஆயிடைவிடுத்தது - அவ்விடத்தில் விட்டது—நீயிரோ - நீங்களோ—பற்றி - பிடித்து—இற்றைநாள் - இந்நாள்வரையில் (நான்)—உமை - உங்களை—விடுத்திலேன்—இதனை —இவ்வுலகமுற்றும் - இந்தலோகமெல்லாம்—ஓதுறும் - சொல்லும்—ஏதிலரிடை - அயலாரிடத்தில் —குற்றநாடி - குற்றத்தைத்தேடி —கூறுநரல்லால் - சொல்வார்களேயன்றி—தம்பிழை மொழிகுநர் - தங்குற்றத்தைச் சொல்பவர்—உளரோ. எ - று. (கூ0)

என்ன வோதலு மல்லமனேந்திழை மடவார்
மன்னன் மாமகண் மனத்தெழு காமநோய் வளரு
முன்ன நீமுனி யாதிருந் தின்றுதான் முனிந்தா
யென்னை யேறவிட் டேணியை வாங்கினை யென்றார்.

(இ - ள். அல்லமன்—என்னவோதலும் - என்றுசொல்லியவளவில்—ஏந்திழைமடவார் - ஆபரணத்தைத்தாங்கிய மங்கையர்—மன்னன் மாமகண்மனத்து - இராசபுத்திரியாகிய மாயையினதுமனதில்—எழுகாமநோய் - உண்டாகியகாமவியாதி —வளருமுன்னம் - வளருகிறதற்கு முன்னம்—நீமுனியாதிருந்து - நீகோபியாமலிருந்து—இன்றுதான் முனிந்தாய் - இன்றைக்குத்தான் கோபித்தாய் —என்னை - என்னகாரியஞ்செய்தாய்—ஏறவிட்டு - மேலேறும்படிசெய்து—ஏணியைவாங்கினை —என்றார் - என்றுசொன்னார்கள். எ - று. (கூக)

தொல்லை யின்றிரு மேனிபா லுள்ளமுந் தாய்தாய்
நல்லை யென்றுனை நம்பினேன் வஞ்சக நடிப்பு

வல்லை யென்பதை யறிந்தில னெனை வன்சொற்
சொல்லி நின்றனண் மாயையெம் பிரானிது சொல்லும்.

(இ - ள்.) மாயை—தொல்லை - ஆதியில் —நின்திருமேனிபோல் - உன்வடிவம்போல—உள்ளமும் - மனமும்—தூய்தாய் - பரிசுத்தமாகி—நல்லையென்று - நல்லவனாகியிருப்பாயென்று—உனை - உன்னை—நம்பினேன்—வஞ்சகநடிப்புவல்லையென்பதை - வஞ்சகமாகிய அபிநயத்தில் வல்லவனாகியிருப்பாயென்பதை—அறிந்திலனேன் - நான்அறியேன் —என - என்று—வன்சொல் - குரூரமான சொல்லை—சொல்லிநின்றனள் —எம்பிரான் - அல்லமதேவன்—இதுசொல்லும் - இதைச்சொல்வான். எ-று.

வஞ்ச நாடக நடிப்பது மாயைதன் செயலோ
தஞ்ச வல்லமன் றன்செய லோவெனத் தடங்கட்
பஞ்சின் மெல்லடி யாய்கட வுளரையும் படிறி
னெஞ்ச மாதவர் தமையுங்கேட் டறிதிநீ யென்றான்.

(இ - ள்.) தடங்கண் - விசாலமாகியகண்களையும் —பஞ்சின்மெல்லடியாய் - பஞ்சுபோல் மெல்லிய பாதங்களையுமுடையமாயையே —வஞ்சநாடகநடிப்பது - வஞ்சகமாகிய நாடகத்தையபிநயிப்பது —மாயைதன்செயலோ - மாயையினது செய்கையோ —தஞ்சவல்லமன்றன்செயலோ - ஆதாரமாகிய அல்லமதேவனது செய்கையோ—என - என்று—கடவுளரையும் - தேவரையும்—படிறினெஞ்சமாதவர்தமையும - பொய்யில்லாத நெஞ்சத்தையுடைய முனிவரையும்—நீ—கேட்டறிதி - கேட்டறி—என்றான் - என்றுசொன்னான். எ - று. (௬௩)

கள்ளன் மங்கையைக் களவுசெய் பொருளினைக் கண்டு
கொள்ளு நன்குறி புகல்விப்ப தொக்குமென் கூத்தைத்
தள்ள ருஞ்சுரர் முனிவராற் சொல்விக்குந் தகைமை
வள்ள லென்றுபுன் னகைகொளீஇ யுரைக்குமம் மாயை.

(இ - ள்.) வள்ளல் - அல்லமன்—என்கூத்தை - எனதுநடிப்பை—தள்ளருஞ்சுரர்முனிவரால் - நீக்கக்கூடாததேவராலும் முனிவராலும்—சொல்விக்குந்தகைமை - சொல்விக்குந்தகுதி—கள்ளன்—மங்கையை - தன்மனைவியை—களவுசெய்பொருளினைக்கண்டு கொள்ளுநன்குறி - திருடப்பட்ட பொருளைக்கண்டறியும்படியாகிய நல்லகுறிகளை —புகல்விப்ப

தொக்கும் - சொல்விப்பதற் கொப்பாகும்—என்று—அம்மாயை—புன்னகைகொளீஇ - புன்சிரிப்புக்கொண்டு—உரைக்கும் - சொல்வாள். எ-று.
கள்ளனது களவை, அவன்மனைவியால் வெளிப்படுத்தத் துணிதல்போல அல்லமனது நடிப்பை யவனதடியார்களாற் சொல்விக்குந் தகைமையென்றது, தற்குறிப்பணி. (சுச)

நெஞ்சம் யாதினு லெனையகன் றிடவரி நினைக்குங்
கஞ்சன் மாயையை யிலனெனக் கழறவா யுண்டோ
விஞ்சும் வானிறை யென்னையெம் மெய்யினுல் விடுவான்
றஞ்ச மாயையென் றிகழ்தரத் தக்கசொற் கற்றோய்.

(இ - ள்.) மாயை—தஞ்சமென்று - எளியவளென்று—இகழ்தரத்தக்க - இகழத்தகுந்த —சொற்கற்றோய்-சொல்லைக்கற்றஅல்லமதேவனே—அரி - விஷ்ணு—நெஞ்சமியாதினுல் - எந்தமனதினுல்—எனை - என்னை—அகன்றிட - நீங்க—நினைக்கும் - நினைப்பான் —கஞ்சன் - பிரமதேவன்—மாயையிலனென - தான்மாயையில்லாதவனென்று—கழற - சொல்ல—வாயுண்டோ—விஞ்சும்வானிறை - சிறந்தசுவர்க்கத்திற்குத்தலைவனாகிய இந்திரன் —என்னைஎம்மெய்யினுல்விடுவான் - எந்தச்சரீரத்தினுல் விடுவான். எ - று. விஷ்ணுவுக்குமார்பில் இலக்குமியிருத்தலானும் - பிரமனுக்கு முகத்தில் சரஸ்வதியிருத்தலானும் - இந்திரனுக்குமெய்யில் பெண்குறிகளிருத்தலானும் - அவர்கள் மாயையைக்கடந்தவரல்லரென்பது கருத்து. (சுரு)

என்னை யஞ்சிமா வழங்குகாட் டிருக்குமா தவரென்
றன்னை வென்றிட வல்லரோ வல்லரென் றன்னைப்
பின்னை வென்றிட வல்லரியார் பேசுதி யென்று
மின்னை வென்றநுண் ணிடைசொல வல்லமன் விளம்பும்.

(இ - ள்.) என்னையஞ்சி - எனக்குஅஞ்சி —மாவழங்குகாட்டிருக்குமாதவர் - மிருகங்கள்சஞ்சரிக்குங்காட்டிலிருக்குமுனிவர்கள்—என்றன்னை வென்றிடவல்லரோ - என்னைவெற்றிகொள்ளவல்லரோ—அல்ல—என்றன்னை - என்னை —பின்னைவென்றிடவல்லர் - பின்புவெல்லத்தக்கவர்கள்—யார் —பேசுதியென்று - சொல்லென்று —மின்னைவென்ற நுண்ணிடைசொல - மின்னலைவென்றநுட்பமாகிய இடையையுடைய மாயைசொல்ல—அல்லமன்—விளம்பும் - சொல்லுவான். எ - று.
நுண்ணிடை ; அன்மொழித்தொகை. (சுசு)

என்ற ணுணையைக் கடப்பவ ரிலையிலை யென்று
வென்றி கூறினை யேலவர் நிற்கவேல் விழியாய்
நின்ற வாருயிர் முயற்சியா னிகழ்த்திய மாற்ற
மன்றி வாழ்மறை யாகமத் தறிதியென் றறைந்தான்.

(இ - ள்) என்றனுணையை - என்னுடையஆக்ஞையை—கடப்பவர்—இலையிலையென்று—வென்றிகூறினையேல் - வெற்றியைச்சொல்லுவாயாகில்—அவர்நிற்க - அவர்களிருக்கட்டும்—வேல்விழியாய் - வேலையொத்தகண்களையுடையமாயையே —நின்றவாருயிர்முயற்சியால் - நிலைபெற்றுநிறைந்த உயிரின்செய்கையினாலே —நிகழ்த்தியமாற்றமன்றி - சொல்லியசொல்லில்லாமல் —வாழ்மறையாகமத்து - நிலைபெற்றவேதாகமங்களிடத்து—அறிதியென்று - அறியென்று —அறைந்தான் - சொன்னான். எ - று. (௬௭)

நாலு வாக்குநீ பார்ப்பினு நானவற் றினுக்கு
மூல காரண மாகுவன் மொழிந்தவிம் மாற்ற
நூலெ லாமுரைத் திடுமெனச் செருக்கொடு நுவன்றாள்
மாலெ லாம்பிறப் பதற்கிட மாகிய மாயை.

(இ - ள்.) மாலெலாம் - மயக்கங்களெல்லாம்—பிறப்பதற்கிடமாகிய மாயை—நாலுவாக்கு - பரை, பைசந்தி, மத்திமை, வைகரி, என்கிறவாக்குநான்கினையும் —நீபார்ப்பினும் - நீபார்த்தாலும் —நான் —அவற்றினுக்கும் - அவைகளுக்கும்—மூலகாரணமாகுவன் —மொழிந்தவிம்மாற்றம் - நான்சொல்லியவிச்சொல்—நூலெலாமுரைத்திடுமென - சாஸ்திரங்களெல்லாஞ்சொல்லுமென்று—செருக்கொடு - செருவத்துடனே—நுவன்றாள் - சொன்னாள். எ - று.

சத்தியே முக்கியமெனப் பிரிதிவாதிப்பதால் "நாலுவாக்கு நீ பார்ப்பினு நானவற்றினுக்கு மூலகாரணமாகுவனென்றார்." மாலெல்லாம்பிறப்பதற்கிடமாகிய மாயையென்றது; பேதபுத்தியா லனந்த விபரீதந் தோற்றலைக் காட்டற்கென்க. (௬௮)

ஆட்டு கிற்பனிவ் வகிலமு மென்றனை நின்னை
யாட்டு கிற்பவ ராரொன வறிந்திலை பேதாய்

கேட்டு நின்னையோர் பொருளென மூடரோ கிளப்பார்
நாட்டு மென்னைநன் கறிந்துயர் ஞானிக ணவில்வார்.

(இ - ள்.) பேதாய் - அறிவில்லாதவளே—இவ்வுலகமும் - இவ்வுலகங்களையெல்லாம்—ஆட்டுகிற்பன் - ஆடச்செய்வேன்—என்றனை - என்று சொன்னாய்—நின்னையாட்டுகிற்பவர் - உன்னையாடச்செய்கிறவர்—யாரென - ஆரென்று—அறிந்திலை - அறியாய் —மூடரோ—நின்னை - உன் தன்மையை—கேட்டு—ஓர்பொருளென - ஒருவஸ்துவென்று —கிளப்பார் - சொல்லுவார்—நாட்டுமென்னை - நிலை நிறுத்துகின்றவென்னை— நன்கறிந்துயர் - நன்றாக வறிந்துயர்ந்த —ஞானிகள் —நவில்வார் - சொல்வார்கள். எ - று. (கூகூ)

ஆரை யாரிருந் தாட்டுவ ரோவதை யறியே
மார வேள்செயு நோய்மறித் ததன்பினென் வாதம
பாரொ ணவியம் பினள்பசிக் கனமிடிற் பசிநோய்
தீரு மாமருந் துதவுவ னென்பவர் சீர்போல்.

(இ - ள்.) ஆரையாரிருந்தாட்டுவரோ —அதையறியேம் —மாரவேள் செயுநோய் - மன்மதன்செய்யுந்துன்பத்தை—மறித்து - கெடுத்து—அதன்பின் —என்வாதம்பாரொண - எனதுதர்க்கத்தைப்பாரென்று —பசிக்கு—அனமிடில் - அன்னமிட்டால் —பசிநோய்—தீரும் - தீரும்படி— மாமருந்துதவுவன் - பெரியமருந்துகொடுப்பேன் —என்பவர்சீர்போல் - என்றுசொல்லுமவர்தன்மைபோல —இயம்பினள் - மாயைசொன்னாள். எ - று.

மாரவேள்செயு நோய்மறித்தலாவது ; என்னைப் புணரவேண்டியவாறு புணரலை. என்பசிக்கன்னமிடில் உன்பசிக்கு மருந்துதருவேனென ல்போ .லிவர்கூறும் வசனமென்க. (எ0)

காமி யாகிநீ யருச்சனை கடைபிடித் தமையா
னாம வேனெடுங் கண்ணினாய் காமிபோ னடித்தேன்
றீமை நெஞ்சினாற் சூணினைந் தனைநினைத் தீண்டேன்
போமி னாருட னென்றனன் வன்சொலாற் புனிதன்.

(இ - ள்.) நாமவேனெடுங்கண்ணினாய் - அச்சஞ்செய்கின்ற வேல்போன்றநெடியகண்களையுடைய மாயையே—நீ —காமியாகி - காமியத்தை அபேக்ஷித்தவளாகி —அருச்சனைகடைப்பிடித்தமையால் - பூசனையைஉ

றுதியாகக்கொண்டமையால்—காமிபோல்—நடித்தேன் - அபிநயித்தே ன்—தீமைநெஞ்சினுல் - பொல்லாங்கையுடையமனதினுல்—சூள் - சபத த்தை—நினைந்தனை - நினைத்தாய்—(ஆதலால்)—நினைத்தீண்டேன் - உ ன்னைஸ்பரிசிக்கமாட்டேன்—மினுருடன் - ஸ்திரீகளுடனே —போ—எ ன்றனன் - என்று சொன்னுன்—வன்சொலால் - கடினமாகிய சொல் லாலே—புனிதன் - பரிசுத்தமாகிய அல்லமன். எ - று.

காமியத்தவத்திற்குக் காமியார்த்தமும், நிட்காமியத்தவத்திற்கு நிட் காமியார்த்தமுமெனலை யல்லமன் குறிப்பித்தனனென்க. (எக)

வேறு.

மண்ணுலகி லிழிகுலமத் தளதொழிலோன் றனைவிரும் பி வறிது மீண்டா, ளண்ணன்மக ளெனும்பழியை மாளாம னி றுவிப்போ யங்கைகொட்டி, விண்ணுலக நகைசெய்யச் சூண்மு டியா தெவ்வாறு விமலன் பங்கிற், பெண்ணரசி தன்முகத்தில் விழிப்பலென மாயையுளம பீழை யுற்றுள்.

(இ - ள்.) மண்ணுலகில் - பூலோகத்தில்—அண்ணன்மகள் - ராசகு மாரி—இழிகுலமத்தளத்தொழிலோன்றனை - ஈனமாகிய குடியிற்பிறந்த மத்தளங்கொட்டுகின்றவனை—விரும்பி—வறிது - பயனில்லாமல் —மீண் டாள் - திரும்பினுள்—எனும்பழியை - என்னும் அபவாதத்தை—மாளாம ல்—நிறுவி - நிலைநிறுத்தி—போய் - கைலாசத்திற்குப்போய்—விண்ணுல கம் - தேவர்கள்—அங்கைகொட்டிநகைசெய்ய - கைகொட்டிச்சிரிக்க— சூண்முடியாது - பிரதிக்ஞையை நிறைவேற்றுமல்—விமலன் பங்கிற் பெ ண்ணரசிதன்முகத்தில் - பரமசிவனுடைய பாதிதேகத்திலிருக்கின்ற பா ர்வதியினது முகத்தில் —எவ்வாறு —விழிப்பலென - விழிப்பேனென் று—மாயை—உளம் பீழையுற்றுள் - மனதில் துன்பத்தையடைந்தாள். எ - று.

அங்கையெனல்; விகாரம். (எ௨)

அன்பினு லன்பர்பெறற் கெளியனு மெனைச்சூளொன் ற றைந்து வந்து; வன்பினுற் பெறவேண்டி நின்றழிந்தா யிதுதரு மோ மாயை மாதே, முன்பினுக் கடுவிதைத்துக் கரும்பாக வே ண்டிமிக முயன்று நெஞ்சிற், றுன்பராய்த் திரியுமவர் போலெ ன்றுன் மாயைதனைத் துரக்க வல்லான்.

(இ - ள்.) மாயைதனைத் துரக்கவல்லான் - மாயையைத்துரத்தவல்ல வனாகிய அல்லமதேவன்—முன்பு—இனா - இனிமையாகாத—கடு - கசப் பாகியவஸ்துவை—விதைத்து—கரும்பாகவேண்டி - (பின்பு) கரும்பாக விளையவிரும்பி—மிகமுயன்று - மிகவும் முயர்ச்சிசெய்து—நெஞ்சில் - ம னதில்—துன்பராய் - துன்பத்தையுடையவர்களாய்—திரியுமவர்போல்- சஞ்சரிக்குமவர்போல—அன்பர் - பக்தர்—அன்பினால் - பக்தியினால்— பெறற்கெளியனாமெனை - அடைதற்கெளியவனாகிய என்னை—சூளொன்ற றைந்து - ஒருபிரதிக்ஞையைச்சொல்லி—வந்து —வன்பினாற்பெறவேண் டிநின்று - வலியதன்மையினாற் பெறுதற்குவிரும்பிநின்று —அழிந்தாய் - மனவேதனையடைந்தாய்—இதுதகுமோ—மாயைமாதே—என்றான் - எ என்றுசொன்னான். எ - று.

முன்னர்நாக்கடுவிதைத்துப் பின்னர் தீங்கரும்பாகவேண்டிமுயல்வார் போன்று முன்னர்சூளொன்றறைந்து பின்ன ரன்பாலென்னைப் பெற வேண்டல் பிறிதியைபணி. (எ௩)

கரைகுறுக வந்தகலங் கவிழ்ந்தநாய் கன்போலக் கலங்கிநின் ற, வரைபுரைமென் முலைமாயை தனைக்கண்டு விமலையுள மறு கி மாழ்கி, யிரதமுறு களிம்புமலி செம்பினியல் னைக்குரு வியல் பு போல, வருளபுரிதி யையவிவள் குணநோக்கா தென்றுதொ ழு தனுசிச் சொன்னாள்.

(இ - ள்.) கரைகுறுகவந்தகலம் - கரையைக் கிட்டும்படிவந்த கப்பலா னது—கவிழ்ந்த - கவிழப்பெற்ற—நாய்கன்போல - வாணிபன்போல— கலங்கிநின்ற—வரைபுரைமென்முலை மாயைதனை - மலைபோன்றும் மிருது வாகியு மிருக்கிறஸ்தனங்களையுடைய மாயையை—விமலை—கண்டு - பார் த்து—உளமறுகி - மனஞ்சுழன்று—மாழ்கி - மயங்கி—ஐய - அல்லமதேவ னே—இரதம் - ரசகுளிகை—உறு - தன்னைச்சேர்ந்த—களிம்புமலி - க ளிம்புநிறைந்த —செம்பினியல் - செம்பினதுகுணத்தை—நோக்குருவிய ல்புபோல - பாராததன்மைபோல —இவள்குணநோக்காது - இவள்கு ணத்தைப் பாராமல் —அருள்புரிதியென்று - கிருபைசெய்வாயென்று— தொழுது - பணிந்து—அஞ்சி - பயந்து—சொன்னாள். எ - று. (எச)

இலங்கிலைவேன் மருட்டுமதர் விழிவிமலாய் வறியவோ டி ரதந தன்று, னலங்கிளாபொன் னுருவாகி லென்னாலிம் மாயை

யின்ப நணுகு மென்று, புலங்களறி வரியபர மானந்த சிவயோ கி புகல மாயை, கலங்கியளி பசும்புண்ணிற் செவ்வேல்பட் டென வழுங்கிக் கழறு கின்றாள்.

(இ - ள்.) இலங்கிலைவேன்மருட்டும் - விளங்கியஇலையையொத்தவே லையயங்கச்செய்கின்ற—மதர்விழிவிமலாய் - மதர்த்தகண்களையுடையவிம லையே —வறியவோடு - பயனில்லாத ஓடானது —இரதந்தன்னால் - ரச குளிகையினால்—நலங்கிளர்பொன்னுநவாகில் - நலம்விளங்கியபொன்னுரு வமானால்—ஒன்னால்—இம்மாயை - இந்தமாயை—இன்பநணுகுமென்று- சுகத்தைப்பெறுவளென்று—புலங்களறிவரிய - இந்திரியங்களாலறியக்கூ டாத —பரமானந்தசிவயோகி - பேரானந்தஸ்வரூபியாகிய அல்லமதேவ ன்—புகல -'சொல்ல—மாயை —கலங்கி —அளிபசும்புண்ணில் - அளிந்த பச்சைப்புண்ணில்—செவ்வேல்பட்டென - சிவந்தவேல்பட்டதுபோல— அழுங்கி - வருந்தி —கழறுகின்றாள் - சொல்லுகின்றாள். எ - று. (எ௫)

நனவொருபுன் கனவாக மயங்கவெனைப் புணர்தலினா னாளு ம் வென்றி, யெனதெனதென் றுளஞ்செருக்கி மடமாயை கூறுத லு மெங்கள கோமான், கனவினுகா வுறுமுணவு குறையுமோ பசியதனாற் களைவ துணடோ, நினைவில்வரு கனவொன்று கண் டிறுமாந் தனைபேதாய் நீதா னென்றான்.

(இ - ள்.) நனவு - ஜாக்கிரமே—ஒருபுன்கனவாக - அற்பமாகியவொ ருகனவாக—மயங்க - திரிய —எனைப்புணர்தலினால் - என்னைப்புணர்ந்த தினாலே—நாளும் - எப்போதும்—வென்றி - ஜயமானது—எனதெனதெ ன்று - என்னுடையதேயென்று —உளஞ்செருக்கி - மனதிற்செருக்குற் று—மடமாயை - பேதமையுடையமாயை—கூறுதலும் - சொல்லியவ ளவில்—எங்கோமான் - எங்கள்தலைவனாகியஅல்லமதேவன் —கனவினு கர்வுறுமுணவு - கனவிலுண்ணப்பட்டவுணவு—குறையுமோ —பசியதனா ற்களைவதுண்டோ - அதனாலேபசியைநீக்குவதுணடா —பேதாய் - பேத மையுடையவளே —நினைவில்வருகனவொன்று - நினைவில்வந்த ஒருகனா வை—கண்டு—நீதான்-நீயே—இறுமாந்தனை-செருக்குற்றாய்—என்றான். எ - று.

சிற்பிரிதிபலனமே நனவாதலானும், அந்நனவே செகமாகத்தோற்ற லானு மத்தோற்றத்திற் கர்த்தத்துவ போக்தத்துவங்கொண்டு தழுவவு வாவுதலினானு மிதனை மித்தையென்றுகாட்ட " நனவொருபுன்கனவா

கமயங்க வெனவும், கனவினுகர்வுறுமுணவு குறையுமோ பசியதனாற் களைவதுண்டோவெனவுங் கூறியவாறுகாண்க. நினைவில்வருகனவாவது ; விழிப்பிற்சொர்ப்பனங்காண்டலெனலே. எனவே, காட்சிப்பொருள், கருத்துப்பொருளனைத்துந், தத்தமக்கெனச் சுயம்பாகவு மோர்முதலாகவும் புகாமல், மெய்போற்காண்டலையும், திணைபாலிடமாகவேற்றலையு மறுத்தற் கிங்ஙனங் கூறியதாகப்பெறும். அனைத்துங்கனவாக்காண்டல் ; சொப்பிரகாசத்தி லென்ப தருத்தாபத்தி. (எசு)

எவ்வண்ண முரைவன்மை கொண்டுநீ தள்ளினுநா னின்று போகேன், கைவண்ண மலர்ப்பகழி மதனனையாய் நினைத்தழுவிக் கட்டிக் கொண்டு, செவ்வண்ண னமர்கைலைக் கேகியென்சூண்முடிப்பலெனச் செருக்கிச் சொன்னாள், மைவண்ண மலர்க்குழலாள் வான்றிரட்டி விழுங்குவலென் மாற்றம் போல.

(இ - ள்.) கைவண்ணமலர்ப்பகழிமதனனையாய் - அழகியபுஷ்பபாணத்தைக் கையிற்கொண்டமன் மதன்போன்ற அல்லமதேவனே —நீ—எவ்வண்ணம் - எவ்வகையாக —உரைவன்மைகொண்டு - சொல்வன்மைகொண்டு—தள்ளினும் - தள்ளினாலும்—நானின்றுபோகேன் - இப்பொழுது நான்போகேன்—நினைத்தழுவி - உன்னைக்கலந்து —கட்டிக்கொண்டு— செவ்வண்ணனமர்கைலைக்கேகி - செய்யநிறத்தையுடைய பரமசிவனமர்ந்த கைலாசத்திற்குப்போய் —என்சூண்முடிப்பலென-என்பிரதிக்ஞையை நிறைவேற்றுவேனென்று—மைவண்ணமலர்க்குழலாள் - கருநிறமுடைய மலர்சூட்டியகூந்தலையுடையமாயை—வான்றிரட்டிவிழுங்குவலென்மாற்றம்போல - ஆகாயத்தைத்திரட்டி விழுங்குவேனென்கிறசொல்லைப்போல—செருக்கி - செருக்கையடைந்து—சொன்னாள். எ - று. (எஎ)

முடிக்குமலர்க் குழன்மடவாள் சூண்முடிப்ப லெனுமொழிக்கு முறுவல் செய்து, பிடிக்கவலை யாகிலெனைப் பிடிநடையாய் பிடியென்று பிரான்ம றைந்தான், மடக்கொடிதன் விழியினாற் காண்பதும்போய் மதிமயங்கி வறிது நின்றாள், சுடர்த்தொடி மென் றேண்மடவா ரின்றிழந்தோ மிவளையெனத் துயரு ழந்தார்.

(இ - ள்.) முடிக்குமலர்க்குழன்மடவாள் - மலரைமுடித்தகூந்தலையுடையமாயை —சூண்முடிப்பலெனுமொழிக்கு - சபதத்தை நிறைவேற்றுவேனென்றுசொன்னசொல்லுக்கு—முறுவல்செய்து - நகைத்து —பிடி

நடையாய்-பெண்யானையையொத்தநடையையுடையமாயையே—எனை. என்னை—பிடிக்க—வலையாகில்—ஸாமர்த்தியமுடையவளானல்—பிடிடென்று—பிரான் - அல்லமதேவன்—மறைந்தான்—மடக்கொடி - மடமையையுடைய கொடியையொத்தமாயை —தன்விழியினல் - தனதுகண்களால்—காண்பதும்போய்—மதிமயங்கி - புத்திகலங்கி—வறிதுநின்றாள்· பயனில்லாமல்நின்றாள்—சுடர்த்தொடிமென்றேண்மடவார் - பிரகாசிக்கின்ற வளைகள்பொருந்திய மெல்லிய கைகளையுடைய மாதர்கள் —இன்று - இப்பொழுது—இவளை - இம்மாயையை —இழந்தோம் —என-என்று—துயருழந்தார் - துக்கித்தார். எ - று.

மடக்கொடி ; அன்மொழித்தொகை. (எஅ)

வெண்டிங்க ணிலவுவா யிடைப்புகினுஞ் சகோரமெனு மென்பு ளன்றி, யுண்டிங்கு வாழுமுயி ருளதோநம் மல்லமனு மொருவன் றனும, பண்டங்கு மொழிமாயை கைப்படினு மவள் பிடிக்கப் படுவ ளோதான், றொண்டன்பின் வழிநின்று மனமாச தீர்ந்தபெருந் தூயோர்க் கல்லால்.

(இ - ள்.) வெண்டிங்கணிலவு - வெண்மையாகியசந்திரனுடையநிலாவானது—வாயிடைப்புகினும் - வாயில்நுழைந்தாலும் —சகோரமெனுமென்புளன்றி - சகோரமென்கிறமெல்லியபட்சியல்லாமல் —உண்டு - அந்நிலவைப்புசித்து—வாழுமுயிர் - வாழ்கின்ற உயிர்கள்—இங்குளதோ - இவ்வுலகத்திலுண்டோ —(அதுபோல) நம்மல்லமனுமொருவன்றனும் - ஒப்பற்றநமது அல்லமதேவனும் —பண்டங்குமொழிமாயை கைப்படினும் - இசைபொருந்திய சொல்லையுடைய மாயையின்கையிலகப்பட்டாலும்—தொண்டன்பின்வழிநின்று - அடிமைத்திறத்ததாகிய பக்தியின்வழியில்நின்று —மனமாசுதீர்ந்த - மனதின்குற்றங்களைந்த —பெருந்தூயோர்க்கல்லால் - பெரியபரிசுத்தாத்துமாக்களுக்கன்றி—அவள்பிடிக்கப்படுவளோ - அவளால்பிடிக்கப்படுவனோ. எ - று.

அன்பர்க்கன்றிமாயையாற் பிடிக்கப்படுவனோவெனலால், இஃதருமைநவிற்சியணி. (எக)

மாயைதனை வாதித்துத் தள்ளுபுதன் னிலைநின்று மாயாவாதி, யாயினனல் வீரசைவ சித்தாந்த குலதீப மாயி னனை

ன், றேயுமன நிறுவியிறப் பெதிர்வுநிகழ் வெனுங்கால முணரு மாற்றற், றூயமுனி வரரெல்லா மல்லமனைத் தொழுதுதவந் தொடங்கி வாழ்ந்தார்.

(இ - ள்.) நல்வீரசைவசித்தாந்தகுலதீபமாயினேன் - நன்மைபொருந்தியவீரசைவசித்தாந்தபரம்பரைக்குத்தீபமாகியஅல்லமதேவன்—மாயைதனை - மாயையை —வாதித்து - வாதஞ்செய்து —தள்ளுபு - தள்ளி —தன்னிலைநின்று - தனதுஸ்வபாவஸ்திதியிலிருந்து —மாயாவாதியாயினன்—என்று—ஒயுமனநிறுவி - தளர்ந்தசித்தத்தைநிறுத்தி—இறப்பெதிர்வுநிகழ்வெனுங்காலம் - முக்காலத்தையும் —உணருமாற்றல் - அறியுஞ்சக்தியையுடைய—தூய - பரிசுத்தமாகிய —முனிவரரெல்லாம் —அல்லமனைத்தொழுது —தவந்தொடங்கி - தவத்தையாரம்பித்து —வாழ்ந்தார். எ - று.

யாவனொருவன் சித்தப்பிராந்தி செகத்பிராந்திவயத்த தாகாதகனேன் கற்பனைகட்கிணங்குவதெங்ஙன மின்றேயிருக்க, அவனையினைய மதத்தனெனல்பொருந்தாது. தந்தமதத்துட்பொருந்தவவாவிவலிதிற்கோடல் ; தந்தமதத்திற்குச் சிறப்புறுவான்வேண்டியென்க. (அ௦)

மாயைகோலாகலகதி முற்றிற்று.

ஆ கதி-எ - இ - விருத்தம் - ௫௩௬.



எட்டாவது

# வசவண்ணர்வந்தகதி.

வேறு.

அசைவி லல்லமற் காயுமை நற்கலை
வசவ தேவன் வலிய கணங்கடாங்
கசியு மன்பிற் கயிலையி னின்றுதென்
றிசையில் வந்த திறமுரை செய்குவாம.

(இ - ள்.) அசைவில் - நிலைதிரியாத—அல்லமற்காய் - பிரபுதேவனைக் காணும்பொருட்டாய் —உமைநற்கலை - உமாதேவியினுடையசத்துவகலையும்—வசவதேவன் - வசவேசனும்—வலியகணங்கள் - வல்லமையுடைய சிவகணங்களும்—கசியுமன்பின் - ஊறுகின்றஅன்பினோடும்—கயிலையினின்று—தென்றிசையில்வந்த - தெற்குத்திசையில்வந்தவதரித்த—திறம் - வகையை—உரைசெய்குவாம் - சொல்லுவோம். எ - று. (க)

தீங்கு காணுஞ் சிறுவிலை நாட்கடன்
வாங்கு மோர்பொருள் போக்கும் வறியர்போ
னீங்க ஞான நெடுந்தகை மாயைநின்
றேங்கு மாவி யியக்கமு மின்றியே.

(இ - ள்.) தீங்குகாணும - (உயிர்கள் பசியால்) தீமையடையத்தக்க—சிறுவிலைநாள் - குறைந்த விலையையுடைய க்ஷாமகாலத்தில்—கடன்வாங்குமோர்பொருள் - கடன்வாங்கிய ஒருபொருளை —போக்கும்வறியர்போல் - இழக்குந்தரித்திரர்போல—ஞானநெடுந்தகை - ஞானமாகியநெடிய தகைமையையுடைய அல்லமதேவன் —நீங்க - மறைந்துபோய்விட—மாயை —ஆவியியக்கமுமின்றி - சுவாசமசைதலுமின்றி —நின்றேங்கும் - நின்றுவியசனப்படாநின்றனள். எ - று.

நெடுந்தகையானை ; நெடுந்தகையெனலன்மொழித்தொகை. இயக்கமுமென்றதனல் - ஆவியுமெனவிருக்கவேண்டும். இல்லாமையாலெஞ்

சியதென்க. எனவே, யாதோர்யோசனையும் போக்குவரத்தாகியசல னமு மின்றெனப்பெற்றும். (உ)

மத்த ளங்கொடு வந்தவன் றன்னொடு
பொய்த்த நுண்ணிடை போயின ளென்னவே
சித்த நாணுந் துயரமுந் தின்றிடப்
பித்தர் போற்பின் றொடர்ந்தனர் பெற்றவர்.

(இ-ள்.) மத்தளங்கொடுவந்தவன்றன்னொடு - நாடோறுமத்தளமடித்துக்கொண்டுவந்த அல்லமனென்பவனோடு —பொய்த்தநுண்ணிடை - பொய்யென்று சொல்லப்பட்டநுட்பமாகிய இடையையுடையமாயை— போயினள்—என்ன - என்றயலார்சொல்ல —பெற்றவர் - அவளைப்பெற்றதாய்தந்தையர் (கேட்டு)—சித்தம் - மனதை— நாணும் - வெட்கமும்—துயரமும் - வியசனமும்—தின்றிட - தின்ன —பித்தர்போல் - வெறியர்போல —பின்றொடர்ந்தனர் - (அம்மாயை) பின்றொடர்ந்துசென்றூர். எ - று.

நுண்ணிடை ; அன்மொழித்தொகை. வதைத்தலைத்தின்றிடவென ல் ; இலக்கணை. (௩)

தக்க தந்தைதாய் சாயப் பழிசெயு
மக்க ளின்றி மலடர்தா மாதலு
மிக்க வன்பிணி மேவலு நல்லவென்
றுக்க நெஞ்சுட னோடினன் மன்னவன்.

(இ-ள்.) தக்க - தகுந்த—தந்தைதாய் - பிதாவும் அன்னையும்—சாய - தலைசாய்க்க —பழிசெயும் - பழியைவிளைக்கின்ற —மக்களின்றி - மக்களில்லாமல் —மலடர்தாமாதலும் - தாங்கள்மலடராயிருத்தலும் —மிக்கவன்பிணி - மிகுந்த வலியநோயை—மேவலும் - அடைதலும்—நல்லவென்று - நல்லனவென்று —உக்கநெஞ்சுடன் - அழிந்தமனத்துடன்—ஓடினன்மன்னவன் - அரசனோடினன். எ - று. செய்யுள்விகாரத்தாற் சாய்க்கவென்பது சாயவென்றுயிற்று. (௪)

காய்ப சிக்குக் கவன்று தசைதின
வாய்ப தைக்கு மறவர் வலையிடைப்
போய்வி ழக்குழக் கன்று புகுந்தவண்
டாய்ப தைப்பது தன்னெதிர் காணுமோ.

(இ - ள்.) காய் - சுடுகின்ற—பசிக்கு—கவன்று - கவலையுற்று—தசைதின - மாமிசந்தின்ன—வாய்பதைக்குமறவர் - வாய்பதைக்கின்றவேடருடைய—வலையிடை - வலையினுள்—குழக்கன்று - இளமையாகியமான்கன்று—போய்விழ - போய்விழுந்தகப்பட்டுக்கொள்ள—தாய் - அதனது தாயாகியபிணைமான்—புகுந்தவண் - அவ்விடத்திற்சென்று—பதைப்பது - துடிப்பதை—தன்னெதிர் - (என்மகள்) தன்னெதிரில் —காணுமோ - காண்பாளோ. எ - று. காண்பாளாகில் என்னைநினைந்து திரும்புவளென்பது கருத்து. (ரு)

கண்டு வார்சிலைக் கானவர் பார்ப்பினைக்
கொண்டு போகக் குடம்பைகண் டேங்கியே
துண்ட மாரிரை சோரப் பறவைகண்
மண்டு நோயின் மறுகுதல் காணுமோ.

(இ - ள்.) வார்சிலைக்கானவர் - நீண்டவில்லையுடையவேடர்—பார்ப்பினை - குஞ்சுகளை—கண்டு - (தேடிக்) கண்டு—கொண்டுபோக - எடுத்துக்கொண்டு போய்விட—பறவைகள் - பட்சிகள் —குடம்பைகண்டு - கூண்டில் (வந்து) பார்த்து—ஏங்கி - ஏக்கமுற்று—துண்டம் - மூக்கினலகில்—ஆர் - பொருந்திய—இரை - உணவு—சோர - சோர்ந்துவிழ—மண்டுநோயின் - மிகுந்தவியாகுலத்தினாலே—மறுகுதல் - சுழலுதலை—காணுமோ - (என்மகள்) காண்பளோ. எ - று. இதுவுமது. (சு)

அரின்மி தித்திட் டதர்படப் பூம்பணை
மரமு றித்து மழைமதக் கைம்முக
வுரல டிப்பிறை யொணமருப் பஞ்செவிக்
கரிந டப்பக் கலங்கி யிரியுமோ.

(இ - ள்.) மழைமதம் - மழைபோல் சொரிகின்ற மதத்தையும்—கைமுகம் - துதிக்கையையுடையமுகத்தையும்—உரலடி - உரலையொத்தகால்களையும்—பிறையொண்மருப்பு - பிறையையொத்த வொள்ளியதந்தங்களையும்—அஞ்செவி - அழகியகாதுகளையுமுடைய —கரி - மதயானைகள்—அரில் - தூறுகளை—அதர்பட - வழியாக—மிதித்திட்டு —பூம்பணை - பூக்களாற்சிறந்தகிளைகளையுடைய—மரமுறித்து - மரங்களைமுறித்து —நடப்ப - நடக்கக்கண்டு—கலங்கியிரியுமோ - (என்மகள்) அஞ்சியோடுவளோ எ - று. (எ)

பரற்கண் மென்பதம வைத்துப் பதைக்குமோ
சுரத்து மேனி துவண்டு வெதும்பிநீ
ரிரக்கு மோமகளென்செயு மோவெனத்
தரிக்க ருந்துயா தாயடைந் தேகினள்.

(இ - ள்.) மகள் - என்மகளாகிய (மாயை) பரற்கண் - பருக்கைக்கற்களின்மேல் —மென்பதம் - மெல்லியபாதங்களை —வைத்து—பதைக்குமோ - துடிப்பளோ —சுரத்து - பாலைநிலத்தில் —மேனிதுவண்டு - தேகந்தள்ளாடி—வெதும்பி - வாடி—நீரிரக்குமோ - தண்ணீர்கேட்பளோ —என்செயுமோவென - என்னவகை செய்வளோவென்றெண்ணி —தாய் - அன்னையானவள் —தரிக்கருந் - பொறுத்தற்கரிய—துயரடைந்தேகினள் - துன்பமடைந்து சென்றனள். எ - று. (அ)

பொன்னை யன்ன புதல்வி பொருட்டிவண்
மன்னர் மன்னன் மனத்திலெ ளாநதெழு
மின்னல காணவு மூழ்மான றிருந்தெதன்
றுன்னி மாழ்கியவ் வூராபின் போயினார்.

(இ - ள்.) பொன்னையன்ன - திருமகளையொத்த—புதல்விபொருட்டு- மகளாகிய (மாயையின்) பொருட்டு—இவண - இவ்விடத்து —மன்னர்மன்னன்-அரசர்க்கரசனாகிய(மகாரனுடைய)—மனத்திலெளாநதெழும்- மனத்திலதிகரித்தெழுகின்ற—இன்னல்காணவும் - துயரத்தைக்காணவும்—ஊழொன் றிருந்ததென்று—உன்னி - எண்ணி—மாழ்கி - மயங்கி—அவ்வூரர் - அவ்வனவசைமாநகரஜனங்கள் —பின்போயினார் - (அவ்வரசன்) பின்சென்றனர். எ - று. (கூ)

அயர்ந்து நிற்கு மரிவையைக் கண்டுநான்
முயன்று மெய்த்தவ முற்றும பயின்றுனைப
பயந்த தற்குப் பயனன் றுதவினை
நயந்தெ மக்கெனத் தந்தை நவின்றனன்.

(இ - ள்.) தந்தை - பிதாவாகியமகாரன்—அயர்ந்துநிற்கும் - சோர்வடைந்துநிற்கின்ற—அரிவையைக்கண்டு - மாயையைப்பார்த்து—நான்மெய்த்தவமுயன்று - நான்மெய்ம்மையாகிய(பல)தவங்களையெத்தனித்து —முற்றும்பயின்று - (அவை) முழுதுஞ்செய்துமுடித்து—உனைப்பயந்ததற்கு - உன்னைப்பெற்றதற்கு—நயந்து - விசுவாசித்து —எமக்கு - எங்களு

க்கு—பயனன்று - நல்லபிரயோசனத்தை—உதவினையென - உதவினு யென்று—நவின்றனன் - சொல்லினன். எ - று. (௧௦)

ஏன்னை நீங்கி யிழிதொழில் செய்பவன்
றன்னை நாடித் தலைமை யிழந்தெனோ
கன்னி நீகொடுங் காட்டில்வந் தாயென.
வன்னை யோவென் றரற்றி யழுதனள்.

(இ - ள்.) அன்னை - தாயாகியமோகினி—கன்னி - கன்னிகையாகிய (மாயையே)—நீ—என்னைநீங்கி —இழிதொழில்செய்பவன்றன்னை - மத்தளமடித்தலாகிய இழிதொழில்செய்கின்றவனை—நாடி - விரும்பி—தலைமையிழந்து - மஹாராஜபுத்ரியென்னுந் தலைமையையிழந்து—என்னோ - என்னகாரணத்தாலோ—கொடுங்காட்டில் - கொடியகாட்டினிடத்து—வந்தாயென - வந்தனையென்றுசொல்லி—ஓவென்று—அரற்றி - புலம்பி—அழுதனள். எ - று. (௧௧)

மகனு மல்லனவ் வல்லமன் மாயைநும்
மகளு மல்லள் வரைபுரை தோளினாய்
இகலும் வாட்க ணரசியு நீயுமிங்
ககலு மென்று விமலை யறைகுவாள்.

(இ - ள்.) வரைபுரைதோளினாய் - மலையையொத்ததோள்களையுடைய அரசனே—அவ்வல்லமன்—மகனுமல்லன் - மனிதனுமல்லன்—மாயை—நும் - உங்களுடைய—மகளுமல்லள்— (ஆதலால்) —இகலும் - பொருகின்ற—வாட்கண் - வாளையொத்தகண்களையுடைய—அரசியுநீயும் - பட்டமஹிஷியாகியமோகினியும்நீயும் —இங்கு - இவ்விடத்தினின்றும் —அகலுமென்று - நீங்குமென்று—விமலை—அறைகுவாள் - சொல்லுவள். எ - று.

வினைப்ப யன்கொள வேண்டுநே ரோரிடந்
தனைப்பொ ருந்துறச் சம்பந்த மாத்திரத்
தெனக்கி ணரிவ ளென்றபி மானமொன்
றனைப்பொ ருந்தி யழிவ ரறிவிலார்.

(இ - ள்.) வினைப்பயன்கொள - (தாமுன்செய்தவிரு) வினைப்பயனை யனுபவிக்க—வேண்டுநர் - விரும்பினவர் —ஓரிடந்தனை - (தமக்குவிதிக்கப்பட்ட) ஓரிடத்தை—பொருந்துற - அடைய—சம்பந்தமாத்திரத்து - அந்தத்தொடர்ச்சியாலினாலே —எனக்கிணரிவளென்று - இவளெனக்கி

ன்னமுறையினவொன்று—அபிமானமொன்றனைப் பொருந்தி - ஓரபிமான த்தை யடைந்து—அறிவிலார்—அழிவர் - வருந்துவர். எ - று. (௧௩)

தனைய ராகியுந் தந்தைதா யாகியு
முனையு றுத வுயிரிலை யாதலா
லினையர் கேளி ரினைய ரயலென
நினையு றேன்மிளிர் நெட்டிலை வேலினாய்.

(இ - ள்.) மிளிர்நெட்டிலைவேலினாய் - பிரகாசிக்கின்ற நெடியவிலை போன்றவேற்படைதாங்கியவரசனே —தனையராகியும் - (உனக்குப்) புத்திரராகியும்—தந்தைதாயாகியும் - தந்தையாகியுந்தாயாகியும் —உனையுறுதவுயிரிலை - உன்னைச்சேராதவுயி (ரிவ்வுலகி) வில்லை—ஆதலால்—இனையர்கேளிர் - இன்னாரெனக்குஉறவர் —இனையரயலென - இன்னாரெனக்கு அன்னியரென்று—நினைவுறேல் - நீநினையாதே. எ - று. (௧௪)

வேனெ டுங்கண் விமலை யிவைசொலப்
பான லங்கண் பனிமதி வாண்முகப்
பூந றுங்குழற் பொற்றொடி மாயைமுன்
றான டைந்தமை தந்தைக் குணர்த்தியே.

(இ - ள்.) வேனெடுங்கண்விமலை - வேலைப்போல்நீண்டகண்களையுடையவிமலை—இவைசொல - இந்நியாயங்களைச்சொல்லுகையில்—பானலங்கண்-நீலோற்பலமலரையொத்தகண்களையும்—பனிமதிவாண்முகம் - சீதளசந்திரனையொத்த ஒளிபொருந்தியமுகத்தையும்—பூநறுங்குழல் - பூமாலையயணிந்துமணநாறுகின்ற அளகத்தையும் —பொற்றொடி - பொன்னாலாகியவளையலையுமுடைய—மாயை - மாயையானவள்—தந்தைக்கு - தன் பிதாவாகிய மமகாரராஜனுக்கு—முன் - பூர்வத்தில் —தானடைந்தமை - தான்கயிலாயத்திலிருந்துவந்தசெயலை—உணர்த்தி - அறிவித்து. எ - று.
பூநறுங்குழலில் தந்நகரமினம்பற்றிவந்தவெதுகை. (௧௫)

காவி யங்கட் கனியித ழ் மாதுமை
யேவ வந்தவென் னெண்ண முடித்திலன்
போவ னங்கிப் புரிகுழ லோடுநா
னீவிர் நோவன்மி னென்னை நினைந்தென.

(இ - ள்.) காவியங்கண் - கருங்குவளைமலரையொத்த அழகாகியகண்களையும்—கனியிதழ் - கொவ்வைக்கனியையொத்த அதரத்தையுமுடை

ய—மாதுமை - உமாதேவியானவள்—ஏவவந்த-அனுப்பவந்த —நான்—என்னெண்ணமுடித்திலேன்—(ஆதலால்)—இப்புரிகுழலோடும் - கட்டப்படுகின்ற கூந்தலையுடைய இந்தவிமலையோடும்—போவனங்கு - அக்கயிலாயத்திற்குப்போவேன்—நீவிர்-நீங்கள் —என்னைநினைந்து—நோவன்மின் - வருந்தாதீர்கள்—என - என்றுசொல்லி. எ - று.

புரிகுழல் ; அன்மொழித்தொகை. (கசு)

விரைந்தெ ழுந்து விமலை யணங்கொடு
வருந்து நெஞ்சக மாயையக் காட்டுளோர்
பிரிந்த ழுங்குரல் பின்றொடர்ந் தேகவே
பொருந்த ருங்கயி லைத்தடம் போயினாள்.

(இ - ள்.) வருந்துநெஞ்சகமாயை - (பிரபுதேவர் தன்வசப்படாமையின்பொருட்டு) வருந்துகின்ற மனதையுடையமாயையானவள் —விரைந்தெழுந்து - சீக்கிரமாயெழுந்து—விமலையணங்கொடு - விமலையென்னுமாதொடு—அக்காட்டுளோர்-அக்காட்டினிடத்துத்தன்பொருட்டுவந்திருந்த பரிசனங்கள்—பிரிந்தழுங்குரல் - பிரிவுற்றுஅழுகின்றசத்தம் —பின்றொடர்ந்தேக - பின்னே தொடர்ந்துசெல்ல—பொருந்தரும் - (சிவபுண்ணியமில்லாதவர்களால்) அடையக்கூடாத —கயிலைத்தடம் - கயிலைமலையினிடத்து—போயினாள். எ - று. (கஎ)

அழுது வாய்விட் டரற்றிலன் றன்னுடல்
புழுதி யாடப் புரண்டிலன் மன்னவன்
பழுதி லாததன் பாவைகா ணாமையா
லெழுது மோவிய மென்னநின் றனரோ.

(இ - ள்.) மன்னவன் - மமகாரராஜன்—பழுதிலாத —தன்பாவை-தன்புத்திரியானவள் —காணாமையால் - காணப்படாமையால் —அழுதுவாய்விட்டரற்றிலன் - வாய்திறந்துபுலம்பி அழாதவனாகியும்—தன்னுடல்புழுதியாடப்புரண்டிலன் - தனதுதேகமானது புழுதியளையப்புரளாதவனாகியும்—எழுதுமோவியமென்னநின்றான் - எழுதியசித்திரம்போல (அசைவின்றி) நின்றனன். எ - று. (கஅ)

விழுவன் மீள வெழுவுண் மெலிந்துநைந்
தழுவண் மேனி யசைந்து நிலங்கையா

லுழுவள் வாய்கொண் டுயிர்ப்ப ளிறப்பலென்
றெழுவள் கைநெரித் தேங்குவ ளன்னையே.

(இ - ள்.) அன்னை - தாயாகிய (மோகினி) —விழுவள் —மீள - திரும்பவும் —எழுவள் - எழுந்திருப்பள் —மெலிந்துநைந்தழுவள் - மனமிளைத்து இரங்கிஅழுவள்— மேனியசைந்து-சரீரந்தள்ளாடி—நிலங்கையாலுழுவள் - நிலத்தைக்கையால்துழவுவள் —வாய்கொண்டுயிர்ப்பள்-வாயால்மூச்சுவிடுவள்—இறப்பலென்றெழுவள் - இறக்கக்கடவேனென்றுஎழாநிற்பள்—கைநெரித்தேங்குவள். எ - று. (கக)

பாடு மாதரும் பந்துங் கழங்குநின்
றாடு மாதரு மாகு மரிவைய
ரோடு மேவி யொருமகள் வாழ்ந்தவம்
மாட நானினிக் கண்டுயிர் வாழ்வனோ.

(இ - ள்.) பாடுமாதரும் - பாடுகின்ற மகளிரும்—பந்துங்கழங்கு நின்றாடுமாதரும் - பந்துகளும் அம்மானைகளுங்கொண்டு (எதிர்நின்று) ஆடுகின்றமகளிரும்—ஆகும் - ஆகிய—அரிவையரோடு - அரிவைப்பருவமுடையமாதர்களோடு—மேவி - இருந்து—ஒருமகள் - ஒப்பற்ற எனதுமகளானவள்—வாழ்ந்தவம்மாடம் - வாழ்ந்துகொண்டிருந்த அந்தக்கன்னிகாமாடத்தை—நானினிக்கண்டு - இனிநான்பார்த்து—உயிர்வாழ்வனோ - உயிரோடிருப்பனோ. எ - று. [இவளைக்காக்கின்றவர் இவளின் மூத்தோரென்றதறிவித்தற்கு அரிவையரொன்றார்.] (உ0)

துளிக்கும் வார்மதுச் சோலையும் வாவியும்
பளிக்கு மாடமும பாழ்பட வென்மகள்
களிக்கு மானிருங் காட்டினு ளெம்மைவிட்
டொளிக்கு மாறொரு சற்று முணர்ந்திலேன்.

(இ - ள்.) துளிக்கும்வார்மதுச்சோலையும்-மிகுந்ததேனைத்துளிக்கின்ற சோலையும்—வாவியும் - தடாகங்களும்—பளிக்குமாடமும் - பளிங்கிற்செய்த உபரிகைகளும்—பாழ்பட - பாழாகும்படி—என்மகள்—களிக்குமான் - மான்கள்களித்தற்கிடமாகிய—இருங்காட்டினுள் - பெரியகாட்டினிடத்து—எம்மைவிட்டு - எங்களைவிட்டு—ஒளிக்குமாறு - ஒளிக்கும்வகையை—ஒருசற்றும் - சிறிதும்—உணர்ந்திலேன். எ - று. (உக)

என்னை நீவிட் டிருப்பினும் பொற்றொடி
யுன்னை நான்விட் டுயிர்பிழை யேனென
வன்னை வாய்விட் டரற்றின ளாயிடை
மின்ன ளாரும் கதறினர் வேலைபோல்.

(இ - ள்.) பொற்றொடி - பொன்னாற்செய்யப்பட்ட வளைகளையுடைய மாயையே—என்னை—நீவிட்டு - நீபிரிந்து—இருப்பினும் - இருப்பாயாயினும்—உன்னை—நான்விட்டு - நான்பிரிந்து—உயிர்பிழையேனென - உயிரோடிரேனென்று—அன்னை - தாயாகிய(மோகினி)—வாய்விட்டரற்றினள் - வாய்விட்டுப்புலம்பினள்—ஆயிடை - அப்பொழுது—மின்னனாரும் - மின்னலையொத்தமாதர்களும்—வேலைபோல் - சமுத்திரகோஷம்போல—கதறினர் - புலம்பினர். எ - று. (உஉ)

வந்து வேந்தன் வழிமர பாரிய
னுந்த மாமக ளோண்மை நுமக்குநான்
முந்து கூறில னோதுயர் மூழ்கினீர்
சிந்தை நோத றகாதெனச் செப்புவான்.

(இ - ள்.) வேந்தன்வழி - மமகாரனுடையவம்சத்திற்கு—மரபாரியன் - பரம்பரையாய்வருகின்றஆசாரியன்—வந்து—நுந்தமாமகள்-இலக்குமியையொத்த உங்கள்புத்ரியினுடைய—நோன்மை - பெருமையை—நுமக்கு - உங்களுக்கு—நான்முந்துகூறிலனோ - ஆதியில்நான்சொல்லவில்லையோ—(சொல்லியிருந்தும்)—துயர்மூழ்கினீர் - நீங்கள்துன்பத்திலழுந்தி—சிந்தைநோதறகாதென - மனம்வருந்துதல்தகாதென்று—செப்புவான்-சொல்லுவான். எ - று. (உ௩)

அருந்த வம்பல வாற்று மறிஞரும
பொருந்த ருங்கயி லைக்குமின் போனமை
தெரிந்து நெஞ்சந் தெளிய வறிந்துநீர்
வருந்து தன்மை மடமை மடமையே.

(இ - ள்.) அருந்தவம்பல - பலவாகிய அரியதவங்களை—ஆற்றுமறிஞரும் - செய்கின்றமுனிவரும்—பொருந்தருங்கயிலைக்கு - அடைதற்கரிய கைலாசத்திற்கு—மின் - மின்னற் (கொடியையொத்த)மாயை—போனமை - அடைந்தவியல்பை—தெரிந்தும் - (பிரத்தியக்ஷமாகக்) கண்டும்—

ரென்சந்தெளியவறிந்தும்-மனதிற்குச் சந்தேகம் ஒழியவுணர்ந்தும்—நீர்வ
ருந்துந்தன்மை—மடமைமடமையே - மிகுந்த அறியாமையேயாம். எ-று.
மடமை மடமையெனல்; உணர்வுறுத்துமாறு வந்தவடுக்கு. (உச)

சிலைநு தற்பசுந் தேமொழி மாதுமை
கலைநு மக்குக் கவின்மக ளாகநீர்
தலைமை பெற்றது சாலு முமையினி
யுலகி னிற்பிற ரொப்பவ ரில்லையே.

(இ-ள்.) சிலைநுதல் - விற்போல் (வளைந்த) புருவங்களையும்—பசுந்
தேமொழி - பசுமைபொருந்தியதேனைப்போல் (மதுரமாகிய) வசனத்
தையுமுடைய—மாதுமைகலை - உமாதேவியினுடையதமோர்திருவம்சம்—
நுமக்கு - உங்களுக்கு —கவின்மகளாக - அழகியபுத்திரியாகும்படி—நீர்
தலைமைபெற்றதுசாலும - நீங்கள்தலைமைபெற்றது போதும்—உமையி
னியுலகினில் - இனியுலகத்தில் உங்களை—பிறரொப்பவரில்லை - ஒப்பவ
ர் பிறரில்லை. எ-று. (உரு)

என்று கூறக் குரவ னிறைமகன்
மன்றல் வாழ்க்கை மனையொடு துன்பொரீஇச்
சென்று மாடத் திருநக ரிற்புகாக்
குன்ற மாமதிற் கோயிலி னண்ணினான்.

(இ-ள்.) என்றுகூறக்குரவன்-என்றுகுருவானவர்சொல்ல —இறை
மகன்-மகாராஜன்—மன்றல்வாழ்க்கை-மங்கலம்பொருந்திய இல்வாழ
க்கைக்குரிய—மனையொடு - மனைவியாகியமோகினியோடு—துன்பு - விய
சனத்தை—ஒரீஇ - ஒழித்து—சென்று - திரும்பிப்போய் —மாடத்திருந
கரில் - மாளிகைகள்நிறைந்துசெல்வமிகுந்ததனது நகரத்தில் —புகா - பு
குந்து —குன்றமாமதில் —மலையைப்போல (அளவிடப்படாமையுந்திண்
மைமுதலியவுமுடைய) பெருமைபொருந்திய மதிலாற்சூழப்பட்ட—கோ
யிலினண்ணினன் - அரண்மனையிலடைந்தனன். எ-று. (உசு)

வேறு.

கயிலையில் விமலை யோடுங் கவிரிதழ் மாயை சென்று
வியனில மதனிற் றன்னை விடுத்தனான் றென்ன வானோர்
பயிலவை தன்னிற் புக்குப பரனையு மிமய மீன்ற
மயிலிய றனையும வாழ்த்தி வணங்கியங் கருகு நின்றாள்.

(இ - ள்.) கனிதரு மாமைய - முருக்கம்பூவையொத்த அதரத்தையுடையாளாயையானவள்—விமலைபோலும்—கயிலையின் —சென்று - போய்—வியன் - விசாலமாகிய — நிலமதனில் - பூமியினிடத்தில் —தன்னைவிடுத்தருளன்றென்ன - தன்னை அனுப்பியநாளிலிருந்ததுபோல—வானோர்பயிலவைதன்னில் - தேவர்கள்நிறைந்திருக்கின்றசபையில் —புக்கு-புகுந்து—பரனையும் - பரமசிவனையும்—இமயமீன்றமயிலியற்றனையும் - மலையரசன்பெற்றமயிலைப்போலுஞ்சாயலையுடையஉமையையும் —வாழ்த்திவணங்கி-துதித்துப்பணிந்து—அங்கருகுநின்றாள் - அங்கு (உமையவள்) சமீபத்தில் நின்றனள். எ - று.

மயிலியல்—அன்மொழித்தொகை. (௨௭)

பொலிவுறு வதனங் கண்ட போதேயம் மாயை நெஞ்சின்
மெலிவினை யறிந்து மன்னை வினவலுஞ் சூள்கொண் டேகி
மலர்தலை யுலகிற் றான்முன் மயங்கிய வாற னைத்து
நலியுநா ணடைவ ருந்தி நவின்றனள் குறிப்பிற் றோன்ற.

(இ - ள்.) அன்னை - தாயாகியஉமாதேவி —அம்மாயை - அந்தமாயையினது —பொலிவுறுவதனம் - மலர்ச்சிநீங்கியமுகத்தை —கண்டபோதே—நெஞ்சின்மெலிவினையறிந்தும் - மனவாட்டத்தைஅறிந்தும்—வினவலும் - (நீபோனகாரியமென்னவாயிற்றென்று) கேட்டலும்— (அவள்) —சூள்கொண்டு - சபதம்பண்ணிக்கொண்டு—மலர்தலையுலகில் - பரந்தவிடத்தையுடைய பூலோகத்தில்—ஏகி - போய்—தான்முன்மயங்கியவாறனைத்தும்—குறிப்பிற்றோன்ற - குறிப்பினால்வெளிப்படும்படி—நலியுநாணடை - வருத்துகின்றநாணமானது வருத்த —வருந்தி —நவின்றனள் - சொல்லினள். எ - று. (௨௮)

நன்னகை மகள்கேட் டுள்ள நாணுபு முகங்க விழ்ந்தாள்
பன்னக சயன னாதி பண்ணவர் நெருங்க வைக்கண்
முன்னகை செய்து தீய முப்புர மாளச் செய்தான்
பொன்னகை புரிந்தான் பங்கிற் புரிகுழல் செருக்கு மாள.

(இ - ள்) நன்னகைமகள்கேட்டு - நல்லமலையனையனுடையமகளாகியஉமாதேவிகேட்டு—உள்ளநாணுபு - மனநாணி—முகங்கவிழ்ந்தாள் - முகத்தைக்கவிழ்த்துக்கொண்டாள்—பன்னகசயனனாதி - சர்ப்பசயனனாகியதிருமால்முதலாகிய —பண்ணவர் - தேவர்கள் —நெருங்கு - நெருங்குகின்

ற—அவைக்கண் - சபையினிடத்தில் —முன்னகைசெய்து-ஆகியில்நகைத்து—நியமுப்புரம் - கொடுமையையுடைய திரிபுரங்கள்—மாளச்செய்தான் - மாண்டுபோகச்செய்தபரமசிவன் —பங்கிற்புரிகுழல் - தன்னிடதுபாகத்திலிருக்கின்ற கட்டப்பட்டஅளகத்தையுடைய உமாதேவியினது—செருக்குமாள - செருக்குஅழிய—புன்னகைபுரிந்தான் - புன்சிரிப்புச்செய்தனன். எ - று.

புரிகுழல்—அன்மொழித்தொகை. (டகூ)

அளியனென் றுனக்கு நான்சொ லல்லம னரிய னேமற
றெளியனே வுரைததி நீயென் றிலங்கயி லெறிந லேபோல்
வெளியபுன் முறுவல் செய்ய விமலன்வெண் மதியங் கண்ட
நளினமென் மலர்போ லென்றாய் நகைமுக மொடுங்கி னளால்.

(இ - ள்.) விமலன் - நிர்மலனாகியபரமசிவன் —அளியனென்றுநான் சொல் - (அன்பருக்கு) அன்பனென்றுநான்சொல்லிய—அல்லமன்—உனக்கு —அரியனோ —எளியனோ— உரைத்திநீயென்று - நீசொல்லென்று —இலங்கயிலெறிதலேபோல் - பிரகாசிக்கின்றவேலினாலெறிந்தாற்போல —வெளியபுன்முறுவல்செய்ய - வெண்மையாகிய புன்சிரிப்புசெய்ய—என்றாய் - எனதுதாயாகியஉமாதேவி —வெண்மதியங்கண்ட - வெண்மையாகியசந்திரனைக்கண்ட —நளினமென்மலர்போல் - மெல்லியதாமரைமலரைப்போல் —நகைமுகமொடுங்கினள் - ஒளிபொருந்தியமுகம் வாடினாள். எ - று. மற்று - ஆல் - அசைநிலைகள்.

அரியனோ ; எளியனோவென்பவற்றிலுள்ள வோகாரமிரண்டும்ஐயம்.( )

போக்கரும் வலிபு கன்று போய்வரு மாயை சொன்ன
வாக்கினில் வருந்து வேனை வள்ளனீ நகைசெய் தெள்ளன்
மூக்கிலி முகத்தின் முன்னர் முகுரங்காட் டுதல்போன் மென்ன
நீக்கின ரிமய மீன்றமெல்லியன் மெலிந்து சொன்னாள்.

(இ - ள்.) வள்ளல் - (அடியர்வேண்டியயாவுந் தடையின்றியருளுகின்ற) இறைவனே—போக்கருமவலிபுகன்று - நீக்குதற்கரியசபதஞ்சொல்லி—போய்வருமாயை - போய்வந்தமாயையானவள் —சொன்னவாக்கினில் - சொன்னவசனத்தில்—வருந்துவேனை - வருந்துகின்றவென்னை—நீநகைசெய்தெள்ளல் - நீநகைத்துப் பரிஹாசஞ்செய்தல்—மூக்கிலி - மூக்

சில்லாதவனுடைய —முகத்தின் முன்னர் —முகுரங்காட்டுதல்போன்ம் - கண்ணாடிகாட்டுதலையொக்கும்—என்ன - என்று —மீக்கிளரியமின்ற மெல்லியல்—மேலாக (வுயர்ந்து) பிரகாசிக்கின்ற இமயமலைபெற்றமெல்லிய இயல்பினையுடைய உமாதேவியானவள் —மெலிந்து - வாட்டமுற்று—சொன்னாள். எ - று. (௬௧)

நடமபயி லெந்தை மங்கை நாணினுலை வருந்தி னுளென்
றடைந்தருள சொல்வன் ஞால மலைக்குமம் மாயை சூளா
னெடுந்தகை முன்னரு சென்ற நிலையேநன் றுடு கொல்வோன்
மடங்கன்முன் வெல்வே னென்று வருதலே யாற்ற லன்றே.

(இ - ள்) நடம்பயிலெந்தை - நடனஞ்செய்கின்ற எமக்குத்தந்தையாகிய பரமசிவன்— மங்கை - உமாதேவியானவள் —நாணினால்வருந்தினளென்று—அடைந்தருள்சொல்வன் - கிருபையடைந்துசொல்லுவன்— ஞாலமலைக்குமம்மாயை - உலகின்கண்ணுள்ளோரை அலைக்கின்ற அந்த மாயையானவள்—சூளால் - சபதத்தால் —நெடுந்தகைமுன்னருஞ் சென்றநிலையேநன்று - நெடியதகைமையையுடைய அல்லமனுக்கு முன்புபோனநிலையேவிசேஷமாகும் (அஃதெவ்வாறெனின்)—ஆடுகொல்வோன் - ஆடுகளைக்கொலைசெய்பவனொருவன்—மடங்கன்முன் - சிங்கத்தின்முன்—வெல்வேனென்று - அதனைவெல்லுவேனென்று —வருதலே —ஆற்றலன்றே - பெருமையல்லவோ. எ - று.

செந்தலை, அன்மொழித்தொகை. (௬௨)

அல்லமன் பெருமை யெல்லா மனைவரு மறிந்து கொள்ள
நல்லெழின் மலைம டந்தாய் நன்குணர்த் தினைநீ யென்று
சொல்லுந ரன்றி நின்னை நிந்தனை சொல்ல வல்லா
ரில்லையென் றியம்ப யாவு மீன்றவ ளியம்பு கின்றாள்.

(இ - ள்) நல்லெழின்மலைமடந்தாய் - சிறந்தஅழகினையுடையமலையரசன்புத்திரியாகிய உமையவளே—அல்லமன் பெருமையெல்லாம்—அனைவரும் - யாவரும்—அறிந்துகொள்ள—நன்குணர்த்தினைநீயென்று - நீநன்குக அறிவித்தனையென்று—சொல்லுநரன்றி - சொல்பவரல்லாமல்—நின்னை - உன்னை —நிந்தனைசொல்லவல்லார் - தூஷணைசொல்லவல்லவர—(ஒருவரும்)—இல்லையென்று—இயம்ப - சொல்ல— யாவுமீன்றவள் - (சராசரங்களாகிய) எல்லாவற்றையும் பெற்றவளாகிய (உமாதேவி)—இயம்புகின்றாள் - சொல்லுகின்றனள். எ - று. (௬௩)

பொறியிலி யேன்செய் தீமை பொறுத்தருள் புரிந்து மெய்ம்மை
யறிவருள் குரவ னரு மல்லமன் றன்னைக் காணு
நெறியருள புரிதி யென்ன நிரைவளை வணங்கிக் கூற
மறிமழு வமர்ந்தி ருக்கு மலர்க்கைவா னவனு ரைப்பான்.

(இ - ள்.) பொறியிலியேன்செய் - அறிவில்லாதவளாகிய நான்செய்த — தீமைபொறுத்து - கொடுமையைப்பொறுத்து — அருள்புரிந்து - கிருபைசெய்து — மெய்ம்மையறிவருள் - உண்மையாகிய (ஞானத்தை) அருளிச்செய்கின்ற — குரவனரும் - ஆசிரியனாகிய — அல்லமன்றன்னைக்காணும் - அல்லமனைக்கண்டறியத்தக்க — நெறியருள்புரிதியென்ன - மார்க்கத்தை (அடியேனுக்கு) அருளிச்செய்யென்று — நிரைவளை - வரிசையாகஅணிந்தவளையலையுடைய உமாதேவி — வணங்கிக்கூற - தொழுதுசொல்ல — மறிமழு - மானும்மழுவும — அமர்ந்திருக்கும் - பொருந்தியிருக்கும் — மலர்க்கைவானவன் - தாமரைமலரையொத்த திருக்கரங்களையுடையபரமசிவன் — உரைப்பான் - சொல்லுவான். எ - று.

நிரைவளை ; அன்மொழித்தொகை. (௩௪)

மத்தம துறுகுணத்து மாயையை விடுத்த வாற்று
னித்திய குரவன் றன்னை நீயறிந் திலைய ணங்கே
சத்துவ கலைம டந்தை தனையினி விடுத்தி யாயிற்
கைத்தல நெல்லி போலக் காண்குவை யவனை யென்றான்.

(இ - ள்.) அணங்கே - உமாதேவியே — மத்தமதுறுகுணத்து - மயக்கமிகுந்த குணத்தையுடைய — மாயையை — விடுத்தவாற்றால் - அனுப்பியபடியால் — நித்தியகுரவன்றன்னை - எக்காலத்திலுமுள்ள அல்லமனாகிய குருபரனை — நீயறிந்திலை — சத்துவகலைமடந்தைதனை - சத்துவகுணம்சமாகியமாதினை — இனி — விடுத்தியாயின் - அனுப்புவையாகில் — கைத்தலநெல்லிபோல - உள்ளங்கைநெல்லிக்கனிபோல — காண்குவையவனையென்றான் - அவனைக்காண்பாயென்றான். எ - று. (௩௫)

மிடியட விறப்ப லென்று மேவுமோ ரிடத்திற் செம்பொன்
குடமொடு கண்ட வன்போற் கொலைசெய்நாண் டுறந்து வந்து
துடியிடை யுமையெம மானைத் தொழுதுசத் துவவ ணங்கைப்
படிமிசை யலமன் காண்பான் செல்கெனப் பணித்தா ளன்றே.

(இ - ள்.) மிடியட - தரித்திரந்தன்னைவருத்துகையால் — இறப்பலெ ன்று - இறக்கக்கடவேனென்று — மேவுமோரிடத்தில்-செல்லுகின்றவோ ரிடத்தில் — செம்பொன் - செம்பொன்னை — குடமொடுகண்டவன்போ ல் - குடத்தோடிருக்கக்கண்ட தரித்திரனைப்போல் — துடியிடையுமை - உடுக்கைபோலும் இடையையுடைய உமையவள் — கொலைசெய்நாண்டுற ந்து - கொல்லுதலைச்செய்கின்றநாணத்தைவிட்டு — உவந்து - மகிழ்ந்து — எம்மானைத்தொழுது - எம்முடையஇறைவனாகிய பரமசிவனைவணங்கி — சத்துவவனுங்கை - சத்துவகுணமடந்தையை — அலமன்காண்பான் - அ ல்லமனைக்கண்டறியும்பொருட்டு — படிமிசை - பூமியினிடத்தில் — செல் கெனப்பணித்தாள் - போவென்றுசொல்லினள். எ - று. அன்று - ஏ - அசைநிலைகள். (௩௬)

அப்பொழு தருகு நின்ற வருணைநந்தி தேவ னன்னே
யொப்பரும் பத்தி யென்னு மஞ்சன மொன்றுண் டாயிற்
செப்பரு ஞான னந்த வல்லம தேவ னென்னும்
வைப்பினை யெளிது காண லாமென மகிழ்ந்து சொன்னான்.

(இ - ள்.) அப்பொழுது — அருகுநின்ற - சமீபத்தில்நின்ற — அருணந் திதேவன் - கிருபையுடையநந்திதேவன் — அன்னே - தாயே — ஒப்பரும்- ஒப்பில்லாத — பத்தியென்னும் - பக்தியென்று சொல்லப்படுகிற — அஞ்ச னமொன்றுண்டாயின் — செப்பரும் - சொல்லுதற்கரிய — ஞானனந்தம் - ஞானனந்தஸ்வரூபியாகிய — அல்லமதேவனென்னும் — வைப்பினை - நி க்ஷேபத்தை — எளிதுகாணலாமென - எளிதிற்காணலாமென்று — மகிழ்ந் துசொன்னான். எ - று. (௩௭)

அழிவரு நிதிய வைப்பை யஞ்சனங் கொண்டு காணும
விழியுடை யவன்போன் ஞான மெய்க்குர வனைத்தான் கண்டு
கழிமய லன்பர் காணக் காட்டுவோ னிவனென் றெம்மை
வழிவழி யடிமை கொள்ளும வள்ளனந் நிலைப்பு கழ்ந்து.

(இ - ள்.) எம்மைவழிவழியடிமைகொள்ளும் - எங்களைப்பரம்பரையா கஅடிமைகொள்ளுகின்ற — வள்ளல்-தாதாவாகியபரமசிவன் — அழிவருநி தியவைப்பை - அழிவில்லாதநிக்ஷேபத்தை — அஞ்சனங்கொண்டுகாணு ம் - அஞ்சனத்தைக்கொண்டு அறிகின்ற — விழியுடையவன்போல் - நே த்திரத்தையுடையவனைப்போல — ஞானமெய்க்குரவனைத்தான்கண்டு - தா

ன்உண்மையாகிய ஞானாசாரியனைமுன்கண்டு—கழிமயலன்பர் - மயக்கநீ ங்கியசரணர்—காண - காணும்படி—காட்டுவோன் - தெரிவிப்போன்—இவனென்று—நந்தியை - நந்திதேவனை—புகழ்ந்து - ஸ்லாகித்து. எ-று.

சத்தியால் யான்பிணித்த தளைதனைத் தனது தூய
பத்தியா லவிழ்க்க வல்லோன் பார்க்கினிந் நந்தி யேதா
னித்திறல் விலங்கு பூட்டு மிறைவனே விடுவிப் பானோ
மெய்த்தவா ரருளி னோன்யார் விளம்புக வென்று சொல்வான்.

(இ - ள்.) சத்தியால்யான்பிணித்த - நான் என்னுடையமாயாசத்தியா ற்கட்டிய—தளைதனை - பந்தத்தை—தனது—தூய - பரிசுத்தமாகிய—ப த்தியால் —அவிழ்க்கவல்லோன் - விடுவிக்கவல்லவன் —பார்க்கின் - ஆ லோசித்துப்பார்க்கில்—இந்நந்தியேதான் - இந்தநந்திதேவனேயாகும்—இத்திறல் - இந்தக்காரணத்தால் —விலங்குபூட்டுமிறைவனோ - (ஒருவ ற்கு) தளையிடுகின்றஅரசனோ—விடுவிப்பானோ-அதைவிடுவிக்கிறவனோ—மெய்த்தவாரருளினோன்யார் - உண்மையாகிய நிறைந்த அருளையுடையவ ன்யார்—விளம்புக - சொல்லுக —என்றுசொல்வான். எ - று. இத்தி றலென்பதுவிரித்தல்விகாரம்.

இதிறலெனற்பாலது ; இத்திறலென்றாயது எதுகைபற்றிவந்தவிரித் தல்விகாரம். (ருக)

அல்லம னென்னு ஞான வானையை யகப்ப டுத்த
வல்லவொண் பார்வை நீயே யாதலான் மண்ணிற் போகி
யெல்லையி லன்பர் நெஞ்சத் தின்பரு ணந்தி யென்று
சொல்லின னுயிரிற் றோன்றாத் துணையென விருக்கும் பெம்மான்.

(இ - ள்.) நந்தி - நந்திதேவனே —அல்லமனென்னும் —ஞானவானை யையகப்படுத்தவல்ல - ஞானசொரூபமாகியயானையை அகப்படச்செய்ய வல்ல—ஒண்பார்வை - அறிவுடையபார்வைமிருகம்—நீயேயாதலால்—ம ண்ணிற்போகி -பூமியினிடத்திற்சென்று—எல்லையிலன்பர் நெஞ்சத்து - அளவில்லாத அடியார்களுடையமனத்தில்—இன்பருளென்று - இன்பத் தை அருளுகவென்று—உயிரிற்றோன்றாத்துணையென - உயிர்கள்தோறு ம் வெளிப்படாததுணையாக —இருக்கும்பெம்மான் - இருக்கின்றபரமசி வன்—சொல்லினன். எ - று. (சஂ)

அந்திவண் ணத்தெங் கோமா னருளினு லின்ன கூறச்
சுந்தரி தனக்கு மெட்டாத் தூயவன் றன்னைக் காண
நந்திவல் லவனோ வென்று நகைசெய்து கணங்க டம்முள்
வந்தொரு சிலரு ரைப்ப மங்கைபங் காளன் சொல்வான்.

(இ - ள்.) அந்திவண்ணத்தெங்கோமான் - சந்தியாகாலச் செவ்வானம்போலும் நிறத்தையுடைய எமதிறைவனாகிய பரமசிவன்—அருளினாலின்னகூற - கிருபையினாலே இத்தன்மையவாகிய வசனங்களைச்சொல்ல—கணங்கடம்முள் - சிவகணங்களுள்—வந்தொருசிலர் - சிலர்வந்து —நகைசெய்து—சுந்தரிதனக்குமெட்டாத்தூயவன்றன்னை - அழகுபொருந்திய உமையவளுக்குமெட்டாத நிருமலனாகிய அல்லமனை —காணநந்திவல்லவனோவென்று - நந்திதேவன் அறியவல்லவனோவென்று —உரைப்ப - சொல்ல—மங்கைபங்காளன் - உமைபாகனாகிய பரமசிவன் —சொல்வான். எ - று. (௪௧)

நந்தியென் றனையு ணாநதா னவன் றனையு ணர்ந்தேன்
சிந்தைசெய் தெம்மை நீவிர் தெளிவுற வறிகி லீரொன்
றெந்தையெம பெருமான் கூற விகழ்ந்துரை செய்தோ ரெல்லாம
வெந்துயர் கொண்டு நின்றார் மீளவும் விமலன் சொல்வான்.

(இ - ள்.) நந்தியென்றனையுணர்ந்தான் - நந்திதேவன் எனது (நிலையை) அறிந்திருக்கின்றான்—நானவன்றனையுணர்ந்தேன் - நான் அவனது (வல்லமையை) அறிந்திருக்கின்றேன்—சிந்தைசெய்தெம்மைநீவிர் - நீங்களெம்மைத்தியானித்து—தெளிவுறவறிகிலீரொன்று - தெளிவுபொருந்த அறியீர்களொன்று—எந்தையெமபெருமான்கூற - எமதுடையதந்தையாகிய இறைவன்சொல்ல—இகழ்ந்துரைசெய்தோரெல்லாம - நந்திதேவனை யிகழ்ந்துசொல்லிய கணங்களெல்லாம்—வெந்துயர்கொண்டுநின்றார் - கொடியதுயரடைந்து நின்றார்கள்—மீளவும் விமலன்சொல்வான் - பின்னும் பரமசிவன் சொல்லுவன். எ - று. (௪௨)

மாசறு நந்தி பத்தி வார்த்தையா லறியீர் நீவிர்
காசினி யதனிற் சென்று கணகளா லமையக் கண்டு
பேசுதிர் பின்ன ரென்று பெருந்தகை நந்தி தன்னோ
டீசனுங் கணங்க டம்மை யேபின ளருளி னானே.

(இ - ள்.) மாசறுசங்கிபத்தி-குற்றமற்ற நந்திதேவனுடையபக்தியை—வார்த்தையாலறியீர்நீயிர் - (நாமசொல்லும்) வசனத்தினுலே நீங்களறியமாட்டீர்கள் (ஆகையால்) —காசினியதனிற்சென்று - பூலோகத்திற்போய் (அவதரித்து) —கண்களாலமையக்கண்டு - (உங்கள்) கண்களால் தெளிவாகக்கண்டு—பேசுதிர்பின்னரொன்று - பின்பு (வந்து) சொல்லுங்களென்று—பெருந்தகைநந்திதன்னேடு-பெரியதகைமையையுடைய நந்திதேவனேடு —ஒண்கணங்கடம்மை - பிரசித்தமாகிய சிவகணங்களை—ஈசன் - பரமசிவன்—வயினனருளினுலே - கிருபையினுலே அனுப்பினன். எ - று. (௬௩)

கண்ணுத லருளா லேவுங் கணங்களுட டலைமை பெறறோா
மண்ணுல கதனில வேணடும வளமபதி தோறும வந்து
நண்ணின ருலகா கணணி னராவடி வாகத தோனற |ரறு.
வெண்ணுறி னெழு நூற றின்மே லெழுபதெ ன றுரைக்கு மெணா

(இ - ள்.) கண்ணுதலருளாலேவும் - நெற்றிக்கண்ணையுடைய பரமசிவன்கிருபையினுலே அனுப்பப்பட்ட —கணங்களுட்டலைமைபெற்றோர் - சிவகணங்களுள் தலைமைபெற்றவர்கள் —மண்ணுலகதனில் - பூலோகத்தில் - வேண்டும்வளம் பதிதோறும் - தங்களுக்குவிருப்பமாகிய வளம்பொருந்திய நகரங்கள்தோறும் —உலகர்கண்ணினராவடிவாகத்தோன்ற - உலகத்திலுள்ள மானிடர்களுக்குமானிடராகத்தோன்றும்படி—வந்துநண்ணினர் - வந்துஅவதரித்தனர் —எண்ணுறின் - (அவர்களைஎத்துணையென) எண்ணத்தொடங்கில் —எழுநூற்றின்மே லெழுபதென்றுரைக்குமெண்ணர் - எழுநூற்றெழுபதென்றுரைக்குமெண்ணிணையுடையார். எ - று.

கண்ணுதல் ; அன்மொழித்தொகை. (௬௪)

நந்தியென் கின்ற ஞான ஞாயிறு நிலத்து திப்பின்
முந்துறு மமண னொன்னு மூடுவல் லிருள்கெட் டோடுஞ்
சந்திர மௌலி சீர்வெண் டாமரை மலரு மென்றே
யிந்திரன் முதலா யுள்ள விமையவர் மனம கிழ்ந்தார்.

(இ - ள்.) நந்தியென்கின்றஞானஞாயிறு - நந்திதேவனென்றுசொல்லப்படுகின்ற ஞானசூரியன் —நிலத்துதிப்பின் - பூலோகத்தில் உதையமாகில்—முந்துறுமமணனொன்னும் - அஞ்ஞானத்தாற்சிறந்தசமணனொன்

றுசொல்லப்பட்ட —மூவெவ்விருள்கெட்டோமெம் - மூடிக்கொண்டிருக்கப்பட்ட வலியஇருள அழிந்துபோய்விமெம்— சந்திரமௌலி - பிறையணிந்த சடையையுடையபரமசிவனது —சேர்வெண்டாமரைமலருமென்று - புகழாநிய வெண்டாமரைமலர்மலருமென்று—இந்திரன்முதலாயுள்ள - தேவேந்திரன் முதலாயுள்ள —இமையவர் - தேவர்கள் —மனமகிழ்ந்தார். எ - று.

கந்தி, ஆரணர், சீர - என்னுமிவ்விடங்களில், ஞானஞாயிறு, இருள், தாமரைமலர், என்னுமிவற்றையாரோபித்தலா லுருவகவணி. சந்திரமௌலி அன்மொழித்தொகை. (௬௫)

ஆக கவி - ௭ - ௰ - திருவிருத்தங்கள் - ௬௨௭.

மாயையைவென்றகதி - முற்றிற்று.



ஒன்பதாவது

# அக்கமாதேவியுற்பத்தி

## கதி.

வேறு.

புரஞ்சுடு சிறுநகைப் புனிதன் பாலமர்
கருந்தடங் கண்ணிதன் கலையு நந்தியும்
அருங்கண நாதரு மகனி லத்திடை
வருந்திற மறிந்தவா வகுத்துக் கூறுவாம்.

(இ - ள்.) புரஞ்சுடு - திரிபுரமெரித்த — சிறுநகைப்புனிதன்பால் - சிறியபுன்னகையையுடையபுனிதனாகிய பரமசிவனிடதுபாகத்தில் — அமர் - பொருந்திய — கருந்தடங்கண்ணிதன் - கரியவிசாலம்பொருந்திய கண்களையுடைய வுமையவளின் — கலையும் - சாந்தவிதகலையும் — நந்தியும் - நந்திகேசுரரும் — அருங்கணநாதரும் - அரியசிவகணநாதருமாகிய இவர்கள் — அகனிலத்திடை - அகன்றபூமியின்கண் — வருந்திறம் - அவதரித்ததிறத்தை — அறிந்தவா - எமக்குத்தெரிந்தவளவு — வகுத்துக்கூறுவாம் - விரித்துச்சொல்லுதும். எ - று. புரமெனவே - திரிபுரமெனவும், புனிதனெனவே - பரமசிவனெனவும், கண்ணியெனவே - உமையவளெனவும், கலையெனவே - ஏனையசாந்தவிதமெனவும் பெறுவா. பெருந்தடங்கண்ணி; அன்மொழித்தொகை. இங்ஙனம்பெற்றது, ஐதிகக்குறிப்பு. ஐவரொடு சினை இயென்றற்போலும். (க)

பெடையொடு சுரும்பினம் பெரிதி ரைந்திடக்
கடிதட மளவுவாய்க் காவி ஞெடியே
மடையுடை மதுமழை மலர்பெய் சோலைசூழ்
உடுதடை யெனுநக ரொன்றுண் டாமிடை.

(இ - ள்.) பெடையொடுசுரும்பினம் - பெண்வண்டுகளு மவற்றிற்கினமாகிய வாசவண்டுகளும் — பெரிதிரைந்திட - மிக்கொலிக்க — கடிதட

அறிவரு ளாதர வடக்கம வாய்மைமெய்த்
துறவுநல் லொழுக்கமே தூய்மை யென்றிவை
யுறவொடு குழவியா யுடன்வ ளர்ந்திட
மறுவறு சுமதிதன் மகளவ ளர்ந்தனள்

(இ - ள்) அறிவு - அந்தர்முகத்துக்கியைந்தவறிவும் —அருள் - காருண்யமும்—ஆதரவு - நித்தியானந்தவாசையும்—அடக்கம் - பொறிவழிச்செல்லாதவடக்கமும்—வாய்மை - பொருளல்லவற்றைப் பொருளாகக் கொள்ளாதவாய்மையும் —மெய்த்துறவு - உபாதித்திரியத்தையும் பற்றெனக்கனையுமெய்த்துறவும்—நல்லொழுக்கம் - மெய்யெஃதெனநிற்கு நல்லொழுக்கமும்— தூய்மை - மும்மலங்களுக்கிணங்காத தூய்மையும்—என்றிவையுறவொடு - என்றுகூறப்படுமிங்ஙனமாயவுறவினோடு —குழவியாய் - குழந்தைப்பருவமாக — உடன்வளர்ந்திட - அவையுமொருங்கே வளர—மறுவறுசுமதிதன் - குற்றமற்றசுமதியென்பவளுடைய—மகள்வளர்ந்தனள்—மகளாகியமாதேவியென்பவள் வளர்ந்தாள். ' எ - று. உடனென்பதினால், அவையுமொருங்கே யென்றும். என்றிவையென்பதனால், இவைபோல்வன பிறவுமெனக்கொள்க. கொள்ளவே - அயலுறவுக்கிடம் பெறுமெனப் பெற்றும். பெறவே, சாத்துவிதகுணமெனக்கண்டாம் (௯)

வாடிய மருங்குலம் மாயை தோன்றுநாள்
கோடிய சிலைகொடு தவங்கு லைப்பவே
யோடிய மதனன்மா தேவி யோங்குநாள்
வீடிய சிலையனாய் வீழ்ந்து மாழ்கினான்.

(இ - ள்.) வாடியமருங்குல் - சுருங்கியவிடையையுடைய—அம்மாயை தோன்றுநாள் - அந்தமாயைதோன்றுநாளில்—கோடியசிலைகொடு - வளைந்தகருப்புவில்லையெடுத்துக்கொண்டு—தவங்குலைப்பவே - மகான்கள்தவங்குலைப்பான்வேண்டியே— ஓடியமதனன் - உவகைகொண்டோடியமன்மதன்—மாதேவியோங்குநாள்-மாதேவிவளருநாளில் —வீடியசிலையனாய் - மனஞ்சோர்ந்தவில்லையுடையவனாய்—வீழ்ந்துமாழ்கினான் - வலிகுன்றியொன்றுந்தோன்றாது மயங்கினான். எ - று. மாயைதோன்றிய நாளில் தைரியங்குன்றாத மன்மதன், மாதேவிதோன்றியநாளில் தனது தைரியங்குன்றுதற்கேது, அறிவருளாதிய குணங்களா லென்க. (௰)

விழுந்தன கொடியதீ வினைப்ப ரப்பெலாம
எழுந்தன நல்லறம் யாவுந திங்களங்
கொழுந்தென நிருமலன் குமரி யோங்குநாள்
முழங்கின சிவாகம முற்று மெங்குமே.

(இ-ள்.) விழுந்தன - நசித்தன —கொடியதீவினைப்பரப்பெலாம் கொடிதாகியதீவினையின்பருப்பனைத்தும் —எழுந்தன - மிகவுயர்ந்தன— நல்லறம்யாவும் - நல்லதருமமெனப்படும்பாகுபாடனைத்தும் —திங்களங் கொழுந்தென - அழகியமூன்றாம்பிறையவளருமாறுபோன்று —நிருமலன் குமரியோங்குநாள் - நிருமலனென்பவன்மகள்வளருநாளில்—முழங்கின- கோஷித்தன—சிவாகமமுற்றும் - சிவாகமமனைத்தும் —எங்கும் - எவ் விடத்தும். எ - று. பரப்பு-விரிவு. (௧௧)

வேறு.

அங்குமா தேவி யின்னண மிருப்ப வெம்பிரா னேவிய கண ங்கள், தாங்கள்வேண் டியவா றுபதிதொறு முன்செய் தவத் தால் நன்மக வாகி, குறைவிலாச் சித்த ராமையன் மாச்சி தே வனென் றிப்பெயர் முதலா, ஐங்குநா மங்கள் வேறுவே றுறக் கொண் டெற்றனர் நற்றவ முயன்று.

(இ-ள்.) அங்கு - இவ்விடத்தில்—மாதேவி - மாதேவியென்பவள்— இன்னணமிருப்ப - இவ்வாறிருக்க—எம்பிரானேவியகணங்கள் —எமது பிரானுகியபரமசிவனனுப்பியசிவகணங்கள்—தாங்கள்வேண்டிய - தாங்க ள்விரும்பிய—பதிதொறும் - சிறந்தபட்டணங்கடோறும் - முன்செ ய்தவத்தால் - முன்பிறப்பிற்செய்ததவத்தினதிடத்தில் —நன்மகவா கி - நல்லகுழந்தையாய்—குறைவிலா - குறைவற்ற—சித்தராமையன்மாச் சிதேவனென்று - சித்தராமையனெனவும், மாச்சிதேவனெனவும—இ ப்பெயர்முதலா - இப்பட்டபெயர்முதலாக —ஐங்குநாமங்கள் - உயர் ந்தநாமங்களை—வேறுவேறுறக்கொண்டெற்றனர் - வெவ்வேறுகக்கொண் டெங்கிருர்கள்—நற்றவமுயன்று - நல்லதவங்களைச்செய்து. எ - று. க ணங்கள்மகவாகி - நாமங்கள்கொண்டு - முயன்றுற்றனரெனமுடிக்க. ()

பயக்குறு மினிய சங்கர பூசை பல்வகை நெறிபட வியற்றிச், செயற்கருஞ் செய்கை செய்தவ ரிருந்தார் தென்றிசைக் கயிலைபோற் சிறக்க, மயக்குறு மமண வல்லிருண் மெலிய வயி

ணவமெனுமுடிமழுங்க, வியக்குறுசைவ மலரநன் னாந்தி யெ
ய்யவ னுதித்தமை விரிப்பாம.

(இ - ள்.) பயக்குறும் - மூத்திபயக்கத்தக்க - இனியசங்கரபூசை - இ
னிமையாகியசிவபூசையை —பல்வகைநெறிபடவியாற்றி - பலவகையாலு
மாகமநெறிக்கிணங்கச்செய்து —செயற்கருஞ்செய்கைசெய்து - செய்தற்
கரியசெய்கைகளைச்செய்து—அவரிருந்தார் - அந்தசங்கமநாதர்களிருந்
தார்கள் —தென்றிசைககயிலைபோற்சிறக்க-தென்றிசையானதுகைலாய
த்தைப்போற்சிறந்திருக்கவும் —மயக்குறுமாமணவல்விருளமெலிய - மாய
வசனத்தால்புத்தியைமயக்குகின்றசமணமெனனுங் கொடியவிருள்குறை
வும—வயிணவமெனுமுடிமழுங்க - வைணவமதமென்னுங்கட்சத்திரங்கடம
தொளிகுன்றவும் —வியக்குறுசைவம் - அதிசயிக்கத்தருந்தசைவமென்னு
மலர்—மலர - விகசிக்கவும் —நன்னாந்தியெய்யவன் - நல்லநந்தியாகியஞா
னசூரியன் —உதித்தமைவிரிப்பாம் - அவதரித்ததைவிரிவாகச்சொல்லு
தும். எ-று. செயற்கருஞ்செய்கை - அயலார்க்கரியதிபலியரநிருந்தகல
க்க மெலிய மழுங்க மலரவென்னுமவினையெச்சங்களையுதித்தவென்னும்
வினைப்பகுதியோடுமுடிக்க ... க்கவிருந்தாரெனினுமமையும். (௧௬)

வாயின்மன்னனிட்டுக் கொண்டவன் றனைமகிழ்ந்துநன்
னுதலின்மண்ணிடாமற், பாயும்வெண் டிரையிற் றுயில்பவன் ற
னக்குப் பரிதியொன் றளித்தருண் முக்கண், ணாயகன் றனையே கரு
தியெண் ணீற்றா னன்னுதல வீதியை யணியுந், தூயநன் மறை
யோரிடமாகிய துரிசிலா விங்குளா புரியே.

(இ - ள்.) வாயில்மன்னனிட்டுக் கொண்டவன்றன்னை - வாயிலமண்ணைப்
போட்டுக்கொண்டவிஷ்ணுவை—மகிழ்ந்து - ஒப்பேர்நுளாகமகிழ்ந்து —நன்
னுதலின்மண்ணிடாமல் - நல்லநெற்றியிற்றிருமண்ணிடாமல் —பாயும்வெ
ண்டிரையில் - மோதுகின்றவெண்மையாகியவலைகளையுடையதிருப்பாற்
கடலில்—துயில்பவன்றனக்கு - உறங்கும்விட்டுணுவுக்கு — பரிதியொன்ற
ளித்தருள் - ஒரசக்கரமீந்த —முக்கணாயகன்றனையே - முக்கண்ணனாகிய
பரமசிவனையே—கருதி - திரிகரணமொக்கச்சிந்தித்து—வெண்ணீற்றால்-
விபூதியினால் —நன்னுதல்வீதியையணியும - நல்லநெற்றியாகியவிடத்தை
யலங்கரிக்கும் —தூயநன்மறையோர்தமக்கு - பரிசுத்தமானநான்மறைக்
குரியவந்தணர்களுக்கு—இடமாகும் - இடமாயுள்ள —துரிசிலா - குற்றம
ற்ற —விங்குளாபுரி-விங்குளாபுரியென்னும்பட்டணமொன்றுண்டு. எ-று.

உலகையுள்ளடவனென்றதது ; இழிவுபடற்கென்க. திருமன் - திருகூர மம். இடாமலணியுமறையோரென முடிக்க. (௧௪)

கதிர்விளை செந்நெற் காடுசூழ கரும்பு கரும்புசூழ் கதலியங் கதுசூழ, புதுநறும் பாளைக் கமுகது சூழ்முப் புடைப்பசுங் கா ய்தெங் கதுசூ, மூதிரகனித் தேமாந தண்பொழில் பார்ப்பார்க் குயர்வுறு துயர்மிடி புகாம, லதிர்முர சியமபும வீதியந நகரிற் கணிகளவைத் திடும்படை காட்டும்.

(இ - ள்.) கதிர்விளை - கதிர்கள்விளைகின்ற—செந்நெற்காடு - செந்நெற்காடுகள்—சூழ்கரும்பு - சூழ்ந்தகரும்புவனங்களும் —கரும்புசூழ் - அந்தக்கரும்பைச்சூழ்ந்த—கதலி - வாழைவனங்களும் —அங்கதுசூழ் - அங்கே அந்தவாழைகளைச்சூழ்ந்த—புது - புதிய—நறும் - நல்ல—பாளை - பாளைகளையுடைய—கமுகு - பாகுவனங்களும்—அதுசூழ் - அந்தப்பாக்குவனங்களைச்சூழ்ந்த—முப்புடை - மூன்றுபக்கத்தையுடைய—பசுங்காய் - பசியகாய்களையுடைய—தெங்கு - தென்னந்தோப்புகளும்—அதுசூழ் - அந்தத்தென்னந்தோப்புகளைச்சூழ்ந்த—உதிர் - கீழேயுதிர்கின்ற —கனி - பழங்களையுடைய—தேம் - வாசனைபொருந்திய—தண் - குளிர்ச்சிதங்கிய—மாம்பொழில் - மாந்தோப்புகளும்—பார்ப்பார்க்கு - பார்ப்பவர்களுக்கு—உயர்வுறுதுயர - மிகுந்துயரத்தையுடைய—மிடிபுகாமல் - தாரித்திரியமனுகாவண்ணம்—அதிர - ஒலிக்கின்ற—முரசியம்பும் - செயபேரிகைமுழங்கும்—வீதி - வீதிகளும் - அந்நகரிற்கு - அந்தப்பட்டணத்திற்கு—அணிகள்வைத்திடு - அணிகள்வகுக்கின்ற—படை - சேனைகளைப்போல—காட்டும் - தோற்றும் எ-று. செந்நெற்காடும், கரும்பும், கதலியும், கமுகும், தெங்கும், மாம்பொழிலும், வீதிகளும், அணிகள்வகுக்கும் படைபோறகாட்டலின், அணிகள்வைத்திடுபடைகாட்டுமென்றார். இது தவிலேந்துருவகமெனப்படும். செந்நெற்காடுமுதல் - வீதியிறுவாயவி ய்வெழும பாரப்போரக்குப் படைபோறகாட்டுமென முடிக்க. (௧௫)

விருந்திறுக் கிடுவா ரனனமந் நகரின் வேதியர் மடந்தை யரெல்லாம, பொருந்துமன னததிற் கிடுவன விருந்து புனல்வயற் செங்கமலங்கள, வருந்துநுண் ணிடைநன் மாதர்கைம் மலர்க்கு வண்டினைக் கொடுப்பபோ ரின்பங், குருந்தனி நகர்சூழ் தடங்கள்வண் டிற்குத் தாண்மலர் கொடுத்திடு மன்றே.

(இ - ள்) அந்நகரின் - அந்நகரத்திலுள்ள —வேதியர்மடந்தையரெ

ல்லாம் - பிராமணஸ்திரீகளனைவரும்—அன்னம் - உணவை—விருந்தினு க்கிடுவார் - விருந்தினருக்கிடுவார்கள்—புனல் - சலத்தையுடைய—வயல் - வயலிலுள்ள—செங்கமலங்கள் - செந்தாமரைகள்—பொருந்தும - அவ்விடத்திற்பொருந்திய—அன்னத்திற்கு - அன்னப்பட்சிகளுக்கு—இடுவனவிருந்து - விருந்திடுவனவாம்—வருந்தும் - பாரத்தால்வருந்தும்—நுண்ணிடை - மிகச்சுருங்கியவிடையையுடைய—நன்மாதர் - நற்குணமவாய்ந்தமாதர்கள்—கைம்மலர்க்கு-தமது கைகளாகியதாமரைமலர்களுக்கு—வண்டினைக்கொடுப்பர் - வளையலிடுவார்கள்—பேரின்பந்தரும் - மிக்கசுகத்தைத்தருகின்ற—தனி - ஒப்பற்ற—நகர்சூழ்தடங்கள் - பட்டணத்தைச்சூழ்ந்ததடாகங்கள—வண்டிற்கு - வண்டுகளுக்கு—தாண்மலர் - தண்டையுடையமலர்களை—கொடுத்திடும்-விருந்தாகக்கொடுக்கும். எ-று. அன்று - ஏ-அசைகள். அன்னம் - உணவின்பொது. கைம்மலர் - உருவகம். பேரின்பம் - மிக்கபோகம். வருந்துதற்குக்காரணம் - தனங்களாலாதலின்பொதுப்படப்பாரமென்றும். கைக்கென்றமையால - வண்டினை வளையலென்றும் கொடுப்பர் - இலக்கணை. (கசு)

இந்நகர் வாழு மறையவர் செய்யும் யாகந் தாமப்படிந் தன்றோ, பொன்னகர் வானோர் நிறைந்தவா யுளராய்ப் பொருந்துத லிந்நகர் மறையோர், தன்னரு மனுவா லொருபயினை வளர்த்திட் டொழுகுநீர் காட்டுறி னன்றிப், பின்னொரு செயலாற் கலியுகந் தன்னிற் பெருகுநீர் காணுறப் படுமோ.

(இ - ள்.) இந்நகர்வாழும் - இந்தப்பட்டணத்தில்வாழும்—மறையவர் செய்யும் - பிராமணர்கள்செய்யும—யாகந்தாமப்படிந்தன்றோ-யாகபுகைபடிந்தல்லவோ—பொன்னகர்வானோர் — தேவலோகத்திலவாழ்பவர்கள்—நிறைந்தவாயுளராய் - பூரணாயிசுடையவர்களாய்—பொருந்துதல் - தங்குதல்—இந்நகர்மறையோர் - இந்தப்பட்டணத்திலிருக்கும் பிராமணரா—உன்னரும் - நினைத்தற்கரிய—மனுவால்-மனுசாஸ்திரத்தால்- ஒருபயினைவளர்த்திட்டு - யாகத்தைவளாத்து—ஒழுகுநீர்காட்டுறினன்றி - நடக்குநிலைமையைக்காட்டினலல்லாமல்—பின்னொருசெயலால - மற்றொருமுயற்சியினல்—கலியுகந்தன்னில் - கலியுகத்திலும்—பெருகுநீர் - மிக்கமழைநீர்—காணுறப்படுமோ - காணப்படுமோ. எ - று. இதனுல் தேவர்களுக்குத்தீர்க்காயுளும், இந்நகர்க்குக் குறையாதமழையும் வந்ததற்கேது கூறப்பட்டது. கலியுகத்திலுமென்ற வும்மை, நோக்கது. காணுறப்படு

ரிந்துதீ வளர்ப்பவன் மறையோன், செந்திரு வனையாள் விருந் தினர் வயிற்றிற் றீயவிப் பவளிவர் பெருமை, நற்றெழின் மல ரோன் சொன்மக ளிருக்கு நாவினும புகன்றிடப் படாதே.

(இ - ள்.) ஐந்தொழில் - பஞ்சகிர்த்தியத்தையுடைய—ஒருவன் - ஒப் பற்றபரமசிவனது—திருவுளமகிழும - திருவுளமகிழுமாறுசெய்யத்தக்க—அறுதொழிலாளன் - ஆறுகிருத்தியங்களையுடையயவன் —மாதரசன் - மா தரசனென்போன் —பைந்தொடி - பசியவளையலையணிந்தவளவன்மனை வி —கொழுநன் - தனதுநாயகனை —தொழுதெழுதொழிலாள் - வணங் குதலையேதனதுதொழிலாகவுடையவள்—பரிந்து - விரும்பி—தீவளர்ப்ப வன்மறையோன் - யாகம்வளர்க்கு மந்தணன்—செந்திருவனையாள் - இ லக்குமிபோல்பவள்—விருந்தினர்வயிற்றில் - விருந்தினரதுவயிற்றில் — தீயவிப்பவள் - உதராக்கினியையதணிப்பவள் —இவர்பெருமை - இவ் விருவரது பெருமையானது —நற்றெழின்மலரோன் - அழகுமிக்கதாம மரைமலரையுடையபிரமன்—சொன்மகளிருக்கும் - சரஸ்வதிதங்கும்—நா வினும் - நாவினாலும்—புகன்றிடப்படாது - சொல்லப்படாது. எ - று. ஐந்தொழிலாவன ; சிருட்டி, திதி, சங்காரம், திரோபாவம், அநுக்கிர கம். அறுதொழிலாவன ; ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல், என்பன. அறுதொழிலாளன, மாதரசன், தீவளர்ப்பவ ன், மறையோன், எனவும் ; தொழுதெழுவாள், செந்திருவனையாள், தீ வளர்ப்பவள் எனவும்பிரித்துக்கூட்டிப் பொருள்கொள்க. விருந்தினர் ; நூதனமாகவருபவரை. (உக)

இன்னமா தரசன் றேவிதன் வயிற்றி னிவ்வுல கெலாஞ் செய்புண ணியத்தான், மன்னுமா ரளிகள விருந்துணக் காமர் வல்லியின் மலர்மலர் வதுபோ, லென்னையா ளுடைய நந்திவா னவன்று னெய்திவந் துதித்தன னன்று, சென்னியா லமரர் தொழுதுபூ மாரி சிந்தினர் துந்துபி முழங்க.

(இ - ள்.) இன்ன-இத்தகையதாய —மாதரசன்றேவிதன்வயிற்றின்- மாதரசன்மனைவியின் வயிற்றில் —இவ்வுலகெலாஞ்செய் புண்ணியத்தா ல் - இவ்வுலகனைத்துஞ்செய்தபுண்ணியத்தால்—மன்னும்-பொருந்திய— ஆர்-நிறைந்த —அளிகள்-வண்டுகள்—விருந்துண-விருந்தாகவுண்ண—கா மர் - அழகிய —வல்லியின்மலர் -வல்லிக்கொடியின்மலர்கள் —மலர்வது போல்-பூப்பதுபோல் —என்னையாளுடைய - என்னையடிமையாகவுடை

ய—நந்திவானவன் - நந்திகேஸ்வரன்—எய்திவந்து - கைலையினின்றுவ ந்து —உதித்தனன் - அவதரித்தான் —அன்று - அப்போது—சென்னி யால் - சிரசினால் —அமரர் - தேவர்கள் —தொழுது - வணங்கி —துந்து மிமுழங்க - தேவதுந்துமி முழங்க—பூமாரிசிந்தினர் - புஷ்பமாரிபொழிந்த னர். எ - று. நந்திவானவன்மலர் பூப்பதுபோல்தேவிதன்வயிற்றில்வந் துதித்தனனெனமுடிக்க. (உஉ)

எங்குரு நந்தி தோன்றுநாட் புதுமை யென்சொல்வாங் க ண்டுமுட் டென்னும், வெங்குண வமண ருளத்தெறி மழுவோன் வேடங்கண் டஞ்சலி செயய, வங்கொரு நேயம பிறந்தது திருமா லடியவ ருளத்தினி லெங்கள், சங்கர னிறைவ னெனவொரு ஞா னஞ் சார்ந்தது தமையறி யாமல்.

(இ - ள்) எங்குருநந்தி - எமதுகுருவாகியநந்திதேவன் —தோன்று நாள் - உதிக்குநாளில் —புதுமை யென்சொல்வாம் - நடந்தபுதுமை யையாதென்றுகூறுது —கண்டுமுட்டென்னும் - கண்டுமுட்டெனக்கூ றும் —வெங்குண - கொடியகுணங்களையுடைய —அமணர் - சமணர் கள்—உளத்து - தமதுள்ளத்தில்—எறி - எரிகின்ற —மழுவோன் - மழு வேந்திய பரமசிவனது —வேடங்கண்டு - விபூதிமுதலிய வேடங்கண் டு—அஞ்சலிசெய்ய - வணங்க—அங்கொருநேயம்பிறந்தது - அங்கோர நேயந்தோன்றிற்று—திருமாலடியவருளத்தினில் - விஷ்ணுபத்தருள் ளத்தில்—எங்கள்சங்கரன் - நமதுபரமசிவனே—இறைவனென - மே லாயகர்த்தாவென்று—தமையறியாமல் - தங்களையறியாமல்—ஒருஞான ஞ்சார்ந்தது - ஓர்ஞானமுதித்தது. எ - று. கண்டுமுட்டென்பதோடு, கேட்டுமுட்டென்பதையும் வருவிக்க, ஒன்றினமுடித்தலென்பதினால்.()

கொலைகள வழுக்கா றவாவொடு வெகுளி கொடுஞ்சொல் பொய் பயனில கூற, னிலையழி இ யொருவன் செய்நன்றி மறத்த னிந்தனை வஞ்சனை பிறாதஞ், சிலைநுதன் மடவார் கருதலென் றினைய தீமைக ளியாவும்போ யினவா, னலமலி தரும மூர்த்தி யா கியநன் னந்திவா னவன்புவி வருநாள.

(இ - ள்.) கொலை - கொலையும—களவு - களவும்—அழுக்காறு - பொ றாமையும்—அவாவொடு - பிறர்பொருளையவாவுதலும்—வெகுளி - ஒழுங் கின்றிகோபித்தலும்—கொடுஞ்சொல் - கொரேமானசொல்லும் —பொ

ளி - மிக்கவொளியையுடைய—நீறும் - விபூதியையும்—ஒண்களத்தில் - அழகியகளத்தில்—சிறந்துள் - சிறப்புற்ற—அமலலிங்கமுங்கண்டு - நின்மலமானவிஷ்டலிங்கத்தையுங்கண்டு—செறிந்தவரனைவரும் - அங்கே கூடி நின்றவரனைவரும்—வியந்து - அதிசயித்து—மறைந்து - ஒளித்துக்கொண்டு—அரன் - பரமசிவன்—குருவாவந்து - குருமூர்த்தமாகவந்து - இவைபுனைந்து - இவற்றைச்செய்து—மகவினை - குழந்தையை—வசவனென்றொருபேரறைந்தனன் - வசவனென்றோர்பெயரையிட்டனன்—என்னவறிந்தனர் - என்றறிந்தார்கள்—அமலன் - பரமசிவன்—அறிவுணின்றறிவிக்க - அறிவுக்கறிவாகநின்றறிவிக்க. எ-று. அன்று-ஏ - அசைகள். பிறந்தபிள்ளையெனமுடிக்க. செறிந்தவரனைவரும் கண்டு, வியந்து, அமலனறிவிக்கவறிந்தனரெனமுடிக்க. அரன், மறைந்து, குருவாவந்து, இவைபுனைந்து பேரறைந்தனனென முடிக்க. அன்றேயெனல் அல்லவாவென்றனாசொளிறுமையுமா. பிறந்தபிள்ளைசெறிந்தசொன்றதனால், ஒன்றொழிபொதுச்சொல்லென்னும் விதியால் பெண்பாலாக்கும். அபுகாசந்தபிறந்த வசரதநில் அவ்விடத்தினின்றோராதவன். (உஎ)

குறில்வழி லகரந் தனிநிலை யாயுங் கூடிய தகரமுன் னெ
ழுத்தென், றறிகுறி வடிவந் திரிதல்போ னந்தி யடல்விடை
மெய்திரிந் தறினு, நறுமலர் விழியிற் கண்டவ ரெல்லா நந்தி
யே யென்றுள மகிழ்ந்தார், பெறுதவ முயன்ற வன்னையும் பி
தாவும் பெறுமுவ கையினை யாருரைப்பார்.

(இ-ள்) குறில்வழி - குற்றெழுத்தின்முன்னின்ற—லகரம் - லகரமானது—தனிநிலையாயும் - றகரமாகத்திரிதலன்றி ஆய்தமாயும்—கூடிய - வருமொழிக்கு முதலாகவந்த—தகரமுன் - தகரத்திற்குமுன்—எழுத்தென்று - எழுத்தாக—அறிகுறிவடிவம் - அறிகுறிவடிவமென—திரிதல்போல் - திரிந்துவருவதுபோல—நந்தி - நந்தியென்னும்—அடல் - பலம்பொருந்திய—விடைமெய் - ரிஷபவடிவம்—திரிந்தறினும் - மாறினும்—நறு - நல்ல—மலர் - தாமரைமலர்போன்ற—விழியிற்கண்டவரெல்லாம் - தமது கண்களாற்கண்டவனைவரும்—நந்தியேயென்று - நந்திகேஸ்வரரேயென்று—உளமகிழ்ந்தார் - உள்ளத்திற்களித்தனர்—பெறுதவமுயன்ற - பெறுதற்குத்தவஞ்செய்த—அன்னையும் பிதாவும் - தாய்தந்தையரிருவரும்—பெறுமுவகையினை - அடைந்தசந்தோஷத்தை—யாருரைப்பார் யாவர்தாமெடுத்துச் சொல்லவல்லவர். எ-று. "குறில்

வழி லளத்தவ் வனைமிறுய்த யாகவும்பெறாஉ மல்வழியானே" என்னும் விதியாற்போந்த, கல்றீது - கஃறீது, என்னுமுதாரணம்போல் ரிஷப வடிவந்திரிந்து மானிடவடிவமாயதை அறிந்தறியாலுணர்ந்தனனெனக் கொள்க. தனிநிலையாயும், என்றவும்மை இறந்தது தழீஇயவெச்சவும்மை. திரிந்துறினு மென்றவும்மை இழிவு சிறப்பு. (உஅ)

ஈன்றநா டொடங்கிச் செய்கடன் முற்று மியற்றினன் மா
தர சன்றன், றோன்றுமோர் குழவிப் பதங்கடந் தெங்கோன்
சொல்குரு முன்னுறுங் காலை, யான்றமா மறைகண் முதலவா
த் தான்முன் னறிந்துள கலையெலா மறிந்தான், சான்றதா ம
திய மிரவிவந் திறுப்பத் தன்கதிர் தானடை குதல்போல்.

(இ - ள்.) ஈன்றநாடொடங்கி - உதித்தநாள்முதல் — செய்கடன்முற்றும் - பிள்ளைக்குச்செய்யவேண்டிய வுபசாரங்களனைத்தையும் — மாதரசன்றன் - மாதரசனென்னுந்தந்தை — இயற்றினன் - செய்தனன் — தோன்றும் - உண்டாக்கப்பட்ட — ஓர்குழவிப்பதங்கடந்து - ஒப்பற்றகுழவிப்பருவநிலையினின்றுநீங்கி — எங்கோன் - எமதுகர்த்தரேகிய யசவதேவன் — சொல் - போதிக்கின்ற — குரு - குருவானவர் — முன்னுறுங்காலை - தனக்குமுன்னிருக்கும்போது — ஆன்ற - சிறந்த — மாமறைகண்முதலவா - மகத்தானவேதங்கள்முதலாக — தான்முன்னறிந்துள - தான்முன்படித்தறிந்த — கலையெலாமறிந்தான் - சகலகலைகளையும் விரைவிலறிந்தான் — சான்றதா - யாவருக்குஞ்சாட்சியாக — மதியம் - சந்திரன் — இரவிவந்திறுப்ப - சூரியன்தனதிடத்துக்குவர — தன்கதிர் - தனதுபூரணகலையை — தானடைகுதல்போல் - தானடைவதுபோல. எ - று. மாதரசன்றன் செய்கடன்முற்று மீன்றநாடொடங்கிச்செய்ய, எங்கோன் குழவிப் பதங்கடந்து தான் முன்னறிந்துளகலையெலாம் சொல்குருமுன்னுறுங் காலை சான்றதாமதிய மிரவிவந்திறுப்பத் தன்கதிர் தானடைகுதல்போல றிந்தானெனமுடிக்க. இறுத்தல், சமீபித்தல். சந்திரன் தனக்கெதிரில் இரவி சிறிது சிறிது குறுகிவந்தருகியபோது தன் கலைகள் சிறிது சிறிதுவளர்ந்து முன்போற் பூரணகலைகளாவது யாவருக்குஞ்சாட்சியாய்க்காணப்படுவதுபோல இவனும் தான் முன்னறிந்துள கலைகளனைத்தையுங் குருவுக்குமுன் பூரணமா உணர்ந்தனனென்க. (உகூ)

பரமனை யிகழ்ந்து நெறியலா நெறிபோம பரமத யானை
யை யடக்க, வரமுறு கூரமை யங்குச மென்ன வுரனடி யாமெ

னு பாவிற், கொருமழ விளங்கன் றெனவருள் வசவ னொழுகுநா
ள வளங்கொள்கல் யாண, புரமுற வமண குழாத்தொடு மிக்க
புரவலன் விச்சல னிருந்தான்.

(இ - ள்.) பரமனையிகழ்ந்து - பரமசிவத்தைநிந்தித்து —நெறியலாநெ
றிபோம் - நன்மார்க்கமல்லாநெறியிற்போகும்—பரமதயானையையடக்க-
அன்னியசமயமாகியயானையையடக்குவான்வேண்டி —வரமுறு - வரத்
தால்வாய்ந்த—கூர்ஙமயங்குசமென்ன - கூர்மையுள்ளவங்குசம்போலவு
ம்—அரனடியாரெனுமாவிற்கு - சிவனடியார்களென்னும் பசுவிற்கு—ஒ
ரு - ஒப்பற்ற—மழவிளங்கன்றென - மிக்கவிளமைதங்கிய கன்றுபோ
லவும—அருள்வசவன் - கிருபாவடிவமானவசவதேவன் —ஒழுகுநாள் -
முறைகுன்றாதநடக்குநாளில்—வளங்கொள் - சகலவளப்பங்களுமமைந்
த—கலியாணபுரம் - கலியாணபுரத்தில் —உற - பொருந்த —மிக்க - ஆ
ளுகையில்மிகுந்த—புரவலன்விச்சலன் - விச்சலனென்னுமரசன் —அம
ணக்குழாத்தொடிருந்தான் - சமணக்கூட்டந்தன்னைப்புடைசூழவிருந்த
னன். வ - று. வசவன் பரமதயானையையடக்க அங்குசமென்னக் கன்
றென ஒழுகுநாளில் கலியாணபுரத்தில் விச்சலமன்னவன் அமணக்கு
ழாத்தொடிருந்தனனெனமுடிக்க. நெறியலாநெறி - இயமமுதலியநெ
றியைமறுத்தநெறியெனக்கொள்க. மழவிளமென்பது, ஒருபொருட்ப
ன்மொழிசிறப்பினின்வழாவென்னும் விதியாற்போந்த மீமிசைஞாயிறு
புனிற்றிளங்கன்று என்னுமுதாரணம்போலுமென்க. உறவென்னும் நி
கழ்காலவினையெச்சத்தை இருந்தானென்னும் வினைமுற்றோடு சேர்க்க.
பரமதயானை - அடியாரெனுமா - உருவகம். (௩௦)

படியில்கல் யாண புரமெனுந் தூசு பரசிவ பத்தியால் வி
ளர்ப்பச், கொடியபுன் சமண மாசுவர் பிடித்தாங் குவலயத் தி
ருந்திடு மந்நா, ளடியவர் செல்வ மெனும்வச வேச னங்குடன்
வந்தநா ளம்மை, யுடன்வர வந்தவ் விச்சல னகரி னுற்றன ன
ற்றவர் நெருங்க.

(இ - ள்.) படியில் - பூமியில் —கல்யாணபுரமெனும் - கல்யாணபுர
மென்கின்ற—தூசு - வஸ்திரத்தில்படிந்த—கொடிய - கொடிதாகிய—பு
ல் - அற்பத்தன்மையையுடைய—சமணமாசு - சமணமதமென்னுமழுக்
கில்—உவர்பிடித்தாங்கு - உழமண்பற்றினாற்போல —பரசிவபத்தியால்
விளர்ப்ப - சிவபக்திமேலீட்டாலவ்வஸ்திரம்வெளுத்துப்போகும்படி—வ

லயத்து - பூமியில் —இருந்திடுமெந்நாள் - இருக்குமந்நாளில் —அடியவர்செல்வமெனும் - அடியார்களது செல்வமெனத்தக்க —வசவேசன் வசவதேவனென்பவன்— உடன்வந்தநாகாம்பை - கைலாயத்தினின்றுந் தன்னோடுகூடவந்தநாகாம்பையென்பவள் —உடன்வர - தன்னைப்போலவவளுந்தொடர்ந்துவர —அந்தவிச்சலனகரின்-அந்தவிச்சலனென்பவனுடையபட்டணத்தில்—நற்றவர்நெருங்க-நல்லதவத்தினர் நெருங்கும்படியாக—உற்றனன் - இருந்தான். எ-று. புரமெனுந்தூசு - சமணமாசு - உருவகம். உவர்பிடித்தாங்கு பரசிவபத்தியால்விளர்ப்ப என்பவை - உபமானம். வலயம்,வட்டம். வட்டத்தன்மையால் பூமியென்றும். இது குணவாகுபெயர். பூமியின்நாகாம்பையுடன்-வரலாவது; தன்னைப்போல வவளும் அல்லமனைப் பூமியில் தேடிவரலையென்க. இருந்திடுமென்னும் வினைக்கெழுவாய் சமயநிலைமையென்க. (௯௧)

வந்தனன் வசவ தேவனென் றுரைப்ப மன்னவன் விச்சலனறிந்து, மந்திரி யென்று மறைந்தவுட் பகையை மலிபொடி மூடிய தழலை, வெந்தழ லென்ன வறிந்திடா தெடுப்ப மென்கைதீண் டுதலென வெதிர்போ, யுய்ந்திட வரிதாய்த் தன்மத மழிய வுடன்கொடு கோயிலுட் புகுந்தான்.

(இ - ள்.) வசவதேவன் - வசவதேவனென்பவன் —வந்தனன் - பிறந்தனன் —என்றுரைப்ப - என்றெவருஞ்சொல்ல —மன்னவன்விச்சலனறிந்து - விச்சலவரசனதையறிந்து —மந்திரியென்று - மந்திரியென்று—மறைந்தவுட்பகையை-மறைந்துநின்றவகப்பகையையறியாது—மலிபொடிமூடியதழலை - மிகுந்தநீறுபூத்த வக்கினியை —வெந்தழலென்ன வறிந்திடாது - கொடியவக்கினியென்றறியாது—எடுப்ப - எடுப்பான் வேண்டி —மென்கைதீண்டுதலென - மெல்லியகையாற்றொடுவதுபோல—எதிர்போய் - வசவனெதிர்சென்று—உய்ந்திடவரிதாய் - இனிநிலைத்தற்கருமையாய்—தன்மதமழிய - தனது சமணமதநசிக்க —உடன்கொடு - தன்னோடழைத்துக்கொண்டு —கோயிலுட்புகுந்தான் - தனதரண்மனையினுழைந்தனன். எ - று. மலிபொடிமூடிய தழலையெடுப்பத்தீண்டுதலென விச்சலமன்னவன் வசவதேவனையறிந்து மறைந்தவுட்பகையையறியாது மந்திரியென்றுன்னித் தன்மதமழியவுடன்கொடு கோயிலுட்புகுந்தானெனமுடிக்க. (௯௨)

பொருந்துமத் தாணி யிடைத்தவி சொன்று புறமத கோளரிக் குதவி, யிருந்திறற் சிங்கஞ்சுமந்தபூ வணைமே லிருந்தன

ணரசனப் போதி, லருந்திறற் றூனை காவலர் வேந்த ரமைச்சர் வெண் கவரிகொண் மாதர், நெருங்கிநிற் கரிய பேரவை யிடத் து நிகழ்ந்தமை யொன்றெடுத் துரைப்பாம்.

(இ - ள்.) பொருந்தும் - அலங்காரமமைந்த—அத்தாணியிடை - அர சிருக்கையின்கண் —தவிசொன்று - ஆசனமொன்றை—புறமதகோளரிக் கு-அன்னியமதமாகியசிங்கத்துக்கு—உதவி-கொடுத்து —இரும்-பெரிதா கிய—திறல் - பலத்தையுடைய —சிங்கஞ்சுமந்த - சிங்கஞ்சுமந்திருக்கின் ற—பூவணைமேல் - புட்பசயனத்தின்மேல் —இருந்தனனரசன்-அரசனி ருந்தான் —அப்போதில் - அத்தருணத்தில் —அருந்திறல் - மிக்கவலி யையுடைய—தானைகாவலர் - சேனாதிபதிகளும்—வேந்தர் - குறுநிலமன் னரும் - அமைச்சர் - மந்திரிகளும் —வெண்கவரிகொள் - வெண்சாமரை வீசுகின்ற—மாதர் —ஸ்த்ரீகளும் —நெருங்கிநிற்கரிய - நெருங்கிநிற்றற்கரி ய —பேரவையிடத்து - பெரிதாகிய சபையின்கண் —நிகழ்ந்தமையொன் று - விளைந்தவோரதிசயத்தை—எடுத்துரைப்பாம் - எடுத்துச்சொல்லுது ம். எ - று. மதகோளரி ; உருவகம். (௩௩)

வேறு.

இந்திர னெதிர்நின் றூடு மேந்திழை காதிற் செம்பொற்
சுந்தர வோலை யொன்று சோர்ந்தெனச் சுருண்மு டங்க
லந்தர முகட்டி னின்று மரசன்பே ரவையி டத்து
வந்தெதிர் விழுந்த தொன்று மானிடர் மருண்டு நோக்க.

(இ - ள்.) இந்திரனெதிர்நின்றூடும் - தேவேந்திரனெதிர்நின்றூடுகின் ற—ஏந்திழைகாதில் - அரம்பையினதுகாதினின்று—செம்பொன் - சிவ ந்தபொன்னாற்செய்த—சுந்தரவோலையொன்று - அழகியவோர்கம்மலான து—சோர்ந்தென - தவறிவிழுந்தாற்போல —சுருண்முடங்கல் - ஓலைச்சு ருளொன்று—அந்தரமுகட்டினின்றும் - ஆகாசவுச்சியினின்றும் —அரச ன்பேரவையிடத்து - அரசனதுபெரியசபைக்கண் —வந்தெதிர்விழுந்த தொன்று-ஒன்றுவந்தெதிரில் விழுந்தது—மானிடர் - மனிதரனைவரும்— மருண்டுநோக்க.- அதிசயித்துநோக்கும்படி. எ - று. ஏந்திழை, யன் மொழித்தொகை. சுந்தரவோலையொன்றுசோர்ந்தெனச் சுருண்முடங்க லொன்று அந்தரமுகட்டினின்றுமானிடர் மருண்டுநோக்கப்பேரவையிட த்து விழுந்ததெனமுடிக்க. (௩௪)

நின்றவ ரெடுத்து வந்து நெடுங்கையிற் கொடுப்ப வாங்கி, வென்றிகொண் மடங்க லன்னான் விரித்ததை யெழுத்து நோக்கித், தன்றலை யெழுத்தே யென்னத் தானுணர்ந் திலன்ம யங்கி, வன்றிற லமண காலன் மலர்க்கையிற் கொடுத்தா னன்றே.

(இ - ள்.) நின்றவர் - அங்கிருந்தவர்கள் —எடுத்துவந்து - எடுத்துக் கொண்டுவந்து—நெடுங்கையிற்கொடுப்ப - நீண்டகையிற்கொடுக்க—வாங்கி - வாங்கிக்கொண்டு—வென்றிகொள் - செயம்பொருந்திய —மடங்கலன்னான் - ஆண்சிங்கம்போன்றவரசன்—விரித்ததை - அவ்வோலைச் சுருளைப்பிரித்து—எழுத்துநோக்கி-எழுத்தைப்பார்த்து —தன்றலையெழுத்தே யென்ன - தனதுதலையெழுத்துப்போல்வதென்று —தானுணர்ந்திலன் மயங்கி - தானொன்றுந்தோன்றாதவனாய்ச்சித்தங்கலங்கி - வன்றிறல் - மிக்க வலியுள்ள—அமணகாலன் - சமணர்களுக்கெமன்போன்றவசவனது—மலர்க்கையில் - தாமரைமலர்போன்றகையில்—கொடுத்தான் - கொடுத்தனன். எ - று. அன்று - ஏ - அசைகள். நின்றவரெடுத்துவந்துகொடுப்ப மடங்கலன்னான் வாங்கி விரித்துநோக்கி மயங்கிக் கொடுத்தானென முடிக்க. அரசனுதலி னெடுங்கையெனவும், இவ்வுலகபாஷைகளிலொன்று மன்றாதலின் தன்றலையெழுத்தேயெனவுங் கூறினர். காலன் உவமையாகுபெயர். சமணமதத்தைத் துமிசஞ்செயற்பாலனாதலி னமணகாலனெனப்பட்டது. (ருரு)

வாங்கிய முடங்க லுக்கி வசவனா யகனிவ் வோலை
தாங்குநின் றவிசின் கீழோர் தமனிய வைப்புண் டென்ற
தோங்கிய தூண்செய் தோளா யுனக்குநான் காட்டு வேனென்
றுங்கதை யகழ்வித் தானவ் வரசர்கோ னதிச யிப்ப.

(இ - ள்.) வாங்கிய - கையில்வாங்கிய—முடங்கலுக்கி - ஓலைச்சுருளை விரித்துநோக்கி—வசவனாயகன் - வசவதேவன் —இவ்வோலை-இவ்வோலையானது—தாங்கும் - சுமக்கின்ற—நின்றவிசின்கீழ்-உனதுசிம்மாசனத்தின்கீழ் —ஓர்தமனியவைப்பு - சொர்னப்புதையலொன்று—உண்டென்றது - இருக்கின்றதெனத்தெரிவிக்கின்றது—ஓங்கிய - நீண்ட—தூண்செய் - ஸ்தம்பம்போன்ற—தோளாய் - தோள்களையுடையவரசனே—உனக்குநான்காட்டுவேனென்று - உனக்கதைப் பிரத்தியட்சமாகவிப்போதே காட்டுவேனென்றுரைத்து—அவ்வரசர்கோன் - அந்தராஜாதிராசன்—

அதிசயிப்ப - ஆச்சரியப்படும்படி—ஆங்கு - அவ்விடத்தில்—அதை - அந்தச்சிம்மாசனத்தை—அகழ்வித்தான் - தோண்டச்செய்தான். எ-று. வசவனுயகன் நோக்கி அகழ்வித்தானெனமுடிக்க. என்றெனல் சொல்லெச்சம். (கசு)

அகழ்ந்திட நிதிய வைப்பொன் ருடக மலைபி லத்திற்
புகுந்திவண் வந்து மெல்லப் புறப்படல் போலத் தோன்ற
மகிழ்ந்தன னரசர் கோமான் வசவனைக் கண்ட போதே
நிகழ்ந்த வொண் பயனு ணர்ந்து நெஞ்சக நனிவி யந்தான்.

(இ - ள்.) அகழ்ந்திட - தோண்ட—நிதியவைப்பொன்று - தனப்புதையலொன்ருகிய—ஆடகமலை - சொர்ணபர்வதம்—பிலத்தில் - பாதாளத்தில்—புகுந்து - ஊடுருவிச்சென்று—இவண்வந்து - இவ்விடத்திலோங்கிவந்து —மெல்லப்புறப்படல்போல - மெல்லப்புறப்படுவதுபோல—தோன்ற - காணப்பட—அரசர்கோமான் - ராஜாதிராசன் -மகிழ்ந்தனன் - சந்தோஷித்தவனுய்—வசவனைக்கண்டபோதே - வசவனைத்தெரிசித்தபோதே—நிகழ்ந்த - உண்டாகிய—ஒண்பயனுணர்ந்து - சிறந்தபயனைத்தெரிந்து—நெஞ்சகம் - தனதுமனதில்—நனிவியந்தான் - மிகவுமதிசயித்தான். எ - று. அகழ்ந்திடத் தோன்றவெனமுடிக்க. வினைமுற்றே வினையெச்சமாகலுமென்றதனுல், மகிழ்ந்தனனென்றதை வினையெச்சமாக்குக. அரசர்கோமான் மகிழ்ந்து உணர்ந்து வியந்தானெனமுடிக்க. (கஎ)

பயிலுநல் வினையெ மக்குப் பயந்தவிவ் வசவ தேவன்
கயிலைநன் மலைக்கி ரண்டாங் கடவுளே யென்று சொல்லி
யியலுமை மடந்தை பொய்யா ளென்பதைப் புதுக்கி னைச்
செயலினை விழியிற் கண்டோர் தெளிந்துநெஞ் சகம கிழ்ந்தார்.

(இ - ள்.) பயிலும் - பெரியோர்களாற்சொல்லப்பட்ட —நல்வினை - யாமுன்னறியற்றியநல்வினையானது —எமக்கு - எமக்கு—பயந்த - பயனுகத்தந்த —இவ்வசவதேவன் - இந்தவசவனுயகன்—நல் - நல்ல —கைலைமலைக்கு - கைலையங்கிரிக்கு—இரண்டாங்கடவுளேயென்று - இரண்டாவதுசிவனேயென்று—சொல்லி - வியப்போடுசொல்லி —இயல் - சாயலையுடைய—உமைமடந்தை - சரஸ்வதி—பொய்யாளென்பதை - பொய்த்துப்போகாளென்பதை—புதுக்கினன் - தெரிவித்தான் —அச்செயலினை -

அந்தவதிசயத்தை—விழியிற்கண்டோர் - கண்ணாற்பார்த்தவர்கள்—தெளிந்து - ஐயந்தெளிந்து—நெஞ்சகம் - தமதுமனதில்—மகிழ்ந்தார்-சந்தோஷித்தார்கள். எ - று. பயிலுநல்வினை, முன்பிறப்பிற்செய்தநல்வினையெனினுமமையும். ஓலையில்வரைந்தவாறு, அனுபவங்காட்டலின் உரைமடந்தைபொய்யாளெனப்பட்டது. என்பதையெனல்; என்றுசான்றோர்கள்சொல்வதெனக்கொள்க. சரஸ்வதிபொய்யாளெனும்வசனத்தை, அநுபவமாகத்தெரிவித்தனனெனப் பொருள்கொள்ளப்புதுக்கினனென்றொனினுமமையும். எமக்கெனல், அங்குள்ளோரைத்தழுவலால், படர்க்கைத்தன்மைப்பன்மையெனக்கொள்க. (௩அ)

மந்திரிக் கிழமை நல்கி மரபுளி யுரிமை யாற்றி
மைந்தனைப் புரக்குந் தாய்போன் மற்றெனைப் புரத்தி யென்று
சிந்தனை களிப்ப வின்சொற் செப்பியா யிடையி ருப்ப
நந்தியைத் தொடர்பு கொண்டா னாந்தகத் தடக்கை வேந்தன்.

(இ - ள்.) மந்திரிக்கிழமைநல்கி - வசவதேவருக்குமந்திரித்தனத்தைக்கொடுத்து—மரபுளி - அதற்குரியமரபையுன்னி—உரிமையாற்றி - செய்யவேண்டியவுரிமைகளைச்செய்து—மைந்தனைப்புரக்குந்தாய்போல் - மகனைக்காக்குந்தாய்போல—மற்றெனைப்புரத்தியென்று - என்னைக்காப்பாற்றக்கடவையென்று—சிந்தனைகளிப்ப - மனமகிழ—இன்சொல்செப்பி - இனியவசனங்கூறி—ஆயிடையிருப்ப - அவ்விடத்திருக்க—நந்தியைத்தொடர்புகொண்டான் - வசவதேவரை நட்புகொண்டான் —ஆந்தக- ஆகத்தக்கவாறு—தடக்கை - நீண்டகையையுடைய —வேந்தன் - அரசன். எ - று. தடக்கைவேந்தன் நல்கி ஆற்றி செப்பி நந்தியை ஆந்தகத்தொடர்புகொண்டானெனமுடிக்க. மரபுளியென்பது வசவதேவன்பிறந்த வமிசத்தை யுன்னியெனப்பொருள்கொள்க. உரிமையாற்றல் மந்திரிப்பட்டத்தைக் கொடுப்பதற்கியைந்த சடங்குசெய்தலை. புரத்தலென்பது, பிறரா லபாயம் வராது காத்தலை. ஆயிடையிருப்பவெனல் தன்னிடத்திலிருக்கவேண்டுமெனலை. (௩௯)

பெருந்தகை வசவ தேவன் பெருமைக்குத் தக்க வாறே
யருங்கடி மணஞ்செய் வித்தா னலங்கல்வேன் முருக னன்னுன்
றிருந்திய வம்ம ணத்தின் சிறப்புநாம் விரிப்ப தென்கொல்
புரந்தனை யன்று தொட்டுப் புகன்றுகல் யாண மென்றால்.

(இ - ள்.) பெருந்தகை - சிறந்தநடைவாய்ந்த—வசவதேவன் - வசவேஸ்வரரது —பெருமைக்குத்தக்கவாறே - மகிமைக்குத்தக்கபடி —அரும் - அருமையாகிய—கடி - காவலுள்ள—மணம் - கல்யாணத்தை —அலங்கல்வேல் - மாலையையணிந்தவேலாயுதத்தையுடைய —முருகனன்னான் - முருகனுக்கொப்பானவரசன்—செய்வித்தான் - செய்வித்தனன்—திருந்தியவம்மணத்தின் - சிறப்புற்றவந்தக்கலியாணத்தின்—சிறப்பு - மேன்மையை—நாம் - யாம்—விரிப்பதென்கொல் - விரிவாகச்சொல்வதெங்ஙனம் —புரந்தரே - அந்தப்பட்டணத்தை —அன்றுதொட்டு - அன்றுமுதல்—புகன்றுகல்யாணமென்றால் - கல்யாணபுரியென்று சொல்லப்படுமானால். எ - று. முருகனன்னான் கடிமணஞ்செய்வித்தானெனமுடிக்க. புரந்தனையன்றுதொட்டுப் புகன்றுகல்யாணமென்றால் திருந்தியவம்மணத்தின் சிறப்புநாம்விரிப்பதென்கொல் எனவடிமாற்றிப்பொருள்கொள்க. (சo)

இவ்வகை கல்யா ணத்தி லிருப்பநா காம்பை யென்னுந்
தவ்வைநம் வசவ தேவன் றன்பிர சாதந் தன்னா
லெவ்வமின் முத்தி மெய்யோ டிருக்கையி னளிக்கும் வீர
சைவநன் னெறிவ ளர்க்குந் தனையனை யீன்றா ளம்மா.

(இ - ள்.) இவ்வகை - இவ்வண்ணம் —கல்யாணத்திலிருப்ப - கல்யாணகோலத்திலிருக்க —நாகாம்பையென்னுந்தவ்வை - நாகாம்பையென்னுந்தமக்கை—நம்வசவதேவன்றன் - நமதுவசவேஸ்வரருடைய —பிரசாதந்தன்னால் - பிரசாதத்தினால்—எவ்வமின்முத்தி - குற்றமற்றவைக்கியமுத்தியை —மெய்யோடிருக்கையில் - உடலோடிருக்கும்போதே—அளிக்கும் - கொடுக்கின்ற—வீரசைவநன்னெறிவளர்க்கும் - நல்லவீரசைவமார்க்கத்தைவிருத்திசெய்யும்—தனையனையீன்றாள் - புத்திரனைப்பெற்றாள். எ - று. அம்மா - அசைநிலை. வசவதேவரது பிரசாதத்தால், அவர்தமக்கைதனையனையீன்றாளெனமுடிக்க. அம்மா வியப்பெனினுமமையும். மெய்யோடிருக்கையின்முத்தி ; சீவன்முத்தியை. (சக)

மைந்தனை யீன்று வந்து வசவனு மமபு னைந்தா
ணிந்தையில் கற்பு நங்கை நிகழ்திரு முகங்க ளாறு
மந்தமி றலங்க ளாறு மறிவித்தற் குலகில் வந்த
கந்தனென் றுன்ன வந்நா காம்பைதன் மகன்வ ளர்ந்தான்.

(இ - ள்.) மைந்தனையீன்று - புத்திரனைப்பெற்று—உவந்து - சந்தோஷித்து—நிந்தையில்-பழிப்பகன்ற —கற்புநங்கை - கற்புள்ளநாகாம்பிகையென்பவள்—வசவனுமம்புனைந்தாள்-வசவனெனப்பேரிட்டாள்—திகழ் - விளங்காநின்ற—திருமுகங்களாறும் - அழகியசண்முகங்களும் —அந்தமிறலங்களாறாய்—அந்தமற்றஸ்தலங்களாறெனா—அறிவித்தற்கு - அறிவிப்பான்வேண்டி—உலகில்வந்த - உலகத்திலவதரித்த —கந்தனென்றுன்ன - சுப்பிரமணியனென்று நினைக்க —அந்நாகாம்பைதன்மகன் - அந்த நாகாம்பையினதுபுத்திரன்—வளர்ந்தான் - வளர்ந்தனன். எ - று. ஸ்தலங்களாறுவன ; பக்தஸ்தலம், மாஹேஸ்வரஸ்தலம், பிரசாதிஸ்தலம், பிராணலிங்கஸ்தலம், சரணஸ்தலம், ஐக்கியஸ்தலம். (சுஉ)

வீரமா கேச னொன்னு மென்பயிர் வளர்க்க வந்த
மாரிபோ னிகரில் சென்ன வசவதே சிகனி ருப்ப
நேரிலா வசவ னும நெடுந்தகை மகவொன் றீன்று
சீருலாஞ் சங்க மேசதேசிகன் பெயர்பு னைந்தான்.

(இ - ள்.) வீரமாகேசனென்னும் - வீரத்தன்மைபொருந்தியமாகேசனென்கிற —மென்பயிர்வளர்க்க - மெல்லியபயிர்களைவளர்ப்பான்வேண்டி—வந்த - எழுந்தருளிவந்த—மாரிபோல் - மேகம்போல—நிகரில் - ஒப்பில்லாத —சென்னவசவதேசிகனிருப்ப - சென்னவசவதேசிகனிவ்வண்ணமிருக்க —நேரிலா - ஒப்பில்லாத —வசவனுமநெடுந்தகை - வசவனென்னுநாமத்தையுடையபெருந்தகையினன்—மகவொன்றீன்று - ஓர் குழந்தைபெற்று—சீருலாம் - கீர்த்திபொருந்திய—சங்கமேசதேசிகன் சங்கமேசதேசிகனென்னும்—பெயர்புனைந்தான் - பெயரைத்தரித்தனன். எ - று. நெடுந்தகை ; அன்மொழித்தொகை. வீரமாகேசனென்னுமென்பயிர் ; உருவகம். (சுந)

மொழியினு னினைவா னுேக்கான் முக்கணு னடியர் வேண்டிற்
றொழிவிலா துதவித் தாய்போ லோம்பினன் புறம தத்தோர்
வழியெலாம் வழக்கு மாற மலிபுகழ்ச் சைவ மென்னும்
பழியிலா வழிந டப்பப் பண்ணினன் வசவ தேவன்.

(இ - ள்.) மொழியினால் - வார்த்தையினாலும் —நினைவால் - நினைவினாலும்—நோக்கால் - திஷ்டியினாலும்—முக்கணனடியார் - சிவனடியார்கள்—வேண்டிற்று - வேண்டியவைகளை—ஒழிவிலாதுதவி - தவிராதுகொ

டுத்து—தாய்போலோம்பினன்-தாய்போலக்காப்பாற்றினன் —புறமதத்தோர்வழியெலாம் - அன்னியமதத்தோர்மார்க்கமெல்லாம் —வழக்குமாற - வழக்கினுல்மாறவும்—மலிபுகழ் - மிக்ககீர்த்தியையுடைய—சைவமென்னும்பழியிலாவழி - சைவமென்னுங்குற்றமற்றமார்க்கம்—நடப்ப - வழுவின்றிநடக்கவும் —பண்ணினன்வசவதேவன் - வசவதேவன்செய்தனன். எ - று. வசவதேவன் ; தாய்போலோம்பினனெனவும் மாற நடப்ப பண்ணினனெனவு முடிக்க. (சச)

அரனடி யவர்க்குத தேனு வாகிய வசவன் சீர்த்தி
விரிநில முழுதும் போர்ப்ப வெள்ளிவெற் பிணைய கன்று
தரைமிசை வநதி ருநத தவரொலா முணர்ந்து சென்றூர்
பொருவில்கல் யாணத் திற்குப் போதல்போற் கல்யா ணத்தில்.

(இ - ள்.) அரனடியவர்க்கு-சிவனடியார்க்கு—தேனுவாகியவசவன் - காமதேனுவாகியவசவதேவனது —சீர்த்தி - கீர்த்தி —விரிநிலமுழுதும் போர்ப்ப - பூமிமுழுவதும்பரவ —தரைமிசைவந்திருந்ததவரொலாம்-பூமியின்மேல்வந்திருந்தசிவகணங்களனைத்தும் —உணர்ந்து - அதனைற்றெரிந்து—வெள்ளிவெற்பிணைய்கன்று - கைலைமலையினின் றுநீங்கி— பொருவில் - ஒப்பில்லாத—கல்யாணத்துக்குப்போதல்போல் - கல்யாணத்துக்காகப்போவதுபோல —கல்யாணத்தில் - கல்யாணபுரியில் —சென்றூர் - போயினர். எ - று. தேனுவாகியவசவன், உவமானம். தவரொலாம், சீர்த்திபோர்ப்பவுணர்ந்து, வெள்ளிவெற்பிணையகன்று கல்யாணத்திற்சென்றூரொனமுடிக்க. (சரு)

பலரொடு வரினு மெள்ளும படிதனி வரினு மிக்க
நலமொடு வரினு மேனி நலமற வரினுஞ் சீர்சான்
மலைமகள் கணவன் றொண்டர் வரவுகண் ணுறினெ திர்ந்து
நிலமிசை வணங்கி யஞ்சி நின்றுநன் ருற்று நந்தி.

(இ - ள்.) பலரொடுவரினும் - பலரோடுவந்தாலும் —எள்ளும்படிதனிவரினும் - இகழும்படிதனியேவந்தாலும் —மிக்கநலமொடுவரினும் - மிக்கசிறப்போடுவந்தாலும்—மேனிநலமறவரினும் - அருவருக்கத்தக்கதேகத்தோடுவந்தாலும்—சீர்சால் - சிறப்புமிகுந்த —மலைமகள் - உமாதேவியின்—கணவன் - நாயகனுகியபரமசிவனுடைய —தொண்டர்வரவுகண்ணுறின் - அடியார்வரக்கண்டால்—எதிர்ந்து - எதிரேசென்று —நிலமி

கைவணங்கி - பூமியில்வணங்கி—அஞ்சிநின்று - பயந்துநின்று —நன்று ற்றும் - நன்குபசரிப்பன்—நந்தி - நந்திதேவன். எ - று. தொண்டர்பல ரொருவரினும் தனிவரினும் மிக்கநலமொருவரினும் மேனிநலமறவரினும் நந்திகண்ணுறின் எதிர்ந்து வணங்கி அஞ்சி நின்று நன்றுற்றுமெனமுடிக் க. பல்லோர்படர்க்கை முன்னிலைதன்மையிலென்னுஞ்சூத்திரவிதியா ல் நன்றுற்றுமெனவேயர்திணையாண்பால் படர்க்கைவினைமுற்றாக்குக.

சாதியுங் குறியு நீத்துச் சரணரைச் சிவனே யென்று
பாதபங் கயமி றைஞ்சிப் பத்திசெய் குவனன் னந்தி
தீதறு சுவைத்தீங் கண்டாற் செய்தசெங் கரும்பும் வேம்பும்
பேதமொன் றுறுமற் சாதி பெயர்விடுத் தறிதல் போல.

(இ - ள்.) சாதியுங்குறியுநீத்து - சாதியையு மாண் பெண்ணென்னுங்கு றியையுநீக்கி—சரணரை - அடியார்களை—சிவனேயென்று - சிவசொரூ பமேயென்று—பாதபங்கயமிறைஞ்சி-பாததாமரையைவணங்கி—நன்ன ந்தி - நல்லவசவேசன்—பத்திசெய்குவன்-பத்திசெய்வான்—தீதறு-குற்ற மற்ற—சுவை - மதுரத்தையுடைய —தீங்கண்டால் - இனியகற்கண்டிஞ ல்—செய்தசெங்கரும்பும் - செய்தசிவந்தகரும்பையும்—வேம்பும் - வேப் பங்காயையும்—பேதமொன்றுறுமல் - ருசியால்பேதியாமல்—சாதிபெய ர்விடுத்து - சாதிபெயரைவிட்டு—அறிதல்போல - ஒன்றென்றறிதல்போ ல. எ - று. நன்னந்தி நீத்து இறைஞ்சி தீங்கண்டாற்செய்த செங்கரு ம்பும், வேம்பும் பேதமொன்றுறுமல் சாதிபெயர்விடுத்தொருவனறித ல்போலப் பத்திசெய்குவன் எனமுடிக்க. கற்கண்டிஞற்செய்த கரும் புவடிவுக்கும் வேம்புவடிவுக்கும், தோற்றத்தாற்சாதிபேதங்காணப்படு வதன்றிச் சுவையாலொன்றுதல்போலத் தோற்றத்தாற் சாதியுங்குறியு மன்றிச் சிவநேயத்தாலின்றுதலின் சரணரைச் சிவனேயென்றுபத்தி செய்குவ னன்னந்தியெனப்பொருள்கொள்க. பாதபங்கயம்; உருவகம். ஒருவன். இசையெச்சம். (சஎ)

மாதர்க டமைய கன்ற மலிதுற வினரொண் ணில்லார்
கோதைய ருடனி ருந்துங் கொடுமய லிலரொண் ணில்லார்
மேதைகொ ளருச்ச னைக்கு வேண்டுவ முழுதுங் கொண்டு
போதுகள் வழாம லீசன் பூசைசெய் பவரொண் ணில்லார்.

(இ - ள்.) மாதர்கடமையகன்ற - பெண்பற்றகன்ற—மலிதுறவினர்- மிக்கதுறவினர்கள் —எண்ணில்லார் - எண்ணிறந்தவரும் —கோதையரு

டனிருந்தும் - மனைவியருடன்கூடியிருந்தும் —கொடுமையலிலர் - கொடி யமயக்கமற்றவர்கள்—எண்ணில்லார் - அளவிறந்தவரும்—மேதைகொள்- அறிவாலமைத்த—அருச்சனைக்குவேண்டுவ - பூசைக்குவேண்டுபவைக ள்—முழுதுங்கொண்டு - முழுவதுஞ்சேகரித்துக்கொண்டு —போதுகள்வ ழாமல் - காலந்தவறாமல் —ஈசன்பூசைசெய்பவர் - சிவபூசைசெய்பவர்க ள்—எண்ணில்லார் - எண்ணிறந்தவரும். எ - று. (சஅ)

விரதங்கள் வேறு வேறு மேவிநிற் பவரொண் ணில்லார்
பரதஞ்செய் மதர ரிக்கட் பரத்தையர் மனைக டோறுஞ்
சுரதஞ்செய் பவரொண் ணில்லார் தூயநன் னந்தி நாம
வரதன்ற னன்பின் வாழும் வழுவின்மா கேச ரம்மா.

(இ - ள்.) விரதங்கள்வேறுவேறு - வெவ்வேறுவிரதங்களை—மேவிநி ற்பவர்-கொண்டுநிற்பவர்கள் —எண்ணில்லார் - எண்ணிறந்தவர்களும் — பரதஞ்செய் - பரதநடனஞ்செய்யும்—மதர் - மதர்த்த—அரி - செவ்வரி கருவரிபடர்ந்த—கண் - கண்களையுடைய —பரத்தையர்மனைகடோறும்- தாசிகள்வீடுகள்தோறும் —சுரதஞ்செய்பவர்-புணர்ச்சிசெய்பவர் —எண் ணில்லார் - எண்ணிறந்தவர்களும்—தூய-பரிசுத்தமாகிய —நல் - நல்ல— நந்திநாமவரதன்றன் - நந்தியென்னுநாமத்தையுடையமிக்கசிறப்பினன து—அன்பின்வாழும் - அன்பினால்வாழப்பட்ட—வழுவில் - குற்றமற்ற— மாகேசர் - மாகேசராம். எ - று. அம்மா, வியப்புமொழி. எண்ணில் லாரென்பனவைந்தும் மாகேசரென்பதில், ஆமென்னுமாக்கவினைகொ ண்டுமுடிந்தன. (சக)

தீதுசெய் சமணர் முன்னர்ச் செயற்கருஞ் செய்கை காட்டி
வாதுசெய் தவர்செ ருக்கு மாய்வுசெய் திமய மீன்ற
சூதுசெய் முலைம டந்தை துணைவனார் தொண்டர்க் கெல்லாம்
யாதுசெய் குவனென் றேவ லியற்றுவன் வசவ தேவன்.

(இ - ள்-) தீதுசெய் - தீமைசெய்கின்ற—சமணர்முன்னர் - சமணர்க ளுக்குமுன்னே —செயற்கருஞ்செய்கைகாட்டி-செய்தற்கரியவதிசயங்கா ட்டி —வாதுசெய்தவர்செருக்கு - தர்க்கஞ்செய்தவர்களுடையகர்வத் தை—மாய்வுசெய்து - கெடுத்து —இமையமீன்ற - இமையவரசன்பெற் ற —சூதுசெய் - தாமரையரும்புபோன்ற —முலைமடந்தை - தனங்களையு டையவுமாதேவியின்—துணைவனார்-நாயகனாகியபரமசிவனுடைய —தொ

ண்டர்க்கெல்லாம் - அடியார்களுக்கெல்லாம்—யாதுசெய்குவனென்று - யாதுதொண்டுசெய்குவனென்று—ஏவல்-அவர்களிட்டபணியை —இயற்றுவன்வசவதேவன் - வசவதேவன்செய்வன். எ - று. வசவதேவன் செய்கைகாட்டி, மாய்வுசெய்து, ஏவலியற்றுவனெனமுடிக்க. இமயம், இடவாகுபெயர். (ருo)

உளங்தெளி சரணர் தம்மோ டிம்முறை யொழுகு நாளி
னளந்தறி வரிய சோதி யல்லமன் வரவு நோக்கி
வளங்கெழு திருக்கல் யாண வளநகர் தனில்வா னோக்கு
மிளம்பயிர் போலி ருந்தா னெம்மையா ளுடைய நந்தி.

(இ - ள்.) உளங்தெளி - உள்ளந்தெளிந்த—சரணர்தம்மோடு - சிவனடியார்களோடு —இம்முறையொழுகி - இவ்வாறுநடந்து—நாளும் - நாள்தோறும் —அளந்தறிவரிய - அளந்தறிதற்கரிய —சோதி - சோதிவடிவமான —அல்லமன்வரவுநோக்கி - அல்லமனதுவரவைப்பார்த்து —வளங்கெழு - வளமிகுந்த—திருக்கல்யாணம் - திருக்கல்யாணமென்னும்—வளநகர்தனில் - செல்வமிகுந்தபட்டணத்தில்—வானோக்கும் - மழைக்காக வானோக்குகின்ற —இளம்பயிர்போல் - இளமையாகியபயிரைப்போல— எம்மையாளுடையநந்தி-எம்மையடிமையாகவுடையநந்திதேவன் —இருந்தான்-இருந்தனன். எ-று. நந்தி ஒழுகி நோக்கி இருந்தானெனமுடிக்க.

அக்கமாதேவியுற்பத்திகதி முற்றிற்று.

ஆ கதி - கூ - இ திருவிருத்தங்கள் - ருகஉ.

---



பத்தாவது

# அக்கமாதேவி துறவுகதி

வேறு.

தன்னைக் காண வேள்கணை பாயத் தமொறு
மன்னைக் காலுஞ் சோறெனை விட்டருண் மாதேவி
மின்னைப் போலு மல்லம தேவன் விளையாடுங்
கொன்னைக் கானிற் றேடி யடைந்தமை கூறுற்றாம்.

(இ - ள்.) தன்னைக்காண-தனதெதார்த்தநிலையைக் காண்பான்வேண்டி—வேள்கணைபாய - மன்மதபாணம்பட —தமொறும் - அதனாற்றத்தளிக்கின்ற—மன்னை - அரசனை —காலுஞ்சோறெனவிட்டருள் - வாந்திசெய்தசாதத்தைப்போலருவருத்த—மாதேவி - மாதேவியென்பவள்—மின்னைப்போலும் - மின்னலைப்போலும் —அல்லமதேவன்-அல்லமதேவர்—விளையாடுங்கொன்னை - விளையாடுமெகிமையை —கானில் - வனங்களில்—தேடியடைந்தமை - தேடிப்பேறுபெற்றதன்மையை —கூறுற்றாம்-சொல்லத்தொடங்குதும். எ - று. சோறெனவிட்டு-சோற்றைப்போலநிக்கிரகித்து - அருள்மாதேவி - கிருபையுடையமாதேவியென உரையிற்கோடலென்னுமுத்தியாற்பொருள்கொள்ளினுமமையும். இதனால்மாதேவியென்பவள் தன்னைக்காணச் சோறெனவிட்டுத்தேடியடைந்ததெனக் கூட்டிமுடிக்க. மின்னைப்போலும்விளையாடுதலாவது ; உபாதித்திரியத்தில் தானென்றுமல்லனேனும் அன்பர்களையாட்கொள்வான்வேண்டி யவ்வவ்வவசரத்திலெடுத்தகோலங்கள். தேடியடைதலாவது ; தானேதானாயநிலையை. காலுஞ்சோறெனவுவமானித்தது ; அருவருப்பையுணர்த்த. கூறலூற்றாமென்றல், கூறுற்றாமென்றாயது விகாரத்தாலென்க. (௧)

கொங்கைப் பொறையைக் கொண்டு மருங்குற் கொடிவாட
வங்கைக் குடநெய் பெய்தழ லென்ன வழகெய்தி
நங்கைக் கிணைகண் டிலமுல கெங்கணு மென்ன
மங்கைப் பருவ நண்ணினண் முற்றுணர் மாதேவி.

(இ - ள்.) கொங்கைப்பொறையைக்கொண்டு - தனபாரத்தால்—மருங்குல் - இடையென்னும்—கொடிவாட - பூங்கொடிசோர—அங்கைக்குடம் - அகங்கையிலுள்ளகுடத்தினிறைந்த—நெய்பெய் - நெய்சொரிகின்ற—தழலென்ன - அக்கினியைப்போல—அழகெய்தி - அழகடைந்து—நங்கைக்கு - இந்தப்பெண்ணிற்கு—உலகெங்கணும் - உலகமுழுதும்—நாம் - யாம்—இணைகண்டிலமென்ன - சமானங்கண்டிலமென்றெவருங்கூற—முற்றுணர்மாதேவி - யாவுமுணர்ந்தமாதேவியென்பவள்—மங்கைப்பருவநண்ணினள் - எழுவகையுள் மங்கைப்பருவ மடைந்தனள். எ - று. மாதேவி கொடிவாட வழகெய்திப் பருவம் நண்ணினளென முடிக்க. மருங்குல்கொடி, உருவகம். இங்கேயெவருமென்றல், அவளழகுகண்டோரை. மருங்குற்கொடிவாடுதற்கும், நெய்பெய்தழலென்ன வழகெய்துதற்கும் இயைந்தபருவமாதலின் மங்கைப்பருவமென்றார். அகங்கையெனல் அங்கையென்றாயது அகமுனற்செவிகைவரினிடை யனகெடுமென்னும் விதியாலெனக. (உ)

வாதித் தொன்றோடொன்றெழல் போன்முலை வந்துற்றும்
பேதைப் பெண்போற் காம முளத்திற் பிறவாமற்
பாதிப் பெண்மே னியனெனு மின்பப் பதிதன்னைச்
சாதித் தெய்துஞ் சாதன மோடு தலைப்பட்டாள்.

(இ - ள்.) வாதித்து - வழக்காடிக்கொண்டு—ஒன்றோடொன்று - ஒன்றுடனொன்று - எழல்போல் - எழுதல்போல—முலைவந்துற்றும் - தனங்கள்வளர்ந்தும்—பேதைப்பெண்போல்-பேதைமைப்பருவப்பெண்கள்போல—உளத்தில் - தன்மனதில்—காமம்பரவாமல் - சற்றுங்காமமுதியாமல்—பாதிப்பெண்மேனியனெனும் - அர்த்தநாரீஸ்வரனென்னும்—இன்பம் - ஆனந்தவடிவமான—பதிதன்னை - கடவுளை—சாதித்து - சாதகஞ்செய்து—எய்தும் - ஐக்கியமெய்துகின்ற—சாதனமோடு - சாதனத்துடன்—தலைப்பட்டாள் - முயற்சிசெய்யத்தலைப்பட்டாள். எ - று. வாதித்தலாவது; நான்முன் நான்முன்னென்று வழக்கிடலை. அதாவது, தனங்களிரண்டும் ஒன்றோடொன்று நான்முந்தியெழுகின்றேனென் முந்தியெழுகின்றேனென்று வழக்கிட்டெழல்போற்பூரித்துக்காண்டலை. மாதேவியென்பாள் முலைவந்துற்றுங் காமம்பரவாமல் பதிதன்னையெய்தத் தலைப்பட்டாளெனமுடிக்க. பாதிப்பெண்மேனியனென்பது; பாதிபெண்வடிவமாகவும் பாதியாண்வடிவமாகவு மிருத்தலை. சாதித்தல்; இடையில்விடாது நிட்டைகூடலை. (ங)

தன்னை யறிந்திடை யீடற முக்கட் டலைவன்பாற்
பின்ன மறும்படி மேவு பெரும்பரு வப்பெண்ணைக்
கன்ன னெடுஞ்சிலை மன்மதன் வேரிக் கணைபாயு
மன்னு மிளம்பரு வத்தின ளென்பர் மறைப்புற்றூர்.

(இ - ள்.) தன்னையறிந்து - தன்னைத்தானறிந்து—இடையீட்ற - நீக்கமற—முக்கட்டலைவன்பால் - பரமசிவனிடத்தில் —பின்னமறும்படி மேவு - துவிதமற்றெய்தும்—பெரும்பருவப்பெண்ணை - தக்கபருவமமைந்தபெண்ணை—கன்னல் - கரும்பாகிய —நெடுஞ்சிலைமன்மதன் - நீண்டவில்லையுடையமன்மதனது—வேரி - தேனையுடைய —கணைபாயும் - அம்புபாயத்தக்க —மன்னும் - பொருந்திய —இளம்பருவத்தினளென்பர் - இளம்பருவத்தையுடையளென்று சொல்வார்கள்—மறைப்புற்றூர் - தெரியாதார். எ - று. பின்னமறும்படிமேவல், ஐக்கியநிலையை, புணர்ச்சியவாவின்னும் வராதலைப்பற்றி மன்னுமிளம்பருவத்தினளென்பர் மறைப்புற்றூரென்றூர். கன்னனெடுஞ்சிலை - கரும்பாலாகிய நீண்ட வில்லெனக்கொள்க. " (ச)

வண்டு படாதலர் சண்பக மேயென மாறூகிப்
பண்டர னோடமர் செய்மதன் வண்டு படாமேனி
கண்டிடு மொண்சுட ரோயெனு மாறு கவின்பொங்க
வொண்டவ நின்மலன் மாதமர் நாள்களி னோர்நாளில்.

(இ - ள்.) வண்டுபடாது - வண்டுகள் மொய்க்காமல் —அலர் - மலர்ந்த —சண்பகமேயென —சண்பகபுஷ்பமேயென்றுசொல்லும்படியாக—மாறூகி - விரோதமாகி - பண்டு - பூர்வத்தில் —அரனோடமர்செய் - சிவனோடுபோர்செய்த —மதன்வண்டு - மன்மதபாணம்— படாமேனி - படாதவடிவம்—கண்டிடும் - பார்த்தற்குரிய—ஒண்சுடரேயெனுமாறு -அழகியசூரியனேயெனச்சொல்லும்படி —கவின்பொங்க-அழகுமிக —ஒண்டவம் - சிறந்ததவத்தையுடைய—நின்மலன் - நின்மலனென்பவனது —மாது - மகள்—அமர்நாள்களில் - இருக்குநாள்களில்—ஓர்நாளில் - ஒருதினத்தில். எ - று. வண்டுபடாதலர்சண்பகமேயென மதன்வண்டுபடாமேனியெனக்கூறவந்தது ; சுயம்புதெரிவிப்பான் வேண்டியென்க. நின்மலன்மாது தனதுமேனி கவின்பொங்க, அமர்நாள்களிலெனமுடிக்க.)

வீரங் குறைவின் மும்மத வேழ மிசைகொண்டு
தாருந் தோளும் பொங்க மதிக்குடை தன்மேலா

மாரன் கரிமேல் வந்தன னென்ன மணிப்பொற்றே
ரூருந் தெருவிற் கௌசிக மன்ன னுலாவந்தான்.

(இ - ள்.) வீரங்குறைவில் - குறைவில்லாதவீரத்தையும் —மும்மதம் - மும்மதங்களையுமுடைய —வேழமிசைகொண்டு - யானைமேலம்பாரிகொண்டு—தாருந்தோளும்பொங்க - மாலையும்புஜங்களுமீக்கொளிர —மதிக்குடைதன்மேலாம் - தன்மேனிமுற்றப் பூரணச்சந்திரனைக் குடையாகவுடைய—மாரன் - மன்மதன் —கரிமேல்வந்தனனென்ன - யானைமேல்வந்தாற்போல—மணி - அழகிய—பொற்றேர் - பொன்னாலாகியரதங்களை—ஊருந்தெருவில் - நடத்துகின்றவீதியில் —கௌசிகமன்னன் - கௌசிகராசன்—உலாவந்தான் - உலவப்புறப்பட்டான். எ - று. கௌசிகமன்னன் வேழமிசைகொண்டு தாருந்தோளும்பொங்க வுலாவந்தானென முடிக்க. மும்மதம்; கன்னமதம், கபோலமதம், கோசமதமென்பன. மதிக்குடை உருவகம். (௬)

இயங்கட ரங்க நெடுங்கட லென்ன வெழுந்தார்ப்ப
வுயங்கு மருங்குன் மடந்தையர் பாடி யுடன்போத
வயங்க ளிவர்ந்திள மைந்தர் மருங்கி னடுத்தேகப்
புயங்க ளலங்கலி லங்க விசும்பிறை போல்வந்தான்.

(இ - ள்.) இயங்கள் - வாத்தியங்கள்—தரங்கம் - அலைகளையுடைய—நெடுங்கடலென்ன-நீண்டசமுத்திரத்தைப்போல—எழுந்தார்ப்ப - எழுந்தொலிக்கவும்—உயங்கு - தனபாரத்தால்வருந்துகின்ற —மருங்குல்மடந்தையர் - இடையையுடையமாதர்கள் —பாடியுடன்போத - பாடிக்கொண்டேகூடவேசெல்லவும்—வயங்களிவர்ந்து - குதிரைகளின்மேலேறிக்கொண்டு—இளமைந்தர் - சிறுபிள்ளைகள்—மருங்கினடுத்தேக - பக்கத்திலடுத்துச்செல்லவும்—புயங்களலங்கல் - புஜங்களிற்றரித்தமாலைகள் - இலங்க - பிரகாசிக்கவும் —விசும்பிறைபோல - தேவேந்திரனைப்போல—வந்தனன் - வந்தான். எ - று. மன்னவன் ஆர்ப்ப உடன்போத அடுத்தேக இலங்கவந்தானென முடிக்க. (௭)

மாணு நெடுங்கரி மீது புரந்தனில் வந்தானைக்
காணு மடந்தைய ரேது முணர்ந்திலர் காமத்தா
ணுணு மிழந்தனர் தூசு மிழந்தனர் நன்றாரும்
பூணு மிழந்தன ராவி யிழந்திலர் போனார்கள்.

(இ - ள்.) மாணும் - சிறந்த—நெடுங்கரிமீது - நீண்டயானையின்மேல்—புரந்தனில்வந்தானை - பட்டணத்தில்வந்தவரசனை—காணுமடர்தையர் - காணுகின்றமாதர்கள்—ஏதுமுணர்ந்திலர் - யாதுமுணராதவராயும்—காமத்தால் - காமமீக்குறலால்—நாணுமிழந்தனர் - வெட்கமுமிழந்தவராயும்—தூசுமிழந்தனர் - வஸ்திரமுமிழந்தவராயும்—நன்றுகும் - மிக்கவலங்காரமாயுள்ள—பூணுமிழந்தனர் - ஆபரணமுமிழந்தவராயும்—ஆவியிழந்திலர் - உயிர்மாத்திரமிழவாதவர்களாய்—போனார்கள் - உடன்போனார்கள். எ - று. மடர்தையர், ஏதுமுணர்ந்திலர், நாணுமிழந்தனர், தூசுமிழந்தனர், ஆவியிழந்திலர், போனார்களெனமுடிக்க. எனவே, அவனைமோகித்தலாலாயபயனை யுணர்த்தப் பெற்றும். (அ)

நல்லமதந்தா னொண்கவுளின்பா னன்றுண்ணச்
செல்லு சுரும்பே வெங்கரி யின்றாழ் செவியூடு
மெல்ல நடந்தே போவென மெல்ல விளம்பென்று
சொல்லி மறங்கூர் வேலன கண்ணார் துயர்கின்றார்.

(இ - ள்.) நல்லமதந்தான் - நல்லமதத்தை—ஒள்-ஒள்ளிய—கவுளின்பால் - கன்னத்தினிடத்தில்—நன்றுண்ண - நன்றாகவுண்ணும்படி—செல்லுசுரும்பே - போகும்வண்டுகளே—வெங்கரியின் - கொடியயானையினது—தாழ்செவியூடு - தாழ்ந்தசெவியின்கண்—மெல்லநடந்தேபோவென - மெதுவாநடந்துபோவென்று—மெல்லவிளம்பென்றுசொல்லி - மெதுவாகத்தெரிவியென்றுசொல்லி—மறங்கூர் - பாபமிகுந்த—வேலன - வேல்போன்ற—கண்ணார் - கண்களையுடையமாதர்கள்—துயர்கின்றார் - துயரப்படுகிறார்கள். எ - று. வேலனகண்ணார், சுரும்பே, மெல்லநடந்தேபோவென, மெல்லவிளம்பென்று, துயர்கின்றாரெனமுடிக்க. தாழ்தல், தொங்குதல். மறங்கூர்வேலனகண்ணாரென்பது, பயனுவமை. (கூ)

கோதையர் மாலா லிவ்வகை நோவக் கொடிமாட
வீதியி னூடு வருந்திறன் மன்னன் வினையில்லா
மர்தவ ளுரு கின்மல னுக்கோர் மகளாகுங்
காதொரு காதுங் கண்மட மாதைக் கண்டானே.

(இ - ள்.) கோதையர் - மாதர்கள்—மாலால் - மோகத்தால்—இவ்வகைநோவ - இவ்வாறுவருந்த—கொடி - கொடிகட்டிய—மாடவீதியினூடு - மாடவீதியின்கண்—வரும் - உல்லாசமாகவருகின்ற—திறல்மன்ன

ன் - வலியுள்ளவரசன்—வினையில்லா - இருவினைகடந்த—மாதவனுருகி ன்மலனுக்கு - மாதவனென்றுசொல்லப்பட்டபரிசுத்தமானவனுக்கு—ஓர்மகளாகும் - ஓர்புத்திரியாகிய—காதொடுகாதும் - காதோடுபொருதுகின்ற—கண் - கண்களையுடைய—மடம்-அறியாமைபொருந்திய—மாதை - மாதேவியென்பவளை—கண்டான் - பார்த்தனன். எ - று. மன்னன், கோதையர், இவ்வகைநோவமாடவீதியில்வருகையில், மாதவன்மகளைக் கண்டானெனமுடிக்க. (௧௦)

கண்டன ளேவிலை யோவெனு முன்னங் கழைவாங்கிக்
கொண்டனன் வாளி சொரிந்தன ளேடிக் கொடுமார
னுண்டிலை யோவென வாவி தளர்ந்தே யும்பன்மேல்
மண்டல மாளு மன்ன னிருந்தான் வசமற்றே.

(இ - ள்.) கண்டனளேவிலையோவெனுமுன்னம் - கண்டாளேவில்லை யோவென்றன்னுதற்குமுன்—கொடுமாரன்-கொடியமன்மதன் —கழை வாங்கிக்கொண்டனன்-கருப்புவில்லைவளைத்து—வாளிசொரிந்தனளேடி-வினைத் தொடிப்புஷ்பபாணங்களைச் சொரிந்தனன்—உண்டிலையோவென - உண்டோவில்லையோவெனவையுறுமாறு—ஆவிதளர்ந்தே - உயிர் சோர்ந்து—உம்பல்மேல் - யானையின்மேல்—மண்டலமாளுமன்னன்-உலகாளுமரசன்—வசமற்றிருந்தனன் - பரவசப்பட்டிருந்தான். எ - று. ஓகாரமூன்றுமையம். கழைவாங்கிக்கொண்டனனென்பதை வினையெச்சமாக்குக. கொடுமாரன் கழைவாங்கினனோயோடி வாளி சொரிந்தனனென்க. மண்டலமாளுமன்னன் உம்பன்மேலாவிதளர்ந்து வசமற்றிருந்தனனென முடிக்க. (௧௧)

கொங்கைப் பாரத் தான்மலர் வாசங் கூடாமல்
லிங்கிப் பாரிற் போது மலர்க்க ணெழின்மாவோ
மங்கைக் கோலங் கொண்டு நிலத்தில் வருமின்னோ
வங்கைக் காந்தட் பொற்றொடி யாரோ வறியேனே.

(இ - ள்.) கொங்கைப்பாரத்தால் - தனபாரத்தால்—மலர் - தாமரைமலரில்—வாசங்கூடாமல்-வசித்தற்குச்சகிக்கக்கூடாமல்—இங்கிப்பாரில் - இந்தப்பிரிதிவண்டத்தில்—போதும் - வந்த—மலர்க்கண் - தாமரைமலர்போன்றகண்களையுடைய—எழில்மாவோ - அழகியலக்ஷுமியோ—மங்கைக்கோலங்கொண்டு - பெண்வடிவங்கொண்டு—நிலத்தில்வருமின்னோ - பூமியில்வந்தமின்னலோ—அங்கை - அழகியகையாகிய—

காந்தள்-காந்தள்மலரிலவதரித்த —பொற்றொடி-பொன்னலாகியவளையலை யுடையவள்—ஆரோ - யாவளோ—அறியேன்-அறிந்திலன். எ - று. ம லருறுதியதன்றெனப் பரிற்போந்ததாகக்குறித்தல், அருத்தாபத்தி. அ ங்கைக்காந்தள், உருவகம். பொற்றொடி, அன்மொழித்தொகை. பொற் றொடி, மாவோ, மின்னே, ஆரோவறியேனெனமுடிக்க. போதல், வருதல். (கஉ)

வஞ்சி நடந்தே யென்னெதிர் வந்தே மயல்செய்தா
ணெஞ்சு தளர்ந்தேன் மாலில் விழுந்தே னிலைகாணே
னஞ்சலை யென்றே யின்றணை யாளே லனல் காணும்
பஞ்சு படும்பா டங்கச னம்பாற் படுவேனே.

(இ - ள்.) வஞ்சி - வஞ்சிக்கொடிபோல்பவள் —என்னெதிர்நடந்துவ ந்து - என்னெதிரில்மெல்லநடந்துவந்து —மயல்செய்தாள் - மோக ம்விளைத்தனள்—நெஞ்சுதளர்ந்தேன் - அதனால்மனஞ்சோர்ந்தேன்—மா லில்விழுந்தேன் - மயக்கமாயினேன் —நிலைகாணேன் - கடக்கும்வழிகண் டிலன்—அஞ்சலையென்று-பயப்படாதேயென்று —இன்று-இப்போது— அணையாளேல் - வந்துகூடாளாயின் —அனல்காணும் - நெருப்போடுகூடி ன்பட்ட—பஞ்சுபடும்பாடு - பஞ்சுபடும்பாட்டைப்போல —அங்கசன் - மன்மதனுடைய—அம்பாற்படுவேன் - அம்பினால்வருந்துவேன். எ - று. ஏகாரம், ஈற்றசை. வஞ்சி, உவமையாகுபெயர். வஞ்சி, நடந்து, வந்து, மயல்செய்தாள். அதனால், தளர்ந்தேன், என்னைக்கூடாளாயின், அன ல்காணும்பஞ்சுபடும்பாட்டைப்போல, அங்கசனம்பாற்படுவேனெனமு டிக்க. (கந)

என்ன நினைந்தே மன்னவன் வெந்தீ யிழுதாகி
முன்னர் மருங்கே நின்ற வொருத்தன் முகநோக்கிப்
பொன்னென வந்தவ் வாய்தலி னின்று புறப்பட்ட
கன்னி யணங்கார் நீயறி கென்றான் காமுற்றே.

(இ - ள்.) என்னநினைந்து - இவ்வாறெண்ணமிட்டு—மன்னவன் - அ ரசன்—வெந்தீ - அனலிற்பட்ட —இழுதாகி-வெண்ணெய்போலுருகி — முன்னர் - தனக்குமுன்—மருங்கேநின்ற - பக்கத்திலிருந்த —ஒருத்தன் முகநோக்கி-ஒருவனதுமுகத்தைப்பார்த்து —பொன்னெனவந்து-இலக் குமிபோல்வந்து —அவ்வாய்தலினின்றுபுறப்பட்ட-அந்தவாசற்படியினி ன்றுவெளிப்பட்ட—கன்னியணங்கு - தேவகன்னிபோல்பவள்—ஆர் - எ

வள்—காமுற்று - காமமுற்று—நீயறிகென்றான் - நீவிசாரியென்றான். எ - று. கன்னியணங்கு, உவமையாகுபெயர். அறிக, என்றான், என்பது, அறிகென்றானென்றாயது, விகாரத்தாலென்க. காமமென்பது, காமென்றாயது, இடைக்குறை. மன்னவன், இழுதாகி, முகநோக்கி, காமுற்று, நீயறிகென்றானென முடிக்க. (௧௪)

ஓடி யறிந்தே யன்னவன் வந்தங் குரைசெய்ய
வாடு மருங்குன் மங்கையை யின்னான் மகளென்று
நீடிய வெந்துயர் மன்ன னறிந்தெந் நெறியாலுங்
கூடுவ னிந்த வணங்கினை யென்று குறித்தேகி.

(இ - ள்.) அன்னவன் - அந்தயேவலாளி—ஓடி - விரைவிலோடி—அறிந்துவந்து - அவளைப்பற்றிவிசாரித்துவந்து —அங்கு - அவ்விடத்தில்தானே —வாடுமருங்குல் - சுருங்கியவிடையையுடைய —மங்கையை - பெண்ணை—இன்னான்மகளென்று—இன்னானதுபுத்திரியென்று —உரைசெய்ய - அரசனுக்குத்தெரிவிக்க—நீடிய - மீக்குற்ற—வெந்துயர் - கொடியகாமத்துயரையுடைய —மன்னனறிந்து - அரசன்கேள்வியுற்று—எந்நெறியாலும் - எந்தவிதத்தாலும் —இந்தவணங்கினை - இந்தப்பெண்ணை—கூடுவனென்று - புணருவேனென்று—குறித்து - மனதில்திடமாகக்குறித்து—ஏகி - சென்று. எ - று. அன்னவன், ஓடி, அறிந்துவந்து இன்னான்மகளென்றுரைசெய்ய அதைமன்னனறிந்து எந்நெறியாலுங் கூடுவனிந்தவணங்கினையென்று குறித்தேகியெனமுடிக்க. (௧௫)

கோயிலின் மேவி யிருந்துயர் ஞானக் குறிகூறுந்
தூயவ ராகிய வாரியர் தாமுஞ் சுடர் செம்பொற்
சேயிழை யாரும் வலிந்துறி லின்பு செயாரொன்று
வாயிலி னாலணை வேனென மன்னன் மனத்தெண்ணி.

(இ - ள்.) கோயிலின்மேவி - தனதரண்மனையிற்சென்று—இருந்து - இருந்துகொண்டு —உயர்ஞானக்குறிகூறும் - மேலாயஞானவிலக்கியார்த்தத்தைவிளக்கும்—தூயவராகியவாரியர்தாமும் - பரிசுத்தஞானவாசாரியரும்—சுடர் - பிரகாசம்பொருந்திய—செம்பொன் - சிவந்தபொன்னாலாகிய—சேயிழையாரும் - செம்மையாகவியற்றிய வாபரணங்களையுடைய மாதரும்—வலிந்துறின் - அழையாதுவந்தால்—இன்புசெயாரொன்று - உபசரியாரொன்று—வாயிலினால் - தூதுகாரணமாக—அணைவேனென - பு

ணர்வேனென்று —மன்னன் மனத்தெண்ணி - அரசன்தனதுள்ளத்தி னினைத்து. எ - று. மன்னன் மேவியிருந்து குருவும் மாதரும் வலிந்து நின் யாருமின்புசெயாரென்று தூதுகாரணமாக வவளைத்தழுவுவனென் று மனதினினைத்தெனமுடிக்க. குறியென்னுமிகையால், இலக்கியார் த்தமெனப்பெற்றும். அழைப்பித்துபசரித்தல்போல்வதன்றாதலின், வ லிந்துநினென்றார். (௧௬)

வேறு.

தூது வல்லநன் முதுக்குறை மாதரைத் துணிந்து
நீதி வல்லவ னிருமலன் மகடனை நீவிர்
தீதி லெம்மனைக் கிழத்தியாம படியுரை செய்து
போது மின்களென் றேவினன் வியனிலம் புரப்பான்.

(இ - ள்.) தூதுவல்ல - தூதுமுடித்தலில்வல்லமையுள்ள —நன்முதுக் குறை - மிக்கபேரறிவையுடைய—மாதரை - ஸ்த்ரீகளை—துணிந்து - தக் காரெனத்தெளிந்து—நீதிவல்லவன் - நீதிநூலில்வல்லவனாகிய —நிருமலன் - நின்மலனென்பவனது—மகடனை - புத்திரியை—நீவிர் - நீங்கள்—தீதில் - குற்றமற்ற—எம்மனைக்கிழத்தியாம்படி - எனதுமனைவியாமாறு—உரை செய்து - ஏற்கப்போதித்து —போதுமின்களென்று - வாருங்களெ ன்று —வியனிலம்புரப்பான் - அகன்றபூமியைக் காக்குமரசன் —ஏ வினன் - அவர்களைத்தூதாகவனுப்பினன். எ - று. வல்ல, குறிப்புப்பெய ரெச்சம், வியனிலம்புரப்பான்துணிந்து, உரைசெய்து, ஏவினனென மு டிக்க. கிழத்தியெனல், உரிமையின்மேனின்றது. (௧௭)

ஐய வன்னதே செய்குவ மெனப்புகன் றகத்திற்
பைய வந்துநன் னிருமலன் றிருமுகம் பார்த்து
வைய மன்னவன் கருத்தினை வகுத்தனர் மறுத்துத்
துய்ய மங்கைமீ ரெமக்கடா திதுவெனச் சொன்னான்.

(இ - ள்.) ஐய - ஐயனே—அன்னதேசெய்குவமென - அவ்வண்ண மேசெய்குதுமென்று—புகன்று - சொல்லி—அகத்திற்பையவந்து - அவ னதுவீட்டில்மெதுவாகவந்து —நன்னிருமலன் - நல்லநிருமலனென்பவ னுடைய—திருமுகம்பார்த்து - அழகியமுகத்தைநோக்கி—வையமன்ன வன் - உலகத்தையாளுமரசனது —கருத்தினைவகுத்தனர் - கருத்தை த்தெரிவித்தார்கள்—மறுத்து - அதற்குடன்படாமல்—துய்யமங்கைமீர் - பரிசுத்தமானஸ்த்ரீகளே—இது - இக்காரியம் —எமக்கடாதெனச்சொ ன்னான் - எங்களுக்குத்தகாதென்று சொல்லினன். எ - று. தூதுவல்ல

மாதர்கள், புகன்று வந்து பார்த்து வருத்தனரெனவும், நிருமலன் மறுத்து எமக்கடாதிதுவெனச்சொன்னனெனவு முடிக்க. ஐபவெனல் ; விளி.

வேந்தன் மாமனை நும்மக ளாயினவ் வேந்தன்
சார்ந்த வாழ்வெலா நுமவென வறிகிலீர் தானே
போந்த வோர்திரு மகள்வர வினைப்புறம் போக்கு
மாந்தர் யாருள ரென்றுமங் கையர்சொல வருப்பான்.

(இ - ள்.) வேந்தன் - அரசனது—மாமனை - சிறந்தமனைவி—நும்மகளாயின் - உமதுபுத்திரியானல்—அவ்வேந்தன்சார்ந்தவாழ்வெலாம் - அவ்வரசன்றனக்குரிமையாகப்பெற்றவாழ்வனைத்தும்—நுமவெனவறிகிலீர் - உமக்குரியனவாமெனவுணரவறிகிலீர் —தானேபோந்த - வலியவந்த—ஓர் - ஒப்பற்ற —திருமகள்வரவினை - ஸ்ரீதேவிவரவை —புறம்போக்குமாந்தர் - காலாலுதைத்துத்தள்ளுமனிதர்—யாருளரென்று - யாரிருக்கின்றனரென்று—மங்கையர்சொல - ஸ்த்ரீகள்சொல்ல—வருப்பான் - அதற்குவிடையாகச்சொல்லுவன். எ - று. மங்கையர்சொல அவன்வருப்பானெனமுடிக்க. வாழ்வெலாமென்பது பன்மையாதலின், நுமவெனக்கூறினர். (கக)

இம்மை சேர்பயன் கருதியே தகாதவ ரிடத்திற்
கொம்மை வார்முலை மகட்கொடை நேர்ந்தவக் கொடியா
ரம்மை யாழ்நிரை யதிடை வீழ்ந்தன ரழுந்தித்
தம்மை நோக்குந ரொருவரு மின்றியே தளர்வார்.

(இ - ள்.) இம்மைசேர்பயன் - இம்மைக்குரியபயனை —கருதியே - நினைத்தே—தகாதவரிடத்தில் - முறைறவழுவுவோரிடத்தில் —கொம்மை - அழகிய—வார் - ரவுக்கையையணிந்த—முலை - தனங்களையுடைய —மகட்கொடை - மகளைக்கொடுத்தற்கு—நேர்ந்த - சம்மதித்த—அக்கொடியார் - அந்தப்பாபிகள்—அம்மை - மறுமையில் —ஆழ் - ஆழ்ந்த—நிரையத்திடை - ரவுரவாதிநரகத்தில்—வீழ்ந்தனரழுந்தி - விழுந்தழுந்தி —தம்மைநோக்குநர் - தம்மைநோக்கியிரங்குபவர் —ஒருவருமின்றியேதளர்வார் - ஒருவருமில்லாமல்வதைவார்கள். எ - று. அக்கொடியார் நிரையத்திடை விழுந்து அழுந்தி தளர்வாரெனமுடிக்க. ஆழென்றவிலேசானே, ரவுரவாதியென்றும். (உ0)

இமக்க டாதது செய்துயிர் வாழ்வது தன்னிற்
சுமைக்க டாதமெய் விடுத்தலே நன்றெனச் சொல்வ

ரெமக்க டாதது புகன்றனிர் மங்கைமீ ரிச்சொ
னுமக்க டாததென் றியம்பலு மங்கையர் நுவல்வார்.

(இ - ள்.) தமக்கடாததுசெய்து - ஒருவன்தனக்குத்தகாத காரியத்தைச்செய்து—உயிர்வாழ்வதுதன்னில் - உயிரோடுநின்றுவாழ்வதிலும்—சுமைக்கடாத - சுமத்தற்குத்தகாத—மெய்விடுத்தலே - தேகத்தைவிடுதலே—நன்றென - நன்மையென்று—சொல்வர் - அறிவுடையோர்சொல்வார்கள்—(இங்ஙனமிருக்க) எமக்கடாதது - எமதுகுலத்துக்கடாதகாரியத்தை—புகன்றனிர் - சொன்னீர்கள்—மங்கைமீர் - ஸ்த்ரீகளே—இச்சொல் - இந்தவசனம் —நுமக்கடாததென்றியம்பலும் - உங்களுக்குத்தகாததென்றுநிருமலன்சொல்லவும் —மங்கையர்நுவல்வார் - அதற்குஸ்த்ரீகள் சொல்வார்கள். எ - று. தகாதவரிடத்திலென்பதில் உம்மைதொக்குநின்றது. அறிஞர்; தோன்றாவெழுவாய். இயம்பலுமென்பதில், நின்மலனைவருவிக்க. தன்னிலென்பது. சாரியை. (உக)

உறையில் வாளொடு மாவழங் குறுவனத் தோடி
மறவ னோர்பொரு டருகென விரத்தலே மானு
மிறைவன் வாழ்குடி தன்னிலொன் றொருபொரு ளிரத்த
லறவ னாகிய நீயிதை யறிந்திலை யந்தோ.

(இ - ள்.) உறையில் - உறையினின்றுருவிய—வாளொடு - வாளாயுதத்தோடு—மறவன் - மறவனென்னுஞ்சாதியான்—மாவழங்குறு - மிருகங்கள்சஞ்சரிக்கும—வனத்தோடி - காட்டில்விரைந்துசென்று—ஓர்பொருள்தருகென - வழிச்செல்வோரை யோர்பொருடருகென்று —இரத்தலேமானும் - இரத்தலுக்கொப்பாகும் —இறைவன் - அரசன்—வாழ்குடி தன்னிலொன்று - தனதாளுகையில்வாழ்கின்றவோர்குடித்தனக்காரனிடத்தில்—ஒருபொருளிரத்தல் - ஒருபொருளையிரந்துகேட்டலென்பது—அறவனாகியநீ - நீதிவடிவனாகியநீ—அந்தோ - ஐயோ—இதை - இக்காரியத்தை—அறிந்திலை - தெரிந்திலைபோலும். எ - று. இறைவன் தன் குடிகளிலொருவரிடத்தொருபொருளிரத்தல், மறவன் வாளொடு வனத்தோடி வழிச்செல்வோரையோர்பொருடருகெனவிரத்தலே மானுமென முடிக்க. (உஉ)

என்று மாதரார் கூறலு நிருமல னெங்கண்
மன்றல் வார்குழற் பேதையோர் வல்லணும் மனத்தைச்

சென்று கூறுமி னவண்மன மிசைந்துமை செய்யி
னன்று போமினென் றியம்பின னவர்மன நயந்து.

(இ - ள்.) என்று - இங்ஙனமாக—மாதரார்கூறலும் - ஸ்த்ரீகள்சொல்லவும்—நிருமலன் - நிருமலனென்போன்—எங்கள் - எங்களுடைய—மன்றல் - வாசனைபொருந்திய—வார்குழல் - நீண்டகூந்தலையுடைய—பேதையோ - பெண்ணோ—வல்லள் - யோசனையில்மிக்கவலியுள்ளாள் —நும்மனத்தை - உங்கள்கருத்தை—சென்று - அவளிடத்திற்போய்—கூறுமின்-சொல்லுங்கள்—அவள் - அந்தப்பெண்—மனமிசைந்துமைசெயின் - மனமிசைந்துசொல்வாளாயின்—நன்று - எமக்குடன்பாடு—போமினென்று - போங்களென்று—இயம்பினன் - சொன்னான்—அவர் - அந்தஸ்ரீகள்—மனநயந்து - மனமகிழ்ந்து. எ - று. நிருமலன் இயம்பினன் எனமுடிக்க. (உ௬)

மங்கை பாலடைந் தறைகுவர் மதன்வலி மாயக்
கொங்கை மாமுகிழ்ப் பூங்கொடி நீயருள் கூர்ந்தே
யெங்கள் கோமக னாருயிர் நிறுதகினை யென்னி
லங்கண் மாநிலத் துயிர்க்கெலா மன்னையா குவையால்.

(இ - ள்.) மங்கைபாலடைந்து - மாதேவியினிடத்திற்போய்—அறைகுவர் - சொல்வார்கள் (அதாவது) மதன்வலிமாய - மன்மதனதுவலிகுன்ற—கொங்கை - தனங்களென்னும் —மா - பெரிதாகிய—முகிழ் - மொக்கையுடைய—பூங்கொடி - பூங்கொடிபோல்பவளே —நீயருள்கூர்ந்து - நீகிருபைவைத்து—எங்கள்கோமகன் - எங்களரசனது —ஆருயிர் - நிறைந்தவுயிரை—நிறுத்தினையென்னில் - போகாமனிறுத்துவையாயின்—அங்கண் - அழகியவிடத்தையுடைய —மாநிலத்து - பெரியவிந்தப்பூமியில்—உயிர்க்கெலாம் - எல்லாவுயிர்களுக்கும் —அன்னையாகுவை - தாயாகுவை. எ - று. ஆல் - அசை. பூங்கொடி ; உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த வன்மொழித்தொகை. எனவே, அவனுக்கு மனைவியாகுதியெனக்குறிக்கப்பெற்றும். மதன்வலிமாய நீயருள்கூர்ந்து மன்னனுயிர் நிறுத்தினையென்னில், உயிர்க்கெலாமன்னையாகுவையென முடிக்க.( )

என்ன வோதலு நிருமல னின்றரு ளென்றாய்.
மன்ன னென்மனை துறக்குமோர் சூழ்ச்சியை மதித்துப்
பொன்ன னீரா சொனக்கொரு சூளினைப் பொருந்திப்
பன்னு மாயினீர் பணித்தது நன்றெனப் பகர்ந்தாள்.

(இ - ள்.) என்னவோதலும் - என்றஸ்த்ரீகள்சொல்லவும் —நிருமலனீன்றருள் - நிருமலன்பெற்ற—என்றாய் - எனதுதாயாகியமாதேவியானவள்—மன்னனால் - அரசனால்—மனைதுறக்குமோர்சூழ்ச்சியை - குடும்பத்தைத்துறக்கவேண்டுமென்கிறவோ ராலோசனையை —மதித்து - நிர்மாணித்து—பொன்னனீர் - இலக்ஷுமிபோன்றவர்களே—அரசு - இராசன்—எனக்கொருசூளினை - எனக்கோர்சபதத்தை—பொருந்தி - சம்மதித்து—பன்னுமாயின் - விடைதருவனாயின்—நீர்பணித்தது - நீங்கள்கட்டளையிட்டதை—நன்றென - நன்கேற்பனென்று—பகர்ந்தாள் - சொல்லினள். எ - று. என்தாய் மதித்துப் பகர்ந்தாளெனவும்; நீர்பணித்தது நன்றாமெனவு முடிக்க. சூழ்ச்சி; உபாயமெனினுமமையும். (உரு)

தூது சென்றவர் பொற்கொடி சொல்லிய சொல்லாற்
காதல் கொண்டன ளென்றுளந் தெரிந்துதாங் கருதி
மாது நின்பெருங் கருணைசெய் வதற்கெங்கண் மன்னன்
யாத றைந்தனை யதுசெயத் தக்கவ னென்று.

(இ - ள்.) தூதுசென்றவர் - தூதாகச்சென்றமாதர்கள்—பொற்கொடிசொல்லியசொல்லால் - மாதேவிசொல்லியசொல்லினால் —காதல்கொண்டனளென்று - சம்மதித்தாளென்று—உளந்தெரிந்து - மனதில்தெரிந்துகொண்டு—மாது - தாயே —எங்கண்மன்னன்-எங்களரசன்—நின்பெருங்கருணைசெய்வதற்கு - உனதிட்டத்தின்படிநடப்பதற்கு —தாங்கருதியாதறைந்தனை - தாங்கள்நினைத்துயாதுமொழிகின்றனையோ—அதுசெயத்தக்கவனென்று - அதனைத்தவறாதுசெய்வனென்று சொல்லி. எ-று. தூதுசென்றவர் உளந்தெரிந்து சொல்லி யெனமுடிக்க. பொற்கொடி; அன்மொழித்தொகை. (உசு)

உள்ள மார்வமோ டேகியம் மடந்தைய ருரைப்ப
வள்ள லாகிய மன்னவன் மனநனி மகிழ்ந்து
தெள்ளு மாரமு தனையவ ளிருந்துழிச் சென்று
னெள்ளு காமநோய் கொண்டவ னென்செய விசையான்.

(இ - ள்.) உள்ளமார்வமோடு - மனக்களிப்போடு —ஏகியமடந்தையர் - திரும்பிச்சென்றஸ்த்ரீகள்—உரைப்ப - அரசனிடத்திற்சொல்ல —வள்ளலாகியமன்னவன் - தாதாவாகியவரசன்—மனநனிமகிழ்ந்து - அதுகேட்டுமிகவுமனமகிழ்ந்து—தெள்ளும் - தெளிவாகிய —ஆர் - நிறைந்த—அமுதனையவள் - அமிர்தம்போல்பவளாகியமாதேவியென்பவள்—இரு

ந்துழிச்சென்றான் - இருந்தவிடத்திற்சென்றான்—எள்ளும் - இகழ்தற்கி
யைந்த —காமநோய்கொண்டவன் - காமநோய்மிக்கவன் —என்செயவி
சையான்-என்னசெய்தற்குச்சம்மதியான். எ - று. மன்னவன் மகிழ்ந்து
சென்றானெனவும், அம்மடந்தையர் ஏகி உரைப்பவெனவும், காம
நோய்கொண்டவன் என்செயவிசையானெனவுமுடிக்க. என்செயவிசை
யானென்பது; என்னகொடூரஞ் செய்யச்சம்மதியானெனப்பொருள்
கொளநின்றது. (உ௭)

வல்லி கொங்கையைப் பொன்மலை யென்னவே மதியா
னில்லு றுங்குட மாகவே யெண்ணின னுதலை
வில்லெ னும்படி நினைத்தனன் வெண்பிறை யென்னான்
சொல்லு.வன்றனக் ககப்படு மடந்தையாய்த் துணிந்து.

(இ - ள்.) வல்லிகொங்கையை - வல்லிபோன்றவளதுதனங்களை—
பொன்மலையென்னவேமதியான் - மேருமலையென்றுமதியாதவனாய்—இ
ல்லுறுங்குடமாகவே-வீட்டிலுள்ளகுடமென்றே —எண்ணினன் - நினைத்
தனன்—நுதலை - அவளதுநெற்றியை—வெண்பிறையென்னான் - மூன்றா
ம்பிறையென்றுசொல்லாதவனாய் —வில்லெனும்படிநினைத்தனன் - வில்லென்
றுசொல்லும்படியாகநினைத்தான் —தனக்ககப்படுமடந்தையாய் - தனக்
கெளிதிற்கிடைக்கும்பெண்ணாக—துணிந்து-தீர்மானித்து—சொல்லுவன்-
வாயினாலும்வதறுவன். எ - று. வல்லி ; உவமையாகுபெயர். மன்னவ
ன் காமமிக்கால் கொங்கையைக்குடமெனவும், நுதலைவில்லெனவும்,
நினைப்பதுமன்றி வாயினாலும்வதறுவனெனமுடிக்க. (உ௮)

அருள்செய் தென்னைநீ யளித்திடு மதற்குநான் செய்வ
துரைசெய் நானது செய்வனென் றரசர்கோ னுரைப்ப
வரைசெய் தோளினா யென்னைநீ வலிந்துபுல் லாமைக்
கொருசொ லுண்மைசொல் லென்றன ளொருபுடை யொதுங்கி.

(இ - ள்.) அருள்செய்து-கிருபைகூர்ந்து—என்னைநீயளித்திடுமதற்கு -
நீயென்னையிரட்சிப்பதற்கு —நான்செய்வதுரைசெய்-நான்செய்யவேண்
டுவதைச்சொல்லு —நானதுசெய்வனென்று-நானதைத்தவறாதுமுடிப்ப
னென்று—அரசர்கோனுரைப்ப - ராஜாதிராஜன்சொல்ல—வரைசெய்
தோளினாய் - மலைபோன்றபுசங்களையுடையவனே —என்னைநீவலிந்துபுல்
லாமைக்கு-நீயென்னைப்பலவத்காரமாகத்தழுவாமைக்கு —ஒருசொலுண்
மை - ஒருசொல்லுண்டு—ஒருபுடையொதுங்கி - ஒருபக்கத்திலொதுங்கி—

சொல்லென்றனள் - அதற்குயாதுகூறுதியெனக்கேட்டனள். எ - று. அரசர்கோன் உரைப்பவெனவும், மாதேவி ஒருபுடையொதுங்கி நீவ லிந்துபுல்லாமைக்கு ஒருசொல்லுண்மைசொல்லென்றன ளெனவும் கூட்டிமுடிக்க. அளித்திடல் ; உயிர்போகாதுகாத்தல். (உகூ)

நின்க ருத்திசை வாலன்றி நின்னையான் வலியே
னென்ப தற்கொரு சூளுரைக் குவன்முகி லெழுந்த
மின்கொ டிச்சிறு மருங்குலாய் கேளென வொள்வேல்
புன்பு கர்க்கருங் கடாக்களிற் றரசர்கோன் புகல்வான்.

(இ - ள்.) நின்கருத்திசைவாலன்றி - உனதுமனோசம்மதியினாலல்லாமல் —நின்னையான்வலியேனென்பதற்கு - உன்னையான்வலிந்துபுல்லே னென்பதற்கு—ஒருசூளுரைக்குவன் - ஓர்சபதஞ்சொல்லுவன்—முகிலெழுந்த—மேகத்திற்றோன்றிய—மின்கொடி - மின்னற்கொடிபோன்ற—சிறுமருங்குலாய் - சுருங்கியவிடையையுடையவளே —கேளென - யான் சொல்வதைக்கேளென்று —ஒள்வேல் - ஒள்ளியவேலோடு —புன்புகர் - சிறியபுள்ளிகளையும் —கருங்கடாம் - கரியமதசலத்தையுமுடைய—களிறு - யானைகளையுடைய —அரசர்கோன்புகல்வான் - ராஜாதிராஜன்சொல்லுவன். எ - று. அரசர்கோன் மருங்குலாய் நின்னை யான்வலியேனென்பதற்கு ஓர்சூளுளது, அதுகூறுவன், கேளுதி எனப் புகல்வானென முடிக்க. (௩0)

வேறு.

வந்தநல் விருந்தி ருப்ப மனையினுற் றருந்து வானும்
பந்தியி னுணவு வேறு பண்ணுபா தகனுந் தாயுந
தந்தையு முணவுண் ணாத சழக்கனு முச்சிப் போதி
னொந்தவர் தமைநோக் காம னுகர்ந்திடு கொடியன் றானும்.

(இ - ள்.) வந்த - தன்னிடத்தில்வந்த—நல்விருந்திருப்ப - நல்லவிருந்தினரிருக்க—மனையினுற்று - தன்னறைவீட்டிற்புகுந்து —அருந்துவானும் - காணுதுண்பானும்—பந்தியின் - பந்தியினிடத்தில்—உணவு - போசனத்தை —வேறுபண்ணுபாதகனும் - பேதஞ்செய்யும்பாவியும் —தாயுந்தையும் - தாய்தந்தையரிருவரும் —உணவுண்ணாத - உணவுண்ணமற் செய்த—சழக்கனும் - குற்றவாளியும்—உச்சிப்போதில் - நடுப்பகலில்—நொந்தவர்தமைநோக்காமல் - பசிமுதலியவற்றானொந்துவந்தவரைநோக் காமல்—நுகர்ந்திடுகொடியன்றானும் - தான்மாத்திரமுண்ணும்பாதகனும். எ - று. உணவுவேறுபண்ணுதல் ; உபசரிக்கும்விகற்பத்தை. உணவு

ண்ணாதுசெய்தவென்பது உணவுண்ணாதவென்றாயது, தன்வினைபிறவி னைமயக்கம். (௯௧)

நிந்தைசெய் யுணவி னானு நிருமலன் பூசை யின்றி
வந்துண வருந்து வானு மறுத்தலூ னுகர்விப் பானுந்
தந்தநல் வினையாற் செல்வஞ் சார்ந்தவர் தம்மைக் கண்டு
சிந்தனை பொறாத ழுங்கித் தீர்வினுண் மகிழ்வான் றானும்.

(இ - ள்.) நிந்தைசெய் - பிறராற்பழிக்கத்தக்க — உணவினானும் - பழிபாவத்தாலுணவீட்டுபவனும் — நிருமலன்பூசையின்றி - தேவபூசைசெய்யாது — வந்து - மிருகம்போல்வந்து — உணவருந்துவானும் - உணவுண்பவனும் — மறுத்தலூன் - யாவராலுமறுக்கப்பெற்றமனிதவூனை — நுகர்விப்பானும் - தின்னச்செய்பவனும் — நல்வினையால் - நல்வினையினால் — தந்த - தரப்பெற்ற — செல்வஞ்சார்ந்தவர்தம்மைக்கண்டு - பெருஞ்செல்வமடைந்தவர்களைக்கண்டு — சிந்தனைபொறாது - மனம்பொறாமல் — அழுங்கி - வருந்தி — தீர்வின் - அவர்களது செல்வமுடிவில் — உள்மகிழ்வான்றானும் - மனங்களிப்பவனும். எ - று. நிந்தைசெய்யுணவு; பழிபாவங்காரணமாகத்தேடுமுணவை. மறுத்தலூனெனினுமமையும். (௯௨)

கன்றுண விடாம லான்பால் கறந்துகொள் பவனு ஞ் செய்த
நன்றிகொல் பவனுங் கோடி நடுநிலை தவறு வானுங்
கொன்றுயிர் பதைப்ப நோக்குங் கொடியனும் போர்க் களத்திற்
றன்றலை வனைவி டுத்துச் சாய்ந்துபோ மடமை யானும்.

(இ - ள்.) கன்று - ஆவின்கன்றிற்கு — உணவிடாமல் - ஊட்டவிடாமல் - ஆன்பாற்கறந்து கொள்பவனும் - பசுவின்பால்கறந்துகொள்பவனும் — செய்தநன்றிகொல்பவனும் - ஒருவன்செய்தநன்றிக்கு மாறுசெய்பவனும் — கோடி - கோடிபங்கு — நடுநிலை - நடுநிலையினின்று — தவறுவானும் - தவறிப்போகின்றவனும் — கொன்று - ஒன்றைக்கொலைசெய்து — உயிர்பதைப்பநோக்கும் - அந்தவுயிர்வதைதையைப்பார்க்கும் — கொடியனும் - கொடியபாதகனும் — போர்க்களத்தில் - யுத்தகளத்தில் — தன்தலைவனைவிடுத்து - தனதெசமானைவிட்டு விட்டு — சாய்ந்துபோம் - தெரியாதோடிப்போகின்ற — மடமையானும் - முழுமூடனும். எ - று. நன்றிகொல்; அபகாரஞ்செய்தலை. நடுநிலை; நீதியை. (௯௩)

அடைக்கல மெனவந் தானை யளித்திடா தகற்று வானுங்,
கொடுக்குது மெனவு ளாத்துக் கொடானுமொண் கொடைவி ல

க்கி, விடுக்குறு மவனும் பாவ வினையிடத் துதவி யாகி, நடக்குறு மவனுந் தேர்ந்து நட்டபின் வஞ்சிப் பானும்.

(இ - ள்.) அடைக்கலமெனவந்தானை - நீயேதஞ்சமெனவந்தடுத்தவனை—அளித்திடாது - காப்பாற்றாமல்—அகற்றுவானும - துறத்திவிடுபவனும் — கொடுக்குதுமெனவுரைத்து-கொடுக்கிறேனென்றுறுதிமொழிசொல்லி—கொடானும் - கொடாதுமோசஞ்செய்பவனும் —ஒள்-ஒள்ளிய—கொடைவிலக்கி - ஒருவனுக்கொன்றுகொடுத்தலைத்தடுத்து —விடுக்குறுமவனும் - விடச்செய்பவனும்—பாவவினையிடத்து - பாவமுயற்சிகளில்—உதவியாகி - உதவிசெய்து —நடக்குறுமவனும் - நடப்பவனும்—தேர்ந்து - ஆராய்ந்துதெளிந்து—நட்டபின் - சிநேகித்தபின் —வஞ்சிப்பானும் - வஞ்சகஞ்செய்பவனும். எ - று. கொடைவிலக்கிவிடுத்தல்; கொடுக்காதபடி செய்தலை. (ருச)

குரவர்தம் முறைக டக்குங் கொடியனுந் துறந்து ளார்தம் வரவெதிர் கண்டெ ழாத மறவனு மறிந்தான் போன்று கரவினி லருநூல் கற்குங் கயவனும் புதிய ராகி யிரவினில் வந்த நல்லோர்க் கிடங்கொடா தகற்று வானும்.

(இ - ள்.) குரவர்தம்முறை கடக்கும் - ஆசிரிய வசனங்கடக்கும்—கொடியனும் - கொடியபாபியும் —துறந்துளார்தம் - முற்றத்துறந்தவரது—வரவெதிர்கண்டெழாத - வருதலைக்கண்டெசரியாத —மறவனும் - பாபியும்—அறிந்தான்போன்று - அறிந்தவனைப்போல —கரவினில் - வஞ்சகத்தால் —அருநூல்கற்குங் கயவனும் - அரியநூலைக்கிரகிக்குமூடனும்—புதியராகி - நூதனராகி—இரவினில்வந்தநல்லோர்க்கு - இரவில்வந்தசத்துக்களுக்கு—இடங்கொடாதகற்றுவானும் - இடங்கொடேனென்று துறத்துபவனும். எ - று. தனக்கெல்லாந்தெரிந்ததுபோல விசாரித்துக் கவர்தலை; அறிந்தான்போன்றுகரவினிலருநூல் கற்றலென்றார். (ருரு)

முன்புகழ்ந் துரைத்துப் பின்னர் முறுவல்செய் திகழ்வானுந், தன்பெருங் கிளைநல் கூர்ந்து தளர்வுற வாழ்கின்றானு, மன்புகொண் டொருவன் வைத்த வரும்பொருள் கவர்கின்றானுந், துன்புறுந் தொழில்செய் வித்துச் சொல்பொரு ளிலையென்பானும்.

(இ - ள்.) முன்புகழ்ந்துரைத்து - ஒருவனுக்குமுன்னவனைப்புகழ்ந்துசொல்லி—பின்னர் - அவனில்லாதவிடத்து—முறுவல்செய்து - நகை

த்து—இகழ்வான்ருனும் - தூஷிப்பவனும்—தன்பெருங்கிளை - தனதுபெரியசுற்றத்தார்—நல்கூர்ந்து - வறுமைமேலிட்டு—தளர்வுற - சோர்வடைய —வாழ்கின்ருனும் - தான்மாத்திரஞ் சுகித்திருப்பவனும் —அன்புகொண்டு - மிக்கவாசைகொண்டு—ஒருவன்வைத்த - ஒருவன்பாதுகாக்கவைத்த —அரும்பொருள்கவர்கின்ருனும் - அரியதிரவியங்களைவஞ்சிப்பவனும்—துன்புறுந்தொழில்செய்வித்து - விசனப்படும்படியான தொழில்செய்யும்படிசெய்து—சொல்பொருளிலையென்பானும் - தான்சொன்னகூலிகொடாதவனும். எ - று. (௩௬)

கற்பழி மனைவி யோடு கலந்திருப் பவனு மற்ருேர்
பொற்புடை மனைவி தன்னைப் புணர்வதற் கெண்ணு வானுஞ்
சொற்பொரு ளுணர்த்தி ஞனைத் தொழவுள நாணு வானும
விற்பன வலாத விற்று மெய்வளர்த் தழிகு வானும்.

(இ - ள்.) கற்பழிமனைவியோடு - விபசாரஞ்செய்யுந்தன் மனைவியோடு—கலந்திருப்பவனும் - கூடிவாழ்பவனும் —மற்ருேர் - வேருெரு—பொற்புடைமனைவிதன்னை - அழகுள்ளமனைவியை —புணர்வதற்கெண்ணுவானும் - தழுவிச்சுகிக்கநினைப்பவனும் —சொற்பொருளுணர்த்திஞனை - மஹாவாக்கியார்த்தந்தெரிவித்தவனை—தொழ - வணங்க—உளம் - தனதுள்ளத்தில்—நாணுவானும் - வெட்கப்படுபவனும்—விற்பனவலாதவிற்று - விற்கத்தகாதவைகளை விற்று—மெய்வளர்த்தழிகுவானும் - தேகத்தைவளர்த்தழிபவனும். எ - று. சொல் - தத்துவமசியை. பொருள் - இலக்கியார்த்தப்பொருளை. இங்ஙனமல்லாதவைக் கொள்ளின் முரணும். பதார்த்தமும் வாச்சியார்த்தமும், இங்ஙனஞ்சிறந்ததன்ருமையின்னெனக. (௩௭)

நலமலி வயலி லாற்றி னந்தனத் தால யத்திற்
சலமல மொழிப் போன் ருனுந் தனிவழி விலக்கு வானும்
விலைமொழி பொய்த்து விற்கும் வெய்யவா ணிகனுந் தாழ்ந்த
குலமிலி தன்குற் றேவல் கூலிகொண் டியற்று வானும்.

(இ - ள்.) நலமலிவயலில் - வளமைமிகுந்தவயலிலும்—ஆற்றில் - நதியிலும்—நந்தனத்து - பூங்காவனத்திலும் —ஆலயத்தில் - கோவிலிலும்—சலமலம் - சலமலத்தை—ஒழிப்போன்ருனும் - ஒழிப்பவனும் —தனிவழி - ஒப்பற்றமார்க்கத்தை—விலக்குவானும் - தடுப்பவனும் —விலைமொழி - ஒன்றின்விலைமொழியை —பொய்த்துவிற்கும் - பிறழ்ந்துவிற்கும்—

வெய்யவாணிகனும் - கொடியவர்த்தகனும்—தாழ்ந்த - இழிவான—குல மிலிதன் - குலங்கெட்டவனது—குற்றேவல் - அற்பப்பணியை —கூலி கொண்டியற்றுவானும் - கூலிக்குச்செய்பவனும். எ - று. (௩அ)

**உ**றவுசெய் தறிந்த சொல்லை யுவர்த்துழிக் கூறு வானும்
பிறர்பிழை தனையே நாடிப் பிறரொடு பேசுவானும்
முறைவழு வுறுகொ டுஞ்சொன் முனிவிடை மொழிகு வானு
மறிவழி மனையி சொல்லின் வழிநிற்கு மறிவி லானும்.

(இ - ள்.) உறவுசெய்து - உறவுகொண்டு—அறிந்தசொல்லை - தெரிந்தசொல்லை—உவர்த்துழி-வெறுப்புப்பிறர்தவிடத்து—கூறுவானும் - பிறரறியக்கூறுபவனும் —பிறர்பிழைதனையேநாடி - பிறர்குற்றத்தையேநாடி—பிறரொடுபேசுவானும் - பிறரோடுசந்தோஷித்துப்பேசுபவனும்—முறைவழுவுறு - ஒழுங்கற்ற —கொடுஞ்சொல் - அருவருக்குஞ்சொல்லை—முனிவிடைமொழிகுவானும் - கோபமீக்குற்றவிடத்திற் சொல்லுபவனும்—அறிவழி - புத்திகெட்ட—மனைவிசொல்லின்வழிநிற்கும் - பெண்சாதிசொல்வழிநடக்கும்—அறிவிலானும-புத்திகெட்டவனும். எ - று. (௩௯)

**க**லந்தவர் தமைப்பி ரித்துக் கலகங்கண் டிடவல் லானும்
புலந்தரு நூலி னில்லாப் பொருளினைக் கூறு வானு
நலந்தனை யழுக்கா றெய்தி நகைத்திகழ் கிற்போன் றானு
மெலிந்தவ ரிடத்து மிக்க வெகுளியைப் பெருக்கு வானும்.

(இ - ள்.) கலந்தவர்தமைப்பிரித்து - சிநேகிதரைவேறுபடுத்தி—கலகங்கண்டிடவல்லானும் - கலகம்விளைத்துக்காணவல்லவனும் —புலந்தருநூலின் - அறிவைவிளைக்குநூல்களில்—இல்லாப்பொருளினைக் கூறுவானும் - இல்லாதவர்த்தத்தைச் சொல்பவனும்—நலந்தனை - ஒருவனதுநல்லநடக்கையை —அழுக்காறெய்தி - பொறாமைகொண்டு —நகைத்து - சிரித்து —இகழ்கிற்போன்றானும - பழிப்பவனும் —மெலிந்தவரிடத்து - செல்வங்குன்றியவரிடத்தில் —மிக்கவெகுளியை —மிக்ககோபத்தை—பெருக்குவானும் - வளர்ப்பவனும். எ - று. சுருதிப்பிரமாணத்திற்கு மாறுகப்பொருள்கூறலை - புலந்தருநூலிலில்லாப் பொருளினைக் கூறுவானு மென்றார். (௪O)

**பு**ண்ணியம் பிறர்பொ ருட்குப் புரிபவன் றானு மிந்த
மண்ணிடையின்பத் திற்கா மறுமைசெய் தொழில்வி டுக்குந்

தண்ணிய வறிவி லானுந் தவத்தனை யிகழ்கிற் பானும்
பண்ணிய வினையி லென்றும் பாவமே பயில்கின் றானும்.

(இ - ள்.) பிறர்பொருட்கு - அன்னியரதுபொருளுக்கு —புண்ணியம புரிபவன்றானும் - புண்ணியஞ்செய்பவனும் —இந்தமண்ணிடை - இந்தப்பூமியினிடத்திலுள்ள—இன்பத்திற்கா - சுகத்திற்காக —மறுமைசெய்- மறுமைபற்றிச்செய்யும் —தொழில்விடுக்கும் - புண்ணியகருமங்களை விடுகின்ற —தண்ணியவறிவிலானும் - தக்கவறிவில்லாதவனும் —தவத்தனை யிகழ்கிற்பானும் - சத்துக்களையிகழ்பவனும் —பண்ணியவினையில் - தான் செய்யுமுயற்சிகளில் —என்றும் - எப்போதும் —பாவமே - பாவசங்கற்பங்களையே —பயில்கின்றானும் - பழகுபவனும். எ - று. கண்டதேகாட்சி கொண்டதேகோல மென்பா ரிவரெனவுணர்த்த; இந்தமண்ணிடையின்பத்திற்கா மறுமைசெய்தொழில்விடுக்குந் தண்ணியவறிவிலானென்றார். (சஃ)

ஆவனு னுண்மை நீயா தறைந்ததனை யதுசெய் தன்றி
மேவுவே னுயி னென்று வேள்விரும பழகன் கூறக
காவிநோ விழிமா தேவி கருத்திசைந் தற்றே யாயிற்
போவமவா வென்று சொன்னா புரவல னுவகை பூத்தான்.

(இ - ள்.) ஆவனுன் - நானுவன்—உண்மை - இதுசத்தியமே—நீயாதறைந்தனை - நீயேதுசொல்கின்றையோ—அதுசெய்தன்றி - அதனைச்செய்துமுடியாமல்—மேவுவேனுயின் - புணர்தற்கிசைவேனுயின்—என்று - என்று—வேள்விரும்பழகன்கூற - மன்மதனுமயாவத்தக்கவழகமைந்தவரசன்கூற —காவிநேர்விழிமாதேவி - நீலோற்பலம்போன்றகண்களையுடையமாதேவியானவள்—கருத்திசைந்தற்றேயாயில் - திரிகரணமொத்திணங்கனஞ்செய்யச் சம்மதிப்பையாயின்—போவம்வாவென்றுசொன்னாள் - போகுதும்வாவென்றுசொல்லினள்—புரவலனுவகைபூத்தான் - அரசன் மிகச்சந்தோஷித்தனன். எ - று. வேள்விரும்பழகன் நீயாதறைந்தனை யதுசெய்தன்றி மேவுவனுயினுவனுனுண்மையென்றுகூற வெனவும், மாதேவி அற்றேயாயின்போவம்வாவென்று சொன்னாளெனவு முடிக்க. கருத்தென்றதனால் திரிகரணமென்றாம். (சஉ)

கோயிலின் முன்னர் சென்றான் கொற்றவன் சிவிகை யேற்றி
யாயிழை மடந்தை நல்லா ரருகுசூழ் வுற்றுச் செல்லப்

போயின ளரசர் கோமான் புக்குழிப் புகபா ளொள்வேற்
சேயரி நெடுங்கட் செவ்வாய்த் திலகவா ணுதன்மா தேவி.

(இ - ள்.) கோயிலின்முன்னர் - அரண்மனைக்குமுன்னே—கொற்றவ ன்சென்றான் - அரசன்போயினன்—சிவிகையேற்றி - பல்லக்கையிலே ற்றி—ஆயிழைமடந்தைநல்லார் - சிறந்தவாபரணங்களையுடைய ஸ்த்ரீக ள்—அருகுசூழ்வுற்று - பக்கத்திற்சூழ்ந்து—செல்ல - போக—அரசர்கோ மான்புக்குழி - ராஜாதிராஜனுளைழந்தவிடத்தில்—ஒள்வேல் - ஒள்ளிய வேலாயுதத்தையொத்த—சேயரி - செவ்வரிபடர்ந்த —நெடுங்கண் - நீ ண்டகண்களையும்—செவ்வாய் - சிவந்தவாயையும்—வாள் - ஒளிவுபொ ருந்திய—திலகநுதல் - சாந்தணிந்தநெற்றியையுமுடைய—மாதேவி - மா தேவியென்பவள்—போயினள்புக்காள் - போய்நுழைந்தனள். எ - று. கொற்றவன் கோயின்முன்னர் சென்றானெனவும்; மாதேவி தன்னைம டந்தையர் சிவிகையேற்றி அருகுசூழ்வுற்றுச்செல்லக்கோமான் புக்குழிப் போயினள் புக்காளெனவுங் கூட்டிமுடிக்க. (முற்றெச்சமாயிற்று.)(௪௩)

மடந்தையைத் தனிக்கண் டங்கி மருவிய வரக்கே போல
வுடைந்துநெக் குருகி யாற்றா வுள்ளமோ டிளம்பூங் கொம்பே
கடந்திடற் கரிய காமக் கடல்கடந் தேறக் கொங்கைக்
குடந்தரத் திருவு ளத்திற் கோடியென் றரசி றைஞ்ச.

(இ - ள்.) மடந்தையை - மாதேவியை—தனிக்கண்டு - தனியேகண் டு—அங்கிமருவியவரக்கேபோல - அக்கினிபற்றியவரக்கைப்போல —உ டைந்து - நெஞ்சுடைந்து—நெக்குருகி - கரைந்து—ஆற்றாவுள்ளமோடு - சகியாதமனமோடு—இளம் - இளமையாகிய—பூங்கொம்பே - பூங்கொம் புபோல்பவளே—கடந்திடற்கரிய - யாவராலுங்கடத்தற்கரிய —காமக்க டல் - காமமாகியகடலை—கடந்தேற - யான்கடப்பான்வேண்டி—கொங் கைக்குடம் - தனங்களாகியகுடங்களை—தர - எனக்குக்கொடுக்க —திரு வுளத்திற்கோடியென்று - திருவுளமிரங்குவாயென்று —அரசிறைஞ்ச - அரசன்வணங்க. எ - று. அரசன் மடந்தையைத் தனிக்கண்டு உள்ள முருகி - இறைஞ்சவென முடிக்க. பூங்கொம்பேயென்பது; உவமை த்தொகைப்புறத்துப் பிறந்தவன்மொழித்தொகை. காமக்கடல் கொங் கைக்குடமிவ்விரண்டும் உருவகம். (௪௪)

காவலன் காம மிக்க கழிபடர் கிளவி கண்டு
பாவைபுன் முறுவல் செய்து பண்பெனுந் தொடரால் யாப்புண

டோவல்செய் யாது நிற்கு மொருகளி றனையா யான்சொ
லேவல்செய் திட்ட பின்ன ரென்னொடு பேசு கென்றாள்.

(இ - ள்.) காவலன் - அரசனது—கழிபடர் - மீக்குற்றுப்படர்கின்ற—காமமிக்ககிளவிகண்டு- காமமிகுந்தசொல்லைக்கண்டு—பாவை - பிரதமைபோன்றமாதேவி —புன்முறுவல்செய்து - புன்னகைகொண்டு—பண்பெனுந்தொடரால் - நற்குணமென்னுந்தொடர்பினால்—யாப்புண்டு - கட்டுண்டு —ஓவல்செய்யாதுநிற்கும் - ஒழியாதுநிற்கின்ற —ஒரு - ஒப்பற்ற—களிறனையாய் - யானைபோல்பவனே —யான்சொல் - யானுனக்கிட்ட —ஏவல்செய்திட்டபின்னர் - கட்டளையைமுடித்தபின்பு—என்னொடுபேசுகென்றாள் - என்னோடுபேசென்றுசொன்னாள். எ - று. பேசுக என்றாளென்பது பேசுகென்றாளென்றாயது விகாரத்தாலெனக. பாவை, உவமையாகுபெயர். பாவை காவலன்கிளவிகண்டு புன்முறுவல்செய்து பேசுகென்றாளெனமுடிக்க. (௪௫.)

ஏதுநான் செய்வ தன்ன தியற்றுவ னறைதி யென்ன
வோதினு னரச னோத வொண்டொடி யயன்மா றேடுஞ்
சோதிமா சிவலிங் கத்தைத் தூயையாய்க் கரபீ டத்திற்
போதினு லருச்சித் தென்னைப் பொருந்துதி பின்ன ரென்றாள்.

(இ - ள்.) ஏதுநான்செய்வது - யான்செய்யவேண்டுவதியாதோ—அன்னதியற்றுவன - அதனையான்முடிப்பன்—அறைதியென்ன - அதைச்சொல்லென்று —ஓதினனரசன் - அரசன்சொல்லினன் —ஓத - அவன்சொல்ல—ஒண்டொடி - அழகியவளையலையுடையவள் —அயன்மாறேடும் - அரிபிரமாக்கள்தேடத்தக்க —சோதிமாசிவலிங்கத்தை - சோதிவடிவமாகிய மகத்தான சிவலிங்கத்தை —தூயையாய் - நீபரிசுத்தமுடையவனாய் —கரபீடத்தில் - உனதுகையாகியபீடத்தின்கண் —போதினலருச்சித்து - புஷ்பங்கொண்டு பூசித்து —பின்னர் - பின்பு —என்னைப்பொருந்துதியென்றாள் - என்னைப்புணர்தியென்றனள். எ - று அரசன் ஓத ஒண்டொடி அருச்சித்து என்னைப் பொருந்துதியென்றாளென்முடிக்க. ஒண்டொடி அன்மொழித்தொகை. கரபீடம், உருவகம். (௪௬.)

எல்லையில் காமம் பொங்க விளமுலை ஞெமுங்கத் தோளாற்
புல்லுவ னென்றெ ழுந்த புரவலன் றனைத்த டுத்துச்
சொல்லிய தன்ன மன்னாள் சுரத்துணீர் முகந்து வாயிற்
செல்லுமொண் கரத்தை யோடிச் சென்றுபற் றுதலை யொக்கும்.

(இ - ள்.) எல்லையில்காமம்பொங்க - எல்லைகணிக்கப்படாதகாமமேலிட —(அதனால்) இளமுலையெழுங்க - இளமையாகியதனங்களழுந்த — தோளால் - கைகளால் —புல்லுவனென்றெழுந்த - புணருவேனென்றெழுந்திருந்த —புரவலன்றனைத்தடுத்து - அரசனைத்தடுத்து —அன்னமன்னார்சொல்லியது - அன்னம்போன்ற மாதேவியென்பவள்சொல்லியது —சுரத்துள் - பாலைவனத்தில் —நீர்முகந்து - நீரையள்ளி —வாயிறசெல்லும் - வாய்க்குக்கொண்டுபோகும் —ஒண்கரத்தை - அழகியகையை —ஓடிச்சென்று - ஓடிப்போய் —பற்றுதலையொக்கும் - பிடித்துக்கொள்ளுதலையொக்கும். எ - று. அன்னமன்னார் தடுத்துச்சொல்லியது யாதுபோல்வதெனின் ; பாலைவனத்திற் குடிப்பான்வேண்டிச் சலத்தையள்ளி வாயிற்செல்லுங்கரத்தை மற்றொருவனோடிப்போய்ப் பிடித்துக்கொள்வதுபோலும். சலமரிதாதல்பற்றிச்சுரத்துளென்றார். (சஎ.)

முகையிடை முருகுண் டாயின் முளையிடை விளைவுண் டாயின்
மகவிடை மதன வின்பம் வருவதுண் டாயிற் சைவப
பகையொடு மருவி நின்ற பார்த்திபன் றனது ளத்தி
னுகையிடை யமலன் போற்று மொழுக்கமும் வந்து நண்ணும்.

(இ - ள்.) முகையிடை முருகுண்டாயின் - அரும்பில்வாசனையுண்டாகுமானால் —முளையிடைவிளைவுண்டாயின் - முளையில்விளைவுண்டாகுமானால் —மகவிடை - குழவிப்பருவத்தில் —மதனவின்பம்வருவதுண்டாயின் - காமவின்பம்வருவதுண்டாகுமானால் —சைவப்பகையொடு மருவிநின்ற - சைவப்பகைஞனாகின்றுள்ள —பார்த்திபன்றனதுளத்தில் - அரசனதுள்ளத்தில் — உகைவிடை - வாகனமாகரிஷபத்தை யூருகின்ற — அமலன் - பரமசிவனை — போற்றுமொழுக்கமும் - பூசிக்குமொழுக்கமும் —வந்துநண்ணும் - வந்துசேரும். எ - று. முகையிடைமுருகும் முளையிடைவிளைவும் மகவிடைமதனவின்பமும் வருவதுகூடாமையின் இவற்றை யுவமைகூறியதென்க. அமலன்போற்று மொழுக்கமும் என்பதிலும்மையிறந்தது தழீஇயவெச்சவும்மை. இறந்ததாவது சிவமதத்தையேற்றலோடென்லை. .(சஅ)

செப்புறுஞ் சூணி னைந்து தீண்டில னரச னின்று
முப்புரஞ் சீறு முங்கண் முதல்வன்பூ சனைதான் யாங்க
ளெப்பொழு துஞ்செய் தக்க தன்றெனை யிணையி லாகின்
றுப்புறு தோளும் யாங்க டொடுவதன் றெனப்பு கன்றாள்.

(இ - ள்.) செப்புறுஞ்சூணினைந்து - தாஞ்சொன்னசபதத்தைநினைத்

து—அரசன் - மன்னவன்—இன்றுதீண்டிலன் - இப்போதுதீண்டாதவ ருய்—முப்புரஞ்சிறும் - திரிபுரமெரித்த—உங்கண்முதல்வன் பூசனை தான் - உங்கள்சிவபூசையை—யாங்கள் - நாங்கள்—எப்பொழுதும் - எக்காலத்தும்—செய்தக்கதன்றெனா-செய்யத்தக்கதல்லவென்றுகூற— (அதற்குமாதேவியானவள்) இணையிலா - ஒப்பில்லாத—நின் - உன்னு டைய—துப்புறுதோளும் - வலியுள்ளபுசங்களையும்—யாங்கள்தொடுவ தன்றெனா - நாங்கள்தொடத்தக்கதல்லவென்று—புகன்றாள் - சொன் னாள். எ - று. அரசன் உங்கள்சிவபூசையைச் செய்வதெமக்கடாதெ னக்கூற அதற்குமாதேவி அங்ஙனமுடன்படாத நினதுதோள்களைத் தொடுவ தெமக்கடாதெனக் கூறினளென்க. தோளுமென்பதிலும மை இழிவுசிறப்பு யாங்களென்னுமிரண்டும் தத்தஞ்சமயத் தன்மை ப்பன்மையைக் காட்டுகின்றன. தீண்டிலனென்றதை வினையெச்சமாக் க்குக. (௬௯.)

மட்டவிழ குழன்மடந்தை வாயுரை கையும் வாயுங்
கட்டிய தெனவ டங்கிக் காமமிந் தனமி றீபபோற்
கெட்டிட வறிதி ருந்தான் கிளாமணித் தூணசெய தோளா
னெட்டிலை யயில்வேற் கண்ணா ணீத்தனள போக வெண்ணி.

(இ - ள்.) மட்டு - தேனையுடைய—அவிழ் - விரிந்த மலர்களையணிந் த—குழல்மடந்தை - கூந்தலையுடையமாதேவியின்—வாயுரை -வாய்மொ ழியானது—கையும் வாயுங்கட்டியதென - கைவாய்களைக்கட்டிவிட்டா றபோல—அடங்கி - பதைப்பற்று—இந்தனமிறீப்போல் - விறகற்றவன லைப்போல—காமங்கெட்டிட - காமங்கெட்டுப்போக—கிளர் - விளங்கா நின்ற—மணி - ரத்நங்கள்பதித்த—தூண்செய் - வச்சிரத்தம்பம்போன் ற—தோளான்-தோள்களையுடையவரசன்—வறிதிருந்தான் -சும்மாவிருந் தனன்—நெட்டிலை - நீண்டவிலைபோன்ற—அயில் - கூர்மைபொருந்தி ய—வேல் - வேல்போன்ற—கண்ணாள் - கண்களையுடைய மாதேவி— போகவெண்ணி - அல்லமனைத்தேடிப்போகவெண்ணங்கொண்டு—நீத் தனள் - இல்லறத்தைநீக்கிவிட்டாள். எ - று. போகத்தைநீத்தனளெ னினுமமையும். அவிழென்பதனால் மலரைவருவித்தாம். தூண்செய் தோளான் அடங்கிவறிதிருந்தானெனவும், அயில்வேற்கண்ணாள் போக வெண்ணி நீத்தனளெனவுங் கூட்டிமுடிக்க. (௭௦)

துறவெனு மரசு நெஞ்சத் தொன்னகர் கொளவ வாவா
மிறைவன தாணை யெல்லா மிரிதல்போற் பூண்கள் யாவு

மறுவையு மகற்றி யோதி யவிழ்த்து வார் மைக்கு ழம்பின்
மறைவுறு மணிப்பொற் பாவை போலுடன் மறைய விட்டாள்.

(இ - ள்.) துறவெனுமரசு - துறவென்னுமரசன்—நெஞ்சம் - மனமென்னும்—தொல் - பழமையாகிய—நகர்கொள - பட்டணத்தைப்பிடித்துக்கொள்ள—அவாவாம் - ஆசையாகிய—இறைவனதானையெல்லாம் - அரசாக்கினையெல்லாம்—இரிதல்போல் - ஓடுவதுபோல—பூண்கள்யாவும்- ஆபரணங்களனைத்தையும்—அறுவையும் - வஸ்திரத்தையும்—அகற்றி - எறிந்து—ஓதியவிழ்த்து - கூந்தலைவிரித்து—வார் - மிகுந்த—மைக்குழம்பின்மறைவுறு-குழம்பான மையினால்மறைவுற்ற—மணி - அழகிய—பொற்பாவைபோல் - பொன்பிரதமையைப்போல—உடல்மறைய - உடல்முழுதுமறைய—விட்டாள் - மயிரைவிட்டனள். எ - று. துறவெய்தியக்கண் - நெஞ்சத்தவாநில்லாமையின் இங்ஙனமுருவகித்தார். அகற்றி - அவிழ்த்து உடல்மறையவிட்டாளெனக்கூட்டி முடிக்க. சேனையெனப்பொருள்கொண்டு தனதானைகளென்றாற்போல இறைவனதானையெல்லாமெனப்பாடமோதி முடிக்கினுமமையும். இரிதல் பயந்தோடுதலை. துறவை அரசனெனவும், நெஞ்சை நகரமெனவும், அவாவைத் தானையெல்லாமெனவுங் கோடற்குக் கொளவெனலும் இரிதலெனலும், இடந்தந்துநின்றன. நெஞ்சு முன்னர்பாசமிருத்தற்கும் அவாக்களதனைக்காத்தற்கும் நகரமாநின்றாற்போல; இப்போதவற்றிற்கெதிர்மறையாயவற்றிற்கு நகரமாநின்றதெனக்கொள்க. (௫௧)

மருளடைந் தனள்கொ லென்று மருண்டுமன் னவனிருப்பத்
தெருளடைந் தங்கை கொண்ட சிவலிங்கத் தொடுநி னைந்த
பொருளடைந் தெனம கிழ்ச்சி பொங்கமன் னவனை நீங்கி
யருளடைந் தொழுகு கண்ணு ளணிமறு கூடு சென்றாள்.

(இ - ள்.) மருளடைந்தனள்கொலென்று - பித்துமேலிட்டனளோவென்று—மன்னவன் - அரசன்—மருண்டிருப்ப - ஒன்றுந்தோன்றாதிருக்க—தெருளடைந்து - தெளிவுற்று—அங்கைகொண்ட - உள்ளங்கையில்வைத்த—சிவலிங்கத்தொடு - இஷ்டலிங்கத்தோடு—நினைந்தபொருளடைந்தென - தானினைத்திருந்தமெய்ப்பொருளடைந்தாற்போல—மகிழ்ச்சிபொங்க - ஆனந்தமீக்கொள—மன்னவனைநீங்கி - அரசனைவிட்டுநீங்கி—அருளடைந்தொழுகுகண்ணாள் - கிருபைமேலிட்டொழுகுகின்றகண்களையுடையமாதேவியானவள்—அணிமறுகூடுசென்றாள் - அழகியவீதியிற்சென்றனள். எ - று. அருளடைந்தொழுகு கண்ணாள் இருப்பபொங்

க சென்றனெனமுடிக்க. மகிழ்ச்சி பொங்கல் பாசமகல்வாலெனக. மன்னவனைவிட்டுத்தான்புறப்படலா னீங்கியெனத்தன்வினைதந்தார்.()

அன்னையும் பிதாவுங் கேளா வருமகட் கடுத்த தென்னென்
றுன்னிவந் தழுங்க நீவி ருமமக ளென்று மாழ்கி
யின்னல்கொண் டிரங்கன் மின்போ மென்னைநா னறியத் தேடித்
தன்னிருங் கருணை செய்யுஞ் சற்குர வனைச்சார் கிற்பேன்.

(இ - ள்.) அன்னையும்பிதாவுங்கேளா - தாய்தந்தையரிச்செய்திகேட்டு—அருமகட்கு - அரியபுத்திரிக்கு—அடுத்ததென்னென்று - சம்பவித்ததுயாதுகாரணத்தாலென்று—உன்னிவந்து - நினைத்துவந்து—அழுங்க - விசனப்பட—(அவர்களைநோக்கி) நீவிர் - நீங்கள்—உம்மகளென்று மாழ்கி - உங்கள்புத்திரியென்றுமயங்கி—இன்னல்கொண்டு - துன்பங்கொண்டு—இரங்கன்மின் - விசனப்படாதிருங்கள்—போம - உங்களிடத்திற்குப்போங்கள்—என்னைநானறிய - எனதுசொரூபத்தையான்காண—தன்னிருங்கருணைசெய்யும் - தனதுபெரியகிருபாநோக்கத்தைவைக்கும்—சற்குரவனைத்தேடி - சற்குருநாதனைத்தேடி—சார்கிற்பேன் - அடைவேன். எ - று. அன்னையும்பிதாவும் கேளா உன்னி வந்து அழுங்க எனவும்; யான் தேடிச் சார்கிற்பேனெனவுங்கூட்டிமுடிக்க. அல், எதிர்மறைவிகுதி. (ருக)

என்றவ ளவரை நோக்கா தெதிலர் போல கன்று
சென்றன ணிருமலப்பேர் செல்வனுஞ் சுமதி தானு
நன்றிவ ணினைந்த தென்று நம்முடை மரபிற் கெல்லா
நின்றிடும் புகழென் றெண்ணி நிறுவினர் தங்க ணாமம.

(இ - ள்.) என்று - என்றுகூறி—அவள் - அந்தமாதேவி—அவரை நோக்காது - அவர்களையெறெடுத்துப்பாராமல்—எதிலர்போல் - அயலாரைப்போல—அகன்று - அவர்களைவிட்டுநீங்கி—சென்றனள் - போய்விட்டாள்—நிருமலப்பேர் - நிருமலனென்னும்பெயரையுடைய—செல்வனும் - பாக்கியவந்தனும—சுமதிதானும் - சுமதியென்பவளும்—இவள் நினைந்தது - இவள்நினைத்துச்சென்றகாரியம்—நன்றென்று - உத்தமமென்று—நம்முடைமரபிற்கெல்லாம் - நமதுவமிசத்திற்கெல்லாம்—நின்றிடும்புகழென்றெண்ணி - கீர்த்திநிற்குமென்றெண்ணி—தங்கள்நாமம் - தங்கள்பெயரை—நிறுவினர் - ஸ்தாபித்தார்கள். எ - று. தாய்தந்தையர் எண்ணி நிறுவினர் எனமுடிக்க. நம்முடையவென்பது கடைக்குறை. (ருச)

கண்டவ ரெல்லா நெஞ்சங் கரைந்துகக் கண்ணீர் மல்கத்
திண்டிற லரசன் பின்னர்ச் சிவிகையூர்ந் தலர்பூங் கோயி [லங்
லொண்டிரு மகள்போற் சென்ற வொண்டொடி யிப்பேய்க் கோ
கொண்டிவண் போகா நின்ற கொள்கையே தறியே மென்பார்.

(இ - ள்.) கண்டவரெல்லாம் - இவளைக்கண்டவர்களெல்லாம்—நெஞ்சம் - மனம் —கரைந்துக - கரைந்துநெக்குருகவும் —கண்ணீர்மல்க - கண்களினீர்பெருகவும் —திண்டிறல் - மிக்கவலியையுடைய —அரசன் பின்னர் - அரசனுக்குப்பின்னே —சிவிகையூர்ந்தலர் - பல்லக்கிலேறுதவர்களாய்—பூங்கோயில் - தாமரையாகியவீட்டிற்போகும்—ஒள் - அழகிய —திருமகள்போல் - இலக்குமிபோல —சென்ற - வீதியில்தனிச்சென்ற—ஒண்டொடி - ஒள்ளியவளையலையுடையவள் —இப்பேய்க்கோலங்கொண்டு - இந்தபேய்க்கோலம்பெற்று —இவண் - இவ்விடத்து —போகாநின்றகொள்கை - போகின்றகோறிக்கை —ஏது - யாதுகாரணமோ—அறியேமென்பார் - அறிகிலமென்பார்கள். எ - று. கண்டவரெல்லாம் சிவிகையூர்ந்தலர் அறியேமென்பாரெனமுடிக்க. ஒண்டொடி - அன்மொழித்தொகை. (௫௫)

மங்கையை யிவணங் கண்டேம் வயிறெரி தவிழ நின்றே
மிங்கிவ டன்னை யீன்றா ரென்படு வாரோ வென்பார்
மங்கல வடிவங் கண்டு மகிழ்ந்தகண் ணிதுவுங் கண்டு
பொங்குறு துயரங் கூரப் புரிந்ததெப் பாவ மென்பார்.

(இ - ள்.) மங்கையை - பெண்ணை —இவணம் - இக்கோலமாக —கண்டேம் - பார்த்தனம்—வயிறு - வயிற்றில்—எரிதவிழ - எரிவந்தமிக—நின்றேம் - நின்றனம் —இங்கு - இவ்விடத்தில் —இவடன்னையீன்றார் - இவளைப்பெற்றோர்கள் —என்படுவாரோ - என்னபாடுபடுவார்களோ —என்பார் - என்றுசொல்லுவார்கள் —மங்கலவடிவங்கண்டு - அவளதுசுமங்கலவடிவங்கண்டு—மகிழ்ந்தகண் - களிப்புற்றகண்கள் —இதுவும்கண்டு - இக்கோலத்தையுங்கண்டு—பொங்குறு - கொதிக்கின்ற—துயரங்கூர - துக்கமேலிட —புரிந்தது - செய்தது —எப்பாவமென்பார் - என்னபாவமோவென்றுசொல்லுவார்கள். எ - று. இவ்வண்ணமென்றது; இவணமென்றாயது இடைக்குறை. இதுவுமென்பதிலும்மை, இறந்ததுதழீஇயவெச்சவும்மை. (௫௬)

இன்னண நகர மெல்லா மிரங்கமா தேவி யம்மை
கன்னலு மமுதுந் தேனுங் கைப்பப்பே ரின்ப நல்குந்
தன்னிகர் குருகு கேசன் றன்னையே தேடிச் சென்றாண்
மென்னிழல் விரும்பி மிக்க வெயில்சுடச் செல்வார் போல.

(இ . ள்.) இன்னணம் - இவ்வாறு —நகரமெல்லாம் - பட்டணமெல்லாம் —இரங்க - விசனப்பட—மாதேவியம்மை - மாதேவியம்மையென்பவள்—கன்னலும் - கரும்பும்—அமுதும் - தேவாமிர்தமும்—தேனும்- தேனும்—கைப்ப - கசக்குமாறு —பேரின்பநல்கும் - பேரின்பத்தைத் தரும்—தன்னிகர் - தனக்குத்தானேயொப்பாகிய —குருகுகேசன்றன்னையே-குருவாகியவல்லமதேவனையே—மென்னிழல்விரும்பி - மெல்லிய நிழலைவிரும்பி —மிக்கவெயில் - அதிகவெய்யில்—சுட - சுடும்படி —செல்வார்போல - போகிறவர்களைப்போல—தேடிச்சென்றாள் -தேடிக்கொண்டுபோனாள். எ - று. மாதேவியம்மை வெயில்சுடச்செல்வார்போலக் குருகுகேசன்றன்னையேதேடி இரங்கச்சென்றாளெனமுடிக்க. (ருஎ)

அடவிக டொறும டைந்து மடுக்கல்க டொறுமி வர்ந்துங்
கடிநகர் தொறும்பு குந்துங் காமனை வென்ற வல்லி
மடிவறு மனத்தி லன்பு வளர்தரக் கருணை யாலெங்
குடிமுழு தடிமை கொள்ளுங் குரவனைத் தேடு கின்றாள்.

(இ - ள்.) அடவிகடொறும் - வனங்கள்தோறும்—அடைந்தும் - சேர்ந்தும—அடுக்கல்கடொறும் - மலைகடோறும் —இவர்ந்தும் - ஏறியும்—கடி - காவலையுடைய —நகர்தொறும் - பட்டணங்கடோறும் —புகுந்தும் - பிரவேசித்தும் —காமனைவென்ற - மன்மதனைச்செயித்த —வல்லி - வல்லிக்கொடிபோன்றமாதேவியென்பவள் —மடிவறு - குற்றமற்ற —மனத்தில் - மனதினிடத்தில்—அன்புவளர்தர - அன்புவளர—கருணையால் - கிருபையினால்—எங்குடிமுழுதும் -எமதுகுலமுழுவதும்—அடிமைகொள்ளும் - ஆட்கொள்ளுகின்ற—குரவனை - ஞானசாரியனை—தேடுகின்றாள் - தேடுகின்றனள். எ - று. வல்லி உவமையாகுபெயர். வல்லி யடைந்தும் இவர்ந்தும் புகுந்தும் அன்புவளர்தரக் குரவனைத் தேடுகின்றாளெனமுடிக்க. (ருஅ)

அக்கமாதேவிதுறவுகதி முற்றிற்று.

ஆ கதி. ௧0 இ விருத்தம் - ருகூ0.



பதினோராவது

# கொக்கிதேவர்கதி.

———(0)———

வேறு.

அருள்செயு மல்லம னநிமி டப்பெயா
குரவனை மெய்யொடு கலந்து கொண்டுதான்
பரவுறு மடியர்தம பவந்து றந்துபோய்த்
திரிதரு நிலையினைத் தெரிந்து செப்புவாம.

(இ - ள்) அருள்செயும் - கிருபைசெய்கின்ற—அல்லமன் - அல்லமாப்பிரபுதேவர்—அநிமிடப்பெயர் - அநிமிடப்பெயராயுடைய—குரவனை - ஞானாசிரியனை —மெய்யொடுகலந்துகொண்டு - தனதுண்மைவடிவோடு கலந்துகொண்டு—தான் - தான்—பரவுறுமடியர்தம் - பூசிக்கின்றவடியார்களுடைய—பவந்துறந்து - செனனங்களைநீக்கி —போய்-சென்று—திரிதருநிலையினை - சஞ்சரிக்கின்றநிலைமையை —தெரிந்துசெப்புவாம் - அறிந்துசொல்லுதும். எ - று. அல்லமன் கலந்துகொண்டு பவந்துறந்து போய் திரிதருநிலையினைச் செப்புவாமெனமுடிக்க. (க)

சீர்நிலை யல்லம தேவன் சூல்கொளுங்
கார்நினை மயிலெனக் கருதித் தன்னையே
பார்நில மிசையமர் பத்தர் தம்மையா
ளோர்நினை வொடுநடந் துலாவு நாள்களுள்.

(இ - ள்.) சீர்நிலை - சிறந்தநிலையையுடைய—அல்லமதேவன் - அல்லமாப்பிரபுதேவர்—சூல்கொளும் - நீரைக்கருப்பமாகக்கொண்ட —கார் - மேகவரவை—நினைமயிலென - சிந்தித்துக்கொண்டிருக்கு மயிலைப்போல—தன்னையேகருதி - தன்னையேசிந்தித்து—பார்நிலமிசையமர் -பூமியிலிருக்கின்ற—பத்தர்தம்மை - அடியார்களை—ஆளோர்நினைவொடு - அடிமைகொள்ளும்படியானவோர்நினைவுடன்—நடந்துலாவுநாள்களுள் - நடந்துசஞ்சரிக்குநாள்களில். எ - று. அல்லமதேவன், நடந்துலாவுநாள்களுள் எனமுடிக்க. (உ)

ஒன்றொரு நாளொரு திசையி னோங்கருட்
குன்றனை யானொரு கோலங் கொண்டுதான்
சென்றன னவனெதிர் சிறந்து தோன்றிற்று
மன்றன்மென் மலரின் வனமொன் றுயிடை.

(இ - ள்.) ஒன்றொருநாள் - ஓர்நாள்—ஒருதிசையில் - ஓர்திக்கில்—ஓங்கு - மிகுந்த—அருள் - கிருபையில்—குன்றனையான் - மலைபோல்பவனுகியவல்லமன்—ஒருகோலங்கொண்டு - ஓர்வேடங்கொண்டு —தான் சென்றனன் - தான்போயினன்—அவனெதிர் - அவனுக்கெதிரில்—ஆயிடை - அவ்விடத்தில்தானே —மன்றல் - வாசனைபொருந்திய—மெல் - மிருதுவாகிய—இளமலர் - புதியமலர்கள்மலிந்த—வனமொன்று - ஓர்நந்தவனம்—சிறந்துதோன்றிற்று - அலங்காரமாகக்காணப்பட்டது. எ - று. ஒன்றொருநாள், மீமிசைப்பதம் கோலம், அடியருக்கிரங்கியதகோலத்தை.

சிறுபொழு தைந்தினுந் திரிவி லாதபே
ரறுபொழு தினுமித ழவிழ்ந்து தேன்சொரி
நறுமலர் நிறையுமந் நந்த னத்தினைப்
பெறின்மக பதிவளம் பெறவு வந்திடார்.

(இ - ள்.) சிறுபொழுதைந்தினும் - சிறுபொழுதாகியவைந்திலும்—திரிவிலாத - மாறாத —பேரறுபொழுதினும் - பெரிதாகியவாறுபொழுதிலும் —இதழவிழ்ந்து - இதழ்களுடைந்து—தேன்சொரி - தேன்பொழிகின்ற —நறுமலர்நிறையும் - சுகந்தமலர்கணிறைந்த—அந்நந்தனத்தினை - அந்த நந்தவனத்தை—பெறின் - ஒருவரடைந்தால்—மகபதி - தேவேந்திரனுடைய—வளம்பெற - வளப்பத்தையடைய—உவந்திடார் - விரும்பார்கள். எ - று. பொழுதைந்தாவன ; மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், என்பன. அறுபொழுதாவன ; மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு- என்பன. (௪)

படிமிசை தவம்பல பயின்று நொநதவர்
வடதிசைக் கைலையின் மருவ வேண்டலிக்
கடிமலர்ப் பொழின்மணங் கலந்த தென்றலீங்
குடன்மிசை தவழ்தர லொன்று முன்னியே.

(இ - ள்.) படிமிசை - பூமியின்மேல்—தவம்பலபயின்று - அரியபலதவஞ்செய்து —நொந்தவர் - இளைத்தவர்கள் —வடதிசைக்கைலையின் -

வடதிசையிலுள்ளகைலாயமலையில்—மருவவேண்டல் - போகவிரும்புத ல்—இ - இந்த—கடி - மணமுள்ள—மலர் - புட்பங்கணிறைந்த —பொ ழில் - நந்தவனத்தின்—மணங்கலந்த - வாசனைகலந்த—தென்றல்வந்து- தென்றற்காற்றுவந்து—உடன்மிசை - தமதுசரீரத்தின்மேல்—தவழ்தர லொன்று - வீசுதலொன்றையே—முன்னி - நினைத்து. எ - று. கடிய தவம்புரிந்தோர் கைலையைச்சாரவிரும்புதல் இந்தநந்தவனத்தின் தெ ன்றற்காற்று தமதுடலின்மேற்படிவான்வேண்டியென்க. ஒன்றுமுன் னியேயென்பதனால் வேறுகருத்துகொண்டதன்றெனப் பெறும்.(ரு)

கண்ணிறை மலர்பல கண்டு கண்டுபோ
யுண்ணுறு நறுமது கொளவு ழன்றிடு
மெண்ணறு மளியின மிசையு நதன்மையாற்
றண்ணுறு நந்தனம் வண்டின் சந்தையே.

(இ - ள்.) கண்ணிறை—தேனிறைந்த—மலர் பல - பலவிகற்பமலர்க ளை —கண்டுகண்டுபோய் - கண்டுகண்டுசென்று —உண்ணுறு - பானஞ் செய்தற்கியைந்த —நறுமதுகொள - நல்லதேனுண்ண —உழன்றிடும் - அங்குமிங்குமாகவுழலுகின்ற —எண்ணறுமளியினம் - எண்ணிறந்தவண் டினங்கள்—இசையுந்தன்மையால் - கோஷடிக்குந்தன்மையினால்—தண் ணுறுநந்தனம் - குளிர்ந்தவந்தநந்தவனம—வண்டின்சந்தையே - வண் டின்கூட்டமே. எ - று. மலர்களின்மிகுதி யென்று மகலாமையைக் காட்ட நந்தனம் வண்டின்சந்தையே யெனப்பட்டது. (சு)

நறுமலர் நிறையுமந் நந்த னத்தினைக்
குறைவற வளிப்பவன் கொக்கி தேவனென்
றறைதரு பெயரினு னனைய னுயிடைத்
திறமுறு செயலினைச் செய்து நின்றனன்.

(இ - ள்.) நறுமலர்நிறையும் - நல்லமலர்கணிறைந்த —அந்நந்தனத்தி னை - அந்தநந்தவனத்தை—குறைவறவளிப்பவன் - குறைவின்றிக்காப் பவன்—கொக்கிதேவனென்றறைதரு - கொக்கிதேவனென்றுசொல்ல ப்பட்ட—பெயரினன் - பெயரையுடையவன்—அனையன் - அப்படிப்பட் டவன்—ஆயிடை - அந்தவிடத்தில்—திறமுறுசெயலினை - அதற்கியைந் த திறமையுள்ளமுயற்சியை —செய்துநின்றனன் - செய்துநின்றான். எ - று, அளிப்பவன் பெயரினனெனவும், அனையன் செய்துநின்றன னெனவுமுடிக்க. (எ)

நின்றவன் றனையரு ணினைந்த நெஞ்சொடு
சென்றன னல்லம தேவன் கண்டிவன்
புன்றொழில் விடவரும் பொருளு ணர்த்துவ
லென்றரு கடைந்தைய சரண மென்றனன்.

(இ - ள்.) நின்றவன்றனை - அங்ஙனநின்றகொக்கிதேவனை —அருணினைந்தநெஞ்சொடு - ஆட்கொள்ளவேண்டுநினைந்தமனதோடு —சென்றனனல்லமதேவன் - அல்லமதேவன்போய்—கண்டு - பார்த்து —இவன்புன்றொழில்கெட - இவன்றனதுபுல்லியதொழில்விட்டுநீங்க —அரும்பொருள் - யாவருமறிதற்கரியபொருளை —உணர்த்துவலென்று - தெரிவிப்பேனென்று—அருகடைந்து - அவனிடத்திற்போய் —ஐய - ஐயனே —சரணமென்றனன் - சரணமென்றஞ்சலிசெய்தனன். எ - று. அல்லமதேவன் சென்றனன் உணர்த்துவல் சரணமென்றனனெனமுடிக்க.

தானெதிர் நிமலனைச் சரணெ னத்தொழாத்
தேனலர் வனத்தனின் செயலி யாதுநின்
மேனியின் பெயரொது விளம்பு கென்றலு
ஞானநல் விளக்கனு னவிறன் மேயினுன்.

(இ - ள்.) தேனலர்வனத்தன் - தேன்மலிந்தநந்தவனத்தையுடைய கொக்கிதேவன்—தானெதிர் - தானெதிர்கொண்ட —நிமலனை - அல்லமனை—சரணெனத்தொழா - சரணமென்றுதொழுது —நின்செயல்யாது - உனதுகிர்த்தியமென்ன—நின்மேனியின்பெயரொது - உன்தேகத்தின்பெயரென்ன—விளம்புகென்றலும் - சொல்லெனக்கேட்கவும்—நல் - நல்ல—ஞானவிளக்கனுன் - ஞானதீபம் போன்றவல்லமன்—நவிறன்மேயினுன் - சொல்லத்தொடங்கினுன். எ - று. (கூ)

பத்தர்தம் மனைதொறும் பத்திப் பிச்சைகொண்
டெத்திற வினையுமின் றிருப்ப னல்லம
னுத்தம வென்பெயர் பெயரு னக்கெனென்
றத்தனும் வினவத்தன் பெயர றைந்தவன்.

(இ - ள்.) பத்தர்தம் - அன்பர்களுடைய —மனைதொறும் - வீடுகடோறும்—பத்தி - அன்போடும் —பிச்சைகொண்டு - பிச்சைவாங்கிக்கொண்டு—எத்திறவினையும் - யாதோர்தொழிலும்—இன்றிருப்பன் - இ

ல்லாதிருப்பன்—உத்தம - உத்தமனே—என்பெயரல்லமன் - என்பெய ரல்லமனெனப்படுபவன்—அத்தனும் - அல்லமனும்—பெயருனக்கென ன் றுவினவ - நின்பெயர்யாதெனக்கேட்க —தன்பெயரறைந்தவன் - த னதுபெயரைச்சொன்னகொக்கிதேவன். எ - று. உத்தமவென்பது, விளி. அத்தனுமென்பதிலும்மை, இறந்ததுதழீஇய வெச்சவும்மை. (௧௦)

அருங்குரு லிங்கசங் கமத்திற் காகமெய்
வருந்துறு தொழிலற வறிதி ருப்பவ
னருந்துறு பிணமென வறைபு மாற்றநீ
தெரிந்திலை யோவெனச் செப்பன் மேயினான்.

(இ - ள்.) அரும் - அருமையாகிய—குருலிங்கசங்கமத்திற்காக-குருலி ங்கசங்கமநடாத்த—மெய்வருந்துறுதொழில்-தேகம்வருந்தியியற்றுந்தொ ழில்—அற - சற்றுமின்றி —வறிதிருப்பவன் - சும்மாவிருப்பவன்—அரு ந்துறுபிணமென - உணவுண்ணும்பிணம்போல்பவனென்று —அறையு மாற்றம் - வேதஞ்சொல்லும்வசனத்தை —நீதெரிந்திலையோவெனச் செப்பன்மேயினான் -நீதெரியவில்லையாவென்றுசொல்லத்தொடங்கினான். எ - று. குரு லிங்கம் சங்கம் எனமூப்பாற்று. இவற்றுள் ; குரு ஞானா சிரியன். லிங்கம் ஆன்மா. சங்கம் அதையுணர்ந்தசத்துக்களென்க. சற் கருமமேனுமின்றிவறிதிருத்தல் ; அவமெனக்காட்ட,அருந்துறுபிணமென் றார். மாற்றமெனல், சுருதிப்பிரமாணத்தை. (௧௧)

வேறு.

எய்தற் கரிய யாக்கைதனக் கெய்திற் றென்றா லதுகொ ண்டு, செய்தற் கரிய வறங்களபல செய்து துயர்கூர் பிறவியி னின், றுய்தற் கொருமை பெறவொண்ணா துழல்வோ னுடம்பு பொற்கலத்திற், பெய்தற் குரிய பால்கமரிற் பெய்த தொக்கு மென்பரால்.

(இ - ள்.) எய்தற்கரியயாக்கை - அடைதற்கரியமானிடவடிவை—த னக்கெய்திற்றென்றால் - தனக்குக்கிடைத்ததென்றால்—அதுகொண்டு - அவ்வுடம்புகொண்டு—செய்தற்கரிய - செய்தற்கருமையாய —அறங்கள் பலசெய்து - பலபுண்ணியகர்மங்கள்செய்து —துயர்கூர்பிறவியினின்று - துன்பமிகுந்த பிறவியினின்று—உய்தற்கு - பிழைத்தற்கு—ஒருமைபெ றவொண்ணாது - ஐக்கியநிலையடைதற்குக்கூடாது —உழல்வோனுடம்பு -

அவலத்துழல்வோனது தேகம் —பொற்கலத்திற்பெய்தற்குரிய பால் - பொன்பாத்திரத்தில் விடுதற்கிசையுந்தபாலை—கமரில் - வெடிப்பில்—பெய்ததொக்குமென்பர் - விட்டதுபோலுமென் றறிஞர்கூறுவர். எ - று. ஆல் - அசை. எய்தற்கரியயாக்கையாவது ; சங்கற்பங்களைமாய்த்தற்கிசையுந்தமாணிடவடிவை. உய்தற்கொருமைபெறல் ; அன்னியமில்லாமலனைத்துந்தானுகைப்பெறலை. இங்ஙனமாயவரியநிலைக்கு இயையாதவுடம்புவிவர்த்தத்திற்கிசைதலின் கமரிற்பெய்தபாலையுவமித்தார். (கஉ)

மின்போ லழியு முடல்கொடுநல் வினைசெய் தழியா வுடம்பெய்தி, யின்போ டமர்த லாயிருப்ப யாக்கை வருந்து மென்றெண்ணி, யன்போ டறஞ்செய் திளையாம லருந்தி வாளா விருக்கு மவன், றன்போன் மருள ரிலையென்றான் றண்பூம்பொழில்வைத் தளிக்கின்றான்.

(இ - ள்.) மின்போலழியும் - மின்னல்போனிலையாதழியும் —உடல்கொடு - தேகத்தைக்கொண்டு—நல்வினைசெய்து - சற்கருமஞ்செய்து—அழியாவுடம்பெய்தி - அழியாதவுடம்பைப்பெற்று —இன்போடு - பேரின்பத்தோடு—அமர்தலாயிருப்ப - அமர்ந்திருப்பதற்கு—யாக்கைவருந்துமென்றெண்ணி - உடல்மெலிந்துபோமென்றெண்ணி—அன்போடு - மிக்கவன்புடன்—அறஞ்செய்திளையாமல் - சற்கிருத்தியஞ்செய்திளையாமல்—அருந்தி - காலந்தவறாதுகொழுக்கவுண்டு—வாளாவிருக்குமவன்றன்போல் - அவலத்திற்காலங்கழிப்பவன்போல்—மருளரிலையென்றான் - மூடரில்லையென்றான்—(அவனொனில்) தண் - குளிர்ச்சிபொருந்திய —பூம்பொழில்வைத்து - பூங்காவனத்தைவைத்து —அளிக்கின்றான் - காப்பாற்றுங்கொக்கிதேவன். எ - று. யாக்கையெடுத்ததற்குப்பயன் ; யாதனுவுடலழியாமல் சுவர்க்காதி நலனடைதலை. மின்போல்வது ; தூலவுடலை.)

உரைத்த மொழியை யல்லமப்பே ருடையான் கேட்டுக் கைகுலைத்துச், சிரித்து வினைநல் லனசெய்து சிதையா வின்பம் பெறுவானேல், வருத்த லுறுமும் மலங்களினோர் மலமா கிய வா ணவத்தாலும், பொருத்த முறுபே ரின்பநாம் புணர லிமென் றியம்பியே.

(இ - ள்.) உரைத்தமொழியை - சொன்னமொழியை—அல்லமப்பேருடையான்கேட்டு - அல்லமதேவர்கேட்டு —கைகுலைத்து - கைகொட்டி—சிரித்து - நகைத்து—வினைநல்லனசெய்து - புண்ணியகருமங்கள்செ

ய்து —சிதையாவின்பம்பெறுவானேல் - அழியாவின்பம் பெறுவனாயி ன்—வருத்தலுறும் - வருத்தந்தரற்கியைந்த —மும்மலங்களின் - மும்மல ங்களுக்குள் —ஒர்மலமாகியவாணவத்தாலும்—பொருத்தமுறுபேரின்ப ம் - ஞானகதப்பிரத்தியட்சத்தால்வரற்கியைந்தபேரின்பத்தை —நாம்பு ணரலாமென்றியம்பி - நாமடையலாமென்றுசொல்லி. எ - று. ஏ - அ சை. கர்மத்தாலெய்தும்பேரின்பம் ஆணவத்தாலு மெய்தலா மென்ற ல்லமதேவர் கூறியது பொருந்தாமைக்கு, ஆணவத்தாலு மென்றவும்மை இழிவுசிறப்பு. (௧௪)

நான்செய் வினையா லோருடம்பிற் சாருமின்ப மென்றனை யவ், வூன்செ யுடல மொழியவுட னொழியு மம்மெய் யழியாம ல், வான்செய் பதத்தி லிருக்குமெனின் மாயைதந்த தன்றாகு ம், கான்செய் மலர்நந் தனஞ்செய்து கருவைத் துடைப்ப வெ ண்ணுவோய்.

(இ - ள்.) நான்செய்வினையால் - தாணியற்றுஞ்சற்கருமத்தால் —ஒ ருடம்பில் - ஓர்பிறவியிற்றானே—சாருமின்பமென்றனை - பேரின்பமெ ய்துமென்றாய் —அவ்வூன்செயுடலமொழிய - அந்தமாமிசதேகநீங்க— உடனொழியும் - அவ்வின்பமுமுடனேநசிக்கும்—அம்மெய் - அந்தத்தேக ம்—அழியாமல் - நசியாமல்—வான்செய்பதத்திலிருக்குமெனின் - மோ ட்சத்திலிருக்குமென்றால்—மாயைதந்ததன்றாகும் - மாயாகாரியமன்றா கும்—கான்செய் - வாசனைவீசுகின்ற—மலர்நந்தனஞ்செய்து - பூங்காவ னம்வைத்து —கருவைத்துடைப்ப வெண்ணுவோய் - இனிக்கருவிலுதி யாவாறு வெண்ணுந்தவத்தோனே. எ - று. ஊனுடலும் அதுபற்றிவந் தசுகதுக்கப்பேறும் மாயாகாரியமாதலால் எங்ஙனம் நிலையுறுமென்பார், இங்ஙனங்கூறினாரென்க. வினையின்றேலுடலுமதுபற்றிவரும்பயனுமின் றாம். ஆன்மாவுக்கெவ்வினையும் புடைபெயர்ச்சியாதலாலும், இவைவி னைமுதலாகாவாதலாலும், இவைபயன்வேண்டி புரிதற்பாலவாதலாலு ம், ஆன்மாவைப்போல் வினையும் பயனும்நிலையுண்மையல்லவாதலாலு ம் மாயாகாரியமெனற்கு முரணென்னை ? இன்றாதலால் மறுத்தது போல் மாயாசம்பந்தமெனக் குறிப்பித்தார். முத்தனுரகிதம், முத் தி. சகிதம் மாயை. முத்தியில்மாயை யெங்ஙனமிருக்குமெனல் அருத் தாபத்தி. உல்லங்ஙனமெனக்காட்ட அம்மெய்யழியாமல் வான்செய் பதத்தி லிருக்குமெனின் மாயை தந்ததன்றாகுமென்றார். இஃதறியா ர் யாது கூறினுமென்னை. (௧௫)

இன்ப நனிசெய் நல்வினையி னிறப்பி னிறப்ப வுடம்பினி டைத், துன்ப மதுசெய் தீயவினை தோன்று மத்தீ வினைமாய்வி ன், முன்பு செயுநல் வினைவருமிம் முறையா லிரண்டு மாறிவரு, மென்ப வுலகி லொண்பகலு மிரவு மாறி வருதல்போல்.

(இ - ள்.) இன்பநனிசெய் - மிக்கசுகத்தைச்செய்கின்ற —நல்வினையினிறப்பின் - நல்வினையின்முடிவில் —இறப்ப - மிகுதியாக —உடம்பினிடை -தேகத்தினிடத்தில்—துன்பமதுசெய் -துன்பத்தையேமிகுவிக்கின்ற—தீயவினைதோன்றும் - தீவினையுண்டாகும்—அத்தீவினைமாய்வின்-அத்தீவினைமுடிவில்—முன்புசெயும் - முன்செய்த—நல்வினைவரும் - நல்வினைதோன்றும்—இம்முறையால் - இங்ஙனமாயநெறியால் —இரண்டும் - இவ்விரண்டும்—உலகில் - உலகின்கண் - ஒண்பகலும் - ஒள்ளியபகற்காலமும்—இரவும் - இராக்காலமும் —மாறிவருதல்போல் - இடைவிடாதுமாறிவருதல்போல—மாறிவரும்-இடைவிடாதுமாறிமாறிவரும்—என்ப - என்றறிஞர்கூறுவர். எ - று. உடம்பினிடைஎன்றதனால் ஒருடம்பில்தானே நல்வினைவருதலும், அதுமாறித் தீவினைவருதலும், அதுமாறி நல்வினைவருதலும், அதுமாறித்தீவினைவருதலும் பெற்றாம். இம்முறையாலிரண்டுமாறிவருமென்பதனால், ஜென்மங்கடோறு மெனக்கண்டாம். இதற்குச்சாட்சியெனக்காட்ட என்பவென்றார். முன்பின் ஜென்மமில்லை என்பார் ; பிரத்தியட்சத்தில் ஒருவனிடத்தில்தானே செல்வமும்வறுமையும், ஒருகால்மாறிவருதலும், இருகால்மாறிவருதலும், முக்கால்மாறிவருதலும் சுபாவமெனின் ; பிறவிக்கோ ஆன்மாவுக்கோ? பிறவிக்கெனின், ஆன்மாவுக்கயலன்றோ அயலெனின், இதுபோன்றபிறவிகள்வந் தகலுமன்றோ வந்துவந்தகல்வதால் சுபாவமெனல்ஒழிக. பிறவிமாறிமாறிவருவதால் செல்வமும் வறுமையுமாறிமாறிவருவதற்கிடையூறென்னை. இவையகர்த்தாவாதலால் ஆன்மாக்கள்செய்நல்வினை தீவினையாலன்றி தாமேவருமெனற்கு யாதோரேதுவுமின்று. உண்டெனின், மூரணுக்கேதுவாம். ஆதலின் அல்லமதேவன் கூறினனென்க. வினையைக்காரணமாக வேலாதார் உபயபிரஷ்டத்துவத்திற்குத் தம்மால் தாமே யிடம்பெறுவரெனக்கொள்க. (கசு)

புறத்துக் கருமம் பலசெய்து பொருப்பை யகழ்ந்திட் டெ லிபிடித்தாங், கிறப்பச் சிறிய விண்ணின்ப மெய்து மவனே கோவாமன், மறுதகுச் செயல்க ளனைத்தினையும் வாளா விருந்

து பேரின்பம், பெறத்தக் கவனே மருளன்யார் பேசு கென்றா னெம்பெருமான்.

(இ - ள்.) புறத்து - பகிர்முகத்தில்—கருமம்பலசெய்து - யாகாதிபுண்ணியகருமம்பலசெய்து—பொருப்பையகழ்ந்திட்டு - மலைகல்லி—எலிபிடித்தாங்கு - எலிபிடித்தாற்போல—இறப்ப - மிகவும்—சிறிய - அற்பமாகிய—விண்ணின்பம் - தேவபோகத்தை —எய்துமவனே - அடைபவனே—நோவாமல் - வருந்தாமல்—செயல்களனைத்தினையுமறுத்து - சகலசங்கற்பங்களையும்விடுத்து—வாளாவிருந்து - சும்மாவிருந்து—பேரின்பம்பெறத்தக்கவனே - பேரின்பமடையத்தக்கவனே—(இவ்விருவருள்) மருளன்யார் - மருளனெனப்படுபவன்யாவன் —எம்பெருமான் - அல்லமதேவன்—பேசுகென்றான் - சொல்லென்றுகேட்டனன். எ - று. புறத்துக்கருமம்பகிர்முகமென்றதனால், வாளாவிருந்தெனலை அந்தர்முகமெனப்பெற்றாம். பகிர்முகம் ; அல்லதைப் பொருளாகக்கோடல். அந்தர்முகம், பொருளைப் பொருளாகக்கோடல். மலைகல்லி எலிபிடித்தாற்போலப் பகிர்முகத்தாலெய்துபயனென்க. மருளனென்போன் சிறியவிண்ணின்பமெய்துபவனே இருவினையுமொருங்கேவிட்டு வாளாவிருந்து பேரின்பம்பெறத்தக்கவனே யாவனெனமுடிக்க. வாளாவிருத்தல், அனைத்துந்தானாய் விளங்கலை. நோவாமலெனல் இருந்தபடி இருத்தலை.()

பொறியிற் புறத்து மனஞ்செல்லிற் புலனே தோன்றி யிடுமகத்திற், செறியக் கரணம் பராநந்த சிவமே தோன்றுஞ் சிவந்தோன்ற, வறிவிற் பரந்த விடயமய மாகு முலகந் தோன்றாமற், பிறவித்துயரக் கடல்கடந்து பேரின் பஞ்சார் குவரொன்று.

(இ - ள்.) பொறியிற்புறத்து - பகிர்முகத்திற்பொறியினெறியாக—மனஞ்செல்லில் - மனஞ்சென்றால்—புலனேதோன்றியிடும் - உலகமேதோற்றும்—அகத்தில் - அந்தர்முகத்தில்—செறியக்கரணம் - மனமொருங்குபட—பராநந்தசிவமேதோன்றும் - பராநந்தமயமாகியசிவமேவிளங்கும்—சிவந்தோன்ற - அங்ஙனஞ்சிவம்விளங்க—அறிவில் - அறிவின்கண்—பரந்த - பரவிய—விடயமயமாகும் - கிரியைமயமாகிய —உலகந்தோன்றாமல் - உலகங்காணப்படாமல்—துயரம் - துன்பவடிவமாகிய—பிறவிக்கடல்கடந்து - ஜனனசாகரநீந்தி—பேரின்பஞ்சார்குவரொன்று - பேரின்பக்கரையை யடைவாரென்று. எ - று. புறம், அகம் என்றதனு

ற் பகிர்முகம் அந்தர்முகமென்றும். மனஞ்செல்லிலென்றதனால் மனோ வொருங்குபடவென்றும். விடையமயமாகுமுலகமென்றதனாற் பராநந்த மயம்சிவமென்றும. பகிர்முகத்தில் தோன்றுதல் உலகமென்றாற்போல அந்தர்முகத்தில் தோன்றுதல் சிவமெனக்காட்ட ; இரண்டுக்கும் தோன்றுதலைப் பிரயோகித்தார். பிரயோகிக்கவே அததற்குரிய காட்சியெனப்பெற்றும். பிறவிக்கடல் கடந்தேனென்பதனாற் பேரின்பங்களையென உரைகொள்ளடாம். புலனேசகமாகத்தோற்றலின், புலனேஉலகென்றது ; காரணத்தைக்காரியமாக உபசரிக்கப்பட்டது. (௧அ)

கணணுற் காணக் காட்டியிவன் கருததைத திருத்துவே மென்ன, வெணணுக கருணைக் கடலனையா னிவணீ யகழ்தி யென்றுரைப்ப, நணணுப் பெருமீ நன்றென்று நவின்ற நிலத் தை யகழுகின்றான், பணணுற் சிறநத பொறிவணடு பாடு மலர்ப் பூம பொழிலுடையான்.

(இ - ள்.) கண்ணுறகரண - நமதுமகிமையைக்கண்ணுற்காணும்படி—காட்டி - காணபித்து—இவன்கருத்தை - இவன்கொள்கையை —திருத்துவேமென்ன - திருந்தச்செய்வேமென்று—எண்ணு - எண்ணி—கருணைக்கடலனையான் - கிருபாகடல்போன்றஅல்லமன்—இவண் - இவ்விடத்தில்—அகழ்தியென்றுரைபப - தோண்டுதிஎனக்கூற —நண்ணு - அடைதறகரிய —பெரும - பெருமையுடையோனே —நன்றென்று - அங்ஙனமேசெய்குவனென்றுசொல்லி —நவின்றநிலத்தை - அல்லமன்காட்டியவிடத்தை—அகழ்கின்றான் - தோணடத்துடங்கினன்—(அவனுனெனில்) பண்ணுறசிறந்த - இசையாற்சிறந்த —பொறிவண்டு - பொறிவண்டுகள்—பாடும் - ரீங்காரஞ்செய்கின்ற—பூ-அழகிய—மலர்ப்பொழிலுடையான் - நந்தவனத்தையுடையகொக்கிதேவன். எ - று. கருணைக்கடலனையான் காட்டி திருத்துவேமென்ன எண்ணு அகழ்தியென்றுரைப்பவெனவும், பொழிலுடையான் நன்றென்று அகழ்கின்றானெனவுங் கூட்டிமுடிக்க. பெருமஎன்பது விளி. (௧௯)

தொடலுஞ் செம்பொற் சிகரமொன்று தோன்றச் செய்யுட் பொருள்போலக், கடிதி னகழ்நது புகுநதனுட் கணடார் நிலத்தை யகழ்ந்திட்டு, மிடியன் கண்ட பொருளபோல விடையம் புறததுக் காணுமல்; வடிவஞ் சிறிது மசையாமல் வசமற் றிருக்கும யோகியையே.

(இ - ள்.) தொடலும் - தோண்டவும்—செம்பொற்சிகரமொன்று-செம்பொன்னாலாகியவோர்சிகரம்—தோன்ற - காணப்பட —செய்யுட்பொருள்போல - அருங்கவிக்குறைகண்டாற்போல—கடிதினகழ்ந்து-விரைவில்தோண்டி—புகுந்து - பிரவேசித்து —அதனுட்கண்டார் - அதற்குள்கண்டார்—நிலத்தையகழ்ந்திட்டு - நிலத்தைத்தோண்டி —மிடியன்கண்டபொருள்போல-தாரித்திரியன்கண்டபுதையலைப்போல —விடயம்புறத்துக்காணுமல் - புறம்பில்விடையங்காணுமலும்—வடிவஞ்சிறிதுமசையாமல்-தேகஞ்சிறிதுஞ்சலியாமலும் —வசமற்றிருக்கும்யோகியை - பரவசப்பட்டிருக்குஞ்சிவயோகியை. எ - று. ஏ - அசை. உரைகாணற்கரியசெய்யுளாதலால் அருமைதோன்றச் செய்யுட்பொருள்போலவென்முர். இருவரும்நிலனகழ்ந்துசிவயோகியைச் செய்யுட்பொருள்போலவும் மிடியன் கண்டபொருள்போலவும் கண்டாரெனமுடிக்க. (உ0)

கையிற் சிவலிங் கத்தின்மேற் கண்கள் வைத்திட் டெலும்பலான், மெய்யிற் றசையொன் றின்றியே மேவும் புனிதன் றனைநோக்கிச், செய்ய செயலி லாதசெயற் சிவயோ கியைக்கண் டனையோவென், றையத் தடைந்த வவனறிய வறிவித், துயரல் லமதேவன்

(இ - ள்.) கையில் - உள்ளங்கையிலமர்ந்த —சிவலிங்கத்தின்மேல்-இஷ்டலிங்கத்தின்மேல்—கண்கள்வைத்திட்டு - திஷ்டிவைத்து—எலும்பலால் - எலும்பையன்றி—மெய்யில்-தேகத்தில்—தசையொன்றின்றியே-மாமிசஞ்சற்றுமின்றி —மேவும் - யோகநித்திரையிலுறங்கும் —புனிதன்றனைநோக்கி - பரிசுத்தவானுகியவ்நிமிடமஹாயோகியைப்பார்த்து—செய்யசெயலிலாத - சன்மார்க்கமுமில்லாத —செயல் - அங்ஙனமாயசெயலையுடைய —சிவயோகியைக்கண்டனையோவென்று - சிவயோகியைத்தரிசித்தையாவென்று —ஐயத்தடைந்த - சந்தேககாரணமாகவந்த —அவனறிய - அந்தக்கொக்கிதேவன்காண —உயரல்லமதேவன் - சிறந்தவல்லமாப்பிரபுதேவர் —அறிவித்து - தெரிவித்து. எ - று. அல்லமதேவன் நோக்கி அறிவித்தெனக்கூட்டிமுடிக்க. செய்ய செயலென்பதில் இறந்தகாலப் பெயரெச்சவும்மைதொக்கின்றது. செய்யசெயலிலாதசெயலாவது; பரசிவம் நின்றவாறுநின்றிலகல். சிவலிங்கத்தின்மேற்கண்கள்வைத்திடலாவது; பிறவயப்படாமைக்கு. (உக)

கடலின் விழுந்து துயர்பவர்க்குக் கலமொன் றருகு வந்ததெனக், கெடலில் பரம குருவெனக்குக் கிடைத்த தாவா வழ்பு

தமென், றுடலம் விதிர்ப்பக் கண்கணீ ரொழுக வுருகித் தொ ழுதனனல், விடலின் மரபிற் குருசீட 'விதியை விளக்க வுளங் கொண்டு.

(இ - ள்.) கடலின்விழுந்து - கடலில்தவறிவிழுந்து—துயர்பவர்க்கு - ஆதரவில்லாமற்கலங்குபவர்க்கு—கலமொன்று - ஒர்கப்பல்—அருகுவந்த தென - பக்கத்தில்வந்தாற்போல—கெடலில்பரமகுரு - சிதைவின்றிச்ச தோதயமாகவிளங்கும்பரமாசிரியர் —எனக்குக்கிடைத்தது - எனக்குக் கிடைத்தது—ஆவா - ஆஆ—அற்புதமென்று - ஆச்சரியமென்று —உடல ம்விதிர்ப்ப - தேகம்நடுங்கவும் - கண்கணீரொழுக-கண்களிலானந்தபாஷ் பம்பெருகவும் —உருகி - நெஞ்சமுருகி —விடலில் - இடையினீங்காத— மரபின் - மரபினையுடைய—குருசீடவிதியை - குருசீடநெறியை —விளக் க - விளக்குவிப்பான்வேண்டி —உளங்கொண்டு - எண்ணங்கொண்டு—, தொழுதனன் - வணங்கினன். எ - று. கடலில்விழுந்துகலங்குவோனுக் கோர்மரக்கலஞ் சமீபித்தாற்போல எனக்கிவ்வல்லம தேவன்கிடைத்த தெனவியப்புற்று விதிர்ப்ப ஒழுக உருகி உளங்கொண்டுதொழுதனன் எனமுடிக்க. குருசீடவிதியைவிளக்கலாவது ; . தானேஅவ்விதி யாக நிற்றலே. (௨௨)

காந்தங் கண்ட விரும்புபோற் கண்ட பொழுதே யநிமிட ன்ற, னேநதுஞ் செங்கைச் சிவலிங்க மெங்கள் பெருமா னங்கை மலர், போந்தங் கிருந்த தருபொழுதிற் புனிதன் சீவ கலைதா னுஞ், சார்ந்தங் கிருந்த சிவலிங்கந் தன்னே டவன்பாற் சார்ந் ததால்.

(இ - ள்-) காந்தங்கண்டவிரும்புபோல்-காந்தத்தைக்கண்டவிரும்பைப் போல—அநிமிடன்றன் - அநிமிடனென்னும்யோகியினது —செங்கை யேந்தும் - உள்ளங்கையிலேந்திய—சிவலிங்கம் - இஷ்டலிங்கமானது— வெங்கள்பெருமான்-எங்கள்கர்த்தராகியவல்லமதேவரது —அங்கைமலர்-உ ள்ளங்கையாகியதாமரைமலரில்—போந்து - வந்து —அங்கிருந்தது - அவ் விடத்திலிருந்தது—அதுபொழுதில் - அப்போதே—புனிதன் - அநிமிட னது—சீவகலைதானும் - சீவகலையும்—சார்ந்து - வந்து—அங்கிருந்தசிவலி ங்கந்தன்னோடு - அங்கிருந்தசிவலிங்கத்தோடே—அவன்பாற்சார்ந்தது - அந்தவல்லமதேவரிடத்திற்சேர்ந்துவிட்டது. எ - று. அகங்கையென்ல் அங்கையென்றாயது விகாரம். அங்கைமலர் உருவகம். (௨௩)

வந்து பரம சிவலிங்க மருவப் பெறுமல் லமன்றனையு
மந்த விமல லிங்கமுட னடைந்த ஞான குரவனையுங்
கந்த மலர்நல் வனமுடையான் கண்டு மகிழ்வுற் றிவர்பெருமை
சந்த மறைதேர் நான்முகனுஞ் சாற்றற் கரிதென் றறைகுவான்.

(இ - ள்.) பரமசிவலிங்கம்-இஷ்டலிங்கமானது —வந்துமருவப்பெறும் - வந்தடைந்த—அல்லமன்றனையும் - அல்லமதேவனையும் —அந்தவிமலலிங்கமுடன் - அந்தப்பரிசுத்தமானசிவலிங்கத்துடன் —அடைந்த - எழுந்தருளியிருந்த—ஞானக்குரவனையும் - ஞானாசிரியனையும்—நல் - நல்ல—கந்தம் - வாசனைபொருந்திய —மலர்வனமுடையான் - பூங்காவனங்காக்குங்கொக்கிதேவன் —கண்டு - பார்த்து —மகிழ்வுற்று - சந்தோஷித்து—இவர்பெருமை - இவ்விருவர்துமகிமையை —சந்தம் - அழகிய—மறைதேர் - வேதங்களையுணர்ந்த —நான்முகனும் - பிரமனும் —சாற்றற்கரிதென்று-சொல்லுதற்கரிதென்று—அறைகுவான்-சொல்லுவான். எ-று.

நின்னாற் கண்டேன் சிவலிங்க நிஷ்டை ஞான யோகிதனை
முன்னாட் கரும மனைத்துமினி முடித்தேன் ஞான நிலைநின்றே
னுன்னாற் செய்யப் படுமுதவிக் குதவி வேறு நெடுந்தகா
யென்னாற் செய்வ தொன்றுளதோ வெழிலிக் குதவி யார்செய் [வார்.

(இ - ள்.) சிவலிங்கநிஷ்டை - சிவலிங்கநாட்டத்திலழுந்திய —ஞானயோகிதனை - ஞானயோகியை —நின்னாற்கண்டேன் - உன்னால்தரிசித்தேன்—முன்னாட்கருமமனைத்தும் - பூர்வத்தில்முடிக்கவேண்டிய கருமமனைத்தையும்—இனிமுடித்தேன் - இனிமுடித்துவிடுவேன்—ஞானநிலைநின்றேன் - ஞானயோகத்தினின்றுவிட்டேன்.—உன்னாற்செய்யப்படுமுதவிக்கு- நீசெய்தவுதவிக்கு—நெடுந்தகாய் - பெருந்தகையோனே—உதவிவேறு - பிரதியுபகாரம் —என்னாற்செய்வதொன்றுளதோ - என்னாற்செய்யத்தக்கதொன்றுளதா—எழிலிக்கு - மேகத்திற்கு —உதவிசெய்வார்யார் - பிரதியுபகாரஞ் செய்பவர்கள்யார். எ - று. இனிமுடிப்பேனென்றதும், ஞானநிலைநிற்பேனென்றதும் விரைவினுமிகவினுமென்னுஞ்சூத்திரத்தில் அறஞ்செயிற்சுவர்க்கம்புக்கானென்றாற்போல எதிர்கால மிறந்தகாலமாயதுதெளிவினாலென்க. (௨௫)

ஐய நினையு நின்கரத்தி னடைந்த சிவலிங் கத்தினையும் [ன்று
பொய்யில் குரவன் றனையுமொரு பொருளென் றறிந்தே னின்றெ

செய்ய கமலத் திருவடியிற் சென்று தொழுதல் லமனும
மெய்ய னெதிர்நின் றன்பினால் விளம்பும் வணங்கா வலனன்றே.

(இ - ள்.) ஐய - அய்யனே—நினையும் - தேவரீரையும்—நின்கரத்தி னடைந்த - உமதுகையிலெழுந்தருளிய—சிவலிங்கத்தினையும் - இஷ்டலிங்கத்தையும் — பொய்யில்குரவன்றனையும் - குற்றமற்றவுநிமிடனென்னுமாசிரியனையும்—இன்று - இப்போது—ஒருபொருளென்றறிந்தேனென்று— ஒருவஸ்துவாகக்கண்டேனென்று —செய்யகமலத்திருவடியில் - செந்தாமரைமலர்போன்றதிருவடியில்—சென்று - போய்—தொழுது - வணங்கி—அல்லமனும் - அல்லமனென்னும்பெயரையுடைய—மெய்யனெதிர்நின்று - எதார்த்தவானதெதிரிலேநின்று—அன்பினால் - மிக்கவன்பினால்—வணங்காவலன் - நந்தவணங்காப்போன் —விளம்பும்-சொல்லுவான். எ - று. உன்னையும் சிவலிங்கத்தையும் அநிமிடப்பெயரோனையும், ஏகப்பொருளெனக்கண்டேனெனமுடிக்க. (உ௬)

என்னை யறிவித் ததுபோலிவ் விஷ்ட லிங்க மகம்புறமு, மன்னி யிருக்கு நெறியினைநின் மலர்த்தாள் பரவு மடியார்க்குப், பன்னி யுணர்த்திச் சரமாகிப் பாரிற் சரிப்பா யெனத்தொழுதான், தன்னி னிலத்தி னரரெல்லாந் தரும்பே ரின்பம் பெறநினைந்தான்.

(இ - ள்.) என்னையறிவித்ததுபோல் - என்னையெனக்குவிளக்கியது போல—இவ்விஷ்டலிங்கம் - இந்தச்சிவலிங்கம்—அகம்புறமும் - அகத்திலும்புறத்திலும்—மன்னியிருக்குநெறியினை - நிலையுற்றிருக்குநெறியை—நின்மலர்த்தாள் - உனதுமலர்போன்றபாதங்களை — பரவுமடியார்க்கு - வணங்குமடியார்களுக்கு—பன்னியுணர்த்தி - நன்றாகத்தெரிவித்து — சரமாகி - சரவுயிர்களைப்போல — பாரிற்சரிப்பாய் - பூமியிற்சஞ்சரிப்பவனே — எனத்தொழுதான் - என்றுவணங்கினான்—தன்னில் - தன்னைப்போல — நிலத்தினரரெல்லாம் - பூமியிலுள்ளமனிதர்களெல்லாரும — தரும் - தருந்த—பேரின்பம்பெற—பேரின்பமடைய—நினைந்தான் - நினைத்தகொக்கிதேவன். எ - று. நினைந்தான் வினையாலணையும்பெயர். அகம்புறம் அதோமுகமூர்த்தமுகத்தை. (உ௭)

கொக்கி தேவ னிரந்தமொழி கொண்டு கிளரல் லமதேவன், றக்க பெரியோர் தமக்கியல்பு தாம்பெற் றுள்ள பேறெல்

லா, மிக்க வுலகம் பெறுகவென வேண்டிக் கோட லெனப்புக
ழ்ந்து, செக்கர் மலர்ப்பூக் கைகளாற் றீண்டித் தழுவி யருள்
செய்தான்.

(இ - ள்.) கொக்கிதேவன் - கொக்கிதேவனென்போன் — இரந்த
மொழிகொண்டு - இரந்துகேட்டவசனத்தால்—ஒர் - விளங்காநின்ற—
அல்லமதேவன் - அல்லமதேவனென்போர்—தக்கபெரியோர்தமக்கு - த
குந்தபெரியோர்களுக்கு—இயல்பு - சுபாவமாவது—தாம்பெற்றபேறெல்
லாம் - தாம்பெற்றபேறனைத்தும்—மிக்கவுலகம்பெறுகவென - பெரியவு
லகத்துயிர்கள்பெறவேண்டுமென்று—வேண்டிக்கோடலென - வேண்டி
க்கொள்வதென்று—புகழ்ந்து - துதித்து—செக்கர் - சிவந்த — பூ - அழ
கிய—மலர்கைகளால் - தாமரைமலர்போன்றதமதுகைகளால்—தீண்டி -
தொட்டு—தழுவி - தழுவிக்கொண்டு —அருள்செய்தான் - அநுக்கிரகித்
தான். எ - று. அல்லமதேவன் புகழ்ந்து தீண்டி தழுவி அருள்செய்
தானெனமுடிக்க.                                        (உஅ)

அங்கைச் சிவலிங் கத்தினிடை யமைத்த நோக்கு நெஞ்ச
கமுந, தங்கச் சிவயோ கத்தினையே சார்ந்தங் கிருந்தா னோவி
யம்போன், மங்கைக் கிடந்தந் தருளினோன் மலர்த்தாட் கிடுபூ
வனமாக்கிப், பொங்கப் புரந்த தவத்தான்மெய்ப் பொருளா
சிரியன் கண்ணுற்றான்.

(இ - ள்.) அங்கை - உள்ளங்கையிலமர்ந்த — சிவலிங்கத்தினிடை - இ
ஷ்டலிங்கத்தில் — அமைத்த - அழுத்திய — நோக்குநெஞ்சகமும் - பார்
வையும்மனதும்—நங்க - பிறழாதுநிலைக்க — சிவயோகத்தினையேசார்ந்
து - சிவயோகத்தையேயடைந்து—ஓவியம்போல் - பிரதமைபோல—அ
ங்கிருந்தான் - அங்கிருந்தனன்—மங்கைக்கு - உமையவளுக்கு—இடந்தந்
தருளினோன் - இடதுபாகத்தைத்தந்தபரமசிவனது—மலர்த்தாட்கு - ம
லர்போன்றபாதத்துக்கு—இடு - அருச்சிக்கின்ற—பூவனமாக்கி - பூங்கா
வனமாக்கி—பொங்க - மிகுதியாக—புரந்த - காப்பாற்றிய—தவத்தால் -
தவத்தினால்—மெய்ப்பொருள் - உண்மைப்பொருளாகிய—ஆசிரியன்கண்
ணுற்றான் - ஞானசிரியனைக்கண்டகொக்கிதேவன். எ - று. அகங்கை
யென்பது அங்கையென்றாயதுவிகாரம். கண்ணுற்றான் சார்ந்து ஓவி
யம்போல் சிவலிங்கத்தினிடை நோக்கும்நெஞ்சகமுந்தங்க இருந்தானெ
னமுடிக்க.                                        (உகூ)

அடியர் வேண்டிற் றேபுரியு மல்ல மப்பே ரெம்பெருமா
னெடிய விழிக ளருள்சுரப்ப நிமல லிங்கங் கரத்தேந்திப்
படியி லரிய தவஞ்செய்யும் பத்த ருள்ளங் களிகூர
வடிய விளமாத் தழைப்பவரு மந்தா நிலம்போற் சரிக்கின்றான்.

(இ - ள்.) அடியர்வேண்டிற்றே - அடியார்கள்வேண்டியதையே — புரியும் - அநுக்கிரகிக்கின்ற — அல்லமப்பேர் - அல்லமனென்னும்பெயரையுடைய—எம்பெருமான் - எமதாண்டவன் —நெடியவிழிகள் - நீண்டகண்களில்—அருள்சுரப்ப - அருள்பெருக —நிமலலிங்கம் - பரிசுத்தமானவிஷ்டலிங்கத்தை—கரத்தேந்தி—கையிலேந்திக்கொண்டு —படியில் - பூமியில்—அரியதவஞ்செய்யும் - நிட்காமியதவஞ்செய்யும் — பத்தருள்ளம் -அன்பர்களுள்ளத்தில்—களிகூர-பேரின்பமிக— ~~அடிய - பருத்த அடியினையுடைய~~—இளம் - இளமையாகிய—மாத்தழைப்பவரும் - மாமரங்கள்பூத்துக்காய்க்கவருகின்ற —மந்தாநிலம்போல் - தென்றற்காற்றைப்போல —சரிக்கின்றான் - சஞ்சரிக்கின்றான். எ - று. எம்பெருமான் வந்து சரிக்கின்றானென்முடிக்க. அரியதவமென்றதனால் நிட்காமியமென்றாம். (௩௰)

கொக்கிதேவர்கதி - முற்றிற்று.

ஆ. கதி - கக - இ - விருத்தங்கள் - கூ௨௦.



பன்னிரண்டாவது

# முத்தாயியம்மைகதி.

வேறு.

கண்டிலே னச கண்ணனை யென்றனுர்
கொண்டு வாடுங் கொடியிடை யாடுயர்
விண்டு போக விரைந்துவந் தல்லமன்
பண்டு கூறும் பரிசு விளம்புவாம்.

(இ - ள்.) அசகண்ணனை - அசகண்ணனென்பவனை—கண்டிலேனென்று - பார்த்திலனென்று —அருர்கொண்டுவாடும் - மிக்கதுன்பத்தால்வதையும்—கொடியிடையாள் - பூங்கொடிபோன்றவிடையையுடையமுத்தாயியம்மையின்—துயர்விண்டுபோக-துன்பமொழிந்துபோதற்கு —அல்லமன்விரைந்துவந்து-அல்லமதேவர்விரைவாகவந்து —பண்டு-பூர்வத்தில் —கூறும்பரிசு - சொன்னவிதத்தை —விளம்புவாம் - சொல்லுவாம். எ - று. அல்லமன் விரைந்துவந்து கொடியிடையாடுயர் விண்டுபோக பண்டுகூறும்பரிசு விளம்புவாமெனமுடிக்க. (க)

பொடிய ணிந்தெழில் பொங்குறு மல்லம
னடியர் தங்க ளகத்திற் றுயரினை
யுடையி ழந்த வொருவன் கரமெனக்
கடித டைந்து களைந்தருள் செய்யுநாள்.

(இ - ள்.) பொடியணிந்து - விபூதியணிந்து—எழில்பொங்குறும் -அதனலழகுமிகுகின்ற—அல்லமன் - அல்லமதேவன்—அடியர்தங்கள் - அடியார்களுடைய —அகத்தில் - மனதிலுள்ள —துயரினை - பிறவித்துன்பத்தை —உடையிழந்த - வஸ்திரமிழந்த — ஒருவன்கரமென - ஒருவனது கையைப்போல — கடிதடைந்து - விரைவிற்போய் — களைந்தருள்செய்யுநாள் - நீக்கியநுக்கிரகிக்குநாளில். எ - று. அடியர்தங்களகத்திற்றுயரொன்றதனல் பிறவித்துயரொனப்பெற்றும், ஒருவன்விரைவிற்செல்லுழி த

னதுவஸ்திரமவிழ்ந்துபோக வதனைவிளைவிற்கட்டுங்கரத்தைப்போல அ
ல்லமன்விளைவி லடியர்பாற்சென்று அவர்கள்துயரினைக்களைவனெனக்
கூட்டிப்பொருள்கொள்க. (உ)

மறைத்தி ருந்த மலிசிவ பத்தியைப்
புறத்த றிந்த பொழுதே யுடம்பினை
வெறுத்த கன்று வெளியுரு வாயிஞ்
னறுத்த பந்த வசகண னென்பவே.

(இ - ள்.) மறைத்திருந்த - மறைத்துக்கொண்டிருந்த —மலிசிவபத்தி
யை - மிக்கசிவபத்தியை —புறத்தறிந்தபொழுதே - புறம்பிற்கண்டவுட
னே—உடம்பினைவெறுத்தகன்று - தனதுதேகத்தைவெறுத்துநீங்கி—வெ
ளியுருவாயிஞன்-சிதாகாசவடிவமானுன்—(அவனுெணின்)பந்தமறுத்த -
தனதுபந்தங்களைநாசஞ்செய்த —வசகண்ணன்-வசகண்ணனென்பவன்
—என்ப - என்றறிஞர்கூறுவர். எ - று. ஏ - அசை. முற்றத்துறக்கினும்
தேகபாவமகலாததால் உடம்பினைவெறுத்தகன்றெனவும், இங்கேசிதா
காசத்தையாதலால் வெளியுருவாயிஞனெனவுங்கூறிஞர். தன்னுல்வந்த
பந்தமாதலின் அறுத்தபந்தமென்றூர். (ங)

அறைந்த தூயவ னங்க வுபாதிபோய்
நிறைந்த நீர்மை நினைநதிலள் போயுயி
ரிறந்து போயின னென்னத் தளர்ந்துடன்
பிறந்த மாது பெரிதுள மாழ்கியே.

(இ - ள்.) அறைந்த - இப்போதுசொல்லப்பட்ட—தூயவன் - பரிசுத்
தவானுகியவசகண்ணனென்பவன் —அங்கவுபாதிபோய் - தேகபாவநீங்
கி—நிறைந்த - பரிபூரணவடிவமான—நீர்மை - தன்மையை—நினைந்தில
ள்போய் - நினையாதவளாகச்சென்று—உயிரிறந்துபோயினனென்ன - ம
ரணமடைந்தானென்று—தளர்ந்து - சோர்ந்து—உடன்பிறந்தமாது - அ
வனுடன்கூடப்பிறந்தமுத்தாயியம்மை —பெரிதுளமாழ்கி - மிகவுமனஞ்
சோகமுற்று. எ - று. உடன்பிறந்தமாதுபோய் தளர்ந்து மாழ்கியெனக்
கூட்டிமுடிக்க. (ச)

புலம்பி னைந்திருக் கின்றவப் போதினி
லிலிங்க மூங்கர முந்திகழ் வெய்துற

நலங்கொ ளல்லம னண்ணின னண்ணலுங்
கலங்கி நின்றவக் காரிகை கண்டனள்.

(இ - ள்.) புலம்பி - அழுது — நைந்திருக்கின்றவப்போதினில் - மனம் வதைந்துகொண்டிருக்குமத்தருணத்தில் — இலிங்கமுங்கரமும் - இஷ்டலிங்கமுமுள்ளங்கையும்—திகழ்வெய்துற - பிரகாசிக்க—நலங்கொளல்லமன் - நன்மையேவடிவமாகக்கொண்டவல்லமதேவர்—நண்ணினன்-அவ்விடத்தில்வந்தனன்—நண்ணலும் - வரவும் — கலங்கிநின்றவக்காரிகை - கலக்கமுற்றுநின்றவந்தஸ்த்ரீ—கண்டனள் - பார்த்தனள். எ - று. அக்காரிகை அல்லமன்நண்ணினனைக்கண்டனளெனக்கூட்டிமுடிக்க. (ரு)

கண்ட போதச கண்ணனைக் காண்கிலாள்
கொண்ட பீழை குறைய வழுதடிப்
புண்ட ரீகப் புதுமலர் வீழ்ந்துகண்
மண்டு நீருக வாய்விட் டரற்றினாள்.

(இ - ள்.) கண்டபோது - பார்த்தபோது—அசகண்ணனை - அசகண்ணனென்பவனை—காண்கிலாள் - காணாதவளாய்—கொண்ட -தான்கொண்ட—பீழைகுறைய - துக்கந்தணிவான்வேண்டி—அழுது - கூச்சலிட்டழுது—அடி - அவரதுபாதங்களாகிய — புது - அப்போதுமலர்ந்த—புண்டரீகமலர் - தாமரைமலர்களில் — வீழ்ந்து - விழுந்து — கண் - கண்களில்—மண்டு - மிகுந்த —நீருக -நீர்சொரிய —வாய்விட்டு - வாயைத்திறந்து—அரற்றினாள் - கதறியழுதாள். எ - று. காரிகை பீழைகுறைய கண் நீருக அரற்றினாளெனக்கூட்டிமுடிக்க. அடிப்புண்டரீகப் புதுமலர்- உருவகம். (சா)

பாவி யேன்முகம் பார்க்கவொண் ணாதென
வாவி யாமச கண்ண னகன்றுசெய்
நோவெ லாமிவ ணூக்க வருளினான்
மேவி னாயென மீண்டும் வணங்கினாள்.

(இ - ள்.) பாவியேன்முகம் - பாவியாகியவெனதுமுகத்தை—பார்க்கவொண்ணாதென் - பார்க்கக்கூடாதென்று —ஆவியாம்-உயிர்போல்பவனாகிய—அசகண்ணன் - அசகண்ணனென்போன்—அகன்று -தனதுடல்விட்டகன்று—செய் - என்னைவதைசெய்கின்ற—நோவெலாம் - வதைகளையெல்லாம்—இவண் - இவ்விடத்தில் —நூக்க - ஒழிப்பான்வேண்டி—

அருளினுல்-கிருபையினுல்—மேவினுயென - வந்தாயென்றுசொல்லி—மீ ண்டும்வணங்கினுள்-மறுபடியும்வணங்கினுள். எ - று. ஆவியாமசகண்ண ன் திணைவழுவமைதி. (எ)

வணங்கு மாதின் மலர்முக நோக்கியே
யணங்க ளுய்நல் லசகணன் தன்மையை
யுணர்நதி டாம லுளைத லுணர் வுளார்க்
கிணங்கு ருததென் றெந்தை யியம்புவான்.

(இ - ள்.) வணங்குமாதின் - வணங்கியமுத்தாயியம்மையின்—மலர்மு கநோக்கி - தாமரைமலர்போன்றவதனத்தைப்பார்த்து —அணங்களு ய் - தேவகன்னிபோல்பவளே —நல் - நல்ல—அசகணன்தன்மையை- அசகண்ணனதுநிலைமையை —உணர்ந்திடாமல் - அறியாமல்—உளைதல் - வருந்துதல் —உணர்வுளார்க்கு - அறிவுடையோர்க்கு—இணங்குறுததெ ன்று - அடாததென்று— எந்தை-தந்தைபோல்பவராகிய அல்லமன் —இ யம்புவான் - சொல்லுவான். எ - று. எந்தை நோக்கி உளைதல் இண ங்குறுததென்று இயம்புவான் எனக்கூட்டிமுடிக்க. அன்ளுயெனற்பா லதுஅளுயென்றுயது இடைக்குறை. (அ)

அழிவி லானை யழிந்தன னென்றுநீ
விழியி னுன்மிகு வெள்ளம பெருக்கினை
கழிவி லாதவா காயங் கழிந்ததென்
றொழிவி லாம லுளமெலி வார்கள்போல்.

(இ - ள்.) அழிவிலானை - என்றுமழியாதஅசகண்ணனை —அழிந்தன னென்று - இறந்தானென்று—நீ - நீ—விழியினுல் - கண்களினுல்—மிகு வெள்ளம் - மிக்ககண்ணீர்பெருக்கை —பெருக்கினை - பெருகச்செய்தா ய்—(யாவர்போல்வைஎனின்) கழிவிலாத - வந்துபோகாத —ஆகாயங்க ழிந்ததென்று - ஆகாயம்போய்விட்டதென்று—ஒழிவிலாமல்-ஓயாமல்— உளமெலிவார்கள்போல் - மனநோகின்றவர்கள்போல். எ - று. ஆகாய ம் கடமுதலியஉபாதிகளில் புகுவதும் போவதும் உண்டாயின் ஆ ன்மாவுந்தேகவுபாதிகளில் புகுவதும் போவதுமுள்தாம். இன்றுதலி ன், மெலிவதெற்றிற்கென்றுரென்க. ஆன்மாவாகிற அஃறிணையை உ யர்திணையாண்பாலாக்கியது இவனைப்பற்றியென்க. (௯)

சச்சி தாநந்த சங்கர னுகவே
யச்ச நீங்குபு தன்னை யறிந்தவன்

றுச்ச மாந்துயர் தோன்மலி யாக்கையை
யிச்சி யானதை யானென வெண்ணியே.

(இ - ள்.) சச்சிதாநந்தம் - சச்சிதாநந்தசொரூபமாகிய —சங்கரனுக வே - பரமசிவனுகவே—அச்சநீங்குபு - பிறவியச்சநீங்கி—தன்னையறிந்த வன்-தன்னையுள்ளவாறுணர்ந்தோன்—துச்சமாந்துயர் - துயர்தரற்கியை ந்த—தோன்மலி - தோலால்மூடப்பெற்ற—யாக்கையை - தேகத்தை— இச்சியான் - விரும்பான்—அதை - அவ்வுடலை —யானெனவெண்ணி-நா னெனக்கருதி. எ - று. துச்சமாந்துயர் மீமிசைப்பதம். தன்னைச் சச் சிதாநந்தமாகக் கண்டோன் அநிர்தசடதுக்கமாக்காணுனென்பார், ச ங்கரனுகஅறிந்தவன்யாக்கையையானென வெண்ணியிச்சியானென்ருர். துச்சமார்துயர்யாக்கைஎன்றது, தோல்மலியெனமிகைபடக்கூறியது ; எழுவகைத்தோற்றபேதமும், அதில்ஆண்பெண்பேதமுந்தோன்றற்கெ ன்க. சச்சிதானந்தசங்கரனென்றற்போல, துச்சமாந்துயர்யாக்கையெ ன்ருர்.தோற்றபேதந்தோலாலாதலின் துச்சமாந்துயரைத்தோலுக்கடை மொழியாக்கினுமமையும். தோல்மலியாக்கையையானெனவெண்ணியிச் சியானெனவே; சங்கரனையிச்சிப்பானென்ருயிற்று. தேகோகம் சிவோக ம் என்பவற்றுள், தானேதானுக்கற்கியைந்தது, சிவோகமாதலால்யா க்கையையிச்சியானெனக்கோடல், சிறப்பு. (௧௦)

ஒண்ட லைக்க ணொழிவி லருளுருக்
கொண்ட டுத்த குருவரு ளாற்றனைக்
கண்ட மெய்த்தவன் காயந் தனையன
முண்ட நெட்டிலை யொப்ப விடுப்பனல்.

(இ - ள்.) ஒண்டலைக்கண் - அழகியபூமியில் —ஒழிவில்-என்றுநசியா த—அருளுருக்கொண்டு - அருளேவடிவமாகக்கொண்டு—அடுத்த - ஆட் கொள்ளவந்த—குருவருளால்-குருவினதனுக்கிரகத்தினுல் —தனைக்கண் ட - தன்னைத்தானுள்ளவாறுகண்ட—மெய்த்தவன்-நிட்காமியதவத்தோ ன்—காயந்தனை - தனதுதேகத்தை—அனமுண்ட - சாப்பிட்ட—நெட்டி லையொப்ப - நீண்டவிலைக்கொப்பாக—விடுப்பன்-சுதந்தரியான். எ - று. ஆல் - அசை. யாதுமுணர்ந்துந் தன்றற்றனுணரப்படாமையால் குருவ ருளாற்றனைக்கண்டமெய்த்தவனென்ருர். அன்னமெனற்பாலது அன மென்ருயது ; இடைக்குறை. அனமுண்டநெட்டிலையென்றதனுல் எ ச்சிலையென்ருயிற்று. ஆகவே, மெய்ஞ்ஞானிக்குத்தன்தேகம் அருவருப் பாயதெனக்கண்டாம். (௧௧)

படியில் வந்த பரம குரவனாற்
றடைய றும்படி தன்னை யறிந்தவ
னுடல்வி டும்பொழு தொன்றொரு மண்மயக்
கடமு டைந்தவா காய நிகர்ப்பனால்.

(இ. ள்.) படியில்வந்த - பூமியிலெழுந்தருளிவந்த — பரமகுரவனால் - பரமாசிரியனால்—தடையறும்படி - தடைகணீங்கும்படி — தன்னையறிந்தவன் - தன்னைத்தானுணர்ந்தவன் —உடல்விடும்பொழுது - தேகநீங்கும்போது—ஒன்றொரு - ஒவ்வொரு — மண்மயக்கடம் - மண்மயமாயகடங்கள்—உடைந்த - உடைந்தஅவசரத்துள்ள — ஆகாயநிகர்ப்பன் - ஆகாயத்துக்கொப்பாவன். எ - று. ஆல் - அசை. தடை ; அஞ்ஞான, சந்தேக, விபரீதங்களை. மட்கடங்கள் வேறுமயமன்றாதலின், மண்மயக்கடமென்றார். தோற்றமுநசித்தலுங்கடத்துக்கன்றி ஆகாயத்துக்கன்றாதல்போல, தோற்றலுநசித்தலும்பாதித்திரயத்துக்கன்றி ஆன்மாவாகிய சிதாகாயத்துக்கன்றென்பார் ; கடமுடைந்தவாகாயநிகர்ப்பனென்றார். கடநாட்டத்தில் தோற்றமு நசிப்புமுண்டாய் ஆகாயநாட்டத்தின்றாதல்போல உடனாட்டத்திலையுண்டாயுயிர்நாட்டத்தின்றாதலின் உபமானத்தாலுபமேயந்தோன்றக் குறிப்பித்ததென்க. ஜீவிக்குங்காலத்திலென்னாது. உடல்விடும்பொழுதென்றது ; பன்னாட்சாதனத்தைக்குறிப்பித்தற்கென்க. (கஉ)

பந்த பாச முழுதும் பரிந்திட
நந்து மோர்சிவ ஞானி நரர்வினை
சிந்து மாறு செறிந்த வுடம்புதான்
வெந்த தூசின் விழியெதிர் தோன்றுமே.

(இ - ள்.) பந்தம் - பந்தத்தைவிளைவிக்கும் — பாசமுழுதும் - பாசங்களனைத்தும் — பரிந்திட - முறிந்திடும்படி — நந்தும் - வளருகின்ற — ஓர் சிவஞானி - ஒப்பற்றசிவஞானியென்பவன்—நரர்வினை - மிசிரகர்மம்—சிந்துமாறு - அழியும்வண்ணம்—செறிந்த - தானடைந்த—உடம்புதான்-தூலவுடம்பானது—வெந்ததூசின் - வெந்தபுடைவைபோல—விழியெதிர்தோன்றும் - எவர்க்குங்கண்ணுக்குக்காணப்படும். எ - று. ஏ - அசை. தூலவுடலையன்றி ஏனையுடலிரண்டுமின்றெனக்காட்டப்பந்தபாசமுழுதும்பரிந்திடநந்துஞானி யென்றார். இப்போதுநசியாதுள்ளதூல உடலோ, வெந்த புடைவைபோற்காணடலின்வெந்ததூசின் விழியெதிர்

தோன்றுமென்றார். மிசிரகர்மம் நரர்க்காதலின் நரர்வினையெனப்பட்டது. மிசிரகன்மமுமொழியவெக்கவேண்டுவதுடம்பாதலின் ஞானிநரர் வினைசிந்துமாறுசெறிந்த உடம்பென்றார். உரையிற்கோடலென்னு முத்தியால் சிவஞானி - சிவஞானிக்கு—நரர்-மனிதருடைய—வினை-சஞ்சித வினை—சிந்துமாறு-நசிக்கும்படி —செறிந்த - வாய்த்த —உடம்புதான் - தூல உடம்பென்றுரைகொள்ளினு மமையும். (௩௩)

**யா**வு மாகி யிருக்குஞ் சிவத்தொடு
மேவு ஞான விழியுடை யான்றனக்
கோவு மாறி லுறவு பகையெனும்
பாவு மோவிலை யென்றறி பாவையே.

(இ - ள்.) யாவுமாகியிருக்கும் - சமஸ்தமுமாயிருக்கும் — சிவத்தொடு மேவும் - சிவாகாரமாகவிளங்கும் — ஞானவிழியுடையான்றனக்கு - ஞானக்கண்ணுடையோனுக்கு—ஓவுமாறில் - ஒழிவில்லாத—உறவுபகையெனும் - உறவுபகையென்கின்ற — பாவமோ - பாவனையுமோ — பாவையே-பாவைபோல்பவளே—இலையென்றறி - சற்றுமில்லையென்றுணர்தி. எ - று. சிவத்தொடுமேவு ஞானவிழியுடையானென்பதினால், ஐக்கிய ஞானமெனப்பெற்றாம். உடல்நானென்னும்பாவமேயின்றியவிடத்து வேறுனையபாவமெங்ஙன முண்டாமென்பார் ஓவுமாறிலுறவுபகையெனும் பாவமோவிலையென்றறிபாவையேயென்றார். பாவை உவமையாகுபெயர். ()

**யா**க்கை தாமென் றிருந்தழி கின்றவ
ரூக்கி லாவறி வாகி யுடம்பொடு
தூக்கிலா தவர் தம்மையுந் தாமென
நோக்கு வாரவ ருண்மையை நோக்குறார்.

(இ - ள்.) யாக்கைதாமென்றிருந்து - தேகமேதாமென்றிருந்து — அழிகின்றவர் - அதனாற்கெடுகின்றவர் — ஊக்கிலா - நசியாத —அறிவாகி - அறிவேவடிவாகி — உடம்பொடுதாக்கிலாதவர்தம்மையும் - உடம்போடு கூடியிருந்துந்தாக்கற்றிருப்பவர்களையும் — தாமெனநோக்குவார் - தங்களைப்போலேபார்ப்பார்கள்—அவருண்மையை நோக்குறார் - அவர்களது எதார்த்தநிலையை விசாரித்தறியாதவ ராகி. எ - று. யாக்கைதாமென்றிருந்தழிதலாவது; உடலையன்றி நானெனற்குப் பொருள் காணாமையினலிழப்புழித்தனக்குமன்றே, ஆதலி னழிகின்றவரென்றார். அஞ்ஞானியர் ஞானியரைத்தம்மைப்போல் கருதுவரென்பதுகருத்து. (௩௫)

கூத்த னாடகக் கோல நடிப்பினைப்
பார்த்து வாய்மையென் றெண்ணிலர் பாருளா
ரேத்து ஞானிதன் யாக்கை நடிப்பினை
யோர்த்து மாதவ ருண்மையென் றுன்னுவார்.

(இ - ள்.) கூத்தன் - ஆன்மா — நாடகக்கோலம் - நாடகக்கோலங் கொண்டு — நடிப்பினை - நடிக்குநடிப்பை — பார்த்து - தரிசித்து — பாருளார் - பூமியிலுள்ளார் — வாய்மையென்றெண்ணிலர் - உண்மையென் றெண்ணார் — மாதவர் - மிக்கதவத்தினர் — ஏத்தும் - யாவராலுந்துதிக்கப்பெற்ற—ஞானிதன் - ஞானவானுடைய—யாக்கைநடிப்பினை - தேகநடிப்பை—ஓர்த்து - அனுபவத்தாலுணர்ந்து—உண்மையென்று - சத்தியமென்று — உன்னுவார் - நினையார்.* எ - று. உலகுளார்; எழுவகைத்தோற்றவுடல்களை ஆன்மாவினது, நாடகக் கோலமெனவும், அவற்றின்விவகரிப்பை நடிப்பெனவும், அறியார் அதுபோல; மாதவரும் ஞானியினது யாக்கையைக் கோலமெனவும் விவகரிப்பை நடிப்பெனவும் உண்மையென் றுன்னுவரெனக்கொள்க. கொள்ளவே, உலகுளாருக்குப்பகிர்முக நாட்டமும், மாதவர்க்கு அந்தர்முகநாட்டமு மெனப்பெறும். இங்ஙனம் பெறக்கூறியது முத்தாயியம்மையை நோக்கி, உனக் கந்தர்முக நாட்ட மின்மையால் புலம்புகின்றனை யெனக் குறிக்க வாதலா லிது திருஷ்டா அருத்தாபத்தி. இதனால் விசாரியாமல் புலம்பலை விடுதி யென்பது கருத்து. (௧௬)

அறிந்தி டாம லசகணன் றன்மையை
யிறந்து ளானென் றிரங்கினை யன்னைநீ
மறந்தி டாயிம் மதியென் றணல்சொல
நிறைந்த ஞானமுத் தாயி நிகழ்த்துவாள்.

(இ - ள்.) அறிந்திடாமல் - தெரியாமல்—அசகணன்றன்மையை - அசகண்ணனது நிலைமையை—இறந்துளானென்று - இறந்தானென்று—அன்னை - தாயே — நீ இரங்கினை - நீயழுகின்றாய் —இம்மதி - இந்த மூடபுத்தியை—மறந்திடாயென்று - மறந்துவிடென்று—அணல்சொல - அல்லமன்சொல்ல—நிறைந்தஞான - பூரணஞானத்தையுடைய—முத்தாயி - முத்தாயி யம்மையானவள் — நிகழ்த்துவாள் - சொல்லுவாள். எ - று. அணல் சொல இவையிரண்டும் இடைக்குறை. அசகணன்றன்மையை யறிந்திடாமல் அன்னைநீ இறந்துளா னென்றிரங்கினை எனமுடிக்க. (௧௭)

அரவின் காலர வன்றி யறிபவர்
தரையி னில்லை யசகணன் றன்னைநீ
தெரியி னன்றிச் சிறிய னறிவலோ
பெரும யான்செய் பிழைபொறுப் பாயென்று.

(இ - ள்.) அரவின்கால் - பாம்பின்காலை—அரவன்றி - பாம்பன்றி—அறிபவர் - அறிகின்றவர்கள்—தரையினில்லை - பூமியிலில்லை — அசகண ன்றன்னை - அசகண னென்பவனை—நீதெரியினன்றி - நீயறிவா யல்லாமல்—சிறியன் - அற்பபுத்தியையுடைய னாகியயான்—அறிவலோ - தெரிந்துகொள்வேனோ—பெரும - பெருமையுடையவனே — யான்செய் - நான்செய்த—பிழைபொறுப்பாயென்று - பிழையைப் பொறுத்துக்கொள்வாயென்று. எ - று. பாம்பின்காலைப் பாம்பறியுமன்றி யேனையோரறியார்போல, அசகண்ணனது நிலையை நீயறிவையன்றி யானறியத்தக்கவனோ என இரந்து கூறினனென்க அசகண்ணன் என்பது, அசகணனென்றாயது இடைக்குறை. பெரும என்பது விளி. (௧௮)

வேறு.

பங்க னிருந்த பதிக்கருள் செய்து
கங்கை யடைந்த கணக்கென வென்பா
லிங்குற வந்தனை யெங்குடி யுள்ளார்
தங்க டவந்தரு தன்மையி னென்று.

(இ - ள்.) கங்கை - கங்கையானவள் — அருள்செய்து - பகீரதனால் அவன்வமிசத்தாருக் கருள்புரிந்து — பங்கன் - அர்த்தபாகத்தையுடைய பரமசிவன் — இருந்த - எழுந்தருளியிருந்த — பதிக்கு - கைலாசத்துக்கு—அடைந்த கணக்கென - சேர்ந்தவிதத்தைப்போல — என்பால் - என்னிடத்தில் — எங்குடியுள்ளார்தங்கள் - எமது வமிசத்திற் பிறந்தவர்களுடைய—தவம் - தவமானது—தரும் - தரப்பட்ட — தன்மையின் - காரணத்தால் — இங்குறவந்தனை - இவ்விடத்தில்வந்தாய் — என்று - என்றுசொல்லி. எ - று. கங்கை பகீரதனது அரியபிரயத்தினத்தால் அவனதுவமிசத்தாருக் கருள்செய்து கைலையை யடைந்தாற்போல, அல்லமதேவரே எமதுவமிசத்தார்செய்த அரியதவத்தால் என்பால்வந்தனை எனக்கூட்டிப் பொருள் கொள்க. யாதனுருபிற்கூறிற்றாயினு மென்னும் விதியால் பதியையடைந்த கணக்கென வெனிலு மமையும். இங்கேதங்களென்பது சிரியை. (௧௯)

வந்தனை செய்து வழுத்திமு னின்று
பந்த மகன்ற பதம்பெறும் வண்ண
மெந்தை யியம்பி யெனக்கருள் செய்யென்
றந்த மடந்தை யறைந்தன ளன்றே.

(இ - ள்.) வந்தனைசெய்து - பூசனைமுதலிய வழிபாடுகள்செய்து—வழுத்தி - துதித்து — முனின்று - சன்னிதானத்தில் நின்று — பந்தமகன்ற - பந்தநாசமான — பதம்பெறும்வண்ணம் - நிலையடைவரன் வேண்டி—எந்தை - எமதுதந்தையே—எனக்கு - அடியேனுக்கு—இயமபி - உண்மைநிலையைச்சொல்லி—அருள்செய்யென்று - இரட்சியென்று—அந்தமடந்தை - அந்தமுத்தாயியம்மை—அறைந்தனள் - சொல்லினள். எ - று. அன்று - ஏ - அசைகள். அந்தமடந்தை செய்து வழுத்தி நின்று அறைந்தனளெனக் கூட்டிமுடிக்க. முனின்று இடைக்குறை. (உ0)

தேசிக னல்லம தேவன் மகிழ்ந்து
பாச மகன்று பரம்பொருள் காணு
நேச மடைந்தனை நின்னை நிகர்ப்பார
காசினி யின்மிசை கண்டில மென்று.

(இ - ள்.) தேசிகன் - குருமூகூர்த்தமாகிய — அல்லமதேவன்மகிழ்ந்து - அல்லமதேவர் களிகூர்ந்து — பாசமகன்று - பாசங்களினின்றுநீங்கி — பரம்பொருள்காணும - மேலாயபொருளைக் காணவேண்டுமென்னும்—நேசமடைந்தனை - விருப்பத்தையடைந்தாய் — நின்னைநிகர்ப்பார் - உன்னைபொப்பாரை—காசினியின்மிசை - பூமியின்மேல் — கண்டிலமென்று - பாத்திலமென்று. எ - று. தேசிகன் மகிழ்ந்து கண்டிலம் எனக் கூட்டிமுடிக்க. பாசமகன்றெனல் நீங்கற் பொருள். (உக)

பிறப்பொரு கோடி பிறந்து பிறந்து
புறக்கரு மங்கள் புரிந்திடி னும்பொய்
மறப்புறு மாணவ வல்லிரு ளின்றிச்
சிறப்புறு முத்தி செறிந்திடு வாரோ.

(இ - ள்.) பிறப்பொருகோடி - கோடிபிறப்பு—பிறந்துபிறந்து - செனித்து செனித்து—புறம் - பகிர்முகமாக — கருமங்கள் - சிவபுண்ணியமுதலிய சற்கருமங்களை—புரிந்திடினும் - செய்தாலும்—பொய் - பொய்யாகி

ய மாயைகாரணமாக — மறப்புறும் - தன்னுண்மை வடிவைமறக்கத்தக்க—ஆணவ வல்லிருளின்றி - ஆணவமென்னுங்கொடியவிருளின்றி—சிறப்புறும்-சிறப்பாகவடையத்தக்க—முத்தி-முத்தியை—செறிந்திடுவாரோ-அடைவார்களோ. எ - று. ஆணவநசிப்பிலுறுமுத்தியை புறக்கருமங்கள்செய்து அடைதற்பாலரோவெனமுடிக்க, புரிந்திடினுமென்னு உம்மை, இழிவுசிறப்பு. மாயைக்குவடிவம்பொய்யாதலால் பொய்யைமாயையென்றது காரணவாகுபெயர். மறப்புறுவென்றதனால் தன்னுண்மை வடிவைவருவித்தாம். ஆணவவல்லிருளெனல்,உருவகம். (௨௨)

மரிப்பொ டுதிப்பு மறிக்குது மென்று
கருத்தை வெளிக்கரு மத்தின் விடுத்து
விரிக்குத னெய்யை விடுத்தெரி கின்ற
நெருப்பை யவிப்ப நினைப்பதை யொக்கும்.

(இ - ள்.) மரிப்பொடு - இறப்போடு—உதிப்பு - பிறப்பை—மறிக்குதுமென்று - ஒழிப்போமென்று—கருத்தை - எண்ணத்தை—வெளிக்கருமத்தின்விடுத்து - சிவபுண்ணியகருமங்களில்செலுத்தி — விரிக்குதல் - விரியச்செய்தல்—எரிகின்றநெருப்பை - எரியப்பட்டநெருப்பை — நெய்யைவிடுத்து - நெய்யைவிட்டு—அவிப்ப - தணிக்க—நினைப்பதையொக்கும் - நினைப்பதுபோலும். எ - று. பிறப்பிறப்பொழிக்குதுமென சிவபுண்ணியாதி கருமமியற்ற கருத்தைவிரித்தல், நெருப்பையவிக்க நெய்சொரிவதுபோலுமென்க. ஞானமின்றிமுத்தியெய்தாதென்பதுகருத்து. (௨௩)

மட்டற வோடு மனத்தை நிறுத்திக்
கட்டுதல் வீடு விடுத்திடல் கட்டன்
றொட்டிய பண்பி னுழைத்தல மப்பேர்
சிட்ட னவட்கருள் செய்தன னன்றே.

(இ - ள்.) மட்டற - தடையின்றி—ஓடுமனத்தை-ஓடுகின்றமனதை—நிறுத்தி - சலியாதுநிறுத்தி — கட்டுதல் - தன்வயப்படுத்தல்—வீடு - முத்தியாம்—விடுத்திடல் - அதனிஷ்டப்படிவிட்டுவிடுதல்—கட்டன்று - தன்வயப்படுத்தலன்று—ஒட்டிய - பொருந்திய —பண்பினுழைத்து - குணங்களாற்கூறி—அல்லமப்பேர்-அல்லமனென்னும்பெயரையுடைய —சிட்டன் - பிரியமுடையோன்—அவட்கு - அந்தமுத்தாயியம்மைக்கு — அருள்செய்தனன் - அநுக்கிரகித்தான். எ - று. அன்று - ஏ - அசைகள். மனதெனல்,பகிர்முகமாகப் பிரிதிபலித்தஞெப்திஸ்புரிப்பை. கட்டுதல்,அந்தர்

மூகப்படுத்தல். விடுத்திடல், பகிர்மூகப்படுத்தல். கட்டுதல் வீடெனவே, விடுத்திடல்கட்டன்றென்பது பிறப்பென்ருயிற்று. ஒட்டியபண்பென்ற தனால் வஸ்துவுக்கியைந்தகுணமெனப்பெறும். இங்கேசிட்டனென்றது தன்னையுள்ளவாறுணர்வார்க்குரியனெனலே. (௨௪)

தத்துவ முற்று மயக்குவ தள்ளி
மெய்த்த தனைப்பெற வேறு கொடுத்தான்
பொய்த்துறு குப்பை கிளைத்தொளி பொங்கு
முத்தை யளித்தென முத்தை தனக்கு.

(இ-ள்.) பொய்த்துறுகுப்பை - வறியகுப்பையை — கிளைத்து - கோழியானதுசெய்த்து—ஒளிபொங்குமுத்தை - பிரகாசமிக்கமுத்தை—அளித்தென - கொடுத்தாற்போல—முத்தை — தனக்கு - முத்தாயியம்மைக்கு — மயக்குவ - விபரீதத்தன்மையவாகிய — தத்துவமுற்றும் - தத்துவக்கூட்டமனைத்தையும்—தள்ளி-ஆராய்ச்சியால் தனித்தனியாகவல்லவல்லவெனத்தள்ளி—வேறு-அவற்றிற்குவெதிருத்தமாக—மெய்த்த - உண்மையாயுள்ள—தனைப்பெற - தனதெதார்த்தநிலையைப்பெற — கொடுத்தான்—அல்லம னனுக்கிரகித்தனன். எ - று. கோழி குப்பைகிளைக்க முத்துவெளிப்பட்டாற்போல முத்தாயி யம்மைமுன் தத்துவக்குப்பையாயத் தானென்பதினிலே வெளிப்பட்டதெனப் பொருள்கொள்க. உபமானத்தில் கோழிவருவித்தாற்போல உபமேயத்தில் அல்லமனெனலைவருவித்தாம். முத்தெனல் குப்பையுளொன்ருக நின்ருற்போல தானெனவும் தத்துவக்குப்பையுள் ஒன்ருகநின்றதெனக் குறிப்பித்தார். கோழிசெய்க்காவிடத்தி லெங்ஙனமுத்து வெளிப்படாதோ அங்ஙனந் தத்துவக்குப்பையை யாயாவிடத்துத் தானெனல் வெளியாகாதென்பது கருத்து. எனவே,தானெனலைத்தவிர ஞாதுஞ்ஞானமின்றேனும் அவற்றை முற்றுமாயாவிடத்துத்தானெனலெங்ஙனம்விளங்கு மெனப்பெறும். பெறவே தானெனற்கேசலட்சண விலட்சணமெனல் கண்டாம். (௨௫)

வீடு விரும்பி வெறுத்திலன் மெய்யைத்
தாடரு மொண்குர வன்றனை யெங்கு
நாடி யுழன்றில னுய வென்னைத்
தேடி யடைந்தருள் செய்தனை யென்று.

(இ-ள்.) வீடுவிரும்பி - ஐக்யமுத்திவேண்டி — மெய்யைவெறுத்திலன் - ஊனுடலைவெறுத்தேனல்லன் —தாடரும்-திருவடிதீட்சைதரும்—ஒ

ண்குரவன்றனை - ஞானாசிரியனை—எங்குநாடியுழன்றிலன் - எவ்விடத்துந்தேடியலைந்தேனில்லன்—நான் - இங்ஙனமாயநான்—உய - கிருதார்த்தனாக—என்னைத்தேடியடைந்து - என்னையொருபொருளாகத்தேடிவந்து—அருள்செய்தனையென்று - அநுக்கிரகித்தாயென்றுசொல்லி. எ-று. உய்யவென்றது உயவென்றாயது இடைக்குறை. தன்னையபாத்திரியெனக்குறிக்க இங்ஙனங்கூறினளென்க. (௨௬)

அல்லம னென்னு மருட்குர வன்றாள்
புல்லி வணங்குபு பொற்கொடி யன்னாள்
செல்ல லகன்று சிதம்பர மெய்தி
யெல்லையி லின்பொ டிருந்தன ளம்மா.

(இ - ள்.) அல்லமனென்னும - அல்லமதேவனென்கிற—அருள் -கிருபைதங்கிய—குரவன் - ஞானாசிரியனது—தாள் - திருவடிகளை—புல்லி - தழுவி — வணங்குபு - வணங்கி — பொற்கொடியன்னாள் - பொற்கொடி போன்றவள் — செல்லலகன்று - அல்லவற்றைநிலையெனச்சேறலகன்று—சிதம்பரமெய்தி - சிதப்பரமாகத்தானமைந்து—எல்லையில் - எல்லையற்ற—இன்பொடிருந்தனள் - பேரின்பநிலையாயினள். எ - று. அம்மா வியப்புமொழி. செல்லலகறலாவது ; ஆங்காங்கு மெய்ந்நிலைபோற்காணும் சச்சிதானந்தநிலைகளைக்கண்டுகொண்டகறலை, (௨௭)

முத்தாயியம்மை கதி முற்றும்.

ஆக கதி - ௧௨ - க்கு - விருத்தம் - ௬௪௭.

---



பதின்மூன்றாவது

# சித்தராமையர்கதி.



வேறு.

காமரு சித்த, ராம னிடத்திற்,
போமனல சொற்ற, சீர்மை யுரைப்பாம.

(இ - ள்.) காமரு - அழகிய —சித்தராமனிடத்தில்-சித்தராமனென்பவ ரிடத்தில்—போமனல் - போகியஅல்லமன் —சொற்ற - சொல்லிய—சீர்மை - மேலாயநிலையை —உரைப்பாம் - சொல்லுவாம். எ - று. காமரு வென்பது பூங்காவனமுதலியவற்றைப்பொருந்தியவெனினுமமையும். அண்ணலெனற்பாலது அணலென்றாயது இடைக்குறை. இங்கேசீர்மை யெனல் எவற்றிற்குஞ்சிறந்தநிலையை. (க)

செல்லல் களைந்து, நல்லறி வின்பஞ்,
சொல்லுவ னென்னு, மல்லம னென்பான்.

(இ - ள்.) செல்லல் - அல்லாதநெறிகளிற்சேறலை —களைந்து - நீக்கி — நல்லறிவு - மெய்யுணர்வையும் — இன்பம் - பேரின்பத்தையும்— சொல்லுவனென்னும்-உணர்த்தத்தக்கவனென்னும் —அல்லமனென்பான் - அல்லமதேவனென்றுசொல்லப்படுவோன். எ - று. நல்லறிவின்ப மென்றதனாற் செல்லலெனற்கு அல்லாதநெறிகளிற் சேறலெனவுரை கொண்டாம். நல்லென்றவடைமொழியால் பேரறிவுபேரின்பமென்றாம்.

கரும யோகமுங், கிரியை யாவையும்,
மருவி ராமன்வாழ், புரியை மேவினன்.

(இ - ள்.) கருமயோகமும் - கருமயோகத்தையும் — கிரியையாவையும் - கிரியாமார்க்கங்களனைத்தையும் — மருவி - பொருந்தி—ராமன் - சித்தராமரென்போர்—வாழ்புரியை - வாழ்கின்றபட்டணத்தை — மேவினன் - அடைந்தான். எ - று. எனவே ஞானயோகியன்றெனப்பெற்றாம். (ஙூ)

வாவி யாலயங், காவி ராமனு,
ரேவ லாளர்செய், தோவி லாமையை.

(இ - ள்.) வாவி - தடாகங்களையும்—ஆலயம் - தேவாலயங்களையும்—கா - பூங்காவனங்களையும்—இராமனுர் - சித்திராமருடைய— ஏவலாளர் - ஏவலாளிகள்—செய்தோவிலாமையை - செய்யும்பணிகள் ஒழிவில்லாமையை. எ - று. வாவிதோண்டலும் ஆலயங்கட்டுதலும் காவளர்த்தலும் என்னுஞ்சிறப்புவினைகளைக்குறிக்கப் பொதுப்படச்செய்தென்ருர். ஒவிலாமை எதிர்மறைவினையாலணையும்பெயர். ஓதல், ஒழிதல். (ச)

பார்த்தரு ளண்ணன், மூத்த விராமன்,
மார்த்தை யறிந்த, கூத்தின னென்றே.

(இ - ள்.) பார்த்தருள் - கண்ட—அண்ணல் - அல்லமன்—மூத்த - வியப்பில்மூத்த — இராமன் - சித்தராமனென்னும்பெயருடையவன் — மார்த்தையறிந்த - விபரீதமொழிகளுணர்ந்த — கூத்தினன் - அவ்வாறுகாட்டுநடிப்புடையவன்—என்று - இவனுருமென்றுசொல்லி. எ - று. இவை யிவனைக்காண்டலாலெழுங் குறிப்பாதலால் திருட்டாவருந்தாபத்தி. (ரு)

பேரறி வின்னுன், சார விருந்த,
வூரினு மில்லென், ருர விகழ்ந்தே.

(இ - ள்.) பேரறிவு - பேரறிவெனல்—இன்னுன்சாரவிருந்த - இத்தகையோன்சார்தறகிடம்பெறநின்ற —ஊரினுமில்லெனறு - ஊரிலுமில்லையென்று — ஆரவிகழ்ந்து - மிகவுமிகழ்ந்து. எ - று. பேரறிவெனலொன்றுண்டெனலைக்கேட்டுமறியானென்பார் இங்ஙனங்கூறினர். கூறவே, கீழாயநெறியையறிவனென்பதாயிற்று. ஊரினுமென்பதிலும்மை இழிவுசிறப்பு. சமீபித்ததாதலி னின்னுனென்ரும். (சா)

இல்ல மகன்றிவ், வல்ல லடைந்தா,
னல்ல பசும்பொன், வல்லி யுவந்தான்.

(இ - ள்.) நல்ல - யாவர்க்குமினிய—பசும்பொன் - பசியபொன்னிறமுள்ள—வல்லி - வல்லிக்கொடிபோன்றவிலக்குமி —உவந்தான் - விரும்பி—இல்லமகன்று - துறவறம்பெற்று— இவ்வல்லல் - இந்தத்தொலையாவல்லலை—அடைந்தான் - அடைந்தனன். எ - று. வினைமுற்றேவினை

எச்சமாகலுமென்றவிதியால் உவந்தென்றுக்குக. இவன் துறந்ததுமிக்க செல்வம் வேண்டியன்றி முத்தியடைதற்கன்றெனப்பெறும். இவ்வல்லலாவது; ஆலயம்புதுக்கல், பூங்காவனமாக்கல், தடாகங்கள் தோண்டல், முதலியவற்றுலாயவல்லலே. எனவே, இல்லந்துறந்தும் பயனின்றென்பதாயிற்று. வல்லி-உவமையாகுபெயர். (எ)

என்று நினைந்து, நன்றுற வாவி,
யொன்றகழ் வாரபாற், சென்றிது சொல்வான்.

(இ - ள்.) என்றுநினைந்து - இவ்வாறுகநினைத்து — நன்றுற - நன்றுக—வாவியொன்று - ஓர்தடாகத்தை—அகழ்வார்பாற்சென்று - தோண்டுபவர்களிடத்திற்போய் —இதுசொல்வான் - இதைச்சொல்லுகின்றுன். எ - று. அகழ்வார் அவனதுபணிசெய்வோர். (அ)

வேறு.

ஒட்ட ராம னுளத்தினி
லிட்டம் யாதுகொ லித்தொழின்
முட்டி லாமன் முயன்றனன்
கொட்டி வீழு மிகுததல்போல்.

(இ - ள்.) ஒட்டராமன் - ஒட்டராமனென்பவன் —உளத்தினில் - தன்மனதில்—இட்டம்யாதுகொல் - இஷ்டம்யாதோ —இத்தொழில் - இங்ஙனமாயதொண்டுகளை — முட்டிலாமல் - யாதோரிடையூறுமின்றி — கொட்டி - நெல்லைக்குத்தி—வீழ் - அதனுல்விழுகின்ற—உமிகுத்தல்போல் - உமியைக்குத்துதல்போல் — முயன்றனன் - செய்யாநின்றனன். எ - று. ஒட்டராமனிங்ஙனமாயதொண்டுபுரிதல் நெல்லைக்குத்தி யுமியையுங்குத்துவார்போல்வதென்க. கொல் ஐயம். கொட்டியென்பதனுல் நெல்வருவிக்கப்பட்டது. கொட்டிவீழுமிகுத்தல்போல் ஒட்டராமன் இத்தொழில்முட்டிலாமல் முயன்றனனென்க்கூட்டிப்பொருள்கொள்க. அவன் இங்ஙனமாயபயனற்றதொண்டுபுரிதற்கு அவனதுள்ளக்கருத்து யாதோவென்றுரெண்க. (௯)

விழற்கி றைப்ப விடுத்தல்போற்
றெழிற்கு ளெய்த்துறு தொழினுமை

யிழைக்க விட்டதெ னென்றிட
டொழிக்க லுற்றவ னோதினன்.

(இ - ள்.) விழற்கு - விழலுக்கு—இறைப்ப - தண்ணீர்பாய்ச்ச—விடுத்தல்போல் - கால்வாய்வழியாகவிடுத்தல்போல—தொழிற்குள் - எல்லாத்தொழிலுக்குள்ளும்—எய்த்துறு -சோர்வுறற்கிசைந்த—தொழிலிழைக்க-தொழில்செய்ய—நுமைவிட்டது - உங்களையேவியது—எனென்று - என்னகாரணமென்று—இடர்-துன்பங்களனைத்தையும்—ஒழிக்கலுற்றவன்-ஒழிக்கப்புறப்பட்டவனாகியவல்லமன்—ஓதினன் - சொன்னான். எ - று. எல்லாத்தொழில்களுள்ளும் மிக்ககஷ்டத்தைத்தருமித்தொழிலை விழலுக்குநீரிறைப்பார்போல் இவனேற்றுக் கொண்டகாரணம்யாதென்றானென்க. இடரொழித்தல், சங்கற்பநாசஞ்செய்தலை. எனென்றதும், நுமையென்பதும், இடைக்குறை. ஒழிக்கலுற்றவன்-வினையாலணையும்பெயர்.

சாந்த னோதிய தாழ்மொழி
காய்ந்த வேலிரு காதினும
போந்த போன்று புகுந்தன
மாந்த ராகுல மன்னினா.

(இ - ள்.) சாந்தன் - உபசாந்தவடிவனாகிய வல்லமன்—ஓதிய - சொல்லிய—தாழ்மொழி - இரக்கமானவசனங்கள் — காய்ந்த - அனலிற்காய்ந்த — வேல் - வேலாயுதமானது — இருகாதினும் - இரண்டுகாதுகளிலும் — போந்தபோன்று - நுழைந்தாற்போல — புகுந்தன - நுழைந்தன — (இதனால்) மாந்தர் - அங்குள்ளமனிதர்கள் — ஆகுலமன்னினர் - வருத்தமடைந்தனர். எ - று. புகுந்தனவென்றதனால் மொழியைப் பன்மையாக்கினும். இங்கே மாந்தரென்பது - அவனதேவலாளரை. (௧௧)

அறமழித்தனை யன்றியு
நெறிய றக்குரு நிந்தனை
பெறவு ரைத்தனை பித்தவென்
றுறவு றுத்தன ரொட்டலர்.

(இ - ள்.) அறமழித்தனை - தருமநெறிகளை நாசஞ்செய்தாய் — அன்றியும் - இஃதன்றியும்—நெறியற - முறைவழுவ—குருநிந்தனைபெற - குருதூஷணையுண்டாக—உரைத்தனை - மொழிந்தாய்—பித்தவென்று-பித்துகொண்டவனேயென்று—ஒட்டலர் - யாதோர்தொடர்புமற்ற வவனதே

வலாளிகள்—உறவுறுத்தனர் - மிகச்சிறினர். எ - று. பித்தவென்பது விளி. ஒட்டு, நேசம். அலர், அல்லாதவர். (௧௨)

ஒட்ட னென்றனை யும்பருஞ்
சிட்ட னென்றுகொள் சித்தனைத்
துட்ட வென்று சுளித்தனர்
வெட்டி ருந்தட மேவினோர்.

(இ - ள்.) உம்பரும் - தேவர்களும்—சிட்டனென்றுகொள் - நேசனாகக்கொள்ளத்தக்க—சித்தனை - எங்கள்சித்தராமனை—ஒட்டனென்றனை - ஒட்டராமனென்றாய்—துட்டவென்று - துட்டனேயென்று—வெட்டு - வெட்டுகின்ற—இரும் - பெரிதாகிய—தடம் - தடாகத்தின்கண்—மேவினோர் - இருந்தவர்கள் — சுளித்தனர் - முகஞ் சுளித்தார்கள். எ - று. எனையோருமென ஒழிந்துநிற்பதால் உம்பரும் என்பதிலும்மை இறந்தது தழீஇய வெச்சம். துட்டவென்பது, விளி (௧௩)

வேறு.

மெய்த்தட மகழ்பவர் வினையை யன்றியே
சித்தர்தஞ் செயலொரு சிறிது மின்மையான்
மத்தர்நுங் குரவனை மணணி னும்மினு
முத்தம வொட்டனென் றுரைத்து மென்றனன்.

(இ - ள்) மெய் - தேகத்தினால்—தடம் - தடாகத்தை — அகழ்பவர் - தோண்டுபவர்களுடைய—வினையையன்றி - தொழிலையல்லாமல்—சித்தர்தஞ்செயல் - சித்துபுருஷர்களுடைய செயல்களில் — ஒருசிறிதுமின்மையால் - ஓரற்பத்தொழிலு மில்லாமையால் — மத்தர் - உன்மத்தராகிய—நுங்குரவனை - உமதாசிரியனை—மண்ணினும் - பூமியிலும்—இனும் - இன்னமும்—உத்தமவொட்டனென்று - உத்தமவொட்டனெனப் பெயர்கொடுத்து—உரைத்தும் - அழைக்கின்றோம் — என்றனன் - என்றல்லமன் சொல்லினன். எ - று. மண்ணினும் என்பதி லும்மை இழிவு சிறப்பு. இனுமென்பது இடைக்குறை. (௧௪)

நிகழ்ந்துல கிடைநிலை நிற்கு நல்லற
முகந்துசெய் பவன்றனை யும்ப னேயெனப்.

புகழுந்தவர் புண்ணியர் பொறுமை யானிழித்
திகழ்ந்தவர் நரகரென் றிசைப்பர் நல்லவர்.

(இ - ள்.) நிகழ்ந்து - சான்றோரால்நடந்து — உலகிடை - உலகத்தி ல்—நிலைநிற்கும் - நிலைநிற்கின்ற—நல்லறம் - நல்லதருமங்களை —உகந்து - விரும்பி—செய்பவன்றனை - செய்கிறவனை—உம்பனேயென - தேவனே யென்று—புகழ்ந்தவர் - துதித்தவர்கள் —புண்ணியர் - புண்ணியவான்க ளென்றும்—பொறுமையான் - பொறுமையினால்—இழித்து - இழிவுபடு த்தி—இகழ்ந்தவர் - தூஷித்தவர்கள் —நரகரென்று-பாவிகளென்றும்— இசைப்பர்நல்லவர் - நல்லோர்கள்சொல்வார்கள். எ - று. என்றென்ப தைப் புண்ணியரோடுங்கூட்டுக. (கரு)

மறவினை யுடையனை மாற்றித் தூயநல்
லறவினை யுடையனை யறிந்திட் டன்னரோ
டுறவினை யடைந்திலை யொப்பக் கண்டறத்
துறவினை யுளையென வொட்டர் சொல்லினார்.

(இ - ள்.) மறவினையுடையனை - தீச்செயலினனை — மாற்றி - நீக்கி— தூய-பரிசுத்தமாகிய —நல்-நல்ல—அறவினையுடையனை - சன்மார்க்கநெ றியினனை—அறிந்திட்டு-தெரிந்து—அன்னரோடு-அத்தகையினரோடு— உறவினையடைந்திலை - உறவுகொண்டாயில்லை — ஒப்பக்கண்டு - சமமாக க்கண்டு—அறத்துறவினை - சன்மார்க்கத்தைத்துறக்கும்வினையை—உளை- உடைத்தானவனாயிருக்கின்றனை—என - என்று—ஒட்டர்சொல்லினார் - ஒட்டர்கள்சொன்னார்கள். எ - று. இருவினையில் தக்கதினையதென்றறி யாமல் இரண்டுஞ்சமமென்றுபுண்ணியகன்மத்தை ஒழித்தாயென்றன ரென்க. (கசு)

ஓங்கிரு வினைகளு மொப்பக் கண்டவர்
தாங்களென் றனையொரு தமரிற் பேணுவ
ராங்கவை யிரண்டையு மடைந்து போயுழ
னீங்களென் றனைபுணர் நெறியிலீ ரென்றான்.

(இ - ள்.) ஓங்கிருவினைகளும் - மிக்கவிருவினைகளையும்—ஒப்பக்கண்ட வர்தாங்கள்-சமமாகக்கண்டவர்கள் —என்றனை-என்னை—ஒருதமரில்-உ றவினர்களிலொருவனாக —பேணுவர் - ஏற்பார்கள் —ஆங்கவையிரண் டையும் - அங்ஙனமாயவிருவினைகளையும்—அடைந்து - சேர்ந்து—போய்-

பிறவிகடோறுஞ்சென்று—உழல் - மாறிமாறியுழல்கின்ற—நீங்கள் - பாமரராகியநீங்கள் —என்றனையுணர் - என்னையினையனென்றுணரத்தக்க—நெறியிலீர் - வழியில்லாதவர்கள்—என்றான் - என்றல்லமன்கூறினன். எ - று. என்னை அறிபவர் இருவினையொப்பினரோயன்றி நீங்களல்லரெனத்தெரிவித்தனனென்க. ஆங்கவையிரண்டையுமடைந்துபோயுழனிங்களெனவே, அங்ஙனமுழறல் எங்களுக்கின்றென்பதைக்குறிப்பிக்கப்பெற்றாம். (கஎ)

எனக்கற வினையுமி லென்று கூறினை
யுனக்கொரு கதியிலென் றுண்மை கூறியே
சினத்தனர் நிலனகழ் சிறியர் யாவருந
தனக்கிணை தானெனுந் தம்பி ரானையே.

(இ - ள்.) நிலனகழ் - நிலத்தைவெட்டுகின்ற —சிறியர்யாவரும் - அறிவீனர்களெல்லாம்—தனக்கிணை தானெனும்-தனக்குத்தானேயொப்பென்ற —தம்பிரானை - அல்லமனை நோக்கி —அறவினையும் - புண்ணியகர்மமும் —எனக்கிலென்றுகூறினாய்-எனக்குடன்பாடன்றெனச்சொல்லினை—(ஆதலின்) உனக்கொருகதியிலென்று - உனக்கொருகதியுமில்லையென்று—உண்மைகூறி - உண்மையைவிளம்பி—சினத்தனர் - கோபித்தனர். எ - று. உனக்கொருகதியும் என்பதிலும்மை எஞ்சியது. நிலனகழ்சிறியரெனவே, ஒட்டரெனப்பெற்றாம். தனக்கிணைதானென்றது அறிவேவடிவாயதை. (கஅ)

முற்றிய கல்வியின் மூடர்நீ விர்நுங்
கற்றறி மூடனுக் கறைமி னன்னவ
னுற்றன னெனிலவ னுணர்வுஞ் சொல்லினு
மிற்றென வுணர்வமென் றெந்தை கூறினன்.

(இ - ள்.) முற்றியகல்வி - கல்விஞானத்தேர்ச்சி—இல் - இல்லாத—நீவிர் - நீங்கள்—மூடர் - மூடர்களே —, (ஆதலின்) நுங்கற்றறிமூடனுக்கு - கற்றறிமூடனாகியவுங்களைசமானுக்கு —அறைமின் - என்துவரவைத்தெரிவியுங்கள்—அன்னவன் - அத்தகையனைமூடசிரேட்டன்—உற்றனனெனில் - இங்குவருவனாயின் —அவனுணர்வும் - அவன்விவேகத்தையும்—இற்றென - இப்படிப்பட்டதென்று —சொல்லினால் - அவன்வாய்மொழியால் —உணர்வமென்று - அறிவோமென்று —எந்தைகூறினன் - அல்லமன்சொல்லினன். எ - று. எந்தை, எமதுதந்தை. முற்றியகல்

வியிலெனவே, அற்பகல்வியெனப்பெற்ரும். செயற்கரியசெய்வர்பெரி யரொன்பதிவன் கணில்லாமையின் கற்றறிமூடனென்ருர். உங்களுணர்வை யுணர்ந்ததுமன்றியெனப் பொருடரநிற்றலின் அவனுணர்வும் என்பதிலு ம்மை இறந்ததுதழீஇய வெச்சம். (௧௯)

சேடனும் புகழ்வுறுஞ் சித்த ராமனை
மூடனென் றுரைத்தவம் மொழிக யந்தொடாத்
தோடருங் கொட்டினோர் சீற்றத் துப்பெனு
நீடுவெந் தழல்சொரி நெய்நி கர்த்ததால்.

(இ - ள்.) சேடனும் - ஆதிசேடனும்—புகழ்வுறும் - துதிக்கத்தக்க—சித்தராமனை - சித்தராமனென்பவனை—மூடனென்றுரைத்த - மூடனென்றுசொன்ன—அம்மொழி-அந்தவார்த்தை—கயம் - தடாகத்தை—தொடா - தோண்டி —தோடரும் - தோளில்வைக்கும —கொட்டினோர் - மண்வெட்டியையுடையோரது — சீற்றத்துப்பெனும் - கோபவலியென்கின்ற—நீடு - நீண்ட —வெந்தழல் - கொடியவக்கினியில் —சொரி - விடுகின்ற—நெய்நிகர்த்தது-நெய்க்கொப்பாயது. எ - று. ஆல் - அசை. சேடனுமென்பதிலும்மை உயர்வுசிறப்பு. மொழிநெய்நிகர்த்ததெனக்கூட்டி முடிக்க. துப்பு பகையெனினுமமையும். துப்பெனுந்தழல் உருவகம். (௨௦)

இறுக்கின ரழுக்குடை யெயிறு மென்றன
ருறுக்கின ரதிர்த்தன ருயிர்த்து மீசையை
முறுக்கினர் நகைத்தனர் முருட்டுக் கைகளாற்
பெறுக்கினர் சிலைகளைப் பெருஞ்சி னத்தராய்.

(இ - ள்.) இறுக்கினர் - கடிந்துபேசினர் —அழுக்குடை - ஊத்தைநிறைந்த —எயிறுமென்றனர் - பல்லைக்கடித்தனர் —உறுக்கினர் - சினக்குறிப்பைக்காட்டினர்—அதிர்த்தனர்-கூச்சலிட்டனர் —உயிர்த்து-பெருமூச்சுகொண்டு —மீசையைமுறுக்கினர் - மீசையைமுறுக்கினுர்கள்—நகைத்தனர் - கோபமிகுதியால்சிரித்தனர் —முருட்டுக்கைகளால் - முருட்டுக்கைகளினலே —பெருஞ்சினத்தராய் - மிக்ககோபமுடையவராய் —பெறுக்கினர்சிலைகளை - கல்லுகளைப்பெறுக்கினுர்கள். எ - று. இங்கேநகைத்தல் உவப்பாலன்றெனக. (௨௧)

நங்குர வனையிகழ் நயமி லான்றனை
யிங்கொரு சிலையினா லெறிந்து கொல்லுதல்
பொங்குறு மறமொடு புகழு மாகுமென்
றெங்குர வனையவ ரெதிர்ந்து சூழ்ந்தனர்.

(இ - ள்.) நங்குரவனை - நமதாசிரியனை—இகழ் - தூஷிக்கின்ற—நயமிலான்றனை - பயனற்றவனை —இங்கொருசிலையினால் - இங்கோர்கல்லினால்—எறிந்து - வீசி —கொல்லுதல் - கொலைசெய்தல் — பொங்குறும் - மேலாய—அறமொடு - தர்மமும்—புகழும் - கீர்த்தியும்—ஆகுமென்று - உண்டாகுமென்று—எங்குரவனை-எமதாசிரியனாகிய அல்லமனை—அவர் - அந்த ஒட்டர்கள் —எதிர்ந்து - விரோதித்து —சூழ்ந்தனர் - சுற்றிக்கொண்டார்கள் - எ - று. பொங்குறல் பிரகாசித்த லெனினுமமையும். (௨௨)

கட்டுமின் பிடிமினுங் கரத்திற் கொட்டினால்
வெட்டுமி னிந்தைசொல் வாயின் வெண்பலைத்
தட்டுமி னெறிமின்வன் றலைகு மைந்திடக்
குட்டுமி னெனவுளங் கொதித்துக் கூடினார்.

(இ - ள்.) கட்டுமின் - கயிற்றாற்கட்டுங்கள் —பிடிமின் - சேர்த்துப்பிடியுங்கள்—நுங்கரத்தில் - உங்கள்கையிலுள்ள—கொட்டினால் - மண்வெட்டியால் —வெட்டுமின் - வெட்டிவிடுங்கள் —நிந்தைசொல்வாயில்-பழிக்கின்றவாயிலுள்ள—வெண் - வெண்மையாகிய—பலைத்தட்டுமின் - பல்லைத்தட்டிவிடுங்கள்—வன்றலை - வலியதலையை —எறிமின் - வெட்டியெறியுங்கள்—குமைந்திட - குழியுண்டாக—குட்டுமின்-குட்டுங்கள்—என - என்று—உளங்கொதித்து - மனங்கொதித்து —கூடினார் - ஒன்றாகக்கூடினார்கள். எ - று. அடிமினெனப்பாடமுமுண்டு. உளமென்பது இடைக்குறை. (௨௩)

என்மன விருளற வெழுந்த வல்லமன்
மின்மலி வுறுதிரு மேனி மீதிடிச்
சொன்மலி யொட்டலர் சூழ்ந்து கொண்டுவன்
கன்மழை சொரிந்தனர் கைச லிப்பவே.

(இ - ள்.) என்-அடியேனது—மனவிருளற - மனோவந்தகாரநீங்க—எழுந்த - எழுந்தருளிவந்த—அல்லமன் - அல்லமதேவரது—மின்மலிவுறு -

பிரகாசமிகுந்த—திருமேனிமீது - அழகியவுடலின்மேல்—இடிச்சொல் - இடிபோன்றசொற்களால்—மலி-மிகுந்த—ஒட்டலர் - பகைஞர்கள்—சூழ்ந்துகொண்டு-சுற்றிக்கொண்டு—வல் - கடிய—கன்மழை-கல்மாரிகளை—கைசலிப்ப - கைசலிக்குமளவும்—சொரிந்தனர் - எறிந்தார்கள். எ - று. மனவிருள், அல்லதைப்பொருளாகக்கொள்ளுமயக்கத்தை. (௨௪)

சாக்கிய ஞெறி தனிக்க லன்றிமெய்
நோக்கிலா தாமொரு நூறு கோடிகன்
மீக்கிளர் சோதிதன் மீது வீசினுந்
தாக்குறு மோவவை தாக்கு றுவரோ.

(இ - ள்.) சாக்கியனுர் - சாக்கியநாயனுர்—எறி - முன்னமெறிந்த—தனிக்கலன்றி-ஒப்பற்றகல்லால்லாமல்—மெய்நோக்கிலர் - கோபத்தாலுடலைப்பாராமல்—தாம் -தாங்கள்—ஒருநூறுகோடிகல்-ஒருநூறுகோடிகல்லுகளை—மீக்கிளர் - எவற்றினுமேலாவிளங்கும்—சோதிதன்மீது - சுயஞ்சோதியாகிய அல்லமன்மேல்—வீசினும் - எறியினும்—தாக்குறுமோ - படுமோ—அவை-அவற்றால்—தாக்குறுவரோ-படப்பெறுவரோ. எ - று. கல்லும்படாது படவுமிடங்கொடார் என்பார், தாக்குறுமோ அவை தாக்குறுவரோ என்றார். இவ்விரண்டோகாரமும் எதிர்மறை. எனவே, சாக்கியனெறிந்தகல்லுபடவும் அதற்கியைந்ததுமன்றி மற்றொன்றற்குடன்படானெனப்பெற்றும். கலன்றி இடைக்குறை. வீசினும் என்பதிலும்மைஇழிவுசிறப்பு. (௨௫)

கொடியவ ரெறிந்தகல் குவியக குன்றென
முடிமிசை நின்றனன் முத்த னல்லமன்
படவியி னுடனிழல் புதைப்ப வந்நிழல்
கடிதினின் மீமிசை காணுந் தன்மைபோல்.

(இ - ள்.) கொடியவரெறிந்த - கொடியபாதகரெறிந்த—கல் - கல்லுகள்—குன்றெனக்குவிய - மலைபோற்குவிய—முடிமிசை - அந்தக்குவியலின்முடிமேல்—முத்தனல்லமன் - முத்தனுகிய அல்லமதேவன்—நின்றனன் - நின்றான்— (யாதுபோல்வதெனின்) படவியின்-பூமியின்கண்—உடனிழலை - தேகநிழலை—புதைப்ப - மூட—அந்நிழல் - அந்தநிழல்—கடிதினின் - மிக்கவிரைவில்—மீமிசை - மேல்மேலாக—காணுந்தன்மைபோல் - காணும்விதம்போல. எ - று. இக்குறி ஞானசொரூபியெனக்

காட்டுகின்றது. அன்றேல், மூரனும். மூத்தனல்லமன் இருபெயரொட்டு ப்பண்புத்தொகை. (௨௬)

ஒறுப்பவ னிழிந்தவ னொருவன் செய்தநோய்
பொறுப்பவ னடுவுளன் பொறுக்கு நெஞ்சமு
மறப்பவ னுயர்ந்தவ னென்று வாய்மையாற்
சிறப்பவ னிம்முறை செப்பு வாரரோ.

(இ - ள்.) ஒறுப்பவன் - வெறுக்கத்தக்கவன் — இழிந்தவன் - தாழ்ந்தவன் — ஒருவன்செய்தநோய் - ஒருவன்செய்தவருத்தத்தை — பொறுப்பவன் - பொறுக்கத்தக்கவன் — நடுவுளன் - நடுநிலையுள்ளவன் — பொறுக்குநெஞ்சமும் - ஒருவர்செய்தகுற்றத்தைப்பொறுக்கின்றமனத்தையும் — மறப்பவன் - மறக்கத்தக்கவன் — உயர்ந்தவனென்று - சிறந்தவனென்று, சொல்லும்படி — வாய்மையாற்சிறப்பவன் - உண்மைமொழியால்மீக்குறுவோன் — இம்முறை - இவ்வாறாக — செப்புவார் - ஒட்டர்கள்சொல்வார்கள். எ - று. அரோ - அசை. யாதுசெய்தும் சினந்தில்லாதலின் ஒறுப்பவனெனவும், யாதுவைதும் நாணந்தோன்றிலனாதலின் இழிந்தவனெனவும், யாதிடுக்கமுறச்செய்தும் வருந்திலனாதலின் ஒருவன்செய்தநோய்பொறுப்பவனெனவும், இருவினையுள் ஒன்றன்பாலுஞ்சாய்ந்திலனாதலின் நடுவுளனெனவும், ஒருவர்செய்ததீங்கைப்பொறுக்கத்தக்கமனத்தையேனும் எண்ணாதவனாதலின் பொறுக்குநெஞ்சமுமறப்பவனெனவும், யாதுசெய்துந்தளர்வுறாதலின் உயர்ந்தவனெனவும், இவனஞ்சாதுவைததுஇவன்பாலுண்மையிருத்தல்பற்றியாதலின் வாய்மையாற்சிறப்பவனெனவுங்கூறினர். பொறுக்குநெஞ்சமும் என்றவும்மையால் பொறுக்காதநெஞ்சமும் எனப்பெற்றாம். எதிர்நின்று செப்புவாரெனனப் பாடமுமுண்டு. (௨௭)

தீங்கினை யெதிர்நின்று செய்த போதினே
தாங்கிலன் முனிவினை மறந்து தாமரைத்
தேங்கமழ் மலரென முகஞ்சி றப்புறீஇ
யீங்குநின் றிடுமிவன் யாண்டு ளான்கொலோ.

(இ - ள்.) தீங்கினை - அனந்தவிடுக்கண்களை — எதிர்நின்று - நேரேநின்று — செய்தபோதினே - செய்தவிடத்தும் — தாங்கிலன் - ஏலாதவனாய் — முனிவினைமறந்து - தனதுகோபத்தையுமறந்து — தேங்கமழ் - மணம்வீசுகின்ற — தாமரைமலரென - அன்றலர்ந்ததாமரைமலர்போல — முகஞ்சிறப்

புரிஇ - முகஞ்சற்றுஞ்சுளியாது—ஈங்கு - இவ்விடத்தில் —நின்றிடுமிவ
ம் - நிற்கின்றவிவன்—யாண்டுளான்கொலோ - எங்கிருப்பவனோ. எ-று. எதிர்நின்றுசெய்த போதினேதாக்கிலனெனவே தூரநின்றுசெய்தபோது தாங்குவானுவென்னுஞ்சொல்லெஞ்சிநிற்கப்பெற்றும். முகத்தைத்தாமரைமலருக்குவமித்தலின் இஃதுவப்புக்குறி. (உ௪)

மலர்மிசை வேதனே மலர்க்கண் மாயனே
பலர்புகழ மழவிடைப் பாக னேயெனி
லலனிவன் பிழைசெயு மவரி டத்தினு
நலனுள னென்றுகண் டவர்ந வின்றனர்.

(இ - ள்.) மலர்மிசை - தாமரைமலரிலுள்ள —வேதனே - பிரமனே—மலர்க்கண் - தாமரைமலர்போன்றகண்களையுடைய—மாயனே - விட்டுணுவோ—பலர்புகழ் - யாவருந்துதிக்கப்பெற்ற —மழ - இளமையாகிய—விடைப்பாகனே - ரிஷபத்தைவாகனமாகஉடைய ருத்திரனோ—எனில் - என்றால்—அலனிவன் - இவன்யாவனுமல்லன்—பிழைசெயுமவரிடத்தினும் - தீங்குசெய்பவரிடத்திலும் —நலனுளனென்று - இதமாகநிற்பவனென்று—கண்டவர் - அங்கேயல்லமனைக்கண்டவர்கள்—நவின்றனர் - சொன்னார்கள். எ - று. பிழைசெயாதவரிடத்தும் நலனுளனெனக்காட்டப் பிழைசெயுமவரிடத்திலும்நலனுளனென்றார். ஆதலின் செயுமவரிடத்தினுமென்பதின்கண்ணுள்ளஉம்மை இறந்தது தழீஇயவெச்சஉம்மை. திரிமூர்த்திகளும் பிழைசெயுமவரிடத்தில் நலனுளன் அல்லராதலின் அலனிவனென்றார். இம்மூன்றேகாரமும் ஐயம். (உரு)

கல்லெறி படாமையைக் கண்ட வொட்டலர்
சொல்லுறி னிவனொரு சூட்சி மந்திரம்
வல்லவ னிவன்றனை வலிந்து பற்றியே
கொல்லுவ மெனவெதிர் குறுகி னாரரோ.

(இ - ள்.) கல்லெறி - கல்லெறிதலுக்கு —படாமையை - தன்மேனிமேற்படாமையை —கண்டவொட்டலர் - பார்த்தசத்துருக்கள் —சொல்லுறின் - பேசுமிடத்து—இவன் - இந்தப்புருடன் —ஒருசூட்சி - ஓர்தந்திரமான—மந்திரம் - மந்திரத்தில்—வல்லவன் - வல்லவனும் — இவன்றனை - இப்படிப்பட்டவனை—வலிந்துபற்றி-பலவத்காரமாகப்பிடித்து—கொல்லுவோமென - கொன்றுவிடுவோமென்று—எதிர்-எதிரில்—குறுகி

ஞர் - குறுகிவந்தார்கள். எ - று. அரோ - அசை. கல்லெறிபடாமை; கல்லுக்குத்தப்பித்துக்கோடலை.வல்லவனென்பதில் ஆக்கவினையெஞ்சியது.( )

குறுகலு மவன்பல கோலங் கொண்டன
னிறைபுனற் கடந்தொறு நிலவு தோன்றல்போன்
மறுகினர் நிலனகழ் மனிதர் பற்றுதற்
கறிகில ரினையனென் றனையன் றன்னையே.

(இ - ள்.) குறுகலும் - அவர்கள்நெருங்கிவரவும் —நிறைபுனல் - சலநிறைந்த—கடந்தொறும் - கடங்கடோறும்—நிலவுதோன்றல்போல் - பிரதிபிம்பசந்திரன்காணப்படுதல்போல —அவன் - அந்தவல்லமன் —பலகோலங்கொண்டனன் - பலவடிவங்கொண்டான் —நிலனகழ் - பூமியைவெட்டும்—மனிதர் - ஒட்டர்கள்—மறுகினர்-நிலைதெரியாதுசுழன்றனர்—அனையன்றன்னை - அங்ஙனமாநின்றவல்லமனை—இனையனென்று - இவன்தானென்று—பற்றுதற்கு - பிடித்தற்கு—அறிகிலர் - அறியாதுகலங்கினர்கள். எ - று. குறுகலுமென்பதிலும்மை எதிர்மறை. இக்கவி பிம்பப்பிரதிபிம்பா பாவம். நிலன் எழுத்துப்போலி. அகழ், வினைத்தொகை.

மருண்டனர் சித்தரா மப்பெ ருந்தகை
யிருந்தரு ளிடத்துமெய் யிளைப்ப வோடியே
திருந்திய வடிமிசைச் சென்று வீழ்ந்தெழுந்
தரந்தையோ டனையவ ரறைதன் மேயினர்.

(இ - ள்.) மருண்டனர் - மருள்கொண்டவராய்—சித்தராமப்பெருந்தகை -சித்தராமனென்னும்பெருந்தகையோன்—இருந்தருளிடத்து -எழுந்தருளியிருந்தவிடத்தில்—மெய்யிளைப்ப-தேகமிளைப்புற—ஓடி-மிக்கவிரைவாகவோடி—திருந்திய -சிரேஷ்டமான—அடிமிசை - பாதங்களின்மேல் —சென்றுவீழ்ந்து - போய்விழுந்து—எழுந்து - எழுந்துநின்று—அரந்தையோடு - மிக்கதுன்பத்தோடு —அனையவர் - அந்தவொட்டர்கள்—அறைதன்மேயினர் - சொல்லத்தொடங்கினர்கள். எ - று. மெய்யிளைப்ப வெனல் மிக்கவிரைவைக்காட்டுகின்றது. (௩௨)

யாந்தொழில் செயுமிடத் தேது வின்றியே
போந்தன னொருமகன் புதிய னின்புக
ழோர்ந்தில னுரைக்கொணு விழிபு ரைத்தனன்
மாய்ந்தில முடனசை மருவி யாங்களே.

(இ - ள்.) யாம் - நாங்கள் — தொழில்செயுமிடத்து - எங்கள் வேலை செய்துகொண்டிருக்கும்போது—ஏதுவின்றி - யாதோர்காரணமுமில்லாமல் — ஒருமகன்புதியன் - ஒருபுதியமனிதன் — போந்தனன் - வந்தான் —நின்புகழ் - உனதுகீர்த்திகளை —ஓர்ந்திலன் - சற்றுமுணர்ந்திலனாய்—உரைக்கொணு - சொல்லத்தகாத—இழிபு - நிந்தைமொழிகளை—உரைத்தனன் - சொன்னன் —யாங்கள் - நாங்கள் — உடனசை - தேகாசை—மருவி - கொண்டு —மாய்ந்திலம் - இறக்கிலம். எ - று. எனவே, எங்கள் தேகாசை எங்கள் மரணத்துக்குச்சத்துருவாயிற்றென்பது பெற்ரும். மாய்ந்தென்பதில் யகரமும் ரகரமும் ஆசெதுகை. (௩௩)

என்றவ ரறைதலு மிராமன் சிந்தையிற்
புன்றொழி லகன்றுமெய்ப் போதம் பெற்றிட
வன்றரு ளல்லம னடிகள் காட்டுறு
மொனறொரு சீற்றமவ ணுதித்தெ ழுந்ததே.

(இ - ள்.) என்று - இவ்வாறாக —அவரறைதலும் - அவர்கள்சொல்லவும் —இராமன்சிந்தையில் - சித்தராமனதுமனதில் —புன்றொழிலகன்று - புல்லியகிரியாமார்க்கங்களொழிந்து —மெய்ப்போதம்பெற்றிட - உண்மைஞானமடைய—அன்று - அப்போது—அருள் - கிருபையையுடைய—அல்லமனடிகள் - அல்லமதேவரதுதிருவடிகளை —காட்டுறும் - காட்டத்தக்க— ஒன்று - பொருந்திய—ஒருசீற்றம் - மிக்கவோர்கோபம்—உதித்துவந்து - தோன்றி —எழுந்தது - மேற்கொண்டது. எ - று. சீற்றமவந்துதியாவிடத்து, அவர்பாற்சேறலும் மெய்யுணர்வுபெற்றிடலும் கூடாமையின் இங்ஙனங் கூறினரென்க. இங்கேபுன்றொழில் ; சரியை கிரியை யோகங்களை. (௩௪)

யாவனென் றன்னையின் றிகழ்ந்து ளானவ
னுவரிந் திடுவனெ னனவெ ழுந்தனன்
மேவுறுந் தவமத வெருளி தானினி
யோவுறுந் தரத்ததன் றொருவ ராலுமே.

(இ - ள்.) யாவன் - எவன் —என்றன்னை - என்னை —இன்று - இப்போது—இகழ்ந்துளான் - தூஷித்தவன்—அவனுவரிந்திடுவன் - அவனைக் கையறுத்திடுவேன்—நானென - நானென்று—எழுந்தனன் - எழுந்திருந்தான்—மேவுறும் - பொருந்திய—தவமதம் - தவாங்காரங் காரணமாக

வெழுந்த—வெகுளிதான் - கோபமானது —இனி - இனிமேல்— ஒருவ ரானும் - ஒருவராலும் — ஒவுறுந்தரத்ததன்று - தணிவதற்கியைந்ததன் று. எ - று. ஓதல் - ஒழிதல். மதம் - அகங்காரம். (௩௫)

வேறு.

என்னை வைதவன் யாரவ னென்முனிந் தெரிபோன்
முன்ன ரெய்தினன் சித்தரா மப்பெயர் முதல்வ
னன்னை யன்னநம் மல்லம னவன்சின மறிந்து [பும்.
சென்னி யொண்கர மசைத்துவெண் ணகைசெய்து செப்

(இ - ள்.) என்னைவைதவன் - என்னைநிந்தித்தவன்—யாரவனென - அவன்யாரென்று — முனிந்து - சீறி — எரிபோல் - வடவாக்கினிபோல—முன்னரெய்தினன் - அல்லமனெதிரில்வந்தான் — (அவனெனில்) சித்தராமப்பெயர் - சித்தராமனென்னும் பெயரையுடைய—முதல்வன் - எசமான் —அன்னையன்ன - தாய்போன்ற —நம்மல்லமன் - நமதல்லம தேவன் —அவன்சினமறிந்து - அவனதுகோபக்குறிப்பைக்கண்டு —சென்னி - தலையையும்—ஒண்கரம் - அழகியகையையும்—அசைத்து-அசைத்து—வெண்ணகைசெய்து - நகைத்து—செப்பும் - சொல்லுவன். எ-று. சித்தராமப்பெயர் முதல்வன் முனிந்து முன்னர் எய்தினன் எனவும், அல்லமன் அறிந்து அசைத்து நகைசெய்து செப்புமெனவுமுடிக்க. (௩௬)

அகழ்கின் றார்தமைத் தாங்குறு மகனில மென்ன
விகழ்கின் றார்தமைப் பொறுக்குமித் தன்மையெய் தலினு
னிகழ்கின் றருண்மா தவமுடை யோகிநீ யென்று
புகழ்கின் றனென விகழ்ந்தனன் பின்னரும் புகல்வான்.

(இ - ள்.) அகழ்கின்றார்தமை - தன்னைத்தோண்டுபவர்களை —தாங்குறும் - சுமக்கின்ற—அகனிலமென்ன - விசாலமானபூமியைப்போல —இகழ்கின்றார்தமை - நிந்திப்பவர்களை —பொறுக்கும் - பொறுத்தற்கியைந்த—இத்தன்மையெய்தலினல் - இக்கோலம்பூண்டதினல் — நிகழ்கின்றருள் - தவத்தால்மிக்குவிளங்குபவருள் —மாதவமுடை - மகாதவத்தை யுடைய—யோகிநீயென்று - யோகிநீயாமென்று—புகழ்கின்றனென - துதிப்பவன்போல—இகழ்ந்தனன் - நிந்தித்தவனுய் — பின்னரும்புகல்வான் - பின்னுஞ்சொல்லுவான். எ - று. புகழ்கின்றனென இகழ்ந்தன னெனல்-நிந்தாஸ்துதி. (௩௭)

சிறப்புப் பெற்றநல் யோகிதன் மனத்தெழு சினந்த
னறத்தைக் கொன்றிடு முன்புபஞ் சியிற்புகு மழல்போ
லொறுக்கப் பட்டவன் பவம்பினை யொழித்திடு மதனாற்
பொறுத்தற் கொப்பிலை யென்றுநன் றறிந்தனை போலும்.

(இ - ள்.) சிறப்புப்பெற்ற - மேம்பாடமைந்த—நல்யோகிதன் - நல்ல யோகியினது — மனத்தெழுசினம் - மனதின்கண்ணெழுங் கோபமானது—தன்னறத்தைக்கொன்றிடுமுன்பு- தன்தவத்தை நாசஞ்செய்வதற்கு முன்பு —பஞ்சியிற்புகுமழல்போல் - பஞ்சியிற்பட்டநெருப்புபோல —ஒறுக்கப்பட்டவன் - வெறுக்கப்பட்டவனது—பவம் - பாவத்தையும்—பினை - பின்னர்—ஒழித்திடுமதனல் - நாசஞ்செய்வதால்—பொறுத்தற்கு - கோபத்தைப்பொறுத்துக்கொள்வதற்கு—ஒப்பிலையென்று - சமானமில்லையென்று—நன்றறிந்தனைபோலும் - நன்குணர்ந்தவன்போலுமிருக்கின்றனை. எ - று., எனவே, யோகியினதுகோபம் கோபிக்கப்பட்டவனது பாவத்தை முன்னர்நாசஞ்செய்து பின்னர் கோபித்தவனது தபோபலத்தை நாசஞ்செய்யுமென்று வேதவசனமு மூலகவசனமு மிருப்புதால் பொறுத்துக்கொள்வதே மேன்மையாகும் இஃதுனக்குத் தெரியாததன்றென்றுரொன்க. யோகிக்கிக்கோபமெழாதிருக்கவேண்டும்,எழின் தன்தவத்திற்கே நாசமெனக் குறிப்பித்தாரென்க.அழலும் பஞ்சும் உவமானம். சினமும் பவமும் அறமும் உவமேயம். யோகியினதுசினம் இங்ஙனமாதற்கையமின்றெனக் குறிப்பித்தாரென்க. (௩௮)

காலனின்முனம் பொறையுள ருருவன் கடல்சே
ராலநல்லமு தாகுமென் றவன்றவம் புகழ்வான்
போல வைதனன் கொடியவ னெனும்பொரு டோன்றச்
சீல நல்குமோர் தொழில்செயு மல்லம தேவன்.

(இ - ள்.) காலன் - எமன்—நின்முனம் - உனக்குமுன்னே—பொறையுளருருவன் - பொறுமையுடையவனுவான் —கடல்சேராலம்-கடலிலெழுந்தவாலகாலவிஷம்—நல்லமுதாகுமென்று - உனக்குமுன் தேவாமிர்தமாகுமென்று—அவன் - அந்தச்சித்தராமனது—தவம்புகழ்வான்போல - தவத்தைச்சிறப்பிப்பவன்போல — கொடியனெனும் பொருடோன்ற - துஷ்டனென்னும்பொருள்தோன்றும்படி —சீலநல்கும் - தூய்மைதரற்கியைந்த—ஓர்தொழில்செயும் - ஒப்பற்றதொழிலைச்செய்யும்—அல்லமதேவன் - அல்லமதேவனென்போன்—வைதனன் - இகழ்ந்தனன். எ - று.

நின்முனமென்பதை ஈரிடத்துமொட்டுக. எனவே, உன்னைப்பார்க்கிலுங் காலன்பொறுமையிலும் ஆலகாலவிஷம் நன்மையிலும் சிறப்புறுமெனப் பெற்றும். நீகொடியனெனும் பொருள்தோன்ற நிந்தாஸ்துதிசெய்தா ரென்பதுகருத்து. சீலநல்குமோர் தொழிலாவது ; அடியாரதுமனம் நின் மலமாக உபதேசித்தலே. (௩௯)

பொறையு றும்படி யல்லமன் சூட்சியிற் புகலக்
குறையு றுஞ்சின மிகுந்தன னெருப்பெனக் கொதித்தே
யறையு றுந்திரள பங்தெனச் சித்தரா மையா
னிறையு றுந்திரு வருளுடைப் பிரானொடு நிகழ்த்தும்.

(இ - ள்.) பொறையுறும்படி - பொறுத்துக்கொள்ளும்படி—அல்லமன் - அல்லமதேவன்—சூட்சியில்-தக்கதந்திரங்களால் —புகல-சொல்ல—குறையுறுஞ்சினம் - தணிந்துபோதற்கியைந்தகோபம் —நெருப்பெனக் கொதித்து - நெருப்பைப்போல்சீறி—மிகுந்தனன் - மேலிட்டானுகி—அறையுறும் - அறையப்பட்ட — திரள்பந்தென - திரண்டபந்தைப்போல —சித்தராமையன் - சித்தராமையனென்போன் — நிறையுறும் - பூரணமான—திருவருளுடை - மிக்ககிருபையையுடைய —பிரானொடுநிகழ்த்தும் - அல்லமனோடுபேசத்தொடங்கினான். எ - று. சினமென்னுது குறையுறுஞ்சினமென்றமையால் தணிதற்கியைந்தசினமென்றும். அல்லமன்புகல சித்தராமையர்கொதித்துச் சினமிகுந்தோனாய் பிரானொடுநிகழ்த்துமெனக்கூட்டிமுடிக்க. நிறையுறுந்திருவருளுடை யென்றடைகொடுத்தது ; அவனையிரட்சிப்பான்வேண்டியென்க. பந்தை யுவமானித்தது இவனது துடிதுடிப்பைக்காட்ட. புகலக்கொதித்துநிகழ்த்துமெனக்கூட்டிப்பொருள்கொள்க. (௪0)

குறிப்பில் வைதனை வெளிப்படை யிகழ்வினுங் கொடிதாய்
வெறுப்பு முன்செயா வென்னைநீ யீண்டிகழ்ந் தமையாற்
பொறுப்ப னல்லன்யா னுதல்விழித் தீயிடைப் பொடிப்ப
வறுப்ப னென்றன னிகழ்வினுக் காருள மழுங்கார்.

(இ - ள்.) வெளிப்படையிகழ்வினும் - வெளிப்படையாகநிந்திப்பதினும்—கொடிதாய் - கொடூரமாக—குறிப்பில்வைதனை - குறிப்பாகநிந்தித்தனை—வெறுப்பு - யான்வெறுக்கத்தக்கவைகளை —முன்செயா - முன்னர் செய்து—ஈண்டு - இவ்விடத்தில்—என்னைநீயிகழ்ந்தமையால் - என்னைநீ

வைதமையால்—யான் - நான்—பொறுப்பனல்லன் - சகியேன் —நுதல் விழி - நெற்றிக்கண்ணாகிற —தீயிடை - அக்கினியின்கண் —பொடிப்ப - நீ சாம்பலாகும்படி—வறுப்பனென்றனன் - வறுத்துவிடுவேனென்று சித்தராமன்சொன்னான்—இகழ்வினுக்கு - தன்னையொருவன் நிந்தித்தலுக்கு—ஆருளமறுகார் - யாவர்தான் மனமவருந்தார். எ - று. இகழ்வு தொழிற்பெயர். இகழ்வினும் என்பதிலும்மை இழிவுசிறப்பு. வெறுப்பு வினையாலணையும் பெயர். விழித்தீ உருவகம். (சக)

தன்னைக் கொல்லினுந் தான்பிறி தொன்றினைக் கோறல்
பன்னிற் பாவமென் றறைகுவர் கற்றுணர் பழையோர்
நின்னைச் சொல்லிய வறத்தினை நிந்தையென் றெண்ணி
யென்னைக் கொல்லுவ னென்றநீ யறவனே யென்று.

(இ - ள்.) தன்னைக்கொல்லினும - தன்னைக்கொன்றாலும் — தான்பிறிதொன்றினைக்கோறல் - மற்றொன்றைத்தான்கொல்லுதல்—பன்னில்- சொல்லுங்கால் —கற்றுணர்பழையோர் - கற்றுணர்ந்தபெரியோர்கள்— பாவமென்றறைகுவர் - பாவமென்றுசொல்லுவார்கள் —நின்னைச்சொல்லியவறத்தினை - உனக்குயான்கூறியநீதிமொழிகளை—நிந்தையென்றெண்ணி - தூஷணைமொழிகளென்றுநினைத்து —என்னைக்கொல்லுவனென்ற நீ - என்னைக்கொல்லுதற்கெழுந்தநீ—அறவனேயென்று - நல்லபுண்ணியவானேயென்று. எ - று. கொல்லினுமென்பதிலும்மை இழிவு சிறப்பு. நினக்கென்பது நின்னையென்றாயது வேற்றுமை மயக்கம். (சஉ)

சாத னங்களு ணீறுமுந் தியதென்பர் சாற்று
மாத வங்களு ளுயிர்செகா மையுமற்று மதிப்பிற்
பாத கங்களிற் கொலைசிறந் தன்றெனப் பார்த்து
நீதெ ரிந்திலை யரக்கனே யென்றன னிமலன்.

(இ - ள்.) சாதனங்களுள் - இயமமுதலியசாதனங்களுள்—நீறு - தத்துவங்களனைத்தையுநீறாக்கலை—முந்தியதென்பர் - மேலாயசாதனமென்றறிஞர்கூறுவர் —சாற்றுமாதவங்களுள் - சொல்லிய மாதவங்களுக்குள்—உயிர்செகாமையும் - உயிரைக்கொல்லாமையும்—மற்றும் - இதுபோல்வவைகளும்—மதிப்பில் - மதிப்பிலுறாத —பாதகங்களில் - பாதகங்களுக்குள் —கொலை - கொலைசெய்தலும் —சிறந்தன்றென - சிறந்தனவல்லவென்று—பார்த்தும் - வேதாகமங்களைப்பார்த்தும்—அரக்கனே - இரா

ட்சதனே—நீதெரிந்திலை - நீயுணர்ந்தாயில்லை —என்றனனிமலன் - என்றல்லமன்சொல்லினன். எ - று. நுதல்விழித்தீயிடைபொடிப்பவுறுப்பது ; சிறந்தன்றெனமறுக்கச் சாதனங்களுள்நீறுமுந்தியதென்பனோனவும், உயிர்செகாமையும் பொய்களவுமுதலியவைகளும் செய்நன்றிமறத்தல் நசிநிலைகோணல் ஒழுக்கமுரண் பிறனில்விழைதல் பொறையின்மை அழுக்காறு புறங்கூறல் தீவினைக்கஞ்சாமை புலாலுணல் கூடாவொழுக்கம் வாய்மையறுத்தல் முதலியவைகள் பாதகங்களாம். அவைகளில் கொலைசெய்தலும் சிறந்தன்றெனப்பார்த்தும் நீதெரிந்திலை யெனவும் கூறியதை யுணருமிடத்து நீ நீறுபடுத்துவதும் என்னைக்கொலைசெய்வதும் பயனின்றெனக் காணுதியெனக்குறிப்பித்தல் அருத்தாபத்தி கோறல் ஆங்காரத்தை. நீறுபடுத்தல் கற்பனைகளை. இங்ஙனமிருக்க விசேஷணராமற்கண்டபடிகூறுதல் விடுதியென்பது கருத்து. பிறப்பிற்குப்பேதமைகாரணமாகவும் அப்பேதமைக்கு ராகத்துவேஷாதிகள்காரணமாகவும் அந்தராகத்துவேஷாதிகளுக்குக் கொலைகாரணமாகவு மிருக்க கொலையொன்று செய்வதாலுமதனை நிவர்த்திப்பதாலும் யாதுபயனெனக்காட்ட உயிர்செகாமையு, மேனையவும், கொலைபுரிதலுஞ் சிறந்தன்றென்றூர். (௩௩)

செருக்கொ ழிந்திலை யென்னெதிர் செவிசுடு தீச்சொ
லுரைத்து நின்றனை யுனைவிடு கிலனென வுறுத்து
நெருப்பெ னுந்திரு நுதல்விழி திறந்தன னினைத்து
மரிப்பி னுந்தரு வேனுயி ரென்றிரா மன்றூன்.

(இ - ள்.) செருக்கொழிந்திலை - கர்வம்நீங்கினையில்லை —செவிசுடுதீச்சொல் - காதைவதைக்குந்தீயசொல்லுகளை — என்னெதிர் - எனக்கெதிரே —உரைத்துநின்றனை - சொல்லிக்கொண்டேநிற்கின்றூய் —உனைவிடுகிலனென - உன்னைவிடமாட்டேனென்று—உறுத்து - சீறி—நெருப்பெனும் - நெருப்பென்கிற—திரு - அழகிய—நுதல்விழி - நெற்றிக்கண்ணை—திறந்தனன் - திறந்தான்—மரிப்பினும் - இறந்தாலும்—நினைத்து - நினைந்து—உயிர்தருவேனென்று - மீண்டுமுயிரைக்கொடுப்பேனென்று—இராமன்றூன் - சித்தராமன். எ - று. சித்தராமன் உறுத்து நினைத்து திறந்தனன் எனக்கூட்டிப்பொருள்கொள்க. (௩௪)

நூற்றித் தீவிழிக் காமனை நீற்றுவ தன்றிப்
பற்றிக் காமமில் யோகியைப் படுத்திட வற்றே

செற்றத் தானுதல் விழியழ லல்லம தேவன்
வெற்றித் தாண்மலர்க் கீழ்ச்சென் று பணிந்தது விரைந்து.

(இ - ள்.) நெற்றி - நெற்றியிலுள்ள—தீவிழி-அக்கினிக்கண்—காமனை நீற்றுவதன்றி - மன்மதனையெரிப்பதன்றி —பற்றி - விஷயங்களைப்பற்றி—காமமில் - நினைத்துணையுங்காமமில்லாத —யோகியை - சிவயோகியை—படுத்திடவற்றோ - வசப்படுத்தக்கூடுமோ —செற்றத்தால் - கோபத்தாற்செலுத்திய—நுதல்விழியழல் - நெற்றியிலுள்ள அக்கினிக்கண்—அல்லமதேவன்—அல்லமதேவருடைய—வெற்றி - செயம்பொருந்திய—தாண்மலர்க்கீழ் - பாதமாகியதாமரைமலரினிடத்தில் —விரைந்துசென்று - விரைவிற்போய்—பணிந்தது - வணங்கினது. எ - று. நுதல்விழிஅழலும், தாள்மலரும் உருவகம். படுத்திடவற்றோவெனல் ; இங்கேயெரிக்கக்கூடுமோவெனலை. விழியழல் சென்று விரைந்துபணிந்ததெனக்கூட்டிப்பொருள்கொள்க. (௩௫)

பணிந்து மீளுமவ் வழலொரு வீரன்மேற் பாயத்
துணிந்து போய்வ னாற்றல்கண் டுளவலி தொலைந்து
தணிந்து பேடிமேற் செல்லுமா றலைவன சரன்போ
லணைந்தி ராமன்வாழ் நகரினிற் பற்றிய தன்றே.

(இ - ள்.) பணிந்து - வணங்கி —மீளும் - திரும்புகின்ற —அவ்வழல் - அந்தவக்கினி—ஒருவீரன்மேற்பாய - ஒருவீரன்மேற்பாயும்படி—துணிந்துபோய் - திரமாகப்போய்—அவனாற்றல்கண்டு - அவனதுவீரத்தைக்கண்டு—வலிதொலைந்து - வலிகெட்டு—தணிந்து - சாந்தமாகி —பேடிமேற்செல்லுமாறு - பேடிமேற்செல்லும்படி —அலை - அங்குமிங்குமலைகின்ற—வனசரன்போல் - வேடனைப்போல —அணைந்து - வந்து —இராமன்வாழ் - சித்தராமன்வாழ்கின்ற—நகரினிற்பற்றியது-பட்டணத்திற்பற்றிக்கொண்டது. எ - று. அன்று - ஏ - அசைகள். பேடியைக்கொல்வான்வேண்டி வேடனலைந்துதிரிவதுபோல் அக்கினிக்கண் அல்லமனையெரிக்கவலியின்றி சித்தராமனதுபட்டணத்தை யெரிக்கப்பற்றியதெனப்பொருள்கொள்க.' அவ்வழல் துணிந்துபோய் கண்டு தொலைந்து அணைந்து பற்றியதெனமுடிக்க. பேடி வீரனல்லானை. (௩௬)

தங்கை வார்சடைக் கறைமிடற் றிறைநகைக் கனல்போய்த்
துங்க மாமதில் சூழ்தரு புரத்தினைச் சுடல்போ

லெங்க ளுயகன் மேல்விடு மிராமனன் னுதற்க
ணங்கி போகியந் நகரினைச் சுட்டதை யன்றே.

(இ - ள்.) கங்கை - கங்கைதங்கிய —வார்சடை - நீண்டசடையினையு ம்—கறை - விஷந்தங்கிய—மிடறு - கண்டத்தையுமுடைய—இறை - பரமசிவனது—நகை - புன்சிரிப்பாலெழும் —கனல்போய் - அக்கினியானது சென்று—துங்கமாம் - உயர்வாகிய—மதில்சூழ்தரு - மதில்சூழ்ந்த—புரத்தினை - திரிபுரத்தை—சுடல்போல் - எரித்ததுபோல—எங்கணுயகன் மேல் - எமதுகர்த்தனுகியவல்லமன்மேல் —விடு - விட்ட—இராமன் - சித்தராமனது—நல் - நல்ல—நுதற்கண்-நெற்றிக்கண்ணுகிய —அங்கிபோகி - அக்கினிசென்று — அந்நகரினைச்சுட்டது - அவனதுபட்டணத்தை யெரித்தது. எ - று. ஐ - அன்று - ஏ - இவைஅசைகள். நகைக்கனல் கண்ணங்கி உருவகம். கணங்கி இடைக்குறை. (௪எ)

அணியெ ரிந்தன மென்றுகி லெரிந்தன வாரத்
துணியெ ரிந்தன கலவைக ளெரிந்தன சுதையின்
பணியெ ரிந்தன மனைவள மெரிந்தன பகரு
மணியெ ரிந்தன வெரிந்தன கண்டவர்வயிறு.

(இ - ள்.) அணியெரிந்தன - ஆபரணங்களெரிந்தன —மென்றுகிலெரிந்தன - மெல்லியவஸ்த்திரங்களெரிந்தன —ஆரத்துணியெரிந்தன-முத்துமாலைத்துண்டங்களெரிந்தன—கலவைகளெரிந்தன - கலவைச்சாந்தங்களெரிந்தன —சுதையின்பணியெரிந்தன - சுண்ணும்பினுற்செய்தசித்திரப்பணிகளெரிந்தன—மனைவளமெரிந்தன-மனைக்குளுள்ளபண்டங்களெரிந்தன —பகரும் - விற்கின்ற —மணியெரிந்தன - இரத்தினங்களெரிந்தன —கண்டவர் - இக்கோலங்களைக்கண்டவரது — வயிறெரிந்தன - வயிறுகளெரிந்தன. எ - று. மனையும் வளமுமெனஉரைகொளினுமமையும்.

சேயெ டுப்பவர் விருத்தரை யீர்ப்பவர் சேமம்
போயெ டுப்பவர் புகவரி தாகிமண் புரண்டு
வாய டிப்பவர் மனையெரி யவிப்பவர் மறுகிப்
பாய லைக்கட லெனவழு திரங்கினர் பதைத்து.

(இ - ள்.) சேயெடுப்பவர் - குழந்தையெடுப்பவர்களும்—விருத்தரையீர்ப்பவர் - கிழவர்களையிழுப்பவர்களும் —சேமம்போயெடுப்பவர் - வினைவிற்போய்புதையலெடுப்பவர்களும் —புகவரிதாகி - உள்ளேநுழைதற்கரி

தாகி —மண்புரண்டுவாயடிப்பவர் - மண்ணிற்புரண்டுவாயிலடித்துக்கொள்பவரும் —மனையெரியவிப்பவர் - வீடுபற்றியெரிதணலவிப்பவரும் —மறுகி - மோதி—பாய் - பாய்கின்ற—அலை - அலைகளையுடைய—கடலென - கடலைப்போல—பதைத்து - பதைபதைத்து—அழுதிரங்கினர் - கூச்சலிட்டழுதிரக்கமுற்றனர். எ - று. கடலையுவமானித்தது மிக்கவொலியைப்பற்றியென்க. (சகூ)

உதித்த ஞாயிறு போன்றுசெம் மணியின மொளிரப்
பதித்த மாளிகை மீதுபற் றியவழற் கொழுந்தாற்
கதிர்த்த வாடகச் செங்கம லத்துவான் கங்கை
கொதித்த தாயிடைக் கொதிபொறு தன்னங்கள் குழைய.

(இ - ள்.) உதித்த - உதயமான—ஞாயிறுபோன்று - சூரியனைப்போல—செம்மணியினம் - சிவந்தவிரத்தினக்கூட்டங்கள்—ஒளிர - பிரகாசிக்கும்படி—பதித்த - அவற்றைப்பதித்திருக்கின்ற—மாளிகைமீது-உப்பரிகையின்மேல் —பற்றிய - பற்றிக்கொண்ட —அழற்கொழுந்தால் - அக்கினிக்கொழுந்தினால்—கதிர்த்த - பிரகாசிக்கின்ற—ஆடகம் - சுவர்னம்போல்விளங்கும்—செங்கமலத்து - செந்தாமரைகளையுடைய —வான்கங்கை-ஆகாயகங்கையானது—கொதித்தது - கொதித்தது —ஆயிடை - அந்தவிடத்தில் —கொதிபொறாது - கொதிக்குச்சகியாது —அன்னங்கள்குழைய - அன்னப்பட்சிகள்வருந்த. எ - று. அழற்கொழுந்தால் அன்னங்கள்குழைய வான்கங்கைகொதித்ததெனக் கூட்டிப்பொருள்கொள்க. (௫0)

அன்ன காலையி லருட்கட லல்லம தேவன்
சொன்ன லாபுரத் தவர்துய ரனைத்தையுந் தொலைப்ப
வுன்னி யோர்விழி யழலினை யிமைப்பினி லொழித்தான்
முன்ன மாலமுண் டமரரைக் காத்தருண் முறைபோல்.

(இ - ள்.) அன்னகாலையில் - அத்தருணத்தில்—அருட்கடல் - கிருபாசமுத்திரம்போன்ற—அல்லமதேவன் - அல்லமதேவனென்போன்—சொன்னலாபுரத்தவர் - சொன்னலாபுரத்திலுள்ளோர் —துயரனைத்தையுந்தொலைப்ப - துன்பங்களையெல்லாநீக்க—உன்னி - நினைத்து —ஓர்விழி - ஒருகண்ணின்—அழலினை - அக்கினியை —இமைப்பினில் - இமையளவில்—முன்னம்-முற்காலத்தில்—ஆலமுண்டு-விஷத்தையுண்டு—அமரரை-தேவர்களை —காத்தருண்முறைபோல் - காத்திரக்ஷித்தவாறுபோல —ஒ

ழித்தான் - தணித்தான். எ - று. ஓர்விழியழல் நெற்றிக்கண்ணனலே. அல்லமதேவன் தொலைப்ப ஒழித்தானெனமுடிக்க. (ருக)

எந்தை யல்லம னருளினு னுதல்விழி யெரியால்
வெந்த வந்நகர் பண்டையின் மும்மடி விளக்கம்
வந்த பல்வள மொடுசிறந் ததுநரர் மகிழ
வுந்து வெவ்வழ லிடைவெந்த வாடக மொத்து.

(இ - ள்.) எந்தையல்லமன் - என்தந்தையாகிய அல்லமதேவன் —அருளினல் - கிருபையினல்—நுதல்விழி - நெற்றிக்கண்ணுகிற —எரியால்-அக்கினியால் —வெந்தவந்நகர் - நீருய்அந்தப்பட்டணம் —பண்டையின் - பழமைபோலும்—உந்து - வளர்க்கின்ற —வெவ்வழலிடை - கொடியஅக்கினியில்—வெந்தவாடகமொத்து - வெந்தபொன்னைப்போல—நரர்மகிழ - சனங்கள்களிகூர—மும்மடிவிளக்கம்வந்த - மூன்றுபங்கொளிவந்த —பல்வளமொடு - பலவளப்பங்களோடு —சிறந்தது - சிறப்புற்றது. எ - று. அந்நகர் ஆடகமொத்து நரர்மகிழ முன்னையக்காட்டிலும் மூன்றுபங்கு வளப்பங்களோடு சிறப்புற்றதெனக் கூட்டிப்பொருள்கொள்க. (ருஉ)

ஒருத்தன் வந்தவா றுக்கிய பொற்பணி யொன்றைத்
திருத்த வல்லவ னழித்ததைச் சிறந்திடச் செயல்போற்
புரத்தை நன்றுற வல்லமன் புரிதலும் புரத்தோர்
கருத்தில் வந்தெழுந் தோங்கிய தார்வமா கடலே.

(இ - ள்.) ஒருத்தன் - ஒருபுருஷன்—வந்தவாறு - கண்டபடி —ஆக்கிய - செய்த—பொற்பணியொன்றை - ஓர்பொன்னுபரணத்தை —திருத்தவல்லவன் - செவ்வையாகச்செய்யவல்லோன்—அதையழித்து - அதையுருக்கி —சிறந்திடச்செயல்போல் - அலங்காரமாகச்செய்தல்போல —புரத்தை-அந்தப்பட்டணத்தை—நன்றுற-செவ்வையாக—அல்லமன்புரிதலும்-அல்லமன்செய்யவும் —புரத்தோர் - அந்தப்பட்டணத்திலுள்ளோரது—கருத்தில் - மனதில் —ஆர்வமாக்கடல் - ஆனந்தசமுத்திரம்—வந்தெழுந்து - வந்துதோன்றி—ஓங்கியது - பொங்கிற்று. எ - று. அல்லமன் அப்பட்டணத்தை முன்னினும் நலனுற வமைத்தலின் இவ்வுவமை கூறப்பட்டது. (ருங)

ஒருக ணுற்றல்போ யொழிந்திட வலியறு மிரதம
னிருக ணுலுங்கண் டுளச்செருக் கென்பதொன் றின்றிப்

பெருகு நாணெனும் புனல்கொளப் பேரழல் விழுந்து
கருகு நாண்மல ரெனமுகங் கரிந்திது கருதும்.

(இ - ள்.) ஒருகனூற்றல் - நெற்றிக்கண்ணினதுவல்லமை—போயொழிந்திட - தொலைந்துபோக —வலியறுமிராமன் - வலியின்றியசித்தராமன்—இருகணுலுங்கண்டு - ஏனையவிரண்டுகண்களாலுங்கண்டு —உளம் - மனதில் —செருக்கென்பதொன்றின்றி - கர்வமென்பதுசற்றுமில்லாமல் —பெருகுநாணெனும் - மிக்கநாணமென்கின்ற —புனல்கொள - சலம்பெருக—பேரழல்விழுந்து - பெரியநெருப்பில்விழுந்து —கருகும் - கருகிப்போகின்ற —நாள் - அன்றலர்ந்த—மலரென - தாமரைமலர்போல—முகங்கரிந்து-முகஞ்சுருங்கி—இதுகருதும் - இதனைநினைப்பான். எ - று. இங்கே ஒருகணென்றதுநெற்றிக்கண்ணை. நாணெனும்புனல் உருவகம்.

வேறு.

என்னொரு நுதல்வி ழித்தீ யிவன்றனை யிறைஞ்ச லாலே
தன்னரு ளதனு லென்னைத் தடுத்துவந் தாள வேண்டி
பொன்னவிர் சுணங்கு பூத்த புணர்முலை மடந்தை பாக
னிந்நில வரைப்பிற் கோல மிதுகொடு வந்தா னென்று.

(இ - ள்.) என் - என்னுடைய—ஒருநுதல்விழி - ஒருநெற்றிக்கண்ணாகிய—தீ-அக்கினி—இவன்றனையிறைஞ்சலாலே-இவனைவணங்கலால் —தன்னருளதனல் - தனதுகிருபையால்—என்னைத்தடுத்துவந்தாளவேண்டி - என்னைத்தடுத்தாட்கொள்ளவேண்டி —பொன்னவிர் - பொன்னைப்போல்பிரகாசிக்கின்ற—சுணங்குபூத்த - தேமல்படர்ந்த—புணர்முலை - புணர்தற்கியைந்த்தனங்களையுடைய—மடந்தை - உமையவளை—பாகன் - அர்த்தபாகத்திற்கொண்டபரமசிவன் —இந்நிலவரைப்பில் - இந்தப்பூமியில் —கோலமிதுகொடு - இந்தக்கோலங்கொண்டு —வந்தானென்று- வந்தனனென்று. எ - று. இந்நிலம் இனவெதுகை. (௫௫)

தீயனே னறிவி லாமற் செய்பிழை பொறுத்தாட் கோடி
பேயனு ெனாருவன் செய்த பிழையினை யவனை யீன்ற
தாயலாற் பொறுப்பார் யாவர் தானுமே யென்றி ராமன்
பேர்யுண ரமுதின் செந்தாட் போதினைப் பற்றி வீழ்ந்தான்.

(இ - ள்.) தீயனேன் - கொடியபாதகனுகியயான்—அறிவிலாமல் - புத்தியில்லாமல்—செய்பிழை - செய்தபிழைகளை—பொறுத்தாட்கோடி -

பொறுத்தடிமைகொள்ளுதி—பேயனேனொருவன்செய்த - பேய்போன்றயானொருவன்செய்த—பிழையினை - தப்பிதங்களை—அவனையீன்றதாயலால்-அவனைப்பெற்றதாயையன்றி—பொறுப்பார்யாவர் - யாவர்தான்பொறுத்துக்கொள்பவர்கள் —தானுவேயென்று - கர்த்தனேயென்று —இராமன்போய் - சித்திராமன்சென்று —ஏனைரமுதின் - என்னுடையதேவாமிர்தம்போன்றவல்லமனது —செந்தாள் - சிவந்தபாதங்களாகிய—போதினைப்பற்றி - மலர்களைப்பிடித்துக்கொண்டு —வீழ்ந்தான் - வணங்கினான். எ - று. ஏனைரமுது இடைக்குறை. செந்தாட்போது உருவகம்.

தன்னின மாமி ராமன் சரணபுகி லவன்செய் தீமை
யுன்னுவ னலனெங் கோமா னுடன்றுவந் திலங்கை காக்கு
மன்னவன் கவின்கூர் வெள்ளி மலையெடுத் தலைத்து வந்து
பின்னவன் வணங்கி நிற்பப் பிழையுளங் கொண்ட துண்டோ.

(இ - ள்.) தன்னினமாமிராமன் - தன்னுடையவினமாகிய சித்திராமன்—சரண்புகில் - சரணாகதியென்றடையில்—அவன்செய்தீமை - அவன்செய்தகுற்றங்களை—எங்கோமான் - எமதுகர்த்தருகியவல்லமன் —உன்னுவனலன் - நினையான் —உடன்றுவந்து - கோபித்துவந்து—இலங்கைகாக்கும - இலங்காபுரியைக்காக்கின்ற —மன்னவன் - இராவணன்—கவின்கூர் - அழகுமிகுந்த—வெள்ளிமலையெடுத்து - கைலையங்கிரியையெடுத்து —அலைத்துவந்து - வருத்தப்படுத்திவந்து —பின் - பின்னர்—அவன்வணங்கிநிற்ப - அவன்தொழுதுநிற்க —பிழை - அவன்செய்தபிழைகளை—உளங்கொண்டதுண்டோ - மனதில்வைத்தனரோ. எ - று. அரக்கனாகலின், தன்னினமாமிராமனென்றார். உடன்றுவந்து பிழையுளங்கொண்டதுண்டோவெனமுடிக்க. எங்கோமானெனலை உன்னுவனலனென்பதிலும்,பிழையுளங்கொண்டதுண்டோவென்பதிலும்இடைநிலைத்தீபமாகக் கூட்டிப்பொருள்கொள்க. ஒருவனே கைலாசபதியாய் நின்று இலங்கை இராவணன்செய்தபிழையை பொறுத்தாற்போல, இங்கே அல்லமனாகநின்று சித்திராமன்செய்தபிழையைப் பொறுத்தானெனக் கொள்க. (௫௭)

செய்யதாண் மலரின் வீழ்ந்த சித்தனை யருளா னோக்கி
யையநீ யெழுக நெஞ்சி லஞ்சலை யென்று கூறிக்
கையினை யெடுத்த ணைத்துக் கலவியுந் தவமு மாயக்கும்
வெய்யதாம வெகுளி தன்னை விட்டிடென் றெந்தை சொல்வான்.

(இ - ள்.) செய்ய - செம்மையாகிய — நாண்மலரில் - பாத தாமரையி ல்—வீழ்ந்தசித்தனை - வணங்கியசித்தராமனை —அருளானோக்கி - கிரு பையினாற்பார்த்து —அய்ய - அய்யனே —நீயெழுக - நீயெழுந்திருப்பா யாக—நெஞ்சிலஞ்சலையென்று - மனதிற்பயப்படாதேயென்று —கூறி - சொல்லி —கையினாலெடுத்து - கையினாற்றூக்கி —அணைத்து - மார்போ டணைத்து —கல்வியுந்தவமுமாய்க்கும் - கல்வியையுந் தவத்தையுங்கெடுக் கத்தக்க — வெய்யதாம்வெகுளிதன்னை - கொடியகோபத்தை —விட்டி டென்று - விட்டுவிடக்கடவாயென்று — எந்தைசொல்வான் - எமது தந் தையாகிய வல்லமன்சொல்வான். எ - று. தாள்மலர் உருவகம். (௫௮)

**வ**லியவ னிடத்து மொத்தான் மாட்டினும வெகுளி காத்தல்
பொலிவுசெ யறம தென்னப் பொருந்துறா தனையா தம்பா
னலிவுறு வெகுளி செல்லா தாதலா னலிய லாற்றா
மெலியவ னிடத்திற் காக்கும வெகுளியே யறம தென்பா.

(இ - ள்.) வலியவனிடத்தும்-வலியுள்ளவனிடத்திலும் —ஒத்தான்மா ட்டினும் - தனக்குச்சமானமானவனிடத்திலும்—வெகுளிகாத்தல் - கோ பத்தைப்பொறுத்துக்கொள்ளுதல் —பொலிவுசெய் - வளர்தருகின்ற— அறமதென்னப்பொருந்துறாது - தர்ம்மமெனத்தகாது — (ஏனெனில்) அனையர்தம்பால் - அப்படிப்பட்டவரிடத்தில் —நலிவுறு - வருத்துகின் ற—வெகுளி - கோபமானது —செல்லாதாதலால் - செல்லமாட்டாதாத லால்—நலியலாற்றா - வருத்தஞ்சகியாத—மெலியவனிடத்தில் - எளியவ னிடத்தில்—காக்கும்வெகுளியே - செல்லாதுகாக்கத்தக்ககோபமே—அ றமதென்பர் - தர்மமெனத்தகுமென்றறிஞர் கூறுவர். எ - று. சத்திய ற்றவனிடத்தில் கோபஞ்செல்லாநடக்கல் அறமெனவும், தமதுகோபஞ் செல்லத்தகாததால் வலியவனிடத்தும், தனக்கொப்பானவனிடத்தும், கோபஞ்செல்லாநடக்கல் அறமன்றெனவும் அறிஞர் கூறுவரெனக்கொ ள்க. வெகுளியே யென்பதிலேகாரம் சிறப்புப்பொருளைத் தரப்பிரித்துக் காட்டலால் பிரிநிலையெனப்படும். (௫௯)

**வை**தவன் றன்னை நன்று வாழ்த்தின னெனவுந் தீய
செய்தவன் றன்னை நல்ல செய்தவ னெனவுங் கொள்வோன்
கைதவ மகன்ற முத்தி கண்டவ னவ்வா றன்றேல்
பொய்தவ மெனப தென்று புகன்றனா புலவ ரன்றே.

(இ - ள்.) வைதவன்றன்னை - நிந்தித்தவனை —நன்றுவாழ்த்தினனெ

னவும் - நன்றுகத்துதித்தனனென்றும் —தீயசெய்தவன்றன்னை - தீங்கு செய்தவனை—நல்லசெய்தவனெனவும் -நன்குசெய்தானென்றும்—கொள்வோன் - எண்ணிக்கொள்வோன் —கைதவமகன்ற - கற்பனையிறந்த —முத்திகண்டவன் - நிஷ்காமியதவத்தோன் — அவ்வாறுன்னுன் - அவ்வாறெண்ணுதோன் — பொய்தவன் - காமியதவத்தோன் — என்பதென்று - எனவேதஞ்சொல்லுமென்று — புகன்றனர்புலவர் - அறிஞர் கூறுவர். எ - று. அன்று - ஏ - அசைகள். தன்னைவைதவனைத்துதித்தனனெனவும் தனக்குத்தீங்குசெய்தோனை நன்கியற்றினனெனவும், கொள்வோன் நிஷ்காமியெனவும, இவற்றிற்கு மறணுகக்கொள்வோன் காமியதவத்தனெனவும், வேதங் கூறுமென்றுரென்க. தீய நல்ல இவையிரண்டும் வினையாலணையும்பெயர். முத்திகண்டவன் பொய்தவன் என்பவற்றில் ஆக்கவினை யெஞ்சி நின்றன. (௯0)

பெரியவர் தம்மைக் காய்ந்தான் பிறங்கல்கல் லியகோ லொப்பான்
புரிவன புரியப் பட்டுப் புலம்புவ னொத்தார் காய்ந்தா [பான்
னெரிநர கதனில் வீழ்வ னிழிந்தவர் காயந்தா னென்று
லொருவர்தம் மிடத்துஞ் சீற்ற முறுமையே நன்று மாதோ.

(இ - ள்.) பெரியவர்தம்மைக்காய்ந்தான் - பெரியோர்களைக்கோபித்தவன்—பிறங்கல்கல்லிய - மலையைக்கல்லிய—கோலொப்பான் - இருப்புக்கோலுக்கொப்பானவன் —ஒத்தார்காய்ந்தான் - தனக்கொத்தவர்கள்மேல்கோபித்தவன்—புரிவன - செய்யத்தக்கதீங்குகளை—புரியப்பட்டு - பிறரால்செய்யப்பட்டு—புலம்புவன் - விசனமுறுவன் —இழிந்தவர்காய்ந்தான் - ஏழைகளைக்கோபித்தவன் — எரிநரகதனில்வீழ்வன் - அக்கினிமயமானநரகத்தில்வீழ்வன்—என்றால் - என்றுவேதாகமங்கூறுமாயின்—ஒருவர்தம்மிடத்தும் - ஒருவரிடத்திலும் —சீற்றமுறுமையே - கோபியாமையே—நன்று - நன்மையாம. எ - று. மாது-ஓ - அசைகள். புரிவன வினையாலணையும் பெயர். (௯௧)

யாவர்க்கு மொப்ப நன்று மென்னினுஞ் சினமி லாமை
மூவர்க்கு மரிய செய்யு முனிவர்க்குஞ் சிறந்த தென்று
தேவர்க்கு மரிய வின்பஞ் சிதத்ரா மப்பே ரண்ணல்
மேவற்கு வடிவங் கொண்டு மேவிய விமலன் சொன்னான்.

(இ - ள்.) யாவர்க்குமொப்ப - யாவர்க்குமியையுமாறு —நன்றுமென்னினும் - கோபித்தல்நல்லதாகுமென்றாலும—சினமிலாமை - கோபியா

மமூவர்க்கும் - திரிமூர்த்திகளுக்கும —அரியசெய்யும் - அரியதவத்தைச்செய்யும்—முனிவர்க்கும் - ரிஷிகளுக்கும்—சிறந்ததென்று - சிறப்புற்றதென்று—தேவர்க்குமரிய - தேவர்களுக்குங்கிடைத்தற்கரிய —இன்பம் - பேரின்பத்தை —சித்தராமப்பேரண்ணல் - சித்தராமனென்னும் பெயரையுடையதலைவன் —மேவற்கு - அடைதற்கு —வடிவங்கொண்டு மேவிய - மானிடவடிவங்கொண்டுவந்த—விமலன்சொன்னான் - அல்லமன்சொல்லினன். எ - று. கோபித்தல் எவர்க்குமொப்பவியையினும் கோபியாமையே மூவர்க்கும் முனிவர்க்கும் சிறப்புற்றதென் றல்லமன் சொல்லினனெனப் பொருள்கொள்க. (௬௨)

அல்லம னறைந்த மாற்ற மறிந்துநஞ் சித்த ராமன்
சொல்லுவன் முத்தி யெய்துந் துணையசா தனங்க ளெல்லா
மில்லையென் னிடத்தி லேனு மென்னைநீ வலிந்தாட் கொள்ள
நல்லவ னாகச் செய்த நன்மையே நன்மை யென்று.

(இ - ள்.) அல்லமனறைந்தமாற்றம் - அல்லமன்சொல்லியவசனங்களை —அறிந்து - தெரிந்துகொண்டு — நஞ்சித்தராமன் - நமதுசித்தராமனென்போன்—சொல்லுவன் - சொல்லுவான்—முத்தியெய்துந்துணைய - மோட்சத்தையடைதற்கிசைந்தனவாகிய —சாதனங்களெல்லாம - சாதனக்கருவிகளனைத்தும்—இல்லையென்னிடத்திலேனும் - என்னிடத்தில்லாமற்போயினும்—என்னை - அடியேனை —நீவலிந்தாட்கொள்ள - நீவலிந்தடிமைகொள்வான்வேண்டி—நல்லவனாகச்செய்த - பக்குவமுள்ளவனாகச்செய்த—நன்மையேநன்மையென்று-நன்மையேநன்மையாகுமென்று எ - று. ஏனையசாதனங்களிருப்பினும் அவையல்லவெனமறுக்க, முத்தியெய்துந் துணையசாதனங்களென்றார். என்னிடத்திலேனு மென்பதிலும்மை இழிவுசிறப்பு. துணையவென்பதைத் துணையாநின்றுள்ள வெனக் குறிப்புப்பெயரெச்சமாக்கினு மமையும். (௬௩)

கருத்தழி கடமி றங்கு கவுட்கரி வலிந்து பற்றித்
திருத்துபு தன்கா லேவுஞ் செயல் செயக் கொளவ தன்றி
யொருத்தல்வந் தறிந்து தானே யுறவுகொண் டிடுவ துண்டோ
தெரித்திடி லடிய னேனின் றிருவடிக் கத்தி றத்தேன்.

(இ - ள்.) கருத்தழி - யாவரதெண்ணங்களையுங்கலக்குகின்ற—கடமிறங்கு - மதசலம்பொழிகின்ற —கவுள் - கன்னத்தையுடைய —கரி - யானையை —வலிந்துபற்றி - பலவந்தமாகப்பிடித்து —திருத்துபு - தன

தென்னத்தின்படிதிருத்தி — தன்காலேவும் - தனதுகாலாலேவப்பட்ட—செயல்செய - வேலையைச்செய்யும்படியாக —கொள்வதன்றி - ஏற்றுக்கொள்வதன்றி— ஒருத்தல் - யானையானது —வந்து - வலியவந்து— அறிந்து - இவனையறிந்து—தானேயுறவுகொண்டிடுவதுண்டோ - தானேயுறவுகொள்ளுமா —தெரித்திடில் - தெரிவிக்குமிடத்தில் —அடியேன் - அடியேன் —நின்றிருவடிக்கு - உமதுபாததொண்டுக்கு —அத்திறத்தேன் - அத்தன்மையனுயிருக்கின்றேன். எ - று. கடமிறங்கு கவுட்கரியென்றதனுல் சருத்தழியென்பதற்குக் கண்டவர்கருத்தைக்கலங்கச் செய்யுமென்றும். காட்டானையைவலிந்துபற்றித் தன்னிஷ்டப்படிதிருத்தித்தான்கற்றுகொடுத்தவேலைகளை யதனிடத்தில்வாங்கவேண்டிய தல்லாமல் அதுவேதன்னிடத்தில்வலியவந்து இவனிஷ்டப்படி நடக்குமா ? அதுபோல யானும் உனக்கத்தகையதாயிருக்கின்றேனெனப் பொருள் கொள்க. தெரித்திடில் பிறவினை. (௩௪)

அடன்மலி வீரன் வீர மவனெதிா மலைந்து நின்றோன்
படைமிசை கொண்டு காணப் படுமது போல வுன்றன்
கடன்மலி யருளி னாற்றல் கணடிடப படுமிங் கென்றன்
கொடுமையின் மிகையா லென்று குடந்தம்பட் டழுங்கிக் கூறி.

(இ - ள்.) அடன்மலி - வெற்றிமிகுந்த—வீரன் - சுத்தவீரனது—வீரம் - வீரத்தன்மை —அவனெதிர் - அவனெதிரில் —மலைந்துநின்றோன் - எதிர்த்துநின்றோனது—படைமிசை - சேனையின்மேல்—கொண்டு - தனதாயுதங்கொண்டு—காணப்படுமதுபோல்-காணப்படுந்தன்மைபோல—உன்றன் - உன்னுடைய—கடன்மலி - கடல்போலுமிகுந்த—அருளினாற்றல் - கிருபையின்வலிமை —இங்கு - இவ்விடத்தில் —என்றன் - என்னுடைய —கொடுமையின்மிகையால் - துஷ்டத்தனத்தின்மிகுதியால்—கண்டிடப்படுமென்று - காணப்படுமென்று — குடந்தம்பட்டு - வாதைப்பட்டு—அழுங்க - மனம்நொந்து—கூறி - சொல்லி. எ - று. சுத்தவீரனது வீரத்தன்மை யெதிர்த்தோனிடத்துக்காணப்படுவதுபோல எனது கொடுமையின்மிகுதியால் உனதருளினாற்றல் காணப்பட்டதென்ன முடிக்க. (௩௫)

என்குறை நினையா தெந்தா யினித்திரு வுளமி ரங்கி
நன்குறு முத்தி சேரு நன்னெறி காட்டு கென்று,

தன்குறை யிரந்து ளைந்து தனைநிகர் சித்த ராமன்
முன்களை யிறந்த வன்பான் முதல்வனை வணங்கி னானல்.

(இ - ள்.) என்குறை - எனதுகுற்றங்களை —நினையாது - நினைக்காமல்—எந்தாய் - என்றந்தையே—இனி - இனிமேல்—இருவுளமிரங்கி - மனதிரங்கி—நன்குறுமுத்திசேரும் - ஐக்யமுத்தியடைதற்கியைந்த—நன்னெறிகாட்டுகென்று - நன்மார்க்கத்தைக்காட்டக்கடவாயென்று—தன்குறை - தனதுகுறைகளை —இரந்து - இரந்துகூறி —உளைந்து - மனம்வருந்தி—தனைநிகர் - தனக்குத்தானேயொப்பாகிய —சித்தராமன் - சித்தராமனென்போன்—முன் - முன்னதாக—களையிறந்தவன்பால் - அளவில்லாதவன்பினால்—முதல்வனை - அல்லமனை—வணங்கினான் - நமஸ்கரித்தனன். எ - று. ஆல் - அசை. முத்தியென்றது நன்குறுமென்னுமடையால் ஐக்யமுத்தியென்றும். தொண்டுபுரிவதில் உவமைகடந்தோனாதலின் தனைநிகர்சித்தராமனென்றார். சித்தராமன் இரந்து உளைந்து வணங்கினான் எனக்கூட்டிமுடித்துப் பொருள்கொள்க. (௬௬)

வணங்கிய வவனை ஞான வாரிதி யருளா னோக்கி
யிணங்கிய பருவங் காணு மிவன்றனக் கின்ப முத்தி
யணைந்திடு நெறியீ தென்ன வறைவமென் றுளத்துட் கொண்டு
பிணங்குறு பிறவி யென்னும் பிணிமருந் தனையான் சொல்வான்.

(இ - ள்.) வணங்கியவவனை - வணங்கியவந்தச்சித்தராமனை —ஞானவாரிதி - ஞானசமுத்திரமாகியவல்லமன்—அருளானோக்கி - கிருபையினாற்பார்த்து —இணங்கிய - தக்க —பருவங்காணுமிவன்றனக்கு - பருவத்தைக்காணுகின்றவிவனுக்கு—இன்பமுத்தி - பேரின்பவீடு—அடைந்திடுநெறி - வருதற்கியைந்தமார்க்கம் —ஈதென்ன - இதுவென்று —அறைவமென்று - தெரிவிப்போமென்று —உளத்துட்கொண்டு-நினைத்து—பிணங்குறு - முரணுயுள்ள —பிறவியென்னுமபிணி - பிறப்பாகிறவியாதிக்கு—மருந்தனையான் - அமிழ்தம்போல்பவனாகியவல்லமன் — சொல்வான் சொல்லுவன். எ - று. ஞானவாரிதி உவமைப்புறத்துப்பிறந்தவன் மொழித்தொகை. பிறவியென்னும்பிணி உருவகம். பிணங்குறல் ஒன்றுபோல்வராமை. (௬௭)

பருவமுற் றிலர்க்கு முக்கட் பகவனு கமத்தி னுண்மைப் [னன்
பெருமையைப் பொருளை யெண்ணிப் பெருமிதத் துரைப்பி லன்

குரவரிற் பதடி யென்ப குறித்துநற் பருவ நோக்கி
யருள்செயிற் குரவ சிங்க மவனென் றறைவ னையன்.

(இ - ள்.) பருவமுற்றிலர்க்கு - பரிபாககாலம்நிறைவேறாதார்க்கு — முக்கட்பகவன் - பரமசிவனாற்செய்த —ஆகமத்தின் - ஆகமத்திலுள்ள —உண்மைப்பெருமையை - உண்மையினதுபெருமையையும் —பொருளை - அர்த்தத்தையும்—எண்ணி - நினைத்து—பெருமிதத்து - பெருமை நோக்கி —உரைப்பில் - உபதேசித்தால் —அன்னான் - அப்படிப்பட்டவன் —குரவரில் - ஞானாசிரியருள் —பதடியென்ப - பதடியென்றறிஞர் கூறுவர்—குறித்து - சீட னடையைக்குறித்து—நற்பருவநோக்கி - நல்ல பரிபாககாலத்தைநோக்கி—அருள்செயில் - அநுக்கிரகஞ்செய்தால் —குரவசிங்கமவனென - ஞானாசிரியரில்சிங்கம்போல்பவனவனென்று —அறைவன் - சொல்லுவன்—ஐயன் - அல்லமதேவன். எ - று. பெருமை பற்றிப்பருவமல்லாதார்க் குபதேசிப்பவன் குரவரிற்பதடியெனவும், தக்க பருவநோக்கி யுபதேசிப்பவன் குரவசிங்கமவனெனவும் அல்லமன்சொல்லினனென்க. ஆகமத்தினுண்மைப்பெருமை, மகாவாக்கியத்தின் மகிமையை. பொருள், வாச்சியார்த்த லட்சியார்த்தங்களை. பெருமிதத்தென்பது, தனக்குப் பெருமைவாய்க்கும்படி யெனப்பொருள்கொள்ளினு மமையும்.

உரைசெயிற் பரம ஞான மொன்றுமே முத்திக் கேது
சரிதைநற் கிரியை யோகந் தாமொரு மூன்று ஞான
மருவுதற் கேது வென்று மறைபுகன் றுரைக்கு மிந்தக்
கருவியைப் பொருளென் றெண்ணிக் களிப்பவர் கயவ ரன்றே.

(இ - ள்.) உரைசெயில் - சொல்லுமிடத்தில் —பரமஞானமொன்றுமே - ஆத்மஞானமொன்றே —முத்திக்கேதுவென்று - ஐக்யமுத்திக்கேதுவென்றும்—சரிதை - சரியையும்—நற்கிரியை - நல்லகிரியையும்—யோகந்தாம் - யோகமும் —ஒருமூன்றும் - ஆகியவிம்மூன்றும்—ஞானமருவுதற்கு - ஆத்மஞானமடைதற்கு —ஏதுவென்று - ஏதுவென்றும் —மறை - வேதங்கள்—புகன்றுரைக்கும் - வகுத்துச்சொல்லும் — (இங்ஙனமிருக்க) இந்தக்கருவியை - சரியையாதியிம்மூன்றாகருவிகளையும்—பொருளென்றெண்ணி - சிறந்தபொருளாகக்கருதி —களிப்பவர் - சந்தோஷிப்பவர்கள் —கயவர் - மூடர்களாவர் எ - று. அன்று - ஏ - அசைகள். முத்திக்கேது ஞானமெனவும், ஞானத்துக்கேது சரியையாதிமூன்றுமெனவுமிருக்கக் கருவிகளைமுத்தியென்றெண்ணிக்களித்தல் மூடமென்ப

துசருத்து. என்றென்பதை இருவயினொடுக்க. ஒன்றுமேயென்பதி லே காரம் பிரிநிலை. என்றுமென்பதிலும்மை வருவித்தது. (௬௯)

**க**ருமமும யோகந் தானுங் கரணத்தைப் புனித மாக்கிப்
பொருமிடர் வாயி லூறும் புக்குழல் கறங்கு போலத்
தெருமரா துண்ணி றுத்துந் தெளிந்தவக் கரணந் தன்னா
னிருமல னாகு மீச னித்தனென் றுணாவு திக்கும.

(இ - ள்.) கருமமும்யோகந்தானும் - கருமமும்யோகமும் —கரணத்தைப்புனிதமாக்கி - மனதைப்பரிசுத்தமாக்கி —பொரும் - வருத்துகின்ற—இடர் - துன்பமயமாயுள்ள —வாயிலூறும் - ஐம்புலவழிகடோறும்—புக்கு - சென்று—உழல்கறங்குபோல - அலையுங்காற்றாடிபோல—தெருமராது - சுழலாது—உண்ணிறுத்தும - அகத்தில்நிறுத்திவிடும்—தெளிந்தவக்கரணந்தன்னால் - அங்ஙனந்தெளிவுற்றமனதினால்—நிருமலனாகும் - மலரகிதனாகிய—ஈசன் - பரமசிவனே—நித்தனென்று - நித்தியத்துவமுடையனென்று—உணர்வுதிக்கும் - அறிவுதோன்றும். எ - று. கருமமும்யோகமும் புனிதமாக்கி உண்ணிறுத்துமெனவும், தெளிந்தவக்கரணந்தன்னால் உணர்வுதிக்குமெனவுங்கூட்டிப் பொருள்கொள்க. (௭0)

**நி**த்திய னிமல னென்னு நினைவுறி னனித்த மாகிப்
பொய்த்தழி யுடம்பு டம்பைப் பொருந்திய பொருளவெறுத்து
மெய்த்தருள் குரவன் றன்னை விரும்பினன் சென்று சார்ந்து
தத்துவ முதறி நின்ற தனியறி வினையே காணும.

(இ - ள்.) நித்தியன் - நித்தியனென்றும் —நிமலனென்னும் - நின்மலனென்றுங்கொள்ளும்—நினைவுறின் - நினைவுதிக்கின் —அநித்தமாகி - அநித்தநிலையுடையதாகி — பொய்த்து - பொய்ப்பட்டு — அழி - நசிக்கின்ற—உடம்பு - உடலையும்—உடம்பைப்பொருந்திய - அவ்வுடல்காரணமாகச்சார்ந்த—பொருள் - பொருளையும் —வெறுத்து - வெறுப்புற்று—மெய்த்தருள் - உண்மையைவிளக்கும்—குரவன்றன்னை - ஞானாசிரியனை—விரும்பினன் - விருப்புற்றவனாய் —சென்று - தேடிப்போய்—சார்ந்து - அவனிடத்திற்சேர்ந்து —தத்துவமுதறிநின்ற - தத்துவமனைத்துங்கழன்றுநின்ற—தனியறிவினையே - ஏகசைதன்யத்தையே—காணும் - தரிசித்துக்கொண்டிருப்பன். எ - று. நினைவுறின் உடலையும் பொருளையும் வெறுத்து ஞானாசிரியனைவிரும்பிச் சென்று சார்ந்து காணுமெனமுடிக்க.

காணுமெனலே பல்லோர்படர்க்கைமுன்னிலைதன்மையிலெனனும் விதி யாலுயர்திணை யாண்பாலாக்குக. (எக)

புலன்களை யொழித்த போதே பொறிகளும் பூத மைந்துங்
கலங்குறு கரண நான்குங் கலாதியுஞ் சுத்த மைந்தும்
விலங்குறு மடியில் வைத்த வெறுங்குடந் தள்ளின் மேன்மேன்
மலங்குற வொருங்க டுக்கு மட்கலம் விழுந் லேபோல்.

(இ - ள்.) புலன்களை - ஐம்புலன்களையும் —ஒழித்தபோதே - களைந்த வுடன் —பொறிகளும் - ஐம்பொறிகளும் —பூதமைந்தும் - பஞ்சபூதங்களும் —கலங்குறும - சஞ்சலமுறுகின்ற —கரணநான்கும - மனமுதலிய நான்குகரணங்களும்—கலாதியும் - கலைமுதலியவைந்தும் — சுத்தமைந்தும் - சுத்தமுதலியவைந்தும—விலங்குறும் - தாமேநீங்கும்—அடியில்வைத்த - அடியில்வைத்திருக்கின்ற —வெறுங்குடம் - வெறுங்குடத்தை—தள்ளின் - இழுத்துவிட்டால் — மேன்மேல் - மேல்மேலாக —மலங்குற - அசையும்படி —ஒருங்கடுக்கு - ஒருமிக்கவடுக்கிய —மட்கலம்விழுதலே போல் - மண்பானைகள்விழுவதுபோல. எ - று. அடிப்பானையையிழுக்க மேலடுக்குப்பானைகள் தாமேவிழுவதுபோலப் புலன்களைக்களைந்தபொழுதே பொறி, பூதம், கரணம், கலை, சுத்தமுதலியவைகள் தாமேநீங்குமெனப்பொருள்கொள்க. புலன்களைந்தாவன ; சுரோத்திரமுதலானவைகளை. பொறிகளைந்தாவன ; மெய்வாய்முதலியவைகளை. பூதமைந்தாவன ; மண்நீர்முதலியவைகளை. கரணநான்காவன ; மனமுதலியவைகளை. கலாதியைந்தாவன ; கலை, வித்தை, இராகம், புருடன், மாயை, என்பவைகளை. சுத்தமைந்தாவன ; சுத்தம், சுபாவம், சூனியம், ஒழிவு, அதீதம் என்பவைகளை. (எ௨)

இந்திய மோரொன் றுய்விட் டிடின்மற்றை யொன்று சாரு
முந்திய மனம ழிப்ப முற்றும்போ மணிய பாம்பி
னைந்தலை களினு ளொன்றை யரிந்திடின் மற்றொன் றலஞ்
சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ.

(இ - ள்.) இந்தியம்-பஞ்சேந்திரியங்களையும்—ஓரொன்றுய்விட்டிடில்- ஒவ்வொன்றாகவிட்டுவிட்டால் —மற்றையொன்றுசாரும் - வேறொன்று வந்துசாரும்—முந்திய - முதலாகநின்றுள்ள—மனமழிப்ப - மனத்தைக்கெடுக்க—முற்றும்போம்-எல்லாப்பற்றுக்களுமொருங்கேபோகும்—மணிய - மாணிக்கத்தையுடைய — பாம்பினைந்தலைகளினுள் - பாம்பினதைந்துதலை

களுக்குள் —ஒன்றையரிந்திடில் - ஓர்தலையையரிந்தால் —மற்றொன்று - வேறோர்தலை —ஆலஞ்சிந்திடும் - விஷத்தைக்கக்கும் —மிடறரிந்தால் - கழுத்தையறுத்தால் —தீர்ந்திடுமொருங்கு - ஒருமிக்கவனைத்தும்போய்விடும். எ-று. மாது-ஓ - அசைகள். ஐந்தலைநாகத்தின் ஓர்தலையறுத்தால் ஏனையதலைகள் விஷங்கக்குமென்று கழுத்தையரிந்தாற்போல, இந்தியங்களையொவ்வொன்றய்விடின் ஏனையவிடயங்களிற்சாருமென்று, எவற்றிற்குமுதற்காரணமாய மனதைய்ழிக்கச் சகலபற்றுக்களும் போமெனமுடிக்க. மணிய, குறிப்புப்பெயரெச்சம். ஒன்றொன்றுமெனல், ஒரொன்றுயென்றயது விகாரம். (எ௩)

ஆதலான் மனம டங்கி லங்கலிங் கங்க டம்முட்
பேதமோ வபேத மோவென் றழிவுறு பித்து நீங்குந்
தீதிலா யென்றி யம்பிச் சித்தரா மற்கு நாவா
லோதொணு வுணர்வி னுண்மை புணர்த்தினன் குருகு கேசன்.

(இ - ள்.) ஆதலால் - ஆகையால் —மனமடங்கில் - மனமடங்குமாயின் —அங்கலிங்கங்கள் - உடலுமுயிரும் —தம்முள் - தங்களுக்குள் —பேதமோவபேதமோவென்று - பேதத்துக்கியைந்ததோவபேதத்திற்கியைந்ததோவென்றுகொண்டு —அழிவுறு - கெட்டுப்போகின்ற —பித்துநீங்கும் - மயக்கநீங்கும் —தீதிலாயென்று - குற்றமற்றவனேயென்று —இயம்பி - சொல்லி —சித்தராமற்கு - சித்தராமையருக்கு —நாவால் - நாக்கினுல் —ஓதொணு - சொல்லப்படாத —உணர்வினுண்மை - எதார்த்தவறிவினதுஉண்மையை —குரு - குருவாக —குகை - யாவருள்ளத்திலுமிருக்கின்ற —ஈசன் - அல்லமன் —உணர்த்தினன் - விளக்கினன். எ - று. ஆத்மானுத்மாவைப் பேதமென்போர் மதத்தரும், அபேதமென்போர் வேதாந்தியுமாயினும் ; வஸ்து அங்கலிங்கம்போற்றோற்றினும் ஆரோபமாதலின் ஒன்றுமன்று பலவுமன்று, இதனையறியாதுவாதித்தல் பிராந்தியாதலின் பித்தென்றார். நாவினு லோதொணுமையாவது; அனுபூதிநிலையை. மனமடங்கிற்பித்துநீங்குமெனவே, திரிஸ்யசோதனையின் றியக்கண் சங்கற்பநாசத்திற்கும் பிராந்திநாசத்திற்கும் இடமின்மைபெற்றும். நாவாலோதொணுவென்றடைபெற்றது எழுதாமறையெனற்கு. அழிவுறுதலாவது ; வஸ்துநிச்சயந்தெரியாதுகலங்கிமாய்தலை. குருகுகேசன் இயம்பி உணர்த்தினனெனக்கூட்டிமுடிக்க. ஒணுவென்பதிடைக்குறை. (எ௪)

மனிதரு ளரகர் சித்தர் வானவர் கணங்க டம்முண்
முனிவரு ளெங்போ னின்றன் முழுதருள் பெற்று ரில்லை

யினியெனை நிகர்வார் யாவ ரொன்றருட் குரவ னூர்தம்
பனிமல ரடியில் வீழ்ந்து பணிந்தனன் சித்த ராமன்.

(இ - ள்.) மனிதருள் - மனிதர்களுக்குள்ளும்—உரகர்தம்முள் - நாகலோகத்தாருக்குள்ளும—சித்தர்தம்முள் - சித்தர்களுக்குள்ளும்—வானவர்தம்முள் - தேவர்களுக்குள்ளும்—கணங்கடம்முள் - சிவகணங்களுக்குள்ளும்—முனிவருள் - ரிஷிகளுக்குள்ளும்—என்போல் - என்னைப்போல—நின்றன் - உன்னுடைய —முழுதருள் - பூரணவருளை — பெறுநரில்லை - அடைந்தவர்களில்லை—இனி - இனிமேல்—எனைநிகர்வார்யாவரென்று - எனக்கொப்பாவார் யாவரொன்றுசொல்லி—அருள் - கிருபையையுடைய—குரவனூர்தம் - அல்லமதேவருடைய —பனி - குளிர்ச்சிபொருந்திய—மலர் - தாமரைமலர்போன்ற—அடியில் - உபயபாதங்களில் —வீழ்ந்து - விழுந்து—பணிந்தனன் - வணங்கினன்—சித்தராமன் - சித்தராமனென்போன். எ - று. சித்தராமன் என்றுசொல்லி பணிந்தனனென முடிக்க. (எரு)

இப்பரி சருளி னூலே யிராமனுக் குபதே சித்துச்
செப்பரு மவன்குற் றேவல் செய்யிய வுளம கிழ்ந்து
கைப்படு மமிர்த மன்ன கருணைவா ரிதியி ருந்தான்
றுப்புர வமைந்து சீர்சால் சொன்னலா புரத்து மாதோ.

(இ - ள்.) இப்பரிசு - இவ்வண்ணமாக — அருளினூல் - கிருபையினூல்—இராமனுக்கு - சித்தராமனுக்கு — உபதேசித்து - அனுக்கிரகித்து—செப்பருமவன்-சொல்லுதற்கரியவந்தச்சித்தராமன்—குற்றேவல்செய்யிய - தனக்குத்தொண்டுசெய்யும்படியாக—உளமகிழ்ந்து - மனமகிழ்ந்து —கைப்படும் - கையிற்கிடைத்த —அமிர்தமன்ன - அமிர்தத்துக்கொப்பாகிய—கருணைவாரிதி - கிருபாசமுத்திரம்போன்றவல்லமன் —துப்புரவமைந்து - சகலஅலங்காரமுமமைந்து—சீர்சால் - அதனூல்கீர்த்திமிக்க—சொன்னலாபுரத்து - சொன்னலாபுரமென்னும்பதியில் —இருந்தான் - இருந்தனன். எ - று. மாது - ஓ - அசைகள். கருணைவாரிதி உபதேசித்து உளமகிழ்ந்து சொன்னலாபுரத்து இருந்தானெனக் கூட்டி முடிக்க. (எசு)

சித்தராமையர்-கதி முற்றிற்று.

கதி - கரு - ஆ - விருத்தம் - எ௨௩.



பதினைன்காவது

# வசவண்ணர்கதி.



வேறு.

சித்த ராமனோ டாரிய னல்லம தேவன்
பத்த ராகிய பயிர்செய்கல் யாணமாம் பழனத்
துய்த்த நீரெனும் வசவனை யுழ்வரிற் கண்டு
மெய்த்து மார்வமங் கடைந்தமை யாமினி விரிப்பாம்.

(இ - ள்.) சித்தராமனோடு - சித்தராமனென்பவனுடன் —ஆரியன் - ஆசிரியமூர்த்தநுகிய—அல்லமதேவன் - அல்லமதேவனென்பவன்—பத்தராகிய - அடியார்களாகிய —பயிர் - பயிர்களை—செய் - விளைவிக்கின்ற—கலியாணமாம்பழனத்து - கலியாணபுரியென்னுங்கழனியில்—உய்த்த - பாய்ச்சிய—நீரெனும்வசவனை - நீரென்கின்றவசவண்ணரை—உழவரில் - பயிரிடுமோந்தரைப்போல —கண்டு - பார்த்து —மெய்த்தும் - உண்மையாகிய—ஆர்வம் - ஆசையை—அங்கு-அவ்விடத்தில்—அடைந்தமை - பெற்றதை—யாம் - நாம்—இனி - இனிமேல் —விரிப்பாம்-விரித்துச்சொல்லுதும். எ - று. பத்தராகியபயிர், கலியாணமாம்பழனம், நீரெனும்வசவன், இவைஉருவகம். (க)

அன்ன மீனுட னிகழ்வறக் கொண்டமை யாமற்
செந்நெ லார்வய றீப்பசி யாற்றுபு சிறந்த
சொன்ன லாபுரந் தவஞ்செய்த தென்றுவான் றுதிப்ப
வென்னை யாளுடை யல்லம னிருந்தரு ளுளில்.

(இ - ள்.) அன்னம் - அன்னப்பட்சிகள்—மீனுடன் - மீன்களுடன்—இகழ்வற - பழிப்புநீங்க—கொண்டு - உறவுகொண்டு—அமையாமல் - இராமல்—செந்நெல் - செந்நெற்பயிர்கள்—ஆர் - பொருந்திய—வயல் - கழனியில்—தீப்பசி - கொடூரமாகியபசியை—ஆற்றுபு-தணித்து—சிறந்த - சிறப்புற்றமையப்பெற்ற—சொன்னலாபுரம் - சொன்னலாபுரமானது—

தவஞ்செய்ததென்று - மிக்கதவத்தைச்செய்ததென்று—வான்துதிப்ப - தேவர்கள்துதிக்கும்படியாக —என்னையாளுடையவல்லமன் - என்னையடிமைகொண்டவல்லமதேவன்—இருந்தருளுநாளில் - எழுந்தருளியிருக்குநாளில். எ - று. அல்லமன் சொன்னலாபுரத்தில் சித்தராமனோடு இருக்குநாளிலெனமுடிக்க. (௨)

சந்த மேவு கல்யாண மா நந்தன நந்தன்னி
னந்தி நாண்மலர்ப் புகழ்மண நயந்தசொல் வளியால்
வந்து காதெனு நாசியிற் புகமிக மகிழ்ந்த
துநந்து வார்திரைக் கருங்கட லுடுத்தபே ருலகம.

(இ - ள்.) சந்தமேவும் - அழகுபொருந்திய —கல்யாணமாம் - கல்யாணபுரியாகிய —நந்தனந்தன்னில் - பூங்காவனத்தில்—நந்தி - வசவண்ணனென்னும்—நாள் - அன்றலர்ந்த—மலர் - தாமரைமலரின்—புகழ் - அவரதுகீர்த்தியாகிய —மணம் - வாசனை —நயந்தசொல் - அவரதினியமொழியென்னும் —வளியால் - காற்றினால் —வந்து - வந்து —காதெனு நாசியில் - காதென்னுமூக்கில்—புக - நுழைய—உந்து - மோதுகின்ற—வார் - நீண்ட—திரை - அலைகளையுடைய—கருங்கடல் - கருங்கடலை —உடுத்த - ஆடையாகவுடுத்த—பேருலகம் - பெரியவுலகமானது—மிகமகிழ்ந்தது - மிகவுஞ்சந்தோஷித்தது. எ - று. கல்யாணமாநந்தனம், நந்திமலர், புகழ்மணம், நயந்தசொல்வளி, காதெனுநாசி, இவையுருவகம். மகிழ்தலை ஏற்றற்பாலதன்மையின், உலகினரை உலகமென்றது இடவாகுபெயர்.

முக்க ணுயகன் புகழெனு மூரலுண் பதற்குத்
தக்க தீஞ்சுவைக் கறியெனச் சமைந்தது வசவன்
மிக்க வான்புக ழவற்றினை மாதவர் விரவித்
துய்க்கு நாவினிற் றுய்த்தனர் பவப்பசி தொலைய.

(இ - ள்.) முக்கணுயகன் - பரமசிவனது—புகழெனும் - கீர்த்தியென்கிற—மூரல் - சாதத்தை —உண்பதற்கு - சாப்பிடுதற்கு —தக்க - தகுந்த—தீஞ்சுவை - இனியசுவைமயமாய—கறியென - பதார்த்தமாக—வசவன் - வசவண்ணரது—மிக்க - மிகுந்த—வான் - சிறந்த—புகழ் - கீர்த்தியானது—சமைந்தது - அமையப்பெற்றது — அவற்றினை - அவ்விருவகையினையும்—மாதவர் - மகாதவத்தினர்—விரவி - கலந்து —துய்க்கும் - புசிக்கத்தக்க—நாவினில் - நாக்கினால்—பவம் - செனனமென்னும்—பசி

தொலைய - பசிகெட—துய்த்தனர் - புசித்தார்கள். எ - று. புகழெனு மூரல் பவப்பசி உருவகம். இங்கேதுய்க்குகாவென்றது, அறிவை. பவப் பசிதொலையத்துய்த்தலாவது; சங்கற்பவயமாகாமையென்க. இவ்விருவர் புகழையும்விரவுதலாவது; ஞானகாரமாகச்சிந்தித்தலை. முக்கணுயகன் புகழைமூரலென்றது; ஒப்பியே பிரியமாயதைக்குறித்தற்கும், வசவன் மிக்கவான்புகழ்சுவைக்கறி யென்றது; அதற்கியைந்த சாதனங்களாகிய இயமநியமாதிகளைக் குறித்தற்கு மென்க. (௪)

விலக்கு முற்பவச் சித்தரா மற்குமுன் விளம்பு
மிலக்க ணத்தினுக் கருணந்தி யெனுமிலக் கியத்தைக்
கலக்க மற்றறிந் திடுவதற் குதாரணங் காட்ட
மலக்க மற்றநம் மல்லமன் றிருவுளம் வலித்தான்.

(இ - ள்.) உற்பவம் - பிறவியை—விலக்கும் - நீக்கிய—சித்தராமற்கு- சித்தராமனென்பவற்கு—முன்விளம்பும் - முன்னேசொல்லிய — இலக்க ணத்தினுக்கு; சச்சிதானந்தமுதலியவிலக்கணங்களுக்கு —அருள் - கிரு பைபொருந்திய —நந்தியெனுமிலக்கியத்தை - வசவண்ணனென்னு மிலக் கியத்தை—கலக்கமற்று - சந்தேகமற்று —அறிந்திடுவதற்கு - தெரிந்து கோடற்கு—உதாரணங்காட்ட - உதாரணங்காட்டும்படி —மலக்கமற்ற- விபரீதமற்ற—நம்மல்லமன் - நமதல்லமதேவன்—திருவுளம்வலித்தான் - உறுதியாகத்திருவுளங் கொண்டனன். எ - று. ஐயந்திரிபறத்தெளிந்த வனுதலின் ஆகாமியமுளைத்தற்கிடங் கொடானெனக்காட்ட, விலக்கு முற்பவச்சித்தராமனென்றார். முன்னர்சித்தராமன் ஐக்கியமெய்தற் கி யைந்த இலக்கணத்துக்கு இலக்கியமாகிய பரவஸ்துவைப்போல் வச வண்ணர் இருத்தலின் அவரை இலக்கியமெனப்பட்டது. (௫)

அடிய வர்க்கெளி யானெனு மவனெம தகத்திற்
குடியி ருக்குமவ் விராமனை யுடன்கொடு குறிலோர்
நெடிலடுத்தநன் னிரையென வந்நகர் நீங்கிக்
கொடிம திற்கலி யாணமா நகர்வழிக் கொண்டான்.

(இ - ள்.) அடியவர்க்கெளியானெனும்-அன்பர்க்கெளியனென்றுசொ ல்லப்பட்ட—அவன் - அந்தவல்லமதேவன் —எமதகத்தில் - எமதுள்ளத் தில்—குடியிருக்கும் - வாசஞ்செய்யப்பட்ட—அவ்விராமனை - அந்தச்சித் தராமனை—உடன்கொடு - கூடவழைத்துக்கொண்டு—குறில்-குற்றெழுத் தானது—ஓர்நெடிலடுத்த - ஓர்நெடிலோடிணைந்த —நல் - நல்ல—நிரை

யென - நிரையசையைப்போல —அந்நகர்நீங்கி - அந்தப்பட்டணத்தைவி ட்டுநீங்கி—கொடி - கொடிகட்டிய—மதில் - மதில்சூழ்ந்த—கலியாணமா நகர்வழிக்கொண்டான் - கலியாணபுரிமார்க்கமாகச்சென்றான். எ - று. குறிலோர்நெடிலடுத்தநன்னிரையாவது; குறினெடிலிணைந்துவரு நிரைய சையென்க. "என்னை குறிலே நெடிலே குறிலிணை குறினெடில், ஒற்றொ டுவருதலொடு மெய்ப்படநாடின், நேருநிரையுமென்றிசிற்பெயரே" என் றார் தொல்காப்பியனார். குறிலிணையென்றது குறினெடிலென்றது; குறி லினதுவிகாரநெடிலாறற்போல அல்லமனாற்றெளிவுற்றவனெனக்காட் டற்கும, குறிலிணையெனின் அல்லமனுக் குவமிக்கப்படா னெனற்கும், இ ங்ஙனங்கூறியதென்க. (௬)

நறும்ப ழஞ்செறி தனியிட மொய்த்திட நண்ணு
மெறும்பொ ழுங்கென வரனடி யவர்திர ளெழுந்து
மறந்தும் வெஞ்சமண் குண்டரை யிணங்குறா வசவ
னுறும்பு ரமபுக லிருவருங் கண்டுளமுவந்தார்.

(இ - ள்.) நறும் - இனிய—பழஞ்செறி - பழங்கணிறைந்த —தனியிட ம் - தனித்தவிடத்தில்—மொய்த்திட - மொய்க்கும்படி—நண்ணும் - போ கின்ற—எறும்பொழுங்கென - எறும்புவரிசைபோல—அரனடியவர் - ப ரமசிவனடியார்கள்—திரள் - கூட்டமாக—எழுந்து - எழுந்திருந்து—மற ந்தும் - மறதியுற்றும்—வெஞ்சமண் - கொடியசமணராகிய—குண்டரை - பாதகரை—இணங்குறா - சேராத —வசவன் - வசவண்ணன்—உறும் - தங்கிய —புரம் - பட்டணத்துக்கு —புகல் - போதலை — இருவருங்கண் டு - அல்லமருஞ்சித்தராமருங்கண்டு—உளமுவந்தார் - மனங்களித்தனர். எ - று. மறந்துமென்பதிலும்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மை. இ ணங்குதல் அவர்மதவயப்படல். ஊன்செறிதனியிடமென்றதைது அடி யாரை யுவமிப்பதுபற்றியென்க. அரனடியவர் திரளெழுந்து புகலென முடிக்க. (௭)

தம்பி ரானருள் வசவனுக் கிவ்வறச் சாலைக்
கும்ப வாசநீர் முதலிய வேண்டுவ கொண்டு
வம்பு லாமலர் வனித்தயர் வுயிர்த்துநல் விழிசேர்ந்
தெம்பி ரானடி யுவர்திர ளேகுதல் கண்டார்.

(இ - ள்.) தம்பிரான் - அல்லமதேவரது—அருள் - கிருபைபெறுவா வான்வேண்டி—வசவன் - வசவண்ணர்—ஆக்கிய - ஏற்படுத்திய—அறச்

சாலை - தர்மசாலையிலுள்ள—கும்பம் - குடத்தினிறைந்த—வாசநீர்முதலி ய - வாசனைகட்டியநீர்முதலியவைகளில் — வேண்டுவகொண்டு - தமக்கு வேண்டியவளவுகொண்டு—வம்புலாம் - வாசனைபொருந்திய—மலர்வனத்து - பூங்காவனத்தில்—அயர்வுயிர்த்து - சோபநீங்கி —நல்வழிசேர்ந்து - நன்மார்க்கத்தையடைந்து—எம்பிரான் - பரமசிவனுடைய—அடியவர்திரள் - அடியார்கூட்டங்கள் —ஏகுதல்கண்டார் - போதலைக்கண்டார். எ - று. அடியவர்திரள் வேண்டுவகொண்டு அயர்வுயிர்த்து ஏகுதலை இவ்விருவருங்கண்டாரென முடிக்க. முதலிய, வேண்டுவ, இவைவினையாலணையும் பெயர்கள். (அ)

பாண்டின் மாவளஞ் சிவிகையூர்ந் தேகுனர் பரிந்து
வேண்டு மாறுகொள வேடத்தர் துறந்தவர் விரத
ரீண்டு மாறுகண் டுவந்துசென் றெழிலலங் கார
காண்ட மாமெனு மங்கல புரத்தினைக் கண்டார்.

(இ - ள்.) பாண்டில் - வண்டிகளிலேற்றிய—மாவளம் - மிக்கவளப்பத்தோடு—சிவிகையூர்ந்து - பல்லக்கையிலேறி —ஏகுனர் - போகிறவர்களும் —பரிந்து - விரும்பி —வேண்டுமாறுகொள் - தமக்குவேண்டுமளவு கொண்ட—வேடத்தர் - வேடதாரிகளும்—துறந்தவர் - துறவிகளும்—விரதர் - விரதங்காப்பவரும் —ஈண்டுமாறுகண்டு - நெருங்கிப்போதலைக்கண்டு—உவந்து - சந்தோஷித்து—சென்று - போய்—எழில் - அழகிய— அலங்காரகாண்டமாமெனும் - அலங்காரகாண்டமென்கிற—மங்கலபுரத்தினை-மங்கலபுரத்தை—கண்டார் - பார்த்தனர். எ - று. வேடத்தர் தவவேடம்பூண்டோரை. கல்யாணபுரிக்கு அலங்காரகாண்டமெனப்பெயரிருத்தலால் அலங்காரகாண்டமாமெனு மங்கலபுரமென்றார். (கூ)

கண்டு செல்லுமப் போதிலந் நகர்வளங் கருத்திற்
கொண்ட வல்லமன் றிருவுள மிகக்களி கூர்ந்து
பண்டை நல்லிசைப் புலவர்சொல் லிராமனைப் பார்த்து,
மண்டு பல்வளங் காட்டுவன் றனித்தனி வருத்து.

(இ - ள்.) கண்டு - பார்த்து —செல்லுமப்போதில் - போகுமத்தருணத்தில் —அந்நகர்வளம் - அந்தப்பட்டணத்தின்வளப்பத்தை — கருத்திற்கொண்டவல்லமன் - மனதிற்கொண்டவல்லபதேவன்—திருவுளம் -மனதில்—மிகக்களிகூர்ந்து - மிகவுஞ்சந்தோஷித்து —பண்டை - பூர்வீகமாவுள்ள—நல் - நல்ல—இசைப்புலவர் - இசைக்ஞானியர்கள்—சொல் -

துதிக்கின்ற—இராமனை - சித்தராமனை—பார்த்து-பார்த்து —மண்டு-மிகுந்த—பல்வளம - பலவளப்பங்களை —தனித்தனிவகுத்து - தனித்தனியாகப்பிரித்து—காட்டுவன் - காண்பிப்பன். எ - று. இரட்டுறமொழிதலென்னுமுத்தியால் ; பண்டை முன்னுள்ள நல்வினை நல்லகீர்த்தியை புலவர் பண்டிதர்களால் சொலீ துதிக்கத்தக்கவெனினுமமையும். அல்லமன்களிகூர்ந்து பார்த்து வகுத்து காட்டுவெனென முடிக்க. (௧௦)

> தனைவி ரும்பிவந் தடைந்தவர் தம்மைமுன் வெறுத்த
> தினக ரன்கதிர் விரும்புறச் செய்தளித் திரளக
> ணனிவி ருந்துணுங் கடிமலர் சுமந்துபொன் னகரார
> கனிவி ரும்புதண் பொழினிகழ் வதையெதிர் காணாய்.

(இ - ள்.) தனைவிரும்பிவந்து - தன்னைவிரும்பிவந்து —அடைந்தவர்தம்மை - சேர்ந்தவர்களை —முன்வெறுத்த - முன்னர்வெறுப்புற்ற—தினகரன்கதிர் - சூரியனதுகிரணத்தை —விரும்புறசெய்து - விரும்பச்செய்து—அளித்திரள்கள் - வண்டுக்கூட்டங்கள் —நனி - மிகவும் —விருந்துணும் - விருந்துண்ணத்தக்க —கடிமலர் - வாசனைபொருந்தியபுஷ்பங்களை—சுமந்து - சுமந்து—பொன்னகரார் - தேவர்கள்—கனிவிரும்பு - பழங்களைவிரும்புகின்ற—தண் - குளிர்ச்சிபொருந்திய—பொழில் - பூங்காவனங்கள்—நிகழ்வதை - விளங்குவதை—எதிர் - எதிரில்—காணாய் - பார்க்குதி. எ - று. வெய்யிலால்வதையுண்டு தன்னையடைந்தவர்களைத் தணிவுசெய்து மிக்ககுளிர்ச்சியால் மீண்டுஞ் சூரியகிரணை விரும்பச்செய்கின்ற பொழிலெனப்பொருள்கொள்க. தண்பொழில் விரும்புறச்செய்து சுமந்து பொழினிகழ்வதை யெதிர்காணாயெனக் கூட்டிமுடிக்க. (௧௧)

> பூவி னூடுசெந் தேன்மழை யொழிவறப் பொழியுங்
> காவி னூடுவள் ளிதழவிழ்ந் தொழுகுதேந கமல
> வாவி யோடுநல் லிசைபயி லஞ்சிறை வண்டு
> பாவி னூடுவண் குழலெனத் திரிதலைப் பாராய.

(இ - ள்.) பூவினூடு - புஷ்பங்களிடத்தும—செந்தேன்மழை - சிவந்ததேன்மாரி —ஒழிவறப்பொழியும் - இடைவிடாதுசொரிகின்ற —காவினூடு - பூங்காவினிடத்தும்—வள் - வளமைதங்கிய—இதழவிழ்ந்து - இதழ்கள்விரிந்து—ஒழுகு - ஒழுகாநின்ற—தேன் - வாசனைபொருந்திய—கமலம் - தாமரைமலர்கணிறைந்த—வாவியோடு - தடாகத்தினிடத்தும்—நல்லிசைபயில் - நல்லகீதங்களைப்பாடுகின்ற—அம் - அழகிய—சிறை - இ

றருகளையுடைய—வண்டு - வண்டுகள்—பாவின் - செய்யும்பாவினிடத்தி ல்—ஓடு - இடைவிடாதுமாறியோடுகின்ற—வண் - வளமைதங்கிய—சுழ லெண - மூங்கிற்குழலைப்போல—திரிதலைப்பாராய் - அங்குமிங்குமாகத்தி ரிதலைக்காணுதி. எ - று. பாவிலோடு மூங்கிற்குழலைப்போலப் பூவினிட த்துங் காவினிடத்தும் வாவியினிடத்தும் வண்டுகள் திரிதலைப்பாராயெ னக் கூட்டிமுடிக்க. யாதனுருபிற்கூறிற்றுயினு மென்னும்விதியால் பூவி னேடு காவினேடு வாவியோடு என்பவற்றிலுள்ள வோடுவுருபுகளை ஏழா ம்வேற்றுமையாகத் திரிந்ததென்க. (கஉ)

கடிம லர்ப்பசுந் தேன்றுளி பிலிற்றுபைங் காவைக்
குடியி ருக்குமவ் வளவெனக் கொண்டுவெண் குருகு
மடிய டுத்தவ ரொனவிருந் திளங்கயல் வரலு
நொடியி னிற்கவர் தண்பணை மருதமு நோக்காய்.

(இ - ள்.) கடி - வாசனைபொருந்திய—மலர் - புஷ்பங்கள்—பசுந்தே ன்றுளி - பசியதேன்றுளிகளை—பிலிற்று - சொரிகின்ற—பைங்காவை - பசியபூங்காவனத்தை—குடியிருக்குமவ்வளவென - தாங்குடியிருப்பதற் கியைந்தவெல்லையாமென—கொண்டு-எண்ணிக்கொண்டு—வெண்குருகு- வெண்மையாகியநாரைகள்—மடியடுத்தவரொன - சோம்பலுள்ளவரைப் போல—இருந்து - அசைவறவிருந்து—இளங்கயல்வரலும் - இளமையா கியசேற்கெண்டைகள்வரலும்—நொடியினில் - நொடியளவில்—கவர் - மூக்காற்கவர்ந்துவிழுங்குகின்ற—தண் - குளிர்ச்சிபொருந்திய—பணை - வயல்கள்சூழ்ந்த—மருதமும் - மருதநிலத்தையும்—பாராய் - காணுதி. எ - று. வெண்குருகு காவைத் தனக்கியைந்தவிடமாமெனக் கொண்டு மிக்கசோம்பலுடையோரைப்போற் கரையிலசைவறவிருந்து இங்ஙனமி ருப்பதனுல் அச்சமின்றிச் சேல்மீன்களருகுவரலும் நொடியினிற்கவ ரொன முடிக்க. அசைவின்மையைக்குறிக்க மடியடுத்தவரையுவமித்தார்.

குதிரை யங்கதிர் மணிக்குட நீர்குடிப் பதுபோ
லதிரி ளங்கமஞ் சூல்வளை தவழ்வய லணிநெற்
கதிர் வளைந்துசெந் தாமரை வாயுறக் கவிழ்ந்து
ஈதிபொ ருந்திய வழகையு மையநீ நோக்காய்.

(இ - ள்) குதிரை - குதிரையானது—அம் - அழகிய—கதிர் - பிரகாச த்தையுடைய—மணி - இரத்தினங்கள்பதித்த—குடம் - குடத்தில்—நீர் குடிப்பதுபோல் - நீர்குடிக்குமாறுபோன்று—அதிர் - சத்திக்கின்ற—இ

ளம் - இளமையாகிய—கமஞ்சூல் - நிறைந்தகருப்பத்தையுடைய—வளைத வழ் - சங்குகள்தவழப்பட்ட—வயல் - கழனிகளில் —அணிநெற்கதிர் - அழகியநெற்கதிர்கள்—வளைந்து - பாரத்தால்வளைந்து—செந்தாமரைவாய் - செந்தாமரைமலரிடத்து—உற - பொருந்த —கவிழ்ந்து - கவிழ்ந்து—நுதி பொருந்திய - நுனிபொருந்தியிருக்கின்ற —அழகையும் - அழகினையும்—ஐய - அய்யனே —நீநோக்காய் - நீகாணுதி. எ - று. குதிரைகுடிப்பது போல் வளைதவழ்தலாலுவமையாயிற்று. இன்னுங் குதிரை கடத்தினீர்குடிப்பதுபோல நெற்கதிர்வளைந்து தாமரைமலர்வாயாக விருக்கக்கவிழ்ந்து நுனிதங்கியவழகெனினுமமையும். (௧௪)

இங்குத் தன்னுள்வாழ் பயிற்சியா லிறந்துயிர் போயு
மங்குப் பொன்னெயில் வட்டத்து ளிருண்மனத் தமணர்
தங்கற் குன்னுமிப் பொன்னெயில் வட்டமுஞ் சடைமே
கங்கைப் பெண்ணமா பரனடிக் கனபநீ காணாய்.

(இ - ள்.) இங்கு - இவ்வுலகத்தில்—தன்னுள்-தனக்குள் —வாழ்-வாழ்கின்ற—பயிற்சியால் - பழக்கத்தால்—இறந்துயிர்போயும் - இறந்துயிர் நீங்கியும்—அங்கு - அவ்வுலகத்தில்—இருள் - இருள்மயமாய—மனத்து - மனதையுடைய—அமணர் - சமணர்கள் —பொன்னெயில்வட்டத்துள் - பொன்மதில்சூழ்ந்தவட்டநிலத்தில்—தங்கற்குன்னும் - என்றுந்தங்குதற குநினைக்கின்ற—இப்பொன்னெயில்வட்டமும் - பொன்மதில்சூழ்ந்தவிந்த வட்டநிலத்தையும் —சடைமேல் - சடாமுடியின்மேல் —கஙகைப்பெண்ணமர் - கங்காதேவியமரப்பெற்ற—பரனடிக்கன்ப - பரமசிவனடிககன் புடையோனே —நீகாணாய் - நீகாணுதி. எ - று. உயிர்போயும் என்பதி லும்மை இழிவுசிறப்பு. வட்டமும் என்பதிலும்மை எண்ணும்மை. இறந்தபின் உயிர் மேலுலகத்தில் தங்கற்கு அமைத்தபொன்னெயில் வட்டம்போல ; உடல்தங்கற்கு இவ்வுலகத்திலமைத்த பொன்னெயில்வட்ட மிதுவெனக்காட்ட இங்ஙனங்கூறினார். அன்ப, விளி அங்கென்பதினால் இங்கென்பதற்கு இவ்வுலகமென்றும். (௧௫)

திறந்து மூடுகின் றுதலிமை விழியெனச் சேர்ந்து
பிறங்குமாமணிக் கதவிரு புடையினும் பெற்றுச்
சிறந்த கோபுர வாய்தலு மலர்மிசைத் தெய்வம்
பறந்து நாடிய முடியிறைக் கன்பநீ பாராய்.

(இ - ள்.) திறந்துமூடும் - விழித்துமூடுகின்ற—நின் - உன்னுடைய—

நுதல் - நெற்றியிலுள்ள—இமைவிழியென - கண்ணிமைபோல —சேர்ந்து - பொருந்தி—பிறங்கு - பிரகாசிக்கின்ற —மாமணி - சிறந்தவிரத்னங்கள்பதித்த—கதவு - கதவுகளை —இருபுடையினும்பெற்று - இரண்டுபக்கத்தினுமமையப்பெற்று —சிறந்த - சிறப்புற்றுநின்ற —கோபுரவாய்தலும் - கோபுரவாசற்படியையும்—மலர்மிசைத்தெய்வம் - தாமரைமலரையிடமாகவுடையபிரமன்—பறந்துநாடிய - பட்சியாகப்பறந்துதேடிய —முடி - சிகரத்தையுடைய —இறைக்கு - பரமசிவனுக்கு —அன்ப - நண்பனே—நீபாராய் - நீகாணுதி. எ - று. பறந்தென்பதினால் பட்சியாகப்பறந்தென்றாம். (கசு)

இலங்கு நீறெனுங் கவசமிட் டக்கமென் றியமபு
மலங்கல் வாகைவேய்ந் தஞ்செழுத் தத்திர மடுத்த
நலங்கொள் வீரராம் பதத்தர் மறுகம ணள்ளார்
கலங்கு பாசறை போன்றெதிர் நிகழ்வது காணாய்.

(இ - ள்.) இலங்கு - பிரகாசிக்கின்ற—நீறெனும் - வீபூதியென்கிற—கவசம் - சீராவை—இட்டு - தரித்து—அக்கமென்றியம்பும்-ருத்ராட்சமென்றுசொல்லப்பட்ட —அலங்கல்வாகை - வெற்றிமாலையை—வேய்ந்து - தரித்து—அஞ்செழுத்து - பஞ்சாட்சரமென்னும் —அத்திரம் - பாணங்களோடு—அடுத்த - கூடியிருக்கின்ற —நலங்கொள் - சன்மார்க்கமுள்ள—வீரராமபத்தர்தம் - வீரசைவர்களாகியவன்பர்களது —மறுகு - வீதி —அமணர் - சமணர்களென்னும் —நல்லார் - சத்துருக்கள் —கலங்கு - அஞ்சத்தக்க—பாசறைபோன்று - கூடாரமபோல—எதிர்நிகழ்வது - எதிரேவிளங்குவதை —காணாய் - காணுதி. எ - று. நீறெனுங்கவசம், அக்கமென்றியமபுமலங்கல்வாகை, அஞ்செழுத்தத்திரம, இவையுருவகம. ( )

கட்டு வாரசடைக் கண ணுதல் பூசனைக் கரும
மட்டு மாதவர் தீப்பசி யாற்றுறு மறமுள்
ளிட்டு மேற்புறங் கணடவர் கொடியன வென்னப்
பட்டு மாளிகை பற்பல நிகழ்வன பாராய்.

(இ - ள்.) கட்டு,- கட்டிய—வார் - நீண்ட—சடை - சடையையும்—கண்ணுதல் - நெற்றிக்கண்ணையுமுடையபரமசிவனது —பூசனைக்கருமமட்டும்-பூசனைக்கருமமட்டுக்காக —மாதவர் - மகத்தானதவத்தோரது —தீப்பசியாற்றும் - கொடியபசியைத்தணித்தற்கியைந்த —அறம் - தர்மத்தை—உள்ளிட்டு - நினைத்து —மேற்புறங்கண்டவர் - மேலுப்பரிகையி

ற்கண்டவர்களுக்குக்கட்டிய —கொடியனவென்னப்பட்டு - கொடிகளுக் கொப்பாகுமென்றுசொல்லப்பட்டு —மாளிகை - யாவரதுமாளிகையி லும்—பறபல - பலவேறுபட்டகொடிகள் —நிகழ்வன - அசைகின்றவை களை —பாராய் - காணுதி. எ - று. தருமஞ்செய்வான்வேண்டிக்கட்டி யகொடிகளைப்போல யாவரதுமாளிகையிலும் பற்பலநிகழ்வனபாராயெ னக்கூட்டிமுடிக்க. கண்ணுதலென்பது, அன்மொழித்தொகை. (கஅ)

பொறித்த வாழையின் கனியினைக் கடைத்தலை பொருந்தக்
குறித்தி டாதுண வெனக்கறித் தலகுநோய் கொண்டு
நிறுத்து வாழையின் கனியுமச் செய்கையாய் நினைந்து
கறித்தி டாதமர் செம்முகப் பசுங்கிளி காணாய்.

(இ - ள்.) பொறித்த - சித்திரமாகவெழுதிய—வாழையின்கனியினை - வாழைப்பழத்தை—கடைத்தலை - முற்றும்—பொருந்தக்குறித்திடாது - நன்குணராமல்—உணவென - உணவென்று—கறித்து - கடித்து—அல கு - மூக்கு—நோய்கொண்டு - நொந்து —நிறுத்து - பந்தலில்நாட்டிய— வாழையின்கனியும் - வாழைப்பழத்தையும் —அச்செய்கையாய்நினைத் து - அந்தவிதமாகநினைத்து—கறித்திடாது - கடிக்காமல்—அமர் - சும்மா விருக்கின்ற—செம்முகம் - சிவந்தமுகத்தையுடைய—பசுங்கிளி - பசிய கிளிப்பிள்ளைகளை—காணாய் - காணுதி. எ - று. பொறித்தவாழை, கற்பி தவாழை. நிறுத்தவாழை, உண்மைவாழை. இஃது மயக்கவணி. (கக)

வள்ள னல்லவச வன்புகழ் வாயினால் வழுத்தா
தெள்ளும் வல்லமண் குண்டர்தம் பிறப்பினு மிழிப்பில்
புள்ளு நல்லன வெனவிளம் பூவையோ டிருந்து
கிள்ளை யவ்வச வன்புகழ் சொல்வது கேளாய்.

(இ - ள்,) வள்ளல் - வள்ளலாகிய —நல்லவசவன்புகழ் - நல்லவசவண் ணரதுபுகழையும்—வாயினால்வழுத்தாது - வாயினாற்றுதியாமல் —எள்ளு ம் - இகழுகின்ற —வல் - கொடூரமாகிய —அமண்-சமணர்களென்னும்— குண்டர்தம் - பாதகர்களுடைய—பிறப்பினும் - செனனத்தைக்காட்டிலு ம்—இழிப்பில் - இழிவில்லாத—புள்ளும - பட்சிகளும்—நல்லனவென - நல்லனவாமெனக்கூறும்படி —இளம் - இளமையாகிய —பூவையோடு - நாகணவாய்ப்பட்சியோடு—இருந்து - கூடியிருந்து —கிள்ளை - கிளிப்பிள் ளைகள் —அவ்வசவன்புகழ் - அவ்வசவண்ணரதுபுகழை —சொல்வது -

சொல்லிக்கொண்டிருப்பதை —கேளாய் - கேளுதி. எ - று. வசவண்ணனது புகழைச் சொல்லிக்கொண்டிருப்பதால், அமண்குண்டர்தம்பிறப்பினும் இழிப்பில் புள்ளு நல்லனவென்றார். (உ0)

என்று கூறியவ் விராமனை மகிழ்வுசெய் தின்ப
மன்றல் வீதியில் வசவநா யகன்றிரு மனைமுற்
குன்று போலுயர் கோபுர வாய்தலைக் குறுகச்
சென்று மேவினனெம்மையா ளல்லம தேவன்.

(இ - ள்.) என்றுகூறி - என்றுசொல்லி —அவ்விராமனைமகிழ்வுசெய்து - அந்தச்சித்த்ராமனைச்சந்தோஷப்படுத்தி —இன்பம் - இன்பமயமான—மன்றல்வீதியில் - மங்களகரமானவீதியில் —வசவநாயகன்-வசவண்ணரது —திருமனைமுன் - அழகியமாளிகைமுன் —குன்றுபோலுயர்-மலைபோலுயர்ந்த—கோபுரவாய்தலை . கோபுரவாசற்படியை —குறுக - நெருங்க —எமமையாளல்லமதேவன் - எமமையடிமைகொண்டவல்லமதேவன் —சென்றுமேவினன் - போய்ச்சேர்ந்தனன். எ - று. அல்லமதேவன் மகிழ்வுசெய்து சென்று மேவினனெனமுடிக்க. (உக)

தொடர்த்து ளைக்கைவெண் மருப்புரற் காற்கருந் தோற்றோ
லுடுத்த மெய்ப்பரன் கொலைகுறித் தெடாமழு வொப்ப
வடைத்த லைக்குறித் திடாதசெம் மணிக்கத வடுத்த
கடைத்த லைக்கண்மா தவர்குழா நெருங்குதல் கண்டார்.

(இ - ள்.) தொடர் - இடையில்விடாதுதொடருகின்ற—துளை-ரந்தனத்தையுடைய—கை - துதிக்கையையும்—வெண்மருப்பு - வெள்ளைத்தந்தத்தையும்—உரற்கால் - உரல்போன்றகால்களையும் —கருந்தோல் - கறுத்ததோலையுமுடையயானையின்—தோலுடுத்த - தோலையாடையாகவுடுத்த —மெய்ப்பரன் - உண்மையாகியபரமசிவன் —கொலைகுறித்து - கொலைசெய்தலைக்குறித்து—எடா - கையிலெடாத—மழுவொப்ப-மழுவாயுதத்துக்கொப்பாக —அடைத்தலைக்குறித்து - மூடுதலைக்குறித்து —இடாத - போடாத —செம்மணி - சிவந்தரத்னங்கள்பதித்த —கதவடுத்த - கதவைச்சார்ந்த—கடைத்தலைக்கண்- கடைவாயலில்—மாதவர்குழாம்-பெரியோர்கூட்டங்கள்—நெருங்குதல்கண்டார் - ஒருவருக்கொருவர்நெருங்குதலைக்கண்டார்கள். எ - று. துதிக்கை, வெண்மருப்பு, உரற்கால், கருந்தோல், என்றற்றொடக்கத்தான் யானையென்றாம். மழுவெடுத்தது கோறலுக்கன்றாமைபோல, கதவுவைத்தது மூடாமைக்கென்க. (உஉ)

வேறு

அறுசுவை யடிசி லுண்பா னண்டுவா ரடிசி லுண்டு
மறுகிடை வருவார் சான்றோர் வைகிய விடங்க ளூடிக்
கறியொடு மருவு சோற்றுக் காவடி சுமந்து செல்வார்
நறுமலர் சுமந்து தண்ட நாதன்பூ சனைக்குப் போவார்.

(இ - ள்.) அறுசுவை - அறுசுவையோடுங்கூடிய—அடிசில் - சாப்பாட்டை—உண்பான் - உண்ணும்பொருட்டு—அடைகுவார் - செல்லுங்குரவர்களும் —அடிசிலுண்டு - அங்ஙனமாயவுணவுண்டு —மறுகிடைவருவார் - வீதியில்வருபவர்களும்—சான்றோர்வைகிய - பெரியோர்களிருக்கின்ற—இடங்களூடி - இடங்களைத்தேடி—கறியொடுமருவு - கறியோடுகூடிய—சோற்றுக்காவடி - சோற்றுக்காவடியை—சுமந்துசெல்வார் - சுமந்து போகின்றவர்களும்—நறுமலர்சுமந்து - நல்லபூமாலைகளைச்சுமந்து—தண்ட நாயகன்பூசனைக்கு - பரமசிவனபூசைக்கு—போவார்-போகின்றவர்களும். எ - று. அறுசுவை ; கைப்பு தித்திப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கார்ப்பு. அடிசில் உணவின்பொது. (உ௩)

செஞ்சர ணிறைஞ்சி நல்குஞ் செழுந்துகில் கிழித்துக் கீழ் கொண், டெஞ்சிய மிகையென் றெண்ணி யிட்டவ ணகன்றுபோவா, ரஞ்சுடர் மணிப்ப சும்பொன் னணிதுகி லலங்கல் சாந்தம், வஞ்சியர் தமக்க ளிப்பத் தருகென வாங்கிச் செல்வார்.

(இ - ள்.) செஞ்சரண் - சிவந்தபாதங்களை—இறைஞ்சி - வணங்கி—நல்கும் - கொடுக்கின்ற—செழுந்துகில் - நல்லவஸ்திரங்களை—கிழித்து - துண்டுதுண்டாகக்கிழித்து —கீழ்கொண்டு - கோவணமாக்கி —எஞ்சிய - மீந்தவைகளை—மிகையென்றெண்ணி - அதிகமென்றெண்ணி —இட்டு - அவரவர்க்களித்து—அவண் - அவ்விடத்தினின்று—அகன்றுபோவார் - நீங்கிப்போகின்றவர்களும் —அம் - அழகிய —சுடர் - பிரகாசம்பொருந்திய—மணி - இரத்தினபரணங்களையும் — பசும்பொன் - பசியபொன்னாற்செய்த—அணி - ஆபரணங்களையும் —துகில் - வஸ்திரங்களையும் —அலங்கல் - பூமாலைகளையும்—சாந்தம் - சந்தனங்களையும்—வஞ்சியர்தமக்களிப்ப - ஸ்த்ரீகளுக்குக்கொடுக்க —தருகெனவாங்கிச்செல்வார் - கொடுவெனவாங்கிச் செல்பவர்களும். எ - று. (உ௪)

நிந்தைசெய் தெமையெ திர்ந்த நெறியில்புன் சமணர் தங்கள், மைந்திணை யறியச் சொல்வம் வசவனுக் கென்று செல்

வார், நந்தியை வணங்க வேறு நகர்தொறு நின்று போந்து
சிந்துரம் வயமா வம்பொற் சிவிகைவிட் டிழிந்து செல்வார்.

(இ - ள்.) நிந்தைசெய்து - பழித்து—எமையெதிர்ந்த - எங்களோடுவி
ரோதித்த—நெறியில் - வரம்புகடந்த—புல் - அற்பமாகிய—சமணர்தங்க
ள் - சமணர்களுடைய—மைந்தினை - மோசத்தை,—வசவனுக்கு - வசவ
ண்ணருக்கு—அறியச்சொல்வமென்று - தெரியச்சொல்வமென்று —செ
ல்வார் - போகின்றவர்களும் —நந்தியைவணங்க - வசவண்ணரைத்தொ
ழ—வேறுநகர்தொறுநின்று - வெவ்வேறுபட்டணங்களிலிருந்து —போ
ந்து - வந்து—சிந்துரம் - யானையும்—வயமா - வெற்றிபொருந்தியகுதிரை
யும்—அம்பொன் - அழகியபொன்னினாற்செய்த—சிவிகை - பல்லக்குமா
கிய—விட்டு - இவற்றைவிட்டு—இழிந்துசெல்வார் - இறங்கிப்போகின்ற
வர்களும். எ - று. (௨௫)

சீர்கெழு வசவன் பாடத் திவவியாழ் கொண்டு செல்வா
ராகிவின் மதனை வென்றோ னடியவர் குழாநெ ருங்கு
மேர்கெழு மணிப்ப சும்பொன் னிருங்கடை நோக்கி நின்றா
ரோகைபோ டலம னுமத் தொருவனு மிராமன் றானும்.

(இ - ள்.) சீர்கெழு - சிறப்புப்பொருந்திய —வசவன்பாட - வசவனை
ப்பாட—திவவியாழ்கொண்டு - வலிக்கட்டமைந்த யாழையெடுத்துக்கொ
ண்டு —செல்வாராகி - போகின்றவர்களாகி—வில் - கரும்புவில்லையுடை
ய—மதனைவென்றோன் - மன்மதனையெரித்தபரமசிவனது —அடியவர்
குழாநெருங்கும் - அடியார்கூட்டங்க ணெருங்கிய —ஏர்கெழு - அழகு
பொருந்திய—மணி - இரத்தினங்கள்பதித்த —பசும்பொன் - பசியபொ
ன்னினாற்செய்த—இருங்கடை - பெரியகடைவாயலை—நோக்கிநின்றார் -
பார்த்துநின்றனர்—ஓகையோடு - மிக்கசந்தோஷத்தோடு—அலமனுமத்
தொருவனும் - அல்லமனென்னும்பெயரையுடையவொருவனும் —இராம
ன்றானும் - சித்தராமரும். எ - று: அலமனுமத்தொருவனும் இராமன்றா
னும் ஓகையோடு இருங்கடை நோக்கிநின்றாரெனக் கூட்டி முடிக்க. ()

ஆயிடை நின்றோர் தம்மை யப்பணப் பெயரின் மிக்க
தூயவ னெதிர்கண் டோகை சொல்லுவ லையற்கென்று
கோயிலு ளமல பூசை குழாத்தொடு செய்யும் போதிற்
போயினன் வசவ னோடு புகழ்ந்திது புகல லுற்றான்.

(இ - ள்.) ஆயிடை - அவ்விடத்தில்—நின்றோர் நமமை - நின்றவிவ்வி ருவரையும்—அப்பணப்பெயரின்மிக்கதூயவன் - அப்பணனென்னும்பெய ரையுடையமிக்கபுனிதன்—எதிர்கண்டு - நேரேகண்டு—ஐயர்க்கு - வசவ னுக்கு—ஒகைசொல்லுவனென்று - இந்தச்சந்தோஷமானகாரியத்தைச் சொல்லுவனென்று —கோயிலுள் - மடத்தினுள் —அமலபூசை - சிவபூ சையை —குழாத்தொடு - அடியாரகூட்டத்தோடு —செய்யும்போதில் - செய்யுங்காலத்தில்—போயினன் - போனவனும்—வசவனோடு - வசவண் ணரிடத்து—புகழ்ந்து - துதித்து —இதுபுகலலுற்றான் - இதனைச்சொல் லத்தொடங்கினன். எ - று. அப்பணப்பெயரின்மிக்கதூயவன் இவ் விருவரையுங்கண்டு மடத்துட்சென்று வசவனுக்குத் தெரிவிக்கத்தொ டங்கினனெனமுடிக்க. ஒகை, பண்பாகுபெயர். அமலன்பூசையெனல் அமல பூசையென ஈறறுனகரங்கெட்டது. (உ௪

மாதவ ரிருவ ரையா மழைமதா நெடுங்கண மங்கை
பாதிய னுருவி ரண்டு படைத்துவந தனனே யென்னச்
சோதிய தரளக் கோவைத் தோரண வாய்தன் முன்னம
வீதியி னின்றா ரொன்று விளம்பினன் றவத்தின் மிககான்.

(இ - ள்.) ஐய - ஐயனே —மாதவரிருவர் - மகாதவத்தையுடையோரி ருவர்—மழை - குளிர்ச்சிபொருந்திய—மதர் - மதர்த்த —நெடுங்கண் - நீ ண்டகண்களையுடைய—மங்கைபாதியன்-உமாதேவியைஅர்த்தபாகத்திலு டையபரமசிவன்—உருவிரண்டுபடைத்து - இரண்டுருவங்கொண்டு —வ ந்தனனேயென்ன - வந்தானென்றுசொல்லும்படி—சோதிய - பிரகாசம் பொருந்திய —தரளக்கோவை - முத்துமாலைகள்தங்கிய —தோரணம் - தோரணங்கட்டிய —வாய்தன்முன்னர் - வாயலின்முன்னே —வீதியினி ன்றாரொன்று - வீதியில்நிற்கின்றாரொன்று —தவத்தின்மிக்கான் - அப்ப ணப்பெயரினோன்—விளம்பினன் - சொல்லினன். எ - று. தவத்தின்மி க்கான், மாதவரிருவர் தோரணவாய்தன்முன்னர், வீதியினின்றாரொன் று விளம்பினனெனக்கூட்டிமுடிக்க. (உ௮)

என்றவ னியம்ப நந்தி யெனும்பெயர் கருணைக் குன்றங்
கன்றினை நினைந்து நெஞ்சங் கரைந்துவந் தணையுந் தாய்க்கிங்
கொன்றொரு தடையு முண்டோ வொல்லைநீ தருதி யென்னச்
சென்றவ னமல னோடு சித்தரா மனைவ ணங்கி.

(இ - ள்.) என்று - இப்படியென்று—அவனியம்ப - அவன்சொல்ல—நந்தியெனும்பெயர் - வசவண்ணனென்னும்பெயரையுடைய —கருணைக்குன்றம் - கிருபாமலைபோன்றவர் —கன்றினைநினைந்து - தனதுகன்றைநினைத்து—நெஞ்சங்கரைந்துவந்து - மனமுருகிவந்து—அணையுந்தாய்க்கு - சேரும்பசுவுக்கு—இங்கு - இவ்விடத்தில்—ஒன்றொருதடையுமுண்டோ - யாதோர்தடையேனுமுளதோ—ஒல்லை - சீக்கிரத்தில்—நீதருதியென்ன - நீயவர்களையழைத்துக்கொண்டுவாவென்றுசொல்ல —சென்றவன் - அந்தவப்பணப்பெயரினேன்போய் —அமலனோடு - அல்லமனோடு —சித்தராமனைவணங்கி - சித்தராமனென்பவனையும்வணங்கி. எ - று. கருணையில்சிறிதும சலனமில்லாததால் வசவண்ணரைக் கருணைக்குன்றமென்றார்.சித்தராமனையும் என்பதில்,இறந்ததுதழீஇய எச்சவும்மையெஞ்சியது.

பரசிவ லிங்க பூசை பணணிய பயனே யுங்கள
வரவென வுளம கிழந்தான் வசவனீர் வருக வென்ன
வெருவொடு முளமு ளைந்து மெய்த்தவன் விளம்ப வெங்கள்
குருபரன் முனிவான் போலக் குறுநகை கொண்டு கூறும்.

(இ - ள்.) பரசிவலிங்கபூசை-சிவலிங்கபூசையை—பண்ணியபயனே - செய்தபிரயோசனமே —உங்கள்வரவென - உங்கள்வருகையென்று—வசவன் - வசவண்ணர்—உளமகிழ்ந்தான் - மனமகிழ்ந்தனர்— (ஆதலின்) நீர்வருகவென்ன - நீங்கள்வரக்கடவீர்களென்றுசொல்ல —வெருவொடு - மிக்கபயத்தோடு —உளமுளைந்து - மனநடுங்கி —மெய்த்தவன் - அப்பணப்பெயரினேன்—விளமப - சொல்ல —எங்கள்குருபரன் - எங்கள்குருபரனாகியவல்லமன் —முனிவான்போல - கோபிப்பவன்போற்காட்டி —குறுநகைகொண்டு - புன்னகைகொண்டு —கூறும் - சொல்லுவான். எ - று. (௩௦)

அரசிய லடைந்தார தம்பா லையமேற் றருந்து கின்றோர்
வருசெயல் வரிசை யன்று மறித்துநீ போதி யென்று
வுரைசெய் வமல னப்ப னுளமவெரீஇக் கடிது மீண்டு
வரைசெயும் வயிரத் திண்டோள் வசவநா யகற்குச் சொன்னான்.

(இ - ள்.) அரசியலடைந்தார்தம்பால் - அரசுத்தன்மையடைந்தவரிடத்தில் —ஐயமேற்றருந்துகின்றோர் - பிச்சையெடுத்துச்சாப்பிடுகிறவர்கள்—வருசெயல் - வருதல்—வரிசையன்று-முறையன்று—மறித்துநீபோதியென்று - திரும்பிப்போய்விடுவாயென்று—அமலனுரைசெய - அல்லம

ன்சொல்ல—அப்பன் - அப்பணனென்போன் —உளம்வெரீஇ - மன நடுங்கி—கடிது - விரைவில்—மீண்டு - திரும்பி —வரைசெயும் - மலைபோன்ற—வயிரத்திண்டோள் - மிக்கவலியமைந்ததோள்களையுடைய—வசவனுயகற்கு - வசவேசுவரருக்கு—சொன்ஞன் - சொல்லினன். எ - று. ()

அல்லமன் புகன்ற மாற்ற மப்பணன் சென்று நின்று, சொல்லலுந் துணுக்கென் றுள்ளஞ் சொற்றளர்ந் துடல்வி யர்த்துப், புல்லவந் தணையுந் தாய்முன் பொருதுதும் பறுத்திட் டோடு, நல் லிளங் கன்றுபோன்முன் ஞன்செலா திருந்தே னென்று.

(இ - ள்.) அல்லமன்புகன்றமாற்றம் - அல்லமதேவர்சொன்ன வசனங்களை—அப்பணன் - அப்பணனென்போன்—சென்று-போய்—நின்று - எதிரினின்று—சொல்லலும் - சொல்லவும் —உள்ளந்துணுக்கென்று-மனந்திடுக்குற்று —சொற்றளர்ந்து - வசனங்கள்சோர்வுற்று —உடல்வியர்த்து - தேகமவேர்த்து—புல்லவந்தணையும்—தழுவும்படியாகவந்தணையப்பட்ட—தாய்முன்-பசுவுக்குமுன்—பொருது - சகிக்காமல் —தும்பறுத்திட்டோடும் - தும்புக்கயிற்றை யறுத்துக்கொண்டோடும் —நல்லிளங்கன்றுபோல் - நல்லவிளமையாகிய கன்றைப்போல —முன் - அல்லமதேவருக்குமுன் —நான்செலாதிருந்தே னென்று - நான்போகாதிருந்தே னென்று. எ - று. (கூஉ)

கரைந்துரு மனமு ளைந்து கவலைகொண் டழுங்க நந்தி
பெருந்தகை மாச்சி தேவன் பெருங்கடற் பிறந்த சாவா
மருந்துதன் னெதிர்கி டைத்து மற்றதை வாரிக் கையா
லருந்துற வலசு வான்போ லாயினை நீயு மென்ருன்.

(இ - ள்.) கரைந்துரும் - கரைந்துருகுகின்ற—மனமுளைந்து - மனம்வருந்தி —கவலைகொண்டு - மிக்ககவலைகொண்டு —அழுங்கநந்தி - வசவண்ணர்விசனமுற—பெருந்தகை - பெருந்தன்மைபொருந்திய—மாச்சிதேவன் - மாச்சிதேவனென்போன்—பெருங்கடற்பிறந்த - பெரியதிருப்பாற்கடலிற்பிறந்த—சாவாமருந்து - தேவாமிர்தம் —தன்னெதிர்கிடைத்தும்-தனக்கெதிரில்கிடைத்தும் —மற்றதை - அந்தவமிர்தத்தை —வாரிக்கையால் - கையினுல்வாரி —அருந்துற - உண்பான்வேண்டி —அலசுவான் போல் - தண்ணீர்விட்டலசுபவனைப்போல—ஆயினைநீயும் - நீயுமானுய்—என்ருன் - என்றுசொல்லினன். எ - று. அமிர்தத்தைப்போல அல்லம

னுமா, அலகுவதுபோல் அவனையிழத்தலுமாதலின் இஃதெடுத்துக்காட்டுவமையணி. (௩௩)

பெருந்தகை மாசசி தேவன் பேசுசொல் விளக்குத் தூண்டும், துரும்பென வுதவச் செம்பொற் றூணெனுந் தோளான் மாழ்கி, யிருந்தவப் பிழையென் மேற்றே யென்றடி யிறைஞ்சி யொய்யென், றருந்தவ ரொடுப் புறப்பட் டல்லம னருகு வந்தான்.

(இ - ள்.) பெருந்தகை-பெருந்தன்மைபொருந்திய—மாச்சிதேவன் - மாச்சிதேவனென்போன்—பேசுசொல் - சொன்னவசனம்—விளக்குத் தூண்டுந்துரும்பென - விளக்கைத் தூண்டுந்துரும்பைப்போல —உதவ - உதவிசெய்ய—செம்பொன் - சிவந்தபொனைஒலாகிய —தூணெனுந்தோளான் - தூணைபோன்றதோளையுடையவசவண்ணர்—மாழ்கியிருந்த - மயங்கியிருந்த —அப்பிழை - அந்தக்குற்றம் —என்மேறறேயென்று - என்னுடையதேயென்றுசொல்லி —அடியிறைஞ்சி - பாதத்தில்வணங்கி —ஒய்யென்று - ஒய்யென்னுமவிரைவோடு—அருந்தவரொடு - அரியதவத்தினரோடுகூடி—புறப்பட்டு - புறம்போந்து—அல்லமனருகுவந்தான் - அல்லமதேவரருகில்வந்தனர். எ - று. ஒய்யெனல் விரைவுக்குறிப்பொலி. ( )

என்குண மறமே யாகி யானதிற் றிரித லில்லே
னின்குண மருளே யென்றா லியதி னிற்றி யெந்தாய்
புன்குண மகவின் றிமை பொறுத்தருள் செய்கை யென்னுந்
தன்குணம் விடுத்தொ ழிக்குந தாய்விய னுலகி லுண்டோ.

(இ - ள்.) என்குணம் - எனதுகுணமானது—மறமேயாகி - பாபமேவடிவமாகி—யான் - நான்—அதில் - அந்தப்பாபகுணத்தினின்றும்—திரிதலில்லேன் - மாறுதிருக்கின்றனன் —நின்குணம் - உனதுகுணம்—அருளேயென்றால் - அருள்மயமேயென்றால்—எந்தாய் - எமதப்பனே—நீயதினிற்றி - நீயதில்மாறுதிருக்கின்றனே—புன்குணம் - அற்பகுணத்தையுடைய —மகவின்றீமை - பிள்ளையின்றீச்செயலை —பொறுத்து - பொறுத்துக்கொண்டு—அருள்செய்கையென்னும் - கிருபைசெய்தலென்னும்—தன்குணம்விடுத்து - தன்குணத்தைஅப்புறப்படுத்தி—ஒழிக்கும் - அத்தீச்செயல்செய்த மகவை ஒழிக்கின்ற—தாய் - தாயானவள்—வியனுலகில் - விரிந்தவுலகின்கண் —உண்டோ - உளதோ. எ - று. இங்கே மறமென்பது இம்மாப்பை. மகவின்றீச்செயலை அனுவாதகவும், தன்னிரக்கத்

தை மகத்தாகவும், கொள்ளுந்தாய்போன்று அடியேனை இரட்சிக்கவேண்டுமென்பது, பிறிதுமொழிதலணி. (கூ௫)

சூத்திரப் பாவை யானச் சூத்திரி நீய ருட்கண்
பார்த்தெனைக் குறைய கற்றிப் பணிசெயக் கோடி யென்று
வாய்த்தநற் குரவன் செந்தா மரையடி மிசைவி ழுந்தா
னேத்திமெய்ப் பத்தி நீத்த மெனப்படும வசவ தேவன்.

(இ - ள்.) யான் - நான் —சூத்திரப்பாவை - சூத்திரப்பிரதமை—நீ - நீயோ—அச்சூத்திரி - அந்தச்சூத்திரதாரி— (ஆதலால்) அருட்கண்பார்த்து - கிருபாநோக்கம்வைத்து —குறையகற்றி - எனதுகுற்றங்களனைத்தையுமொழித்து —பணிசெய - நினதுதொண்டுசெய்ய —எனைக்கோடியென்று - என்னையடிமையாகக் கொள்ளுதியென்று—வாய்த்த - தனக்கெளிதில்வாய்த்த—நற்குரவன் - சற்குருவாகிய வல்லமனது—செந்தாமரை - செந்தாமரைமலர்போன்ற—அடிமிசை - பாதங்களின்மேல் —மெய் - உண்மையாகிய —பத்திநீத்தமெனப்படும் - பத்திக்கடலென்னாத்தக்க—வசவதேவன் - வசவண்ணர்—ஏத்தி - துதித்து—விழுந்தான் - வணங்கினர். எ - று. நீயசைப்பவன் யானசைபவன் எனப்பொருடோன்றச் சூத்திரப்பாவையான் அச்சூத்திரி நீ என்றார். எனவே,எனக்கோர்சுதந்தரம்,இன்றெனக்காட்ட இங்ஙனங் கூறினரெனப் பெறும். (கூ௬)

நிலமகள் பொறுது தள்ளி னிறுததுனா யாவ ரோதை
மலிகடல் புரளு மாயின் மறிப்பவ ருளரோ வெங்க
டலைவநீ முனிவை யாயிற் றடுப்பவ ருலகில் யாண்டு
மிலையிலை யருள்செ யெந்தா யெனச்சென்ன வசவன் றாழ்ந்தான்.

(இ - ள்.) நிலமகள் - பூமிதேவி—பொறுது - பொறுக்கச்சகியாமல்—தள்ளில் - தள்ளிவிட்டால் —நிறுத்துனர் - தடுப்பவர்கள் —யாவர் - எவர்—ஓதைமலி - சத்தமிகுந்த —கடல்புரளுமாயின் - கடல் அணைகடக்குமாயின்—மறுப்பவருளரோ - தடுப்பவர்களுளரோ —எங்கள்தலைவ - எங்களுடையகர்த்தனே—நீ முனிவையாயின் - நீ கோபிப்பையாயின்—தடுப்பவர் - தடுக்கிறவர்கள்—உலகில் - உலகத்தினிடத்தில் —யாண்டுமிலையிலை - எவ்விடத்துமில்லைவேயில்லை —எந்தாய் - எனதுதந்தையே—அருள்செய்யென - இரங்குவாயென்று—சென்னவசவன்தாழ்ந்தான் - சென்னவசவேசன் வணங்கினன். எ - று. அடுக்கு, துணிபு. (கூ௭)

சொற்றிடும் குதலைச் சொல்லிற் சொற்றிறந் தெரிதல் போலிச்
சிற்றிளங் குமர னன்பு செயவடி யிடுமு னோக்கேல்
சற்றுநின் கடைக்கண் வைத்துத் தண்ணளி புரிக வென்று
நற்றவ மாச்சி தேவ னங்குர வனைப்ப ணிந்தான்.

(இ - ள்.) சொற்றிடும் - சிறுவர்பேசுகின்ற —குதலைச்சொல்லில் - மழலைச்சொற்களில்—சொற்றிறந்தெரிதல்போல் - சொல்லினதுதிறத்தைத்தெரிவதுபோல —இ - இந்த—சிற்றிளங்குமரன் - மிக்கவிளையோனாகியசிறுவன்—அன்புசெய - பத்திசெய்யும்படி—அடியிடுமுன் - ஆரம்பிப்பதற்குமுன் —நோக்கேல் - குற்றங்கள்நோக்காதை —சற்று - கொஞ்சம்—நின்கடைக்கண்வைத்து - உனதுகிருபாநோக்கம்வைத்து —தண்ணளிபுரிகவென்று - அநுக்கிரகஞ்செய்வாயென்று —நற்றவம் - நல்லதவத்தினையுடைய —மாச்சிதேவன் - மாச்சிதேவனென்போன் —நங்குரவனை - நமதாசிரியனாகியவல்லமனை—பணிந்தான் - வணங்கினான். எ - று.

உரைமன மெய்யொ ருங்கி யுன்பணி செய்ய வல்லோன்
றரைமிசை யிவன லாது தானொரு வரையுங் காணே
மருள்செய வேண்டு மென்ன வல்லம னடிப ணிந்தான்
கிரிமகள் கொழுநற் கன்பன் கின்னரப் பிரம னம்மா.

(இ - ள்.) உரைமனமெய் - வாக்குமனங்காயம் — ஒருங்கி - ஒருங்குற்று— உன்பணிசெய்யவல்லோன் - உனதுதிருப்பணிசெய்யவல்லவன்—தரைமிசை - பூமியின்மேல்—இவனலாது - இவனையன்றி—ஒருவரையுங்காணேம் - ஒருவரையுங்கண்டிலம்—அருள்செயவேண்டுமென்ன - பொறுத்தருளவேண்டுமென்று —கிரிமகள்-பர்வதராசபுத்திரியினது —கொழுநற்கு - நாயகனாகியபரமசிவனுக்கு —அன்பன் - அன்பனாகிய —கின்னரப்பிரமன் - கின்னரப்பிரமனென்போன்—அல்லமனடிபணிந்தான் - அல்லமரதுதிருவடிகளை வணங்கினான். எ - று. அம்மா, வியப்பிடைச்சொல். கிரி இடவாகுபெயர். தான் சாரியை. (௩௧)

ஏமையெலா மடிமை வேண்டி னிவன்பிழை பொறுத்தி யென்று
வமையுலாம் பனிமென் றோட்சே யரிமதர் மழைக்கட் செவ்வா
யுமைமணா ளனையு வந்த வொண்டவ ரெலாம்ப ணிந்தார்
சமையுளா ருனரு மெங்க டம்பிரான் சாற்ற லுற்றான்.

(இ - ள்.) எமையெலாம் - எங்களையெல்லாம் —அடிமைவேண்டின் -

அடிமைகொள்ளவேண்டின் —இவன்பிழைபொறுத்தியென்று - இவன துபிழையைப்பொறுப்பாயென்று—அமை -மூங்கில்போலும் — உலாம் - திரட்சியமைந்த—பணை - பருத்த—மெல் - மிருதுவாகிய—தோள்-தோள்களையும்—சேயரி - செவ்வரிபடர்ந்த—மதர் - மதர்த்த—மழை - குளிர்ச்சிபொருந்திய—கண் - கண்களையும் —செவ்வாய் - சிவந்தவாயையுமுடைய—உமை - உமையவளது—மணாளனை,யுவந்த-நாயகனைவிரும்பிய—ஒண்டவரெலாம் - ஒள்ளியதவத்தினர்யாவரும் —பணிந்தார் - வணங்கினார்கள்—சமையுளார் - சாந்தகுணமுள்ளதவத்தினர்—உணரும் - அறியத்தக்க —எங்கடம்பிரான் - எங்கள்தம்பிரானாகியவல்லமன் —சாற்றலுற்றான் - சொல்லத்தொடங்கினான். எ - று. எலாம், இடைக்குறை. ()

சொல்லிய சொற்கள் கற்றீர் சொற்றவந் நெறியி னிற்கு
நல்லியல் வில்லை நுமபா னவிற்று மாற்ற மொன்று
புல்லிய செயலொன் றாகப் பொருந்துநர் தம்மி லார்க்கும்
பல்லிய மொடுந டிக்கும் பரதரோ பெரிய ராவார்.

(இ - ள்.) சொல்லிய - இப்போதுபேசிக்கொண்டுவந்த —சொற்கள் கற்றீர் - சொல்லுகளைக்கற்றுக்கொண்டீர்கள் —சொற்றவந்நெறியினிற்கும் - சொன்னவண்ணமந்நெறியினிற்கத்தக்க —நல்லியல் - நல்லொழுக்கம் — இல்லைநுமபால் - உங்களிடத்துத்தினைத்துணையுமில்லை —நவிற்றுமாற்றமொன்று - பேசுஞ்சொல்லொருவகையாகவும் —புல்லிய - அற்பமாகிய—செயலொன்றாக - நடக்கைவேறொன்றாகவும் —பொருந்துநர்தம்மில் - பொருந்தியிருப்பவர்களுக்குள் —ஆர்க்கும் - ஒலிக்கின்ற —பல்லியமொடு - சங்கீதத்தோடு—நடிக்கும் - நடனஞ்செய்கின்ற —பரதரே - கூத்தாடுபவரோ—பெரியராவார் - சிறந்தோராவர். எ - று. எனவே, உங்களிலுங் கூத்தாடிகள்சிறந்தவரெனப் பெற்றாம்.புல்லியசெயலென்றதனால் வஞ்சகநடத்தையெனக்கொண்டாம். ஆகவெனலை ஈரிடத்துமொட்டுக. (சக)

ஆதர விலையேல் வேண்டு மறத்தினிற் பொருளோர் செம்பொற்
பூதர வளவ ளித்தும் பொருளழி வளவே யாகு
மாதர வுளதே னல்கும் பொருளணு வளவென் றாலும்
பூதர மெனவ ளர்ந்து புண்ணியப் பொருள ளிக்கும்.

(இ - ள்.) வேண்டுமறத்தினில்-தான்வேண்டிச்செய்யுமறநெறியில் —ஆதரவிலையேல் - அன்பில்லையாயின் —பொருளோர்செம்பொன் - ஒப்பு

ற்றசெம்பொன்னுகியபொருளை —பூதரவளவளித்தும் - மலையளவுகொடு த்தும் —பொருளணுவளவேயாகும் - அப்பொருளணுவளவினதாகச்சுரு ங்கும் —ஆதரவுளதேல் - அன்புண்டாயின் —நல்கும்பொருள் - அறத்தி ன்வழிச்செலுத்தும்பொருள்—அணுவளவென்றாலும்-அணுவளவினதென ப்படினும் —பூதரமெனவளர்ந்து-மலைபோல்வளர்ந்து —புண்ணியப்பொ ருளளிக்கும் - புண்ணியப்பயனைத்தரும். எ - று." ஆதரவோடளித்தல் புண்ணியப்பொருளளிக்குமெனவே, ஆதரவின்றியளித்தல் பாவப்பொ ருளளிக்குமென்றாயிற்று. புண்ணியம் பொருள்வளர்தல். பாவம் பொ ருள்சுருங்கல். (சஉ).

துறவற மனைய றஞ்சீர் தூய்மைநற் கல்வி நல்லோ
ருறவொடு மகங்க டானம் மொண்டவம் விரதம் பூசை
யறிவிவை யனைத்து மில்லை யாதர வில்லை யாயிற்
பெறுவன் மெய்வ ருத்தம் பெரும்பொரு ளழிவு மாதோ.

(இ - ள்.) துறவறம் - துறவறமும்—மனையறம் - இல்லறமும்—சீர் - கீ ர்த்தியும்—தூய்மை - பரிசுத்தமும்—நற்கல்வி - நல்லகல்வியும்—நல்லோ ருறவொடு - சத்துக்களுறவோடு —மகங்கள் - யாகங்களும் —தானம் - ஈகையும்—ஒண்டவம் - ஒள்ளியதவமும் —விரதம் - விரதமும்—பூசை - சிவபூசையும்—அறிவு - ஞானமுமாகிய — இவையனைத்துமில்லை - இவை யாவுமில்லை—ஆதரவில்லையாயின் - அன்பில்லையாயின்—மெய்வருத்தம் - தேகவருத்தத்தையும —பெரும்பொருளழிவும-மிக்கதிரவியநஷ்டமும்— பெறுவன் - அடைவன். எ - று. மாது - ஒ - அசைகள். அன்பில்லா விடத்து இவையனைத்தும் பயனின்றியமையதுமன்றித் தேகவருத்தமும் மிக்க திரவியநஷ்டமு முண்டாமெனப் பொருள்கொள்க. மனைவியோடு கூடி யியற்றலால் மனையறமெனப்பட்டது. (சங)

ஆதர வுடையான் செய்யு மல்லவு நல்ல வாகு
மாதர விலாதான் செய்யு நல்லவு மல்ல வாகு
மாதர வதனு லாவிக் கருந்துணை யின்ப முத்தி
யாதர வலாது வேறொன் றளித்திடக் கண்ட துண்டோ.

(இ - ள்.) ஆதரவுடையான் - அன்புடையான் —செய்யும் - செய்கின் ற—அல்லவும் - தீயனவும் —நல்லவாகும் - நல்லனவாம் —ஆதரவிலாதா ன் - அன்பில்லாதவன்—செய்யும் - செய்கின்ற—நல்லவும் - நல்லனவும்— அல்லவாகும் - அல்லனவாம் —ஆதரவதனால் - அன்பினால் —ஆவிக்கு -

உயிருக்கு—அருந்துணே-அரிய துணையாவது—இன்பமுத்தி - பேரின்பமா கியமுத்தியாம்—ஆதரவலாது - அன்பல்லாமல் —வேறொன்றளித்திட - வேறொன்றைக்கொடுக்க —கண்டதுண்டோ-பார்த்ததுண்டோ. எ - று. அல்லவும், நல்லவும், குறிப்புவினையாலணையும்பெயர். நல்லவாகும், அல் லவாகும், இரண்டும் குறிப்புப்பன்மைவினைமுற்று. (சச)

ஆதலா லன்பி னுஞ்சொல் லகமகிழ் வினைசெ யாவென்
றோதினு னடியா தீமை யொழித்தருந் தொழிலி னின்றோன்
காதலால் வணங்கி னோர்நின் கருணையா லன்றி யாங்க
ளேதினு னல்ல ராவே மென்றடி தொழுது நின்றார்.

(இ - ள்.) ஆதலால் - ஆகையால்—அன்பினும்-அன்பைக்காட்டிலும்—சொல் - வறுஞ்சொல்லுகள் —அகமகிழ்வினை - உள்ளக்களிப்பை —செயாவென்று - செய்யமாட்டாவென்று —அடியார்தீமை - அடியார்களதுபி றவித்தீமைகளை —ஒழித்தருள் - நாசஞ்செய்யத்தக்க —தொழிலினின் றோன் - தொழிலேயேவிரதமாகவுடையவல்லமன்—ஓதினன் - சொன்ன ன்—காதலால் - அன்பினல் —வணங்கினோர் - வணங்கினவர்கள் —நின்க ருணையாலன்றி - உன்னுடையகிருபையினலல்லாமல் —யாங்கள் - நாங்க ள்—ஏதினல் - யாதினல்—நல்லராவேமென்று - நல்லோர்களாவோமெ ன்று —அடிதொழுதுநின்றார் - பாதங்களை வணங்கிநின்றார்கள். எ - று. அன்பினும் என்பதிலும்மை உயர்வுசிறப்பு. (சரு)

காஞ்சிரங் கனிதின் றுங்கு கடையனேன் பிழைபொ றுத்தாய்
தீஞ்சுவை யமிர்த மன்ன திவ்விய கறியிற் குற்ற
மாஞ்சுவை யறைதல் போலிவ் வன்பனைச் சீறே லென்று
பூஞ்சரண் மிசைவ ணங்கிப் போற்றினன் சித்த ராமன்.

(இ - ள்.) காஞ்சிரங்கனிதின்றுங்கு - எட்டிக்கனிதின்றுற்போல—க டையனேன் - கடைப்பட்டவடியேனது—பிழைபொறுத்தாய் - குற்றம் பொறுத்தனை—தீஞ்சுவை - இனியமதுரமாகிய—அமிர்தமன்ன - அமிர் தம்போன்ற—திவ்வியகறியில் - திவ்வியமாகியபதார்த்தத்தில் —குற்றமா ஞ்சுவை - சுவைக்குற்றம- அறைதல்போல் - சொல்லுதலைப்போல - இவ் வன்பனை - அன்பில்மிக்கவிவ்வசவண்ணனை—சீறேலென்று - கோபியா திருத்தியென்று—பூஞ்சரண்மிசை - அழகியபாதங்களின்மேல்—சித்தரா மன் - சித்தராமனென்போன்—வணங்கிப்போற்றினன் - வணங்கித்துதி த்தனன். எ - று. (சசு)

அடைக்கல மென்னை யாளா யண்ணலே யென்று நந்தி
கடிக்கம லங்கள் வென்ற கான்மிசை மீண்டு மீண்டு தாழ்ந்தான்
விடுத்திடே லென்று சென்ன வசவனும் வீழ்ந்தி றைஞ்சித்
தொடிக்கரந் தொழுதா னன்பா துதித்தனர் சூழ்ந்து கொண்டு.

(இ - ள்) அடைக்கலம் - தஞ்சமாக - அண்ணலே - கர்த்தனே - என்னையாளாயென்று - என்னையடிமைகொள்ளுதியென்று - நந்தி - வசவதேவன் - கடிக்கமலங்கள் - வாசனைபொருந்திய தாமரைமலர்களை - வென்ற - செயித்த - கான்மிசை - திருவடிகளின்மேல் - மீண்டும் - மறுபடியும் - தாழ்ந்தான் - வணங்கினன் - விடுத்திடேலென்று - கைசோரவிடேலென்று - சென்னவசவனும் - சென்னவசவதேவனும் - வீழ்ந்திறைஞ்சி - கீழேவிழுந்துவணங்கி - தொடிக்கரம் - கங்கணமணிந்தகையினால் - தொழுதான் - அஞ்சலிசெய்தனன் - அன்பர் - ஏனையவடியார்கள் - சூழ்ந்துகொண்டு - சூழநின்றுகொண்டு - துதித்தனர் - தோத்திரஞ்செய்தார்கள், எ - று. (௭௭)

அல்லம னெனுமெங் கோமா னருட்கடைக் கண்வைத் தைய
சொல்லுவ னெழுதி யென்று துணைக்கையா லெடுத்த ணைத்து
நல்லருள் புரிந்து நண்ட நாயகன் றிருமடத்து
ளெல்லையி லடியார் சூழ வினிதெழுந் தருளி னானால்.

(இ - ள்.) அல்லமனெனும் - அல்லமனென்கிற - எங்கோமான் - எமதுகர்த்தன் - அருள் - கிருபைபொருந்திய - கடைக்கண்வைத்து - கிருபாநோக்கம்வைத்து - ஐய - ஐயனே - சொல்லுவனெழுதியென்று - சொல்லுகின்றேனெழுந்திருவென்று - துணைக்கையாலெடுத்து - இரண்டுகையினாலெடுத்து - அணைத்து - மார்போடணைத்து - நல்லருள்புரிந்து - நன்றாகக்கிருபைசெய்து - நண்டநாயகன் - வசவண்ணரது - திருமடத்துள் - அழகியமடத்தினுள் - எல்லையிலடியார்சூழ - அளவிறந்தவடியார்கள்சூழும்படி - இனிது - மிக்கபிரியத்தோடு - எழுந்தருளினன் - பிரவேசித்தான், எ - று. ஆல் - அசை. அல்லமனெனுமெங்கோமான் கடைக்கண்வைத்து, எடுத்தணைத்து, அருள்புரிந்து, எழுந்தருளினனெனக் கூட்டிமுடிக்க. ()

வசவண்ணர் - சுதி முற்றிற்று.

கதி - கர - இ - விருத்தம் - எஎக.



பதினைந்தாவது

# மருளசங்கரதேவர்கதி.

வேறு.

**தா**ணுவி னுயர்பிர சாதகுண் டத்திடை
காணரு மருளசங் கரனைக் கண்டருள்
பூணணி யல்லமன் போத நல்கிய
மாணுறு நெறியினை வகுத்துக் கூறுவாம்.

(இ-ள்.) தாணுவின் - மலைபோல—உயர் - உயர்ந்த—பிரசாதகுண்டத்தில் - பிரசாதகுண்டமென்னுமிடத்தில்—காணரு - காண்டற்கரிய—மருளசங்கரனைக்கண்டு - மருளசங்கரனென்பவனைக்கண்டு—அருள் - அருளை—பூண் - பூணாக—அணி - அணிந்த—அல்லமன் - அல்லமதேவன்—போதநல்கிய - ஞானோபதேசஞ்செய்த—மாணுறு - மாட்சிமைபொருந்திய—நெறியினை - முறைமையை—வகுத்துக்கூறுவாம் - தெளிவாகச்சொல்லுதும். எ-று. பிரசாதகுண்டம்; அடியார்களுண்ட மிச்சிலுணவு போடுமிடம். (க)

**மா**தவ ரெண்ணிலர் மருங்கு சூழ்தர
வாதுல ரெதிர்பொரு ளாக வல்லம
நாதனை யறிவறி நந்தி கொண்டுத
னேதமின் மனையிடை யெய்தன் மேயினான்.

(இ-ள்.) மாதவரெண்ணிலர் - அளவில்லாதமாதவத்தினர்—மருங்குசூழ்தர - புடைசூழ்ந்துவர—ஆதுலர் - தரித்தரருக்கு—எதிர் - எதிரிற்கிடைத்த—பொருளாக - புதையல்போல—அல்லமநாதனை - அல்லமதேவனை—அறிவறி நந்தி - ஞானத்தையுணர்ந்த வசவண்ணன்—கொண்டு - அழைத்துக்கொண்டு—தன் - தன்னுடைய—ஏதமில்மனையிடை - பழுதில்லாதவீட்டில்—எய்தன்மேயினான் - போகத்தொடங்கினான். எ-று. அறிவறிதலாவது; அனைத்தையுமறிகின்றவறிவையறிதல். என்னை "பெறு

மவற்றுள் யாமறிவதில்லை, யறிவறிந்தமக்கட்பேறல்லபிற" என்றார் திரு வள்ளுவர். ஏதமிலென்றது; பழிபாவங் காரணமாக வீட்டியதன்றெனற் கென்க. (உ)

அவத்தைகள் பற்பல வகன்று மெய்ப்பர
சிவத்தினை யடைபவர் செய்கை போற்கடை
தவப்பல கடந்துபோய்ச் சாதகுண் டத்தை
யுவப்புட னடைந்தன னொப்பி லல்லமன்.

(இ - ள்.) அவத்தைகள் பற்பலவகன்று - அனந்தபேதமாயுள்ள பற் பல வவத்தைகளையுங்கழன்று—மெய் - உண்மையாகிய —பரசிவத்தினை யடைபவர் - பரமசிவத்தை யிரண்டறக்கலக்க வடைபவரது—செய்கை போல் - செயலைப்போல —கடை - கடைவாயில்முதல் —தவம் - தவம் புரிதற்கியற்றிய --பல - பலவறைகளையும் —கடந்துபோய் - தனித்தனி கண்டு கடந்துபோய் —சாதகுண்டத்தை - சர்தகுண்டமென்னுமிடத் தை—ஒப்பிலல்லமன் - உவமைகடந்தவல்லமதேவன்—உவப்புடனடைந் தனன் - சந்தோஷத்தோடடைந்தான். எ - று. அவத்தைகள் பற்பல வாவன ; சாக்கிரமுதல் மரணமிறுவாக்கிடந்த எழுவகையுள் ஒவ்வொன் றுமெழுவகையாநிற்கும். உதாரணமாகச் சாக்கிராவத்தையை விரித்து ணர்த்துதும். சாக்கிராவத்தையிற்சாக்கிரம்; தனதுண்மைநிலையா நிற் றல். சாக்கிரத்திற்சொப்பனம்; உண்மைநிலைபோற்காணச் சகத்தா கஸ்புரித்தல். சுழுத்தி; தனதுண்மைநிலைமுற்றுங் காணாதுமறைதல். துரி யம்; விடயப்பிரியந் தற்பிரியமாகக்காண்டல். துரியாதீதம்; அன்னதும்மற ந்துதற்பிரிய முண்டெனப்பலவேதுக்களா னேரேயுணர்த்தினு மங்கீகரி யாமை. மூர்ச்சை; அன்னபகுப்புமின்மை. மரணம்; ஆன்மா வில்லவே யில்லை யிருந்தாற்காணுறுவென்பது. ஏனையவு மிங்ஙனமே, அரிதெனின் தக்கோர் பாற்கேட்டுத்தெளிக. (௩)

உயர்பிர சாதகுண் டத்தி னொண்கரை
மயன்மலி பித்தரின் மருள சங்கரன்
பயிலுதல் கண்ணுறீஇப் பரம யோகிதன்
னியலினை யுணர்ந்தன னெம்பி ரானரோ.

(இ - ள்.) உயர் - உயர்வாகிய —பிரசாதகுண்டத்தின் - பிரசாதகு ண்டத்தினது—ஒண்கரை - ஒள்ளியகரையில் —மயன்மலி - மயக்கமேற்

கொண்ட—பித்தரின் - பித்தரைப்போல —மருளசங்கரன் - மருளசங்க ரனென்போன் —பயிலுதல் - சஞ்சரித்தலை —கண்ணுற்றிடு - பார்த்து— பரமயோகிதன்னிலையினையுணர்ந்தனன் - இந்தப்பரமயோகியினிலையை யுணர்ந்தான் —எம்பிரான் - அல்லமதேவன். எ - று. கண்ணுற்றிடு சொல்லளபெடை. உயரொன்றடைகொடுத்தது மகான்களுண்ட மிச்சி லுணவைப்பற்றியென்க. (௪)

கண்டரு ளமலனைக் கண்டு தானெதிர்
வெண்டிரை யமுதினை மிடியன் மேவியே
யுண்டன னெனமகிழ்ந் தோடி வீழ்ந்தனன்
வண்டிரு வடிமிசை மருள சங்கரன்.

(இ - ள்.) கண்டருள் - தன்னைக்கண்ட —அமலனைக்கண்டு - அல்லம னைக்கண்டு—மிடியன் - வறியோன் —தான் - தான்—எதிர் - தனக்கெதி ரில்கிடைத்த —வெண்டிரையமுதினை - திருப்பாற்கடலிலுதித்தவமிர்தத் தை—மேவி - எடுத்து —உண்டனனென - உண்டான்போல —மருள சங்கரன் - மருளசங்கரனென்போன்—மகிழ்ந்தோடி - சந்தோஷத்துட னிவிரைந்தோடி—வள் - வளப்பம்பொருந்திய —திரு - அழகிய—அடிமி சை - பாதங்களின்மேல்—வீழ்ந்தனன் - விழுந்தான். எ - று. மருள சங்கரன் அமலனைக்கண்டு மகிழ்ந்து ஓடி வீழ்ந்தனனென முடிக்க. வெண்டிரை அடையடுத்த சினையாகுபெயர். (௫)

வணங்கிய வறவனை வந்தெடுத்துமெய்
யணைந்தெழு முவகையோ டருள்செய் தல்லம
னிணங்குற வருணிலை யிராமற் பார்த்தவன்
குணங்களை வியந்திது கூறன் மேயினான்.

(இ - ள்.) வணங்கியவறவனை-தனதுதிருவடியில்விழுந்த மருளசங்கர னை—வந்தெடுத்து - வந்துகையினாலெடுத்து—மெய்யணைந்து - தானவன் மெய்யோடணைந்து—எழுமுவகையோடு - தனக்குள்ளெழுந்த சந்தோஷ த்தோடு—அருள்செய்து - உண்மையையனுக்கிரகித்து—அல்லமனிணங் குற - அவரோடல்லமன்கூடியிருக்க —இராமன் - சித்தராமன் —அரு ணிலைபார்த்து - அனுக்கிரகித்த நிலையைப்பார்த்து —அவன் ? அந்தமருள சங்கரனது—குணங்களைவியந்து - குணங்களைக்கண்டதிசயித்து—இதுகூ றன்மேயினான் - இதனைச்சொல்லத்தொடங்கினான். எ - று. (௬)

குண்டமே வுறுபிர சாதங் கொள்ளைகொண்
டுண்டுவாழ் மாதவ னுண்மைத் தன்மையைத்
தண்டநா யகன்முதற் சரணர் யாவரும்
கண்டிலர் யாரினிக் காண வல்லவர்.

(இ - ள்.) குண்டமேவுறு - குண்டத்திற்பொருந்திய—பிரசாதம் - பிரசாதத்தை—கொள்ளைகொண்டு - கொள்ளைகொள்ளையாகவேற்றுக்கொண்டு—உண்டுவாழ் - உண்டுவாழ்கின்ற—மாதவன்-மருளசங்கரதேவரது—உண்மைத்தன்மையை - உண்மையினிலையை—தண்டநாயகன்முதல் - தண்டநாயகன்முதலிய—சரணர்யாவரும் - அடியார்கள்யாவரும்—கண்டிலர் - தெரிந்திலர்—இனி - இனிமேல்—காணவல்லவர்யார் - காணவல்லவர்யாவருளர். எ - று. (எ)

சரிதையொண் கிரியைகா றடுக்கும யோகிவை
புரிபவர் தமமையப புரியுஞ் செயகையாற்
றெரிதர லாகுமோர் செயலு மின்றிவா
ழரியநன் ஞானியை யறிய லாகுமோ.

(இ - ள்.) சரிதை - சரியையும்—ஒண்கிரியை - ஒள்ளியகிரியையும்—கால்தடுக்கும் - பிராணபந்தனஞ்செய்யும்—யோகு - யோகமுமாகிய—இவை - இவற்றை—புரிபவர்தம்மை - செய்பவர்களை—அப்புரியுஞ்செய்கையால் - அங்ஙனமியற்றுஞ் செய்கையால்—தெரிதரலாகும் - அறியக்கூடும்—ஓர்செயலுமின்றிவாழ் - ஓர்செய்கையுமின்றி வாழப்பட்ட—அரியநன்ஞானியை - அருமையாகிய நல்ல ஞானவானை—அறியலாகுமோ - அறியக்கூடுமோ. எ - று. உலகினர் போல்வாழினும சகச சமாதியினிற்றலின், ஓர்செயலுமின்றிவாழ் அரிய நன்ஞானியை யறியலாகுமோ வென்றார். (அ)

நலமுறு மோர்சிவ ஞானி யில்லில்வாழ்
நிலையற மாகினு நீத்து நிற்குமோர்
தலையற மாகினுந தரித்து ஞாலமே
விலைமறை காயென விருக்கு மென்பவே.

(இ - ள்.) நலமுறும் - நன்மைமிகுந்த—ஓர்சிவஞானி - ஒப்பற்றசிவஞானியென்பவன்—இல்லில்வாழ் - கிரகத்தில்வாழ்கின்ற—நிலையறமாகி

னும் - நிலையானகிரகஸ்தனுயினும் —நீத்துநிற்கும் - நெஞ்சிற்பற்றற்றுநிற்பன்—ஓர் - ஒப்பற்ற—தலையறமாகினும் -•துறவறத்தானுயினும் —ஞாலமேல்தரித்து - பூமியின்மேலிருந்து —இலைமறைகாயென - இலையால் மறைவுற்ற காயைப்போல —இருக்கும் - இருப்பன் —என்ப - என்றறிஞர் கூறுவர். எ - று. ஏ - அசை. ஞானி மிக்க பந்தமுடையனுயினும் சிந்தை சிவப்பிரகாசமா விளங்கலின் நீத்துநிற்குமெனவும், தலையறமாதல் வருணுசிரமங்கடந்து நிற்றலே. இந்நிலையினர் இனையரெனக் காணப்படாராதலின் இலைமறை காயென விருக்குமெனவுங் கூறினர். என்பவென்றது யாம் கூறியதன்றெனக்குறிக்க நின்றதென்க. (௬)

வல்லனென் றிருப்பினு மிருக்கும் வன்மையொன்
றில்லனென் றிருப்பினு மிருக்கு மெள்ளுறப்
புல்லனென் றிருப்பினு மிருக்கும் புண்ணிய
நல்லனென் றிருப்பினு மிருக்கு ஞானியே.

(இ - ள்.) வல்லனென்றிருப்பினும் - பண்டிதனெனப்பெயர்பெற்றிருப்பினும்—இருக்கும் - இருப்பன்—வன்மையொன்று-ஓர்வல்லமையும்—இல்லனென்றிருப்பினும் - இல்லாதவனென்று வழங்கப்பட்டிருப்பினும்—இருக்கும் - இருப்பன்—எள்ளுற - யாவருமிகழ —புல்லனென்றிருப்பினும்-அறபனென்றுசொல்லப்பட்டிருப்பினும்— இருக்கும்-இருப்பன் —புண்ணியம் - புண்ணியகாரியங்களில் —நல்லனென்றிருப்பினும் - நற்குணமுடையோனெனக்கூறப்பட்டிருப்பினும் —இருக்கும் - இருப்பன்—ஞானி -ஞானவான். எ - று. ஏ - அசை. ஞானியென்பது சடைநிலைத்திபமாகலால் ஏனையமூன்றோடுமொட்டுக. "பல்லோர்படர்க்கைமுன்னிலைதன்மையி" லென்னும்விதியால் இருக்குமென்னுநான்கு வினைமுற்றையும் உயர்திணை யாண்பாலாக்குக. (௪௦)

அறிவறி ஞானியா லன்றி வன்பவ
மறிவுறு கருமியான் மாய்வு றுதுகா
ணெறிகதி ரிரவிவந் தெழுந்தி டாவிடிற்
செறிபிரு ளகலுமோ சிதத ராமனே.

(இ - ள்.) அறிவறி - எவற்றையுமறியுமறிவையறிகின்ற —ஞானியாலன்றி - ஞானியாலல்லாமல்—மறிவுறு - அறிவறிதற்குடன்படாத —கருமியால் - கருமியினுல்—வன்பவம் - கொடியசென்மம்—மாய்வுறுது - நசியா

து—எறிகதிர் - கிரணங்களை வீசுகின்ற—இரவிவந்தெழுந்திடாவிடில் - சூரியனுதயமாகாவிடின்—சித்தராமனே - சித்தராமனே—செறியிருளகலுமோ - மிக்கவிருணீங்குமோ. எ - று. ஞானியறிவறிதலும், கருமியதனை மறுத்தலு முடையாராதலின், அறிவறிஞானி மறிவுறுகருமி என்றூர். கற்பனைகட்கிட மறிவாதலால் அதனைக்காண்போன் ஞானியும், காணுதோன்கருமியுமாதல்பற்றி வன்பவம் ஞானியால் மாய்வுறும் கருமியால்மாய்வுறுதெனப்பட்டது. அறிவானது ; ஞானிக்குச்சூரியோதயமும், கருமிக்கு மிக்கவந்தகாரமுமா நிற்றலி னிங்ஙன முவமைகூறினர். ஞானம் கன்மமென்பவற்றுள் அறிவேயணுவுக்கணுவாயும், மகத்துக்கு மகத்தாயுநிற்பதெனக்காண்போர் அயல்தாளுவரா ? காணுதோராவரா ? காண்போரெனின், அறிவேயனைத்துமாகவிளங்கா திருக்கவேண்டும். அங்ஙனமின்றூதலால் அதுபொருந்தாதென்க. (௧௧)

சங்கர முனிநிலை தனைக்கண் டாய்கொலென்
றெங்குரு பரன்சொல விராமன் கைதொழு
திங்கிவன் மருளரி லிருந்த தன்மையென்
னங்கண வறைகென வறைதன் மேயினன்.

(இ - ள்.) சங்கரமுனி - மருளசங்கரமுனியினது —நிலைதனை - உண்மைநிலையை—கண்டாய்கொலென்று - கண்டனையாவென்று—எங்குருபரன்சொல - எமதுகுரு மூர்த்தமாகிய வல்லமதேவன்சொல்ல—இராமன் கைதொழுது - அதற்கிராம னஞ்சலியத்தனாய்—இங்கிவன் - இங்ஙனமாகச் சிறந்துநின்றவிவன்—மருளரில் - பித்தரைப்போல —இருந்ததன்மையென் - இருந்தவிதமென்ன—அங்கண - அழகியகருணையுடையவனே—அறைகென - இதனைத்தெரிவிக்க வேண்டுமெனக் கேட்க —அறைதன் மேயினன் - அல்லமன்சொல்லத்தொடங்கினன். எ - று. அருள், பிறவுயிர்களின்மேல் கண்சென்றவழி அக்கண்ணின்வழி புலப்படுவ தாதலால் அங்கண என விளித்தனன். சொல, கண, இவை யிடைக்குறை. (௧௨)

வேறு.

தொழிலான் முயன்று நுகர்வமெனிற் றுயரொன் றுயிர்க்கு விளையுமென், வொழியா வமல சரமூர்த்தி யுண்ட மிச்சினுகர்வமெனிற், பழியா துமிலை யகன்றுபோம் பவமு மென்னப் பிரசாதக், குழியா னதனை யகலாமற் கொண்டிங் கிருந்தான் குணமிக்கான்.

(இ - ள்.) தொழிலால் - பொருளீட்டற்கியைந்த தொழில்காரணமாக—முயன்று - முயற்சிசெய்து—நுகர்துமெனின் - புசிப்போமென்றால்—துயரொன்று - துன்பமொன்றே —உயிர்க்குவிளையுமென - உயிர்கட்குண்டாகுமென்று—ஒழியா - தமதுகிர்தகிர்த்தியத்தினின்றகலாத—அமலம் - நின்மலமான—சரமூர்த்தி - சரிக்கின்றமூர்த்திகளாகியசத்துக்கள்—உண்டமிச்சில் - உண்டமீதியை—நுகர்வமெனில் - உண்பமாயின்—பழியாதுமில்லை - பழிபாவம்யாதுமில்லை—பவமுமகன்றுபோம்-சென்மமுமொழிந்துபோகும்—என்ன - என்று —பிரசாதக்குழியான் - பிரசாதக்குழியிலுனன்—அதனையகலாமல் - அக்குழியைவிட்டு நீங்காமல்—கொண்டு - இதுவே தக்கதெனக்கொண்டு —குணமிக்கான் - குணசிரேஷ்டனாகிய இவன் —இங்கிருந்தான் - இங்கிருந்தனன். எ - று. தன்னையுறியாது பழிபாவ மெங்ஙனமேனும் வருமென்றிருத்தலின், துயரொன்றுயிர்க்கு விளையுமெனப்பட்டது. அடியார்களுண்ட மிச்சிலாதலால் சரமூர்த்தியெனலைப் பன்மையாக்கினும். பரமசிவனுக்கு நைவேத்திய நீங்கலாக வேனையவைகளெனினுமமையும். (௧௩)

பந்த மகன்ற சிவபத்தர் பாதம விளக்கும புனற்குழியில்
வந்து பிறந்து மூழ்கியதில் வைகும் புழுவின் பெரும்பேறு
முந்து கங்கை முதலவா முற்றும் படிந்து தீவினைகள
சிந்து மந்த ணுளருமே சேரா ரொன்று மறைசாற்றும்.

(இ - ள்.) பந்தமகன்றசிவபத்தர் - பந்தமினையதெனக்கண்டகன்றசிவபத்தரது—பாதம்விளக்கும் - பாதங்களைக்கழுவும் —புனற்குழியில் - சலம்நிற்குங்குழியில்—வந்துபிறந்து - வந்துசெனித்து —அதில்மூழ்கிவைகும் - அதில்தானேமுழுகிவாசஞ்செய்யும் —புழுவின்பெரும்பேறு - புழுவினதுபெரிதாகியபயனை —முந்து - எவற்றினுமேலாய —கங்கைமுதலவாமுற்றும் - கங்கைமுதலியதீர்த்தங்களனைத்திலும் —படிந்து - மூழ்கி—தீவினைகள்சிந்தும் - தீவினைகளைக்கெடுக்கின்ற —அந்தணுளருமே - பிராமணர்களும்—சேராரென்று - அடையார்களென்று—மறைசாற்றும் - வேதங்கள்முறையிடும். எ - று. அந்தணுளரும், உயர்வுசிறப்பும்மை. ஏ-பிரிநிலை. (௧௪).

தாய்க்கு வழுவின் மகளிர்க்குத தந்தை தனக்குப் பசுவிற்குச்
சேய்க்கு மறையோர் தமக்கிடர்செய் தீர்வில் கொடியு பாதகமும்



போக்கு மிமைப்பிற் கரணத்தைப் புனித மாக்கிச் சிவமாக
ஆக்கு மரன்றன் பிரசாத மாயி னதற்கு நிகருண்டோ.

(இ - ள்.) தாய்க்கு - தாயாருக்கும் —வழுவின்மகளிர்க்கு - குற்றமற்றபெண்டிர்களுக்கும்—தந்தைதனக்கு - தகப்பனுக்கும்—பசுவிற்கு - பசுவுக்கும்—சேய்க்கு - சிசுவுக்கும்—மறையோர்தமக்கு - பிராமணர்களுக்கும்—இடர்செய் - துன்பமேசெய்கின்ற —தீர்வில் - முடிவில்லாத —கொடியபாதகமும்போக்கும் - கொடியபாதகத்தையுநீக்கும் —இமைப்பில் - இமையளவில்—கரணத்தைப்புனிதமாக்கி - அந்தக்கரணசுத்திசெய்து—சிவமாகவாக்கும் - சிவசொருபமாகவு மாக்கிவிடும் —அரன்றன்பிரசாதமாயின் - பரமசிவத்துக்கிட்டநைவேத்தியமாயின் —அதற்குநிகருண்டோ - அதற்குச்சமானமுண்டா. எ - று. தாய்முதலியோர்க்கு அஞ்சாதுசெய்யுங் கொடியபாதகருண்பது அரன்றன்பிரசாதமாயின், அப்பாதகங்களொருங்கேயகற்றி யாதக்கரணசுத்திசெய்து சிவமாகவுமாக்கும். எனவே, பிரசாதருண்டமகிமைதோன்றக் கூறியதாகப்பெறும். வழுவிலென்பதை இடைநிலைத்தீபமாக்கி யனைத்திறகுமொட்டுக. உம்மைகள் தொக்கன. மூர்த்திமுதலியவற்றில் நம்பிக்கையே திரிகரணசுத்திதருமாறு போன்று, இதிலும் வைத்தால் தராதோ, தராதெனின், குறிகுணமற்ற பரத்தைக் குறிகுண மாகப்பாவிதது மதத்தர்பயனுறுவதென்னை? (௧௫)

பசிக்கு மருநது மாய்வீடு பயக்கும் வண்மை சேர்நதுபவம
ஒசிக்கு மரன்றன் பிரசாத வூதி யந்தா னுணர்நதிங்கு
வசிக்குந் தகைமை சஙகரற்கே வருவ தன்றிப் பசிக்குணவு
புசிக்கு மனிதர் தமக்கென்று மபொருந்தா தென்று னெம்பிரான்.

(இ - ள்.) அரன்றன் - பரமசிவனது—பிரசாதவூதியந்தான் - பிரசாதத்தாலெய்து மிலாபமாவது—பசிக்குமருந்துமாய் - பசிக்குமருந்தாயிருப்பதுமன்றி—வீடுபயக்கும் - முத்தியையுந்தரும்—வண்மைசேர்ந்து - சகலவளப்பமுமுண்டாய்—பவமொசிக்கும - செனமநாசஞ்செய்யும் — உணர்ந்து - இங்ஙனமாமென்றுணர்ந்து —இங்குவசிக்குந்தகைமை - இங்கேவாசஞ்செய்யுந்தன்மையாம்—சஙகரற்கேவருவதன்றி - இப்பயனுறுவது பரமசிவத்தின்காரணமாகவேயன்றி—பசிக்குணவுபுசிக்குமனிதர்தமக்கு - பசிநிமித்தஞ்சாப்பிடுகின்றமனிதர்களுக்கு—என்றும்பொருந்தாதென்று - எப்போது மமையாதென்றனன் —எம்பிரான் - அல்லமதேவன்

எ - று. பசிக்குமருந்துமாய் என்பதிலும்மை, எதிரதுதழீஇயவெச்ச வும்மை. வீடென்பதிலும்மை எஞ்சியது. சங்கரற்கேயென்பதிலேகார ந்தேற்றம். (௧௬)

நின்னை யறிவன் சங்கரனே நீயே யவனை யறிகுவாய்
பின்னை யுலகில் யாரறிவார் பேசிற் பாமபே பாமபின்கா
றன்னை யறியு மெனவமலன் றாட்டா மரையின் கீழ்ப்பணிந்தா
னென்னை யடிமை யாவுடைய விராம னென்று மிணையில்லான்.

(இ - ள்.) சங்கரனே - பரமசிவமே —நின்னையறிவன் - உன்னையவ னேயறிவன்—நீயேயவனையறிகுவாய் - அவனைநீயேயறிவாயன்றி—பின் னை - பின்னர்—உலகில் - உலகின்கண்—யாரறிவார் - யாவர்தானறியவ ல்லவர்—பேசில் - சொல்லுமிடத்தில் —பாம்பின் கால்தன்னை - பாம்பின் காலை—பாம்பேயறியுமென - பாம்பேயறியுமென்றுசொல்லி—அமலன் அல்லமதேவரது—தாட்டாமரையின்கீழ் - பாததாமரையின்மேல்—என் னையடிமையாவுடைய - என்னையடிமையாக ஆட்கொண்ட —இராமனெ ன்னும் - சித்தராமனென்கின்ற—இணையில்லான் - ஒப்பில்லாதவன்—ப ணிந்தான் - வணங்கினான். எ - று. உன்னையவனும, அவனைநீயும், வி சாரியா தறிந்தமையால் பாம்பின்காலுக் குவமைகூறினார். தாட்டாமரை உருவகம். (௧௭)

அம்பொன் வைப்பின் மீதிருந்து மறியா தல்லற் படுவான்போ
னம்பன் மருள சங்கரனை நானே யறியா திருந்தழிந்தே
னிம்பர் மருவி நிரஞ்சனநீ யெனக்குக் காட்டித் தந்தனையென்
றும்பா பரவு மல்லமனை யுவந்து பணிந்தா னருணந்தி.

(இ - ள்.) அம் - அழகிய —பொன்வைப்பின்மீதிருந்தும் - பொன்பு தையலின்மேலிருந்தும —அறியாது - சற்றுந்தெரியாமல் —அல்லற்படு வான்போல்-வறுமையாலிடுக்குறுவான்போல்—நம்பன் - கர்த்தனாகிய— மருளசங்கரனை - மருளசங்கரதேவனை—நானே - யானே—அறியாதிருந் து - இதுகாறுமறியாமலிருந்து —அழிந்தேன் - கெட்டேன் —இமபர் மருவி - இவ்விடத்துவந்து —நிரஞ்சன - களங்கரகிதமானவனே —நீ யெனக்குக்காட்டித்தந்தனையென்று - நீயெனக்குக்காட்டிக் கொடுத்தா யென்று—அருணந்தி-கிருபைபொருந்தியவசவண்ணதேவர் —உம்பர்பர வுமல்லமனை - தேவர்கள்வணங்கத்தக்கவல்லமனை—உவந்துபணிந்தான்-

சந்தோஷித்துவணங்கினர். எ - று. யானிதுகாறுமிவனையறிந்தும், இவன்மகிமை தெரிந்திலனெனக்காட்ட இவ்வுவமை கூறினானென்க. (௧அ)

இணங்கு மிக்க காமிதனக் கின்ப மூடல் சரலிங்கம், பிணங்கன் முத்தி காமிக்குப் பேரின் பென்ப துணர்த்தற்குக், குணங்கண் மிக்காய் நினைச்சினந்தாங் குறையொன் றுளதோ நினக்கரவின், பணங்கொ ணிலத்திற் பரமசிவ பத்திக் குவானீ யென்றக்கால்.

(இ - ள்.) இணங்கு - இயைந்த—மிக்ககாமிதனக்கு - மிகுந்தகாமியத்தவத்தோனுக்கு—இன்பம் - இன்பமானது—ஊடல் (பிரியநாயகி) ஊடுதலாம் —சரலிங்கம் - சரலிங்கமாகிய அடியார்களுக்கு —பிணங்கல் - (ஆசிரியர்) சினங்கொண்டுகெடிதலின்பமாம் —முத்திகாமிக்கு - முந்தநிட்காமியதவத்தோனுக்கு —பேரின்பென்பது - பேரின்பமெனவுஞ்சத்துக்கள்சொல்வதை—உணர்த்தற்கு - தெரிவித்தற்கு —குணங்கண்மிக்காய்- சிறந்தகுணங்களையுடையோனே —நினைச்சினந்தாம் - உன்னைக்கோபித்தனம் —அரவின்பணம் - பாம்பின்படத்தை —கொள் - பணியாகக்கொண்ட—பரமசிவம - பரமசிவத்துக்குச்செய்யும்—பத்திக்கு-அன்பிற்கு—நிலத்தில் - பூமியில்—வானீயென்றக்கால் - நீயேமேகமென்னுமிடத்து—நினக்கு - உனக்கு —குறையொன்றுளதோ - யாதோர்குறையுளதோ. எ - று. (௧௯)

இங்கு மருள சங்கரன்போ லெண்ணி லார்நின் மனைவாய்தல் கங்குல் பகலு மகலாமற் காப்ப ரொன்னி னின்முன்றில் பங்க வினையின் வலிகடந்த பலருந் தாஞ்செய் தவப்பயனால் தங்கு கயிலை மலையன்றோ தணட நாத வென்றமலன்.

(இ - ள்.) இங்கு - இவ்விடத்தில்—மருளசங்கரன்போல் - மருளசங்கரனைப்போல —எண்ணிலார் - அளவிறந்தவர்கள் —நின்மனைவாய்தல்- உனது வீட்டின்கடைவாயதில் —கங்குல்பகலும் - இரவும்பகலும்—அகலாமற்காப்பரொன்னல் - நீங்காமற்காத்திருப்பரொன்றால் —நின்முன்றில்- உனதுவாயற்படி—பங்கம் - குற்றம்பொருந்திய—வினையின்வலிகடந்த - இருவினையின்பலங்கடந்த—பலரும் - பலபேரும் —தாஞ்செய் தவப்பயனால் - தாங்கள்செய்த தவப்பிரயோசனத்தினால்—தங்கு - தக்கபடிதங்கிய—கயிலைமலையன்றோ - கைலாயமலையல்லவா—அமலன் - அல்லமன்—

தண்டநாதவென்று - வசவண்ணனே யென்றுசொல்லி எ - று. நின் முன்றில், கயிலைமலையன்றேயெனக் கூட்டிமுடிக்க. தவப்பயனுலெனப துகொண்டு தக்கபடி தங்குமென்றும். இங்கே வலியென்றது ; தன்பய னை செய்தோன் அநுபவிக்கும்படி உட்படுக்கும் திறத்தை. அங்ஙனமா ய வலிகடந்தோரேனும் நிலைக ளவசரபேதமிருத்தலின் தாஞ்செய் தவ ப்பயனுலென்றார். (உ௦)

வெம்மை யெதன்க ணிகழ்ந்திடினும் வெந்தீக் குணமென்
பதுபோல, மும்மை யுலகின் யாண்டேனு முளைக்கிற் பத்தி
யதைநினதென், றிம்மை யுலக மியம்புமெனி லெங்கள் வசவ
நின்பெருமை, கொம்மை யிளமென் முலைமடந்தை கூறனன்றி
யாரறிவார்.

(இ - ள்.) வெம்மை - வெப்பம்—எதன்க ணிகழ்ந்திடினும் - யாதிடத்து ண்டாயினும் —வெந்தீக்குணமென்பதுபோல - கொடிய அக்கினியின் கு ணமென்று சொல்வதுபோல —மும்மையுலகில் - சுவர்க்காதி மூன்றுலக த்தில்.—யாண்டேனும் - எவ்விடத்தேனும் —பத்திமுளைக்கில் - சிவபத்தி செனிக்கில் —அதை - அந்தப்பத்தியை—இம்மை - இங்கு—உலகம் - உ யர்ந்தோர் —நினதென்றியம்புமெனில் - உன்னுடையதென்று சொல்லு வாராயின்—எங்கள்வசவ - எமதுபிரியமுள்ள வசவதேவனே—நின்பெ ருமை - உனதுமகிமையை—கொம்மை - விருத்தமாகிய—இள - இளமை தங்கிய—மெல் - மிருதுவாகிய —முலை - தனங்களையுடைய —மடந்தை - உமையவளை —கூறன் - அர்த்தபாகத்தில்வைத்த பரமசிவன்—அன்றி - அல்லாமல்—யாரறிவார் - யாவர்தானறிய வல்லவர். எ - று. கூறனெ ன்றதனுல் மடந்தையெனலை உமையவளென்றும. (உக)

பத்திக் கடலே குணக்குன்றே பாசப் பகையே யெம்முறவே
முத்திக் கரசே சிவானந்த முதலே ஞான மணிவிளக்கே
சித்திப் பொருளே யருணந்தி தேவே நின்னைத் தொழுமடியார்
புத்திக் கமுதே யாவர் நினைப் போல்வா ரவரை யறியேமால்.

(இ - ள்.) பத்திக்கடலே - பத்திக்குக் கடல்போன்றவனே —குணக் குன்றே - நற்குணங்களின்மலைபோன்றவனே—பாசப்பகையே - பாசங் கட்குப் பகைபோல்பவனே—எம்முறவே - எமதுறவுபோல்பவனே—மு த்திக்கரசே - முத்திக்கரசு போல்பவனே—சிவானந்தமுதலே - சிவான

ந்தத்துக்கு முதற்காரணம்போல்பவனே—மணி - அழகிய—ஞானவிளக்கே - ஞானதீபம்போல்பவனே —சித்திப்பொருளே - அஷ்டமாசித்தியின் பொருள்போல்பவனே—அருள் - கிருபைபொருந்திய—நந்திதேவே-நந்திதேவனே —நின்னைத்தொழுமடியார் - உன்னைவணங்கு மடியார்களது—புத்திக்கமுதே - புத்திக்கமுதம் போல்பவனே—யாவர் - எவர்—நினைப்போல்வார் - உன்னையொத்தவர்—அவரையறியேம் - அவரை யாமறிகிலம். எ - று. ஆல் - அசை. நினையென்பது, இடைக்குறை கடல், குன்று, பகை, உறவு, அரசு, முதல், விளக்கு, பொருள், அமுது இவை யுருவகப்பொருள். (உஉ)

என்று கூற வெமையுடையா னெனக்குப் புகன்ற நலமெல்லாஞ்
சென்ற நாளி லிலைநினது செந்தா மரைத்தா டொழப்பெற்ற
இன்று தொடங்கி யுளவாமென் றெந்தை நந்தி வணங்கியெழ
நின்ற வமல சிவசரணர் நெஞ்ச முவகை பூத்தனரால்.

(இ - ள்.) என்றுகூற - என்றுசொல்ல —எமையுடையான் - நம்மையடிமையாக வுடைய வல்லமதேவன்—எனக்குப்புகன்றநலமெல்லாம் - எனக்கிப்போ தருளியநன்மைகளனைத்தும்—சென்றநாளிலிலை - நின்னைக்காணுது கழிந்தநாளிலில்லை—நினது -உனது—செந்தாமரைத்தாள் - செந்தாமரை மலர்போன்ற பாதங்களை —தொழப்பெற்ற இன்றுதொடங்கி - வணங்கக்கிடைத்த இன்றுமுதலாக—உளவாமென்று - உண்டாயினவென்று—எந்தைநந்தி - எந்தந்தையாகிய வசவண்ணர் —வணங்கியெழ - வணங்கியெழுந்திருக்க —நின்ற - அங்கேநின்ற —அமல - பரிசுத்தமாகிய—சிவசரணர் - சிவனடியார்கள்—நெஞ்சம - மனத்தில் —உவகைபூத்தனர் - சந்தோஷித்தார்கள். எ - று. ஆல் - அசை. எமையுடையானென்றுகூற நந்திவணங்கியெழ சிவசரணரு வகைபூத்தனரெனக் கூட்டி முடிக்க. அந்நலமெல்லாமுளவாமெனப்பன்மை கொண்டு முடிந்தன. ()

அருளான் மருள சங்கர னுக் கமரர் தாமு மறிவரிய
பொருளா கியபே ரின்பவநு பூதி விளக்க மருள்செய்தா
னுமையா னினைவா லருஞேக்கா லுலக ருணர்வைப் பிணித்தமல
இருளா னதனை யறமாற்ற வெழுந்த ஞான சூரியனே.

(இ - ள்.) அருளால் - கிருபையினுல் —மருளசங்கரனுக்கு - மருளசங்கரதேவனுக்கு—அமரர்தாமு மறிவரிய-தேவர்களுமெட்டியறிதற்கரிய—

பொருளாகிய - மெய்ப்பொருளாகிய —பேரின்பம் - பேரின்பமெனப்பு
டும் —அநுபூதிவிளக்கம் - சுவாநுபூதிவிளக்கத்தை —அருள்செய்தான் -
அநுக்கிரகித்தான்— (அவனுனெனில்) உரையால் - வார்த்தையாலும் —நி
னைவால் - நினைவினுலும் —அருணேக்கால் - கிருபாநோக்கத்தினுலும்—
உலகருணர்வை - உலகத்திலுள்ளமனிதர்களறிவை—பிணித்து - கட்டி—
இருளானதனை - அஞ்ஞானந்த காரமாயிருப்பதை—அமலம் - நிர்மலமா
கும்படி—அறமாற்ற - முழுதுந்தொலைக்க—எழுந்த - எழுந்தருளிவந்த—
ஞானசூரியன் - ஞானசூரியனுகிய வல்லமதேவன். எ - று. ஞானசூரிய
ன் மருளசங்கரனுக்குப் பேரின்பவநுபூதிவிளக்கம் அருள்செய்தானெனக்
கூட்டிமுடிக்க. அமரர்நாமு மறிவரியபொருளாவது ; பேதாபேதமாகிய
கற்பனைகடந்ததை. உலகருணர்வைப் பிணித்தலாவது ; பரிபாகிகளதுண
ர்வைக் கண்டுபிணித்தலை. உலகரைப்பிணித்தென்னுது உலகருணர்வையெ
ன்றதனுல் பரிபாகிகளையெனக்கொண்டாம். கற்பனைகடந்ததாவது ;
மெய்யுணர்வை ; பேரின்பம், மெய்யுணர்வையன்றிவேறின்மையின் அறி
வரியபொருள் பேரின்பமென்றது, அறிவரியபொருளாகிய பேரின்ப
மென்றார். உரையாற்பிணித்தல் ; செகத்தோற்றவிரிவிற்கும், அதனைய
றியும் ஞெப்திஸ்புரிப்பின் சங்கோச விகாசத்திற்கும், இடம்யாதெனக்கே
ட்டலை. நினைவாறபிணித்தல் ; திரிபுத்துக்கும், திருக்குவிற்கும், எல்லவ
ையறையீதெனக் கணடுசொல்லுதியெனலை. அருணேக்காற்பிணித்தல்;
பிறவிக்குருடனுக்குப்பூதசூரியனை விளக்கிவைத்தாற்போலப் பருவநோ
க்கி ஞானசூரியனை விளக்கிவைத்தலை யென்க. (உச)

மருளசங்கரதேவர்கதி - முற்றிற்று.

ஆக கதி - கரு - இ - விருத்தம் - எகூரு.



பதினெட்டாவது

# இட்டலிங்ககதி

வேறு.

சிட்ட னல்லம தேவ னருளூறீஇ
நட்ட நண்பொடு நந்தி யுணர்வுற
இட்ட லிங்கத் தியல்பு புகன்றமை
கட்டு வல்வினைக் கட்டற வோதுவாம்.

(இ - ள்.) சிட்டன் - யாவர்க்கும்நேயனாகிய—அல்லமதேவன் - அல்லமாப்பிரபு —அருளூறீஇ - அருள்சுரந்து—நட்ட - விசுவாசித்த —நண்பொடு - மிக்கபிரியத்தோடு—நந்தி - வசவண்ணர் —உணர்வுற - ஞானோதயமடைய —இட்டலிங்கத்தியல்பு - இட்டலிங்கத்தினிலையை —புகன்றமை - சொல்லிவிளக்கியதை —கட்டு - அனந்தசென்மங்களிற்கட்டுண்ட—வல்வினைக்கட்டு - மிக்கவலியுள்ளநமதுவினையின்தொடர்பு —அற - ஒருங்கேநசிக்க—ஓதுவாம் - சொல்லுதும். எ - று. யாவர்பிறவிப்பிணிநோய்க்கிரங்கலால் சிட்டனெனவும, தொண்டினரியநிலையை நோக்கலால் அருளூறீஇயெனவும் ஆன்மநிலையை இனையதெனக்காட்ட இட்டலிங்கத்தியல்பு புகன்றமையெனவுங் கூறியவாறுகாண்க. இங்கே லிங்கமென லான்மாவை. (க)

சங்க ரற்குத தனைநிக ரின்பவீ
டங்க ளித்தரு ளல்லம னந்திதன்
மங்க லதிரு மாளி கைகட்செவிக்
கங்க ணற்கினி யாரொடு கண்டனன்.

(இ - ள்.) சங்கரற்கு - மருளசங்கரதேவனுக்கு —தனைநிகர்-தனக்குத்தானேநிகராகிய—இன்பவீடு - பேரின்பவீட்டை —அங்கு - அவ்விடத்தில்—அளித்தருள் - அநுக்கிரகித்த—அல்லமன்- அல்லமதேவனை —நந்தி - வசவண்ணன் —தன் - தன்னுடைய—மங்கலம் - மங்கலமாயுள்ள —திரு- அழகிய —மாளிகை - உப்பரிகையில் —கட்செவி - கண்ணேசெவியாகவு

டைய பாம்பை—கங்கணற்கு - கங்கணமாகவுடைய பரமசிவனுக்கு —இனியாரொடு - அன்பர்களோடு —கண்டனன் - பார்த்தனன். எ - று. ஏனைய வின்பம்போல்வ தன்றெனக் காட்டப் பேரின்பத்தைத் தனிநிகரின்பமெனவும், பேரின்பத்தையன்றி வீடுவேறின்மையின் இன்பவீடெனவுங் கூறினர். (உ)

மண்டு பேரொளி மாடத்து நாப்பணந
தண்ட நாதன் றவிசொன் றமைத்திட
அண்ட நாயக னல்லம ஞயிடைக்
கண்ட நோக்கங் களிப்ப விருந்தனன்.

(இ - ள்.) மண்டு - நிறைந்த —பேரொளி - மிக்கவொளியையுடைய—மாடத்து - உப்பரிகையின்—நாப்பண் - நடுவில்—அம் - அழகிய—தண்டநாதன் - வசவண்ணன்—தவிசொன்று - ஓராசனத்தை—அமைத்திட - அமைக்க—அண்டநாயகன் - சமஸ்த அண்டங்களுக்கும் நாயகனாகிய—அல்லமன் - அல்லமதேவன்—ஆயிடை - அந்தவாசனத்தில் —கண்டநோக்கம் - இவரைக்கண்டபார்வைகள்—களிப்ப - களிகூரும்படி—இருந்தனன் - எழுந்தருளியிருந்தான். எ - று. அமைத்திட இருந்தனன் எனக்கூட்டி முடிக்க. தண்டநாதனென்னும், அண்டநாயகனெனவும் காரணவிடுகுறி. சுட்டுநீளின்யகரம் என்னும்விதியால் ஆயிடையென்றாயது. (ந)

ஆத னத்தி லமர்ந்தரு ளல்லமன்
பாத மன்பொடு பன்மலர் தூயிது
மாத வத்தின் வலியெனத் தாழ்ந்தெழு
காதன் மிக்குக் கசிந்துள நந்திதான்.

(இ - ள்.) ஆதனத்திலமர்ந்தருள் - ஆசனத்திலெழுந்தருளிய —அல்லமன் - அல்லமதேவனது—பாதம் - பாதங்களில்—அன்பொடு - மிக்க அன்புகொண்டு—பன்மலர்தூய் - பலமலர்களையருச்சித்து—இது - இங்ஙனமருச்சிக்கப் பெற்றது —மாதவத்தின் - முன்னரியற்றிய மகாதவத்தினது—வலியென - பலமானதென்று—தாழ்ந்து-வணங்கி—எழு நந்திதான் - எழுந்துநின்ற வசவண்ணன்—காதன்மிக்கு - மிக்கவன்புகொண்டு—உளங்கசிந்து - மனமுருகி. எ - று. நந்திதான் தூய், தாழ்ந்து, காதன்மிக்கு, உளங்கசிந்து எனக் கூட்டிமுடிக்க. மாதவத்தின்வலியென்றது முன்னையபிறவி யநேகத்தைக் குறிக்கின்றது; அன்றேல் மூர்னும். (ச)

அடிய னேன்சிவ பத்தி யறிந்தமை
படியி லூமன் கனவெனப் பட்டது
முடியு மாறு மொழிந்தரு ளென்றுபொற்
றொடியு லாங்கை தொழுது விளம்பினான்.

(இ - ள்.) அடியனேன் - அடியேன் — சிவபத்தியறிந்தமை - சிவபத்தியினிலை யினையதெனத் தெரிந்தவிதம் — படியில் - பூமியில் — ஊமன்கனவெனப்பட்டது - ஊமைகண்டகனவுபோலும் — முடியுமாறு - இவ்வன்பு இடையூறின்றி முடியும்வண்ணம் — மொழிந்தருளென்று - அநுக்கிரகிக்கக் கடவாயென்று — பொற்றொடியுலாம் - பொன்னாலாகிய கங்கணமமைந்த — கைதொழுது - கைகுவித்து — விளம்பினான் - சொல்லினன். எ - று. அறிந்தமை தொழிற்பெயர். தனதுசிவபத்தியை ஊமன் கனவுக்குவமை கூறியது வரையறுத்துக்கூறக் கூடாமைபற்றி யென்க. (௫)

கேட்டவாரியன் கேடில் சிவநெறிக்
கூட்ட மேவுறு கொள்கையி னாய்நினைக்
காட்டு வாருள ரோசெங் கதிர்க்கிருள்
ஓட்டு சோதியு முண்டுகொ லோவென்றான்.

(இ - ள்.) கேட்ட - இதனைக்கேள்வியுற்ற — ஆரியன் - ஆசிரியனாகிய வல்லமன் — கேடில் - என்றுஞ்சிதையாத — சிவநெறிக்கூட்டம - சிவத்தொண்டு நெறியகலாத அன்பர்கள்கூட்டத்தை — மேவுறு - விசுவாசிக்கத்தக்க — கொள்கையினாய் - கொள்கையையுடையோனே — நினைக்காட்டுவாருளரோ - உன்னைவிளக்குவிப்பவருமுண்டோ — செங்கதிர்க்கு - சூரியனுக்கு — இருளோட்டு சோதியும் - இருள் வராமலோட்டத்தக்க சூரியனும் — உண்டுகொலோ - உண்டோ — என்றான் - என்றுசொல்லினன். எ - று. சூரியனைவிளக்கச் சூரியன்வேண்டின், உன்னைவிளக்க ஒருவர்வேண்டுமென்பதாயிற்று. ஆகவே, அறிவுக்கறிவெனல் மூடம். என்னை "அறிவுக்கறிவென்னு மாகமங்கள் சுத்த, வறிவென்னும் வேதத்திதம்" என்பதனாற் காண்க. (௬)

வள்ள லின்றனை வந்து புகழ்ந்தனன்
தெள்ளுஃதண புனற் றேக்கு முளைத்தலை
கிள்ளி நின்றெறி கின்றவர் போலெனா
உள்ளு டைந்திட் டுரைக்கும் வசவனே.

(இ - ள்.) வள்ளல் - அல்லமதேவன்—இன்று - இப்போது —வந்து - வந்து—எனைப்புகழ்ந்தனன் - என்னைத்துதித்தனன்— (இஃதெத்தகைமை போல்வதெனின்) தெள்ளு - தெளிவாகிய —தண் - குளிர்ச்சிபொருந்திய—புனல் - சலத்தில்—தேக்கு - தேக்குமரம் —மூளைத்தலை - மூளையெடுத்தலை—கிள்ளிநின்று - கிள்ளிவிட்டு —எறிகின்றவர்போல் - எறிந்துவிடுவார்போ லிருக்கின்றது —என - என்று—உள்ளுடைந்திட்டு - மனம்நெக்குருகி —வசவன் - வசவண்ணதேவன் —உரைக்கும் - சொல்லுவன். எ - று. உள்ளுடைந்திடுதல்; நிந்தாஸ்துதி யெனக்கண்டுகொள்க. இங்கே யகங்காரத்தைக் காட்டத் தேக்கென்றார். இது பிறிதுமொழிதலணி. தேக்குக் கிள்ளியென்றது மூளைத்தலை யென்றது; மூளையைக் கிள்ளியவிடத்துத் தேக்குவளர்தற் கிடமின்மைபோலப் புகழைக் கிள்ளியவிடத்து என்போன்ற சிவத்தொண்ட ரில்லையென்று மகங்காரம் வளர்தற் கிடமின்மைபற்றி யென்க. (எ)

வேறு

இகழ்ந்தென துளச்செருக் கினையக ற்றிலாய்
புகழ்ந்தனை விழைபுளிங் கறியிட் டாறுநோய்
மிகுந்தெழ வளர்த்தல்போ லெனவி ளம்புபு
தகுங்கழ லிறைஞ்சினன் றண்ட நாயகன்.

(இ - ள்.) இகழ்ந்து - நிந்தித்து —எனதுளம் - எனதுள்ளத்தின்கணின்ற— செருக்கினை - கர்வத்தை—அகற்றிலாய் - ஒழிக்காமல்—புகழ்ந்தனை - துதித்தனை—விழை - இச்சிக்கத்தக்க —புளிங்கறியிட்டு - புளியிட்டகறியைவைத்து —ஆறுநோய் - நீங்கியவியாதி —மிகுந்தெழ - அதிகப்பட—வளர்த்தல்போல் -வளர்த்தலுக் கொப்பாயிருக்கின்றது—எனவிளம்புபு - என்றுசொல்லி —தகும் - யாவரும் வத்தற்குத்தகுந்த —கழல் - அல்லமனது திருவடிகளில்—தண்டநாயகன் - வசவண்ணன் —இறைஞ்சினன் - வணங்கினன். எ - று. அகற்றிலாய் என்னும் வினைமுற்றை "வினைமுற்றேவினையெச்சமாகலும்" என்னும் விதியால் வினையெச்சமாக்குக. தணிந்தநோய் புளியிட்டகறியால் மீண்டு மிகுவித்தாற்போல, இகழ்ந்ததோடு நில்லாது புகழ்ந்தது, குன்றியவகங்காரம் மீண்டு மிக்குவளர்தற்கென்க. விளம்புபு செய்பு என்னும் வாய்பாடு. (அ)

அருளினு னினதடி யருச்சிக் கும்படி
தெருளிலா வெனக்குறை செய்தி யென்றலு

மருளனு மெனுமொரு மதிஞற் கீந்தருள்
பொருளினு னினையன புகறன் மேயினன்.

(இ - ள்.) அருளினல் - கிருபையினல் —நினதடி - உனது திருவடிக்ளை—அருச்சிக்கும்படி - பூசிக்கும்படியாக —தெருளிலாவெனக்கு - அறிவுமழுங்கியவெனக்கு —உரைசெய்தியென்றலும் - அனுக்கிரகிக்கவேண்டுமென்றுகேட்கவும் —மருளனுமெனும் - மருளசங்கரதேவனென்னும்—ஒருமதிஞற்கு - ஒப்பற்றஅறிவுடையவனுக்கு—ஈந்தருள் - அநுக்கிரகித்த—பொருளினன் - சிறந்தபொருளையுடைய அல்லமன் —இனையன - இத்தகையனவாகிய நிலைகளை —புகறன்மேயினன் - சொல்லத்தொடங்கினன். எ - று. ஈந்தருள்பொருளாவது ; தானுகிய மெய்யுணர்வை. (௬)

புன்மர நெளிபுழுப் புளவி லங்கெனும்
பன்மைய துயர்செயும் பவங்க டப்பியே
வன்மைகொ ணிலமிசை மக்க ளாகுதல்
நன்மைகொ ளுயிர்க்கலா லரிது நந்தியே.

(இ - ள்.) புல்மரம் - புல்லுமரமும்—நெளிபுழு - நெளிகின்றபுழுவும்—புள்விலங்கெனும் - பட்சியு மிருகமுமென்கின்ற—பன்மையதுயர்செயும்-பலவேறுபட்ட துன்பங்களைச்செய்யும்—பவங்கள்தப்பி - செனனங்களுக்குத்தப்பி—வன்மைகொணிலமிசை - உறுதியானபூமியின்மேல்—மக்களாகுதல் - மனிதராகப்பிறத்தல்—நன்மைகொள் - நன்மையேதனக்குத்தொழிலாகக்கொண்ட—உயிர்க்கலால்,- உயிர்களுக்கேயல்லாமல்—நந்தியே - வசவண்ணனே—அரிது - மற்றவுயிர்களுக்கரிது. எ - று. பன்மைய, குறிப்புவினையாலணையும்பெயர். இங்கேநன்மையென்றது ; புண்ணியகர்மங்களை. மக்கள், மாந்தரென்றாற்போல பன்மையிலேயே வருபெயர்.

நரர்வடி வாயினு நன்மை யாற்றுறு
மரபினி லுலகினில் வருத றப்புதல்
அரிதுநல் லறம்புரி வழிய டைப்பினு
மருவுத லரிதறம் வளர்க்கு மங்கமே.

(இ - ள்.) நரர்வடிவாயினும்-மானிடவடிவாயினும்—நன்மையாற்றுறு - நன்குசெய்யாத—மரபினில் - வமிசத்தில்—உலகினில் - உலகின்கண்—வருதல்தப்புதல் - வந்துபிறவாமலிருத்தல் —அரிது - அருமையாம் —நல்

லறம்-நல்லதர்மங்களை—புரிவழி - செய்யுமரபினுள்—அப்பினும் - வந்து பிறந்தாலும்—அறம்வளர்க்கும் - அறநெறி வழுவாதுவளர்க்கும்—அங்கமருவுதல் - தேகம்வந்துகிடைத்தல்—அரிது - அருமையாம். எ - று. மனிட வடிவாய்ப்பிறப்பினும் தீய மரபிற்கு விலகலும், அறம்வளர்த்தற்கியைந்த வடிவமெய்தலும் அரிதெனப்பட்ட தென்க. இங்கே வழியென்றது மரபை. நரர்வடிவாயினு மென்பதிலும்மையும், அப்பினும் என்பதிலும்மையும் உயர்வுசிறப்பு. (கக)

அறத்துறப் பெய்தினு மன்பி னலறம்
சிறப்புற ச்செய் தலிங் கரிது செய்யினும்
புறச்சம யங்களைப் போக்கி யாகம
நெறிச்சம யங்களை யரிது நேர்தலே.

(இ - ள்.) அறத்துறப்பெய்தினும் - அறமேற்றற் கியைந்த வங்கமெடுப்பினும்—அன்பினல் - மெய்யன்பினல்—அறஞ்சிறப்புறச்செய்தல் - அறம் வழுவுறாது நிறகச்செய்தல்—இங்கரிது - இங்கருமையாம்—செய்யினும் - வழுவுறாது நிறகச்செய்யினும் —புறச்சமயங்களைப் போக்கி - புறச்சமயநெறிச்சேரலைப்போக்கி—ஆகமநெறி - ஆகமநெறிக்கியைந்த —சமயங்களைநேர்தல் - சமயங்களைப் புறக்கணிக்காதுடன்படல் —அரிது - அரிதாம். எ - று. அறத்தை மெய்யன்புகொண் டியற்றலும், ஆகமநெறிக்குடன்படலும் அரிதெனக் கூட்டிமுடிக்க. எய்தினும் செய்யினும் என்பவற்றிலுள்ளவும்மைகள் உயர்வுசிறப்பு. (கஉ)

ஆகமம் புகனெறி யடைவ னயினுஞ்
சோகமில் சைவநற் றுறையை நன்றெனச்
சேர்குத லரிதது சேர்வ னயினும்
ஏகலிங் கயிக்யனு குதலன் றெண்மையே.

(இ - ள்.) ஆகமம்புகல் - ஆகமங்கூறுகின்ற —நெறியடைவனயினும் - நெறியையுடையோனயினும்—சோகமில் - குற்றமற்ற—நல் - நல்ல—சைவத்துறையை - சைவநெறியை—நன்றெனச்சேர்குதல் - மிக்கநலமெனச்சேர்தல்—அரிது - அரிதாம்—அதுசேர்வனயினும் - அந்தத்துறையைச் சேர்ந்தாலும் —ஏகலிங்க அயிக்யனகுதல் - தானன்மாவாகவிலிங்குதல்—அன்றெண்மை - எளிதல்ல. எ - று. இக்கவியிலுள்ள இரண்டும்மையும், உயர்வுசிறப்பு. ஏகமேவாத்வைதம் பிரமோகமெனிலும், ஏகலிங்

கயிக்யனுகுதலெனலும் ஒருபொருட்கிளவி. இங்கே லிங்கமெனல், ஆன்மாவை. உபாதித்திரயங்களை ஏகமாக வைக்கியமெய்தல் பிறவிக்கேது, ஆன்மாவை தரிசித்தும் அதுதானுகவும் தானதுவாகவும் ஏகவைக்கியமாதல் அறுதிக்கேது. இங்ஙனமன்றென மறுப்பார் ஞாயஞ் சோதனை பொருத்தங்களை யுணரார்போலும். (௧௩)

புண்ணிய முதிர்வினாற் பொருந்தி யங்கையில்
கண்ணுற நிகழ்வுறு சிவலிங் கத்தினை
எண்ணிய மனமுட னென்றும் வந்தனை
பண்ணிய முயல்பவன் பத்த னென்பவே.

(இ - ள்.) புண்ணியமுதிர்வினால் - புண்ணியங்களைச் செய்துவந்தமுதிர்ச்சியால் —கண்ணுற - பிரத்தியட்சமாக—நிகழ்வுறு - விளங்காநின்ற—சிவலிங்கத்தினை - இஷ்டலிங்கத்தை — அங்கையிற்பொருந்தி - உள்ளங்கையினுற் பொருந்தவைத்து —எண்ணியமனமுடன் - இஷ்டலிங்கமென்றுணர்ந்தமனமுடன்—என்றும் - எப்போதும்—வந்தனைபண்ணிய - அருச்சிப்பான்வேண்டி —முயல்பவன் - விடாதுமுயல்பவன் —பத்தனென்ப - பத்தனென்றறிஞர் கூறுவர். எ - று. ஏ - அசை. அநந்தசென்மங்களி லியற்றிய புண்ணிய முதிர்ச்சியால் அங்கையிற்பொருந்தி நிகழ்வுறு சிவலிங்கத்தை ஒன்றுபட்டமனத்தோடு வந்தனைமுயல்பவன், பத்தனெனப்படுவோ னெனக்கூட்டிப் பொருள்கொள்க. (௧௪)

ஆவுறு பிணிகெட வாவின் பால்கறந
தாவினை யூட்டல்போ லாண வங்கெட
ஆவியு ளமலனை யங்கை தந்துபின்
ஆவியு ளமைவுற வாக்கு மாரியன்.

(இ - ள்.) ஆவுறு - பசுவுக்குவாய்த்த —பிணிகெட - நோய்கெடுவான் வேண்டி—ஆவின்பால்கறந்து - பசுவின்பாலைக்கறந்து—ஆவினையூட்டல்போல - பசுவுக்குஊட்டல்போல—ஆணவங்கெட - ஆணவநசிப்பான்வேண்டி—ஆவியு ளமலனை - உயிரிற்பிரிவறநின்ற பரமசிவத்தை—அங்கைதந்து - உள்ளங்கையில்வரவைத்து—பின் - பின்னர்—ஆவியுள் - உயிரினுள்—அமைவுற - பேதாபேதங்கடந் தமைவுறும்படி—ஆக்குமாரியன் - ஞானாசிரியனுக்குவன். எ - று. ஆவின்பாலே ஆப்பிணிக்குமருந்தானாற்போல, உயிரின் சுத்தப்பாவமே உயிரினசுத்தபாவத்துக்கு மருந்தாமெனலைக்கா

ட்ட ஆட்டலெனவும், ஆக்கலெனவும் பிறவினைதந்தார். ஊட்டாவிட த்து ஆவின்பிணிநீங்காவாறுபோன்று, ஆரியனுக்காவிடத்து ஆணவநசி க்காதென்பது கருத்து. பிணிபோல்வது ஆணவம், பால்போல்வது சுத்த பாவம். புறத்தில் அங்கைலிங்கபாவ முதிர்ச்சியின்றேல், புறம்பில் தேக நானென்னு மாணவங்குன்றாது. அகத்தில் சுயம்புலிங்கநாட்ட விளக்கமி ன்றேல், அகத்தில் உடலளவு நானென்னும் வாசனைப்பிராந்திநசியாது. தேகநானென்னு மாணவம் இரண்டிடத்து நிற்றலைமாற்றற்குப் புறத் தில் இஷ்டலிங்கபாவமும், அகத்தில் ஆத்மலிங்கபாவமும் வேண்டுமென ற்கிடையூறென்னை? இரண்டும் பாவமேனும் ஒன்றுபுறப்பற்றையும், ஒன் றகப்பற்றையும், நீக்குதற்கிதுநெறியாதலின் இங்ஙனமாய வுவமைகொ ண்டுகூறினர். ஆவினை ; வேற்றுமைமயக்கம். அகங்கையென்பது, அங்கை யென்றாயது விகாரம். ஆவியுளமலனை யங்கைதந்து பின் ஆவியுளமை வுறவாக்குதலாவது ; பீடம், சத்தி. லிங்கம், சத்தன். அத்தியாரோபத் தில் சத்தனே சத்தியாகவும், அபவாதத்தில் சத்தியேசத்தனுகவுங் கா ண்டலி னிக்குறி யபவாதத்தி லாரம்பத்ததெனக் காட்டி முடிவில் குண ங்குறியிறந்ததாக விளக்கிக்காட்டலை யென்க. எனவே ஞெப்தி, சத்தி, பிரியம், சிவம். இஃ்தோமுகத்தில் ஞெப்திக்குப் பிரியமயலாகவும், ஊர்த் தமுகத்தில் பிரியமே ஞெப்தியாகவும் விளங்குமெனப் பெற்றாம். பெற வே, பேதாபேதமற்றதற்குப் பேதமுற்றதுபோற் காணின் அற்றதாகக் காட்டி யழித்தலெனக் கண்டாம். (௧௫)

கருங்கொடி யிருவிழிக் கண்ணு மோர்மணி
திரிந்திடு செயலெனத் திரித லின்றியே
பொருந்துறு மகமொடு புறமுந் தீர்வற
இருந்தில குறுமரு ளிட்ட லிங்கமே.

(இ - ள்.) கருங்கொடி - கரியகாகத்தினது —இருவிழிக்கண்ணும் இரண்டுகண்களிடத்தும்—ஓர்மணி - ஒப்பற்றகண்மணியானது—திரிந்தி டுசெயலென - திரியுஞ்செயல்போல—திரிதலின்றி - அலையாமல்—பொ ருந்துறும் - இயல்பாகப்பொருந்திய—அகமொடுபுறமும் - அகமெனினும் புறமெனுனும்,—தீர்வற - இறக்க—இருந் திலகுறும் - ஒருதன்மைத்தாக நின்றுவிளங்கும்—அருள் - கிருபைபொருந்திய—இட்டலிங்கம் - இட்ட லிங்கமானது. எ - று. இட்டலிங்கந் திரிதலின்றி அகம்புறமின்றி யிரு ந்தில குறுமெனமுடிக்க. இந்தவிட்டலிங்க மகமுகத்தில் நிற்குநிலை யினை யதெனக் காட்டினு ரென்க. (௧௬)

குறிபல பலமுறை கொண்டு பல்வகைப்
பொறிதொறு மருவியொண் புலனு கர்ந்துமாய்ந்
தறிவரு நிலையவா தார மேவியு
நிறைவுறு மங்கையி னிகழு மிட்டமே.

(இ - ள்.) அங்கையின் - உள்ளங்கையில்— —நிகழும் - விளங்காநின்ற—இட்டம் - இட்டலிங்கமானது—குறிபல - பலகுறிகளை —பலமுறை கொண்டு - பல அவசரத்திற் பலதிறங்கொண்டு—பல்வகைப்பொறிதொறும் - பலவேறுவகைப்பட்டபொறிதோறும் —மருவி - அந்தந்தநிலைக்களவாகத்தங்கி —ஒண்புலனுகர்ந்து - ஒள்ளியபுலன்களை யநுபவித்து—மாய்ந்து - பேருமின்றி யழிந்து—அறிவருநிலைய - அறிதற்கரிய அநுபவநிலைகளுக்கு—ஆதாரமேவியும்-ஆதாரத்தன்மையடைந்தும்—நிறைவுறும்-தனதியல்புத்தன்மைக்குமாறின்றிப் பூரணமாநிறைந்திருக்கும். எ - று. ஏ -அசை. அங்கையி னிகழுமிட்டம்,கொண்டு, மருவி, நுகர்ந்து, மாய்ந்து ஆதாரமேவியும் ; நிறைவுறுமெனக் கூட்டிமுடிக்க. இவையெல்லாம் இயம நியமமுதலியவற்றைத் தக்கவாறுசெய்யின் விளங்குமென்க. புலனை நுகர்தலாவது ; சுரோத்திரமுதலியவற்றின் குணகுணிகளை யையந்திரிபறத்தெளிதலை. (௧௭)

அடைந்துள வுருச்சுவை யமைதி யென்பன
உடம்பொரு மூன்றினு முற்ற டைந்திடும்
தொடர்ந்துள வினைவலி தொலைத்தி யானெனும்
இடும்பையி லின்பரு ளிட்ட லிங்கமே.

(இ - ள்.) இட்டலிங்கம் - இட்டலிங்கமானது —அடைந்துள - வந்தடைந்தவனவாகிய—உருச்சுவை - உருவத்தின்கணெய்துஞ்சுவையின்—அமைதி - அவற்றாலெய்தும் ஆறுதல்களும்—என்பன - என்றுசொல்லப்பட்டவைகளை —உடம்பொரு மூன்றினும் - மூன்றுடம்பினும் —உற்று - அடைந்து—அடைந்திடும் - இவற்றாலெய்தும்—தொடர்ந்துள - சங்கிலிபோல்தொடர்ந்துள்ள—வினைவலிதொலைத்து-இருவினை வலியைமாய்த்து —யானெனுமிடும்பையில் - யானெனுமகங்காரங்குன்றியவிடத்தில்—இன்பருளும் - பேரின்பப் பேற்றைத்தரத்தக்கதாம். எ - று. இட்டலிங்கம் உற்று, தொலைத்து, இன்பருளுமெனக் கூட்டிமுடிக்க. உடம்பொரு மூன்றாவது ; தூலசூக்கும காரணங்களை. பிறவிதோறுமாறாது பின்பற்றிச் செல்லுதலால் தொடர்ந்துள வினைவலியென்றார். அகங்காரத்

தாலெய்துவதை அகங்காரமெனக் சொண்டது காரணவாகுபெயர் அருளுமென்பது அருண்மென்றாயது இடையில் உகரங்கெட்டுநின்றது. அருளிட்டலிங்கமேஎன்ற பாடத்தை யருண்மிட்டலிங்கமே எனப்பாடங்கொண்டு பொருள்கூறுக. (௧அ)

என்றறி வறவறிந் திட்ட லிங்கமாம
ஒன்றொரு பொருளிலே யுறவி ழித்தவன்
பொன்றுறு சகமெனப் புணர்ந்த மாயையை
வென்றவ னவனென விளம்பும் வேதமே.

(இ - ள்.) என்று - இங்ஙனமாக—அறிவு - அறிவி னிலக்கண விலக்கியங்களை—அறவறிந்து - ஐயந்திரிபறவுணர்ந்து —இட்டலிங்கமாம் - இஷ்டலிங்கமாகிய —ஒன்றொரு பொருளிலே - ஒப்பற்றவொரு பொருளின் மாத்திரம்—உறவிழித்தவன் - நன்குவிழித்தவன் —பொன்றுறு - அழியத்தக்க —சகமெனப்புணர்ந்த - செகமாகவிகார முற்றுப்புணர்ந்துநின்ற—மாயையை - மாயையென்பதை—வென்றவனவனென - செயித்தவனவனென்று—விளம்பும்வேதம் - வேதமுறையிடும். எ - று. மெய்யுணர்வைவிடாதுகாண்டலே இட்டலிங்கமா மொன்றொரு பொருளிலே யுறவிழித்தவனெனவும், அங்ஙனமவிடாதுகாண்புழி தனதுபுத்திவிகற்பமாகிய மாயையும் அதனதுகாரியமாகிய திரிபதார்த்தங்களும் எங்ஙனமோர் முதலாகநிற்குமென்பார், பொன்றுறு சகமெனப்புணர்ந்த மாயையை வென்றவனெனவுங் கூறினர். இங்கே மாயையென்பது அறியாமையை. புணர்தலென்பது பிரதிபலிப்பை. செகமென்பது பிரதிபலித்த வடிவையென்க. இவ்வேதுக்கள்பற்றிக் கூறியதால் பொன்றுறு சகமெனல் பொருந்தும். (௧௯)

பொருவில்சற் பத்தியாந் தாரம பூண்டொரு
வரவயி ராகமாம் வத்தி ரம்புனைந்
தொருவலி லுணர்வெனுஞ் செச்சை யொன்றுறப
பரமனை யிருத்துவோன் பத்த னாகுவான்.

(இ - ள்.) பொருவில் - ஒப்பில்லாத—சற்பத்தியாம் - எதார்த்தபத்தியாகிய—தாரம்பூண்டு - கயிற்றில்பூண்டு—ஒரு - ஒப்பற்ற—வரவயிராகமாம் - சிறந்தவயிராகமென்னும் —வத்திரம்புனைந்து - வஸ்திரத்தையுடுத்து—ஒருவலில் - கணமுமாறாத—உணர்வெனுஞ்செச்சை - மெய்யுணர்வென்னுஞ்செச்சையில்—ஒன்றுற - பேதாபேதமின்றி—பரமனையிருத்

துவோன் - பரமசிவத்தைஸ்தாபிப்போன் —பத்தனுகுவான் - பத்தனெனப்படுவோன். எ - று. சற்பத்திதாரம, வரவயிராகமாம்வத்திரம், உணர்வெனுஞ்செச்சை, இதுமுற்றுருவகவணி. பூண்டு, புனைந்து, இருத்துவோன் பத்தனுகுவான் எனப்பொருள்கொள்க. தாரமென்பது திசைச்சொல். (உ0)

ஒன்றினென் றுள்ளூற வுடம்பு மூன்றையு
மன்றநல் வத்திர மடிய தாக்கியே
என்றுமங் கமைவுற விட்டம வைப்பனேல்
அன்றவன் சிவமய மாகு மென்பவே.

(இ - ள்.) ஒன்றினென்றுள்ளூற - ஒன்றினென்றடங்க—உடம்புமூன்றையும் - மூன்றுபாதிகளையும் —மன்ற - நிச்சயமாக—நல் - நல்ல —வத்திர மடியதாக்கி - மடிச்சீலையாக்கி—என்றும் - எப்போதும்—அங்கு - அந்நிலையில்—அமைவுற - அமைதியுண்டாக—இட்டம்வைப்பனேல் - இட்டலிங்கத்தைவைப்பனுயின்—அன்று - அக்கணமே —அவன் - அந்நிலையினன் —சிவமயமாகும் - சிவவடிவாவன் —என்ப - என்றறிஞர்கூறுவர். எ - று. ஏ - அசை. உபாதித்திரயவாகார நசித்தற்கு, உடம்புமூன்றையும் வத்திரமடியதாக்கி யங் கமைவுற விட்டம் வைப்பனேலென்றூர். சிதாகாரமாயவிடத்துச் சிவமயமாதற்குமுரணென்னை ? மன்ற என்பது தேற்றப்பொருள்தருவதோரிடைச்சொல். (உக)

அருளெனும் புனலினை யாட்டிச் சாந்தமாம்
வரைநறுஞ் சநதொடு மருவ விந்திய
விரைமலா புனைந்தறி வினைய ருத்துறிற்
பரமனை யவன்சிவ பத்த னுகுவான்.

(இ - ள்.) அருளெனும்புனலினை - அருளென்னுநீரை —ஆட்டி - அபிஷேகஞ்செய்து—சாந்தமாம் - உபசாந்தமென்னும் —வரை - அகஸ்தியராது மலையிற்றேன்றிய —நறுஞ்சந்தொடு - வாசனையுள்ளசந்தனத்தோடு—மருவ - பொருந்த—இந்தியம் - பஞ்சேந்திரியமென்னும்—விரைமலர் புனைந்து - வாசனைமலரையருச்சித்து—அறிவினை - தனதறிவை—அருத்துறில்பரமனை - பரமனையருந்தச்செய்தால் —அவன் - அங்ஙனஞ்செய்தோன் —சிவபத்தனுகுவான் - சிவபத்தனென்னப்படுவான். எ - று. ஆட்டி, புனைந்து, அருத்துறில், சிவபத்தனுகுவானெனக் கூட்டிமுடிக்க. அருளெனும்புனல், சாந்தமாஞ்சந்து, இந்தியமலர், இவையுருவகம். (உஉ)

ஆசறு மனத்தெழு மன்பை யன்றியே
பூசனை யுவக்கிலென் புராரி சென்னிமேல்
வீசுறு திரையினு மிக்க தோசொலாய்
ஊசல்செய் மனமுடை யொருவ னாட்டுநீர்

(இ - ள்.) ஆசறு - குற்றமற்ற —மனத்தெழு - மனத்திலெழுகின்ற— அன்பையன்றி - அன்பையல்லாமல்—புராரி - பரமசிவனது—பூசனை - பூசையை—உவக்கிலென் - விரும்பிலென்—ஊசல்செய் - உஞ்சலைப்போலலைதல்செய்கின்ற—மனமுடையொருவன் - மனமுள்ளவொருவன் —ஆட்டுநீர் - அபிஷேகஞ்செய்யுஞ்சலம் —சென்னிமேல் - சிவனதுஉச்சியில்—வீசுறு - மோதுகின்ற —திரையினும் - அலைகளையுடையகங்கையைக் காட்டிலும் —மிக்கதோ - மேலாயதோ —சொலாய் - சொல்லுதி. எ - று. கங்கையைத் திரையென்றது சினையாகுபெயர். அன்புள்ளமனத்தால் பூசிப்பதே பூசனையென்பதுகருத்து. (௨௩)

பூப்புனை கையுமெம் புனிதன் றன்புகழ்
பாப்புனை நாவுமே படைத்து ளான்றனைச்
சேப்புனை கொடியுடைத் தேவ னேயென
நாப்புனை புகழொடு நாகரோத் துவார்.

(இ - ள்.) பூப்புனைகையும் - பூவினாலருச்சிக்கின்றகைகளையும் —எம்புனிதன்றன்புகழ் - எமதுபரமசிவனுடையகீர்த்திநாமங்களை—பாப்புனைநாவுமே - பாவாற்புனைந்துரைக்கப்பட்டநாவையுமே —படைத்துளான்றனை - இடைக்கப்பட்டவனை —சேப்புனைகொடியுடை-இடபக்கொடியையுடைய—தேவனேயென - பரமசிவனேயென்று—நாப்புனைபுகழொடு - நாவினாற்புனையப்பட்டபுகழோடு — நாகரோத்துவார் - தேவர்கள்துதிப்பார்கள். எ - று. ஏனைய கை, நாக்களினின்று பிரித்தலால் ஏகாரம் பிரிநிலை. கொடியுடைத்தேவனென்பதில் அகர ஈறுதொக்கது. கையும் நாவு மென்னும்மை. (௨௪)

பூசனை செயாதகை புராதன் கன்புகழ்
பேசுத லிலாதவாய் பெற்று ழன்றிடு
நீசரா னவர்தமி னெடுவ னத்திடைக்
கூசுத லிலாதபுன் குரங்கு நன்றரோ.

(இ - ள்.) பூசனைசெயாதனை - பூசைசெய்யாதகையையும்—புராந்தகன்புகழ் - பரமசிவனதுபுகழை—பேசுதலிலாதவாய் - துதியாதவாயையும்—பெற்றுழன்றிடும் - பெறறுழலப்பட்ட—நீசரானவர்தமில் - ஈனர்களிலும்—நெடுவனத்திடை - பெருங்காட்டில் —கூசுதலிலாத - நாணமின்றியிருக்கும—புன்குரங்குநன்று - புல்லியகுரங்குநற்குணமுடையதாம். எ - று. அரோ - அசை. கை வாயென்பவற்றில் எண்ணும்மைகள்தொக்கன. (உரு)

குடிப்பன விழுங்குவ கூரெ யிற்றினற்
கடிப்பன நக்குவ வனைத்துங் கைமமலர்
அடுத்துள சிவன்றனக் காப்பித் துண்பவன்
விடுத்தவன் மேல்வரும் வினைகள் யாவுமே.

(இ - ள்.) குடிப்பன - குடிக்கத்தக்கவைகளும் —விழுங்குவ - மெல்லாது விழுங்கத்தக்கவைகளும் —கூரெயிற்றினற்கடிப்பன - கூரியபற்களாற்கடிக்கத்தக்கவைகளும் —நக்குவ - நக்கத்தக்கவைகளுமாகிய—அனைத்தும் - இவையனைத்தையும்— கை - உள்ளங்கையாகிய—மலரடுத்துள - தாமரைமலரிலுள்ள—சிவன்றனக்காப்பித்து - சிவனுக்கு நைவேத்தியமாக்கி—உண்பவன் - பின்னரதனையுண்பவன்—மேல்வரும் வினைகள் யாவும் - இனிவினையு மாகாமியவினைகளனைத்தையும —விடுத்தவன் - ஒழித்தவனுவன். எ - று. குடிப்பன முதலியநான்கும் வினையாலணையும்பெயா. கைம்மலர் உருவகம். அடுத்துள எழுந்தருளியிருக்கின்ற வெனிலுமமையும். (உசு)

தானுறு முடன்மன தனமென் றுள்ளவை
ஊனமில குருசிவ சரங்கட் கீந்துதான்
யானென தென்குத லின்றி வைகுவோன்
மேனிகழ் சிவமொடு வேறலானரோ.

(இ - ள்.) தானுறும - தானடைந்த—உடல் - தேகமும் —மனம் - மனமும்—தனம - திரவியமும—என்றுள்ளவை -என்று சுதந்தரமாயுள்ளவற்றை—ஊனமில் - குற்றமற்ற—குருசிவசரங்கட்கு - குருலிங்கசங்கமர்களுக்கு—ஈந்து - கொடுத்து—தான் - தான் —யானெனதென்குதலின்றி - அகங்கார மமகாரங்கோடலின்றி—வைகுவோன் - தானே தானுக விருப்போன்—மேல் - எவற்றிற்குமேலாக—நிகழ் - விளங்காநின்ற —சி

வமொடு - சிவத்தோடு—வேறலான்-வேறுபடான். எ - று. அரோ - அசை. உடலை குருவுக்கும், மனத்தை சிவத்துக்கும், தனம் சரங்கட்குமாதலால் இது நிரனிறைப் பொருள்கோளணி. யானெனதெனல் பிராந்திகாரணமாக வருதலின் இவையின்றி வைகுவோன் சிவமொடு வேறலானென்றார். (உஎ)

குருசிவ சரங்கொளக் கொடுத்த மெய்மனம்
பொருளிவை நமவெனப் புந்தி செய்துகொள்
ஒருவனில் வழிமறித தொறுத்துக் கொள்வன
சரனனி நல்லன்மெய் தவறி லாமையால்.

(இ - ள்.) குருசிவசரம - குருலிங்க சங்கமங்கள் —கொள - ஏற்கும்படி—கொடுத்த - தத்தஞ்செய்த—மெய்மனம்பொருளிவை - உடல் மனம் பொருளென்னு மிவற்றை—நமவென - மீண்டு நம்முடையவென்று—புந்திசெய்துகொ ளொருவனில் - நினைப்பவனைக் காட்டிலும்—வழிமறித்து - வழிதடுத்து—ஒறுத்துக்கொள் - பறித்துக்கொள்ளுகின்ற—வனசரன் - வேடன் —மெய் தவறிலாமையால் - உண்மைதவறாமையினல்—நனிநல்லன் - மிகவும்நல்லவனும். எ - று. குருலிங்க சங்கமங்கட்குத் தத்தஞ்செய்தவைகளை மீண்டுந் தனவெனக் கொள்பவனிலும், வழிபறிக்கும்வேடன் நல்லனென்பதாம். மெய்தவறிலாமை, கொடுத்து வாங்காமை. நமவெனல் தன்மைப்பன்மைக் குறிப்பு வினைமுற்று. (உஅ)

விடுவன காமம்வெவ் வெகுளி மாலிவை
தொடுவன குருசிவ சரங்க டொல்பவம்
கடுவென வெருவிய கருததுளார்க்கிவண்
அடுவன வெனப்புல னட்ட வாற்றலாய்.

(இ - ள்.) இவண் - இவ்விடத்தில் —அடுவனவென - போக்கத்தக்கவைகளிவைகளென்று—புலன் - ஐம்புலன்களையும்—அட்ட - வென்ற—ஆற்றலாய் - வலியுள்ள வசவண்ணனே —தொல்பவம் - தொன்றுதொட்டுவருஞ் சனனங்கள்—கடுவென-விஷமாக—வெருவிய - பயந்த—கருத்துளார்க்கு - கருத்துடையோர்க்கு—விடுவன - விடத்தக்கவை —காமம் - காமமும—வெவ்வெகுளி - கொடியகோபமும் —மால் - பிராந்தியுமாகிய —இவை - இத்தீமைகளாம் —தொடுவன - ஏற்கத்தக்கவை—குருசிவசரங்கள் - குருலிங்க சங்கமங்களாம். எ - று. விடுவன தொடுவன வினையாலணையும் பெயர்கள். (உகூ)

அங்கையி னமர்தரு மரனை விட்டொரு
வெங்கட வுளர்தமை விழைந்து போற்றுவார
கங்கையை யகன்றுவர்க் கழியின் மூழ்குநர்
தங்களின் வேறலர் தருமமூர்த்தியே.

(இ - ள்.) அங்கையினமர்தரும் - உள்ளங்கையி லெழுந்தருளிய—அரனைவிட்டு - பரமசிவனைவிட்டு—ஒரு - மற்ற—வெங்கடவுளர்தமை - கொடியதேவதைகளை—விழைந்து - விரும்பி —போற்றுவார் - துதிப்பவர்கள்—கங்கையையகன்று - கங்காநதியைவிட்டு—உவர்க்கழியின் - உப்புக்கழியில் —மூழ்குநர்தங்களின்-முழுகுபவர்களைக் காட்டிலும் —தருமமூர்த்தியே - தருமசொரூபியாகிய வசவண்ணனே —வேறலர் - வேறுகார். எ - று. தனது இட்டலிங்கத்தைவிட்டு அந்நியதேவதையைத் தொழுவார், கங்காநதியைவிட்டு உப்பங்கழியில் மூழ்குவாரைப் போலுமென்க.

மோகமில் குருசர முனியின் முன்னுள
தாகிய செயிர்முழு தகன்று வணடுறை
போகிய மடியெனப் புனித னுருமேல்
பாகியன் மொழியுமை பாகற் கன்பனும.

(இ - ள்.) மோகமில் - பிராந்திரகிதமான —குருசரமுனியின்முன் - குருலிங்க சங்கமர்களுக்குமுன்—உளதாகிய - தொன்றுதொட் டுள்ளதாகிய—செயிர்முழுதகன்று - சகலகுற்றமுநீங்கி —வண்டுறை - வளப்பநிலைத் துறைகளினின்றும் —போகிய - இழந்த —மடியென - தரித்திரனைப்போல —புனிதனுருமேல் - பரிசுத்தனுவையின் —பாகியல் - வெல்லப்பாகுபோன்ற —மொழி - சொற்களையுடைய —உமை - உமையவளை—பாகற்கு - அர்த்தபாகத்திலேற்ற பரமசிவனுக்கு —அன்பனும் - அன்புடையனுவன். எ - று. லிங்கமெனல் எஞ்சிநின்றது. தரித்திரனைப்போலக் குருலிங்க சங்கமங் காரணமாக 'இருவனை···றுமகன்றேன் பரமசிவனுக்கன்பனுவனெனப் பொருள்கொள்க. (ருக)

விள்ளருநற்சிவ வேடத்தோர்பொருள்
கொள்ளைகொள் கிற்பினுங் குறைகள் கூறினும
பிள்ளையை யறுப்பினும் பிழைகள் செய்யினும
எள்ளுதலிலனெனி லீசற கன்பனும.

(இ - ள்.) விள்ளரு - சொல்லுதற்கரிய—நல் - நல்ல—சிவவேடத்தர் - சிவவேடத்தரது—பொருள் - பொருள்களை - கொள்ளைகொள்கிற்பினும் - கொள்ளைகொண்டாலும் —குறைகள் கூறினும் - பிறர்குற்றங்களை யெடுத்துச்சொல்லினும் —பிள்ளையையறுப்பினும - சிசுவையறுத்தாலும் —பிழைகள்செய்யினும் - எலர்க்குற்றங்களையுஞ் செய்தாலும—எள்ளுதலில னெனில் - அத்திச்செய்தசிவசரணனாயிகழாதிருப்பனுயின் —ஈசற்கன்பனும் - பரமசிவத்துக்குமிக்க அன்பனுவன். எ - று. கொள்ளை கொள்கிற்பினும, கூறினும், அறுப்பினும், செய்யினும், அன்பனுமெனக் கூட்டிப் பொருள்கொள்க. (௩௨)

சங்கமந் தனக்கொரு சாதி யுன்னினன்
அங்கையி னமர்தரு மரற்கு முன்னினன்
சங்கர னொடுசரந் தம்மில் வேறெனும்
அங்கவ னறிவரு மளற்ற ழுங்குவான்.

(இ - ள்.) சங்கமந்தனக்கு - அடியார்களுக்கு —ஒருசாதியுன்னினன் - சாதிவேற்றுமையொன்றைநினைத்தவன் —அங்கையினமர்தரும் - உள்ளங்கையிலெழுந்தருளிய —அரற்கும் - பரமசிவத்துக்கும் —உன்னினன் - நினைத்தவனுவன்—சங்கரனொடு - பரமசிவத்தோடு—சரம் - அடியார்களை —தம்மில்வேறெனும் - தம்மில்வேறெனப்பேதங்காணும் —அங்கவன் - அத்தகையோன் —அறிவரு - அறிதற்கரிய —அளற்றழுங்குவான் - நரகத்தில்விழுவான். எ - று. சங்கமரில் சாதிவேற்றுமைகாண்பான் நரகபலனெய்துவனென்பது கருத்து. (௩௩)

தலைமைகொள் குருசிவ சரங்கட் காகவே
உலையிடு மரிசியன் றோங்கன் மத்தெறி
அலையமு தாந்தமக் காக வாக்குறில்
கொலைசெயு நஞ்சினுங் கொடிய தாகுமால்.

(இ - ள்.) தலைமைகொள் - சிறந்த—குருசிவசரங்கட்காகவே - குருலிங்கசங்கமங்கட்காகவே—உலையிடுமரிசி - உலையிற்போட்டவரிசியை —அன்று - அப்போது—ஓங்கல் - மலையை—மத்தெறி - மத்தாகக்கடைந்த—அலை - திருப்பாற்கடலிலுண்டான—அமுதாம் - அமிர்தம்போல்வதாமென்று— (அதனை) தமக்காகவாக்குறில் - தமக்கியைந்தவுணவாக்கிக்கொள்ளில்— (அவ்வுணவு) கொலைசெயுநஞ்சினும் - கொல்லுகின்றவிஷத்

தைக்காட்டினும்—கொடியதாகும் - தீயதாம். எ - று. ஆல் - அசை. குருலிங்கசங்கமங்கட்காகவென்று சமைக்குமுணவு திருப்பாற்கடலமுதம் போல்வது; தமக்கெனச்சமைக்குமுணவு நஞ்சினுங்கொடிதாகும் எனப் பொருள்கொள்க. (௩௪)

தனுவுள வளவுமோர் தகுநற் செய்கையும்
மனமுள வளவும்பா வனையு ஞானமுண்
டெனவுள வளவுஞே யமுமி யைந்தவன்
பினையுள வளவுநோய் பிறர்க்க கற்றுமே.

(இ - ள்.) தனுவுளவளவும் - தேகமுள்ளவரையும் —தகும் - தகுந்த—ஓர் நற்செய்கையும் - ஒப்பற்றநற்செய்கைக்கும் —மனமுளவளவும் - மனமுள்ளமட்டும்—பாவனையும் - அநுஷிக்கத்தக்கபாவனைக்கும் —ஞானமுண்டெனவுளவளவும் - ஞானமுண்டெனக்கொள்ளுமளவும்—ஞேயமும - பேதரகிதமானவானந்தத்திற்கும —இயைந்தவன் - உள்ளவாறுசெய்ய விசைந்தவன்—பினையுளவளவும் - பின்னர்தானுள்ளவளவும்—நோய் - பிறவிநோயை—பிறர்க்கு - அயலவருக்கு—அகற்றும் - நீக்கவல்லவனுவன். எ - று. ஏ - அசை. இங்கேஞேயமெனல் பிரியத்தை. எனவே பிரியம் ஞெப்திக் கயலாகாது நிற்றலைப்பெற்றாம். (௩௫)

ஈசனை யிருத்துறு மிதயத் தோர்பொருள
ஆசையை யிருத்துத லநந்த ணாளர்தாம
வாசமுற் றிடுமொரு மனையிற் புன்செயல்
நீசனை யிருத்துத னிகாக்கு மென்பரால்.

(இ- ள்) ஈசனையிருத்துறுமிதயத்து - ஈசனைவைக்கத்தக்கவிருதயத்தில் —ஓர்பொருளாசையையிருத்துதல் - ஓர்பொருளின்மே லாசையைவைத்தல் — அந்தணாளர் - பிராமணர்கள் —தாமவாசமுற்றிடும் - தாம்வாசஞ்செய்யும் —ஒருமனையில் - ஒருவீட்டில் —புன்செயல்நீசனை - அற்பச்செயல் செய்யுநீசனை—இருத்துதல் - இருக்கச்செய்தலுங்கு—நிகர்க்குமென்பர்-ஒக்குமென்றறிஞர்கூறுவர். எ - று. ஆல் - அசை. ஈசனைவைக்கத்தகுந்தவிருதயத்தில் ஓர்பொருளாசையை இருக்கவைத்தல் பிராம்மணனிருந்த வீட்டில் மிக்கபாதகத் தொழிலாளனை இருத்துதலுக்கொக்கு மெனக்கூறியதென்க. (௩௬)

சினமுத லியமய றீர மாற்றுபு
வினைதப் வாய்மையா மெழுதகை யன்பெனும்

புனலொடு விரவியே பூசி னல்லது
மனமெனு மனையிடை வராதி லிங்கமே.

(இ - ள்.) சினமுதலிய - கோபமுதலியவாகிய—மயல் - செத்தைக ளை—தீரமாற்றுபு - ஒருங்கேதொலைத்து —வினைதபு - வினைகடந்த—வாய்மையாமெழுக்கை - உண்மைஞானமென்னு நறுஞ்சாணத்தை —அன்பெனும்புனலொடுவிரவியே - அன்பென்னுஞ்சலத்தொடுகலந்து —பூசினல்லது - மெழுகினலல்லாமல்—மனமெனுமனையிடை - மனமென்னும் வீட்டில் —வராதிலிங்கம் - சிவலிங்கம்வராது. எ - று. ஏ - அசை. பொருளல்லவற்றைப் பொருளெனக்கொள்ளும் பிராந்திகாரணமாகச் சினமுதலிய தீவினைகளெழலின் சினமுதலியமயலெனவும், குடிபுகுவோர் மெழுகியபின்றுதலால், உண்மையை மெழுக்காகவும், அன்பை நீராகவும் உருவகஞ்செய்து கற்பனைலிங்கத்துக்கிட மகங்கையாதல்போல அதிஷ்டானலிங்கத்துக்கிட மனமன்றி வேறின்மையின் மனமெனும மனையிடையெனக் கூறியவாறுகாண்க. வாய்மையாமெழுக்கு, அன்பெனும் புனல், மனமெனுமனை •இவை இயைபுருவகம். உண்மைஞானத்தையன் பால் மனத்திற்பூசித்தலாவது ; பிறவிபயமேலீட்டில் திரிபுடிநசிக்கக்கனி வுதோன்றும். தோன்றவே, அகத்திற் சிவப்பிரகாசம் விளங்கும். விளங்கவே, நிரதிசயானந்தமதாம். இங்ஙனமாதற் கியைந்த நெறியினிற்றலே. நெறி இயமமாதிகள். (௩௭)

காலமுங் கருமமுங் கடந்த காரணன்
பாலுறும் பரிசறப் பார்ம டந்தையர்
கோலமும் பொருளையுங் குறித்து நச்சுநர்
சீலமும் விரதமுந் தீய வென்பரால்.

(இ - ள்.) காலமுங் கருமமுங்கடந்த - காலத்தையுங் கருமத்தையுங்கடந்துநின்ற—காரணன்பாலுறும் - எவற்றிற்குங் காரணகர்த்தனை யிருப்பவனிடத்தில் வைத்த—பரிசற - பிரியநீங்க —பார்மடந்தையர் - பூமியிலுள்ளஸ்திரீகளின்—கோலமும் - அழகையும்—பொருளையும் - அவர்களைப் புணர்வான்வேண்டிய ஈட்டும்பொருளையும் —குறித்து - பற்றி—நச்சுநர் - விரும்புகின்றவர்களது—சீலமும் - ஆசாரமும்—விரதமும் - நோன்பும்—தீயவென்பர் - தீச்செயலினவாமென்று சத்துக்கள் சொல்லுவார்கள். எ - று. ஆல் - அசை. காலமுங் கருமமுங்கடந்த காரணனெனவே இவற்றிற்கதீதனெனப்பெறும். (௩௮)

வெங்கொலை களவுபொய் வெகுளி யாசையென்
றிங்கிவை யொடுமரீஇ யிருக்கின் றார்தமக்
கங்கையி னெல்லிபோ லவிர்ச டைப்பிரான்
செங்கையி லிருப்பினுஞ் சேயன் சேயனே.

(இ - ள்.) வெங்கொலை - கொடியகொலைத்தொழிலும்—களவு - திருடுதலும்—பொய் - பொய்சொல்லுதலும்—வெகுளி - கோபித்தலும்—ஆசை - பிறர்மனைநயத்தலும்—என்றிங்கிவையொடு - என்றுசொல்லப்பட்ட இத்தீச்செயலோடு—மரீஇயிருக்கின்றார்தமக்கு - கூடியிருப்பவர்களுக்கு—அங்கையினெல்லிபோல் - உள்ளங்கைநெல்லிக்கனிபோல—அவிர்சடைப்பிரான் - விளங்காநின்ற சடையையுடைய பரமசிவன்—செங்கையில் - உள்ளங்கையில்—இருப்பினும் - இஷ்டலிங்கமாக விருப்பினும்—சேயன் சேயனே - தூரத்தன்தூரத்தனே. எ - று. கொலையாதிகளினின் றகலார்க்கு இஷ்டலிங்கபூசையால் யாதுபயனுமின்றென்பது கருத்து. உள்ளங்கை நெல்லிக்கனிபோலெனல் ; அகம்புறமொத்திருத்தலைக் காட்டுங் குறியென்க. அகம்புறமொத்தலாவது ; நெல்லிக்கனியின் இரேகை அகம் புறமொத்திருக்கு மாறுபோன்று சிவத்தொண்டு அகம்புறமொத் திருத்தலையென்க. (௩௯)

பத்தரைப் புகழ்வுறப் பணிய வுண்டவர்
வைத்தன கொளவுடன் மருவப் பெற்றவர்
சித்தியுங் கடவுளர் சிறப்பும் வேறொரு
முத்தியும் பொருளென முன்னு றார்களால்.

(இ - ள்.) பத்தரை - பத்தரை—புகழ்வுற - புகழும்படி—பணியவுண்டவர் - பணியப்பெற்றவர்களும்—வைத்தன - வைத்தவாஸ்திகளை—கொள - அவர்கள் அநுபவிக்க—உடன்மருவப்பெற்றவர் - அவரோடுமருவியிருக்கப் பெற்றவர்களும்—சித்தியும் - அஷ்டமாசித்திகளையும்—கடவுளர்சிறப்பும் - தேவர்களுக்குச் சிறப்புச்செய்தலையும்—வேறு - தமக்குவேறாயிருக்கின்ற—ஒரு - ஒப்பற்ற—முத்தியும் - மோட்சத்தையும்—பொருளென - ஓர்பொருளாக—முன்னுறார்கள் - நினையார்கள். எ - று. ஆல் - அசை. பத்தரைப்போலத் தமமைப் பணியவிரும்புகிறவர்களும், வைத்திருக்கின்ற செல்வங்களை தாமேயநுபவிக்க விரும்புகின்றவர்களும், சித்தி முதலிய மூன்றையும் ஓர்பொருளாக இலக்குவையா ரென்பதுகருத்து. வைத்தன வினையாலணையும் பெயர். (௪௦)

இன்னண நன்னெறி யாவு மாயிடை
துன்னிய சிவகணந் துணிந்து கொள்ளவே
மன்னவ னெனுமருள் வசவ நாயகன்
தன்னொடு புகன்றனன் றலைவ னல்லமன்.

(இ - ள்.) இன்னணம் - இவ்வாறு —நன்னெறியாவும் - சன்மார்க்கங்களனைத்தையும்—ஆயிடைதுன்னிய - அவ்விடத்திநெருங்கிய —சிவகணம் - சிவகணங்கள்—துணிந்துகொள்ள - துணிந்தங்கீகரிக்குமாறு—மன்னவனெனும் - அரசனென்னத்தக்க—அருள் - கிருபைபொருந்திய—வசவநாயகன்றன்னொடு - வசவண்ணதேவரோடு—தலைவனல்லமன் - எவர்க்குந் தலைமையாநின்றுள்ள அல்லமதேவன்—புகன்றனன் - சொன்னான். எ - று. தலைவனல்லமன் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ( )

பாடினன் பரவினன் பணிந்த சொல்லுரை
ஆடினன் பன்முறை யல்ல மன்றிருத்
தாடலை புனைந்தனன் றண்ட நாயகன்
மூடிய வுவகையின் மூழ்கி னனரோ.

(இ - ள்.) தண்டநாயகன் - வசவண்ணன் —பாடினன் - துதித்தனன்—பரவினன் - வணங்கினன்—பணிந்தசொல் - வணக்கமாய வசனங்களை—உரையாடினன் - சொல்லினன் —பன்முறை - பலதரம் —அல்லமன் - அல்லமனது —திருத்தாள் - அழகியபாதங்களை —தலைபுனைந்தனன் - தனதுசிரசிற்கொண்டனன்— (இதன்றியும்) மூடியவுவகையில் - தடையற்றவானந்தத்தில்—மூழ்கினன் - முழுகினன். எ - று. அரோ- அசை. பணிபவை வெளிப்படுத்துஞ் சொல். (சஉ)

திருந்தவிவ் வகையுப தேசித் தெண்ணிலா
அருந்தவர் குழாத்தொடு மருணந் திப்பெயர்ப்
பெருந்தகை மகிழ்வுறப் பிரிவி லாரியன்
இருந்தனன் மலிகலி யாணத் தென்பவே.

(இ - ள்.) திருந்த - திருத்தமாக —இவ்வகை - இவ்வண்ணம் —உபதேசித்து - உபதேசஞ்செய்து—எண்ணிலா - அளவிறந்த—அருந்தவர்குழாத்தொடும் - பெரியோர் கூட்டத்தோடும்—அருள் - கிருபைபொருந்

தியநந்திப்பெயர் - வசவண்ணனென்னும் பெயரையுடைய—பெருந்த கை - பெருந்தன்மையுடையோன் —மகிழ்வுற - சந்தோஷிக்கும்படி—பி ரிவில் - நீங்காத —ஆரியன் - அல்லமதேவன்—மலி - வளப்பங்கணிறைந் த—கலியாணத்து - கலியாணபுரியில்—இருந்தனன் - இருந்தான்—என் ப - என்றறிவுடையோர் கூறுவர். எ - று. ஏ - அசை. பிரிவிலாரியன் உபதேசித்து இருந்தனன் எனக்கூட்டிப் பொருள்கொள்க. பெருந்த கை பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித் தொகை. (௬௫)

இட்டலிங்ககதி - முற்றிற்று.

ஆக கதி - ௧௬ - க்கு - விருத்தம் - அ௬அ.

---



பதினேழாவது

# கதலிவனகதி.

வேறு.

வரையிற் புண்ணிய வனத்தினில் வளங்கெழு நதியின்
கரையிற் பன்னெடு நாளருட் குரவனைக் காண்பான்
திரிதற் குற்றுலாய் வந்துமா தேவிகல் யாண
புரியிற் கண்டுவந் தேகிய முறையினிப் புகல்வாம்.

(இ - ள்.) வரையில் - மலைகளிலும் —புண்ணியவனத்தினில் - புண்ணியவனங்களிலும்—வளங்கெழு - வளப்பம்பொருந்திய—நதியின்கரையில்- நதிக்கரைகளிலும்—பன்னெடுநாள் - பலநெடுநாளாக—அருட்குரவனை - கிருபைபொருந்திய ஞானசிரியனை—காண்பான் - காணும்பொருட்டு—திரிதற்குற்று - திரியத்துணிந்து —உலாய்வந்து - எங்குந்தேடிவந்து—மாதேவி - மாதேவியென்பவள் —கலியாணபுரியில் - கலியாணபுரியென்னு மூரில்—கண்டுவந்து - பார்த்துவந்து—ஏகியமுறை - போனவிதத்தை— இனிப்புகல்வாம் - இனிமேல்சொல்லுதும். எ - று. மாதேவி திரிதற்குற்று உலாய்வந்து கண்டு வந்தேகியமுறையை இனிச்சொல்லுதும் என முடிக்க. (க)

காட்டி னும்பெருங் குன்றினுந் தேடினள் காணள்
வாட்டு றும்பிறப பெனும்பிணி மாய்வுற வீட்டில்
கூட்டு நன்மருந் திருப்பதை யறிஞராற் கூறக்
கேட்டு வந்துமா தேவியந் நகரினைக் கிடைத்தாள்.

(இ - ள்.) காட்டினும் - காடுகளிலும் —பெருங்குன்றினும் - பெரியமலைகளிலும்—தேடினள்காணாள் - தேடியுங்காணாதவளாய் —வாட்டுறும் - வருத்துகின்ற—பிறப்பெனும்பிணி - பிறவியென்னும்வியாதி —மாய்வுற - நசிக்க—வீட்டில்கூட்டும் - முத்தியிற்சேர்க்கும—நன்மருந்திருப்பதை - ந

ல்லமருந்திருக்கிறதை—அறிஞராற்கூறக்கேட்டு - சத்துக்களாற் சொல்லக்கேட்டு—வந்து - வந்து—மாதேவி - மாதேவியென்பவள்—அந்நகரினை - அந்தப்பட்டணத்தை—கிடைத்தாள் - அடைந்தாள். எ - று. பிறப்பெனும்பிணி உருவகம். (௨)

தலையில் வெண்கலை யொன்றுற வெற்றரை சமைந்து
பலிகொ ளும்படி மனைதொறு முலகெலாம் பழிச்ச
அலம ரும்பரற் கினியவள் வெற்றரை யாய்க்கட்
புலன்வி ருந்துணுங் கடிநகர் வீதியுட் புகுந்தாள்.

(இ - ள்.) தலையில் - சிரசில்—வெண்கலை - வெள்ளிய ஒருகலையை—ஒன்றுற - பொருந்த —வெற்றரைசமைந்து - வஸ்திரமுடுக்காமல் —பலிகொளும்படி - பிட்சைவாங்கும்படி—மனைதொறும் - வீடுகள்தோறும்—உலகெலாம்பழிச்ச - உலகமெல்லாந்துதிக்க —அமலரும - திரிகின்ற—பரற்கு-பரமசிவனுக்கு—இனியவள்-அன்புடையமாதேவி —வெற்றரையாய் - வஸ்திரந்தரியாதஅரையை யுடையவளாய் —கட்புலன் - கண்ணறிவு—விருந்துணும்-விருந்தாகவுண்ணத்தக்க—கடி - காவலுள்ள—நகர்வீதியுள் - பட்டணவீதியில்—புகுந்தாள் - பிரவேசித்தாள். எ - று. நாணமுதலிய நான்கில் மெய்யுணர் வெழுதற்கியைந்தது நாண விழப்பாதலால் அரற்கினியவளெனவும், விநோதக்காட்சிகளை விளக்கக் கட்புலன் விருந்துணுங்கடிநகர் வீதியெனவுங்கூறினர். வெண்கலை வஸ்திரமென்பதைச் சிலேடையிற் கொள்க. (௩)

நாற்கு ணங்களுண் முதற்குண மாகிய நாணைத்
தீர்க்கு மிம்மட முடையவள் யார்கொலோ தெரியேம்
பார்க்கி லின்னவள் பித்துடை யாளெனப் பலரு
நோக்கும் வண்ணம்வந் துற்றன ளுலகிய னோக்காள்.

(இ - ள்.) நாற்குணங்களுள் - மாதர்க்கியைந்த நான்குகுணங்களுள்—முதற்குணமாகியநாணை - முதற்குணமாகிய நாணமெனலை—தீர்க்கும் - நீக்கிய —இம்மடமுடையவள் - இங்ஙனமாயபேதைமையுடையவள் —யார்கொலோதெரியேம் - யாரோதெரிகிலம்—பார்க்கிலின்னவள் - யோசிக்குமிடத்திவள் —பித்துடையாளென - பித்துமேற்கொண்டவளென்று—பலருநோக்கும்வண்ணம் - யாவரும்பார்க்கும்படி —உலகியனோக்காள் - உலகாசாரத்தை மறந்தவளாகிய மாதேவியானவள்—வந்துற்றனள் - வந்

துசேர்ந்தாள். எ - று. அடிதோறும் நாற்குணம் இனவெதுகை, பின்னுள்ள நீர்க்கும் பார்க்கில் என்பன ஆசெதுகை. இஃதுண்மைத் துறவெனற் கையமென்னை? (௪)

உலகு ளார்தமைப் பேதையென் றுணர்ந்தன ளோதான்
உலகு ளார்தனைப் பேதையென் றுணர்குவ ரென்றோ
உலகு ளார்தமை நாணில ணீங்கிய வுடையாள்
உலகு ளார்தொழுந தண்டநா யகன்மடத் துற்றாள்.

(இ - ள்.) உலகுளார்தமை - உலகத்தாரை —பேதையென்றுணர்ந்தனளோ - மூடரென்றெண்ணினளோ—உலகுளார் - உலகத்தார்—தனை- தன்னை —பேதையென்றுணர்குவ ரென்றோ - பேதைமையுடையவளென்றெண்ணிக் கொள்வான்வேண்டியோ —உலகுளார்தமை - உலகத்தாரை — நாணிலள் - சற்றுநாணமில்லாதவளாய் —நீங்கியவுடையாள் - வஸ்திரமிழந்த மாதேவியம்மை—உலகுளார்தொழும் - உலகத்தாராலேவணங்கப்பெற்ற —தண்டநாயகன்மடத்து - வசவண்ணரதுமடத்தில் —உற்றாள் - வந்துசேர்ந்தனள். எ - று. இவ்விரண்டோகாரமும் ஐயம். (௫)

தண்ட நாயக னொடுபலர் நெருங்குறத் தவிசின்
அண்ட நாயக னல்லமன் வீற்றிருந் தருளக்
கண்டு போயரு கிறைஞ்சின ளாண்டமர் கணங்கள்
பண்டு தாமறி யாவியப் படைந்தனர் பார்த்து.

(இ - ள்.) தண்டநாயகனொடு - வசவண்ணருடன் —பலர்நெருங்குற - அடியார்பலருநெருங்க—தவிசின் - ஆசனத்தில்—அண்டநாயகன் - சகலவண்டங்களுக்கும் நாயகனாகிய—அல்லமன் - அல்லமதேவன்—வீற்றிருந்தருள - எழுந்தருளியிருக்க —கண்டுபோய் - போய்க்கண்டு—அருகு - சமீபத்தில்—இறைஞ்சினள் - வணங்கினள்—ஆண்டமர்கணங்கள் - அங்கிருந்தசிவகணங்கள்—பண்டுதாமறியா - முன்னரென்றுங்கண்டறியாத—வியப்படைந்தனர்பார்த்து - மிக்கவதிசயமடைந்தனர் மாதேவியைப்பார்த்து. எ - று. சிவகணங்கள் மாதேவியைப்பார்த்து வியப்படைந்தனரெனமுடிக்க. (௬)

நெஞ்ச மாரம லரக்கென நெக்குநெக் குருகச்
செஞ்சொல் வாய்தடு மாறவாள் விழிபுனல் சிந்தக்

கஞ்ச நாண்மலர்க் கைதொழு தனங்கனோய் காணுள்
அஞ்சி னேன்பவப் பிணியினி யருள்செயென் றழுதாள்.

(இ - ள்.) நெஞ்சம் - மனம்—ஆரழல் - மிக்கவக்கினியிற்பட்ட —அர க்கென - அரக்கைப்போல—நெக்குநெக்குருக - நைந்துநைந்துருகவும்— செஞ்சொல் - நடுங்கிக்கூறுமினியமொழிகள் —வாய்தடுமாற - வாயிற்ற டுமாறவும் —வாள்விழி - வாள்போன்றவிழிகளில் —புனல்சிந்த - நீர்பெ ருகவும்—நாள் - அன்றலர்ந்த—கஞ்சமலர் - தாமரைமலர்போன்ற—கை தொழுது - அஞ்சலிசெய்து —அனங்கனோய் - காமநோயை —காணுள்- காணுதமாதேவியம்மை —பவப்பிணி - செனனவியாதிக்கு —அஞ்சினே ன் - பயந்தேன்— (ஆதலின்) இனிக்கிருபைசெய்யவேண்டுமென்று— அழுதாள் - அழுதனள். எ - று, பவப்பிணி - உருவகம். (எ)

வீடு வப்பவ ராணெனப் பெண்ணென வேறே
ஏட லர்க்குழ லுமைகலை யேயிவ ளிவள்போல்
நாடி றிற்பரு வம்பெறு மவரிலை ஞானம்
கூடு தற்குரி யாளென வல்லமன் குறித்தான்.

(இ - ள்.) வீடு - மோட்சத்தை —உவப்பவர் - இச்சிப்பவர்கள் —ஆ ணென - ஆணென்றும் —பெண்ணென - பெண்ணென்றும்—வேறே - வேற்றுமையுளரோ—ஏடு - இதழ்களையுடைய —அலர் - மலர்களையணிந் த—குழல் - கூந்தலையுடைய—உமை - ஈசுவரியின்—கலையே - சாத்துவி தகலையே—இவள் - இவளாகும் —இவள்போல் - இவளைப்போல—நாடு றில் - நாடுமிடத்தில்—பருவம்பெறுமவரிலை - பக்குவப்பருவமடைந்தவரி ல்லை—ஞானங்கூடுதற்கு - ஞானமடைதற்கு —உரியளென - உரியவளெ ன்று—அல்லமன் - அல்லமதேவன் —குறித்தான் - கருதினன். எ - று. முத்தியடைவதிற் பேதமின்மையைக்காட்ட வீடுவப்பவராணெனப்பெ ண்ணெனவேறேவென்றார். (அ)

தானலாதொரு பொருளிலைச் சகமென வென்னும்
ஞான மேவலாற் காமவின் பந்தனை நண்ணுள்
தான லாதர வாற்றனைத் தழுவியின் புறுநர்
ஏனை மாந்தரு ளுளர்கொலோ வென்றன ரிருந்தார்.

(இ - ள்.) தானலாது - தன்னைத்தவிர—சகமென-சகமென்று—ஒரு பொருளிலை - முடிவாகவொருபொருளுமில்லை —என்னும் - என்றுணர்தற்

யைந்த—ஞானமேவலால் - அறிவையடைதலால் —காமவின்பந்தனை - காமவின்பத்தை—நண்ணாள் - அடைந்திலள்—தான் - தான்—நல் - நல்ல—ஆதரவால் - அன்பினால்—தனைத்தழுவி - தன்னைத்தான்றழுவி—இன்புறுநர் - அதற்கியைந்தவின்பநுகர்வோர் —ஏனைமாந்தருள் - ஏனையமனிதருள்—உளர்கொலோ - உண்டோ—இருந்தார் - அவ்விடத்திருந்தவர்கள்—என்றனர் - என்றுசொல்லினர். எ - று. தானென்னுநிலையையன்றி அன்னியமெனல்சற்றுமில்லை யெனத்துணிபுறச்செய்பு நிச்சயஞானத்தை இவளடைந்திருத்தலால் அயல்இன்பமாகஇவளையெங்ஙன நண்ணு மென்பார், தானலாலொருபொருளில்லை சகமெனவெண்ணுஞான மேவலாற்காமவின்பந்தனை நண்ணாளெனவும, செகமுதலியவனைத்துந் தோன்றி விளங்கி யழிதற் குபாதானமாகநிற்றலன்றித் தானமாகவுநிற்பது அறிவாகிய தன்னைத்தவிரச் சோதனைமுகத்தால் வேறின்றெனத் தெளிந்தார் தன்னைத்தழுவி யின்புறுதற்குத்தக்கோர் ஏனைய ரரியரொன்க்காட்டத் தானலாதரவாற்றனைத் தழுவியின்புறுநரேனைமாந்தரு ளார்கொலோ வெனவுங்கூறினர். எனவே ; தன்மருளே செகமெனவுந் தன்தெருளே சிவமெனவு முணர்த்தற்பாலது அறிவெனப்பெற்றும். உளர்கொலோவென்புதி லோகாரம் எதிர்மறை. தானெனலையன்றி அறிவும், அறிவையன்றி அறியாமையும், அறியாமையன்றிச் சகமும், இன்றெனத்தெளிவிக்கறபாலதுசாவிரஞானமெனக் கண்டாம. (௬)

இன்று காமனை வென்றவ ளினையளா யிழையோ
டொன்று மேனிய ளுகியகண் ணுத லொருவன்
வென்று ளானென வுலகினி லெடுத்தசொன் மெய்ம்மை
யன்று போலுமென் றியம்பினர் சிலரவ ணமர்ந்தோர்.

(இ - ள்.) இன்று - இப்போது—காமனைவென்றவள் - மன்மதனைவென்றவள்—இனையள் - இத்தகையினளாகியஇவளொருத்தி —ஆயிழையோடு - சிறந்தவாபரணமணிந்தவுமையவளோடு —ஒன்று - அர்த்தபாகமாகப்பொருந்திய—மேனியனாகிய - திருமேனியையுடையனாகிய —கண்ணுதலொருவன் - நெற்றிக்கண்ணையுடையபரமசிவனொருவன்—வென்றுளானென - செயித்தவனென்று —உலகினில் - உலகின்கண்—எடுத்தசொல் - யாவருந்துணிந்தெடுத்தமொழி —மெய்ம்மையன்றுபோலும் - மெய்ம்மையல்லபோலும்— என்றியம்பினர் - என்றுசொன்னார்கள்—அவணமர்ந்தோர் - அவ்விடத்திருந்தோர்களில் —சிலர் - சிலபெயர். எ - று. இன்றுகாமனைவென்றவளிவள் அன்றுகாமனைவென்றவன் பரன் இது

மெய்மையல்லவாவென்பார், மெய்மையன்றுபோலுமென்றார். ஆயிழையோ டொன்றுமேனியனாகிய கண்ணுதலொருவன் அன்றுகாமனைவென்றுளானெனக்கூட்டிமுடிக்க. இதனால் உலகினிலெடுத்தசொல்மெய்மை போலுமென்றிசைக்கினும் பெரும்பாலும் பொருந்தும். ஆயிழை வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (௧௦)

உடல மானமற் றிவளென வனைத்தையு மொருங்கு
விடவ லார்க்கலா விளமையுஞ் செல்வமும் விரும்பி
நடலை வாழ்வினில் வெறுப்புறாப் புல்லிய நரர்க்குத்
தொடரு மாவினை தொலையுமோ வெனச்சிலர் சொன்னார்.

(இ - ள்.) உடலமானம - தேகாபிமானம்—அற்றிவளென - அற்றிருக்கின்றவிவளைப்போல—அனைத்தையும் - இருவகைப்பற்றையும்—ஒருங்கு- ஒருமிக்க—விடவலார்க்கலால் - விடவலியுளோர்க்கன்றி—இளமையும - இளமைப்பருவத்தையும்—செல்வமும் - மிக்கபாக்கியத்தையும்—விரும்பி- அழியாப்பலனாகவிச்சித்து —நடலைவாழ்வினில் - வஞ்சகமானவாழ்வினில் —வெறுப்புறா - இயற்கையில்வெறுப்புவராத —புல்லியநரர்க்கு - அற்பபுத்தியுடையமனிதர்க்கு —தொடரும - தொன்றுதொட்டுவிடாதுதொடருகின்ற —மாவினை - மகத்தாகியவிருவினைச்சம்பந்தம் —தொலையுமோ - ஒழியுமோ—என - என்று—சிலர்சொன்னார் - சிலபெயர்சொல்லினர். எ - று. எனவே இவள்தேகாபிமானமற்றவளாதலின் அருவினைத்தொடர்புநாசம் இவளுக்கேயெனப்பெறற்றாம். அற்றவிவளெனல் அற்றிவளென்றாயது புகழ்புரிந்தில்லிலோர்க் கென்றிருத்தல்போன்று ஈறுதொகுக்கப்பட்டது. நடலை துன்பமெனினுமமையும். (௧௧)

சென்று தேடிநாந தத்துவ மருள்செயுஞ் சீட
ரன்றி ஞானதே சிகனுள னேவென வாய்ந்திட்
டின்று மேவுமா தேவிபோ லிலையென வெம்மான்
நின்ற ஞானமூ லந்தனை யுணர்த்துவா னினைநதான்.

(இ - ள்.) நாம் - யாம்—தேடிச்சென்று - தேடிப்போய்—தத்துவம்- ஞானத்தை—அருள்செயும் - உபதேசிக்கத்தக்க—சீடரன்றி - சீடரேயல்லாமல்—ஞானதேசிகன் - ஞானாசிரியன் —உளனேவென - இருக்கின்றானேவென்று—ஆய்ந்திட்டு - பலவிடத்துந்தேடியலைந்து —இன்று - இப்போது—மேவும்-இங்கேவந்த—மாதேவிபோல் - மாதேவியென்பவளைப்

போல்—இலையென - தக்கசீடரில்லையென்று —எம்மான் - எமதுகர்த்த ஞகியவல்லமன் —நின்ற - எவற்றிற்குமேலாகநின்ற—ஞானமூலந்தனை - ஞானத்துக்கு மூலமாயிருப்பதை —உணர்த்துவானினைந்தான் - உபதே சிக்கநினைத்தான். எ - று. நாம் தேடிப்போய் உபதேசிக்கும் சீடரைப்போலாகாது இவனென்னைத் தேடிவரலால் இவனுக் குபதேசிக்கத் தொடங்கினு ரென்பது கருத்து. (கஉ)

பூத நீயலை பொறிகளு மலையலை புந்தி
யேது நீயலை யிவற்றினை மயங்கியா னென்னும்
போத நீயலை யென்றிவை யனைத்தையும் போக்கிச்
சோதி யாகிய பிரமமே நீயெனச்சொல்லி.

(இ - ள்.) பூதநீயலை - பஞ்சபூதங்களுநீயல்லை —பொறிகளுமலை - ஐம்பொறிகளுநீயல்லை—அலைபுந்தி - புத்தியுநீயல்லை—ஏதுநீயலை-மற்றவெதுவு நீயல்லை—இவற்றினைமயங்கி - இவற்றைமெய்யெனமயக்கமுற்று —யானெனும் - நானென்றுகொள்ளும் —போதநீயலை - அறிவுநீயல்லை—என்று - என்றாராய்ந்து—இவையனைத்தையும்போக்கி - இவைகளையெல்லாமொருங்கேயொழித்து—சோதியாகியபிரமமே - சோதிவடிவமாகியபிரமஸ்வரூபமே—நீயெனச்சொல்லி - நீயென்றுவிளக்கி. எ - று. நீயாகிறவறிவையன்றிச் சுயஞ்சோதியும், சுயஞ்சோதியையன்றிப் பிரமமெனவும் வேறின்மையின் சோதியாகியபிரமமே நீயெனச்சொல்லியென்றார். குணகுணியெனப்பேதிப்பாரைமறுக்கச் சோதியாகியபிரமமென்றார். காலமாலையால் ஒளிகுன்றியதுபோற்றோற்றினுஞ் சூரியனுக் கியல்பன்றதல்போன்று பருவத்தாலான்மா வொளிகுன்றியதுபோற் றோற்றினு மதற்கியல்பன்றென்க. இங்கே போதமெனல்கற்பனையறிவை. (கரு)

ஞேய ஞானஞா துருவெனு மிவைபலநிற்கு
மாயின் வேறறு முத்தியன் றதுசக மாமென்
றேயு மாறிது வதுவெனுஞ் சுட்டிலா வியல்பை
மாயை மாறிய தேவிபா லருளினன் வள்ளல்.

(இ - ள்.) ஞேயஞானஞாதுருவெனும் - ஞேயஞானஞாதுருவென்கின்ற—இவை - இவைகள்—பலநிற்குமாயின் - பலவாகவெங்கணுநிற்குமாயின்—வேறறுமுத்தியன்று - ஐக்யமுத்தியன்று—அது - அம்முத்தி—சகமாமென்று - திரிஸ்யமாகியபத முத்தியாமென்று—ஏயுமாறு - பொருந்தும்வண்ணம் —இதுவதுவெனுஞ்சுட்டிலா - கூடஸ்தபிரமமென்னு

ஞ்சுட்டிறந்த—இயல்பை-என்றுமிருந்தபடியிருக்குமியல்புவடிவை —மாயைமாறியதேவிபால் - மாயாசம்பந்தங் கடந்தமாதேவியினிடத்தில்—வள்ளலருளினன் - அல்லம னநுக்கிரகித்தான். எ - று. இவைபலநிற்றல் இவைபலநிற்றலெனல் திரிபுடியல்லாத காட்சிப்பொருள் கருத்துப்பொருளின்றெனக்காட்டற்கென்க. வேறறுமுத்தியென்றதனால் ஐக்யமுத்தி என்றுங்கற்பனையிறந்தவிடத்ததாதலின் இதுவதுவெனுஞ்சுட்டெனலைக் கூடஸ்தபிரமமென்றுங்கொண்டாம். இங்கேயியல்பெனல் அதிஷ்டானவாரோபங்கடந்தநிலையை. ஏயுமாறெனல் தக்கசிந்தனை திண்மைக்கியைந்தநெறியை. (௧௪)

தேறு நீரென வெனதுளந் தெளித்ததே சிககைம்
மாறு காண்கிலே னுடல்பொரு ளாவிகண் மதிப்பில்
வேறு போய்நின வாயின வென்றவள் விழிக
ளூறு நீரொடு மல்லமன் றொழு துளைந்தாள்.

(இ - ள்.) தேறுநீரென - தேற்றாங்கொட்டையாற்றெளிவித்தநீரைப்போல—எனதுளந்தெளித்த-எனதுள்ளத்தைத்தெளிவித்த —தேசிக-ஆசிரியமுகூர்த்தமே —கைம்மாறுகாண்கிலேன் - இதற்குப்பிரதியுபகாரந்தெரிகிலன்—உடல்பொருளாவிகள்மதிப்பில் - உடல்பொருளாவிகளைமதிக்குமிடத்தில் —வேறுபோய்நினவாயின - வெவ்வேறாகச்சிதைந்தநினைவாய்நின்றன—என்று - என்றுசொல்லி—அவள் - அந்தமாதேவியென்பவள் —விழிகள் - கண்களில் —ஊறுநீரொடும் - பெருகாநின்றசலத்தோடும் —அல்லமன்றாள் - அல்லமதேவரதுபாதங்களை—உளைந்து-வருந்தி—தொழுதாள் - வணங்கினாள். எ - று. வேறுபோய்நினைவாதல் பலவாறாகச்சிதைந்தசங்கற்ப வடிவாதலை. தெளித்தவென்பதில் விவ்விகுதி தொகுக்கப்பட்டது. தொழுதுளைந்தாளென்பதுமுன் பின்னாகமாற்றியுரைக்கப்பட்டது. (௧௫)

அன்னை நீயினிக் கதலிமா வனத்தினை யடைந்திட்
டென்னை மேவினை கேட்டவிப் பொருளினை யெல்லா
நின்னி னீதெளிந் துறுதிகொ ணிதித்தியா சனத்தில்
மன்னு வாயென வேவினன் றற்கொடை வள்ளல்.

(இ - ள்.) அன்னை - தாயே—நீயினி - நீயினிமேல்—கதலிமாவனத்தினை - பெரிதாயவாழைத்தோப்பை—அடைந்திட்டு - சேர்ந்து—என்னை மேவினை - என்னையடைந்தாய் —கேட்டவிப்பொருளினையெல்லாம் - நீ கேள்வியுற்றவிந்தவர்த்தத்தையெல்லாம்—நின்னில் - உனக்குள் —நீதெ

ளித்து - நிதெளிவுற்று — உறுதிகொள் - திடங்கொள்ளு — நிதித்தியாச னத்தில் - நிதித்தியாசனமென்னுநிலையில் — மன்னுவாயென - நிலைபெற் றிருப்பாயென்று—தற்கொடை - தன்னைக்கொடுக்கத்தக்க —வள்ளல் - வள்ளலாகிய அல்லமன்—ஏவினன் - அனுப்பிவிட்டனன் எ - று. நிதித் தியாசனமெனல் ஐயந்திரிபறத்தெளிதலை. (௧௬)

வள்ள லுண்மலர்த் திருவடி வணங்கியம் மருங்கில்
கொள்ளை மாதவர் தாடொழு தருள்விடை கொண்டு
வெள்ள மாகிய வன்புநின் றுய்த்திட மேவித்
தெள்ளு மாரமு தனையவள் பருப்பதஞ் சேர்ந்தாள்.

(இ - ள்.) வள்ளல் - அல்லமருடைய—நாள் - அன்றலர்ந்த—மலர்த்தி ருவடிவணங்கி - தாமரைமலர்போன்றபாதத்தைவணங்கி —அம்மருங்கி ல் - அதற்குப்பக்கத்திலுள்ள—கொள்ளை - பேரின்பத்தைக்கொள்ளைகொ ள்ளையாகவனுபவிக்கும் —மாதவர் - பெரியோர்களது—தாடொழுது - அ டிகளைவணங்கி—அருள் - கிருபையோடும்—விடைகொண்டு - விடைபெற் றுக்கொண்டு—வெள்ளமாகியவன்பு - வெள்ளம்போற்பெருகியஅன்பு—நி ன்றுய்த்திட - நின்றுசெலுத்த—மேவி-இருந்து —தெள்ளும் - தெளிவாகி ய—ஆர்-நிறைந்த—அமுதனையவள் - அமுர்தம்போல்பவள்—பருப்பதஞ் சேர்ந்தாள்-ஸ்ரீசைலத்திற் சேர்ந்தாள். எ - று. வணங்கி தொழுது வி டைகொண்டுமேவி அமுதனையவள் எனக்கூட்டிமுடிக்க. (௧௭)

வசவன் பாலரு ளல்லம னுற்றென வானோர்
பசுவின் பானிறை சுனையிடை நழுவிவீழ் பழத்தை
மிசையும் பூங்கிளி மிழற்றொலி கடலென விரவ
விசையும் பாசிலைக் கதலியங் காடதி லிலங்கும்.

(இ - ள்.) வசவன்பால் - வசவண்ணரிடத்தில்—அருள் - கிருபைபொ ருந்திய—அல்லமனுற்றென - அல்லமன்வந்ததுபோல—வான் - சுவர்க்க த்திலுள்ள —ஓர்பசுவின்பானிறை - ஒப்பற்றபசுவின்பால்நிறைந்த—சு னையிடை - சுனையினிடத்தில் —நழுவிவீழ்பழத்தை - தானேநழுவிவிழு கின்றபழத்தை—மிசையும் - உண்ணுகின்ற — பூங்கிளி - அழகியகிளிகள்— மிழற்றொலி - சொல்லினோசை —கடலெனவிரவ - கடல்போற்கலந்தொ லிக்க—இசையும் - அதற்கியைந்த—பாசிலை - பசியவிலைகணிறைந்த—க தலியங்காட்டில்-கதலிவனம் அம்மலையில் —இலங்கும் - பிரகாசிக்கும் எ - று. (௧௮)

விரிந்த வாழையி னெட்டிலை மிசைநிறை மதியம்
பொருந்து மாறுவிண் முழுதையு மளித்தருள் புத்தேள்
அருந்த வாய்மடைத் தொழிற்றிற நிரம்பிய வடிசில்
சொரிந்த தாமென மனங்களி கூர்தரத் தோன்றும்.

(இ - ள்.) விரிந்தவாழையின் - தலைவிரிந்தவாழைமரங்களின் —நெட்டிலைமிசை - நீண்டவிலைகளின்மேல் —நிறைமதியம்பொருந்துமாறு - பூரணசந்திரகிரணங்கள்பொருந்தும்வித —விண்முழுதையும் - ஆகாயமுதலியவனைத்தையும்—அளித்தருள்புத்தேள் - படைத்தபிரமன்—அருந்தவாய் - வாயினுலுண்பான்வேண்டி —மடைத்தொழிற்றிறம் - சமையல்பாகவகை—நிரம்பிய - நிறைவேறிய—அடிசில் - சாதத்தை —சொரிந்ததாமென - போட்டதுபோலிருக்கின்றதென்று —மனங்களிகூர்தர - மனஞ்சந்தோஷிக்கும்படி —தோன்றும் - தோற்றும். எ - று. வாழைவனத்தில் இலைகளின்மேல் பூரணசந்திரகலைகணிறைந்து காணப்படுதல் பிரமன்தனது வாயாலருந்தும்படி வாழையிலைகளின்மேலிட்டசாதத்தைப்போ லிருக்கின்ற தெனப்பொரு ளமையக்கண்டாம். பொருந்துமாறுதோன்றுமென முடிக்க. இங்கெநிறைமதியம் சந்திரனது பூரணகலையை. (௧௯)

இனைய வாழையங் காடுகண் டெங்கண்மா தேவி
முனிவர் வானவ ரியாவரு முறைமுறை போற்றத்
தனிய ளாயொரு புறம்பசந் துளசுவை தருசெங்
கனிய வாவிய வுளமொடு மிருந்தனள் களித்து.

(இ - ள்.) இனைய - இத்தகையதாகிய —வாழையங்காடுகண்டு - அழகியவாழைவனத்தைக்கண்டு —எங்கள்மாதேவி - எமது மாதேவியென்பவள்—முனிவர் - ரிஷிகளும்—வானவர்யாவரும் - தேவர்முதலியவனைவரும் —முறைமுறைபோற்ற - ஒழுங்காகத்துதிக்க —தனியளாய் - ஒன்றியாய் —ஒருபுறம் - ஒருபக்கத்தில் —பசந்துள - பசுமையாகநின்றுள்ள—சுவைதரு - மிக்கமதுரந்தரத்தக்க—செங்கனி - சிவந்தபழங்களை—அவாவியவுளமொடும் - விருப்புற்றமனத்தோடும்—இருந்தனள்களித்து - சந்தோஷித்திருந்தனள். எ - று. மாதேவி கண்டு களித்து தனியளாயிருந்தனளென முடிக்க. (௨௦)

கதலிவனகதி - முற்றிற்று.

ஆக கதி - ௧௭ - இ - விருத்தம் - ௮௫௮.

பதினெட்டாவது

# சாதகாங்ககதி.

வேறு.

வினைய டுத்த விழுமந் துடைத்தெமக்
கனைய டுத்த வருளுடை யல்லமன்
மனன டக்கம் வசவற் குணர்த்துதல்
தனையெ டுத்தினிச் சாற்றுது நாமரோ

(இ - ள்.) வினையடுத்த - வினைகாரணமாகவந்த— விழுமந்துடைத்து - துன்பத்தைநீக்கி—எமக்கனையடுத்த - நமக்குத்தாய்போலும்வந்த —அருளுடையல்லமன் - கிருபைபொருந்திய வல்லமதேவன் —மனனடக்கம் - மனோநாசத்தை—வசவற்கு - வசவண்ணருக்கு —உணர்த்துதல்தனை-அறிவித்ததை—இனி - இனிமேல்—நாமெடுத்துச் சாற்றுதும் - நாமெடுத்துச்சொல்லுதும். எ - று. அரோ - அசை. இங்கேவிழுமமென்பது பிறவித்துன்பத்தை ; வினையென்றது இருவினைகளை. அன்னையென்பது இடைகுறைந்தது. (க)

காவி னீடுங் கதலி வனத்துமா
தேவி போதத் திருவருள் செய்தவண்
மேவி ஞான விளக்குற வெம்முடை
ஆவி போலும் வசவ னுரைகுவான்.

(இ - ள்.) காவில் - பூங்காவனத்தில்—நீடுங்கதலிவனத்து - நீண்டவாழைவனத்தில்—மாதேவி - மாதேவியென்பவளுக்கு—போதத்திருவருள்செய்து - ஞானோபதேசஞ்செய்து—அவண்மேவி - அவ்விடத்திற்றங்கி—ஞானவிளக்கு - ஞானதீபம்போன்றவல்லமன் —உற - இருக்க—எம்முடையாவிபோலும் - நம்முடையுயிர்போலுமிருக்கின்ற—வசவனுரைகுவான் - வசவண்ணன்சொல்லுவான். எ - று. ஞானவிளக்கு உருவகம். ()

மத்தர் வாத மயக்க மிலாதுயர்
முத்தி சாதன மொன்று மொழிந்தருள்
அத்த நீயென் றடிக டொழுதெழப்
பத்தி வேண்டும் பரமன் பகருமால்.

(இ - ள்.) மத்தர் - உன்மத்தர்களது —வாதமய்க்கம் - வாதஞ்செய்தலின்மயக்கம்—இலாது - இல்லாமல்—உயர்முத்திசாதனமொன்று - மேலாயவோர் முத்திசாதனத்தை—அத்த - கர்த்தனே—நீமொழிந்தருளென்று - நீயனுக்கிரகிப்பாயென்று —அடிகடொழுதெழ - பாதங்களில் வணங்கியெழுந்திருக்க —பத்திவேண்டும்பரன் - அன்பர்களதுபத்தியை விரும்புமல்லமதேவன்—பகரும் - சொல்லுவான். எ - று. ஆல் - அசை. நிலைதெரியாது மயங்கிவாதிப்போர் மதத்தராதலின் மத்தவாத மயக்கமெனப்பட்டது. உயரென்ற விசேஷணத்தானே ஐக்யமுத்தி யென்பது பெற்றாம். (ரு)

பரம முத்தி பதமபெறு மேதுவுட்
கரண சுத்தி யதனது காரணம
அரணெ ரித்த வமலற் குறித்தநற்
கிரியை யித்திறம் வேதங் கிளக்குமால்.

(இ - ள்.) பரமமுத்திபதம் - ஐக்கியமுத்திபதத்தை—பெறுமேதுவுள - அடைதற்கியைந்த காரணங்களுள்—கரணசுத்தி - திரிகரணசுத்தியே—அதனதுகாரணம் - அதனதுமுக்கியகாரணமாம்—அரணெரித்த - திரிபுரத்தையெரித்த —அமலன் - பரமசிவன்—குறித்த - ஏற்படுத்திய—நற்கிரியைஇத்திறம் - [illegible]கிரியையாகியவிந்நிலைத்திறத்தை—வேதங்கிளக்கும் - வேதஞ்சொல்லும். எ - று. ஆல் - அசை. கரணசுத்தி ; திரிகரணமொருங்குபடலை. (சு)

மனமி லிங்க மருவிலை யேயுட
றனிலி லிங்கந் தரித்து மிலையிலை
யெனவி யம்பு மிணையிலி யாகம
நினைவு ரூன்கழ னிற்க நிறுத்தினாய்.

(இ - ள்.) மனம் - மனமானது—இலிங்கம் - இலிங்காகாரமாக—மருவிலையேல் - ஆகாதிருக்கில்—உடல்தனில் - தேகத்தில்—இலிங்கந்தரித்தும் -

இஷ்டலிங்கந்தரித்தும்—இலையிலை - சற்றும்பயனிலை—என - என்று—இ ணையிலியாகமம - ஒப்பற்ற பரமசிவன்சொல்லியஆகமம் —இயம்பும் - சொல்லும் —நினைவு - தனதுசிந்தையை —அரன்கழல் - பரமசிவனு டைய திருவடியில் —நிற்க - அழுந்த —நிறுத்தினுய் - பிறழாது நிறுத் திய வசவண்ணனே. எ - று. மனம் இலிங்காகார மாகாவிடத்து உட லிற்றரித்த இலிங்கத்தாற் பயனின்றென்பது கருத்து. (ரு)

தாவி லாத மனமொடு சார்தரா
தோவு மாயி னுலகிற் புனலுமொண்
பூவு நாடொறும் போக்குறு பூசனை
ஆவி போகிய வாக நிகர்க்குமால்.

(இ - ள்.) உலகில் - உலகின்கண் —புனலும் - அபிஷேகஞ் செய்யுஞ் சலமும்—ஒண்பூவும் - அருச்சிக்கின்றவழகியபூவும்—நாடொறும் - தினந் தோறும்—போக்குறு - விதிவழுவாதுசெய்கின்ற—பூசனை - பூசையான து—தாவிலாத - ஒன்றிலும்பற்றுத—மனமொடுசார்தராது - மனத்தோ டுசேராமல்—ஓவுமாயின் - நீங்குமாயின் —ஆவிபோகிய - உயிர்நீங்கிய— ஆகநிகர்க்கும் - பிணத்துக்கொப்பாகும். எ - று. ஆல் - அசை. மனநி லையுறுதியற்றபூசை பிணம்போலுமென்க. (சு)

புறம்பு காண்குவன் புல்லிய னீசனை
அறிந்த ஞானி யகமுறக் காண்பனுல
எறும்பி கானுறி லின்கரும பேகொளும்
செறிந்த வாடிலை தின்பன வென்பவே.

(இ - ள்.) புறம்பு - பகிர்முகத்தில் —புல்லியன் - அறிவீனன் —ஈச னை - பரமசிவனை—காண்குவன் - தரிசிப்பன்—அறிந்தஞானி - தன்னை த்தானுள்ளவாறறிந்தஞானவான் —அகம் - அந்தர்முகத்தில் —உற - ஐ யக்கியமுற—காண்பன் - தரிசிப்பன்— (யாதுபோலுமெனின்) எறும்பி- யானையை—கானுறில் - நோக்குமிடத்தில்—இன்கரும்பேகொளும் - இ னியகரும்பையேதின்னும் —செறிந்தவாடு - மயிர்களாணிறைவுற்ற ஆடு கள் —இலைதின்பன் - இலைகளைத்தின்பனபோலும் —என்ப - என்றறி ஞர் கூறுவர். எ - று. ஞானியென்றதனுல் புல்லியன் கருமியெனற்கு யாதுமுரீண்? அகமுறக்காண்டல் சிந்தை சுயஞ்சோதியாக விளங்கக்கா ண்டலை.புறம்புகாண்டல் பாவாபாவங்களி லொன்றை. அந்தர்முகம் பொ ன் பகிர்முகம பணி எனவே சொப்பிரகாசமே செகமூர்த்தியாகத் தோற

றலெனப்பெற்றும். பாவமிருவகைப்படும் அவை; கிரியாபாவம் மனோ பாவமெனத் தன்னைத் தானறிந்தஞானி ஈசனையகமுறக்காண்பன்; த ன்னைத்தா னறியாத புல்லியனீசனைப் புறம்புகாண்பன் எங்ஙனமெனில் ஒருவன்தன்னையுபாதியாகக்காணவும் சிவமுபாதியாகவும் அதிஷ்டான மாகக்காணளவு மதிஷ்டானமாகவும் விளங்குவதைப்பற்றி யென்க. அறி ந்தவென்ற விலேசானே யிங்ஙனங்கொள்ளப் பெற்றும். கரும்பு ருசி போல்வன் ஞானிக்கீசனெனவும் அதன்தழை ருசிபோல்வன் அஞ்ஞா னிக் கீசனெனவுங் கொள்ளக்கிடந்தன. இதனையனுபவத்திற் காண்க.

கரங்க ணல்ல கருமஞ் செயாநிற்பத்
திரிந்து செல்லுஞ் செலாதவி டத்துநெஞ்
சொருங்கு றாத வொருமனந் தன்னினும்
பரந்த வல்லற் படுக்கும் பகையிலை.

(இ - ள்.) கரங்கள் - கைகள் —நல்லகருமம் - சிவபூசைமுதலியபுண் ணியகருமங்களை —செயாநிற்ப - செய்துகொண்டிருக்க— (அக்கணத்தி ல்) நெஞ்சு - மனமானது —திரிந்து - இதற்குமாறாக —செலாதவிடத் து - செல்லத்தகாதவிடங்களில் —செல்லும் - போயலையாநிற்கும் —ஒரு ங்குறாத - ஒன்றுபடாற்கியையாத —மனந்தன்னினும் - மனத்தைக்காட் டிலும் —பரந்த - மிகுந்த —அல்லற்படுக்கும்பகை - துன்பத்தைவிளை விக்கும்பகைமை —இலை - வேறெங்கணுமில்லை. எ - று. மனமொருங் குறாதவிடத்துப்புண்ணிய கருமம்யாதுசிறந்தியற்றினும் பயனின்றென்க.

துயிலை யின்பெனச் சொல்லுத லிந்தியத்
தியலு நெஞ்ச மிலாமையி னலன்றோ
பயிலு நெஞ்சம் பரந்து திரிதருஞ்
செயலி லில்லைச் சிறிதுஞ் சுகமரோ.

(இ - ள்.) துயிலை - நித்திரையை —இன்பெனச்சொல்லுதல் - சுகமெ னவெவருங்கூறுதல்— இந்தியத்தியலும் - இந்தியவயப்பட்டுநடக்கும்— நெஞ்சம் - மனம் —இலாமையினலன்றோ - அப்போதில்லாமையினலல் லவா—பயிலும் - சொல்லப்பட்ட —நெஞ்சம் - மனம்—பரந்து - பலவா றுகப்பரவி—திரிதருஞ்செயலில் - அலைந்துதிரியுஞ்செயலில் —சுகம் - சு கமென்பது —சிறிதுமில்லை - தினைத்துணையுமில்லை. எ - று. எனவே எங்கேமனமில்லையோ அங்கேசுகமெனப்பெற்றும். பெறவேசகலத்தி

லுமயங்காதுவஸ்து சோதனைப்படியங்கெறிநிற்கில் மனமென்பதின்றிக்க லங்காநிலைவாய்க்கும்; வாய்க்கில்துக்க நிவிர்த்தியுந்தடையற்ற வானந்தமு மாமெனக்கண்டாம். (கூ)

மனமொ ருத்தன் வசப்படு மேலவன்
பினைவ ருத்தும் பிறப்பை யடைந்திடான்
மனமொ ருத்தன் வசப்படா தோடுமேல்
நனிபி றப்பிடை நாளுஞ் சுழலுமே.

(இ - ள்.) மனம் - மனமானது —ஒருத்தன்வசப்படுமேல் - ஒருவன் சொன்னவாறு கேட்கப்படுமாயின்—அவன் - அந்தமனத்தையடக்கியவ ன்—பினை - பின்னும் —வருத்தும்பிறப்பை - வருத்தப்படுத்தும்பிறவி யை—அடைந்திடான் - அடையான்—மனம் - அந்தமனமானது—ஒருத் தன்வசப்படாது - ஒருவன்வசத்திலடங்கிநில்லாது —ஓடுமேல் - கண்ட படியோடுமாயின்—நனிபிறப்பிடை - அளவிறந்தபிறப்பில் —நாளுஞ்சுழ லும் - எப்போதுஞ்சுழன்றுகொண்டிருப்பன். எ - று. பிறப்பையடைந் திடானென்றதனால் நனிப்பிறப்பிடை நாளுஞ்சுழலுவன் என்றார். (கO)

அறவி னைக்கு மரும்பொரு ளின்பொடு
பெறுவ தற்கும பெருங்கல்வி கற்றுயர்
விறலி னுக்குநல் வீரந் தனக்குமொண்
டுறவி னுக்குந் துணைமன மென்பவே

(இ - ள்.) அறவினைக்கும் - அறத்தின்வழிச்சேறற்கும்—அரும்பொரு ள் - அரியதிரவியங்களையும் —இன்பொடு - சிற்றின்பத்தையும்—பெறு வதற்கும் - அடைதற்கும்—பெருங்கல்விகற்று - மிக்கக்கல்விகற்று—உயர் - மேம்பாட்டையும்—விறலினுக்கும் - வல்லமைக்கும்—நல்வீரந்தனக்கும்- சுத்தவீரத்துக்கும் —ஒண்டுறவினுக்கும் - ஒள்ளியதுறவறத்திற்கும் —து ணை - துணையாநிற்பது—மனம் - மனமாகும்—என்ப - என்றறிஞர் கூறு வர். எ - று. ஏ - அசை இன்பொடு வேற்றுமை மயக்கம். (கக)

நல்ல செய்து நரரை யுயர்த்தவும்
அல்ல செய்தங் களற்றிடை யாழ்ப்பவும்
வல்ல திந்த மனமல தையனே
இல்லை யென்ன வியம்பு மறையெலாம்.

(இ - ள்.) நல்லசெய்து - நற்கருமங்களைச்செய்து—நரரையுயர்த்தவும்-மனிதரையுயர்வுபடுத்தற்கும் —அல்லசெய்து - தீவினைகளைச்செய்து—அங்கு - மறுமையில்—அளற்றிடை - நரகத்தில்—ஆழ்ப்பவும் - ஆழ்த்துதற்கும்—வல்லது - வல்லமையுள்ளது—இந்தமனமலது - இந்தமனத்தையன்றி—ஐயனே - ஐயா —இல்லையென்ன - வேறில்லையென்று —மறையெலாம் - வேதங்களெல்லாம் —இயம்பும் - சொல்லும். எ - று. நல்ல அல்ல என்பனகுறிப்பு வினையாலணையும்பெயர். உயர்த்தவும் ஆழ்ப்பவும என்பன நிகழ்கால்வினையெச்சம். (கஉ)

நெஞ்ச மாதுமை நேசனை நண்ணுமேல்
விஞ்சு பாதகங் கோடி விளைப்பினும
அஞ்சு றானவ னவ்வினை யாவையும்
பஞ்சு தீயிடைப் பட்டென மாயுமே.

(இ - ள்.) நெஞ்சம - மனம்—மாதுமைநேசனை - உமையவளுக்கன்பனுகியபரமசிவனை —நண்ணுமேல் - அடையுமாயின் —விஞ்சு - மிக்க—பாதகங்கோடிவிளைப்பினும் - அநேககோடி பாதகஞ்செய்யினும் —அஞ்சுறான் - பயப்படான்—அவன் - அவன்பாற்பட்ட—அவ்வினையாவையும் - அந்தத்தீவினைகளனைத்தும்—பஞ்சு - பஞ்சானது —தீயிடைப்பட்டென-அக்கினியிலகப்பட்டாற்போல —மாயும் - நசிக்கும். எ - று. ஏ - அசை. விளைப்பினும் என்பதிலும்மை இழிவுசிறப்பு. யாவையும் என்பதிலும்மை முற்று. நெஞ்சம் மாதுமைநேசனைநண்ணுதல் தனக்காதாரமாகப்பற்றுதலே. (கஙு)

மக்கண் மானிட னென்று மனத்தினுன்
மிக்க மேன்மை விளங்கின ரில்லெனில்
பொக்க மேவும் பொறிகளோ ரைந்தினுல்
ஒக்கு மாவினை யொத்துயர் வுற்றிடார்.

(இ. - ள்.) மக்கள் - மக்கட்பிறப்பில் —மானிடனென்று - மனிதத்தன்மையுடையவனென்று—மனத்தினுல் - மனத்தினுல்—மிக்கமேன்மை - மிக்கசிறப்போடு —விளங்கினரில்லெனில் - விளங்காதுநிற்பராயின்—பொக்கமேவும் - பாசங்களிற்செல்லுகின்ற —பொறிகளோரைந்தினுல் - ஐம்பொறிகளினுலும்—ஒக்குமாவினை - ஒத்திருக்குமிருகங்களை—ஒத்து - அருந்தல்பொருந்தல்களாலொத்து —உயர்வுற்றிடார் - மேலாயநிலையைய

டையார். எ - று. மக்கட்பிறவியின் மானிடரென்பார் ஐயந்திரிபற த்தன்னைத்தானுணர்ந்தஞானியரை. மக்களிற்றேவர் சித்தர்கள் மக்களி ல்விலங்கு ஏனையமானிடர். "புருடராய்ச்செனனமதெடுத்தபேர் மெய் ஞ்ஞானபோதத்தையறிவதொன்று,, என்பதனும் "பெறுமவற்றுள் யாமறிவதில்லையறிவறிந்தமக்கட்பேறல்லபிற,, என்பதனுனுங்காண்க. த ன்னைத்தானுணராவிடத்து ஏனையமிருகாதிகளைப்போல் ஐயறிவிருப் பினும் பயனின்றென்பார் இங்ஙனங்கூறினரென்க. மக்களென்பதில் ஏ ழாவதுதொருக்கப்பட்டது. மக்களிலெழுவகைத் தோற்றநிலையெய்தல் வேறென்றலன்மையின் மனத்தினுலென்றார். மிக்கவெனவடைகொ டுத்ததாலும் விளங்குதலென்னுஞ் சிறப்பீந்ததாலும் ஞானியரென்றும். மக்கள்தத்தமனத்தினல் மானிடரென விளங்காதுநிற்பராயின் ஏனைய ஐயறிவுயிரோடொத்து உயர்வுற்றிடாரெனக்கூட்டி முடிக்க. (கச)

கெடுக்க வல்லதுங் கெட்டவர் தங்களை
எடுக்க வல்லது மிம்மன மென்றதை
அடக்க வல்லவ னைய பவக்கடல்
கடக்க வல்லவ னுவன் கடிதரோ.

(இ - ள்.) கெடுக்கவல்லதும் - தலையெடுத்தோரைக்கெடுக்கவல்லது ம்—கெட்டவர்தங்களை - அங்ஙனங்கெட்டிறவர்களை —எடுக்கவல்லதும் - தலையெடுக்கச்செய்யவல்லதும்—இம்மனமென்றதை - இந்தமனமேயெ ன்றுஅம்மனத்தை—அடக்கவல்லவன் - தன்வயப்படுத்தற்குவலியுடை யோன் —ஐய - ஐயனே —பவக்கடல்கடக்க - சனனசாகரத்தைக்கடக் க—கடிது - விரைவில்—வல்லவனுவன் - வலியுடையோனுவன். எ - று. அரோ. அசை. மனம் இருவினைக்குடன்படலைக்கெடுக்கவல்லதெனவும் ம னமிருவினையொப்புக்குடன்படலை எடுக்கவல்லதெனவும் பொருள்கொ ள்க. இவ்விருவினைப்புடைபெயர்ச்சியின்பயன் இம்மனமுடையோனுக்கா தலின் இம்மனமென்பதையடக்கவல்லவன் பவக்கடல்கடக்கவல்லவனெ ன்றார். ஒருவன் மனத்தின்வழித்தன்னைநடத்தின் இருவினைக்குள்ளாக வும் தன்வழிமனத்தைநடத்தின் இருவினையொப்புக்குள்ளாகவும் ஆவ ன். உம்மையிரண்டும் எண். (கரு)

ஆயின் மிக்கோ ரரிய செயலெலா
நேய மிக்க மனத்தை நிறுத்தல்காண்

வாயு நிற்க மனமு முடனிற்கும்
தோய நிற்குறி னிற்குந் துரும்புமே.

(இ - ள்.) ஆயின் - தாயைப்போல — மிக்கோர் - சிவகாருண்யத்தின் மிக்கசத்துக்களாது — அரியசெயலெலாம் - செய்தற்கரியசெயல்களெல்லாம் — நேயமிக்க-நேயமிக்குற்ற — மனத்தைநிறுத்தல்காண்-மனத்தையசைவறநிறுத்துதற்காகும் — (ஆதலின்) வாயுநிற்க-உச்வாசமுதலியவைஸ்தம்பிக்க — மனமுமுடனிற்கும் - மனமுமொருங்கேநின்றுவிடும் — தோயநிற்குறில் - ஓடும்நீர் நின்றுவிடின் — நிற்குந்துரும்பும் - அதன்மேலுள்ளதிரணமும்திரியாதுநிற்கும். எ - று. ஏ - அசை. அரியசெயலாவன இயமமுதலியவைகளே. பிரியத்திற்கேயநகாந்துநிற்றலின் நேயமிக்கமனமென்றார். வாயுநிற்க மனமுமுடனிற்குமென்றதனல் யோகானுஷ்டானமெனப்பெற்றாம். (கசு)

ஓடு மாவை நிறுத்துறி னுள்ளுறக்
கோடும் வாய்க்க வினத்தினைக் கொள்ளுவார்
நீடு மாமன நிற்க நிறுத்துறில்
ஓடும் வாயுவை யுள்ளுற வீர்ப்பரால்.

(இ - ள்.) ஓடுமாவை - விரைவிலோடுங்குதிரையை — நிறுத்துறின் — நிறுத்தக்கருதின் — உள்ளுறக்கோடும் - உள்ளேகொண்டிருக்கும் — வாய்க்கலினத்தினை - வாயிலுள்ளகடிவாளத்தை — கொள்ளுவார் - இழுப்பார் - (அதுபோல) நீடு - புலங்களில்ஓடு கின்ற — மாமனநிற்க - பெரிதாணமனநிற்கும்படி — நிறுத்துறில் - நிறுத்தக்கருதில் — ஓடும்வாயுவை - ஓடித்திரியும் பிராணுதிவாயுக்களை — உள்ளுறவீர்ப்பர் - உள்ளேபந்தனம் பண்ணுவர். எ - று. ஆல் - அசை. மனநிற்கவென்பது தன்வினை நிறுத்துறிலென்பது பிறவினை. (கஎ)

அடுத்த நாடிக ளாங்கொரு மூன்றினும்
விடுத்து வாங்கியு மேவ நிறுத்தியும்
தடுத்தும் வாயுவைத் தன்வச மாக்கில்வறாய்
மடுத்தி டாது மனமும் வசப்படும்.

(இ - ள்.) அடுத்த - பிறவிக்கியலாகவடுத்த — நாடிகளாங்கொருமூன்றினும் - நாடிகள்மூன்றையும் — விடுத்துவாங்கியும் - விட்டுவாங்கியும் — மேவநிறுத்தியும் - பொருந்தவசைவறநிறுத்தியும் — தடுத்தும் - அதனிட்டத்

தின்வழி போகாதுதடுத்தும்—வாயுவை - பிராணவாயுவை—தன்வசமாக்கில் - தன்வயப்படுத்தின்—வாய்மறுத்திடாது - மாறாது—மனமும்வசப்படும் - பகைப்பற்றுமனமுந் தன்வயப்படும். எ - று. நாடிகள் மூன்றுவன இடகலை பிங்கலை சுழிமுனைகளா. விடுத்தல் வாங்கல் நிறுத்தல் தடுத்தல் இவைசாதனங்களின்மேனின்றன. விடுத்து வாங்கி நிறுத்தித் தடுத்து வாயுவைத் தன்வயமாக்கில் மனம் வசப்படுமெனமுடிக்க. மனம் என்பதிலும்மை இறந்தது தழீஇயது. மூன்றினும் என்பதிலும்மைமுற்று.

ஓடும் பொன்னு முறவும் பகையுமோர்
கேடுஞ் செல்வமுங் கீர்த்தியு நிந்தையும்
வீடுங் கானமும வேறற நோக்குதல்
கூடுந் தன்மை கொளுமன நன்மனம்.

(இ - ள்.) ஓடும்பொன்னும் - ஓட்டையும் பொன்னையும் —உறவும்பகையும் - உறவையும் பகையையும் —ஓர்கேடுஞ்செல்வமும் - ஒப்பற்ற வறுமையையுஞ் செல்வத்தையும் —கீர்த்தியு நிந்தையும் - கீர்த்தியையு மபகீர்த்தியையும்—வீடுங்கானமும் - வீட்டையும் காட்டையும் —வேறற நோக்குதல் - வேற்றுமையின்றிக்காண்டல் —கூடுந்தன்மை - இசையுந்தன்மையை—கொளுமனம் - ஏற்றுக்கொண்டமனமே—நன்மனம் - நல்ல மனமெனப்படும். எ - று. உடன்பாடும் எதிர்மறையுமா நிற்குமிவைகளில் பேதியாது நிற்குமனமே நல்லமனமெனப்படு மென்க. (கக)

மன்னு காம வெகுளி மயக்கமென்
றின்ன கூடி யெறிவளி முற்சுடர்
என்ன வாடு மியன்மனந் தீமனம்
தன்னை யாருந் தடுக்கத் தகாதரோ.

(இ - ள்.) மன்னு - நிலையுற்ற —காமவெகுளிமயக்கமென்று - காமவெகுளிமயக்கமெனக்கூறும்—இன்னகூடி - இன்னநிலைகளெல்லாங்கூடி—எறிவளிமுன் - அலைகாற்றின்முன்னின்ற—சுடரன்ன - தீபத்தைப்போல—ஆடும் - அலைந்துகொண்டிருக்கும் —இயல்மனம் - இயல்பினையுடையமனமே —தீமனம் - தீயமனமெனப்படும் —தன்னை - இங்ஙனமாயமனத்தை—யாருந்தடுக்கத்தகாது - யாவராலுந் தடுத்தற்கொண்ணாது. எ - று. அரோ - அசை. என்று சொல்லெச்சம். இன்னகுறிப்பு வினையாலணையும் பெயர். என்ன உவமவுருபு. காமவெகுளி மயக்கமென்றல் அபவாதமு

றை. மயக்கங் காமவெகுளியெனல் அத்தியாரோபமுறை. இன்னகூடி ஆடும் இயல்மனம் நீமனமெனமுடிக்க, (௨௦)

மறிந்தி டாது மனபவ னங்கடாம்
செறிந்த வாயிற் சிவமய மாகுமால்
அறிந்து வாயுவை யங்ஙன மெய்தினேன்
இறந்தி டாத விலிங்கப் பிராணியாம்.

(இ - ள்.) மறிந்திடாது - மடங்காமல் —மனபவனங்கடாம - மனமும் பிராணாதிவாயுக்களும் —செறிந்தவாயின் - அடங்கிவிடுமாயின்—சிவமய மாகும் - சிவவடிவாகும்—அறிந்து - இன்னவாறறிந்து—வாயுவை - பிரா ணாதிவாயுக்களை—அங்ஙனமெய்தினேன் - அவ்வாறடக்கினேன்—இறந்தி டாத - என்றுநசியாத —இலிங்கப்பிராணியாம - இலிங்கப்பிராணியா வன். எ - று. ஆல் - அசை. இலிங்கப்பிராணியாதல் இலிங்கவடிவா விளங்கலை ; எனவே மனம்பலவாச்சிதைந்துகற்றலின் அவற்றையடக்கல் சிவமயமாதலெனவும் பிராணபந்தனஞ்செய்யில் இலிங்கப்பிராணியாத லெனவும் பொருளமையப்பெற்றும். (௨௧)

இன்ன வாறு பலவு மியம்பினான்
அன்னை போலுநம் மல்லம தேசிகன்
தன்னை நேர்தரு சைவம் வளர்க்குமோர்
மன்ன னாகும் வசவனை நோக்கியே.

(இ - ள்.) இன்னவாறு - இந்தப்பிரகாரம்—பலவும் - அந்தரங்கமான பலவற்றையும் —இயம்பினான் - சொன்னான் —அன்னைபோலும் - தாய் போலுமிருக்கின்ற—நம்மல்லமதேசிகன் - நமதல்லமனாகியகுருமூர்த்தி— தன்னைநேர்தரு - தனக்குத்தானே யொத்திருக்கின்ற—சைவம்வளர்க்கு ம் - வீரசைவத்தைவளர்க்கின்ற —ஓர் மன்னனாகும் - ஒப்பற்றவரசனாகி ய—வசவனைநோக்கி - வசவதேவனைப்பார்த்து. எ - று. ஏ - அசை. அல்லமதேசிகன் வசவனைநோக்கி இன்னவாறு பலவுமியம்பினானெனக் கூட்டிமுடிக்க. (௨௨)

நின்னை நோக்கவு நின்னை யிறைஞ்சவும்
நின்னை வாழ்த்தவு நின்மொழி கேட்கவும
என்ன மாதவ மெய்தின வோவெனப்
பன்னி நீர்தற் பணிந்தனன் நந்தியே.

(இ - ள்.) நின்னைநோக்கவும் - நின்னைத்தரிசிக்கவும்—நின்னையிறைஞ்சவும் - உன்னைவணங்கவும் —நின்னைவாழ்த்தவும் - உன்னைத்துதிக்கவும்—நின்மொழிகேட்கவும் - உனதரியவசனங்களைக் கேட்கவும் —என்ன மாதவம் - என்னமகத்தான தவங்கள்—எய்தினவோ - செய்யக்கிடந்தனவோ—எனப்பன்னி - என்றுசொல்லி—நந்தி - வசவண்ணதேவன்—நாதன் - அல்லமதேவனை —பணிந்தனன் - வணங்கினன். எ - று. நந்தி பன்னி பணிந்தனன் எனமுடிக்க. ஏ - ஈற்றசை. (உ௩)

சித்த ராமனுஞ் சென்ன வசவனும்
முத்த னுமருண் மாச்சன் முதலிய
பத்த ராரும் பலருமென் புன்றலை
வைத்த நாதன் மலரடி வாழ்த்தினுர்.

(இ - ள்.) சித்தராமனும் - சித்தராமரென்பவரும் —சென்னவசவனும் - சென்னவசவரென்பவரும்—முத்தனும் - எல்லாஞ் செய்துமுடிந்தவனாகிய—மருண்மாச்சன்முதலிய - மருண்மாச்சன்முதலாகிய—பத்தராருமபலரும் - அன்பர்களாகியபலரும்—என்புன்றலைவைத்த - எனதுபுல்லியதலைமேல்வைத்த—நாதன் - அல்லமனது—மலரடி - தாமரைமலர்போன்றபாதங்களை—வாழ்த்தினுர் - துதித்தார்கள். எ - று. பலரும்வாழ்த்தினுரெனமுடிக்க. (உ௪)

ஆன காலையி லல்லம னுகிய
ஞான வாரி நடந்துல கெங்கணும்
ஏனை மாதவர்க் கின்ப மளிக்குவல்
யானெ னுவுளத் தெண்ணின னென்பவே.

(இ - ள்.) ஆனகாலையில் - அவ்வாறுனகாலத்தில் —அல்லமனுகிய - அல்லமனென்றுசொல்லப்பட்ட—ஞானவாரி - ஞானவெள்ளம்—உலகெங்கணுநடந்து - உலகமுழுவதும்போய்—ஏனைமாதவர்க்கு - மற்றையடியார்களுக்கு—யான் - நான்—இன்பமளிக்குவலெனு - பேரின்பந்தருவேனென்று—உளத்தெண்ணினன் - மனத்தினினைத்தனன் —என்ப - என்றறிஞர்கூறுவர். எ - று. ஏ - அசை. அல்லமனுகிய ஞானவாரி உருவகம். ()

சாதகாங்ககதி - முற்றிற்று.

ஆ கதி - க௮ - இ - விருத்தம் - அ௮௬.



பத்தொன்பதாவது

# கோரக்கர்கதி.



வேறு.

வசவனை முதலா யுள்ள மாதவர் தமைய கன்று
பசுமதி தவழ்கு வட்டுப் பருப்பத மலையை நண்ணிக்
குசைசுடு மறையோர் போற்றுங் கோரக்க னெனும்பேர்ச் சித்தன்
இசைவுற வுண்மை யெந்தை யியம்பிய வாறு சொல்வாம்.

(இ - ள்.) வசவனைமுதலாயுள்ள - வசவண்ணனையாதியாகப் பெற்றுள்ள—மாதவர்தமையகன்று - மகத்தானதவத்தினரைவிட்டுநீங்கி —பசுமதிதவழ் - மூன்றாம்பிறைச் சந்திரன்றவழ்கின்ற—குவடு - சிகரத்தையுடைய—பருப்பதமலையைநண்ணி - ஸ்ரீசயிலமாகிய மலையையடைந்து—குசைசுடு - தருப்பையையெரிக்கின்ற—மறையோர்போற்றும் - பிராமணர்களாற் றுதிக்கப்பெற்ற —கோரக்கனெனும்பேர் - கோரக்கனென்னும் பெயரையுடைய—சித்தன் - சித்தபுருஷன்—இசைவுற - ஐயமின்றியேற்க—உண்மை - உண்மைநிலையை —எந்தை - எமதுகர்த்தனாகிய அல்லமன் —இயம்பியவாறு - தெரிவித்தவண்ணம் —சொல்வாம் - யாமெடுத்துச்சொல்லுதும். எ - று. குசைசுடுதல்; யாகம்வளர்த்தல். எந்தை அகன்று நண்ணி இயம்பியவாறு சொல்வாம் எனக்கூட்டி முடிக்க. பருப்பதமலை; இருபெயரொட்டுப் பண்புத்தொகை. (க)

பொறிவழி செலாது நெஞ்சம் புனிதமாம் வகைபு கன்ற
நெறிமுறை வழாதி யற்றி நிலீயரோ நீவிர் மிக்க
அறவுரை யுலகிற் கண்டிங் கடைதுமென் றுண்டை யோர்கட்
கிறையவு னினிதி யம்பி யெழுந்துமின் னொனம றைந்தான்.

(இ - ள்.) பொறிவழிசெலாது - ஐம்பொறிநெறிப்படாது—நெஞ்சம் - மனம்—புனிதமாம்வகை - பரிசுத்தமாதற் கியைந்தவகையை—புகன்ற - சொல்லிய —நெறிமுறைவழாது - வேதவிதிக்கிடுக்கணுறாது —இயற்றி-

திரிகரணமொத்துச்செய்து —நீவிர் - நீங்கள் —நின்மின்கள் - நில்லுங்கள்—மிக்கஅறவனை - மேலாயநெறிச் செல்வோனை—உலகிற்கண்டு - உலகத்திற்பார்த்து—இங்கடைதுமென்று - இங்கேவருவோமென்று—ஆண்டையோர்கட்கு - அங்கிருந்தஅன்பர்களுக்கு—இறையவன்-அல்லமன்—இனிதியம்பி - இனியமொழியைச்சொல்லி—எழுந்து - எழுந்திருந்து—மின்னெனமறைந்தான் - மின்னலைப்போல மறைந்துவிட்டனன். எ - று. மின்கள் என்பது வந்தார்களென்றாற்போல விகுதிமேல் விகுதிபெற்றது. இனிது ; பண்படியாகப்பிறந்த பெயர். (௨)

கன்றின்வாய் முலைநெகிழ்த்துக் கறவைவிட் டகன்ற தென்னச்
சென்றன னைய னென்று திசைதொறு நோக்கி மாழ்கி
வன்றழ லிழுது போல மனமுகக் கண்ணீர் மல்கி
நின்றனர் வசவ ணாதி நிகரில்சற் பத்த ரெல்லாம்.

(இ - ள்.) கன்றின்வாய் - கன்றின்வாயிலுள்ள —முலைநெகிழ்த்து - தனதுமுலையைத்தளர்த்தி—கறவை - பசுவானது—விட்டகனறதென்ன - தானின்றவிடம் விட்டகன்றதுபோல—சென்றனனையனென்று - அல்லமன் போய்விட்டானென்று —திசைதொறுநோக்கி - திக்குகள்தோறும் பார்த்து—மாழ்கி - மயங்கி—வன்றழல் - கொடியஅக்கினியிற்பட்ட —இழுதுபோல - வெண்ணெய்போல்—மனமுக - மனநெக்குருக—கண்ணீர் மல்கி - கண்ணீர்பெருகி—வசவணாதி - வசவண்ணன்முதலாகிய—நிகரில்- ஒப்பில்லாத—சற்பத்தரெல்லாம் - உண்மையானவடியார்களனைவரும்—நின்றனர் - அழுதுநின்றனர். எ - று. சற்பத்தரெல்லாம் நோக்கி மாழ்கி கண்ணீர்மல்கி நின்றனரெனக் கூட்டிமுடிக்க. (௩)

காணுத லொழிக நல்லார்க் காணினங் கவர்பா னட்புப்
பேணுத லொழிக பேணிற் பிரிவுற லொழிக வுற்றால்
மாணுயி ருடம்பில் வாழும் வாழ்க்கைபோ யொழிக வென்னா
வூணிடு மொருதாய் நீத்த பார்பதி பளுங்கு லைந்தார்.

(இ - ள்.) காணுதலொழிகநல்லார் - நல்லோரைக்காணுதலை விட்டொழிக—காணின் - காணவிருப்புறின்—அங்கவர்பால் - அங்கேயவர்களிடத்தில் —நட்புப்பேணுதலொழிக - விசுவாசம்வைத்தலை விட்டொழிக —பேணில் - விசுவாசங்கொள்ளில் —பிரிவுறலொழிக - விட்டுநீங்குதலொழிக—உற்றால் - பிரிவுறுதுகின்றால்—மாணுயிர் - மாட்சிமைப்பட்டவுயிர்—உடம்பில்வாழும்வாழ்க்கை - உடம்போடுகூடி வாழும்வாழ்க்கையினின்

று—போயொழிக - பற்றுமலொழிக—என்று - என்றுசொல்லி—ஊணி மொருதாய் - உணவைக்கொடுக்கு மொப்பற்றதாய்—நீத்தபார்ப்பென- நீக்கிவிட்ட குஞ்சுகளைப்போல —உளங்குலைந்தார் - மனவருத்தமுற்றூர். எ - று. மானுயிருடம்பில்வாழும் வாழ்க்கைபோ யொழிதலாவது ; தாமரையிலைநீர்போலும் ஒட்டோடுபெற்றுப் புளிங்கனிபோலும் உடம்போடு பற்றுதிருத்தலையென்க ; எனவே அறிவே யுடலாயிருத்தலெனப் பெற்றும். (ச)

தண்டநா யகன்க ரத்திற் றம்பிரான் றன்னைக் கண்டு
பண்டுபோ லுவகை பூத்துப் பத்திசெய் தாங்கி ருந்தான்
தொண்டனு கியவி ராமன் சொன்னலா புரத்தி னெஞ்சில்
கொண்டவா ரியனே டேகிக் கொடுவழி தப்பி நின்றான்.

(இ - ள்.) தண்டநாயகன் - வசவண்ணன் —கரத்தில் - தனதுள்ளங்கையில்—தம்பிரான்றன்னைக்கண்டு - இஷ்டலிங்கத்தைக்கண்டு —பண்டுபோல் - முன்போலவே—உவகைபூத்து - மிக்கவன்புகொண்டு—பத்திசெய்து - பூசித்து—ஆங்கிருந்தான் - அவ்விடத்திருந்தனன் —தொண்டனுகியவிராமன் - அல்லமனுக்குத் தொண்டனுயிருந்த சித்தராமன்—சொன்னலாபுரத்தில் - சொன்னலாபுர மென்னும்பதியில்—நெஞ்சிற்கொண்ட - மனத்திற்பதித்த —ஆரியனேடு - அல்லமதேவனேடு—ஏகி - போய்—கொடுவழி - முன்தானின்ற கொடுவழிகளினின்றும் —தப்பிநின்றான் - விலகித்தன்னிலையினின்றனன். எ - று. நெஞ்சிற்கொண்ட வாரியனேடேகலாவது ; அல்லமன்விளக்கிய விளக்கமாகநிற்றலையும், கொடுவழிதப்பிநிற்றலாவது ; இவ்விளக்கத்துக்குமுரணுறுது நிற்றலையுமெனக் கொண்டாம். (ரு)

அல்லம னறைந்த மாற்ற மகங்கொடு பிறருந் தாஞ்செய்
நல்லன புரிந்து தத்த மிடந்தொறு நணுகி வாழ்ந்தார்
தொல்லைநல் வினையாற் றன்னைத் தொழப்பெறு மடியர் தம்பாற்
செல்லுவ னென்று சென்றான் செயலினித் தெரிக்க லுற்றும்.

(இ - ள்.) அல்லமனறைந்தமாற்றம் - அல்லமனுபதேசித்த வுயர்நிலை மொழிகளை—அகங்கொடு - உளத்தில்விடாதுகொண்டு—பிறரும் - ஏனையோரும்—தாம்செய் - தாங்கள்செய்துகொண்டிருந்த —நல்லனபுரிந்து - சற்கிர்த்தியங்களைச்செய்து—தத்தமிடந்தொறுநணுகி - தங்கள் தங்களிடங்களிற்சென்று—வாழ்ந்தார் - வாழ்ந்திருந்தனர் —தொல்லைநல்வினையா

ல் - அனந்தசென்மங்களி லியற்றியநல்வினையினால் —தன்னைத்தொழப் பெறும் - தன்னைத்தொழுதற்கியைந்த —அடியர்தம்பால் - அடியார்களி டத்தில் —செல்லுவனென்று - போகின்றேனென்று —சென்றான்செ யல் - சென்றவல்லமனதுசெயலை—இனித்தெரிக்கலுற்றாம் - இனித்தெ ரிவிக்கத் தொடங்குவாம். எ - று. நல்லன ; குறிப்பு வினையாலணையும் பெயர். (௬)

எரிபுரை தளிர்த ளிர்ப்ப விளமரக் காவிற் றென்றல்
மருவுதல் போல வன்பர் மனமொடு கண்க ளிப்பத்
திருவுரு வொன்ற டைந்து சென்றவக் கருணை வள்ளல்
கருமுகி றவழ்ப ராரைப் பருப்பதங் கண்டு சென்றான்.

(இ - ள்.) எரிபுரை - அக்கினியையொத்த—தளிர்தளிர்ப்ப - துளிர்து ளிர்க்கும்படியாக —இளமரக்காவில் - இளமையாகியமரங்களையுடைய தோப்பில்—தென்றல்மருவுதல்போல - தென்றற்காற்றுவருதல்போல— அன்பர் - அடியார்கள் —மனமொடுகண்களிப்ப - மனமுங்கண்ணுங்களி க்கும்படி—திருவுருவொன்றடைந்து - திருக்கோலமொன்றுகொண்டு— சென்ற - அடியார்களிடத்திற்சென்ற —அக்கருணைவள்ளல் - கிருபாமூர் த்தமாகியஅந்தவல்லமதேவன்—கருமுகிறவழ் - கரியமேகங்கள்தவழ்கின் ற—பராரை - பருத்தவரையையுடைய —பருப்பதங்கண்டு சென்றான் - ஸ்ரீசைலத்தைக்கண்டுசென்றனன். எ - று. கருணைவள்ளல் களிப்ப க ண்டு சென்றானெனக் கூட்டிமுடிக்க. மனமொடுகண்களித்தலாவது அகம்புறமொத்துக்களித்தலை. (எ)

அல்லமன் கண்டு செல்லு மப்பருப் பதத்தின் மேன்மை
சொல்லுத லறியா ராகிச் சூரர்முனி வரர்க டம்முள்
வல்லவ ரெனவி ருக்கு மறிஞரு மயங்கி நிற்ப
புல்லறி வாண்மை கொண்டு புகலுவென் சிறிதஞ் சாமல்.

(இ - ள்.) அல்லமன்கண்டுசெல்லும் - அல்லமதேவன்கண்டுபோகின் ற—அப்பருப்பதத்தின்மேன்மை - அந்த ஸ்ரீசைலத்தின் சிறப்பை—சொ ல்லுதலறியாராகி - சொல்லத்தெரியாதவர்களாகி —சூரர்முனிவரர்கட ம்முள் - தேவர்களுக்குள்ளும்ரிஷிகளுக்குள்ளும்—வல்லவரெனவிருக்கும்- வல்லவரெனப்பெயர் பெற்றிருக்கும்—அறிஞரும் - அறிவுடையோரும்— மயங்கிநிற்ப - தோன்றாதுதியங்கிநிற்பார் —புல்லறிவாண்மைகொண்டு -

அற்பவறிவுகொண்டு—அஞ்சாமல் - பயப்படாமல்—புகலுவென்சிறிது—கொஞ்சஞ் சொல்லுவேன். எ - று. புல்லறிவாண்மைகொண்டென்பதனல் புகலுவன்சிறிதென்ருர். அஞ்சாமலெனல் மூடச்செருக்கைவிளக்கநின்றது. (அ)

நாடொறு முதிதரொ டுங்கு ஞாயிறு தனைச்சு மக்கும்
கோடுறு வரைகு ணக்குங் குடக்குமாயத திகைத்து நிற்பக்
கூடுதல் பிரித லின்றிக் குறைமதி தலைச்சேர்ந் தின்பம்
தாடரு கதிரைச் சென்னி தரிப்பதக் குன்ற மாதோ.

(இ - ள்.) நாடொறும் - தினந்தோறும் —உதித்தொடுங்குஞாயிறு - தோன்றிமறைகின்றசூரியன் —தனைச்சுமக்கும் - தன்னைச்சுமக்கின்ற—கோடுறுவரை - சிகரம்பொருந்தியமலையினையதென்றுணராமல் —குணக்குங்குடக்குமாய் - கிழக்குமேற்காக —திகைத்துநிற்ப - திகைத்துநிற்க—(இதனைக்கண்டு) கூடுதல்பிரிதலின்றி - அவனோடு கூடுதலும்பிரிதலுமில்லாமல்—அக்குன்றம் - அந்தஸ்ரீசைலம்—குறைமதிதலைசேர்ந்து - மூன்றும்பிறையைச்சிரசில்வைத்து—இன்பம் - பேரின்பத்தை —தாடரு - திருவடியால்தரப்பட்ட —கதிரை - ஞானசூரியனை —சென்னிதரிப்பது - சிரசில்தரித்துக்கொண்டிருக்கின்றது. எ - று. மாது.- ஒ - அசைகள். ஸ்ரீசைலமலையானது தனதுசிகரந்தெரியாது பூதசூரியன்திகைத்து நிற்பதைக்கண்டு இவனுக்கிடங்கொடாமல் ஞானசூரியனுகியசிவனுக்கிடங்கொடுத்ததென்பது கருத்து. அக்குன்றமெனலை வெள்ளியங்கிரியென்பாருமுளர். (கூ)

பொன்னிற்குன் றெழுவா யாகப் பொருப்பள விறந்து நிற்பச்
சென்னிக்கட் டவழ்வெண டிங்கட் சிலாதரன் குழவி வெற்புத்
தன்னைக்கண் டவரை யென்னோர் தலைமிசை யேற்று மென்னென்
றின்னற்கட் படிந்தன் றேவவ் விறைமலை விளர்த்த தம்மா.

(இ - ள்.) பொன்னிற்குன்று - மேருபர்வதம்—எழுவாயாக - ஆதியாக—பொருப்பு - மலைகள் —அளவிறந்துநிற்ப - அளவில்லாமலிருக்க —சென்னிக்கண் - உச்சியில் —தவழ் - தவழ்கின்ற —வெண்டிங்கள் - வெண்மையானசந்திரனையுடைய —சிலாதரன் - சிலாதரனென்பவனுடைய—குழவிவெற்புதன்னை - குழந்தையாகிய ஸ்ரீசைலமலையை—கண்டவரை - தரிசித்தவரை —என்னோதலைமிசை - என்னுடையதலைமேல்மாத்திரம்—

ஏற்றும் - சிவனேற்றுகின்றான் —என்னென்று - இஃதென்னவதியாய மென்று —இன்னறக்கட் படிந்தன்றோ - துன்பத்தின்மூழ்கியல்லவா — அவ்விறைமலை - அந்தக்கைலையங்கிரி —விளர்த்தது - வெள்ளையாயது. எ - று. அம்மா - அசை, அல்லது வியப்புக்குறி. தரிசிக்கவந்தவர்களை ஏளையமலைகளிலேற்றாது என்றலைமேல்மாத்திரஞ்சிவ னேற்றுகின்றனெ ன்றழுதழுது மூகம்வெளுத்துப் போனதுபோலக் கைலையங்கிரியினது வெண்மைகாணப்படுகின்றதெனப் பொருள்சொள்க இதுதற்குறிப்பேற் றவணி. சிலாதரன் மேருவை வில்லாகவுடைய சிவனென்பாருமுளர். ()

பரசிவ லிங்க மொன்று பருப்பதம் போற்ற ரிப்பத்
துரிசற வடைந்தே னில்லை யென்னுமச் சோகத் தீயால்
உருகுறு மமையத் தோடி யொருமலை குழைத்தா னன்றிக்
குருகமர் தளிரி யற்குக் குழைந்தவன் குழைக்கு மோதான்.

(இ - ள்.) பரசிவலிங்கம் - பரசிவலிங்கத்தோடு—ஒன்று - பொருந்தி ய—பருப்பதம்போல் - ஸ்ரீசைலம்போல —தரிப்ப - அவ்விலிங்கத்தை யான்தரித்துக்கொள்ள—துரிசற - குற்றநீங்க —அடைந்தேனில்லை - அந் தப்பாக்கியத்தையானடைந்தேனில்லை —என்னும் - என்றுவருத்தப்படு ம்—அச்சோகத்தீயால் - அந்தச்சோகமென்னுமக்கினியால் —உருகுறும மையத்து - நெக்குருகிநிற்குஞ்சமயத்தில்—ஓடி - விரைவிலோடி—ஒரும லைகுழைத்தானன்றி-மேருவாகியமலையை வில்லாகவளைத்தானல்லாமல்— குருகமர் - வளையலணிந்த—தளிரியற்கு - தளிர்போன்றமெல்லியதன்மை யுள்ளவுமையவளுக்கு—குழைந்தவன் - மனங்குழைந்துபோனசிவன்—கு ழைக்குமோ - என்னைவளைப்பனோ. எ - று. தான் - அசை. கைலைமலை யானது இங்ஙனஞ்சொல்வதுபோலக் காணுந்தோற்றத்தனெக்காட் டக்குறிப்பித்தாரென்க. உமையவளுக்குப் பரமன்மனங்குழைந்ததாவ து; இராவணன் கைலையங்கிரியை யெடுப்பானசைக்க வதனாலுமையவள் வெருவி மனங்குழைய அதற்குச்சகியாமற் பரமன் இராவணனை நிலத்தி லிறுகச்செய்தவிதமென்க. குழைக்குமோவென்பதில் ஓகாரம் எதிர்ம றை. தளிரியல்; உவமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொ கை. இருகுறுமமையம் வளைத்தற்கியைந்தபருவம். (௧௧)

பொருப்பிறை மகனெற்குப் பொருந்துறு தீசனும்
நெருப்பனை யான்சார்ந் தாங்கு நிகழ்தொடர் பொழியி னன்றிப்

பருப்பத மெனவே கூறப் படுமிது வென்னு நாணால்
திரைப்பொலி கடலிற் சென்று வீழ்ந்தது சிலம்பொன் றம்மா.

(இ - ள்.) பொருப்பிறை - மலைகளுக்குத்தலைமையாகியமேருவின் —மகனன் - புத்திரன்யான்—எற்கு - எனக்கு —பொருந்துறாது - பொருப்பென்னும் பெயர்வாய்க்காமல் —ஈசனாமம் - ஈசனென்னும்பெயர் —நெருப்பனையான் - நெருப்புக்கொப்பாகியபரமசிவனைமாத்திரம்—சார்ந்தாங்கு - சார்ந்ததுபோல —நிகழ் - வழங்குகின்ற —தொடர்மொழியினன்றி - தொடர்மொழியினாலல்லாமல் —பருப்பதமெனவே - பர்வதமென்றே—கூறப்படும் - யாவராலும்வழங்கப்படும் —இதுவென்று - இந்தஸ்ரீசைலமென்று—நாணால் - வெட்கத்தால்—திரைப்பொலி - அலைகணிறைந்த —கடலிற்சென்று - கடலிற்போய் —சிலம்பொன்று - மைநாகமென்னுமோர்மலை —வீழ்ந்தது - வீழ்ந்துவிட்டது. எ - று. அம்மா - அசை. மைநாகமென்னுமலை மேருவின்மகனாகிய எனக்குப் பருப்பத மென்னும் பெயர்வராமல் கைலைமலை, விந்தமலை பொதியமலை என்றாற்போல மைநாகமலை எனத்தொடர் மொழியினால் வந்தபெயருக்கு நாணத்திற்சகியாமல் கடலில்விழுந்ததாகக் கற்பித்தாரென்க. இதுவு மேலையணி. ஈசனாமம் பிரமன்முதலியோர்க்குப் பொதுவாயினும் பரமசிவனையேசார்ந்தாற்போல, பர்வதமென்னுநாமம் எல்லாமலைக்குப்பொதுவாயினும் ஸ்ரீசைலத்துக்கே சார்தலின் பருப்பதமெனவே கூறப்படு மெனத் தேற்றேகாரந்தந்தார். நெருப்பனையானெனல் செம்மை நிறங்காரணமாகவுவமித்தது. (கஉ)

தன்னையோர் கையால் வீழப் பிலத்திடைத் தள்ளி வந்தோன்
சென்னியால் வணங்கி யேத்துஞ் சிலம்பினை விந்த மொக்கும்
என்னலா மென்ன லாமோ விணையறு பருப்ப தத்தைப்
பின்னுவார் திரையி விட்டுப் பெயர்த்தபுன் மத்தோ ரொக்கும்.

(இ - ள்) தன்னை - தன்னை —ஓர்கையால் - ஒரேகையினால்—பிலத்திடைவீழ - பாதாளத்தில்விழ —தள்ளிவந்தோன் - தள்ளிக்கொண்டுவந்த அகஸ்தியன்—சென்னியால் - தனதுசிரத்தினால்—வணங்கியேத்தும் - வணங்கித்துதிக்கத்தக்க—சிலம்பினை - ஸ்ரீசைலமலையை —விந்தம் - விந்தமலை—ஒக்குமென்னலாம் - தோற்றத்தாலொக்குமெனக்கூறலாம் —ஒக்குமென்னலாமோ - மகிமையாலொக்குமெனக்கூறலாமோ—இணையறு - ஒப்பில்லாத—பருப்பதத்தை - ஸ்ரீசைலத்தை —பின்னு - பின்னிக்கொ

ண்டெழாநின்ற—வார் - நீண்ட —திரையிலிட்டு - அலைகளையுடைய சமுத்திரத்திற்போட்டு —பெயர்த்த - கடைந்த—புல் - அற்பமாகிய—மத்தோ - மந்தரகிரியாகியமத்தோ—ஒக்கும் - ஒப்பெனப்படும். எ - று. இங்கே தன்னையென்றது விந்தமலையை. மத்தோவென்பதில் ஓகாரம் வினா, கர்வங்கொண்டதால் அகத்தியனால் பிலத்திடைத்தள்ளப்பட்டது. விந்தமலையெனல் ஐதிகம். மத்துப்போன்றதை மத்தெனல் உவமையாகு பெயர். தள்ளிவந்தோன் அகத்தியனென்க. • (௬௩)

நகைமதிப் பிள்ளை போல நரைத்தகூன் கிழவன் சென்றோர்
முகைமலர்ச் சுனையின் மூழ்கி முருகுகொப் புளிக்குந் தோட்டுப்
பகைமலர்க் குழன்ம டந்தை பகர்ந்தவோ ராணை காத்து
மகிழ்மனத் தன்ப னேபோல் வந்துமே லெழுவ னன்றே.

(இ - ள்.) நகை - பிரகாசம்பொருந்திய —மதிப்பிள்ளைபோல - மூன்றாம்பிறைபோல—நரைத்த - வெண்ணரைகொண்ட—கூன்கிழவன் - கூனையுடையவோர்கிழவன் —சென்று - போய்—முகை - மொட்டுகள்—மலர் - மலர்ந்திருக்கின்ற —ஓர்சுனையில்மூழ்கி - ஒருசுனையினிடத்தில்மூழ்கி—முருகு - தேன்—கொப்புளிக்கும் - பொங்குகின்ற—தோடு - இதழ்களையுடைய—பகை - நீர்ப்பூக்குப்பகையாகிய—மலர் - புஷ்பங்களையணிந்த—குழல் - கூந்தலையுடைய —மடந்தை - திருநீலகண்டனார்பத்தினியார்—பகர்ந்த - சொல்லிய —ஓராணைகாத்து - ஓராணையைவழுவாதுகாத்து—மகிழ் - களிக்கின்ற—மனத்து - மனத்தையுடைய—அன்பனேபோல் -திருநீலகண்டநாயனாரைப்போல—வந்துமேலெழுவன் - வந்துமேலெழுந்திருப்பன். எ - று. அன்று - ஏ - அசைகள். இந்த ஸ்ரீசைலச்சுனையில் முழுகி எழுந்திருப்போன் திருநீலகண்டனைப்போல் குமாரப்பருவமெய்துவனெனவே, மலையின்மகிமையைச் சிறப்பித்ததாகக்கண்டாம்.நாயகனோடு கூடியபின் கூந்தலிலம்மலரையணியாமையால்பகைமலர்க்குழல்மடந்தை யென்றாளுமமையும் அன்பனெனலைத் திருநீலகண்டநாயனாரெனவும், மடந்தையெனலை அவர்பத்தினியாரெனவுங் கொண்டது ; புராணசம்மதம். பகர்ந்தவோராணையாவது என்னைத்தொடாதை திருநீலகண்டமெனல். •(௬௪)

இனைமலர் புதன்மென் போது செழும்புனற் பசுந்தாட் செந்தே
னனைமலர் தமது தண்பூ நண்ணியீர்ங் கொடிகள் சூழ்ந்துச்
சுனைமலர் விழிகள் போலத் தோன்றுமப் பராரைக் குன்றிற்
புனைமலர் பலவுங் காட்டும் புரிகுழன் மகளிர் போலும்.

(இ - ள்.) சினைமலர் - சினைமலர்களும்—மெல் - மிருதுவாகிய—புதல் போது - குத்துச்செடிமலர்களும்—செழும்புனல் - செழுமையாகிய நீரி லுள்ள—பசுந்தாள் - பசியதண்டையுடைய—செந்தேனை - சிவந்ததே னுல்நனைகின்ற—மலர் - நீர்ப்பூக்களும்— (இவற்றோடு) ஈர்ங்கொடிகட மது - குளிர்ச்சிபொருந்திய பூங்கொடிகளுடைய —தண்பூ - குளிர்ந்தபு ட்பங்களும்—நண்ணி - சேர்ந்து—குண்டு - ஆழமாகிய—சுனைமலர்-சுனை யிலுள்ளநீலோற்பலமலர்களும்—விழிகள்போலத்தோன்றும் - மாதர்கண் கள்போலத் தோன்றுகின்றன—பரானை-பருத்தவரையையுடைய—அக் குன்றின் - அந்த ஸ்ரீசைலமலையில்—புனை - தரிக்கத்தக்க—மலர்பலவும் - புட்பங்களனைத்தும்—காட்டும் - முடித்துக்காட்டுகின்ற —புரிகுழல் - சு ருண்டகூந்தலையுடைய —மகளிர்போலும் - ஸ்திரீகளைப்போலத் தோற் றும். எ - று. அம்மலை பல்வகைமலர்களையுமுடைமையினல் மலர்களை யணிந்தமகளிர்போல் தோற்றுமெனவே, அம்மலையை வர்ணித்ததாகக் கொள்க. இதனல் தம்நாயகரைப் பிரியாதபோது தம்மையணிவது இய ல்பாதலின் மலர்களையும் அணிந்துகொண்ட தென்பது. (கரு)

தூங்கிசை யருவி பாயத் தொளைக்கைவெண் கோட்டு ரற்கா
லீர்ங்கவு ணெடுநல் யானை யேற்பவெந் தழல லாமற்
றேங்குதண் புனன்மே ஞேக்கா தென்பது தீரச் சென்று
பூங்கதிர் பனிவெண் டிங்கள் போன்மெனத் திவலை செய்யும்.

(இ - ள்.) தூங்கிசை - தூங்கென்னுமிசையோடு—அருவிபாய - மலை யாறுகள்விழ—தொளைக்கை - தும்பிக்கையையும்—வெண்கோடு - வெள் ளைத்தந்தங்களையும்—உரற்கால்-உரல்போன்றகால்களையும்—ஈர்ங்கவுள்- குளிர்ச்சிபொருந்திய கன்னத்தையுமுடைய—நெடுநல்யானை - நீண்டநல் லகாட்டானைகள்—ஏற்ப - அந்தநிலைக்கையினலேந்த —வெந்தழலலா மல் - கொடியஅக்கினியேயல்லாமல்—தேங்கு - தேங்கிநிற்கும் —தண்பு னல் - குளிர்ச்சிபொருந்தியசலம்—மேஞேக்காது-மேற்செல்லாது—என் பது - என்றுகொள்ளுஞ் சித்தாந்தம்—தீர - பூர்வபட்சமாக—சென்று- மேற்சென்று—பூங்கதிர் - அழகியகிரணங்களையுடைய சூரியனை—பனி - குளிர்ச்சிபொருந்திய—வெண்டிங்கள்போன்மென - பூரணச்சந்திரனைப் போன்றிருக்கின்றதென யாவருங்கூறும்படி—திவலைசெய்யும் - நீர்த்திவ லைகளைச்செய்யும். எ - று. மேலிருந்தொழுகும் மலையருவியை யானை கையினலேந்த வந்தநீர் தருக்க சாத்திரத்துக்குமாறுக மேற்சென்று திவ லைகளாகச் சிதறுவதால் பூரணசந்திரனைப்போலுஞ் சூரியன் என்பதென

த்துக்காட்டுவமையணி. தொளைக்கை யானைக்கன்றி யின்மையின் தும்பிக்கையென்றும். பாய எற்ப சென்று இவலைசெய்யுமெனக் கூட்டி முடிக்க. (கசு.)

விஞ்சைய ருளர்ந ரமபின் வீணையா மெழூமின் னோசை
குஞ்சர மனைய வென்றிக் குன்றவா புறத்தி லென்றுந்
தஞ்செவி மடுத்துக் கேட்பார் தனிநிலை யோக முற்றா
ரஞ்செவி நிறைய வுள்ளே யரியயா ழோசை கேட்பார்.

(இ - ள்.) விஞ்சையர் - வித்யாதரர்கள்—ஊர் - விரலினுற்றெறிக்கின்ற—நரம்பின் - நரம்பினையுடைய —வீணையாழ் - பெரியவீணையிலும் யாழிலுமிருந்து—எழும் - தொனிக்கின்ற—இன்னோசை -இனியவோசையை—குஞ்சரமனைய - யானைபோன்ற —வென்றிக்குன்றவர் - வெற்றிபொருந்தியமலைக்குறவர்—புறத்தில் - புறம்பினின்று —என்றும் - எப்போதும்— தஞ்செவி - தமதுசெவிகளால் —மடுத்து - பருகல்போற்சாய்த்து—கேட்பார் - இனிதாகக்கேட்பார்கள்—தனிநிலை - தனியாகநிலைத்தலையுடைய—யோகமுற்றார்—யோகத்தையுடையோர்-அஞ்செவிநிறைய-செவிக்குணிறைய—உள்ளே - தமக்குளெழும் —அரியயாழ் - அரியயாழ் போன்ற —ஓசைகேட்பார் - ஓசைகளையினிதாகக் கேட்பார். எ - று. குறவர்கள் விஞ்சையர் வீணையாழோசையையும் யோகிகள் நத்தமுளெழும் யோகத்தொனிகளையுங் கேட்பரெனவே, அங்குள்ளமகிமையைக் காட்டப்பெற்றும். அகஞ்செவியெனல் அஞ்செவியென்றாயது விகாரம். வீணையாழ் உவமைத்தொகை.. (கஎ)

பீடுறு கருவி னோடு பெயரிய வில்லி னும்ப
ரோடுறு பசும்பொ னுற்செய் தோங்குறு சிகர மொன்று
நீடுறு சிலாத ரன்ற னெடுந்தவப் பிள்ளைக் குன்றின்
மோடுறு முடியின் மீது கவிழ்த்தபொன் முடியை யொக்கும்.

(இ - ள்.) பீடுறு - பெருமைபொருந்திய —கருவினோடு - கர்ப்பத்தோடு—பெயரிய - பெயர்பெற்றிருக்கின்ற —இல்லின்-கிரகத்தின் —உம்பர் - மேலே—ஓடுறு - உருகியோடத்தக்க—பசும்பொனுற்செய்து - பசியபொன்னுற்செய்யப்பட்டு —ஓங்குறு - மேலோங்கின்ற—சிகரமொன்று - ஓர்முடியானது—நீடுறு - மேலோங்கிய —சிலாதரன்றன் - சிலாதரனென்பவனுடைய —நெடுந்தவம் - மிக்கதவத்தாற்செனித்த —பிள்ளைக்

குன்றின் - பிள்ளைக்குன்றென்னுஞ் ஸ்ரீசைலமலையின்—மோடுறு - மேலாக வோங்கிய—முடியின்மீது - சிகரத்தின்மேல்—கவித்த - தரித்த—பொன் முடியை - பொன்னினாற்செய்தமுடியை—ஒக்கும் - ஒத்திருக்கும். எ-று. சிகரமொன்று முடியையொக்குமெனக் கூட்டிப்பொருள்கொள்க. கரு விளைடுபெயரிய இல்லென்பது கர்ப்பக்கிரகமெனப் பொருடரநின்றது. பெயரிய - குறிப்புப்பெயரெச்சம். (கஅ)

செங்கதி ரவனெ ழுந்த திவாவிடைக் குடம்பை தெற்றிப்
பொங்கொளி மரத்திற் சீர்சால் புள்ளினம் பொறையு யிர்த்துக்
கங்குலி னடைகி டப்பக் கருதிவந் ததனைக் கண்டு
வெங்கனல் கொளுந்திற் றென்று மீமிசைச் சுழன்றி ரங்கும

(இ - ள்.) செங்கதிரவன் - சூரியன்—எழுந்த - தோன்றிய—திவாவிடை - பகற்காலத்தில்—குடம்பைதெற்றி - கூண்மடையின்னி—பொங்கொளிமரத்தில் - சோதிமரத்தில்—சீர்சால் - சிறப்பமைந்த—புள்ளினம் - பட்சிக்கூட்டங்கள்—பொறையுயிர்த்து - முட்டையிட்டு - கங்குலின் - இராக்காலத்தில்—அடைகிடப்ப - அவயங்காக்க—கருதிவந்து - நினைத்துவந்து—அதனைக்கண்டு - அம்மரத்தைக்கண்டு—வெங்கனல்கொளுந்திற்றென்று - தீப்பற்றிக்கொண்டதென்று—மீமிசை - மேலே—சுழன்று - வட்டமிட்டு—இரங்கும - விசனமுறும். எ - று. சோதிமரமெனத்தெரியாது அம்மரத்தில் புள்ளினம், பகலிற் குடம்பைதெற்றி பொறையுயிர்த்து இரவில் அடைகிடக்க வந்துழி அம்மரம் நெருப்புப்பற்றியது போற்காண்டலின், வெருவி மீமிசைச் சுழன்றிரங்கு மெனக்கூட்டிப் பொருள்கொள்க. சோதிமரமெனல் ஓர்வகை ஒளியுள்ளமரம். தானேபற்றி யெரிவதாகக்காண்டலின் வெங்கனல் கொளுந்திற்று எனத் தன்வினையாக்கிய தென்க. (கக)

நறுமலர்க் குழன்வெண் முத்த நகைமலை மடந்தை மிக்க
அறம்வளர்ப் பதற்கு நெற்றிற் றளவிரு நாழி யென்று
கறைமிடற் றிறைய ளப்ப வொருபெருங் கருவி தானிவ்
வெறிமலர்க் குடுமிக் குன்றின் வேய்களு ளொன்றிற் பெற்றாள்,

(இ - ள்.) நறுமலர் - மணமுள்ளமலர்களையணிந்த—குழல் - கூந்தலையும்—வெண்முத்தம் - வெண்மையாகியமுத்தையொத்த—நகை - பற்களையுமுடைய—மலை - பர்வதராஜனுடைய—மடந்தை - மகளாகியவுமையவ

ள்—மிக்கவறம்வளர்ப்பதற்கு - மேலாகியமுப்பத்திரண்டறம்வளர்ப்பதற்கு—செல் - செல்லை—கறைமிடற்று - விஷந்தங்கிய கண்டத்தையுடைய—இறை - பரமசிவன்—அளப்பு - அளப்பதற்கு—இருநாழி - இரண்டுபடி —சிற்றளவென்று - குறைந்தவளவினதென்று —ஒருபெருங் கருவிதான் - ஒருபெரியபடியாக—இ - இந்த—வெறி - வாசனைபொருந்திய—மலர் - புட்பங்கணிறைந்த—குடுமி - சிகரத்தையுடைய —குன்றின் - மலையிலுள்ள—வேய்களுள் - மூங்கில்களுள்—ஒன்றில் - ஒருமரத்தில்—பெற்றாள் - அடைந்தாள். எ - று. உமையவள் அறம்வளர்க்கப்படிசிறியதென்று இந்தச் ஸ்ரீசைலமலையில் ஒருபெரிய மூங்கிற்படிசம்பாதித்தாளெனப்பொருள் கொள்க. (உ0)

நெடியவன் குறுகி யப்பா லின்றுகை தொழுமவ் வெற்பின்
மிடியுடை யொருவன் விற்கும் விறகினைக் குறித்துச் சென்று
வடியுடை நவியங் கொண்டோர் மரத்தினைத் துணித்த லோடும்
படியுறு பசும்பொ னுரும் பரிசுகொண வந்து செல்வான்.

(இ - ள்.) நெடியவன் - விஷ்ணு—குறுகி - வந்து—அப்பாலின்று - தூரத்திணின்று—கைதொழுமவ்வெற்பில்-வணங்கத்தக்கவந்தச் ஸ்ரீசைலமலையில் —மிடியுடையொருவன் - ஒருதரித்திரன் —விற்கும்விறகினைக் குறித்து - விற்கின்றவிறகுக்காக—சென்று - போய் —வடியுடை - கூர்மையுடைய—நவியங்கொண்டு - கோடரியினல்—ஓர்மரத்தினைத் துணித்தலோடும் - ஒருமரத்தைவெட்டவும்—படியுறு - நல்லுருவமுள்ள—பசும்பொனுரும்பரிசுகண்டு - பசும்பொன்னுயவிதத்தைக்கண்டு—வந்து - திரும்பிவந்து—செல்வான் - தனதிடத்திற்குப் போய்விடுவான். எ - று. மிடியுடையொருவன் சென்று நவியங்கொண்டு ஓர்மரத்தினைத் துணிக்கப் பசும்பொற்றதலைக்கண்டு வந்துசெல்வானெனக் கூட்டிமுடிக்க. இதுவியப்புத்தற்குறிப்பணி. (உக)

கொண்டல்கண் முழவி னார்க்குங் கோதைவெள் ளருவி
வெற்பில், வண்டுபாண் டூரன்று மூசு மலர்தினைத் தாறு சேர்ந்தே, னுண்டுகண் டுயில்பூங் கொம்ப ருயர்மரத் திவர்ந்தி ராசி,
நொண்டுகண் டஞ்சி நீந்தி நெரேலென விழிப்பு மன்றே

(இ - ள்.) கொண்டல்கள் - மேகங்கள் —முழவினார்க்கும் - பேரிகை யோசத்தினொன்ற—கோதை - பூமாலைபோலொழுகுகின்ற—வெள்ளருவி - வெண்மையானவாறுகளையுடைய —வெற்பில் - மலையில்—வண்டு -

வண்டுகள்—பாண்முரன்று - இராகம்பாடி—மூசி - மொய்த்து—மலர்தி ளைந்து - மலர்களைக்கிண்டி —ஊர் - அதனுலொழுகுகின்ற —செந்தேனு ண்டு - சிவந்ததேனையுண்டு —கண்டுயில் - உறங்குகின்ற—பூங்கொம்பர் - அழகியகிளைகளையுடைய —உயர்மரத்து - உயர்ந்தவிருட்சத்தில் —மந்தி - பெண்குரங்கு—இவர்ந்து - ஏறி —இராசிநெண்டு - கர்க்கடகவிராசி யை —கண்டு - பார்த்து —அஞ்சி - பயந்து —ஞெரேலென - தீடீரென் று—இழியும் - இறங்கிவிடும். எ - று. அன்று ஏ - அசைகள். மந்திஉய ர்மரத்து இவர்ந்து கண்டு அஞ்சி இழியும் எனக்கூட்டிப்பொருள்கொ ள்க. (உ௨)

துளிர்க்குள கினைத்தேன் றோய்த்துத் தனதுவாய் கொடுக் குஞ் செய்கை, பளிக்கறை யதனுட் கண்டு பரிந்துவே றொன்றி னுக்கிங், களித்ததென் றுளம யங்கி யரும்பிடி யொருகூர்ங் கோட்டுக், களிற்றினை முனிந்து செல்லுங் கம்பலை யுடைத்தக் குன்றம்.

(இ - ள்.) தளிர்க்குளகினை - துளிராகியவுணவை—தேன்றோய்த்து - தேனிற்றோய்த்து—தனதுவாய்கொடுக்குஞ்செய்கை - தனதுவாயிற்கொ டுக்குஞ்செயலை—அரும்பிடி - அரிதாகியபெண்யானை —பளிக்கறையதனு ள் - பளிங்குக்கண்ணுடியாலியற்றியவறைக்குள்—கண்டு - பார்த்து —ப ரிந்து - சகியாமையால்வருந்தி —வேறொன்றினுக்கு - வேறோர்பெண்யா னைக்கு—இங்களித்ததென்று - இங்கேகொடுத்ததென்று —உளமயங்கி - மனமருண்டு—கூர்ங்கோட்டு - கூர்மையானகொம்பையுடைய—ஒருகளி ற்றினை - ஓராண்யானையை —முனிந்து - கோபித்து —செல்லும் - போ கும்படியான—கம்பலையுடைத்து - ஆரவாரத்தையுடையது—அக்குன்ற ம் - அந்தஸ்ரீசைலமலை. எ - று. தனக்கு ஆண்யானை கொடுக்குமுணவி ன்செயலைப் பளிக்கறையிற் றோற்றக்கண்டு பரிந்து மயங்கி முனிந்து செல்லும் கம்பலையுடைத்து அக்குன்றம் எனக்கூட்டிப் பொருள் கொள்க. (உ௩)

நண்ணுறு மதியின் மானைப் பிடித்துநீ நல்கு கென் ஞ, வெண்ணுதன் மடந்தை வேண்ட வொருகுற மகன்கேட் டன்று, பெண்ணுனா கொண்டி ராமன் பிடிப்பதற் கெண்ணு மாபோ, லெண்ணில னிதற்கென் செய்வே னென்றுள் ளைந்து நிற்பான்.

(இ - ள்.) நன்னுறுமதியின் - சந்திரனிடத்துள்ள — மானைப்பிடித்து நீநல்குகென்ற - மானைப்பிடித்துநீகொடுவென்று — ஒண்ணுதல் - அழகிய நெற்றியையுடைய — மடந்தைவேண்ட - ஓர்குறப்பெண்வேண்ட — ஒரு குறமகன்கேட்டு - ஓர்குறவன்கேட்டு — அன்று - முற்காலத்தில் — பெண்ணுரைகொண்டு - சீதையின்வார்த்தையைக்கேட்டு — இராமன் - இராமனானவன் — பிடிப்பதற் கெண்ணுமாபோல் - பிடிக்கவெண்ணங்கொண்டது போல — எண்ணிலன் - பிடிக்கவெண்ணங் கொள்ளாதவனாய் — இதற்கென்செய்வேனென்று - இந்தவிபரீதபுத்திக்கென் செய்வேனென்று — உளனைந்து - மனம்வருந்தி — நிற்பான் - திகைத்துநிற்பான். எ - று. மதியின்மானைப்பிடித்து நல்கெனக்குறமகள்வேண்ட வதைக்கேட்ட குறமகன் இராமனைப்போற் பதறிச்செல்லாது அவளுக்குப் பிறிதுமொழி சொல்லற்கிடமின்றித் திகைத்துநின்றனன் எனப்பொருள்கொள்க. ()

மேருமந் தரமே யாதி வெற்பெலா மெனைவெ றுப்பச்
சாருமென் மாட்டே முக்கட் டம்பிரா னெனநி னைந்து
சேருமொன் னலரை யஞ்சிச் சிலம்பழு மாறு போல
வாரவெள் ளருவி பாயு மழகினை யுடைத்து மாதோ.

(இ - ள்.) மேருமந்தரமேயாதி - மேருகிரியுமந்திரகிரியுமுதலாகிய — வெற்பெலாம் - மலைகளெல்லாம் — முக்கட்டம்பிரான் - மூன்றுகண்களையுடையபரமசிவன் — சாருமென்மாட்டேயென - என்னிடத்தேதங்கியிருக்கிறனென்று — நினைந்து - நினைத்து — எனைவெறுப்பச்சேரும் - என்னை வெறுக்கும்படிசாருவதால் — ஒன்னலரையஞ்சி - இங்ஙனமாயசத்துருக்களுக்கஞ்சி — சிலம்பழுமாறுபோல - ஸ்ரீசைலமழுவதுபோல — ஆர - நிறைய — வெள் - வெண்மையாகிய — அருவிபாயும் - விடாதுமலையாறாகவொழுகிக்கொண்டிருக்கும் — அழகினையுடைத்து - அழகையுடையதாம். எ - று. மாது. ஓ - அசைகள். ஸ்ரீசைலமானது விடாதொழுகுமருவிகளையுடையது எங்ஙனம்போல்வதெனின், யான்மாத்திரம் பரமசிவனையுடையேனென்று மேருவாதிமலை என்னை வெறுப்பதால் அதற்குச்சகியேனென்று அழுதல்போன்றுள்ளதெனப்பொருள் கொள்க. (௨௫)

இனையன வளமி குத்த வெந்திருச் சயிலந் தன்னை
யனையினு மினிய னெங்கோ னல்லமன் சென்று நண்ணித்
தனியுடல் சித்தி பெற்றுத் தருக்குமக் கோரக் கன்று
னனியுள மகிழ்ந்தி ருக்கு நல்லிடந் தனைய டைந்தான்.

(இ - ள்.) இனையன - இத்தன்மையனவாகிய—வளமிருந்த - வளப்பமிருந்த —எந்திருச்சைலந்தன்னை - அழகியவெமதுசைலமலையை —அனையினுமினியன் - தாயினுமிகப்பிரியமுள்ள—எங்கோனல்லமன் - எமதுகர்த்தனாகியவல்லமதேவன்—சென்றுநண்ணி - போய்ச்சேர்ந்து—தனி - தனியாகநின்று —உடல்சித்திபெற்று - காயசித்திபெற்று —தருக்கும் - செருக்கித்துநின்ற—அக்கோரக்கன்றான் - அந்தக்கோரக்கனென்பவன்—களியுளமகிழ்ந்திருக்கும் - மிகவும்மனமகிழ்ந்திருக்கின்ற —நல்லிடந்தனையடைந்தான் - நல்லஇடத்தைக்கண்டுசேர்ந்தான். எ - று. அல்லமன் சென்று நண்ணி அடைந்தான் எனக்கூட்டிப்பொருள்கொள்க. (உசு)

அத்தனேர் வருதல் கண்ணுற் றப்பெருஞ் சித்தன் றன்னோ
டொத்தவோர் சித்த னுக வுன்னுபு தனைவி யந்து
நித்தனுண் மலர்த்தா டாழா நின்றுகை குவித்து ஞான
சித்தநீ வருக வென்றோர் தவிசிடைச் சேர்த்திச் சொல்வான்.

(இ - ள்.) அத்தன் - அல்லமதேவன்—நேர்வருதல்கண்ணுற்று - நேரேவருதலைப்பார்த்து—அப்பெருஞ்சித்தன் - அந்தப்பெரியசித்தனென்பவன்—தன்னோடொத்த - தனக்கொப்பாகிய—ஓர்சித்தனுகவுன்னுபு - ஒருசித்தனுகநினைத்து—தனைவியந்து - தன்னைத்தானேயதிசயித்து—நித்தன் - நித்தனாகியவல்லமனது—நாள் - அன்றலர்ந்த—மலர்த்தாள் - தாமரைமலர்போன்றபாதங்களை —தாழாநின்று - வணங்கிநின்று—கைகுவித்து - அஞ்சலிசெய்து—ஞானசித்த - ஞானசித்தனே —நீவருகவென்று - நீயெழுந்தருளுகவென்று —ஓர்தவிசிடைச்சேர்த்தி - ஓராசனத்திலுட்காரவைத்து—சொல்வான் - சொல்லுவன். எ - று. அப்பெருஞ்சித்தன் கண்ணுற்று உன்னுபு வியந்து தாழாநின்று கைகுவித்து சேர்த்திச்சொல்வானெனக் கூட்டிமுடிக்க. (உஎ)

வேறு.

இரவி வானவ னெழுந்தது மின்றெனக் கதா அன்று
தெரிவ வாயின கண்களு மின்றுநின் சிறந்த
வரவு நானெதி ரின்றுபெற் றமையினின் வரவு.
பொருவின் மாதவம் புரிந்திடார்க் கெளிது தோ புகலின்.

(இ - ள்.) இரவிவானவன் - சூரியன்வந்தானென்னில் —எழுந்ததுமின்று - அவனெழுந்துவந்தது மில்லை—அதா அன்று - அதுவுமன்றி—

(ஒருவேளைவந்தால்) தெரிவவாயின - பார்த்தற்கியைந்த கண்களேனு முண்டோவெனில் —கண்களுமெனக்கின்று - அங்ஙனமாயகண்களு மெனக்கில்லை —நின்சிறந்தவரவு - உனதுசிறந்தவருகையை —இன்று - இப்போது —எதிர் - பிரத்தியட்சத்தில் —நான்பெற்றமையின் - நா னடைந்ததால் —நின்வரவு - உனதுவருகை —பொருவில் - ஒப்பி ல்லாத —மாதவம்புரிந்திடார்க்கு - மகத்தானதவஞ்செய்யாதார்க்கு — புகலில் - இதைப்பற்றிப்பேசுமிடத்து —எளியதோ - எளிதில்வாய்க்கு மோ. எ - று. சூரியோதயமின்றுதானென்றும் அதைக்காணப்பெற்றக ண்களுமின்றுதானென்று முறைகொள்ளினுமமையும். உனதுவரவை நோக்குமிடத்தில் சூரியன் இவ்விடத்தெழுந்தனனெனில், அவன்வானத் திருப்பதால் வந்ததும் இன்றெனவும், ஒருவேளைவரின் பார்க்கும்படியா ன கண்களுமுண்டோவெனில் அவைகளுநமக்கின்றெனவும், காணப்படு வதால் தோன்றுஞ் சிறந்தவரவெனவும், அந்தவரவு ஏனையோர்க்கெளி தன்றாமையின் நின்வரவுபொருவின் மாதவம் புரிந்திடார்க் கெளிய தோவெனவுங் கூறியவாறுகாண்க. எனவே, உன்னைக்காணுமிடத்துச் சூரியன்உதயமானதுபோற் காணப்படுவதாகப் பெற்றும். (உஅ)

மதலையாகிய நற்குணஞ் சார்ந்துநல் வாய்மை
சிதைவி லாவடி யாரினஞ் சேர்ந்திடா தவன்கண்
ணுதலி னையுஞ் சேர்நதிடா னென்பவெந் நூலு
முதலி லான்பெறு மூதியம் யாதுகொன் மொழியில்.

(இ - ள்.) மதலையாகிய - குழந்தைப்பருவத்துக்குரியதாகிய —நற்கு ணஞ்சார்ந்து - நற்குணங்களையடைந்து —நல்வாய்மை - நல்லவுண்மை— சிதைவிலா - மாறாத —அடியாரினஞ்சேர்ந்திடாதவன் - அடியாரினத்தி லடைக்கலம்புகாதவன்—கண்ணுதலினையும் - பரமசிவனையும்—சேர்ந் திடான் - அடையான்—என்பவெந்நூலும் - என்றெந்தசாத்திரங்களுஞ் சொல்லுகின்றனவாம—முதலிலான் - ஆதியில் முதலில்லாதவன்—மொ ழியில் - அவனைப்பற்றிச்சொல்லுமிடத்தில்—பெறுமூதியம் - அடையுமி லாபம்—யாதுகொல் - யாதானுமுளதோ. எ - று. இவ்வுபமானம்; சிவ னடியார்களை அடைக்கலம் புகாவிடத்துச்சிவனைப்பூசித்தும் பயனின்றெ னக் காட்டற்கென்க. நன்கு தீதுபகுப்பின்மையின் மதலையாகியநற்குண ஞ்சார்ந்தென்றார். மதலைப்பருவத்தையன்றி நற்குணம் வேறின்மையின் மதலையாகியநற்குண மெனப்பட்டது. (உகூ)

ஒருவி ருந்தினர்க் குரைசெயு முகமனே டொப்பக்
குருப ரன்றனக் கினையன வின்மொழி கூறி
வருபெ ருந்தகை யார்கொனீ யுரையென வாழ்த்தி
யருளி னங்கட றனைவிழுய் நின்றன னன்றே.

(இ - ள்.) ஒருவிருந்தினர்க்கு - வந்தவொருவிருந்தாளிக்கு — உரை செயும் - சொல்லவேண்டிய — முகமனேடொப்ப - உபசாரவார்த்தைக் கொப்பாக — குருபரன்றனக்கு - குருவாகியவல்லமதேவனுக்கு — இனையன - இத்தகையினவாகிய — இன்மொழிகூறி - இனியவசனங்களைச்சொல்லி — வரு - இவ்விடத்தில்வந்த — பெருந்தகை - பெருந்தன்மையையுடையோனே — யார்கொனீ - நீயார் — உரையென - சொல்லென்று — வாழ்த்தி - துதித்து — அருளினங்கடறனை - அழகியகிருபாசமுத்திரமாகின்றவல்லமனைப்பார்த்து — விழுய்நின்றனன் - விழுவிநின்றனன். எ - று. அன்று - ஏ - அசைநிலைகள். பெருந்தகை; அன்மொழித்தொகை. (௯0)

செறிந்த மூலவாங் காரத்தின் வேறெனத் தீர்ந்திட்
டிறந்தி டாதுதற் கண்டவ னென்னையுங் காண்பான்
மறிந்து போமுடன் மானியை யுரைப்பதென் மதித்தென்
றறிந்த ஞானிகள் வேறற வறிபவ னறைந்தான்.

(இ - ள்.) செறிந்த - அநாதிதொட்டுவிடாதுவந்த — மூலம் - பிரவிர்த்தியின் மூலகாரணமாகின்ற — ஆங்காரத்தின் - அகங்காரத்தினின்றும் — வேறென - விலட்சணமாயதென்று — தீர்ந்திட்டு - சோதனையாதிகளாற் றீர்வுசெயப்பெற்று — இறந்திடாது - யாதொன்றானுங்கலங்காது — தற்கண்டவன் - தன்னைத்தரிசித்தவன் — என்னையுங்காண்பான் - அங்ஙனமேயென்னையும் வேறறக்காண்பான் — மறிந்துபோம் - நசித்துப்போதற்கியைந்த — உடன்மானியை - தேகாபிமானியை — மதித்து - ஓர்பொருளாகமதித்து — உரைப்பதென்னென்று - உரைப்பதற்குக்காரணமென்னவென்று — அறிந்தஞானிகள் - உணர்ந்தஞானிகளை — வேறறவறிபவன் - தானாகவறியுமல்லமன் — அறைந்தான் - சொல்லினன். எ - று. என்னையும் என்பதிலும்மை இறந்ததுதழீஇயவெச்சவும்மை. தற்காண்டலாவது; சிவத்தினது பிரதிபலனந்தானாகக்காண்டலே. அகங்காரந்தானன்மையின் மூலவாங்காரத்தின் வேறெனத்தீர்ந்திட்டிறந்திடாதுதற்கண்டவனென்றார். மறிந்துபோமுடன்மானியை உரைப்பதென் மதித்தென்றது; இவனைக்குறிப்பில்லைதற் கென்க. (௯௧)

ஆதி நாதன தருளினுற் குளிகையா திகளான்
மேதை யாமுடல் சித்திபெற் றவனென்றும் விளியா
னுத லாலது பெருதவ னழியுமென் றறைந்தான்
பூத மேனியே தானெனப் பொருந்துபுந் தியினுன்.

(இ - ள்.) ஆதிநாதனது - கடவுளினது—அருளினல் - கிருபையினுலு ம்—குளிகையாதிகளால் - குளிகைமுதலியவைகளாலும் —மேதையாமு டல் - மாமிசமயமாகியவுடலை —சித்திபெற்றவன் - காயசித்திபெற்றவ ன்—என்றும்விளியான் - எப்போதுமிறவான்—ஆதலால் - ஆகையால்— அதுபெருதவன் - அந்தக்காயசித்திபெருதவன்—அழியுமென்று - மரிப் பனென்று —அறைந்தான் - சொல்லினன்—(அவனுரெனில்) பூதமே னி - பஞ்சபூதகாரியதேகத்தையே—தானெனப்பொருந்து - தானுகவழு ந்திய—புந்தியினுன் - விகற்பபுத்தியையுடையகோரக்கன். எ - று. என வே, காயசித்தியையே மோட்சமெனக்கருதினுனெனப் பெற்ரும். (கூஉ)

உடம்பு வாழ்தருன் வாழ்தலு மூன்பொதிந் தியற்று
முடம்பு சாதருன் சாதலு மாகவே யுரைத்தா
யுடம்பு தானுயி ரென்னநீ யுன்னிஞே போலு
முடம்பு வேறறி யாவுல காயுத னுெத்து.

(இ - ள்.) உடம்புவாழ்தருன் - உடம்பழிவின்றிவாழ்தல்—வாழ்தலு ம் - காயசித்திபெற்றுவாழ்தலும் —ஊன்பொதிந்தியற்றும் - மாமிசநிறை ந்திருக்கும்படிசெய்யும்—உடம்பு - தேகம்—சாதருன் - மரித்தல்—சாத லுமாகவே - காயசித்தியின்றிமரித்தலுமாகவே—உரைத்தாய் - சொல்லி னை—உடம்புதான் - உடம்பே—உயிரென்ன - உயிரென்று —நீயுன்னி னைபோலும் - நீநினைத்ததுபோற்காண்கின்றது—(இதுயாதுபோல்வதெ னின்) உடம்புவேறறியா - தனக்குடம்புவேறென்றறியாத —உலகா யுதனொத்து - உலகாயுதனுக்குச் சமானமாக. எ - று. நீ உடம்பேவுயி ரென்றதனல் உலகாயிதனுக்குவமையாயிற்று. (கூக)

யாக்கை தானென்னி லெனதுடம் பென்பதிங் கென்னை
போக்கு மாடைபொன் முதலிய பொருளுளொன் றெனநீ தன்
னுக்கு வார்தமி லதனையா னென்பவ ராய்ப்
பார்க்கில் யாருளர் பகர்தியென் றல்லமன் பகர்.

(இ - ள்.) யாக்கைதானெனில் - தேகமேதானெனப்படுமாயின்—இங்கு - இவ்வுலகத்தில் —எனதுடலென்பது - எனதுடலென்றுவழங்குவது—என்னை - என்னகாரணம்—போக்கும் - தன்னைவிட்டுநீக்கத்தக்க—ஆடைபொன்முதலிய - வஸ்திரம்பொன்முதலாகிய —பொருளுள் - பொருள்களுள்—ஒன்று - ஒருபொருளை —எஃதென்று - என்னுடையதென்று —ஆக்குவார்தமில் - சுதந்தரித்துக்கொள்ளுபவர்களில்—அதனை - அப்பொருளை —யானெனப்படுமவரை - யானென்றுகூறத்தக்கவரை—பார்க்கில் - தேடிப்பார்க்கில்—யாருளர் - யாரிருக்கின்றனர்—பகர்தியென்று - சொல்லுதியென்று —அல்லமன்பகர - அல்லமதேவன்வினவ. எ - று. எனதெனற்கியைந்த இருவகைக்கிழமைகள் யானெனற்கியையின், உடலும் தானெனற்கியையும். அங்ஙனமநுபவம் இல்லாமைக்கேதென்னை யென்றனனென்க. ஒன்றினமுடித்தலென்பதனால் தற்கிழமைவருவித்தாம். என்னை, யாருளர், என்பனவிரண்டும் குறிப்புவினைமுற்று. (௩௪)

யானினைந்தன னோடின னென்றியம் புதலாற்
றானெனப்படு கின்றதே தெனக்கது தன்னை
நீநிகழ்த்துக வென்றுகோ ரக்கனின் றியம்ப
ஞான நற்குரு பரனிது நவின்றன னயந்து.

(இ - ள்.) யானினைந்தனனென்று - யானினைத்தேனென்றும் —ஓடினனென்று - யானோடினனென்றும்— இயம்புதலால் - எவருஞ்சொல்லுகின்றமையால்—(அப்போது) தானெனப்படுகின்றதேது - தானெனவழங்கப்படுகின்றதியாது —எனக்கதுதன்னை - எனக்கவ்வையத்தை—நீநிகழ்த்துகவென்று - நீதெளிவிக்கவேண்டுமென்று —கோரக்கனின்றியம்ப - கோரக்கனின்றுவினவ—ஞானநற்குருபரன் - அதற்குஞானதேசிகனுகியவல்லமன்—நயந்து - விரும்பி —இதுநவின்றனன் - இதனைச்சொல்லினன். எ - று. நினைத்தல் கரணமும், ஓடுதல் தேகமுமேனும், சினைவினைசினையொடு முதலொடுஞ்செறியுமென்னும்விதியால், யானினைந்தனன், யாளோடினன் எனவழங்கல் அத்தியாசமெனக் குறிப்பிக்கச்சான்றோர் வழங்கிவருவதை யிவனுணராமல் இங்ஙனங்கேட்டனனென்க. என்றெனவே இருவயினுமொட்டுக. (௩௫)

நானினைந்தன னெனல்கர ணத்தினை நண்ணு
மான தன்மையா லுடல்பொறி கரணங்க ளனைத்து

நானெ னும்படி வரும்வரத் தான்பல வதனு
னீந வின்றதத் தியாசமென் றறிகென நிகழ்த்த.

(இ - ள்.) நானினைந்தனனெனல் - நானினைத்தேனெனக்கூறுதல்—கரணத்தினை - அந்தக்கரணப்புடைபெயர்ச்சியில்—நண்ணும் - பொருந்தும்—ஆனதன்மையான் - ஆகிவழங்குந்தன்மையால்—உடல் - தேகமும்—பொறி - ஐம்பொறியும் —கரணங்கள் - அந்தக்கரணங்களுமாகிய—அனைத்தும் - இவையாவும் —நானெனும்படிவரும் - நானென்றுகூறும்படிவழங்கிவரும்—வர - அங்ஙனம்வழங்கிவர—தான் - தானென்பது—பல - பலவாகக்காணும் —அதனல் - அக்காரணத்தால் —நீ நவின்றது - நீசொல்லியது—அத்தியாசமென்று - கற்பனையென்று—அறிகென - அறியக்கடவாயென்று—நிகழ்த்த - அல்லமென்கூற. எ - று. நானினைந்தனனெனல் கரணத்தினைநண்ணுமெனவே, யானுடையனனெனல் உடலிலும், யான்பார்த்தனனெனல் பொறியிலும், யானினைந்தனனெனல் கரணத்திலும், நண்ணுமெனற்கையமின்றென்பார்; அனைத்துந் தானெனும்படிவருமெனவும்,அனைத்துந்தானென்றேனும் தான்பலவாகவழங்கிவருதல்பற்றித் தான்பலவெனவும், இங்ஙனம்வழங்கிவருவது ஒன்றின்புடைபெயர்ச்சியொன்றுக்காதலால் அத்தியாசமெனவுங் கூறியதாகக்கண்டாம். அத்தியாசமெனப் பொதுப்படக்கூறினும், உடல்பொறிகரணமென்றதனல் மித்தையாத்தியாசம், இதராத்தியாசம, இதராதராத்தியாசம் எனக் கொண்டாம். தூலசூக்கும காரணங்களாகிய வுபாதித்திரியங்களே அத்தியாசமாயவிடத்து அவற்றின் புடைபெயர்ச்சிகள் யாதாகவேண்டும், வேறுகூறற்கிடமின்மையின் அத்தியாசமென்னல்பொருந்தும். இதனைமறுப்பார் அவிவேகியர், தன்னிலக்கணங்கல்லாமையின். (௯௬)

ஒழியு மென்னுயி ரெனுமிடத் தவ்வுயி ரொழிய
மொழிய வேறுமோ ருயிருள தோவிதை மொழிநீ
பழியி னல்லருட் குன்றமே யென்றவன் பகரச்
செழிய மென்மலர்ப் பதத்தெமை யாள்பவன் செப்பும்.

(இ - ள்.) ஒழியுமென்னுயிர் - என்னுயிர்நீங்கும்—எனுமிடத்து - என்றுகூறுமிடத்து—அவ்வுயிரொழிய - அவ்வுயிரையன்றி—மொழிய - அங்ஙனங்கூறுதற்கு—வேறுமோருயிர் - வேறோருயிரும்—உளதோ - உண்டோ—இதைமொழிநீ - இதையோர்ந்துசொல்லுதி—பழியில் - குற்றமில்லாத—நல்லருட்குன்றமே - நல்லகிருபாமலைபோன்றவரே—என்றவன்

பகர - என்றுகோரக்கன்சொல்ல—செழிய - செழுமையாகிய—மெல் - மிருதுவுபொருந்திய—மலர்ப்பதத்து - தாமரைமலர்போன்றதமதுதிருவடிகளால் —எமையாள்பவன் - எம்மையடிமைகோடற்கியைந்தவல்லமன்—செப்பும் - சொல்லுவன். எ - று. வழக்கத்தாலன்றி என்னுயிரெனற்குச்சுதந்தரன் வேறின்றெனக்கருதி இங்ஙனம் வினவினனென்க.

உயிரெ னும்பெய ரியங்குகாற் கியற்பெய ருரைப்பி
னயலு றுந்தனக் கப்பெய ராகுபே ராமென்
றியலு ணர்ந்தவ ரியம்புவ ரென்றெமக் கிறைவன்
மயல றும்படி யுணர்ந்திஃ துரைத்தனன் மன்னோ.

(இ - ள்.) உயிரெனும்பெயர் - உயிரென்றுசொல்லப் பட்டபெயர்—இயங்குகாற்கு - துருத்திபோலியங்கும் பிராணவாயுவிற்கு —இயற்பெயர் - இயற்பெயராக—உரைப்பின் - சொன்னால்—அயலுறும் - இதனோடுகலப்புறுதயலாகநிற்கும்—தனக்கு - பிரத்யேகாத்மாவாகிறதனக்கு—அப்பெயர் - அந்தவியற்பெயர்—ஆகுபெயராமென்று - ஆகுபேராவருமென்று—இயலுணர்ந்தவர் - முத்தமிழுளியற்றமிழ்நன்குணர்ந்தோர் —இயம்புவரென்று - சொல்லுவார்களென்று —எமக்கிறைவன் - நமக்குக்காரணாசிரியனாகியவல்லமன்—மயலறும்படி - ஒன்றையொன்றாக்கொள்ளும் பிராந்திதீரும்படி —உணர்ந்து - சிந்தித்து—இஃதுரைத்தனன் - இன்னுமிந்நிலையைச்சொல்லினன். எ - று. மன்-ஓ - அசைகள். உலகருவப்பவென்னுமிடத்து இயற்பெயரும், உலகமுவப்பவென்னுமிடத்து ஆகுபெயருமாய் நிற்றல்போல, உயிரென்னும்பெயர் பிராணவாயுவிற்கியற்பெயராயும் பிரத்யேகான்மாவிற்காகுபெயராயும் நிற்றலையுணர்பவர் ஏனைய தமிழுணர்ந்தோரல்லராதலின், இயலுணர்ந்தவரியம்புவரென்றார். விசாரியாதுழி பிராணவாயுவிற்கும், விசாரித்தையந்தவிர்ந்துழி ஆன்மாவாகிற சுத்தசைதன்யத்திற்குமாகச்சேறலின், உயிரெனலை இயற்பெயரெனவும் ஆகுபெயரெனவுங் கூறினார். அயலிலக்கணத்தில் சொல்லாற்றலும் தன்னிலக்கணத்தில் ஞானகர்ப்பிரத்யட்சவாற்றலும் இன்றியக்கண் இக்கவியின்கருத்துப்புலப்படாதென்பது திண்ணமென்க. ஆகுபெயர் குறிப்பிற்பொருளுணர்த்துவது, இயற்பெயர் அங்ஙனமின்றிப் பொருளுணர்த்துவதென்க. காலெனல் இங்கேபிராணவாயுவை. (கூஅ)

நின்னைச் சச்சிதா நந்தமென் றருமறை சாற்ற
மின்னிற் கெட்டிடுந் தசையினை மென்புதோன் மேய்ந்த

வின்னற் பொய்க்குடி லாகிய வுடம்பினை யானென்
றுன்னிக் கெட்டனை யென்கொனீ யென்றினு மியம்பும்.

(இ - ள்.) தன்னை - ஆன்மாவாகிறதன்னை —சச்சிதானந்தமென்று - சச்சிதானந்தஸ்வரூபமென்று —அருமறைசாற்ற - அரியவேதங்கள்கூற நிற்க—மின்னிற்கெட்டிடும் - மின்னல்போற்றோன்றிமறையும்—தசை - மாமிசங்களாலும் —நிணம் - கொழுப்பினாலும் —என்பு - எலும்புகளாலும்—தோல் - தோல்களாலும்—மேய்ந்த - இயைந்த—இன்னல் - துன்பங்கட்கும்—பொய் - பொய்க்கும்—குடிலாகிய - வீடாகிய —உடம்பினை - தூலவுடம்பை—யானென்றுன்னி - நானெனக்கருதி—கெட்டனைநீ - நீ கெட்டுவிட்டாய் —என்கொலென்று - இதென்னமடமையென்று — இனுமியம்பும் - இன்னமுஞ்சொல்லுவன். எ - று. பொய்யென்றதனால் அசத்தும், தசைநிணமென்புதோல்மேய்ந்தவென்றதனல் சடமும், இன்னலென்பதனல் துக்கமும் எனப்பெறும். இவ்வடைகள் தேகத்துக்கியையுமென்னுமிடத்தும் சச்சிதானந்தமென்னுமடைகள் தேகிக்கியையுமென்னுமிடத்தும் முரண்யாது. உண்டெனில், தேகத்துக்கு முண்டாயிருக்கவேண்டும். ஆதலின், அதுவமு. மின்னிற்கெட்டிடு முடம்பென்றதனல், அசத்தெனலேநேரேகாட்டுங் குறியெனலும் பொருந்தும். (௯௯)

வெருவு றப்படும் பிறவியை யொழித்துமெய் வீடு
மருவு தற்குளம் வைத்தவ னிம்மல வடிவைத்
தெருவி னிற்புனி தம்படா வொன்றனைத் தீண்டி
யருவ ருப்பவன் போலரு வருத்தனை யகற்றும்.

(இ - ள்.) வெருவுறப்படும் - யாவரும்பயப்படத்தகுந்த —பிறவியை யொழித்து - பிறவிக்குக்காரணமாகியபிராந்தியையொழித்து—மெய்வீடு மருவுதற்கு - உண்மையாகியவீட்டையடைதற்கு —உளம்வைத்தவன் - சிந்தைவைத்தவன்—இம்மலவடிவை - மலவடிவமானவிந்ததேகத்தை— தெருவினில் - வீதியில் —புனிதம்படாவொன்றனை - புனிதத்திற்கூடன்படாதவமேத்தியத்தை—தீண்டி - மறதியினாற்றீண்டி—அருவருப்பவன் போல் - அருவருப்புகொள்வான்போன்று —அதையகற்றும் - அதனைநீக்கிக்கொள்வன். எ - று. அமேத்தியம் தனதுறுப்பிற் சிறிதுபட்டகண்டோன் அதனையொழிக்குமளவும் மிக்கஅருவருப்பினின்றகலான். அன்றேல் தனதுடலை மலமயமெனக்கண்டவிடத்து எங்ஙனஞ்சகித்திருப்பன். அதுபோல ; நீ மலவுடலை யானெனச்சகித்திருத்தல் எங்ஙனம் பொருந்துமெனக்குறிப்பித்தாரென்க. (௱)

மருந்து கொண்டுநோய் தீர்ப்பவர் போற்சிவ மருவி
யிருந்த இவ்வுடம பிணைப்பெரி யவர்விட வெண்ண
மருந்து கொண்டுநோ யோடுற மதிப்பவன் போல
விருந்த இவ்வுடம் போடுற வெண்ணினை யென்னே

(இ - ள்.) மருந்துகொண்டு - அவிழ்தங்கொண்டு —நோய்தீர்ப்பவர் போல் - நோயைநீக்கிக்கொள்ளுவார்போல —சிவமருவியிருந்த - சிவந் தங்கியிருந்த—இவ்வுடம்பினை - இந்ததேகத்தை—பெரியவர் - பெரி யோர்கள்—விட - விடும்படி—எண்ண-எண்ணங்கொள்ள —மருந்துகொ ண்டு - மருந்துபெற்றுக்கொண்டு—நோயோடுற - வியாதியோடுகூடியிரு க்க—மதிப்பவன்போல - எண்ணங்கொள்பவன்போல —இருந்த - உன க்குவாய்த்திருந்த—இவ்வுடம்போடுற - இம்மலவுடம்போடுகூடியிருக்க— எண்ணினை - எண்ணமுற்றனை —என்னே-இஃதென்னமதியோ. எ - று. மருந்து சிவம். நோய் உடம்பு. எனவே, சிவத்தி னிலையடைந்து உடம் பாகாரநிலையை விடுதியென்பது கருத்து. (௪௧)

பிறந்த வாகமொன் றிறந்திடாப் பெருமையு முடைத்தோ
வெறிந்த வான்சிலை வீழ்ந்திடா திருப்பதிங் கில்லை
செறிந்த காரிய மென்பதென் றுயினுஞ் சிதையு
மிறந்தி டாதுகா ரணமெனப் படுமதே யென்றும்

(இ - ள்.) பிறந்தவாகமொன்று - செனித்ததேகங்களிலொன்று —இ றந்திடாப்பெருமையும் - சாகாதபெருமையையும் —உடைத்தோ-உடை யதாகுமோ—வான் - ஆகாயத்தில்—எறிந்தசிலை - எறிந்தகல் —வீழ்ந்தி டாதிருப்பது - விழா திருப்பது—இங்கு - இவ்வுலகத்தில்—இல்லை - அநு பவமில்லை—செறிந்த - சோதனைஞாயங்களால்மிகச்செறிந்த—காரியமெ ன்பது - காரியமெனப்படுவது —என்றுயினும் - என்றைக்காயினும்—சி தையும் - நாசமுறும்—காரணமெனப்படுமதே - காரணமெனற்கிலையைப் படுவதே—என்றும் - எப்போதும்—இறந்திடாது - நாசமுறாது. எ - று. பிறப்பிற்குடன்படாதவாகமொன்றுளதேல் இறப்பிற்குடன்படாது. அங் ஙனம் ஒன்றிலதே. இஃதன்றியும் பஞ்சபூதங்காரியமெனவும் அவற்றாலா யவுடல்காரணமெனவுங்கோடற்கு எங்ஙனம் ஞாயஞ்சோதனையேற்கும். ஆதலால், உடல்காரியமெனவும் பூதங்காரணமெனவும் உடல் அழியுமெ னவும் இதனாற்பூதமழியா தெனவுங்கருதிச், செறிந்தகாரியமென்பதென் றுயினுஞ்சிதையும் இறந்திடாதுகாரணமெனப்படுமதேயென்றும் எனக்

கூறினரென்க. உடைத்தோவென்பதி லோகாரம் எதிர்மறை. எறிந்தவா ன்சிலைவீழ்ந்திடாதிருப்பதிங் கில்லையென்றவுபமானம் பஞ்சபூதகாரியமா கப்பிரிதிபவித்தவுடல் பஞ்சபூதமாகாதிருப்ப திங்கில்லையெனலை யுணர்த் தற்கு நின்றதென்க. (௪௨)

மருந்தி னுடலு னித்தமா மென்றுநீ வருத்த
திருந்து வாழுநாட் பன்மைகொண் டன்றிவே றில்லை
பொருந்தி நீயுட லழிந்திடா தென்பது பொருந்தா
தருந்த வாவினி வீடுவேண் டென்றன னையன்.

(இ - ள்.) மருந்தினல் - காயசித்திக்குரியமருந்தினல் —உடனித்தமா மென்று - தேகத்துக்குநித்தியத்துவம்வாய்க்குமென்று—நீவருத்தது - நீ யேற்படுத்திக்கொண்டது—இருந்து - உடலோடிருந்து—வாழுநாள் - வா ழுங்காலம்—பன்மைகொண்டன்றி - பலவென்னுமெண்ணிக்கைகொண் டன்றி—வேறில்லை - வேறென்னற்கேதில்லை —நீபொருந்தி - நீவுடலோ டுசம்பந்தித்து —உடலழிந்திடாதென்பது - தேகநசிக்கமாட்டாதென்னு நின்கொள்கை—பொருந்தாது - ஞாயமுகத்திலுடன்படாது—(ஆதலின்) அருந்தவா - அரியதவத்தையுடையகோரக்கரே—இனி - இனியாவது— வீடுவேண்டென்றனன் - மோட்சமடையவிரும்புதியென்றுசொல்லின ன்—ஐயன் - அல்லமதேவன். எ - று. மருந்தினல் உடல்நித்தமெனவும் அதோடுகூடிவாழுநாள் பன்மையெனவும் கூறவே, மருந்தின்றியவிடத் து அநித்தமெனவும் வாணுட்சின்மையெனவுங் கொள்ளப்பெற்றும். உட ல்நினக்கன்னியமாதலின் அதனநுநித்தியத்திற்கு நீகாத்திருத்தலேலா தென்பார் ; பொருந்திநீயுடலழிந்திடாதென்பது பொருந்தாதென்றார். உடலுக்கியற்கையன்றெனக்காட்ட நீவருத்ததெனப்பட்டது. (௪௩)

ஏது சொல்லினு மென்னுட லழிவுறா தென்றும்
வாது செய்வதென் காட்சியா லுணர்த்துவன் வலியின்
றாதி நாதன தருளினு லென்றுகோ ரக்கன்
றீதி லாவருள் வாரியோ டுரைத்திது செய்யும்.

(இ - ள்.) ஏதுசொல்லினும் - யாதுகூறினும் —என்றும் - எப்போது ம்—என்னுடலழிவுறாது - என்தேகநசியாது— (இங்ஙனமிருக்க) வாது செய்வதென் - வீண்வழக்கிடுவதால்யாதுபயன்—ஆதிநாதனருளினல் - ஆதிநாதனென்னுஞ்சற்குருவினருளினல் —இன்று - இப்போது—வலி - எனதுவல்லமையை—காட்சியால் - பிரத்தியட்சங்காரணமாக—உணர்த்

துவன் - உனக்குநான்தெரிவிப்பன்—என்று - என்றுசொல்லி—கோரக்கன் - கோரக்கனென்போன்—தீதிலா - குற்றமற்ற—அருள்வாரியோடு-கிருபாசமுத்திரமாகியவல்லமரோடு—உரைத்து - சொல்லி —இதுசெய்யும் - இதனைச்செய்வன். எ - று. (சச)

இன்னி யங்களின் முழங்குவெள் ளருவிவெற் பெறிந்த
மன்ன வன்படை யன்னதோ ரொளிரயில் வாய்வா
டன்னை யெம்பிரான் கைகொடுத் தனையனென் றன்னை
நின்னி ரும்புய வலியினா லெறிகென நிகழ்த்தி.

(இ - ள்.) இன்னியங்களின்-இனிமையாகியவாத்தியங்களைப்போல—முழங்கு - சத்திக்கின்ற—வெள்ளருவி - வெண்மையாகியவாறுகளையுடைய—வெற்பு - மலைகளினிறகை—எறிந்த - அறுத்த—மன்னவன் - தேவேந்திரனுடைய—படையன்னது - வச்சிராயுதத்துக்கொப்பாகிய—ஓர் - ஒப்பற்ற—ஒளிர் - பிரகாசிக்கின்ற—அயில் - கூர்மையாகிய—வாய் - முனையினையுடைய—வாடன்னை - வாளாயுதத்தை—எம்பிரான்கைகொடுத்து-அல்லமனதுகையிற்கொடுத்து —அனையன் - அத்தகையனாகியகோரக்கன்—என்றன்னை - என்னை —நின்னிரும்புயவலியினால் - உனதுபெரியபுஜவலிமையினால்—எறிகென - வீசென்று—நிகழ்த்தி - சொல்லி. எ - று. அனையன் கொடுத்து நிகழ்த்தியெனக் கூட்டிமுடிக்க. வெற்பினிறகை வெற்பென்றது - ஆகுபெயர். (சரு)

அத்த வீச்சிற கன்னதோர் தோலறு மேனுஞ்
சித்த னாலே னென்றுமுன் னின்றனன் செருக்கி
நித்தன் யானிவன் கருதிய தேசெய்து நெஞ்சின்
வைத்த மாதருக் கொழிப்பலென் றருளுளம் வலித்தான்.

(இ - ள்.) அத்த - கர்த்தனே—ஈச்சிறகன்னது-ஈச்சிறகுக்கொத்ததாகிய —ஓர்தோல் - அணுத்துவதோல் —அறுமேனும் - அறுமெனப்படினும்—சித்தனலேனென்று - நான்சித்தனல்லேனென்று —செருக்கி - கெர்வித்து —முன்னின்றனன் - எதிரிலஞ்சாதுநின்றனன்—(இதைக்கண்டு) நித்தன் - அல்லமன் —யான் - நான் —இவன்கருதியதேசெய்து - இவனினைத்ததையேசெய்து —நெஞ்சில்வைத்த - இவன்மனதில்வைத்திருக்கின்ற —மாதருக்கு - மிக்ககெர்வத்தை —ஒழிப்பலென்று - கெடுப்பேனென்று—அருள் - கிருபைதங்கிய—உளம் - தனதுள்ளத்தில்.

வித்தான் - உறுதிகொண்டான். எ - று. அவன்செருக்கிநின்றதை ய ல்லமன்கண்டு அச்செருக்கை யொழிக்கத்துணிந்தனனென்க. (௬௬)

**வா**ங்கு வாளினை மின்னென விதிர்த்தருண் மாரி
யோங்கி வானுரு மேறென வதிர்த்தவ னுடம்பிற்
றூங்க மால்வரை மீதெறிந் தானெனத் தாக்க
வாங்கொ ரோதைகிண் ணென்றுமே லெழுந்ததை யன்றே.

(இ - ள்.) வாங்கும்வாளினை - அவன்கையிலிருந்துவாங்கியவாளை—மி ன்னெனவிதிர்த்து - மின்னலைப்போலமினுக்கி —அருள்மாரி - கிருபா வெள்ளமாகியவல்லமன்—ஓங்கி - கைமேனோக்கி —வான் - மேகத்திலெ ழும்—உருமேறென - ஆணிடிபோல—அதிர்த்து - சத்தித்து—அவனுடம் பில்தாங்க - அவனுடம்பிற்பட —மால்வரைமீதெறிந்தானென-பெரியமலை யைவீசினாற்போல—தாக்க - வெட்ட—ஆங்கு - அவ்விடத்தில் —ஒரோ தை - ஒருசத்தம் —கிண்ணென்றுமேலெழுந்தது - கிண்ணென்றவொலி க்குறிப்போடு மேலெழுந்தது. எ - று. ஐ - அன்று - ஏ - அசைகள். அ ருண்மாரி விதிர்த்து ஓங்கி அதிர்த்து தாக்க அதனால் ஓரோதை கிண் ணென்றவொலிக்குறிப்போடு மீக்கெழுந்ததெனக் கூட்டிமுடிக்க. (௬௭)

**தி**ருப்ப ருப்பத நடுங்கிய தவ்விறற் சீற்றத்
தரக்க னுற்றிது தனையுமின் றெடுத்தன னமென்
றுரைப்ப தற்கரி தாகிய வச்சமுற் றோடிப்
பொருப்பி றைக்கொரு மகளரன் புயங்கள்புல் லினளால்.

(இ - ள்.) திருப்பருப்பதம் - அழகிய ஸ்ரீசைலமலை—நடுங்கியது - அதி ர்ந்தது—அ - அந்த—விறல் - பலத்தையும்—சீற்றத்து - கோபத்தையுமு டைய—அரக்கனுற்று - இராவணன்வந்து—இதுதனையும் - இம்மலையை யும்—இன்றெடுத்தனனமென்று - இப்போதெடுத்தது போலிருக்கின்ற தென்று—உரைப்பதற்கரிதாகிய - சொல்லற்கரிய—அச்சமுற்றோடி - ப யந்தோடி—பொருப்பிறைக்கு - பர்வதராசனுக்கு —ஒருமகள் - ஒருபுத் திரியாகவவதரித்தவுமையவள்—அரன்புயங்கள்புல்லினள் - சிவனதுதோ ளைத்தழுவிக்கொண்டனள். எ - று. ஆல் - அசை. இராவணன் முன்ன ர்வந்து அசைத்ததுபோல் அசைத்தானென வெண்ணங்கொண்டு உமையவள் அச்சமுற்று ஓடி அரன்புயங்கள் புல்லினள் எனமுடிக்க. இதுதோற்றக்குறிப்பணி. (௬௮)

விஞ்சை மாதர்தம் யாழொலி கேட்டமா வேட
ரஞ்சி லோதியர் பதலைகேட் டயரசு ணம்போ
னெஞ்சு மாழ்கினர் புள்ளின மெழுந்தகா னிமிர்த்துத்
துஞ்சு மாவெழுந் தோடின வான்றுளி துளித்த.

(இ - ள்.) விஞ்சைமாதர்தம் - வித்யாதரப்பெண்களின் —யாழொலி கேட்ட - வீணையினிசைகேட்ட —மாவேடர் - மகத்தாகியவேடர்கள்— அம் - அழகிய—சில் - சடைப்பில்லையையணிந்த —ஓதியர்-கூந்தலையுடையமாதர்களின்—பதலைகேட்டு - இனியமொழிகளைக்கேட்டு—அயரசுணம் போல் - வருந்துகின்றவசுணப்பட்சியைப்போல —நெஞ்சுமாழ்கினர் - மனமயங்கினர்—புள்ளினம் - பட்சிக்கூட்டங்கள்—கானிமிர்த்து - காலுதறி—எழுந்த - எழுந்திருந்தன—துஞ்சுமா - உறங்குகின்றமிருகங்கள்—எழுந்தோடின - அச்சமுற்றெழுந்தோடின —வான்றுளிதுளித்த - மேகங்கள்மழைபெய்தன. எ - று. அயரசுணம்போலென்றது ; அசுணப்புள் ஆண்பெண்ணிரண்டினுள் ஒன்றுகூப்பிடும் ஓரொலிக்குள் அனுகாவிடத் தயர்வ தியல்பாதலைக்குறிக்கவென்க. அஞ்சிலோதியர்பதலை ; அசுணப்பேடுகுரல்போற்காண்டலின் பதலைகேட்டயரசுணம்போலென்றார். பதலை மத்தளமெனினுமமையும். (௪௯)

இன்ன வாறொலி யெழவுட லூறின்றி யிருப்ப
முன்ன மேவிய செருக்கினு மும்மடங் கெய்தி
யென்னை நேர்பவ ரிலையென வவனுளத் தெண்ணித்
தன்னை யேநனி வியந்தமை யறிந்தனன் றலைவன்.

(இ - ள்.) இன்னவாறு - இவ்வண்ணம் —ஒலியெழ - சத்தமேலிடவும்—உடல் - தேகம்—ஊறின்றியிருப்ப - சற்றும்பழுதின்றியிருக்கவும்—முன்னமேவிய - முன்னர்தானடைந்திருந்த —செருக்கினும் - கெர்வத்தைக்காட்டிலும் —மும்மடங்கெய்தி - மூன்றுபங்கதிகமுற்று—என்னைநேர்பவரிலையென - என்னையொத்தவரில்லையென்று —அவனுளத்தெண்ணி - அவன்மனதிலெண்ணி —தன்னையே - தன்னைத்தானே —நனிவியந்தமை - மிகவுமெச்சுக்கொண்டதை —அறிந்தனன்றலைவன் - அல்லமனறிந்தான். எ - று. அவன் எய்தி எண்ணி வியந்தமைதலைவனறிந்தனன் எனக்கூட்டிமுடிக்க. (௫௦)

ஒலியெ ழுந்திட வின்னண நினதுபே ருடம்பு
வலிய டைந்தநின் றொப்பவ ரிலைவளி வழங்கு

முலகி லென்றுகை குலேத்திள நகைபுரிந் தொருகைம்
மலர்பொ ருந்துவா ளவன்கையிற் கொடுத்தி து வருத்தான்.

(இ - ள்.) ஒலியெழுந்திட - அதிகசத்தமெழ —இன்னணம் - இவ்வா று—நினதுபேருடம்பு - உனதுபெரியதேகத்தினுல் —வலியடைந்த - மி க்கபலமடைந்த—நின்னைப்பவர் - உன்னையொத்தவர்கள்—வளிவழங்கு ம் - காற்றுசஞ்சரிக்கின்ற—உலகில் - உலகின்கண்—இலையென்று - எ ங்குமில்லையென்று —கைகுலேத்து - கைகொட்டி—இளநகைபுரிந்து - பு ன்னகைகொண்டு—ஒருகைம்மலர் - ஒருகையாகியமலரில்—பொருந்து வாள் - இருந்தவாளை—அவன்கையிற்கொடுத்து - கோரக்கன்கையிற் கொடுத்து—இதுவருத்தான் - இதனைச்சொல்லினன். எ - று. நின்னை ப்போல தேகவலியின ரெங்கணுமில்லையென்று கைகுலேத்து நகைபுரி ந்து தமதுகைவாளை அவன்கையிற்கொடுத்து இதுவருத்தானெனக் கூட் டிமுடிக்க. (௫௧)

வாங்கும் வாளினு னின்வலி யொடுநுமர் வலியுந்
தாங்கி யென்னைநீ யெறிந்துகா ணென்றுநந் தலைவ
னுங்கு நின்றனன் சித்தனு மஞ்சில னுகி
யோங்கி வாளினு லெறிந்தன னொப்பிலா வுருவை.

(இ - ள்) வாங்கும்வாளினுல் -என்கையிலிருந்துவாங்கியவாளினுல் —நி ன்வலியொடு - உனதுபலத்தோடு —நுமர்வலியுந்தாங்கி - உனதுசுற்றத் தார்வலியும்பெற்று—என்னைநீயெறிந்துகாணென்று - என்னைநீவெட்டி ப்பாரென்று—நந்தலைவன் - நமதுதலைவனுகியவல்லமன்—ஆங்குநின்ற னன் - அவ்விடத்திருந்தனன்—சித்தனும் - கோரக்கனும்—அஞ்சிலனுகி- பயப்படாதவனுய்—ஓங்கி - மேலோங்கி —ஒப்பிலாவுருவை - ஒப்பற்ற வல்லமனதுதேகத்தை—வாளினுலெறிந்தனன் - வாளினுல்வெட்டினன். எ - று. உனதுவலிபோதாவிடத்து நுமர்வலியுந்தாங்கி யெறிந்துகா ணென்ருர். (௫௨)

அணுமை யங்குமின் னுழைகதி ரெறிந்தவா ளாக
விணைம யங்குமெய்ப் படாதுவாள் வழிதுபோ யிற்று
பணைம யங்குதோண் மாயைதன் படாமுலே படாத
மணம யங்குதன் சோதிமேல் வாள்பட வந்ரே.

(இ - ள்.) அணுமயங்கும் - பரமாணுவும்பின்னிடத்தக்க —மின்னு ழை - மின்னலைக்காட்டிலு நட்பமாகிய—கதிரெறிந்த - சூரியகதிரைவெ

ட்டிய—வாளாக - வாள்போல—இணைமயங்கு - உவமையும்பின்னிடத்த க்க—மெய்ப்படாது - அல்லமன்மேனியிற்படாது—வாள் - வீசியவாள்—வறிதுபோயிற்று - ஒன்றிலுந்தாக்காதுபோயிற்று—பணைமயங்கு - மூங் கிலும்பின்னிடத்தக்க —தோள் - தோள்களையுடைய —மாயைதன் - மாயையினது—படாம் - வஸ்திரமணிந்த —நீலைபடாத - தனங்கள்படா த—மணமயங்கு - யாதொருநற்கந்தமும்பின்னிடத்தக்க—தண் - உபசா ந்தநிறைந்த—சோதிமேல் - சுயஞ்சோதியாகியவல்லமன்மேல் —வாள்ப டவற்றே - வாள்படுந்தகுதியதோ. எ - று. சூரியகதிர் பரமாணுவி னுநுண்ணியதெனற்கு அணுமயங்குமின்னுழைகதிரெனவும், இவரதுதிரு மேனி யாதோருவமைக்கும் இணங்காதுமேலுறுமெனற்கு இணைமயங்கு மெய்யெனவும், மாயையினதுதோள்மூங்கிலினும்பாரித்திருப்பதால் பணை மயங்குதோளெனவும், எல்லாச்சுகந்தமும் பின்னிடத்தக்கவாறு வீசுஞ் சோதியெனற்கு மணமயங்கு தண்சோதியெனவும் கூறியதாகப் பெ ற்றாம். (௫௩)

வேறு.

**வா**னெறிந்து கையிளைத்த கோரக்க னுதன்மிக மனம்வி யந்து, நானிறைஞ்சும் பரஞ்சுடரே யிவனென்று மெய்விதிர்ப்ப நடுநடுங்கித், தானடைந்த செருக்கொழிந்து தலையன்பி னெறி நடப்பத் தலைப்பட் டெங்கோன், றேனடைந்த செழுங்கமலத் திருவடியில் வீழ்ந்தெழுந்து செப்பு கின்றான்.

(இ - ள்.) வானெறிந்து - சிதாகாயத்தைவெட்டி—கையிளைத்த - கை யிளைத்துப்போன—கோரக்கனுதன் - கோரக்கதேவன் —மிகமனம்விய ந்து - மிகவும்மனதில்வியப்புற்று —நானிறைஞ்சும் - நான்வணங்கத்தக் க—பரஞ்சுடரேயிவனென்று - பரஞ்சோதியேயிவனுமென்று —மெய் விதிர்ப்ப - மெய்குலுங்க—நடுநடுங்கி - நடுநடுக்கமெய்தி—தானடைந்தசெ ருக்கொழிந்து - தான்கொண்டகெர்வத்தினின்றகன்று—தலையன்பினெ றி - மேலாயவன்பினெறியில்—நடப்பத்தலைப்பட்டு - முந்திநடக்கத்துணி ந்து—எங்கோன் - அல்லமனது —தேனடைந்த - தேனிறைந்த—செழு ங்கமலம் - அழகியதாமரைமலர்போன்ற —திருவடியில்வீழ்ந்தெழுந்து - திருவடியில் வணங்கியெழுந்து —செப்புகின்றான் - சொல்லுகின்றான். எ - றி. கோரக்கனுதன் வியந்து நடுநடுங்கி ஒழிந்து தலைப்பட்டு வீழ்ந் தெழுந்து செப்புகின்றானெனக்கூட்டிமுடிக்க. அல்லமன் சிதாகாசமாத லால் வானெறிந்தென்றார். கமலமலரைக் கமலமெனல் ஆகுபெயர். (௫௪)

நின்னையறி யாதுமது வுண்டவன்போன் மனஞ்செருக்கி
நினைந்த பாவம், பின்னரெதிர் நின்றுநின துரைமறுத்துப் பித்த
னெனப் பிதற்றுந் தீமை, யின்னுயிர்கொன் றுடல்கவரு மறவன்
போற் செய்தபிழை யெல்லா மெந்தாய், மன்னியநின் பேரரு
ளாற் றீர்த்தெனையாட் கோடியென மறித்துந் தாழ்ந்தான்.

(இ - ள்.) நின்னையறியாது - உனதுமகிமையையறியாமல்—மதுவுண்டவன்போல் - கள்குடித்தவன்போல—மனஞ்செருக்கி - மனதிற்கெர்வங்கொண்டு—நினைந்தபாவம் - உன்னைஅற்பமாக நினைத்தபாவமும்—பின்னர் - பின்பு—எதிர்நின்று - உனக்குச்சமானமாக நானெதிர்நின்று—நினதுரைமறுத்து - உனதுவசனத்தைத்தடுத்து—பித்தனென-பித்துகொண்டான்போல—பிதற்றுந்தீமை - பிதற்றியதீமையும் —இன்னுயிர்கொண்டு - இனியவுயிர்நீங்கச்செய்து—உடல்கவருமறவன்போல் - உடலையேற்குமறவனைப்போல —செய்தபிழையெல்லாம் - செய்தகுற்றமுமாகியவெல்லாவற்றையும் —எந்தாய் - எமதுகர்த்தனே—மன்னிய - நிலைபெற்ற —நின்பேரருளாற்றீர்த்து - உனதுபெருங்கருணையால்நீக்கி—எனையாட்கோடியென - என்னைஅடிமைகொள்ளுதியென்று —மறித்துந்தாழ்ந்தான் - மீண்டும்வணங்கினன். எ - று. என்னையென்றது எனையென்றாய திடைக்குறை. (௫௫)

செய்தபிழை போகவினிப் பிழைசெய்யா துடம்புநசை
தீர்ந்து நின்றன், மெய்தெரியி னெனக்குநீ யினியனெனப் பெரு
ங்கருணை வெள்ளங் கூற, வுய்தலிலென் பிழைபொறுத்திட் டடி
த்தரிய வானமுத மூட்டு கின்றாய், கைதருசெம் மணியனையா
யான்செய்வ தேதுளது கைம்மா றென்று.

(இ - ள்.) செய்தபிழைபோக - செய்தகுற்றநீங்கலாக —இனிப்பிழைசெய்யாது - இனியேனும்பிழைசெய்யாமல் —உடம்புநசைதீர்ந்து - தேகப்பற்றகன்று —நின்றன்மெய்தெரியின் - உனதெதார்த்தவடிவை நீ தெரிசிக்கின் —எனக்குநீயினியனென் - எனக்குநீபிரியவடிவனைவையென்று —பெருங்கருணைவெள்ளம் - மிக்ககிருபாசமுத்திரமாகிய வல்லமன்—கூற - சொல்ல—உய்தலில் - பிழைத்தற்கிடங்காணாது —என்பிழைபொறுத்திட்டு - எனதுகுற்றத்தைப்பொறுத்துக்கொண்டு—அடித்து - தண்டித்து—அரியவானமுதம் - அரியதேவாமிர்தத்தை—ஊட்டுகின்றாய் -

உண்ணச்செய்கின்றனை—கைதரு - கையிற்கிடைத்த—செம்மணியனை யாய் - செம்மையாகியமாணிக்கம்போல்பவனே—கைம்மாறு - பிரிதிவுபகாரம்—யான்செய்வதேதுளதென்று - யான்செய்தற்குயாதுளதென்று சொல்லி. எ - று. (ருசு)

முற்றுமருள் செய்துநீ யானறிய வேண்டுபொருண் மொழிதி யென்று, பற்றுடல நசைதீர்ந்து கோரக்க னிற்பவவன் பருவங் கண்டு, கற்றறிவு மறிவினு லறிவரிய பரஞ்சோதி கருணை கொள்ளப், பெற்றதிரு வுளமகிழ்வுற் றன்பொடுகேண் மதியென் னுப் பேச லுற்ருன்.

(இ - ள்.) முற்றுமருள்செய்து - பூரணகிருபைவைத்து—யானறியவேண்டுபொருள்-யானறியவேண்டியதெப்பொருளோவப்பொருளை—நீமொழிதியென்று - நீயனுக்கிரகிக்கக்கடவாயென்று—பற்று - யானைப்பற்றிய—உடலநசைதீர்ந்து - தேகாபிமானநீங்கி—கோரக்கனிற்ப - கோரக்கன்சோர்ந்துநிற்க—அவன்பருவங்கண்டு - அவனதிதீவிரபருவங்கண் கற்றறியுமறிவினுல் - பூரணகல்விஞானத்தினுலும்—அறிவரியபரஞ்சோதி - எட்டியறிதற்கரியபரஞ்சோதியாகியவல்லமதேவன்—கருணைகொள்ளப்பெற்ற - கிருபைகோடற்கியைந்த—திருவுளமகிழ்வுற்று - மனமகிழ்ந்து—மதி - யான்சொல்லும்புத்தியை—அன்பொடுகேளென்று - மிக்க வன்போடுகேளென்று—பேசலுற்ருன் - சொல்லத்தொடங்கினுன். எ - று. பரஞ்சோதி கண்டு மகிழ்வுற்று பேசலுற்ருன் எனமுடிக்க. கற்றறியுமறிவென்றதனுல் கல்விஞானமென்ரும். கற்றறியுமறிவினுல் என்றவிடத் தும்மையெஞ்சியது. (ருஎ)

இருந்தபடி குகேசனைநீ யறிவையெனி னின்பிறவி யெனு நோய் தீர்ந்து, பொருந்துறுவை பேரின்ப மென்றமலன் கூறவவன் போற்றி யெந்தாய், பரிந்தருள்செய் குகேசனெனு மொழிப் பொருளை ததுகூறப் படுவான் யாவன், றெரிந்துணர வருள் செய்வா யென்றுதொழ வெம்பெருமான் செப்பு கின்ருன்.

(இ - ள்.) இருந்தபடி - இருந்தவண்ணம்—குகேசனை - குகேசனென்பவனை—நீ அறிவையெனின் - நீயுணர்வாயாயின்—நின்பிறவியெனுநோய் - உனதுபிறவியென்னுநோயினின்று—தீர்ந்து - நீங்கி—பேரின்பம் - நிரதிசயானந்தத்தை—பொருந்துறுவையென்று - அடைவாயென்று—

அமலன்கூற - அல்லமன்சொல்ல—அவன் - அக்கோரக்கன்—போற்றி - துதித்து—எந்தாய் - எமதுகர்த்தனே—பரிந்தருள்செய் - மிக்கவன்போ டருள்செய்கின்ற —குகேசனெனுமொழிப்பொருள் - குகேசனென்னு மொழிக்கருத்தம்—ஏது - யாது—அதுகூறப்படுவோன்யாவன் - அதனையு ணர்த்துபவன்யாவன் —தெரிந்துணர - யான்தெரிந்துகொள்ளும்படி— அருள்செய்வாயென்று - அனுக்கிரகிக்கக்கடவையென்று—தொழ -வண ங்க—(அதற்கு) எம்பெருமான் - அல்லமன்—செப்புகின்றான் - சொல்லு கின்றான். எ - று. (நிஅ)

குகையிதய மதன்கணம ரிறையீச னென்றுபொருள் குறி த்துக் கொண்மோ, நிகழனைய குகேசமொழி யுடையன்யான் றனெனவே நிமலன் கூற, வகமகிழ முகமலர்ந்து சித்தனறை குவனீயே யாகி லுன்றன், முகையவிழ்மென் மலர்க்கரத்திற் சிவ லிங்கங் கொண்டதென்கொன் மொழிதி யென்றான்.

(இ - ள்.) குகை - குகையெனப்படுவது—இதையமென்று - இருதய மென்றும்—அதன்கணமரிறை - அதிலெழுந்தருளியசோதியை—ஈசனெ ன்று - ஈசனென்றும்—பொருள் - அர்த்தமாக—குறித்துக்கொண்மோ- குறித்துக்கொள்ளுதி—நிகழ் - விளங்காநின்ற—அனைய - அத்தகையதா கிய—குகேசமொழியுடையன் - குகேசனென்னுமொழியை யுடையவ ன்—யான்றனெனவே - நானேயென்று—நிமலன்கூற - அல்லமன்சொ ல்ல—அகமகிழ - மனமகிழும்படி—முகமலர்ந்து - முகமலர்ச்சிகொண் டு—சித்தனறைகுவன் - கோரக்கன்சொல்லுவன்—நீயேயாகில் - குகேச னென்னும்பொருள் நீயேயானல்—உன்றன் - உன்னுடைய—முகையவி ழ் - முகையென்னு முறுக்கவிழ்ந்த—மென்மலர் - மெல்லியதாமரைமலர் போன்ற—கரத்தில் - உள்ளங்கையில் —சிவலிங்கங்கொண்டது - சிவ லிங்கத்தையேற்றிருப்பது—என்கொல் - யாதுகாரணம் —மொழிதியெ ன்றான் - சொல்லென்றுகேட்டனன். எ - று. நீயே குகேசனுயின் கை யிற் சிவலிங்க மிருப்பானே னென்று வினவினனென்க. (நிக)

பிறந்துபயன் பெறவுலக ரெனக்கண்டு கொண்டுமனம் பிறழ்த லின்றிச், சிறந்தசிவ லிங்கமலர்க் கரங்கொண்டு பூசனை யாஞ் செய்ய வேண்டி, நிறைந்தவென துருவாகு மிக்குறிகைக் கொண்டனன்யா னீங்கா தென்று, மறிந்துதெளி குதிமனமென் றருள்செய்தெங் குருதேவ னறைய லுற்றான்.

(இ - ள்.) பிறந்தபயன்பெற - பிறந்ததனாலெய்தும் பயன்பெறவேண்டி—உலகர் - உலகத்தார்—என்னைக்கண்டு - எனதெதார்த்தநிலையைக்கண்டு—மனம்பிறழ்தலின்றி - மனஞ்சலியாமல் —சிறந்தசிவலிங்கம் - மேலாகியசிவலிங்கத்தை—மலர்க்கரங்கொண்டு - தாமரைமலர்போன்ற கையிலேற்றுக்கொண்டு —பூசனையாஞ்செய்யவேண்டி - நாம்பூசித்தற்கு—நிறைந்த - பூரணமாகிய—எனதுருவாகும் - எனதுசொரூபமாகிய—இக்குறிகைக்கொண்டனன் - இந்தவடையாளத்தைக் கையிற்கொண்டனன்—யான் - நான்—நீங்காதென்றும் - எப்போதுநீங்காது —அறிந்துதெளிகுதிமனமென்று - மனத்தாலறிந்து தெளிவாயென்று—அருள்செய்து - அநுக்கிரகித்து— எங்குருதேவன் - எமதுகுருவாகிய வல்லமதேவன்—அறையலுற்றான் - சொல்லத்துடங்கினன். எ - று. பிறந்தபயன் பெறுதலாவது, தானவனைதத் தவிர்தலே. (௬௦)

போதகனு கியகுரவ னெஞ்ஞான்று நற்கருமம் புரிகவென்று, வேதமுத லாகிய நூன் முழுதுமொருங் கொருவந்தம் விதித்த லாலே, சாதகனு கியபருவ மாணுக்கன் பாசவலி தணிக்க வல்லான், மேதினிமே லுடலொடுநற் செயல்விடுவ தன்றி யிடை விடலா காதால்.

(இ - ள்.) போதகனுகியகுரவன் - போதிக்கத்தக்கஞானசிரியன்—எஞ்ஞான்றும் - எப்போதும்—நற்கருமம்புரிகவென்று—சற்கருமஞ்செய்யவேண்டுமென்று —வேதமுதலாகியநூல்முழுதும் - வேதமுதலியசகலகலைகளும்—ஒருங்கு - ஒருமிக்க—ஒருவந்தம் - தனித்திருத்தலே—விதித்தலால் - சொல்லுதலால்—சாதகனுகியபருவம் - சாதகனுகியபருவத்தையுடைய—மாணுக்கன் - சீடன்—பாசவலிதணிக்கவல்லான் - பாசத்தினதுவலியைக் கெடுக்கவல்லவன்— (அவன்) மேதினிமேல் - பூமியின்மேல்—உடலொடு - தேகநழுவுதலோடு—நற்செயல்விடுவதன்றி - சற்கிருத்தியம்விட வேண்டியதன்றி—இடைவிடலாகாது - நடுவில்விடக்கூடாது. எ - று. ஆல் - அசை. ஞானசிரியனேனும் மாணுக்கனேனும் எடுத்துக்கொண்ட சற்கிருத்தியத்தை உடலோடன்றி இடையில்விடலாகாதென்பது கருத்து. (௬௧)

என்றுதனை தியலுணர்த்தி யுடம்புநசை னென்றிருந்த வியல்பு போல, நின்றவெனை யுணர்ந்துநீ சோகம்பா வனைகொண்டு நிற்பை யாயிற், பொன்றலுறு விடங்கலுழன் றனைநினைப்பப்

போதல்போற் போம விச்சை, நன்றறிதி யெனவறிவித் தன னெங்கோன் கோரக்க னாதன் றன்னை.

(இ - ள்.) என்று - இப்படியென்று —தனதியலுணர்த்தி - தனதிலக்கணத்தைத்தெரிவித்து —உடம்புநானென்றிருந்த - தேகமேநானென்றிருந்த—இயல்புபோலு - நிலைமைபோல —நின்றவெனை - நிற்கின்றவென்னை—நீயுணர்ந்து - நீதெரிந்து—சோ - அவனே—அகம் - நானென்னும்—பாவனைகொண்டு - ஐக்கியங்கொண்டு—நிற்பையாயின் - இரண்டறநிற்பையாயின் —பொன்றலுறு - சாதற்கியைந்த—விடம் - விஷமானது—கலுழன்றனைநினைப்ப - கருடத்தியானஞ்செய்ய—போதல்போல் - நீங்குமாறுபோன்று—போமவிச்சை - அவித்தைநீங்கும் —நன்றறிதியென - நன்குணர்தியென்று—எங்கோன் - எமதல்லமன் —கோரக்கனாதன்றன்னை - கோரக்கதேவனுக்கு —அறிவித்தனன் - விளக்கிவித்தனன். எ - று. கோரக்கனாதன்றன்னை விளக்கிவித்தனனெனக் கொள்ளினுமமையும். பாவனையாவது; அவனேநான் நானேயவன் என்றுகுமைக்கியத்தை. எனதுவடிவமாகியசோதியைப் பழுதறக்கண்டு உடல் நானாயிருப்பதுபோல அதுநானாக விருக்கவேண்டுவதாதல்லால் சோகம்பாவனைகொண்டு நிற்பையாயி லென்றார். (௬௨)

ஞானகுரு பரனருளாற் றனக்குரைத்த மொழிப்பொருளை நன்றறிந்திட், டூனைவடி வென்பதுவிட் டுண்மையலா வனைத்தையுநீத் துண்மை கண்டு, தானதனை யடைந்துதா னதுவென்னு மருளகன்று தானே யாகி, வானவரு மறிவரிய பெரும் புகழ்கோ ரக்கனவண் மன்னி னானால்.

(இ - ள்.) ஞானகுருபரனருளால்-ஞானாசிரியனருளினால்—தனக்குரைத்த - தனக்குணர்த்திய—மொழிப்பொருளை -மகாவாக்கியார்த்தத்தை—நன்றறிந்திட்டு - ஐயந்திரிபறத்தெளிந்து—ஊனை - மாமிசவுடலை—வடிவென்பதுவிட்டு - தனதுடலென்பதைவிட்டு —உண்மையலாவனைத்தையும் - உண்மையெனற்கியையாத வெல்லாவற்றையும்—நீத்து - நீக்கி—உண்மைகண்டு - உண்மைநிலையினையதெனக்கண்டு —தானதனையடைந்து - தானதைச்சேர்ந்து—தானதுவென்னுமருளகன்று - தானதுவெனக்காணுமய்க்கநீங்கி—தானேயாகி - தானேதானாகி—வானவருமறிவரிய - தேவர்களுமறிதற்கரிய—பெரும்புகழ் - மிக்ககீர்த்தியையுடைய—கோரக்கன் - கோரக்கனென்போன்—அவண் - அவ்விடத்துத்தானே—மன்

ணினான் - நிருவிகற்பசமாதியினிலைத்தனன். எ - று. ஆல்-அசை. ஊனை வடிவென்பதுவிட் டுண்மையலாவனைத்தையு நீத்தென்பதனால் சர்வம் மித்தையெனலையும், உண்மைகண்டு தானதனையடைந்தென்பதனால் சர் வம்பிரமமெனலையும், தானதுவென்னுமருளகன்று தானேயாகியென்ப தனால் சர்வம்நானெனலையும் பெற்றாம். கோரக்கன் அறிந்திட்டு விட்டு நீ த்து கண்டு அடைந்து அகன்று தானேயாகி மன்னினான் எனக்கூட்டிமு டிக்க. தானதனையடைந்தென்றதாவது ; தானதுவாகப்பழகலே. தானது வென்பதை மருளெனக்கூறியது ; தானுடலானால் தான்சைதன்யமாகலா ம் தானிரண்டுமென்மையின் சுத்தவாசனையும் நீங்கற்கென்க. (௬௩)

கோரக்கர்கதி - முற்றிற்று.

ஆ கதி - ௧௬ - ஞ - விருத்தம் - ௬௪௬.





இருபதாவது

# முனிவர்கதி.

வேறு.

பனிவரை மகளொடு பவள வார்சடைத்
தனிவரை யமர்திருச் சயிலநீங்கியே
துனிவரை யல்லமன் சுருதி மெய்ப்பொருண்
முனிவரை யுணர்த்திய முறைமை கூறுவாம்.

(இ - ள்.) பனிவரை - இமயவரசனது—மகளொடு - மகளாகியவுமையவளொடு—பவளம் - சிவந்த—வார் - நீண்ட—சடை - சடையையுடைய—தனி - ஒப்பற்ற—வரை - மலைபோன்றபிரமசிவன் —அமர் - எழுந்தருளிய—திருச்சயிலநீங்கி - ஸ்ரீசைலத்தைவிட்டுநீங்கி—துனிவரை - பிறவித்துன்பமகன்ற—அல்லமன் - அல்லமதேவன் —சுருதி - வேதமுடிவாகிய—மெய்ப்பொருள் - உண்மைப்பொருளை —முனிவரை - இருஷிகளுக்கு—உணர்த்தியமுறைமை - தெரிவித்தவகையை —கூறுவாம் - சொல்லுதும். எ - று. பனிவரை இடவாகுபெயர். தனிவரை உவமையாகுபெயர். பிறவியின் மிக்கதுன்பமின்மையின் துனியென்றார். (க)

அருந்தவ முயன்றகோ ரக்கற் கம்முறை
விரிந்தறி வுருவமா மெய்ம்மைத் தன்மையைப்
பரிந்தரு ளமலனப் பாலு முத்தரம்
பொருந்துநர் தமக்கருள் புரியப் போயினான்.

(இ - ள்.) அருந்தவமுயன்ற - அரியதவத்தைச்செய்த—கோரக்கற்கு - கோரக்கதேவருக்கு—விரிந்து - வியாபித்து—அறிவுருவமாம் - அறிவேவடிவாகிநிறைந்துள்ள—மெய்ம்மைத்தன்மையை - உண்மையினியல்பை—பரிந்தருள் - விரும்பியநுக்கிரகித்த—அமலன் - அல்லமன்—அப்பாலும் - அதற்கப்புறமும்—உத்தரம்பொருந்துநர்தமக்கு - வடக்கிலுள்ளமுனிவர்களுக்கு—அருள்புரியப்போயினான் - அநுக்கிரகிக்கப்போயினன். எ - று.

நல்லன தீயன நாடு ருதுகொள்
வல்லழ லெனவருண் மழையெ னப்படு
மல்லம னெதிர்ந்தவ ரறமு ளாரற
மில்லவ ரெனுதறி வியற்றி னனரோ.

(இ - ள்.) நல்லனதீயன - இவைநல்லனவெனவுந் தீயனவெனவும்—நாடுறுதுகொள் - எண்ணுதெரிக்கின்ற—வல்லழலென - கொடியவக்கினிபோல—அருண்மழையெனப்படும் - கிருபாமாரியென்னப்பட்ட—அல்லமன் - அல்லமதேவன்—எதிர்ந்தவர் - எதிரேகாணப்பட்டவர்கள்—அறமுளார் - ஒழுக்கமுடையோர் —அறமில்லவர் - ஒழுக்கமில்லாதவர்—என்று - என்றுபாராது —அறிவியற்றினன் - ஞானோபதேசஞ்செய்தான். எ - று. அரோ - அசை. அக்கினிபோற் பருவம் பாராதனுக்கிரகித்தன னென்க. இங்கே கொள்ளுதல் எரித்தலை. (௩)

யாவருந் தனதருட் கேற்று ளாரெனப்
பாவவன் றளையறப் பரிந்து நன்னெறி
மேவவந் தருள்புரி விமல னாயிடை
மாவழங் குறுமொரு வனத்திற் போயினன்.

(இ - ள்.) யாவரும் - எவர்களும்—தனதருட்கு - தனதுகிருபைக்கு—ஏற்றுளாரென - பாத்திரராவரென்று—பாவம் - பாவமென்னும்—வன்றளையற - வலியபந்தநீங்க —பரிந்து - விரும்பி—நன்னெறிமேவ - மேலாயநிலையடைய—வந்தருள்புரிவிமலன் - வந்தநுக்கிரகஞ்செய்யுமல்லமன்—ஆயிடை - அவ்விடத்தில்—மாவழங்குறும் - மிருகங்கள் சஞ்சரிக்கின்ற—ஒருவனத்திற்போயினன் - ஒருகாட்டிற்பிரவேசித்தான். எ - று. ஞானஞ்ஞானங்கள் சுத்தாசுத்த பாவமாதலாலும் அவையகலாக்காறுந் தனதுண்மைநிலை யினையதெனக்காணப்படாதாதலாலும் பாவவன்றளையறவெனவும், அங்ஙனமகறற்கியைந்த நெறியளித்தலால் நன்னெறிமேவ, வந்தருள்புரியெனவுங் கூறினரென்க. யாவருந்தனதருட் கேற்றுளாரென்றது சிவகாருண்யத்தைக் காட்டற்கென்க. (௪)

அக்கொடு வனத்தெதி ரன்பென் கின்றதுட்
புக்கறி கிலாவொரு புளினன் கூன்புறக்
கொக்கென் நாடொறுங் கொலைகு றித்தவன்
கைக்கொடு மரமொடு கடிது தோன்றினன்.

(இ - ள்.) அக்கொடுவனத்து - அந்தக்கொடியகாட்டில்—எதிர் - தன க்கெதிரில் —அன்பென்கின்றதுள் - இரக்கமென்னுநிலையுள் —புக்கறிவி லா - என்றும்போயறியாத—ஒருபுளினன் - ஒருவேடன்—கூன்புறம் - கூனைப்புறமாக்வுடைய—கொக்கென - கொக்கைப்போல—நாடொறும்- நாள்தோறும் —கொலைகுறித்தவன் - கொலையையேவிரதமாகக்குறித்த வனுய்—கைக்கொடுமரமொடு - கையிற்கொண்டவில்லோடு— கடிதுதோ ன்றினன் - விரைவிற்காணப்பட்டான். எ - று. இங்கே அன்பென்ப து இரக்கத்தை. கூன்புறமென்றது முதுகையேனும சமுத்தையேனும் பொருந்தும். (௫)

அன்பனுய்க் கண்ணிடந் தப்பும் வேடனுக்
கின்பமீ குதல்புகழ்க் கேற்றதன்றுநான்
வன்பனுய்த் திரியுமிம் மறவற் காப்பலென்
றென்பொலா நெறிமன மிரங்கிற் றென்றனன்.

(இ - ள்.) அன்பனுய் - அன்பிற்சிறந்தவனுய் —கண்ணிடந்தப்பும் - த னதுகண்ணைப்பிடுங்கிப் பரமசிவன்முகத்திலப்பிய —வேடனுக்கு - கண் ணப்பநாயனுருக்கு —இன்பமீகுதல் - பேரின்பத்தைத்தருதல்—புகழ்க் கேற்றதன்று - கீர்த்திக்கியைந்ததன்று—நான் - யான்—வன்பனுய்த்திரி யும் - கொடியபாவியாய்த்திரிகின்ற —இம்மறவன்காப்பலென்று - இந்த மறவனை யிரட்சிப்பேனென்றுசொல்லி —என்பொலா - எனதுபொல் லாத—நெறிமனம் - நெறியுள்ளமனம்—இரங்கிற்று - இரங்கியது—என் றனன் - என்றல்லமன்கூறினன். எ - று. ஏ - அசை. அன்பனுய்க்கண் ணிடந்தவனைக் காத்தலினும் வன்பனுய்த்திரியும் இம்மறவனுக்குப் பேரி ன்பந் தந்துகாத்தல் புகழாதலின், அன்பனுய்க்கண்ணிடந்தப்பும் வேடனு க்கின்ப மீகுதல் புகழ்க்கேற்றதன் றென்முர். எனவே, அன்பனுக்கின்ப மீதலெளிது வன்பனுக்கின்பமீத லரிதெனப்பெற்ரும். பெறவே, அபக்கு வனையும் பக்குவனுக்கும் வலியுடைமையைக் குறிப்பிக்கக்கண்டாம். (௬)

நல்லறி வவனுள நடுதற் கொப்பிலா
வல்லமன் வினையற வருட்கண் வைத்தனன்
கொல்லையின் விதையிடக் கொழுப்புக் கார்முனி
புல்லெரி வுறவுழப் போகட் டென்னவே.

(இ - ள்). நல்லறிவு - உண்மைஞானத்தை—அவனுளநடுதற்கு - அவ னதுள்ளத்தினடுதற்கு —ஒப்பிலாவல்லமன் - உவமைகடந்தவல்லமதே

வன்—வினையற - இருவினையுமற —அருட்கண்வைத்தனன் - கிருபா நோக்கம்வைத்தான் —கொல்லையின் - கொல்லையின்கண்—விதையிட - விதையிடுவொன் வேண்டி—கொழுப்புக்கா - எருவுக்காக—முளி - முள்ளிச்செடிகளும்—புல் - புல்லுகளும்—எரிவுற - நீறுக —அழல் - நெருப்பை—போகட்டென்ன - போட்டாற்போல." எ - று. ஏ - அசை. நல்லறிவென்றதனுலுண்மை ஞானமெனவும், வினையென்றதனுல் இருவினையெனவும் கொண்டாம். முளியென விடைக்குறை. (எ)

மேவுதீ வினையெலாம் விளிந்து தூயனுய்ப்
பாவியே னுய்வகை பகர்தி யென்றனன்
மாவலால் வழங்குறு வனத்தில் வேட்டுவன்
யாவர்தா மிறையரு ளெய்தி னுய்ந்திடார்.

(இ - ள்.) மேவுதீவினையெலாம் - தொன்றுதொட்டுவந்த தீவினையனைத்தும்—விளிந்து - நசித்து—தூயனுய் - புனிதனுய் —பாவியேன் - பாவியாகியயான்—உய்வகை - பிறவிகடக்கும்வகையை—பகர்தியென்றனன் - தெரிவிக்கவேண்டுமென்றுகேட்டனன்—மாவலால் - மிருகங்களையன்றி—வழங்குறு - யாதுஞ்சஞ்சரித்தற்கிடம்பெருத —வனத்தில் - காட்டில் —வேட்டுவன் - வேடன் —யாவர்தாம் - எவர்கள்தாம்—இறையருளெய்தின் - சிவத்தினருள்கிடைக்கில்—உய்ந்திடார் - பிழைக்கமாட்டார்கள். எ - று. தன்னைமறந்த மறதிகாரணமாக வெய்தும் வினைகள் பிறவி நோய்க்கியைவவாதலின் மேவுதீவினையெலாமென்ருர். யாவர்தாமென்ற தாபாசனைக்குறிக்க. (அ)

அறிவெனும் வேலினு லைம்பு லன்களா
மறியின மருளெனும் வலையைத் தப்புறு
தெறிகுவை யெனினுனக் கில்லை துன்பெனு
நெறியினை வழுவற நிமலன் கூறினுன்.

(இ - ள்.) அறிவெனும்வேலினுல் - அறிவென்னும்வேலாயுதத்தால்—ஐம்புலன்களாமறியினம் - ஐம்புலன்களாகிய மானினங்கள்—அருளெனும்வலையை - அருளாகியவலையினின்றும் —தப்புறு - தப்பிப்போகாமல்—எறிகுவையெனின் - எறிவையாயின் —உனக்கில்லைதுன்பெனு-உனக்குத்துன்பமில்லையென்று —நெறியினை - இனிப்பிறவாநெறியை—வழுவற - ஐயந்திரிபற—நிமலன்கூறினுன் - அல்லமன்விளக்கினன். எ - று. அறிவெனும்வேல், ஐம்புலன்களாமறியினம், அருளெனும்வலை, இவையுருவகம். (கூ)

அறிவொடு மனஞ்சிலை யம்ப தாகநான்
குறியென வெய்வையேற் குமர நின்றனைப்
பொறிமதி லிலங்கைமுன் புரந்து ளான்றலை
பறிபட வெய்தவன் பணியு மென்றுமே.

(இ - ள்.) அறிவொடுமனம் - அறிவும்மனமும் —சிலையம்பதாக - வில்லாகவு மம்பாகவும்வைத்து—நான்குறியென - என்னையிலக்காக—எய்வையேல் - விடுவையாயின்—குமர - ஆண்டகையோனே—நின் றன்னை - உன்னை—பொறி - சித்திரங்களமைந்த—மதில் - மதிலையுடைய —இலங்கை - இலங்காபுரியை —முன்புரந்துளான்றலை - முன்னேயாண்டவிராவணனதுதலைகள்—பறிபட - நாசமாக —எய்தவன் - பாணமெய்தவிராமன்—பணியுமென்றும் - எப்போதும்வணங்குவன். எ - று. ஏ - அசை. அறிவொடுமனஞ்சிலையம்பதாக ; நேர்நிரனிறை யுருவகம். (௧௦)

இப்பரி செறுழ்வலி யெயின னுய்வகை
செப்பிநன் னிலையருள் செய்தி ருத்தியே
யப்புற மருளுடை யமலன் போம்பொழு
தொப்பறு தவவன மொன்று தோன்றிற்றே

(இ - ள்.) இப்பரிசு - இவ்வண்ணம் —எறுழ்வலி - மிக்கவலியையுடைய—எயினன் - வேடன்—உய்வகைசெப்பி - துன்பத்தினின்றகலுநெறியைச்சொல்லி —நன்னிலையருள்செய்து - நிரதிசயானந்தவாழ்வையநுக்கிரகித்து—இருத்தி - நிலைகலங்காதிருக்கச்செய்து—அப்புறம் - அவ்விடத்தினின்று—அருளுடையமலன் - கிருபாமயமானவல்லமன்—போம்பொழுது - போகும்பொழுது—ஒப்பறு - ஒப்பில்லாத—தவவனமொன்று - ஓர்தபோவனம் —தோன்றிற்று - எதிரிற்காணப்பட்டது. எ - று. ஏ - அசை. எறுழ்வலி ; மீமிசைப்பதம். (௧௧)

கோடமை கரிகளுங் கொடுமடங்கலும்
பாடமை பகைதவிர் பரிசி னுன்தற்
காடர வொடுமதி யமர்பி ரான்சடைக்
காடல துவமையாங் கண்ட தில்லையே.

(இ - ள்.) கோட்டமைகரிகளும் - கொம்புள்ளயானைகளும் —கொடுமடங்கலும் - கொடியசிங்கங்களும் —பகைதவிர் - பகைதவிர்ந்து—பாடமைபரிசினால் - மேம்பாடமைந்ததன்மையால்—அதற்கு - அந்நிலைமைக்

கு—ஆடரவொடு - ஆடுகின்றபாம்போடு—மதியமர் - சந்திரனமர்ந்த—பி ரான் - பரமசிவனது—சடைக்காடலது - சடாடவியேயன்றி—உவமை - உபமானம்—யாங்கண்டதில்லை - யாமெவ்விடத்துங்கண்டதில்லை. எ - று. ஏ - அசை. யானையுஞ்சிங்கமும் பகையின்றி நிற்குங்காடாதலால் அக்கா டு பாம்புஞ் சந்திரனும் பகையின்றி அமர்ந்த பரமசிவனது சடாடவிக்கு உவமைகூறப்படுவதல்லது வேறின் றென்க. (௧உ)

பெயர்க்குறு காலகள்கை யாகப் பெற்றவு
முயிர்க்குறு நாசிகை யாக வுள்ளவு
மயக்கறு தீயினை வளர்த்து வான்புனல்
பயக்குறு முனிவரர் பணிகள் செய்யுமால்.

(இ - ள்.) பெயர்க்குறு - நடக்கற்கியைந்த —கால்கள் - கால்களை—கையாகப்பெற்றவும - கைகளாகப்பெற்றிருப்பவைகளும்—உயிர்க்குறு சுவாசம்விடுதற்கியைந்த—நாசி - மூக்கை—கையாகவுள்ளவும் - கையாக ப்பெற்றிருப்பவைகளும் —மயக்கறு - குற்றநீங்கிய —தீயினைவளர்த்து - யாகம்வளர்த்து —வான்புனல்பயக்குறும் - மழைபெய்யச்செய்யும் —மு னிவரர் - ரிஷிகளுடைய—பணிகள்செய்யும் - குற்றேவல்களைச்செய்யு ம். எ - று. ஆல் - அசை. புலிசிங்கமுதலியவைகளைப் பெயர்க்குறுகால் கள்கையாகப் பெற்றவுமெனவும், யானை யாளிமுதலியவைகளை உயிர்க் குறுநாசிகையாகவுள்ளவுமெனவும் கூறினரென்க. மயக்கறுதீயென்றது; வேதவிதிக்கு முரணுதியற்றும்யாகத்தை. பெற்றவுமுள்ளவுமெனல் வி னையாலணையும்பெயர். (௧௩)

மறைபல வோதுநர் மகம்வ ளர்க்குநர்
கறைமிட றுடையநங் கடவுள் பூசனை
முறைவழி புரிகுநர் மூச்ச வித்தொரு
தறியென வசைவற விருக்குந் தன்மையார்.

(இ - ள்.) மறைபலவோதுநர் - பலசாகைகளாயிரிந்துள்ள வேதங்க ளையோதுபவர்களும் —மகம்வளர்க்குநர் - யாகம்வளர்ப்பவர்களும்—க றைமிடறுடைய - நீலகண்டத்தையுடைய—நங்கடவுள்பூசனை - நமது கடவுளாகியசிவபூசையை —முறைவழிபுரிகுநர் - ஆகமநெறிப்படிசெய் பவர்களும்—மூச்சவித்து - மூச்சடக்கி —ஒருதறியென - ஒருஸ்தம்பத் தைப்போல —அசைவறவிருக்கும் - அசைவின்றியிருக்கும் —தன்மை

யார் - நிலையையுடையவர்களும். எ - று. விதிமார்க்கநெறிச்சேறலை கைறமிட்டுடைய நங்கடவுள்பூசனை முன்றுவழிபுரிகுநர் என்றார். (௧௪)

வேறு.

ஆயி ருக்கு மருந்தவர் தங்கள்பாற்
போயி வர்க்குறு போதனை யாற்பவ
நோய கற்றுவ லென்று நுவன்றனன்
றாயெ னக்கொரு தானெனு மல்லமன்.

(இ - ள்.) ஆயிருக்கும் - இங்ஙனமாகவிருக்கும் —அருந்தவர்தங்கள் பாற்போய் - அரியதவஞ்செய்பவர்களிடத்திற்போய் —இவர்க்குறுபோதனையால் - இவர்களுக்கியைந்தவாறு போதிக்குந்தன்மையரல்—பவநோயகற்றுவலென்று - அவர்கள்செனனநோயை நீக்குவனென்று—நுவன்றனன் - சொல்லினன்—எனக்கு - அடியேனுக்கு —ஒருதாய்தானெனும் - தாய்போல்பவனுமென்றுகோடற்கியைந்த—அல்லமன் - அல்லமதேவன். எ - று. அவரவர்க்கியைந்தவாறு போதித்து விளக்கவேண்டுவதாதலால் இவர்க்குறுபோதனையா லென்றார். (௧௫)

நோற்று நோன்புட னைந்து வருந்துவீ
ராற்று நீர்மக மாதி வினையினான்
மாற்று மாயை மலஞ்செறு விற்படு
சேற்றி னாற்கழூஞ் சேறு நிகர்க்குமால்.

(இ - ள்.) நோற்றுநோன்பு - பலவாறாயவிரதங்களைச்செய்து —உடனைந்து - தேகமிளைத்து—வருந்துவீர் - வருத்தப்படுவீர்கள் —ஆற்றுநீர்மகமாதி - யாகாதிகிர்த்தியங்களைச்செய்தீர்கள்—வினையினால் - கருமத்தால்—மாற்றும் - நீக்கற்கியைந்த—மாயைமலம் - மாயாமலமானது—செறுவிற்படு - வயலிலுள்ள—சேற்றினால் - சேற்றினாலே—கழூஞ்சேறு - கழுவப்படுஞ்சேற்றை—நிகர்க்கும் - ஒத்திருக்கும். எ - று. ஆல் - அசை. யாகாதிகிர்த்தியங்களாலும் பலவாறாயநோன்புகளாலும் உடல்மெலிந்து மாயாமலம்போக்கத்துணிதல் சேற்றைச் சேற்றாற்கழுவுதல்போலுமென்க. எனவே, மாயாமலம் விசார ஞானத்தாலன்றி யகலாதெனப் பெற்றாம். (௧௬)

ஞானங் கொண்டு நணுகுஞ் சிவபத
மூனங் கொண்ட கருமத் தறுவது

வானங் கொண்டு வளர்த்தல் புகையது
மானங் கொண்டு வளர்த்தலை யொக்குமால்.

(இ - ள்.) ஞானங்கொண்டு - விசாரஞானங் காரணமாக—நணுகும் - அடைதற்கியைந்த—சிவபதம் - சாயுச்சியபதவியை—ஊனங்கொண்ட - இழிவுள்ள—கருமத்து - யாகாதிசிவபுண்ணியகருமங்களால்—உறுவது - அடைவது—வானங்கொண்டு - உலர்ந்தமரங்கொண்டு—வளர்த்தல் - வளர்த்தலாலுறுவது—புகை - புகையாம்— (அதனை) அநுமானங்கொண்டு - அநுமானங்காரணமாக—வளர்த்தலையொக்கும் - வளர்த்தலுக்கொப்பாகும். எ - று. ஆல் - அசை. விசாரஞானத்தா லெய்தற்கியைந்த சிவபதம் சிவபூசைமுதலியகருமங்களா லுறுமெனக்கோடல்; விறகுகொண்டு வளர்த்தலாலெய்தும்புகை சந்தேகத்தால் வளர்த்தலுக்கொப்பாகும் எனப்பொருள்கொள்க. கருமமென்றது ஊனங்கொண்டவென்றடைகொடுத்தது திரிபுடியறுமைகாட்டற்கென்க. திரிபுடியறுதகருமத்தால் சிவபதமெய்துமாயின் அநுமானங்கொண்டு வளர்த்தலால் புகையெய்தும். இங்ஙனமின்றேல் அங்ஙனமுமின்றாம். வானங்கொண்டு வளர்த்தல் புகையெனல் ஞாயஞ்சோதனை பொருத்தங்கட்கியையுமாறுபோன்று ஞானங்கொண்டு நணுகுஞ் சிவபதமெனலியையும். (௧௭)

குடுமி யங்கிரி யொப்பக் குவித்தபுற்
சுடுதல் கொண்டு பிறவி சுடப்படா
தடுபு லன்க ளறிவெனு மங்கியிற்
சுடுதல் கொண்டு பிறவி சுடப்படும்.

(இ - ள்.) குடுமி - சிகரத்தையுடைய—அம் - அழகிய—கிரியொப்ப - மலைக்கொப்பாக—குவித்தபுல் - ராசியாகக்குவித்தபுல்லுகளை—சுடுதல்கொண்டு - சுடுதல்காரணமாக—பிறவிசுடப்படாது - பிறவியெரிக்கப்படாது—அடு - உயிர்களைவதைக்கின்ற—புலன்கள் - ஐம்புலன்களையும்—அறிவெனுமங்கியில் - அறிவென்னும்அக்கினியில்—சுடுதல்கொண்டு - எரித்தல்காரணமாக—பிறவிசுடப்படும் - பிறவியெரிக்கப்படும். எ - று. இங்கே புல்லென்றது தருப்பையை. பிறவிநாசம் யாகாதிகருமத்தாலன்றெனவும் மெய்யுணர்வுமேலீட்டாலாமெனவும் அம்மயப் பொருள்கிடந்ததென்க. யாகாக்கினிவளர்த்தல் திரிபுடிநாசத்துக் கிடமின்மையின் பிறவிவளர்தற்கிடமாமெனவும் ஞானக்கினிவளர்த்தல் திரிபுடிநீறுதற் கிடமாதலின் பிறவிநசித்தற்கிடமாமெனவுங்கொள்க. அறிவெனுமங்கி உருவகம். குடு

மியங்கிரியொப்பக் குவித்தபுல்லென்றதனால் மிக்கபெரிதாகிய யாகமெனப் பெற்றும். யாகாக்கினிமுதலியவற்றும் பயனின்றென்பது கருத்து.

போத மாகும் புனிதத் தழலினுட்
பேத பாவனைப் பேரவி பெய்வனே
லாதி சோவுடை மாசி யவனென
வேதம் யாவும் விளங்க விளம்புமே.

(இ - ள்.) போதமாகும் - மெய்யுணர்வென்னும்—புனிதத்தழலினுள் - பரிசுத்தமாகியவக்கினியில் —பேதபாவனை - பேதபாவனையென்னும்—பேரவி - மிக்கநெய்யை—பெய்வனேல் - சொரிவனாயின்—ஆதி - மூலப்பிரகிருதியென்னும் —சோ - அரணை—உடை - உடைக்கின்ற—மாசி - மேகம்—அவனென - அவனேயென்று—வேதம்யாவும் - வேதங்களனைத்தும்—விளங்க - எவர்க்கும்புலப்படுமாறு —விளம்பும் - சொல்லும். எ - று. ஏ - அசை. போதமாகும்புனிதத்தழல், பேதபாவனைப்பேரவி, இவையுருவகம். பேதபாவனை ; சிவம்வேறு தான்வேறெனக்கோடலை. தான்விளங்காமைக்குக்காரணம் ; மூடங்காரணமாக வெய்தியபஞ்சகோசவரணுதலினும் அதனைநிக்கிரகிக்காவிடத்துத் தான்விளங்கற் கிடமின்மையினும் ஆதிசோவுடையெனவும், சத்தமேகங்களும் ஒருங்குகூடிப் பெய்யுழி நசிவுறாத வரணொன்றுமின்று இன்மையின் இவனை மாசியெனவுங் கூறியதாகப் பெற்றும். (௧௬)

மறையி னுள்ள கரும மனவினை
வறியர் கொள்ளுதல் போல மதியறுஞ்
சிறியர் கொள்வர் தெளிதத் துவமசி
யறிஞர் கொள்வ ரணிகொளுஞ் செல்வர்போல்.

(இ - ள்.) மறையினுள்ள - வேதத்திலுள்ள —கருமம் - கர்மானுஷ்டானத்தை—மனவினை - மணிகளாஞ்சல்யத்தை —வறியர்கொள்ளுதல்போல - தரித்திரியர்கொள்ளுமாறுபோன்று —மதியறுஞ்சிறியர் - புத்திகெட்டமூடர்—கொள்வர் - ஏற்றுக்கொள்வர்—அணிகொளும் - சிறப்புவாய்ந்த—செல்வர்போல் - பாக்கியவான்களைப்போல —தெளி - ஐயந்திரிபகறற்கியைந்த—தத்துவமசி - தத்துவமசியென்னு மகாவாக்கியசாம்பிராச்சியத்தை—அறிஞர்கொள்வர் - அறிவுடையோரேற்பர். எ - று. மனவினை வறியர்கொள்ளுதல்போல மறையினுள்ள கர்மஞ்சிறியர் கொள்வ

ரெனவும் அணிகொளுஞ்செல்வர்போல் தெளிதத்துவமசி அறிஞர்கொள்வரெனவும் பிரித்துக் கூட்டிப் பொருள்கொள்க. (உ0)

என்று கூற விருந்தவ ரன்பொடு
நின்று ஞான நெடுந்தகை தாண்மிசை
யின்று நீவர வெத்தவஞ் செய்தன
மன்ற யாமென வாழ்த்தி வணங்கினர்.

(இ - ள்.) என்றுகூற - என்றல்லமன் சொல்ல—இருந்தவர் - அங்கிருந்தவடியார்கள்—அன்பொடுநின்று - மிக்கவன்போடெதிரினின்று—ஞானநெடுந்தகை - ஞானமென்னும் பெருந்தன்மையையுடைய வல்லமனது—தாண்மிசை - திருவடிகளின்மேல்—யாம் - நாம்—மன்ற - மிகவும்—இன்று - இப்போது—நீவர - தேவரீரெழுந்தருளிவருதற்கு—எத்தவஞ்செய்தனமென - என்னமகாதவஞ் செய்தனமோவென்று —வாழ்த்திவணங்கினர் - துதித்துவணங்கினர். எ - று. பெருந்தகை ; அன்மொழித்தொகை. இருந்தவர் நின்று வாழ்த்திவணங்கினர் எனக்கூட்டிமுடிக்க. (உக)

மாயை தோன்றிய ஞான்று மனத்தினெ
ழூய மோக முடிந்திடச் செம்மலர்
வாயி னற்றரு வாசன் சொலப்படுந்
தூய னுமிவ னென்று துதித்தனர்.

(இ - ள்.) மாயைதோன்றியஞான்று - மாயையென்பவள்பிறந்தகாலத்தில்—மனத்தெழூய - மனதிலெழுந்துமூடிய —மோகமுடிந்திட - பிராந்திநீங்க —செம்மலர்வாயினல் - செந்தாமரைமலர்போன்றவாயினல்—தருவாசன் - தருவாசனென்னுமுனிவன் —சொலப்படும் - முன்னேசொல்லியிருக்கின்ற —தூயனுமிவனென்று - பரிசுத்தவானிவனேயென்று—துதித்தனர் - துதிசெய்தனர். எ - று. தருவாசனல் சொல்லப்பட்டவன் இவனேயெனத்துதித்தனரென்க. (உஉ)

இன்ன வாறிங் கிருந்தவ ரின்புற
மன்னு ஞான மறைமொழி கூறியே
தன்னை மேவுந் தலைமை புரிந்தன
னன்னை போலுநம் மல்லம தேவனே.

(இ - ள்.) இன்னவாறு - இவ்வண்ணம்—இங்கிருந்தவர் - இவ்விடத்திருந்தவர்கள் —இன்புற - இன்பமடைய —மன்னு - நிலைபெற்ற—ஞானமறைமொழி - ஞானமாகியரகஸ்யமொழிகளை - கூறி - சொல்லி —அன்னைபோலும் - தாய்போலுநின்றுள்ள—நம்மல்லமதேவன் - நமதல்லமதேவனென்போன்—தன்னைமேவும் - தன்னைத்தானடையும் —தலைமை புரிந்தனன் - தலைமையைச்செய்தனன். எ - று. அல்லமதேவன் கூறித்தலைமைபுரிந்தனன் எனக்கூட்டிப் பொருள்கொள்க. (உரு)

முனிவரர்கதி - முற்றிற்று.

ஆ. கதி - ௨ப - க்கு - விருத்தங்கள் - ௯௬௪.



### இருபத்தோராவது

# சூனியசிங்காதனகதி.

வேறு.

அல்லமனை யறிதற்கோ ரறிகருவி யாகவுனிச்
சொல்லரிய வெழுநிலைப்பொற் சூனியசிங் காதனமொன்
றில்லையென வில்லையெனு மெங்கள்குரு வசவேசன்
மல்லலுற வினிதாற்றி வைகுமுறை வகுத்துரைப்பாம்.

(இ - ள்.) அல்லமனையறிதற்கு - அல்லமனினையனென்றறிதற்கு — ஓரறிகருவியாக - ஓரடையாளமாக — உனி - நினைத்து — சொல்லரிய - சொல்லுதற்கரிதாயுள்ள — எழுநிலை - எழுநிலையையுடைய — பொன் - அழகிய — சூனியசிங்காதனமொன்று - ஒருசூனியசிங்காதனத்தை — இல்லையெனவில்லையெனும் - பொய்யெனற்கியைவதைப் பொய்யென்றுகூறும் — எங்கள்குரு - எமதுகுருவாகிய — வசவேசன் - வசவேசனென்போன் — மல்லலுற - அலங்காரந்தங்க — இனிதாற்றி - நன்றாகச்செய்து — வைகுமுறை - தங்கும்விதத்தை — வகுத்துரைப்பாம் - வகுத்துச்சொல்லுதும். எ - று. ஏனையர்போலப் பொய்யைமெய்யெனக்கொள்ளாதவனென்பதுதோன்ற இல்லையெனவில்லையெனு மெங்கள்குருவசவேசனென்றார். இல்லையெனல்; தனக்கெனச்சொரூபமொன்றில்லாதசகசீவபரங்களை. இதனை வஸ்துபரிசோதனையாற்காணலாம். இல்லையெனல் என்பது அறிவின்பிரிதிபலனமாகிய வறியாமையை. எழுநிலையாவது; சுபேச்சைமுதலியவற்றை. (க)

ஒடுக்குமனம் வீட்டுநெறிக் கோருதுணையா குமபுறத்து
நடக்குமனை நிரயவழி நடப்பதற்குத் துணையாமென்
றிடக்கர்மன மடக்கும்வகை யெம்பிரா னியம்பியவா
றடக்கமனு முறுநெறியி னருணந்தி தலைப்பட்டான்.

(இ - ள்.) ஒடுக்குமனம் - மனோலயசம் — வீட்டுநெறிக்கு - முத்திமார்க்கத்துக்கு — ஒருதுணையாகும் - ஒருதுணைக்கருவியாம் — புறத்துநடக்கும்

மனம் - பகிர்முகமாகச்செல்லுமனம்—நிரயவழிநடப்பதற்கு-நரகநெறிச் சேறற்கு —துணையாமென்று - துணைக்கருவியாகுமென்று —இடக்கர்மனம் - ஒருங்குபடற்கிடக்காயுள்ளமனதை —அடக்கும்வகை - அடக்கத் தகும்விதத்தை—எம்பிராணியம்பியவாறு - அல்லமன்சொன்னபடி —அடக்கமனமுறுநெறியின் - மனமடக்கற்கியைந்தமார்க்கத்தில் —அருணந்தி - கிருபைபொருந்திய வசவண்ணன்—தலைப்பட்டான் - பிரவேசித்தான். எ - று. மனதையொடுக்கல்; எப்பொருளெத்தன்மைத்தாயினும் அவ்வப்பொருளைக் காரணகாரியமிறக்கச்செய்தலாலும், மனதைப்புறத்து நடத்தல் அவ்வப்பொருளைச் சோதனைநெறித்தாகாது அங்ஙன மங்ஙனங் காண்டற்கியைவதாலும் எய்துமென்க. காரணகாரியமிறக்கச் செய்தலாலெய்துபயன் மனதுக்குப் புடைபெயர்ப்புக் கிடமின்மையின் வீட்டினெறிக் குறுதுணையாகுமெனவும், காரணகாரிய மிறக்கச்செய்யாமையாலெய்துபயன் மனதுக்குப் புடைபெயர்ச்சி தவிர்தற்கிடமின்மையின் நிரயவழிநடப்பதற்குத் துணையாமெனவுங் கூறியதாகப் பெற்றும். பொருளல்லாததைப் பொருளாகச்சேறலின் இடக்கர்மனமென்றூர். இங்ஙனம் பொருள்கொள்ளாதுழி யோகநெறித்தாகும். அவர்கருத்திஃதன்று. புறத்துநடக்குமனம் பகிர்முகமென்றதனுல் ஒடுக்குமனமென்றது அந்தர்முகமாகக்கொள்க. கைலை வைகுந்தமுதலாகக்கூறு மெவ்வெப்பதவிகளும் அந்தர்முகத்ததெனற்கியையாமையின் அவற்றையேநிரயவழியெனக் குறிப்பித்தார். தன்னைமறந்த மறதியாகிய காரணசரீர நசித்தற்கிடமின்மையின் நிரயமெனலே பொருந்தும். அன்றெனில், சோதனைஞாயங்களாற் கூறுக. வலியின்றேல் முரணற்க. (உ)

நில்லாது போமனத்தைக் கால்பிடித்து நிறுத்தியே
வில்லாரு மதியமுதம் விருந்திட்டு நட்புறீஇப்
பொல்லாத புலனுகரப் புறத்துநிலை தடுமாறிச்
செல்லாம லுடன்கொண்டு சித்திரமொத் திருந்தனனல்.

(இ - ள்.) நில்லாதுபோமனத்தை-தனதுவசத்தடங்காதுசெல்லுமனதை—கால்பிடித்து - பிராணவாயுவினிலக்கணத்தைக்கடைப்பிடித்து—நிறுத்தி - அதனைச்சலியாதுநிறுத்தி —வில்லாரும் - பிரகாசம்பொருந்திய—மதி - குண்டலிசத்தியென்னும் பூரணமதியின்—அமுதம்விருந்திட்டு-அமுதத்தைச்சுறைகொண்டு—நட்புறீஇ-அதனி லன்புற்று—பொல்லாத புலனுகர - பொல்லாதபுலன்களினெறித்தாவிடயங்களை யநுபவிப்பான் வேண்டி—புறத்து - புறம்பிற்செல்லும் —நிலைதடுமாறி நிலைபிறழ்ந்து—

செல்லாமல் - மாறிச்செல்லாமல்—உடன்கொண்டு - மனதைத்தன்வயப் படுத்தி —சித்திரமொத்திருந்தனன் - சித்திரப்பிரதமைபோ லிருந்த னன் எ - று. ஆல் - அசை. பிராணவாயுவைப் பற்றவேண்டியவாறு பற்றலைக் கால்பிடித்தென்றும், பூரணசந்திரனைப்போல் தெளிகிரணந்த ந்து வுபசாந்தப்படுத்தலின் குண்டலிசத்தியை வில்லாருமதியமுதமென் றும், அங்ஙனமாய வோரநுபூதிமேலாய வனுஷ்டானத்ததாதலின் பொ ல்லாதபுலனுகரப் புறத்துநிலைதமொறிச் செல்லாமலென்றும், இந்தச்சு வாநுபூதி நிலையினின் றகலாமையால் உடன்கொண்டு சித்திரமொத்திருந் தனனென்றுங் கூறினர். (௩)

நின்றமனங் கொண்டுதா னித்தமாந் தனையுணர்த்த
வென்றுவரு ஞானகுரு வெனவெழுந்து வளர்காத
லொன்றுமொழி வறநிற்ப வுவப்பதுல கிற்பொருள்வே
றின்றியரு ணந்திபிரா னெந்தைவர வினைநோக்கி.

(இ - ள்.) நின்றமனங்கொண்டு - சித்திரமொத்துநின்ற மனங்காரண மாக—ஞானகுருதான் - ஞானுசிரியன்—நித்தமாந்தனையுணர்த்த - நித்தி யமாநின்றுள்ள வாத்மஸ்வரூபத்தைவிளக்க —என்றுவருமென - என் றைக்குவருவானோவென்று—எழுந்துவளர் - விசாரமேலிட்டாலெழுந்து வளர்கின்ற—காதலொன்றும் - ஆசைமாத்திரம்—ஒழிவறநிற்ப - ஒழியா மலிருக்க—உவப்பது - விரும்பத்தகுவதாகிய—பொருள் - வஸ்து—உல கில் - உலகின்கண்—வேறின்றி - வேறில்லாமல்—அருள் - கிருபையையு டைய—நந்திபிரான் - வசவண்ணன்—எந்தை - அல்லமனது—வரவினை நோக்கி - வரவையெதிர்நோக்கி. எ - று. மனம்பதைப்பற நில்லாவிட் த்து ஆத்மாவை விளக்கற் கொண்ணுமையால் நின்றமனங்கொண்டு தா னித்தமாந்தனை யுணர்த்தவெனவும், அறிவன்றி அயலின்றெனத் தேர் தலின் உவப்பதுலகிற் பொருள்வேறின்றி யெனவுங்கூறினர். (௪)

எவ்வுருவி னெடுவருமோ வெம்பிரான் றெளியகிலேன்
செவ்வியவோர் தவிசமைத்துச் சேர்ந்தந்தன்மே லிருப்பவனை
யவ்வியமி லல்லமனென் றறிவன்யா னென்றுதுணிந்
திவ்வுலக முளம்வியப்ப விதுசெய்தா னருணந்தி.

(இ - ள்.) எம்பிரான் - அல்லமன்—எவ்வுருவினொடு - எந்தமாறுவேட ங்கொண்டு—வருமோ - வருவானோ—தெளியகிலேன் - தெளியேன்— செவ்விய - செம்மையாகிய —ஓர் தவிசமைத்து - ஒருசிங்காதனஞ்செய்

து—அதன்மேற்சேர்ந்திருப்பவனை - அதன்மேல்வந்திருப்பவனை —அவ் வியமிலல்லமனென்று - குற்றமற்றவல்லமதேவனென்று —அறிவன்யா னென்று - யானறிவேனென்று—துணிந்து - நிச்சயித்து—இவ்வுலகம் - இவ்வுலகத்திலுள்ளாரது—உளம்வியப்ப - மனமதிசயிக்கும்படி—அருண ந்தி - கிருபைபொருந்தியவுசவண்ணன்—இதுசெய்தான் - இதனைச்செய் தனன். எ - று. இவ்வுலகம் இடவாகுபெயர். வருமோவென்பதி லோ காரம் ஐயம். (ரு)

வேறு.

ஆதியா தார மாதி யடுக்கெனப் பன்னி றத்த
சோதியேழ் நிலைக ளோங்கச் சூனிய பீட மொன்று
போதினே னுளம்வி யப்பப் பொன்மணி பளிங்கு கொண்டு
சாதிநான் மறைகள் போற்றுஞ் சைவநா யகன்செய் வித்தான்.

(இ - ள்) ஆதியாதாரமாதி - மூலாதாரமுதலியவைகளை—அடுக்கென- அடுக்காக —பன்னிறத்தசோதி-பற்பலநிறத்ததாயசோதியுருவாயுள்ள— ஏழ்நிலைகளோங்க - ஏழுநிலைகளுமேலோங்கும்படியாக—சூனியபீடமொ ன்று - ஒருசூனியாசனத்தை—போதினேன் - பிரமனது —உளம்வியப் ப - மனமதிசயிக்க—பொன் - பொன்னையும்—மணி - ரத்னங்களையும்— பளிங்கு - பளிங்குக்கற்களையும்—கொண்டு - ஆதாரமாகக்கொண்டு—சா தி - ஓரினமாகிய—நான்மறைகள்போற்றும் - நான்குவேதங்களாலுந் து திக்கப்பெற்ற—சைவநாயகன் - சைவத்துக்குத் தலைமையாகின்றுள்ள வசவண்ணன்—செய்வித்தான் - செய்வித்தனன். எ - று. பலநிறத்த தாகவிளங்கலின் சோதியைப்பன்னிறத்தவென்றார். ஏழ்நிலைகளாவன ; மூலாதாரமுதல் சோதியிறுவாக்கிடந்தவைகளை. இவைகட்கெல்லா மஸ் திபாரஞ் சூனியமாதலின் சூனியபீடமெனப்பட்டது. அதுநினைப்பு மறப் பற்றவிடத்ததாதலின் சூனியபீடமொன்றெனப்பட்டது. அதனைப்பாழெ ன்பாருமுளர். திருக்கையேனும் திரிஸ்யத்தையேனும் ஆராய்ந்துசெல்லு மிடத்தும் ஆசானருட்கண்படாதவிடத்தும் யாமன்றுமுடிதலினானும், அ வ்வன்மை இரண்டுபடாதிருத்தலினானும் அதனையேநினைப்புமறப்பற்ற வி டமென்றும். இச்சூனியபீடம் மனதினாலும், பொன்மணி பளிங்குகொண் டென்பதனால் செய்கையினாலு மியற்றப்பட்ட தெனப்பெற்றாம். சூனி யபீடம் பளிங்குபீடத்துக்கு மேனிலைய தென்க. (சு)

காரண வுபாதி யேழ்மேற் கண்டிடு ஞானி போலச்
சீரணி நுதலின் மீது சென்றுகாண் யோகி போலப்

பூரண ஞான நந்தப் போதக னிருப்பு காண்பா
னேரணி நிலைக ளேழ்மே னிகழ்வெளித் தவிச மைத்தான்.

(இ - ள்.) காரணம் - காரணமாகின்றுள்ள—உபாதியேழ்மேல் - ஏழு பாதிகளுக்குமேல் —கண்டிடுஞானிபோல - தன்னைத்தான் தரிசித்துக் கொண்டிருக்குஞானிபோலவும்—சீரணி - சிறப்புள்ள—நுதலின்மீது - நெற்றியின்மேல் —சென்றுகாண் - நிலைகள்கடந்துதெரிசிக்கின்ற—யோகிபோல - யோகிபோலவும்—பூரணம் - பரிபூரணமாகிநிறைந்துள்ள—ஞானந்தபோதகன் - ஞானனந்தபோதகனது—இருப்புகாண்பான் - நிலை காணும்படி—ஏரணி - அழகுள்ள—நிலைகளேழ்மேல் - ஏழுநிலைகளின்மேல்—நிகழ் - விளங்காநின்ற—வெளித்தவிசு - சூனியசிம்மாசனத்தை—அமைத்தான் - ஏற்படுத்தினன். எ - று. காரணவுபாதியேழாவன; ஈசன், முற்றறிவான், வியாபி, எவைக்குமேது, மாகாசகன், நிருபாதி, பாவனை என்பன. யாவிற்குமேலாநிற்றலால் ஈசனெனவும், எவற்றை யுமறிபவனாதலின் முற்றறிவானெனவும், வியாபகத்துக்கெல்லாம் வியாப சமாநிற்றலின் வியாபியெனவும், எல்லாவுபாதானத்திற்கு முபாதானமா நிற்றலின் எவைக்குமேதுவெனவும், சர்வத்தையும் ரட்சிப்பவனாதலின் மாகாசகனெனவும், சமஸ்தத்தையு மழிப்பவனாதலின் நிருபாதியெனவும், எவற்றையுஞ் சிருட்டிப்பவனாதலின் பாவனையெனவுங் கோட்பகியைந்த தவசரம்பற்றியென்க. இதுயோகநெறித் தன்றெனவிலக்கக் காரணவு பாதியேழ்மேற் கண்டிடுஞானிபோலவென்றார். அறிவிற்சகலகற்பனை களையுங் கண்டு களைந்து தானாக்குதல் ஞானம். உடலி லாறுதாரங்களையுங் கண்டப்பானுதலி லொளிர்தல் யோகம். இதனையாங்காங் குணர்க. (எ)

களங்கமின் மதியம் போலக் கண்டவர் மனம லர்த்தும்
பளிங்குசெய் நிலையுள் வந்து பார்ப்பவர் மெய்ந்நி ழற்போய்
விளங்குத றன்மேற் றேன்ற வெந்தெரி பசும்பொ னற்செய் [ம்.
துளங்கொளி நிலையைச் சென்னி சுமத்தல்போற் செய்த வொக்கு

(இ - ள்.) களங்கமில்மதியம்போல - களங்கமற்றசந்திரனைப்போல—கண்டவர்மனம் - கண்டவரதுமனதை —மலர்த்தும் - விகசிக்கச்செய்யு ம்—பளிங்கு-பளிங்குக்கற்களினல்—செய்யுநிலையுள் - செய்திருக்கின்றநிலை களுக்குள்—வந்துபார்ப்பவர் - வந்துபார்ப்பவர்களுடைய —மெய்ந்நிழல் - தேகசாயை—தன்மேற்றேன்ற - தன்மேற்றேன்றும்படி—போய்விள ங்குதல் - சென்றுவிளங்குதல் —வெந்தெரி - மிக்கபிரகாசத்தையுடை

ய—பசும்பொனுற்செய் - பசும்பொன்னினுற்செய்த —துளங்கொளிகி லையை - கேட்டைநட்சத்திரகிலையை —சென்னிசுமத்தல்போல் - முடிசு மத்தல்போல—செய்தவொக்கும் - செய்தாலெத்தகைத்தோ வததனையொ க்கும். எ - று. பளிங்கறையுள் வந்துபார்ப்பவரது தேகச்சாயை தன் மேற்றோன்றுதல் கேட்டைநட்சத்திரத்தை சென்னிமேற்செய்தலுக் கொப்பாகும் எனப்பொருள் கொள்க. (அ)

திருந்திய பளிங்கு கொண்டு செய்தவந் நிலையின் வாய்தல்
பொருந்துத றெரிகி லாராய்ப் புகுந்துகாண் மனித ரெல்லாங்
கரங்கொடு தடவிக் கண்டு கண்டெரி யார்கள் போல
வருந்திய மனம கிழ்ந்து வசவனை வியப்ப ரன்றே.

(இ - ள்.) திருந்தியபளிங்குகொண்டு - களங்கமற்றபளிங்குகற்களினு ல்—செய்த - செய்திருக்கின்ற—அந்நிலையின்வாய்தல் - அந்தப்பளிங்கறை யின்வாசற்படி —பொருந்துதறெரிகிலாராய் - இருப்பதைக்காணத்தெ ரியாதவர்களாய்—புகுந்துகாண் - உள்ளேபோய்க்காண்கின்ற—மனிதரெ ல்லாம் - மனிதர்கள்யாவரும்—கரங்கொடுதடவிக்கண்டு - கையினாற்றடவி வாயிலைக்கண்டு —கண்டெரியார்கள்போல் - குருடர்களைப்போல —வரு ந்தியமனம் - வாயில்தெரியாததால்வருத்தமுற்றமனம்—மகிழ்ந்து - சந் தோஷித்து —வசவனைவியப்பர் - வசவண்ணனைப்பற்றியதிசயிப்பர். எ - று. அன்று - ஏ - அசைகள். மனிதரெல்லாம் தடவி கண்டு மகிழ் ந்து வியப்பர் எனக்கூட்டிப் பொருள்கொள்க. (௯)

நினைவினு லொருவன் செய்த நெஞ்சுளா லயமே யன்றி
வினையினு லுலகர் செய்து விளங்கிய பணிக டம்மு
ளினையதோ டுவமை யாத தில்லையென் றும்ப ரெல்லாந்
தனையலா னிகரி லாத தவிசினை வியந்து நின்றார்.

(இ - ள்.) ஒருவன் - ஒருபுருடன் —நினைவினுற்செய்த - சங்கற்பத்தி னுற்செய்த—நெஞ்சுளாலயமேயன்றி -மனக்கட்டிடமேயல்லாமல் —வி னையினுல் - கிரியையினுல்—உலகர்செய்து - உலகத்தாராற்செய்யப்பட் டு—விளங்கியபணிகடம்முள் - விளங்காகின்றகட்டடங்களுள் —இனைய தோடுவமையாதல் - மனக்கட்டடத்தோடுவமைகூறப்படுதல் —இல்லை யென்று - எங்கனுமில்லையென்று—உம்பரெல்லாம் - தேவர்களனைவரு ம்—தனையலால் - தனக்குத்தானே நிகராயிருப்பதேயல்லாமல்—நிகரி லாத - தனக்கொப்பிடுதற்குவேறொன்றில்லாத —தவிசினை - ருணியின்

காசனத்தைக்கண்டு—வியந்துநின்றார் - அதிசயித்துநின்றனர். எ - று. நெஞ்சுளாலயம்; இயமநியமமுதலிய வற்றாற்செய்தகட்டடத்தை. அக்க ட்டடம் அகத்திலன்றிப் புறத்திலன்றாமையின் தனக்குத்தானே நிகரெ ய்துமென்றார். நெஞ்சுளாலயமே தவிசாதலால் உம்பரெல்லாந் தவிசினை வியந்துநின்றா ரெனப்பட்டது. (௪0)

அம்பரா சனமி யன்ற வதிசயங் கேளா முக்கட்
டம்பிரா னடிய ராகத் தரையுளா ரெல்லாஞ் சென்று
செம்பொனு லியன்ற வந்தச் சீர்கெழு பீட நோக்கி
யெம்பிரான் வசவ தேவ னிணையடி தொழுதி ருந்தார்.

(இ - ள்.) அம்பராசனம் - சூனியசிம்மாசனம் —இயன்றவதிசயங்கே ளா - அமைக்கப்பட்டவதிசயங்கேட்டு—தரையுளாரெல்லாம் - பூமியிலு ள்ளவரனைவரும்—முக்கட்டம்பிரான் - திரிநேத்திரத்தையுடையபரமசிவ னது—அடியாராகச்சென்று - அடியார்களைப்போற்போய் —செம்பொ னுலியன்ற - சிவந்தபொன்னாற்செய்த—சீர்கெழு - மகிமைவாய்ந்த—அந் தப்பீடநோக்கி - அந்தப்பீடத்தைப்பார்த்து—எம்பிரான்வசவதேவன் - எமதுகர்த்தனுகியவசவண்ணனது —இணையடி - உபயபாதங்களையும்— தொழுதிருந்தார் - தொழுதவ்விடத்திருந்தனர். எ - று. தரையுளாரெ ல்லாம் கேளா சென்று நோக்கி தொழுதிருந்தார் எனக்கூட்டிப் பொருள் கொள்க. (௪௧)

கரையிது கல்விக் கென்னக் கற்றவர் பலரு மேத்தத்
தரைமிசை யமைத்தி ருந்த சாரதா பீட மேபோ
லுரைமன மிறந்த தாமிவ் வொருதனி ஞான பீட
மருடரு குருகு கேச னன்றியே றிடுதற் காமோ.

(இ - ள்.) கரையிதுகல்விக்கென்ன - கல்விக்கிதுவேகரையர்மென் று—கற்றவர்பலருமேத்த - எல்லாக்கலைவல்லவருந்துதிக்க—தரைமிசை- பூமியின்மேல்—அமைத்திருந்த - செய்திருந்த—சாரதாபீடமேபோல் - சரஸ்வதிபீடத்தைப்போல—இ - இந்த—தனி - ஒப்பற்ற—ஒருஞான பீடம் - ஒருஞானபீடமானது—உரைமனமிறந்ததாம் - மனோவாக்குக் கெட்டாததாம்— (இந்தஞானபீடத்தில்) அருடரு - அநுக்ரகிக்கத்த க்க—குருகுகேசனன்றி - அல்லமனையன்றி—ஏறிடுதற்காமோ - ஏறுதற் குத்தகுமோ. எ - று. வேறுகூறுதற் கிடமின்மையின் ஒருவாற்றாற் சா ரதாபீடத்தை யுவமையிட்டார். (௪௨)

இப்பெரும் பீட மேறி யிருந்திட வல்லோ னென்றும்
வைப்பெனும் படிம றைந்தெம் மனத்திருப் பதற்கு வல்ல
வப்பெருங் கருணைக் குன்ற மாகுமல் லமனே யென்று
செப்புறு பரிசி லானுய்ச் சிந்தைசெய் திருந்தா னந்தி.

(இ - ள்.) இப்பெரும்பீடமேறி - இந்தப்பெரியபீடத்தின்மேலேறி—இருந்திடவல்லோன் - இருக்கவல்லவன் —என்றும் - எப்போதும்—வைப்பெனும்படி - புதையலென்னும்படி—எம்மனத்து - நம்முடையமனதில்—மறைந்திருப்பதற்குவல்ல - மறைந்திருத்தற்குவலியுள்ள—அ-அந்த—பெரும் - பெரிதாகிய—கருணைக்குன்றமாகும் - கிருபாமலைபோல்பவராகிய—அல்லமனேயென்று - அல்லமதேவனேயென்று —செப்புறுபரிசிலானுய் - சொல்லுந்தன்மையற்றவனுய்—நந்தி - வசவண்ணன்—சிந்தைசெய்திருந்தான் - சிந்தித்துக்கொண்டிருந்தான். எ - று. எல்லாருள்ளத்திலும் நிரதிசயானந்தவாழ்வாக மறைந்திருத்தலின் என்றும்வைப்பெனும்படி மறைந்தெம்மனத்திருப்பதற்கு வல்லவல்லமனென்ருர். அல்லமனேயென்பதி லேகாரம் பிரிநிலையெனினு மமையும். (௪௩)

கரைபொரு கங்கை யாற்றிற் கண்ணிவைத் தரச வன்னம்
வருதலை நோக்கி நிற்கும் வாறுபோ லிருள்வி ழுங்கி
பெருகொளி விரிக்கு ஞான பீடமொன் றமைய வாக்கிக்
குருபரன் வரவு நோக்கிக் கொண்டிருந் தனனெங் கோமான்.

(இ - ள்.) கரைபொரு - கரையில்மோதுகின்ற —கங்கையாற்றில் - கங்காநதிதீரத்தில்—கண்ணிவைத்து - கண்ணியைவைத்து —அரசவன்னம்வருதலைநோக்கி - ராசவன்னம்வரப்பார்த்து—நிற்கும்வாறுபோல் - காத்துக் கொண்டிருக்கும் நிலைமைபோல—இருள்விழுங்கி - இருளைவிழுங்கி—பெருகொளிவிரிக்கும் - மிக்கவொளியைவீசுகின்ற—ஞானபீடமொன்று - ஓர்ஞானபீடத்தை—அமையவாக்கி - நிலைக்கச்செய்து —குருபரன்வரவு - அல்லமனதுவரவை—எங்கோமான் - எமதுதலைவனுகியவசவண்ணன் —நோக்கிக்கொண்டிருந்தனன் - பார்த்துக்கொண்டிருந்தான். எ - று. எங்கோமான் ஆக்கி நோக்கிக்கொண்டிருந்தனன் எனமுடிக்க. கங்கையாற்றில்; விட்டிலக்கணை. (௪௪)

ஏட்டிலைப் புதுநீ ராற்றி லெதிர்கிழித் தேற விட்டோன்
பாட்டுடைத் தலைவ னன்பர் பலருநம் வசவன் றன்னை

நாட்டமுற் றடையு மாசா னமக்குமா மென்றி ருந்தார்
வீட்டினுக் கேற்றுஞ் சோதி விருந்திற்கு முதவு றுதோ.

(இ - ள்.) ஏட்டினை - ஏட்டை—புதுநீராற்றில் - வெள்ளமாகப்பெருகி யவையையாற்றில் —எதிர்கிழித்தேற - எதிரேகிழித்தேறும்படி—விட்டோன் - விட்டசம்பந்தனது —பாட்டுடைத்தலைவன் - பாட்டுக்கிசைந்த பரமசிவனது—அன்பர்பலரும்-சகலவடியார்களும்—நம்வசவன்றன்னை - நமதுவசவண்ணனை—நாட்டமுற்று - நாடி—அடையுமாசான் - வருகின்றவாசானே—நமக்குமாமென்று - நமக்குமாசானுருமென்று—இருந்தார்- எண்ணியிருந்தனர்—வீட்டினுக்கேற்றுஞ்சோதி - வீட்டிற்காகவேற்றப்பட்டவிளக்கு—விருந்திற்குமுதவுறுதோ - அங்கேவந்தவிருந்தினருக்குமுதவாதோ. 'எ - று. ஏறவிட்டோனைச்சம்பந்தனென்றது ஐதீகம். வீட்டுவிளக்கே விருந்திற்கும்போதுமாறுபோன்று வசவண்ணனுக்கியைந்த வாசானே நமக்கும்போதுமென்றிருந்தனரொன்க. (கரு)

சூனியசிங்காதனகதி - முற்றிற்று.

ஆ கதி - உக - இ - திருவிருத்தங்கள் - கூஅச.



## இருபத்திரண்டாவது

# சூனியசிங்காதனத்திலிருந்தகதி.

வேறு.

பள்ளம்புகு புனலபோனெறி படருஞ்சிவ னடியா
ருள்ளம்புகு மருணந்தியில் வுலகோரறி யாமற்
கள்ளங்கொளு மனமோடுசெய் யணைமேலொரு கருணை
வெள்ளங்கடி தேறுஞ்செயல் விருப்பாலெடுத் துரைப்பாம்.

(இ - ள்.) பள்ளம்புகுபுனல்போல் - பள்ளத்தில்விழும்நீரைப்போல — நெறிபடருஞ்சிவனடியார் - நன்னெறிச்செல்லுஞ்சிவனடியார்களது — உள்ளம்புகும் - உள்ளத்திற்குடிகொண்ட — அருள் - கிருபையையுடைய — நந்தி-வசவண்ணன் — இவ்வுலகோரறியாமல் - இவ்வுலகத்தாரறியாமல் — கள்ளங்கொளுமனமோடு - கள்ளமுள்ளமனதோடு — செய்யணைமேல் - செய்தசூனியசிங்காதனத்தின்மேல் — ஒருகருணைவெள்ளம் - ஒப்பற்றகருணைசமுத்திரம்போன்றவல்லமன் — கடிதேறுஞ்செயல்-விரைவிலேறுஞ்செயலை — விருப்பால் - மிக்கவிருப்போடு — எடுத்துரைப்பாம் - எடுத்துச்சொல்லுதும். எ - று. அடியாருளத்திற்புகுதல் திண்ணமாதல்பற்றிப் பள்ளம்புகுபுனல்போலென்றார். கள்ளங்கொளு மனமென்றது அதனியற்கை யுணர்த்தற்கென்க. கருணைவெள்ளம்; உவமையாகுபெயர்.(க)

சிரனாடுறு கயலாடல்செய் செய்நாடுடை யுழவ
ரரனாடுறு மொருகாவிரி யறனாடுறு முறைபோற்
பரநாடுறு மடியார்வினை பரிய்த்திரி குரவன்
வரனாடுறு முருகும்பர வசவன்புறு வசவன்.

(இ - ள்.) சிரல் - சிச்சிலிக்குருவி — நாடுறு - தேடுகின்ற — கயல் - கெண்டைமீன் — ஆடல்செய் - குதிக்கின்ற — செய் - வயல்கள்சூழ்ந்த — நாடுடை - நாடுகளையுடைய — உழவர் - பயிரிடுமோர்தர் — அரனாடுறும் - பரமசிவனால்விரும்பத்தக்க — ஒருகாவிரி - ஒருகாவிரியாற்றால் — அறனாடுறும் -

சிவபுண்ணியாதியறத்தையேநாடுகின்ற —முறைபோல் - வரிசைபோ ல —பரநாடுறும் - பரத்தையேநாடுகின்ற —அடியார்பரிய - அடியாரது வினைகணீங்க —திரிகுரவன் - தேடித்திரிகின்றவாசிரியன்—வரனாடுறும் - வரவையெதிர்நோக்கிநாடுகிறவன்—பரவசம் - பரவசமாகும்படி—உருகு ம் - உருகத்தக்க —அன்புறு - அன்புள்ள —வசவன் - வசவண்ணன். எ - று. உழவர்நெறியைநாடுதல்போன்று வசவண்ணன் குரவன்வரனாடுறுமெனமுடிக்க. (௨)

பொன்னனைமை கதிர்வீசணை புரிந்தீரறு பருவம்
பின்னுயின யான்செய்தொழில் பிள்ளைத்தொழி லாயிற்
றெந்நாள்வரு மெனையாளுடை யெம்மானறி யேனென்
றுன்னுவரு துயரோடுள முளைந்தான்வினை களைந்தான்.

(இ - ள்.) பொன்னனைமை - பொன்னாலியற்றப்பட்டு—கதிர்வீசு - கிரணங்களைவீசுகின்ற —அணைபுரிந்து - சூனியசிம்மாசனஞ்செய்து —ஈரறு பருவம் - பன்னிரண்டுமாதம்—பின்னுயின - கழிந்தன— இதனால் யான் செய்தொழில் - யான்செய்தவிந்தவேலை—பிள்ளைத்தொழிலாயிற்று - சிறுபிள்ளைவேலையாயிற்று —எனையாளுடையெம்மான் - என்னையாளாகவுடையவல்லமன்—எந்நாள்வரும் - என்றைக்குவருவனோ—அறியேனென்று - தெரியவில்லையென்று—உன்னு - நினைத்து —வருதுயரோடு - மிக்கதுயரோடு —உளமுளைந்தான் - மனநலிந்தனன் —வினைகளைந்தான் - ஒருங்கேவினையொழித்த வசவண்ணன். எ - று. உன்னு - செய்யாவென்னும் வாய்பாடு. (௩)

இவ்வாறமர் நாளோர்பக லெமையாளுடை வசவன்
செவ்வாறுசென் மனத்தல்லம தேவன்வர ரேன்றிற்
றவ்வாறது நிகழ்வுற்றவ னார்வந்தனை யொருநா
னெவ்வாறுனை செய்வன்பணி யிறையுஞ்சொல வரிதால்.

(இ - ள்.) இவ்வாறமர்நாள் - இவ்வாறிருக்குநாளில் —ஓர்பகல் - ஓர் தினம்—எமையாளுடைவசவன் - எம்மையாளாகவுடைய வசவண்ணன்—செவ்வாறுசெல்மனத்து - செவ்வையாகச்செல்லுமனதினால் —அல்லமதேவன்வரரேன்றிற்று - அல்லமதேவன்வரவுகாணப்பட்டது—அவ்வாறுநிகழ்வுற்றவன் - அவ்வாறுநடந்தவன்—ஆர் - எவனோ —வந்தனை - அவனதுவழிபாட்டை—ஒருநான் - யாரொருவனோ —எவ்வாறுனைசெய்வ

ன் - எங்ஙனந்தெரிந்துசொல்லுவன்—பணியிறையும் - ஆதிசேடனாலும்—சொலவரிது - சொல்லுதற்கரிதாம். எ - று. ஆல் - அசை. வசவண்ணனதுவழிபாட்டையறிந்து கூறுதலெவராலுங் கூடாதென்பதுகருத்து.

வலமாடின விழிதோளருள் வசவற்கதி தூரஞ்
செலுமாடவன் வருநாள்விழி யிடமாடிய செயல்வாய்
குலமாதுள மெனவேமகிழ் கொண்டன்புநி றைந்து
மலமாயைக ரெக்குஞ்சென்ன வசவற்கிது புகல்வான்.

(இ - ள்.) அருள்வசவற்கு - கிருபையுள்ளவசவண்ணனுக்கு —விழிதோள் - கண்களும்தோள்களும்—வலமாடின - வலந்துடித்தன—அதிதூரஞ்செலுமாடவன் - அதிதூரஞ்சென்றநாயகன் —வருநாள் - திரும்புகாலையில்—விழி - கண்கள்—இடமாடியசெயல்வாய் - இடதுபக்கந்துடித்த செய்கையில் —குலமாது - குலத்திற்பிறந்தநாயகியின் —உளமெனவே - மனம்போல—மகிழ்கொண்டு - மகிழ்ந்து—அன்புநிறைந்து - அன்பதிகரித்து—மலமாயைகரெக்கும்-மலத்தையும்மாயையுமொழித்த —சென்னவசவற்கு - சென்னவசவதேவனுக்கு—இதுபுகல்வான் - இதனைச்சொல்லுவான். எ - று. பொருள்கவர்வான் அதிதூரஞ்சென்ற நாயகன்திரும்புழி விழியிடந்துடித்த குலமாது மகிழ்வாள்போன்று வசவண்ணன் தனதுவிழி தோள் வலமாடினதைச் சென்னவசவனுக்கு வியப்புற்றிதனைச் சொல்லினனென்க. (௫)

வேறு.

நற்குறி பலவு மிற்றை நாணிகழ் கின்ற வென்பால
வற்கலை முனிவர் போற்றும் வசவவந் நிகழ்ச்சி யானும்
பிற்பெறு பயன்யா தென்று பெருந்தகை யின்வ நின்ற
சிற்பர முணர்ந்த சென்ன வசவதே சிகனு ரைப்பான்.

(இ - ள்.) நற்குறிபலவும் - நல்லபலசயனங்களும—இற்றைநாள் - இன்றுகாறும்—நிகழ்கின்றவென்பால் - என்னிடத்தில் நடந்துவருகின்றன—வற்கலை - மரவுரியணிந்த—முனிவர்போற்றும் - ரிஷிகளால்துதிக்கப்பெற்ற—வசவ - வசவண்ணதேவனே —அந்நிகழ்ச்சியால் - அங்ஙனம் நடந்துவருதலால்—நாம்பிற்பெறுபயன் - நாம்பின்னாலடையும்பிரயோசனம்—யாதென்று - என்னவென்று —பெருந்தகையின்வ - வசவண்ணன் கேட்க—நின்ற - இவர்க்கெதிரினின்ற—சிற்பரமுணர்ந்த - உண்மைநிலையையுணர்ந்த—சென்னவசவதேசிகன் - சென்னவசவேசனென்போ

ன்—உரைப்பான் - சொல்லுவன். எ - று. அந்நிகழ்ச்சியாலெனச் சுட்டுதலால் நிகழ்கின்றவென்னலை அஃறிணைப் பன்மைவினை முற்றாக்கிஷும்.(கூ)

ஐயவிந் நிமித்தந் தன்னா லல்லமன் காண்பை யின்று
மெய்யுரை யிதுகா ணென்று விடுத்தனன் மருக னெங்கள்
கையுறு மமுத னன்றான் கருதிய படிவிண் ணப்பஞ் [றான்.
செய்யவுண் மகிழ்வு பூத்துச் செயல்செய்வார்க் குரைக்க லுற்

(இ - ள்.) ஐய - ஐயனே—இந்நிமித்தந்தன்னால் - இந்தவேதுவினால்—இன்று - இப்போது—அல்லமன்காண்பை - அல்லமதேவனைக்காண்பாய்—மெய்யுரையிதுகாணென்று - இதுசத்தியவசனமென்று—மருகன் - மருமகனாகியசென்னவசவேசன்—விடுத்தனன் - விடைகொடுத்தனன்—எங்கள்கையுறும் - நமதுகையிற்கிடைத்த—அமுதனன் - தேவாமிர்தம்போல்பவனாகிய வசவண்ணன்—தான்கருதியபடி - தானினைத்தவண்ணம்—விண்ணப்பஞ்செய்ய - விடைகொடுக்க—உண்மகிழ்வுபூத்து - உள்ளமகிழ்ந்து—செயல்செய்வார்க்கு - ஏவல்புரிபவர்களுக்கு—உரைக்கலுற்றான் - சொல்லத்தொடங்கினன். எ - று. சென்னவசவேசன் நினதுகுறிப்படி இன்றேநடக்குமெனக்கூற வசவண்ணன் வியப்புற்றுத் தன்தேவலாளிகளுக்குத் தெரிவித்தனனென்க. (எ)

உடம்பெனும் வனத்தி னின்ற வுயிரெனுங் கன்னி தன்னைத்
தொடர்ந்திசை மணத்தாற் சேர்ந்த துணைவனல் லமனின் றெய்து
மடைந்தருள் கல்யா ணத்தை யணிமினென் றெந்தை கூற
நடந்தனர் நன்றென் றன்னார் நகரியோர்க் குணர்த்தி னரால்.

(இ - ள்.) உடம்பெனும்வனத்தில் - தேகமென்னுங்காட்டில்—நின்ற - உதித்துநின்ற—உயிரெனுங்கன்னிதன்னை - உயிரென்கின்றகன்னிப்பெண்ணை—தொடர்ந்து - சம்பந்தங்கொண்டு—இசைமணத்தால் - வேதவிதிக்கிசைந்து செய்தமணத்தால்—சேர்ந்த - புணர்ந்த —துணைவனல்லமன் - நாயகனாகியஅல்லமதேவன்—இன்றெய்தும் - இன்றேவருவன்—அடைந்தருள் - அவனெழுந்தருளத்தக்க—கல்யாணத்தை - கல்யாணபுரியை—அணிமினென்று - அலங்கரியுங்களென்று —எந்தைகூற - எமது தந்தையாகிய வசவண்ணன்சொல்ல—நன்றென்று - அங்ஙனஞ்செய்வோமென்று—நடந்தனர் - போய்விட்டார்கள்—அன்னார் - அங்ஙனம்போயினோர்—நகரியோர்க்கு - பட்டணத்திலுள்ளவர்களுக்கு—உணர்த்தினர் -

தெரிவித்தனர். எ - று. ஆல் - அசை. உடம்பெனும்வனம், உயிரெனுங் கன்னி, துணைவனல்லமன், இவை உருவகம். இங்கே உடம்பெனல் உபாதித்திரியத்தையும், உயிரெனல் பிரியத்தையும், துணைவனெனல் ஞப்தியையுமென்ப் பொருள்கொள்க. காமக்குரோதாதி கள்ளர்வசித்தற்கிடமாதலின் உடம்பை வனமெனவும், தற்பிரிய மென்றுங் குன்றுததனல் உயிரைக் கன்னியெனவும், தற்பிரியத்தை யறிந்துபுணர்வோன் பிரத்தியேகாத்மா வாதலின் துணைவனல்லம னெனவும் கருதிக் கூறியதாகப் பெற்றும். (அ)

அலர்கதிர் ஞாயி றூரு மணிநெடுந் தேர்க்கொ டிஞ்சி
யிலகுற வதிற்றூக் காமன் மேலள வொருசா ணிற்பப்
பலர்புகழ் மணிமா டத்துப் பறக்குமொண் கிளியொ ழுங்கி
லிலைசெரு கியப சும்பூந் தோரண மிசைய வார்த்தார்.

(இ - ள்.) அலர் - பரவிய —கதிர் - கிரணங்களையுடைய —ஞாயிறு - சூரியன்—ஊரும் - தவழ்கின்ற—மணி - மணிகட்டிய—நெடுந்தேர் - நீண்டதேரின்—கொடிஞ்சி - முகடு—இலகுற - பிரகாசிக்க —அதிற்றூக்காமல் - அதில்தாக்கவொட்டாமல்—மேல் - அதற்குமேல்—அளவொருசாணிற்ப - ஒருசாணளவுநிற்க—பலர்புகழ் - பலராலும்புகழப்பெற்ற—மணிமாடத்து - அழகியவுப்பரிகையில் —பறக்கும் - பறக்கின்ற —ஒள் - அழகிய—கிளியொழுங்கில் - கிளிவரிசையைப்போல—இலை - இலைகளினற்செய்து—செருகிய - சொருகியிருக்கின்ற —பசும் - பசிய—பூந்தோரணம - பூந்தோரணங்களை—இசைய - அலங்காரத்துக்கிசைய —ஆர்த்தார் - கட்டினூர்கள். எ - று. கொடிஞ்சி மேற்பரப்பெனினுமமையும். ஒழுங்கில் ஐந்தாமவேற்றுமை யுவமைப்பொருள். (௯)

போதக குருநம் மூருட் புகக்கொடி கட்ட னன்றென்
றாதர வொடும சைத்தா ரவிர்கொடி மாடத் தும்பர்
சோதிதன் னிரத மென்றுஞ் சுழன்மென கருதல் போல
வீதியு ளாடி யேறுடு விளங்குறு நிலத்தேர் செய்தார்.

(இ - ள்.) போதககுரு - போதகாசிரியர்—நம்மூருட்புக - நமதூரிற்பிரவேசிக்க —கொடிகட்டனன்றென்று - கொடிகட்டுதல்நல்லதென்று— ஆதரவொடும் - ஆசையோடு —அவிர்கொடி - விளங்காநின்றகொடிகளை —மாடத்தும்பர் - உப்பரிகைகளின்மேல்—அசைத்தார் - கட்டினூர்க

ன் —சோதிதன்னிரதம் - சூரியனதிரதம் —என்றுஞ்சுழன்மெண - வ ழியில்லாமலெப்போதுஞ்சுழன்றுகொண்டிருக்குமென்று —நகுதல்போ ல - அவமதிப்பதுபோல—வீதியுள் - தெருவில் —ஆடியோடு - விளையா டிக்கொண்டோடுகின்ற—விளங்குறு - பிரகாசம்பொருந்திய—நிலைத்தேர் செய்தார் - நிலைத்தேரைச்செய்தனர். எ - று. சூரியனதுரதம்நிலையின் றிச்சுழல்வதால்வீதியினிலைத்தேர் செய்தனரென்க. (௧0)

குங்கும நறிய சந்தங் குழைத்ததண் பனிநீர் சிந்திப்
பொங் கெழின் மறுக னைத்தும் புதைசெழுஞ் சேறு செய்தார்
மங்கல மனைமுன் பந்தர் மணப்பந்த ருண்மை யாகக்
கொங்கவி ழிதழ்ந றும்பூங் கோதைக டூக்கி னரால்.

(இ - ள்.) குங்குமம் - குங்குமத்தையும் —நறியசந்தம் - மணமுள்ளச ந்தனத்தையும்—குழைத்த - கலந்த—தண்பனிநீர் - குளிர்ச்சிபொருந்தி யபன்னீரையும்—சிந்தி-இறைத்து—பொங்கெழில் - மிக்கவழகையுடை ய—மறுகனைத்தும் - வீதிகளையெல்லாம் —புதை - கால்புதையத்தக்க— செழும் - செழுமையாகிய—சேறுசெய்தார் - சேறாக்கினர் —மங்கலம் - மங்கலகரமுள்ள—மனைமுன்பந்தர் - தலைவாயிலுள்ளபந்தலில் —மணப்ப ந்தர் - கல்யாணப்பந்தலைப்போல —உண்மையாக - நிசமாக—கொங்கவி ழ் - வாசனைவீசுகின்ற—இதழ் - இதழ்களையுடைய—நறும்பூங்கோதை கள் - நல்லபூமாலைகளை —தூக்கினர் - கட்டினார்கள். எ - று. ஆல் - அசை. அந்தப்பட்டணத்தார் சுகந்தகலவைநீரால் வீதிகளைச்சேறாக்கித் தங்கள்தங்கள் வீட்டுத்தலைவாயிலில் மணப்பந்தலைப்போலப் பூமாலைகளா லலங்கரித்தார்க ளென்க. (௧௧)

வயலிடஞ் சேர்ந்து நின்ற வாழையுங் கரும்பும் பாளை, யுய ரிளங் கமுகு மொன்றோ டொன்றுநின் றுசாவித் தாமெல், லியரா ருந் தொடைதோள் கண்ட மெனுமுறுப் பழகி ரக்குஞ், செயு லில்வந் தடைந்த வென்னச் செழுங்கடைத் தலைமு னார்த்தார்.

(இ - ள்.) வயலிடம் - வயல்களில்—சேர்ந்துநின்ற - விளைந்துநின்ற— வாழையும் - வாழைமரங்களையும்—கரும்பும் - கரும்புகளையும்—பாளை - பாளைகளையுடைய—உயர் - உயர்வாகிய—இளங்கமுகும் - இளமையாகிய பாக்குமரங்களையும்—ஒன்றோடொன்றுநின்று - ஒன்றோடொன்றுகூடி நின்று—உசாவி - பேசிக்கொண்டு—தாம் - தாங்கள்—மெல்லியர் - ஸ்த்

ரீகளின்—அருந்தொடை - அரியதொடைகளும்—தோள் - தோள்களும்—கண்டமெனும் - கண்டமுமென்கின்ற—உறுப்பழகு - அவயவங்களினழகை—இரக்குஞ்செயலில் - இரந்துகேட்குஞ்செயலினால்—வந்தடைந்தவென்ன - வந்தடைந்தாற்போல—செழுங்கடைத்தலைமுன் - செழுமையாகிய கடைத்தலைவாயிலின்முன்—ஆர்த்தார் - கட்டினார்கள். எ - று. வாழை, கரும்பு, கமுகு, இவைகள் மாதர்களது தொடை தோள் கண்டங்களின் அழகையிரந்துகேட்டற்கு வந்தடைந்தாற்போற்காண இவற்றைக் கடைத்தலைவாயிலின்முன் கட்டினதாகக் குறிப்பித்தார். வாழை கரும்பு கமுகும், தொடை தோள் கண்டமும், நேர்நிரனிறையணி. (௧௨)

இலையினாற் பொலிந்த வாழை தொடையினா லெய்தும் பேறு
முலையினாற் பெறுவ மென்று முன்னிவந் திருத்தல் போலக்
கலையினாற் சிறந்த வல்குற் கயற்கணார் நிறைகு டங்கள்
விலையினாற் சிறந்த செம்பொன் வேதிகை மீது வைத்தார்.

(இ - ள்.) இலையினாற்பொலிந்தவாழை - இலைகளினாற்றலையினிறைவுற்றவாழையானது—தொடையினால் - மாதரதுதொடைகளினால்—எய்தும்பேறு - அடையும்பயனை—முலையினால் - தனங்களினால்—பெறுவமென்று - அடைவமென்று—முன்னிவந்திருத்தல்போல - நினைத்துவந்திருத்தல்போல—கலையினால் - வஸ்திரங்களினால்—சிறந்தவல்குல் - சிறப்புற்றுக்காணு நிதம்பத்தையும்—கயற்கணார் - சேற்கெண்டைபோன்ற கண்களையுமுடையமாதர்கள்—நிறைகுடங்கள் - நீராணிறைந்தகுடங்களை—விலையினாற்சிறந்த - விலைகாரணத்தாற்சிறப்புற்ற—செம்பொன் - சிவந்தபொன்னாற்செய்த—வேதிகைமீது - திண்ணைகளின்மேல்—வைத்தார் - வைத்தனர். எ - று. மாதரதுதொடையாலாயபயனை வாழைமரங்களெய்தாற்போல யாமும் மங்கையரதுதனங்களாலாய பயனையெய்துதுமென்றெண்ணி வந்ததுபோலத் தோற்றுமாறு மாதர்கள் நிறைநீர்க்குடங்களைக் கடைத்தலைத்திண்ணைகளில் வைத்தனரெனக் கொள்க. (௧௩)

மனத்திரு ளகற்று நின்ற மணிச்சுடர் வரவு பார்ப்ப
நினைத்துவந் திருத்தல் போல நெடுமணிக் கதவு வாய்தன்
முனைத்திரு விளக்கு வைத்தார் முகிழ்முலைக் கருநெ டுங்கட்
டனிச்சிலை நுதற்பூங் கோதைச் சரிகுழற் றளிர்க்கை நல்லார்.

(இ - ள்.) மனத்திருள் - மனப்பிராந்தியை—அகற்றுநின்ற - நீக்கத்தக்க—மணிச்சுடர் - அழகியதீபம்போன்றவல்லமனது—வரவுபார்ப்ப - வ

(இ - ள்.) பதியும் - பரமும் — அப்பதியாறசானும். அ ந்தப்பிரத்தாற்கா ணத்தக்க—பசுவும் - சீவனும்—அப்பசுவின் ஞானம் - அந்தவுயிரின்வுணர் வால்—பொதியும் - நிறையப்பெற்ற—ஐம்பாசந்தானும் - ஐந்துவிதபாச மும்—பொருளென - பொருளாக—வழக்கிறகூறும் - வழக்கிடுகின்ற— விதியும் - நியமங்களும்—அப்பாசம்பொய்யாய் - அப்பாசமும்பொய்யாய்ப் போமாறு—வேறறும் - பேதபாவநீங்கததக்க—வீடும் - முத்தியையும்— ஓதி - போதித்து—மதிமயக்கறுத்த் - சித்தப்பிராந்தியைநீக்கிய—சென்ன வசவனும் - சென்னவசவதேவனும்—மருங்குசென்றான் - கூடப்போயி னன். எ - று. பதி, பசு, பாசம, விதி, வீடு என்பவற்றின் வழக்கையறு ததுச் சிததநிலையுறச்செய்யத்தக்க சென்னவசவனெனப் பொருள்கொ ளக. பதியையன்றிப்பசுவும் பசுவையுன்றிப்பாசமும் இன்றெனலைமறுத் து மூன்றும் பொருளாகவழக்கிவோா தீர்ப்பையும் முதகிநிலையையுநதெ ரிவித்து இவையனைத்துஞ் சித்தபிராந்தியெறாககாட்டி ஐயநதிரிபு அகற றினதாகக் கோடல் சிறப்பு. பதியு மபபதிய/றகானும் பசுவுமென்றதனு ல பிம்பப பிரதிவிம்பமாகபபெறறும் பசு பதியையன்றித தானேர்முதல ன்றென வுணருஙகாறும், பந்தமும் வீடுந தவிாதலொணணுதெனலை மதி மயக்கெனலு மமையும. பாசமித்தையாகாவிடதது, பேதபாவநீஙகாது. அதுநீஙகாவிடத்து முத்தியெய்தல் கூடாமையின், அப்பாசம் பொய்யாய் வேறறும் வீடென்றாா. இஙஙனமிருகக மூததியிலு மும்முதலுமுண்டெ னல் மூடம. அன்றேல, "தனியேயிருப்பதறகெண்ணினேனெணணமிது சாமிநீயறியாததோ." எனசசானறோா கூறுதறகேதென்னை. விரிக்கிற பெருகுமாதலிற சுருககியுரைத்தாம். உடன்பாடெதிாமறையை விதிவா ககியமெனறகு விதியென்றாா. இங்கேபாசமெனல் திரிசியததை. அத்தி ரிஸ்யமே செகசீவபரமென்க. ஐம்பாசமாவன; தமம, மாயை, மோகம, அவித்தை, பொய்யுருவி என்பன. பதிமுதல வீடுகாறும உமமைகொடு த்தது மதிமயக்கெனறகு. (௧அ)

எமமடி மாசு முகக ணிறைபவ னடிமை பூணடோா
தம்மடி மாசு நீக்குந தன்றொழி னெறிவ் மூாத
செம்மடி வால மாச்ச தேவனு மன்பு தாயின்
மும்மடி யாகு நந்தி முதல்வனே டருகு சென்றான்.

(இ - ள்.) எம் - நம்முடைய—அடி - மூலமாகின்றுள்ள—மாசும் - அ ஞ்ஞானத்தையும்—முக்கண - திரிநேத்திரத்தையுடைய—இறைவன் - பரமசிவனது—அடிமைபூண்டோாதம் - அடியார்களுடைய—மடிமாசு -

வஸ்திரவழுக்கை—நீக்கும் - நீக்குகின்ற—தன்றொழில் - தனதுதொழிலின்—நெறிவழாத - நெறிநின்றகலாத—செம் - நல்ல—மடிவாலமாச்சதேவனும் - மடிவாலமாச்சதேவனென்பவனும்—அன்பு - அன்பில்—தாயின் - பெற்றதாயினும்—மும்மடியாகும் - மூன்றுபங்குள்ள—நந்திமுதல்வனேடு - வசவண்ணனேடு—அருகுசென்ருன் - பக்கத்திற்சென்றனன். எ - று. எனவே, மடிவாலமாச்சனுங் கூடப்போயினனென்ருயிற்று. ( )

சங்கரன் சடையிற் பாம்புந் தவழ்ந்தெதிர் கிடந்த பிள்ளைத்
திங்களுஞ் செய்த வொப்பச் செங்கைமா னவச மாகக்
கங்கையுந் திரைய டங்கக் கானமுன் பாடி யீச
கிங்கரன் றனது பாங்கர் கின்னரப் பிரமன் சென்ருன்.

(இ - ள்.) சங்கரன் - பரமசிவனது —சடையிற்பாம்பும் - சடையிலுள்ளபாம்பும்—தவிழ்ந்தெதிர்கிடந்த - எதிரில்தவிழ்ந்திருக்கின்ற—பிள்ளைத்திங்களும் - மூன்ரும்பிறையும்—செய்தவொப்ப - செய்ததுபோலுமிருக்கின்ற—செங்கைமான் - சிவந்தகையிலுள்ளமானும் —அவசமாக - பரவசப்படவும்—கங்கையும் - கங்காநதியும்—திரையடங்க - அலையடங்கிநிற்கவும்—கானமுன்பாடி - முன்னேயிசைக்ஞான நயங்களைப்பாடிக்கொண்டு—ஈசகிங்கரன்றனது - ஒருவகைச்சாதியடியானது —பாங்கர்-பக்கத்தில்—கின்னரப்பிரமன் - கின்னரப்பிரமனென்போன்—சென்ருன் - போயினன். எ - று. கானம்; இசைக்ஞானம். பாம்பும் பிள்ளைத்திங்களும் மானும் பரவசமாகவும் கங்கையலையானது நிற்கவும் பாடிக் கின்னரப்பிரமன் சென்ருனென முடிக்க. இவை யெண்ணும்மை. (உ0)

தண்டினர் கரகக் கையர் சடையருத் தூள னத்தர்
புண்டர நுதலர் கற்ருேய் பூந்துகி லுடையர் நீல
கண்டனை யகம்பு றத்துங் கண்டவர் வினையி னீங்கித்
தொண்டுறு நெறியி னின்ருேர் சூழ்ந்தன ரெண்ணி லாரே.

(இ - ள்.) தண்டினர் - திரிதண்டமுடையோரும்—கரகக்கையா - கமண்டலமேந்திய கரமுடையோரும்—சடையர் - சடையையுடையோரும்—உத்தூளனத்தர் - அங்கமுழுதும் விபூதிதூளித்முடையோரும—புண்டரநுதலர் - திரிபுண்டரமணிந்த நெற்றியையுடையோரும்—கற்ருேய் - காவிக்கல்லிற்ருேய்ந்த —பூந்துகிலுடையர் - அழகியவஸ்திரமுடையோரும்—நீலகண்டனை - நீலகண்டமுடையபரமசிவனை—அகம்புறத்துங்கண்

டவர் - அகம்புறத்திலொருபடித்தாக்கண்டவர்களும் —வினையினீங்கி - இருவினையினின்றுநீங்கி —தொல்லைநெறியினின்றோர் - சிவதொண்டு நெறியினின்றவர்களும்—எண்ணிடார் - அளவிறந்தவர்கள்—சூழ்ந்தனர் - சூழ்ந்துகொண்டனர். எ - று. புண்டரம்; விபூதியால் மூன்றுகீறாக நெற்றியிலணிவது. அகம்புறத்திசனைக் காண்டலாவது; சொப்பிரகாசமாதலை யென்க. (உக)

தோள்வலந் துடித்த தின்று சுடரிலை வேற்பு ணென்று [பேம்
கோள்வலங் கொள்ளுஞ் செம்பொற் குன்றெனு மார்பிற் காண
வேள்வலங் கொண்ட நெற்றி விழியிறை யருளா லென்னும்
வாள்வலங் கொண்ட சேனை மறவர்வா ரிதிபோற் சூழ்ந்தார்.

(இ - ள்.) இன்று - இன்றைக்கு—தோள்வலந்துடித்தது - வலது தோள்துடித்தது—சுடர் - பிரகாசம்பொருந்திய —இலை - இலைபோன்ற—வேற்புணென்று - வேலாலெய்தியவோர்புண்ணை—கோள்வலங்கொள்ளும் - நவக்கிரகங்களும்வலமாகவரப்பட்ட—செம் - சிவந்த—பொற்குன்றெனும் - பொன்மலையென்னத்தக்க—மார்பிற்காண்பம் - மார்பினிடத்திற்காணுதும்—வேள்வலங்கொண்ட - மன்மதனதுவலிமைபக்கவர்ந்த—நெற்றிவிழி - நெற்றிக்கண்ணையுடைய —இறையருளால் - பரமசிவனதருளால்—என்னும் - என்றுகூறும்—வாள்வலங்கொண்ட - வாளைவலதுகையிலேந்திய—சேனைமறவர் - மறவர்சேனைகள் —வாரிதிபோற்சூழ்ந்தார் - சமுத்திரம்போற்சூழ்ந்தனர். எ - று. தோள்வலந்துடித்ததால் நம்மோடெதிர்த்தோர்மார்பில் இறையருளால் வேற்புணொன்றுகாண்பமென்று சொல்லுகின்ற மறவர்சேனை சமுத்திரம்போற் சூழ்ந்தனவென்க. (உஉ)

எங்கள்வாழ் வனைய நந்தி யெழுந்தருண் மறுகி னூடு
மங்குல்வா னிரவிப் புததேண் மணிநெடுந் தேர்ப்பைங் கிள்ளை
தங்கள்யாற் றாட்கு டைந்து தரிப்பரி நாகி யோட
வெங்கண்மா ஞால மெல்லா மதிர்தர நடந்த வம்மா.

(இ - ள்.) எங்கள்வாழ்வனைய - எங்கள்வாழ்வையொத்த—நந்தியெழுந்தருள் - வசவண்ணன்புறப்பட்ட —மறுகினூடு - வீதியில் —மங்குல் - மேகங்கள்தங்கிய—வான் - ஆகாயத்திலுள்ள—இரவிப்புத்தேள் - சூரியபகவானது —மணி - மணிகட்டிய —நெடுந்தேர் - நீண்டதேரிலுள்ள—

பைங்கிள்ளை - பசியகிளிப்பிள்ளைகள் — தங்கள்காற்றாட்கு - தங்கள்காலி லெழுந்தூசுகளுக்கு — உடைந்து - மெலிந்து — தரிப்பரிதாகி - சகிக்கக்கூடாமல் — ஓட - ஓடும்படியாகவும் — அங்கண் - அழகியவிடத்தையுடைய — மாஞாலமெல்லாம் - பெரியபூமிமுழுவதும் — அதிர்தர - அதிரும்படியாகவும் — நடந்த - நடந்தன. எ - று. சேனைகள்; தோன்றுவெழுவாய். அம்மா; வியப்புக்குறிப்பு. (உ௬)

அரவொடு மண்சு மக்கு மடுகளி றெட்டோ டுமபோர்
பொரவொரு களிநல் யானை போதுமென் றெண்ணி லாத
விரவொடு புரைநி றத்த வீர்ங்கவுட் சிறுகட் டூங்கு
கரவளை வெண்ம ருப்புக் கடாக்களி றெழுந்த வன்றே.

(இ - ள்.) அரவொடு - ஆதிசேஷனோடு — மண் சுமக்கும் - பூமியைச்சுமக்கின்ற — அடு - கோரநகையைந்த — களிறெட்டோடும் - அஷ்டதிக்கஜங்களோடும் — போர்பொர - யுத்தஞ்செய்தற்கு — களி - களிப்புபொருந்திய — நல் - நல்ல — ஒருயானைபோதுமென்று - ஒருயானையேபோதுமென்று — எண்ணிலாத - அளவிறந்த — இரவொடுபுரை - இரவுக்கொப்பான — நிறத்த - நிறத்தினையும் — ஈர்ங்கவுள் - குளிர்ச்சிபொருந்தியகன்னத்தையும் — சிறுகண் - சிறியகண்களையும் — தூங்குகரம் - தொங்குகின்றதும்பிக்கையையும் — வளை - வளைந்த — வெண்மருப்பு - வெண்மையாகியதந்தங்களையும் — கடாம் - மதஜலத்தையுமுடைய — களிறு - யானைச்சேனைகள் — எழுந்த - எழுந்திருந்தன. எ - று. அன்று - ஏ - அசைகள். அஷ்டகஜங்களையும் எங்களிலொருயானையே வென்றுவிடும் என்றுசொல்லும்படியானதோற்றத்தோடு யானைச்சேனைகளெழுந்தனவென்க. யானைகளென்னும் விசேஷியத்துக்கு நிறம், கவுள், கண், கரம், மருப்பு, கடாம், விசேஷணமென்க. எழுந்தவென்னும் அஃறிணைப்பன்மை வினைமுற்றுக் களிறென்பதை அஃறிணைப்பன்மைப் பெயராக்குக. (உ௭)

ஆனைமேற் கொண்டும் வாவு மாடல்வெம் பரியி வர்ந்துங்
கூனல்வேய் தொடுத்து ஞான்ற குச்சுடைச் சிவிகை யூர்ந்துஞ்
சேனைகா வலரெண் ணில்லார் சிலைமதன் கோல மென்ன
மானவேன் மன்னர் மன்னன் மந்திரி மருங்கு சென்றார்.

(இ - ள்.) ஆனைமேற்கொண்டும் - ஆனைகளின்மேலேறியும் — வாவும் - தாவுகின்ற — ஆடல் - ஆடுதலையுடைய — வெம் - அதிகவேகமுள்ள — பரி

யிவர்ந்தும் - குதிரைகளின்மேலேறியும்—கூன் - வளைவாகிய—நல்வேய் தொடுத்து - நல்லமூங்கிலைத்தொடுத்து—ஞான்ற - தொங்குகின்ற—குச்சுடை - குச்சுகளையுடைய—சிவிகையூர்ந்து - பல்லக்குகளின்மேலேறியும்—சேனைகாவலர்-சேனாதிபதிகள்—எண்ணில்லார் - அளவிறந்தபெயர்—சிலை - கருப்புவில்லையுடைய—மதன் - மன்மதனது—கோலமென்ன - அழகைப்போல—மானம் - வலியுள்ள—வேல் - வேலைத்தாங்கிய—மன்னர்மன்னன் - ராஜாதிராஜனாகிய விச்சலனது—மந்திரி - மந்திரியாகியவசவண்ணனுடைய —மருங்குசென்றார் - பக்கத்திற்சென்றனர். எ - று. மேற்கொள்ளலும் இவர்தலும் ஏறிநடத்தலையென்க. (உரு)

நலங்கிளர் மதன்கு டைக்கு நகைமணிக் காம்பி லென்ன [மூந்த
விலங்குறு பசும்பொற் காம்போ டெண்ணில்வெண் குடையெ
புலன்களை வென்ற வீரன் போகிய மறுகி லெங்கும
விலங்கினை யன்றி யந்த விலங்கின்வா லாடிற் றன்றே.

(இ - ள்.) நலங்கிளர் - அழகுமிகுந்த—மதன்குடைக்கு - மன்மதனது குடைக்கு—நகை - பிரகாசம்பொருந்திய—மணி - ரத்னங்கள்பதித்த—காம்பிலென்ன - காம்பில்லையென்று—இலங்குறு - பிரகாசிக்கின்ற—பசும்பொன் - பசியபொன்னாலாகிய —காம்போடு - காம்புகளோடு—எண்ணில்வெண்குடை - அளவிறந்தவெள்ளைக்குடைகள்—எழுந்த - வந்தன—புலன்களைவென்ற - ஐம்புலன்களையுஞ்செயித்த—வீரன்போகிய - வசவண்ணன்போகாநின்ற —மறுகிலெங்கும் - வீதிகளிலெங்கும்—விலங்கினை யன்றி-மிருகங்களையல்லாமல் —அந்தவிலங்கின்வால்-அந்தமிருகங்களினதுவால்—ஆடிற்றன்று - ஆடாது. எ - று. ஏ - அசை. மிருகத்தினதுசங்கற்பத்தையன்றி அதன்வாலாடாததுபோல வசவண்ணனதெழுச்சியன்றி இவ்வளவுமெழாதென்பது கருத்து. (உசு)

மாயைதன் றோல்வி யெல்லா மாதர்க்கும் வந்த வன்றோ
நாயகன் றன்னைப் பற்றி நாம்வென்றி கொள்வ மென்று
போயுறு தன்மை போலப் புணர்முலைக் கருநெ டுங்கட் .
டேயுநுண், மருங்குன் மாதர் திரள்பல வெழுந்த வன்றே.

(இ - ள்.) மாயைதன்றோல்வியெல்லாம்-மாயையினதுதோல்விகளனைத்தும்—மாதர்க்கும்வந்தவன்றோ - ஏனையஸ்த்ரீகளுக்கும்வந்தனவல்லவா—நாயகன்றன்னைப்பற்றி - நாயகனைவயமாக்கிக்கொண்டு—நாம்வென்றி

கொள்வோமென்று - நாம்வெற்றியடைவோமென்றெண்ணி —போயுறு தன்மைபோல - போகும்விதம்போல—புணர்முலை - புணரற்கிலையந்தத னங்களையும்—கரு - கறுத்த—நெடுங்கண் - நீண்டகண்களையும்—தேயும்-சுருங்கிய —நுண் - நுட்பமாகிய —மருங்குல் - இடையினையுமுடைய—மாதர்திரள் - ஸ்த்ரீகூட்டங்கள்—பலவெழுந்த - பலவாகவெழுந்திருந்த ன. எ - று. அன்று, ஏ - அசைகள். மாதரென்னும் விசேஷியத்துக்கு முலை, கண், மருங்குல், விசேஷணமெனக். (உஎ)

பரிகளின் முழக்கு மிக்க பல்லிய முழக்கும பூட்கைக்
கரிகளின் முழக்கும் வீரக் கழலொடு செல்லும வெங்கோ
ளரிகளின் முழக்கு மாத ரணிகளின் முழக்குஞ் செங்கைச்
சரிகளின் முழக்கும் விம்மித் தடங்கடல் போன்ற வன்றே.

(இ - ள்.) பரிகளின்முழக்கும் - குதிரைகளின்சத்தமும் —மிக்க - மிகுந்த—பல்லியமுழக்கும் - வாத்தியசத்தமும்—பூண் - பூணைத்தரித்த—கை - தும்பிக்கையையுடைய—கரிகளின்முழக்கும் - யானைகளின்சத்தமும் —வீரக்கழலொடுசெல்லும் - வீரகண்டயத்தோடுசெல்லும் —வெங்கோள் - கொடியவலியையுடைய —அரிகளின்முழக்கும் - சிங்கங்களின் சத்தமும்—மாதர் - ஸ்திரீகளின்—அணிகளின்முழக்கும் - ஆபரணசத்தமும்—செங்கை - சிவந்தகைகளிலணிந்த—சரிகளின்முழக்கும் - வளையல்களின்சத்தமும்—விம்மி - மேற்கொண்டு—தடங்கடல்போன்ற - விரிந்த கடல்முழக்கம்போன்றன. எ - று. அன்று ஏ-அசைகள். அரிகள் புலிக ளெனினு மமையும். (உஅ)

ஆடுவ கவரி யெங்கு மசைவன சிவிறி யெங்கு
மூடுவ குடைக ளெங்கு முழங்குவ வியங்க ளெங்கும
பாடுவ விசைக ளெங்கும் பாய்வன கரிக ளெங்கு
மோடுவ புரவி யெங்கு முயர்வன தூளி யெங்கும்.

(இ - ள்.) கவரி - சாமரைகள்—ஆடுவவெங்கும் - எங்குமாடுகின்றன—சிவிறி-விசிறிகள்—அசைவனவெங்கும் - எங்குமசைகின்றன—மூடுவ குடைகளெங்கும் - குடைகளெவ்விடத்துமூடிகின்றன —முழங்குவவியங்களெங்கும்-வாத்தியங்களெங்கணுமுழங்குகின்றன—பாடுவவிசைகளெங்கும் - எவ்விடத்துமிராகங்கள்பாடப்படுகின்றன—பாய்வனகரிகளெங்கும் - யானைகளெவ்விடத்தும் பாய்ந்தோடுகின்றன—ஓடுவபுரவியெங்கும்-

குதிரைகளெவ்விடத்துந் தாவியோடுகின்றன—உயர்வன தூளியெங்கும் - எவ்விடத்துந் தூசுகள்மேலோங்கிச் செல்கின்றன. எ - று. (உகூ)

கரிகல மசையா நின்ற கவரிக ணுரைகண் மொக்குள்
விரிகுடை மதுகை வீரர் விதிர்க்கும்வா ளுகண்மீன் பாயும்
பரிதிரை முழக்க மார்க்கும் பல்லிய முழக்க மாகப்
பொருகட லெனவெ ழுந்து போயது வசவன் சேனை.

(இ - ள்.) கரி - யானைகள்—கலம் - கப்பலாகவும் —அசையாநின்றகவரிகள் - அசைகின்றசாமரைகள்—நுரைகள் - நுரைகளாகவும்—விரிகுடை - விரிந்தகுடைகள்—மொக்குள் - குமிழிகளாகவும்—மதுகைவீரர் - வலியுள்ளவீரர்கள் —விதிர்க்கும் - அச்சமுண்டாக்கும்—வாள் - கத்திகள்—உகள்மீன் - குதிக்கின்றமீன்களாகவும் —பாயும்பரி - பாயத்தக்ககுதிரைகள்—திரை - அலைகளாகவும்—ஆர்க்கும் - விடாதுசத்திக்கின்ற—பல்லியமுழக்கம் - வாத்தியவொலிகள்—முழக்கமாக-கோஷமாகவும்—வசவன்சேனை - வசவண்ணனதுசேனை—பொருகடலென - மோதுகின்றகடல்போல —எழுந்துபோயது - எழுந்துபோயிற்று. எ - று. ஆக வெனல் கடைநிலைத்தீவகம். இக்கவி விரியுருவகம். சேனை தொகையொருமை. (௩0)

வேறு.

இன்ன வாறெழுந் திரளொடு நந்தியெம் பெருமான்
றன்னை நேர்குரு பரனெதிர் சென்றவன் றுளைச்
சென்னி யால்வணங் குவனெனு மோகையாற் சென்றான்.
துன்னும் வானவர் தொகுதியும் வியப்பொடு துதிப்ப.

(இ - ள்.) இன்னவாறு - இவ்வாறு —எழுந்திரளொடு - எழுந்தசேனைத்திரளோடு—நந்தியெம்பெருமான் - வசவண்ணதேவன்—தன்னை நேர் - தனக்குத்தானேயொப்பரிய—குருபரனெதிர்சென்று - அல்லமனையெதிர்கொண்டுபோய்—அவன்றுளை - அவனதுதிருவடிகளை—சென்னியால்வணங்குவனெனும் - எனதுசிரசினால் வணங்குவேனென்கிற—ஓகையால் - ஆசைப்பெருக்கால் —துன்னும் - மிகுந்த—வானவர்தொகுதியும் - தேவர்கள்கூட்டமும்—வியப்பொடுதுதிக்க - அதிசயித்தோடு துதிக்கும்படி—சென்றான் - போயினன். எ - று. நந்தியெம்பெருமான் சென்று வானவர்துதிப்பச் சேனைத்திரளோடு வீதியிற்சென்றானெனப்

பொருள்கொள்க. சென்றென்பதனை வணங்குவ னென்பதனோடு முடிக்க. (௩௧)

அத்தி றஞ்செலுஞ் செலவினை யகங்குருட் டமணர்
புத்தர் கண்டிவ ரென்கொலோ வறிதெதிர் போதல்
பித்த னென்றுதம் மிறைவனைச் சொல்லுமிப் பேய
ரெத்தி றஞ்செயா ரெனச்சிவ சரணரை யிகழ்ந்தார்.

(இ - ள்.) அத்திறஞ்செலும் - அவ்வாறுபோகும்—செலவினை - போக்கை—அகங்குருட்டமணர் - அறிவிழந்தசமணரும்—புத்தர் - பௌத்தரும்—கண்டு - பார்த்து—இவர் - இந்தவசவண்ணதேவர்—என்கொலோ- என்னமதிகொண்டோ—வறிது - வீணாக—எதிர்போதல் - எதிர்கொண்டுபோதல்—பித்தனென்று - பித்துகொண்டோனென்று—தம்மிறைவனை - தங்களரசனை—சொல்லுமிப்பேயர் - சொல்லுகின்ற விப்பேயர்கள்—எத்திறம் - எவ்வளவுகொடுமைத்திறம்—செயாரென - செய்யமாட்டார்களென்று—சிவசரணரை - சிவனடியார்களை—இகழ்ந்தார் - தூஷித்தார்கள். எ - று. சமணரும் புத்தரும் இங்ஙனம்போதலைக்கண்டு இஃதென்னமதியென்றும், இங்ஙனமிருக்க நமதரசனை பித்தனென்று சொல்லி யிம்மூடர்கள் என்னகொடுமைதான் செய்யமாட்டார்களென்றும் சிவனடியார்களையும் வசவண்ணனையும் நிந்தித்தனரென்க. பொறாமையுடையோர்க்கு எங்ஙனமுண்மை காட்டினும் அப்பொறாமையே தடுக்குமெனக் கொள்க. (௩௨)

மன்னன் விச்சலன் பாலடைந் தருகரெம் மன்னு
நின்ன கர்க்கொரு புதுமையொன் றுற்றது நீகே
ணன்னி மித்தமொன் றெய்திய தேகொடு நந்தி
தன்னி டத்தொரு வன்வரு மென்றெதிர் சாரும்.

(இ - ள்.) மன்னன்விச்சலன்பால் - விச்சலவரசனிடத்தில்—அருகரடைந்து - சமணர்கள்போய்—எம்மன்னு - எமதரசனே—நின்னகர்க்கு - உனதுபட்டணத்திற்கு—ஒருபுதுமை - ஓரதிசயம்—ஒன்றுற்றது - பொருந்தியது—நீகேள் - நீகேளுதி—நன்னிமித்தமொன்று - நல்லவொருசகுனம்—எய்தியதேகொடு - வாய்த்ததையே உண்மையாகக்கொண்டு—நந்தி - வசவண்ணன் —தன்னிடத்தொருவன்வருமென்று - தன்னிடத்திலொருவன் வருவானென்றெண்ணி —எதிர்சாரும் - எதிர்கொண்டுபோகின்

ருன். எ - று. ஒன்றுறுதலை ஒர்பதமாக்குக. வரும், சாரும், என்பவற்றை "பல்லோர்படர்க்கை முன்னிலைத்தன்மையி" லென்னும்விதியால் உயர்திணை யாண்பாலாக்குக. (௩௩)

தண்ட நாயகன் றோள்வலந் துடித்தது தன்னைக்
கொண்டு தான்வருங் குருபர னென்றெதிர் கோடல்
கண்ட வோர்கன விற்பெறு மடிசிலைக் கருதி
யுண்டு போம்விருந் தினர்தமைத் தேடுத லொக்கும்.

(இ - ள்.) தண்டநாயகன் - வசவண்ணன்—தோள்வலம் - வலதுதோள்—துடித்ததுதன்னைக்கொண்டு - துடித்ததுகாரணமாக—வருங்குருபரனென்று - அல்லமன்வருவனென்று—தானெதிர்கோடல் - தானெதிர்கொண்டுபோதல்—கண்டவோர்கனவில் - ஒருவன் தான்கண்டவொரு சொற்பனத்தில் —பெறுமடிசிலைக்கருதி - காணப்பெற்றவுணவை மெய்யெனக்கருதி—உண்டுபோம்-சாப்பிட்டுப்போகத்தக்க—விருந்தினர்தமை-விருந்தினரை—தேடுதலொக்கும் - தேடுவதற்கொப்பாகும். எ - று. தோள்வலந் துடித்தலைக்கண்டு அல்லமனை எதிர்நோக்கிப்போதல்; ஒருவன் தன்கனவிற்கண்ட சாப்பாட்டை விருந்தினர்க்கிடத் தேடுதல்போலுமென்க. (௩௪)

ஒருவன் வந்திடு மெனவெதிர் கடற்படை யொருங்கு
பரவி வந்திடச் செலுமிவன் றன்னைநீ பார்த்துப்
பொருவின் மந்திரக் கிழமைநல் கியவுனைப் போல்வா
ரரவின் வன்றலைப் படிமிசை யிலையென வறைந்தார்.

(இ - ள்.) ஒருவன்வந்திடுமென - ஒருவன்வருவானென்று—எதிர் - அவனுக்கெதிரில்—கடற்படை - கடல்போன்றசேனைகள்—ஒருங்கு - ஒருமிக்க—பரவிவந்திட - தன்னோடுபரவிவரும்படி—செலுமிவன்றன்னை - போகின்றவிந்தவசவண்ணனை—நீபார்த்து - நீயொருபொருளாகமதித்து —பொருவில் - ஒப்பில்லாத—மந்திரக்கிழமை - ஆலோசனையுரிமையை—நல்கிய - கொடுத்த—உனைப்போல்வார் - உன்னையொத்தவர்—அரவின் - ஆதிசேடனுடைய —வன்றலை - வலியதலைமேலுள்ள—படிமிசை - பூமியின்மேல்—இலையெனவறைந்தார் - இல்லையென்று சொல்லினர். எ - று. அரவின் வன்றலைப்படியென்றது ஆதிசேடனாற் சுமக்கப்பட்ட பூமியெனக் கொள்க. உனைப்போல்வா ரிலையென்றதனால்

யோசனையில்லாதவனெனக் குறிப்பிக்கின்றதென்க. ஆலோசனை யுரிமை ; மந்திரிப்பட்டத்தை. (ருரு)

அருகர் வாசகங் கேட்டலு முளம்வியந் தடிகேள்
விரகி னுன்மிகு தண்டநா யகனுமெவ் விளைவு
கருதி னன்கொலோ வறிகில முடிவுறக் காண்பம்
வருக நீரிரு மின்களென் றிருந்தனன் மன்னன்.

(இ - ள்.) அருகர்வாசகங்கேட்டலும் - சமணர்வசனங்களைக்கேட்கவும்—உளம்வியந்து - மனமதிசயித்து—அடிகேள் - சுவாமிகளே—விரகினுன்மிகு - ஆலோசனையின்மிகுந்த—தண்டநாயகனும் - வசவண்ணனும்—எவ்விளைவுகருதினன்கொலோ - எவ்வாறுயபிரயோசனத்தையெண்ணினனோ—அறிகிலம் - யாந்தெரிகிலம்—முடிவுறக்காண்பம் - முடிவுபரியந்தங்காண்பம்—வருக - வரட்டும்—நீரிருமின்களென்று - நீங்களுங்களாசிரமத்திற்போயிருங்களென்றுசொல்லி—இருந்தனன்மன்னன் - அரசன் பேசாதிருந்தனன். எ - று. அடிகேளென்றதனால் அரசன்பால் வந்த வமணர்கள் குருபீடத்தரெனப் பெறும். (ருசு)

தண்ட நாயகன் றனதுளந் தங்குறத் தானத்
தண்ட நாயகன் றன்மனந் தங்கிய தலைவன்
றண்ட நாயகன் றனையிகழ் சமண்செருக் கழியத்
தண்ட நாயக னெதிர்செல நினைந்தனன் றனித்து.

(இ - ள்.) தண்டநாயகன் - வசவண்ணன்—தனதுளந்தங்குற - தனதுள்ளத்திற்றங்கும்படி—தானத்தண்டநாயகன் - தானந்தவசவண்ணனது—நன்மனந்தங்கிய - நல்லிருதயத்திற்றங்கிய—தலைவன் - அல்லமதேவன்—தண்டநாயகன்றனை - வசவண்ணனை—இகழ் - நிந்திக்கின்ற—சமண்செருக்கழிய - சமணரதுசெர்வநசிக்கும்படி—தண்டநாயகனெதிர்செல - வசவண்ணனெதிர்கொண்டுசெல்ல—நினைந்தனன் தனித்து - தானே நினைத்தனன். எ - று. வசவண்ணனுளத்தில் தானும் 'தனதுள்ளத்திலவனும் இருக்கச்செய்த அல்லமன் தன்னைத்தேடிவரும் வசவண்ணனெதிரில் தானேசெல்லத் துணிந்தனனென்க. (ருஎ)

என்னைக் காண்குவ னெவ்வகை செல்வினு மென்று
துன்னற் கோவண மொடுவிரி குஞ்சியுந் தோன்றத்

தன்னைக் காண்குநர் பித்தனென் றெள்ளவென் றனக்குப்
பொன்னைப் போலுநல் வசவனு யகனெதிர் போனான்.

(இ - ள்.) எவ்வகைசெல்லினும் - யானெந்தெந்தக்கோலங்கொண்டு நடிக்கினும் —என்னைக்காண்குவனென்று - வசவண்ணனென்னைக்க ண்டுபிடிப்பானென்று —துன்னற்கோவணமொடு - தனக்கியைந்தகோ வணத்தோடு —விரி - சடைசடையாகவிரிந்திருக்கின்ற —குஞ்சியுந்தோ ன்ற - ஆண்மயிருந்தோன்றவும் —தன்னைக்காண்குநர் - தன்னைப்பார்ப் பவர்கள் —பித்தனென்றெள்ள - பித்துகொண்டோனென்றிகழவும்—எ ன்றனக்கு - அடியேனுக்கு—பொன்னைப்போலும் - பொன்போன்றுவி ளங்குகின்ற—நல் - நல்ல —வசவனுயகனெதிர் - வசவண்ணனுக்கெதிரி ல்—போனான் - போயினான். எ - று. அல்லமன் தோன்ற எள்ளப் போ னான் எனக்கூட்டிமுடிக்க. செல்லினும் என்பதிலும்மை இழிவுசிறப்பு.

வேறு.

மருவினின் றவரிவன் மருள னேயென
விரைவி லிங் ககலக் லெனவி லக்கினு
ரொருவருங் கண்டிறை யுருவு ணர்ந்தில
ருருவு கண்டெள்ளுந ருணர வல்லரோ.

(இ - ள்.) மருவினின்றவர் - நெருங்கிநின்றவர்கள் —இவன்மருளனே யென - இவன்பித்துகொண்டவனேயென்று—விரைவில்-சீக்கிரத்தில்— இங் ககலகலென - இவ்விடத்தைவிட்டுப்போபோவென்று —விலக்கினு ர் - விலக்கினர்கள்—கண்டு - அவரவர்கள்கண்டும்—இறையுரு - அல்லம னதுண்மைவடிவை—ஒருவருமுணர்ந்திலர் - ஒருவருமறிந்திலர் —உருவு கண்டெள்ளுநர் - உருவத்தைக்கண்டிகழ்பவர்கள் —உணரவல்லரோ - அறியவல்லரோ. எ - று. இங்கேவிலக்குதல் சனங்களை. கண்டும் எ ன்பதிலும்மையெஞ்சியது. உருவுகண்டெள்ளுந ரென்பதனால் இறையுரு வுணர்ந்தவரெனப்படுபவர் புகழுநரெனப்பெறும். வல்லரோவென்ப திலோகாரம் எதிர்மறை. (கக)

அல்லம னுயிடை யாட லுன்னியே
பல்லெழு வாயுடைப் பால னுருவன்
கொல்விளை வேடிறனக் குமர னுருவன்
வில்லென் வுடல்வளை விருத்த னுருவன்.

(இ - ள்.) அல்லமன் - அல்லமதேவன் —ஆயிடை - அவ்விடத்தில்— ஆடலுன்னி - விளையாடவெண்ணி —எழுவாயுடை - உருவெழுதற்காதி யாகவுடைய —பல்பாலனுருவன் - பலவிதபேதக்குழந்தையாகுவன் — கொல் - கொல்லுகின்ற—இளம் - இளமையாகிய—ஏறென-ஆண்சிங்கத் தைப்போல—குமரனுருவன் - குமரப்பருவமாகுவன்—வில்லென - வில் லைப்போல —உடல்வளை - கூன்கொண்ட —விருத்தனுருவன் - கிழவனு குவன். எ - று. பல்லெழுவாயுடையென்பதற்கு பல்முளைக்கும் வாயை யுடைய பாலனென்பாருமுளர். வில்லெனவுடல்வளை விருத்தனென்ற தனால் கூனெனக்கொண்டாம். (௪௰)

விஞ்சையர் மகிழ்வுற வீணை யொன்றுகைக்
கஞ்சமென் மலாகொடு கான்ம பாடுவ
னஞ்சன விழிமணி யரிச்சி லம்படி
வஞ்சியர் மனமயல் வளர வாடுவன்.

(இ - ள்.) விஞ்சையர்மகிழ்வுற-வித்தியாதரர்மகிழும்படி —வீணையொ ன்று - ஓர்வீணையை—கை - கையாகிய —மெல் - மெல்லிய —கஞ்சமலர் கொடு - தாமரைமலரிலேந்திக்கொண்டு —கானம்பாடுவன் - இனியராக ம்பாடுவன்—அஞ்சனம - மைதீட்டிய—விழி - கண்களையும்—மணி - ரத் னங்களை—அரி - பருக்காங்கற்களாகவுடைய—சிலம்பு - நூபுரமணிந்த— அடி-பாதங்களையுமுடைய—வஞ்சியர் - ஸ்திரீகளின்—மனம் - மனதில்— மயல்வளர - மோகம்வளர—ஆடுவன் - நடனம்புரிவன். எ - று. கைக் கஞ்சமென்மலர் ; உருவகம். விழி, அடி, இவைவிசேஷணம். வஞ்சியர் ; விசேஷியம். (௪௧)

இந்திர னிவனென யானை மேற்கொளீ
வந்தொரு புடைநரர் மருளத் தோன்றுவன்
பைந்தொடி பெயர்தரு பாணி போலவே
பந்திமுன் முடங்குளைப் பரிந டத்துவன்.

(இ - ள்) இந்திரனிவனென - தேவேந்திரனிவனென்று —யானை மேற்கொளீ - வெள்ளையானையின்மேலேறி—வந்தொருபுடை - ஒருபக் கத்தில்வந்து—நரர்மருளத்தோன்றுவன் - மனிதர்மருண்டுபோகும்படி காணப்படுவன்—பைந்தொடி - பசியவளையல்—பெயர்தரும் - அசையப் பட்ட —பாணிபோல - கையைப்போல—பந்திமுன் - வசவ்வண்ணனுக்கு முன்னே—முடங்கு - முடங்கிய —உளை - கழுத்துமயிரினையுடைய—ப

ரிநடத்துவன் - குதிரையின்மேலேறிநடத்துவன். எ - று. இந்திரனி வனெனத்தோன்றுவன் பாணிபோலப்பரிநடத்துவன் எனமுடித்துப் பொருள்கொள்க. (சஉ)

வானிடைக் கண்டனன் மனையிற் கண்டனன்
சேனையுட் கண்டனன் றெருவிற் கண்டனன்
யானெனக் கடிநக ரெங்குந் தோன்றுவன்
ஞானநற் கண்ணினுற் காணு நம்பனே.

(இ - ள்.) நல் - நல்ல —ஞானக்கண்ணினுற்காணும் - ஞானக்கண்ணி னுல்மாத்திரங்காண்டற்கியைந்த—நம்பன் - அல்லமதேவன்—வானிடைக்கண்டனன்யான் - யானுகாயத்திற்கண்டனன்—மனையிற்கண்டனன் - யான்வீட்டிற்பார்த்தனன்—சேனையுட்கண்டனன் - சேனைகளுக்குட்பார்த்தனன் —தெருவிற்கண்டனன் - யான்வீதியிற்பார்த்தனன் —என - என்றுசொல்லும்படி—கடி - காவலுள்ள—நகரெங்கும் - பட்டணமுழுதும் —தோன்றுவன் - காணப்படுவன். எ - று. யானென்பதை கடைநிலைத்தீபமாக்குக. (சங)

ஆடுநர் தம்முட ளுடு நல்லிசை
பாடுநர் தம்முடன் பாடு மென்மலர்
சூடுநர் தம்முடன் சூடும் வாள் விதிர்த்
தோடுநர் தம்முட ளுேடு மல்லமன்.

(இ - ள்.) அல்லமன் - அல்லமதேவன் —ஆடுநர்தம்முடனுடும்-கூத்தாடுபவர்தம்மொடுகூடியாடுவன் —நல்லிசை - நல்லவிசைக்குானத்தை — பாடுநர்தம்முடன்பாடும் - பாடுபவர்களோடுகூடிப்பாடுவன் —மென்மலர் - மெல்லியமலர்மாலைகளை —சூடுநர்தம்முடன்சூடும் - சூடிக்கொள்பவர்களோடுகூடிச்சூடிக்கொள்வன் —வாள்விதிர்த்து - வாளால்நடுங்கச்செய்து—ஓடுநர்தம்முடனேடும் - ஓடுபவர்களோடுகூடியோடுவன். எ - று. அல்லமன் கடைநிலைத்தீபகம். ஆடும், பாடும், சூடும், ஓடும், இவற்றைப் பல்லோர்படர்க்கையென்னும்விதியால் உயர்திணையாண்பாலாக்குக. விதிர்த்தெனலை உருவியெனப்பொருள் கொள்வாருமுளர். (சச)

பொருவிலா வளநகர் பொருந்து மானிடர்
வரைவிலா வாடலிவ் வகைசெய் திற்பவ

ரொருவரோ பலர்கொலோ வுணர்கி லோமென
வெருவின ரல்லமன் வினோதநோக்கியே.

(இ - ள்.) பொருவிலா - ஒப்பில்லாத—வளநகர் - வளப்பம்பொருந்தியபட்டணத்தில்—பொருந்துமானிடர் - இருக்கின்றமனிதர்—வரைவிலா - அளவில்லாத—ஆடல் - ஆடல்களில்—இவ்வகைசெய்கிறபவர் - இவ்வாறுசெய்கின்றவர்—ஒருவரோபலர்கொலோ - ஒருவரோபலரோ—உணர்கிலோமென - அறியேமென்று—அல்லமன்வினோதநோக்கி - அல்லமனதுவினோதங்களைநோக்கி—வெருவினர் - பயந்தனர். எ - று. மானிடர் அல்லமன்வினோதநோக்கி வெருவினர் எனமுடிக்க. (௪௫)

மண்ணிடை மறைவுறு நிதிய வைப்பினைக்
கண்ணிடு மஞ்சனக் காரன் காண்கைபோ
னண்ணிடு முணர்வுடை நந்தி யெம்பிரா
னண்ணலை யறிந்தன னைய மின்றியே.

(இ - ள்.) மண்ணிடை - பூமியில்—மறைவுறு - மறைந்திருக்கின்ற—நிதியவைப்பினை - தனப்புதையலை—கண்ணிடும் - கண்ணிற்போட்ட—அஞ்சனக்காரன் - மையுடையவன்—காண்கைபோல் - காணுமாறுபோன்று—நண்ணிடும் - அங்கிருந்த—உணர்வுடைநந்தி - மிக்கவிவேகமுள்ளவசவண்ணனென்கிய—எம்பிரான் - எமதுகர்த்தன்—ஐயமின்றி - சந்தேகமில்லாமல்—அண்ணலையறிந்தனன் - அல்லமனையறிந்தனன். எ - று. நிதியவைப்பு இருபெயரொட்டுப்பண்புத்தொகை. (௪௬)

உடம்பெலா முள்ளமா யுருகிக் கண்கணீ
ரடங்குறு தொழுகமெய் விதிர்ப்ப வன்பினாற்
றொடர்ந்தெலா வுயிரையுந் தொண்டு கொண்டரு
ணெடுந்தகா யருளென நிலத்தி றைஞ்சினன்.

(இ - ள்.) உடம்பெலாமுள்ளமாயுருகி - தேகமுழுதுமுள்ளமாகநெக்குருகி—கண்கணீர் - கண்களினின்றுநீரானது—அடங்குறுதொழுக - தடைக்கடங்காதுபெருகவும்—மெய்விதிர்ப்ப - தேகநடுங்கவும்—அன்பினாற்றொடர்ந்து - அன்பினாற்றொடர்வுற்று—எலாவுயிரையும் - எல்லாவுயிர்களையும்—தொண்டுகொண்டருள் - அடிமைகொண்டருளப்பட்ட—நெடுந்தகாய் - சிறந்தகுணமுடையவல்லமனே—அருளென - அனுக்கிரகிப்பா

யென்று —நிலத்திறைஞ்சினன் - பூமியில்விழுந்துவணங்கினன். எ - று உருகுதல்; உடம்புமுழுதுமாகக்காண்டலின் உடம்பெலாமுள்ளமாயுருகி யென்றார். நெடுந்தகாயென்பது பண்புத்தொகைப் புறத்துப்பிறந்தவன் மொழித்தொகை. (௬௭)

தண்டநா யகனிலந் தண்டிற் றாழ்ந்தெழத்
தொண்டரா யவனொடு துன்னி னாரெலாங்
கண்டுநீர் விழியுகக் கசிந்த வன்பினா
லண்டநா யகன்றிரு வடியி றைஞ்சினார்.

(இ - ள்.) தண்டநாயகன் - வசவண்ணன்—நிலம் - பூமியில்—தண்டில் - அடியற்றபனைபோல—தாழ்ந்தெழ - விழுந்தெழுந்திருக்க —தொண்டராய் - அவனடியர்களாய் —அவனொடுதுன்னினாரெலாம் - வசவண்ணனோடுகூடியிருந்தவர்களனைவரும்—கண்டு - பார்த்து —நீர்விழியுக - கண்களினீர்பெருக—கசிந்த - மனநெக்குருகிய —அன்பினால் - அன்பினால்—அண்டநாயகன் - அல்லமனது—திருவடியிறைஞ்சினார் - திருவடியைவணங்கினார். எ - று. தண்டநாயகன், அண்டநாயகன், இவைகாரணவிடுகுறி. (௬௮)

நந்தித னன்பையு நந்தி பால்வரு
மெந்தைதன் னருளையு மென்சொல் வாமெனச்
சிந்தினர் மலர்மழை தேவர் யாவருந்
துந்துமி யதிர்த்தனர் தொண்ட ராரப்பவே.

(இ - ள்.) நந்திதனன்பையும் - வசவண்ணனதன்பையும்—நந்திபால்வரும் - வசவண்ணனிடத்துவந்த —எந்தைதன்னருளையும் - அல்லமனது கிருபையையும்—என்சொல்வாமென - என்னவென்றுசொல்வோமென்று—தேவர்யாவரும் - தேவர்களனைவரும்—சிந்தினர்மலர்மழை - புஷ்பமாரிசொரிந்தனர்—தொண்டரார்ப்ப - அடியார்துதிமுழக்குமேலிட—துந்துமியதிர்ந்தன. - தேவதுந்துமிமுழங்கின. எ - று. அதிர்ந்தன என்பது படர்க்கைப்பன்மை வினைமுற்றாதலின் துந்துமியெனலே படர்க்கைப்பன்மைப்பெயராக்குக. தொண்டரார்ப்பவெனலை "பிறவுமேற்கும் பிற வென்னும்", விதியால் செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாக்குக.

மயலிலா நற்குரு வசவன் வாழ்தரு
மியலினை யல்லம னெண்ணி வந்தருள்

செயலினு லடியவர் திரள்க ளித்தலாற்
கயிலேயே வளங்கெழு கல்லி யாணமே.

(இ - ள்.) முயலிலா - மயக்கமிறந்த —நங்குருவசவன் - நமதுகுருவாகியவசவண்ணன்—வாழ்தருமியலினல் - வாழுந்தன்மையினுலும்—அல்லமனெண்ணிவந்தருள் - அல்லமதேவனெண்ணிவந்த —செயலினல் - செய்கையினுலும் —அடியவர்திரள் - அடியார்களதுகூட்டம் —களித்தலால் - இவற்றைக்கண்டுகளித்தலாலும—வளங்கெழு - மிக்கவளப்பமுள்ள—கல்யாணமே - கல்யாணபுரியே—கைலேயே - கைலேயெனப்படுவதேயாம். எ - று. பேதங்கோடற் கிடமின்மையின் இரண்டிடத்துமேகாரந்தந்தனர். இஃதிவனே யவ னவனேயிவ னென்ருற்போலும். (ரு௦)

தெரியநற் றண்டநா யகன்றன் செய்கையும
பெரியவக் குருபரன் பெருமை தன்னேயுங்
கரியமெய்ச் சமணர்தாங் கண்டு மன்பில
ரரியவற் றரிதழுக் காறு வெல்வதே.

(இ - ள்.) கரிய - கறுப்பான —மெய் - உண்மையையுடைய — சமணர் - சமணர்கள்—நல் - நல்ல —தண்டநாயகன்றன் - வசவண்ணனது—செய்கையும் - செயலேயும்—பெரிய - சிறந்த—அக்குருபரன் - அந்தவல்லமனீது —பெருமைதன்னேயும் - மகிமையையும்—தெரியத்தாங்கண்டும் - தாங்கள்பிரத்தியட்சமாகக்கண்டும்—அன்பிலர் - சற்றுமன்பிலராயினர் —அழுக்காறுவெல்வது - பொருமையைவெல்வது —அரியவற்றரிது - அருமையானவைகளுக்கெல்லா மருமையானது. எ - று. ஏ - அசை. சமணரென வறிதுகூருது கரியமெய்ச்சமணரென்றடை கொடுத்தது; அவர்களது சித்தாந்தபட்சமனேத்தும் பூர்வபட்சமாக்கற்கியைவதினுலும், அவர்களது மெய்ச்சட்ங்குகளனேத்தும் பிறர்வியக்கக்காண்டலூனுங், காமவெகுளி மயக்கங்கள் தாமேநசித்தற்கிடமின்றிய கல்விஞானத்தாலுமென்க. பொருமைபற்றி அரியவிற்றரிதழுக்காறு வெல்வதேயென்ருர். (௫௧)

நந்திர முடிவெனுஞ் சைவ தேசிகன்
வந்தெதிர் தனதுதாள் வணங்கி னுரொடு
செந்திரு மகளுலாந் தெருவுட் போகியே.
நந்திதன் மந்திர நணுகி னரோ

(இ - ள்.) தந்திரம் - எல்லாத்தந்திரங்களிலும்—முடிவெனும் - சைவதந்திரமேமுடிவென்றுகூறும் —சைவதேசிகன் - சைவத்துக்குக்குருபீடமாகியவல்லமதேவன்—வந்தெதிர் - எதிரேவந்து—தனதுதாள்வணங்கினரோடு - தனதடிகளைவணங்கினவர்களோடு —செந்திருமகளுலாம் - இலக்ஷுமிவாசஞ்செய்கின்ற—தெருவுட்போகியே - வீதியிடமாகச்சென்று—நந்திதன்மந்திரம் - வசவண்ணனதுமடத்தில்—நணுகினன் - பிரவேசித்தனன். எ - று. அரோ - அசை. சைவதேசிகன் போகி நணுகினன் எனக்கூட்டிப் பொருள்கொள்க. சரியை கிரியை யோகநெறித்தா விதிநிடேதங்கள்முரணாது பரஞானம், அபரஞானம், ஸ்திரஞானம் இவையெனவிளக்கித் தானேதானாக்கற்கியைந்த தந்திரமாதலின் சைவதந்திரமே முடி க்கூறுவரெனப் பெற்றாம். (௫௨)

தேவரு முனிவருஞ் சித்த ராகிய
யாவரு மிதனிய லின்ன தென்றுளத்
தாய்வரு நிலையுடை யம்ப ராதன
மூவரு மடிதொழு முதல்வ னோக்கினான்.

(இ - ள்.) தேவருமுனிவரும் - தேவர்களும்ரிஷிகளும்—சித்தராகிய யாவரும் - சித்திநிலையையடைந்தவரெவரும்—இதனியல் - இந்தச்சிம்மாசனத்தினிலக்கணத்தை —இன்னதென்று - இத்தகையதென்று—உளத்து - மனதினால்—ஆய்வரும் - ஆராய்ந்தறிதற்கரிய—நிலையுடை - நிலைமையுடைய—அம்பராதனம் - சூனியசிங்காதனத்தை —மூவருமடிதொழும் - திரிமூர்த்திகளுந்தனதுதிருவடிகளைத்தொழப்பெற்ற—முதல்வன் - அல்லமன் —நோக்கினான் - பார்த்தனன். எ - று. அல்லமன் அந்தச் சூனியசிம்மாசனத்தைக் கண்டனனென்க. (௫௩)

அசைவறு மறிவுரு வாகு மல்லமன்
றிசையுறு மணியணைச் சென்னி மீமிசை
வசையறு வழிநடை வசவ தேசிக
னிசையமர் ருலகிடை யேற வேறினான்.

(இ - ள்.) அசைவறும் - அசைவற்ற —அறிவுருவாகும் - அறிவேவடிவாகவிளங்கும்—அல்லமன் - அல்லமதேவன்—திசையுறு - திக்குகளடங்கிய—மணி - ரத்னங்கள்பதித்த—அணை - சூனியசிம்மாசனத்தின்—சென்னிமீமிசை - உச்சியின்மேல் —வசையறுவழி - குற்றமற்றவழியை—

நடை - தனக்குநெறியாகவுடைய—வசவதேசிகன் - வசவண்ணனது— இசை - கீர்த்தி—அமருலகிடை - என்றும்நிலையாயுள்ளவுலகத்தில்—ஏற- மேற்கொள்ள—ஏறினன் - ஏறினன். எ - று. அல்லமன் அணைச்சென்னிமீமிசை வசவன் தேசிகன்புகழ்மீக்கூர ஏறினன் எனமுடிக்க. பூரணமாதலின் அசைவனுமறிவெனவும், அறிவுருவையன்றி வேறுருவமின்மையின் அறிவுருவாகுமல்லமனெனவுங்கூறினர். சமஸ்தநிக்குகளும் மித்தையெனற்குத் திசையுறுமணியணை யெனக்கூறியதாகப்பெறறும்.

கூறரு மொளியுடைக் குதிரைத் தேரினன்
வேறொரு மணிமய வெற்பி வர்ந்தெனத்
தேறரு மணைமிசை தேசி கோத்தம
னேறலு மலர்மழை யிழிந்த வென்பவே.

(இ - ள்.) கூறரும் - சொல்லற்கரிய —ஒளியுடை - பிரகாசத்தையுடைய—குதிரை - குதிரைகட்டிய —தேரினன் - தேரையுடையசூரியன்—மணிமயம் - ரத்தினங்கள்மயமாயுள்ள—வேறொருவெற்பு - வேறோர்மலையில்—இவர்ந்தென - ஏறினாற்போல—தேறருமணைமிசை - தெளிதற்கரியசிம்மாசனத்தின்மேல் —தேசிகோத்தமன் - தேசிகோத்தமனாகியவல்லமன்—ஏறலும் - ஏறவும்—மலர்மழை - புஷ்பமாரிகள் —இழிந்த - பொழிந்தன—என்ப - என்றறிஞர்கூறுவர். எ - று. ஏ - அசை. சூரியன்வேறோர்மலையிலேறினாற்போல அல்லமன் சூனியசிம்மாசனத்தில் ஏறினதாகக்காண்கின்றதென்க. என்பவெனல் இடைச்சொல்லடியாகப் பிறந்தவுயர்திணைப்பன்மைவினைமுற்று. (ருரு)

முரசொடு பல்லிய முழக்கெ ழுந்தன
துரிசறு மடியவர் தொகுதி கைகுவித்
தரகர வெனுமொலி யண்ட கூடமட்
டொருகண மொடுங்குமுன் னோடிற் றென்பவே.

(இ - ள்.) முரசொடு - பேரிகையோடு —பல்லியம் - வாத்தியங்களின்—முழக்கு - சத்தங்கள்—எழுந்தன - மேலோங்கின —துரிசறும் - குற்றமற்ற—அடியவர்தொகுதி - அடியார்கள்கூட்டம்—கைகுவித்து - கைகளைக்குவித்து —அரகரவெனும் - அரகரவென்றிரையும்—ஒலி - சத்தமானது—அண்டகூடமட்டு - மேலேயண்டகூடமளவும்—ஒருகணமொடுங்குமுன் - ஒருகணநேரந்தோன்றியொடுங்குதற்குமுன்னரே—ஓடிற்று-

விரைவிலோடியது—என்ப - என்றறிஞர்கூறுவர். எ - று. ஏ - அசை. ஒலி தொகையொருமையாதலின் ஓடிற்றெனவஃறிணை யொருமையாக் கினரென்க. (ருசு)

வேறு.

முதனிலை முதலா மூவிரு நிலையின் மூலமா முதலவா தார, விதழவிழ் கமலப் பொகுட்டினு ணின்ற விலிங்கமோ ராறெனநின்று, நுதன்மிசை யிலகு நிட்களம் போல நுவன்றவே ழாநிலை யாகு, மதன்மிசை யமல னல்லம தேவ னமர்ந்தன னமரரும் வியப்ப.

(இ - ள்.) முதனிலைமுதலாம் - முதனிலைமுதலாகிய—மூவிருநிலையில்- ஆறுநிலையினுள் —மூலமாமுதலவாதாரம்-மூலமாகியமுதலாதாரமென்னும்—இதழவிழ்-ஆயிரமிதழ்கள்விரிந்த —கமலப்பொகுட்டினுள்-தாமரைப் பொகுட்டில்—நின்ற-எழுந்தருளிய —இலிங்கமோராறென - ஆத்மாவே யாருதாரமாயிருக்கின்றதென்று —நின்று - அந்தந்தத்தானங்களினின்று—நுதல்மிசையிலகும் - நெற்றியின்மேற்பிரகாசிக்கும்—நிட்களம்போல - நிட்களவடிவமபோல—நுவன்ற - முன்சொல்லிய—ஏழாநிலையாகும் - ஏழாநிலையாகிய —அதன்மிசை - அந்தச்சூனியசிம்மாசனத்தின்மேல்—அமலன் - பரிசுத்தனுகிய —அல்லமதேவன் - அல்லமாப்பிரபு—அமரரும்வியப்ப - தேவர்களுமதிசயிக்க—அமர்ந்தனன் - எழுந்தருளியிருந்தனன். எ - று. ஆத்மசங்கற்பமே ஆருதாரமாகவும் தேவதைகளாகவும் நிற்றலின் இலிங்கமோராறென நின்றென்றூர். நுவன்றவேழாநிலையாகுமதன்மிசையென்றதனுல் ஆருதாரத்துக்குமேலாயது சூனியசிம்மாசனமெனப் பெற்றும். நுதன்மிசை யிலகுநிட்களம்போல நுவன்ற வேழாநிலையாகு மதன்மிசை யமலனல்லமதேவ னமர்ந்தனனென முடித்துப் பொருள் கொள்க. (ருஎ)

உடம்பொடு பொறிநாற் கரணமற் றுயிரென் றுரைத்திடப் படுமுபா திகளைக், கடந்துள நிலையிற் சோதியா யிலங்கக் கண்டிடு துரியனைப் போல, நெடுந்தவி சமைய வமைத்தசெம் மணிப்பொன னிலைகளோ ரேழையுங் கடவா, யிடந்தனி விசும்பெனு நல்லம னிருப்ப விருந்தவர் யாவருங் கண்டார்.

(இ - ள்.) உடம்பொடு - தேகமும்—பொறி - ஐம்பொறிகளும்—நாற்கரணம் - நான்குகரணங்களும்—மற்று - பின்னும்—உயிர் - சீவனும்—என்

றுரைத்திடப்படும் - என்றுசொல்லப்படும —உபாதிகளைக்கடந்துள - உபாதிகளைக்கடந்துள்ள—நிலையில் - முடிவாயநிலையில்—சோதியாயிலங்கக் கண்டிடு - சோதிவடிவாகப்பிரகாசிக்கக் கண்டுகொண்டிருக்கும்—துரிய னைப்போல - துரியநிலையையுடையோன்போல—நெடுநேர்தவிசு - பெரியஓ ம்மாசனம்—அமைய - பொருந்த—அமைத்த - ஏற்படுத்திய—செம்மணி - சிவந்தரத்னங்கள்பதித்த—பொன்-பொன்னுலாகிய—நிலைகளோரேழை யும்- ஏழ்நிலைகளையும—கடவா - கடந்து—இடம்-இடமானது—தனிவிசு ம்பென்று - தனித்தசூனியாகாசமென்று —அல்லமனிருப்ப - அல்லம னெழுந்தருளியிருக்க —இருந்தவர்யாவரும் - பெரியதபோதனர்களனை வரும்—கண்டார்-பார்த்தனர். எ - று. கண்டிடுதுரியனைப்போல இரு ந்தவர்யாவருங் கண்டாரெனப்பொருள்கொள்க. உடம்புமுதலுயிரீருய வை உபாதிபற்றி நிற்றலின் அவற்றையுபாதிக ளென்றூர். அவற்றைக் கடத்தலாவது; அவற்றை யொவ்வொன்ருகக் கண்டு நியதிகளைதலே. ()

ஆடினர் சிலவ ரங்கைகள் கொட்டி யல்லமன் பெரிய தோர் புகழைப், பாடினர் சிலவர் விழிபொழி வெள்ளம் பாய் வுறக் குவித்தகை தலைமேற், சூடினர் சிலவர் நிலமிசை வீழ்ந்து தொழுதனர் சிலவர்மெய்ப் புளக, மூடினர் சிலவர் பரவினர் சிலவர் முக்கணு னடியவ ரன்றே.

(இ - ள்.) ஆடினர்சிலவர் - சிலராடினார்கள்—அங்கைகள்கொட்டி - உள்ளங்கைகளைகொட்டி —அல்லமன் - அல்லமதேவனது —பெரிய தோர்புகழைப்பாடினர் - ஒருபெரியபுகழைப்பாடினார்கள் —சிலவர் - சி லபேர்—விழிபொழி - விழியினின்ருெழுகும் —வெள்ளம் - ஆனந்தபா ஷ்பவெள்ளம்—பாய்வுற - பாயும்படி—குவித்தகை - குவித்தகைகளை— தலைமேற்சூடினர் - தத்தந்தலைமேற்கொண்டனர் —சிலவர் - சிலபேர்— நிலமிசைவீழ்ந்து - பூமியின்மேல்வீழ்ந்து —தொழுதனர் - வணங்கினார்க ள்—சிலவர் - சிலபேர்—மெய் - தேகத்தில்— புளகமூடினர் - புளகாங்கித மூடப்பெற்றனர்—சிலவர் - சிலபேர்—பரவினர் - வணங்கினார்கள்—சில வர் - சிலபேர்— (இவர்களாரெனில்) முக்கணுனடியவர் - சிவனடியார் கள். எ - று. அன்று-ஏ - அசைகள். அங்கையென்னல் இடைக்குறை. ()

இந்தியம் விடயங் கரணமெய் யென்னு மியூளவையுங் கா ணகில் லேறுங்கு, மந்தர வணிமே லிவர்ந்திருந் தருளு மண்ண லைக் கண்டவப் பொழுதே, முந்திய பரமா னந்தவா ரிதியுண்

மூழ்கினா னழுந்தினா னம்மா, தந்திர மெவற்றுஞ் சிறந்தது சைவ தந்திர மெனுமரு ணந்தி.

(இ - ள்.) இந்தியம் - சுரோத்ரமுதலியவிந்திரியங்களும் - விடயம் - சத்தமுதலியவிடயங்களும் — கரணம்-மனமுதலியகரணங்களும் — மெய் - உடலும் — என்னும் - என்கின்ற — யாவையுங்காண்கிலன் - எவற்றையுங் கண்டிலன் — ஓங்கும் - மேலோங்கிய — அந்தரவணைமேல் - சூனியசிம்மாசனத்தின்மேல் — இவர்ந்திருந்தருளும் - ஏறிய — அண்ணலை - அல்லமனை — கண்டவப்பொழுதே - கண்டவக்கணத்திற்முனே — முந்திய - எவற்றிற்குமேலாய — பரமானந்தவாரிதியுள் - பிரமானந்தசமுத்திரத்தில் — மூழ்கினனழுந்தினன் - மூழ்கியழுந்திவிட்டனன் — அம்மா - ஆச்சரியம் — (இவனுரெனில்) தந்திரமெவற்றும் - எவ்வகைத்தந்திரங்களினும் — சிறந்தது - சிறப்புற்றது — சைவதந்திரமெனும் - சைவதந்திரமெனக்கூறும் — அருணந்தி - அருளையுடையவசவண்ணன். எ - று. நந்தி காண்கிலன் மூழ்கினன் அழுந்தினன் எனக்கூட்டிப் பொருள்கொள்க. (௬0)

மண்டல மவத்தை குணமபி மான மலமிவை யனைத்தை யுங் கடந்துட், கண்டிடும் வண்ணம் புறத்துநீ யெம்மைக் காணிய வமைத்தவிச் செய்கை, வெண்டிரை சுருட்டுங் கருங்கட லுல கில் வேறுளார் செய்வதன் றென்று, தொண்டர்க டுதிக்கும் வச வனைத் துதித்தான் சுரரெலாந் துதிக்குமெம் பெருமான்.

(இ - ள்.) மண்டலம் - பூமியும் — அவத்தை - அவஸ்தைகளும் — குணம் - குணங்களும் — அபிமானம் - அபிமானங்களும் — மலம் - மும்மலங்களுமாகிய — இவையனைத்தையுங்கடந்து - இவற்றையெல்லாங்கடந்துபோய் — உட்கண்டிடும்வண்ணம் - உள்ளேதெரிசிக்கும்விதமாக — புறத்து - புறத்தில் — நீயெம்மைக்காணிய - நீயெமதுண்மையுருகாண்பான்வேண்டி — அமைத்த - செய்த — இச்செய்கை - இந்தச்செயலை — வெண்டிரை - வெண்மையானவலைகளை — சுருட்டும் - சுருட்டுகின்ற — கருங்கடலுலகில் - பெருங்கடல்சூழ்ந்தவுலகத்தில் — வேறுளார்செய்வதன்றன்று - செய்யத்தக்கவர்கள் வேறேயில்லையென்று — தொண்டர்கள்துதிக்கும்வசவனை - அடியார்கள் துதிக்கத்தக்கவசவண்ணனை — சுரரெலாந்துதிக்கும் - தேவர்களனைவருந்துதிக்கத்தக்க — எம்பெருமான் - அல்லமதேவன் — துதித்தான் - புகழ்ந்தனன். எ - று. எம்பெருமான் வசவனைத் துதித்தான் எனப் பொருள்கொள்க. அகத்திற்காணத்தக்க வென்னைப் புறத்திலுங் காணச்

செய்த செயல்பற்றித் துதித்ததாகக்கண்டாம். காணியவென்பது செய்யியவென்னும் வாய்பாடு. (௬௧)

உன்னருளுளதேற் கமலன்மா றொழிலு மொருசிறு துரும்புசெய் கிற்கு, மென்னநல் வசவன் புகன்றுகை கூப்பி யிணைவிழி புனலுக வுருகித், தன்னுணர் கிலனாய் வசமறநிற்பத் தண்கதிர்ச் செம்மணிக் குயின்ற, பொன்னரி யணைமேல் விசும்புற விருந்தான் புல்லரு மல்லம தேவன்.

(இ - ள்.) உன்னருளுளதேல் - உனதருள்படுமாயின்—கமலன்மால் - பிர்மாவிஷ்ணுக்களுடைய —தொழிலும் - சிருஷ்டிமுதலியதொழில்களையும்—ஒருசிறுதுரும்பு - ஓரற்பதுரும்பு—செய்கிற்கும் - செய்யும் —என்ன - என்று—நல்வசவன்புகன்று - நல்லவசவண்ணன்சொல்லி —கைகூப்பி - கைகளைக்குவித்து —இணைவிழிபுனலுக - இரண்டுகண்களினுநீர் பெருக—உருகி - மனநெக்குருகி—தன்னுணர்கிலனாய் - தன்னைமறந்து—வசமறநிற்ப - பரவசப்பட்டுநிற்க—தண்கதிர் - குளிர்ந்தகிரணங்களையுடைய—செம்மணிகுயின்ற - சிவந்தரத்னங்கள்பதித்த —பொன் - பொன்னாலாகிய—அரியணைமேல் - சிம்மாசனத்தின்மேலுள்ள —விசும்பு - சூனியபீடத்தில்—உற - பொருந்த—புல்லரும் - தழுவப்படாத—அல்லமதேவன் - அல்லமதேவனென்போன் —இருந்தான் - இருந்தனன். எ - று. வசவன் வசமறநிற்ப அல்லமதேவன் அரியணைமேல் விசும்புற விருந்தானெனக் கூட்டிப் பொருள்கொள்க. அருளினதுமகிமையைச் சிறப்பிக்க உன்னருளுளதேல் கமலன்மாறொழிலு மொருசிறுதுரும்பு செய்கிற்கு மென்றார். (௬௨)

சூனியசிங்காதனத்திலிருந்தகதி - முற்றிற்று.

ஆ கதி - ௨௰௨ - ஆ - திருவிருத்தங்கள் - ௲௬௬.

இருபத்துமூன்றாவது

# ஆரோகணகதி

வேறு.

ஒருவ ருண்ண வொருவர் பசிகெடார்
தரையி லென்னுந் தருமொழி பொய்த்திட
வருளி னல்லம னாரும் பசிகெட
விரவி யுண்ட மிகுதி விளம்புவாம்.

(இ - ள்.) ஒருவருண்ண - ஒருவர்சாப்பிட—ஒருவர் - மற்றொருவர்—பசிகெடார் - பசிநீங்கார்—தரையில் - பூமியில்—என்னுந்தருமொழி-என்றுசொல்லத்தகுந்தபழமொழி—பொய்த்திட-பொய்த்துப்போகும்படி—அருளின் - கிருபையினால்—அல்லமனாரும் - அல்லமதேவரும்—பசிகெட- அடியார்கள்பசிநீங்க—விரவியுண்ட - கலந்துண்ட—மிகுதி - மகிமைப் பெருக்கை—விளம்புவாம் - சொல்லுதும். எ - று. அல்லமன் உணவுண்டதால் அடியார்கள் பசிநீங்கியதுபற்றி ஒருவருண்ணவொருவர்பசிகெடார் தரையிலென்னுந் தருமொழிபொய்த்திடவென்றார். (க)

தண்ணந் திங்களிற் றண்ணெனத் தண்கதிர்
வண்ணங் குன்றா ஞாயிறு வார்சிலைப்
பண்ணங் குன்றுறு பான்மையி னாதனத்
தெண்ணந் தேவ னிருந்தருள் காலையில்.

(இ - ள்.) தண் - குளிர்ச்சிபொருந்திய—அம் - அழகிய—திங்களில் - சந்திரனிலும்—தண்ணென - சீதளமாக—தண்கதிர்வண்ணம் - சீதளகிரணத்தன்மை—குன்றா - சுருங்காத—ஞாயிறு - சூரியன்—வார் - நீண்ட—சிலை - பாறைக்கல்லுகளால்—பண் - செய்த—அம் - அழகிய—குன்றுறுபான்மையின் - மலையில்வந்ததன்மைபோல—ஆதனத்து - சூனிய சிம்மாசனத்தில்—எண்-யாவருஞ்சிந்திக்கத்தக்க—நந்தேவன் - நமதல்லமதேவன்—இருந்தருள்காலையில் - எழுந்தருளியிருக்குங்காலத்தில். எ - று.

சந்திரனிலுமிக்க சீதளகிரணமமைந்த சூரியனொருவனுண்டாய் ஓர்மலை யின்மேனின்று லெத்தகைத்தோ அத்தகைத்தாக வல்லமன் சூனியசிம் மாசனத்தின்மே லெழுந்தருளியிருந்த நிலைமையென்க. இல்பொருளாயுவ மித்தலால் இல்பொருளுவமையணி. திங்களில்; ஐந்தாம்வேற்றுமை நீங் கற் பொருள். (௨)

வசவ னுள்ளம் வயல்புகு நீரென
விசய னல்லமன் மேனி வடிவமா
யசைவி லன்பிறி தொன்று மறிந்தில
னிசையு மோவிய மென்ன விருந்தனன்.

(இ - ள்.) வசவனுள்ளம் - வசவண்ணனதுள்ளம் —வயல்புகுநீரென - வயலினேராகச்செல்லுநீரைப்போல் —விசயனல்லமன் - மாயைக்குட் படாதவிஜயனாகியவல்லமதேவனது —மேனி - திருமேனியே—வடிவ மாய் - தனக்குலட்சியார்த்தவடிவமாக—அசைவிலன் - சலனமற்றவனுயு ம் —பிறிதொன்றுமறிந்திலன் - வேறொன்றுமறியாதவனுயும —இசையு ம்-இயைந்த—ஓவியமென்ன - சித்திரப்பிரதிமைபோல—இருந்தனன் - வசவண்ணனிருந்தான். எ - று. வேறுபுகாது வயல்புகுநீரொன்றதனுல், அயல்புகாது அல்லமன்மேனியையிலக்காக்குவித்தன னெனப்பெற்றும்.

கழும ணித்தவி சென்னுங் கலத்திடை
யழிவ றத்திக ழல்லம னாகிய
செழிய நற்சுவை சென்ன வசவனும்
விழியி னுக்கு விருந்திட் டனனரோ.

(இ - ள்.) கழு - கழுவிய —மணித்தவிசென்னும் - ரத்னங்கள்பதித்த சூனியசிமமாசனமென்னும்—கலத்திடை - பாத்திரத்தில் —அழிவறத்தி கழ் - அழிவின்றிவிளங்கும் —அல்லமனாகிய - அல்லமதேவனென்னும் — செழிய - வளமுள்ள—நல் - நல்ல —சுவை - தேவாமிர்தத்தை —சென் னவசவனும் - சென்னவசவதேவனும் —விழியினுக்கு - கண்களுக்கு—வி ருந்திட்டனன் - விருந்துசெய்தனன். எ - று. அரோ - அசை. சூனிய சிம்மாசனமென்னும்பாத்திரத்திலுள்ள அல்லமனாகியவமிர்தத்தைச் செ ன்னவசவன் தனதுகண்களுக்குவிருந்திட்டனனென்க. எனவே, இமை யாதுபார்த்தனனென்பதாயிற்று. தவிசென்னுங்கலம் அல்லமனாகிய சுவை. இவையுருவகம். (௩)

முனிவினைக்கொலு மோளிகை மாரனும்
வினையினைத்தெறு மெய்ம்மடி வாலனுந்
தனைநிகர்க்குந் தவிசமர் பூவினை
மனமெனப்படும் வண்டுற விட்டனர்.

(இ - ள்.) முனிவினை - கோபத்தை—கொலும் - எழாமற்காக்கும்—ஒளி - பிழையின்றிய—கைமாரனும் - கைமாரனென்பவனும்—வினையினைத்தெறும் - இருவினைகளையும்நாசஞ்செய்யும்—மெய் - மெய்யறிவினையுடைய—மடிவாலனும் - மடிவாலமாச்சனும் — தனைநிகர்க்கும் - தனக்குத்தானேயொப்பாகிய —தவிசமர் - சூனியசிம்மாசனத்திலெழுந்தருளிய—பூவினை - அல்லமனாகியபூவை—மனமெனப்படும்-மனமென்கின்ற—வண்டு - வண்டுகள்—உற - மொய்க்க—விட்டனர் - விடுத்தனர். எ - று. தவிசமைபூவென்றதனால் அல்லமனை வருவித்தாம். அல்லமனாகியபூ - மனமெனப்படும்வண்டு-இவையுருவகம். (௫)

முன்னிருந்த முதுக்குறை வாளரும்
பின்னடைந்த பெரியரு மாகிய
மன்னிருந்த மணித்தவி சின்புடைத்
துன்னி யெங்கணுஞ் சூழ்ந்தனர் தொண்டரே.

(இ - ள்.) முன்னிருந்த - பூர்வத்திலிருந்த —முதுக்குறைவாளரும் - பேரறிவுடையோரும்—பின்னடைந்த - பின்புவந்த—பெரியருமாகி - பெரியோர்களுமாகி —மன்னிருந்த - அல்லமனெழுந்தருளியிருந்த —மணித்தவிசின்புடை - அழகியவாசனத்தின்பக்கத்தில் — துன்னி - நெருங்கி—எங்கணும் - எவ்விடத்தும்—சூழ்ந்தனர்தொண்டர் - அடியார்கள்சூழ்ந்திருந்தனர். எ - று. ஏ - அசை. (௬)

புண்டரந்திரு நெற்றியிற் பூசிமெய்க்
கண்டி யென்னுங் கலனணி வார்சிலர்
பண்டை நான்மறை யின்பய னாகவே
கொண்ட வஞ்செழுத் துங்குறிப் பார்சிலர்.

(இ - ள்.) புண்டரம் - திரிபுண்டரத்தை—திருநெற்றியிற்பூசி - அழகியநெற்றியிற்பூசி —மெய் - தேகத்தில் —கண்டியென்னும் - கண்டியென்கின்ற—கலன் - ஆபரணத்தை —அணிவார்சிலர் - சிலரணிந்துகொள்

வார்கள்—பண்டை - பழமையாகிய—நான்மறையின்பயனுகவே - நான்குவேதங்களையு மோதுவதாலெய்தும்பயனுகவே—கொள்ள - கொள்ளப்பெற்ற—அஞ்செழுத்தும் - பஞ்சாட்சரத்தையும்—சிலர் - சிலபேர்—குறிப்பார் - தியானஞ்செய்யக் குறித்துக்கொள்வார்கள். எ - று. (௭)

நந்த னந்தரு நாண்மலர் மஞ்சனஞ்
சந்த னஞ்சுடர் தண்புகை யாதிகொண்
டிந்தி யங்களெ லாமடங் குள்ளமோ
டந்தி வண்ணனை யர்ச்சிப்ப ரோர்சிலர்.

(இ - ள்.) நந்தனம் - நந்தவனம்—தரு - கொடுக்கின்ற—மலர் - புஷ்பங்களும்—மஞ்சனம் - அபிஷேகநீரும்—சந்தனம் - சந்தனமும்—சுடர்-தீபமும்—தண்புகை - மணமுள்ளபுகையுமாகிய—ஆதிகொண்டு - முதலியவற்றைக்கொண்டு—இந்தியங்களெலாம் - இந்தியங்களனைத்தும்—அடங்குள்ளமோடு - அடங்கியமனதோடு—அந்திவண்ணனை - செந்நிறமுள்ளவல்லமனை—ஓர்சிலர் - சிலவடியார்—அர்ச்சிப்பர் - பூசிப்பர். எ - று. ()

தாவில் பூசனை தாமபுரி கிற்பதிற்
பாவெ லாஞ்சொலப் பட்டிடு மைம்புலக்
காவல் செய்யுங் கருத்துடை யார்தமக்
கேவல் செய்தனன் றென்றுசெய் வார்சிலர்.

(இ - ள்.) தாவில்பூசனை-கெடாதபூசையை—தாம்புரிகிற்பதில் - தாங்கள்செய்வதிலும்—பாவெலாஞ்சொலப்பட்டிடும் - சான்றோர்நூல்களாற்கூறப்படும்—ஐம்புலம் - ஐம்புலன்களையும்—காவல்செயுங் கருத்துடையார்தமக்கு - தத்தமிட்டப்படிசெல்லாமற் காக்குமெண்ணமுடையோர்க்கு—ஏவல்செய்தனன்றென்று - தொண்டுபுரிதலே யுத்தமமென்று—செய்வார்சிலர் - சிலர்செய்வார்கள். எ - று. இடையி னீங்காமையைத் தாவிலென்றார். பாவாலாயது நூலாதலால் பாவெலாமென்றது காரணவாகுபெயர். (௯)

பூசனைத் தொழில் பூண்பதி னெண்மடங்
கீசனைத் துதித் தேத்துத னன்றென
வூச லொத்த வுளமில ராய்ப்புலத்
தூரி கிற்பத் துதிப்பவ ரோர்சிலர்.

(இ - ள்.) பூசனைத்தொழில் - பூசிக்குந்தொழிலை—பூண்பதின் - கொள்வதிலும்—எண்மடங்கு - எட்டுப்பங்கு—ஈசனைத்துதித்தேத்துதல் - ஈசனைத்துதித்துப்புகழ்தல்—நன்றென - நல்லதென்று—ஊசலொத்த - உஞ்சலையொத்தலைகின்ற—உளமிலராய் - மனமில்லாதவர்களாய்—புலம் - ஐம்புலன்களென்னும்—தூசி - புழுதி—நிற்ப - அடங்கிநிற்க—ஓர்சிலர் துதிப்பவர் - துதிப்போர்கள்சிலராவர், எ - று. பூண்பதின் ஐந்தாம்வேற்றுமை நீங்கற் பொருள். புலத்தூசி ; உருவகம். (௧௦)

அங்க லிங்க மயிக்க மிதுவென
மங்க லந்தரு மாமறை யின்முடித்
தங்கு றுந்தத் துவமசி தன்பொருள்
பங்க மின்றிப் பகர்பவ ரோர்சிலர்.

(இ - ள்.) அங்கம் - உடலும்—லிங்கம் - ஆத்மாவுமாகியவிவற்றின்—அயிக்கமிதுவென - ஐக்கியமாவதினையதென்று—மங்கலந்தரு - சுபத்தைத் தருகின்ற—மாமறையின்முடி - மகத்தானவேதங்களின்முடிவில் —தங்குறும் - தங்கிய—தத்துவமசிதன்பொருள் - தத்துவமசிப்பொருளை—பங்கமின்றி - துவிதபாவமின்றி—பகர்பவர் - உச்சரிப்பவர்—ஓர்சிலர் - சிலபேர். எ - று. அறிவையன்றி யான்மாவும் அறியாமையன்றியுடலும் இன்மையானும், அறிவையன்றி அறியாமையோர்முதலன்றாமையானும் ஐக்கிய மெய்தற்கு யாதுமுரண். இன்மையின் அங்கலிங்கமயிக்கமிதுவென்றும் இவ்வைக்கியத்தை யுணர்த்தற்பாலது சாமவேத மஹாவாக்கியமாதலின் "மங்கலந்தருமாமறையின் முடிதங்குறுந் தத்துவமசி தன்பொருளென்றுங் கூறினர்" பதம் ; தத், துவம், அசி. பதார்த்தம் ; அது - நீ - ஆனாய். வாச்சியார்த்தம் ; சீவன், ஈச்வரன், பிரமம். லட்சியார்த்தம் ; பிரமம், கூடஸ்தன். தான் எனக்கொண்டு உபாதிரகிதராதலின் தேற்றேகாரங்கொடுத்துப் பிரமமே கூடஸ்தன் கூடஸ்தனே பிரமம் எனவசிபதத்தா லயிக்கியங் கொள்க. (௧௧)

பாச மேது பசுவெனப் பட்டதே
தீசன் யார்பதி யெவ்வகை யாருயிர்க்
காசு தீர வருளு மருளுடைத்
தேசி காவெனத் தேர்பவ ரோர்சிலர்.

(இ - ள்.) பாசமேது - பாசமென்பதியாது—பசுவெனப்பட்டதேது - பசுவென்பதியாது—ஈசன்யார் - ஈசனென்பவன்யாவன்—பதியெவ்வ

கையார் - மாயாரகிதவிசனெவ்வகைப்பட்டவன் — உயிர்க்கு - உயிர்களுக்கு — ஆசுதிர - மலங்கணீங்க — அருளும் - அநுக்கிரகிக்கின்ற — அருளுடை - கிருபையையுடைய — தேசிகாவென - குருமூர்த்தியேயென்று — தேர்பவர் - விசாரித்துத்தெளிபவர் — ஓர்சிலர் - சிலபேர். எ - று. ஈசன்யார் பதியெவ்வகையார் என்றிரண்டுவந்தது; மாயாசகிதவிசனேயும் மாயாரகித விசனேயுங் குறிக்கற்கென்க. (௧௨)

புறந்தி னஞ்செயும் பூசையி னன்றெனச்
சிறந்த கஞ்செய் தியான மருவிமெய்
மறந்தி ருந்த மனஞ்சிவ லிங்கமுற்
றிறந்தி டுந்திற மெய்தின ரோர்சிலர்.

(இ - ள்.) புறம் - புறத்தில் — தினஞ்செயும்பூசையின் - தினமுஞ்செய்யும்பூசையினும் — நன்றெனை - நல்லதென்று — சிறந்து - சிறப்புற்று — அகஞ்செய்தியானம் - மானதபூசையை — மருவி - அடைந்து — மெய்மறந்திருந்த - உடல்மறந்திருந்த — மனம் - மனமானது — சிவலிங்கமுற்று - சிவலிங்கத்தையடைந்து — இறந்திடுந்திறம் - அதீதமாகநிற்குந்திறத்தை — எய்தினரோர்சிலர் - சிலபேரடைந்தனர். எ - று. இங்கே சிவலிங்கமென்றது ஆத்மப்பிரகாசத்தை. (௧௩)

ஓடிமீளு முயிர்நின் றிடா தெனி
னீடு மூமன நிற்பதன் றுதலால்
வீடு மேவரி தென்று விதிமுறை
நாடி வாயு நலிபவ ரோர்சிலர்.

(இ - ள்.) ஓடிமீளும் - ஓடித்திரும்புகின்ற — உயிர் - பிராணன் — நின்றிடாதெனில் - அசைவறநில்லாதாயின் — நீடுமூமனம் - சங்கற்பத்தால் மிக்குவளர்ந்தமகத்தாகிய மனமானது — நிற்பதன்றுதலால் - அசைவறநிற்கமாட்டாதாதலால் — வீடுமேவரிதென்று - முத்திசாம்பிராச்சியங்கிடைத்தலரிதென்று — விதிமுறைநாடி - விதிவொழுங்கைநாடி — வாயுநலிபவர் - வருந்திப்பிராணபந்தனஞ்செய்பவர்கள் — ஓர்சிலர் - சிலபேர். எ - று. இக்கவியில் யோகிகளைக்கூறலின் இங்கேயுயிரென்றது பிராணவாயுவையென்க. இங்கே விதிமுறையாவது யோகவிதிநெறியை. இவர்கள் ஞானநெறிச் சேர்தலரிதாதலி னிங்ஙனங் கூறினரென்க. (௧௪)

இனைய ராகி யிருந்தவக் காலையி
லனைய ருகிய வல்லமன் றன்னிடை

நினைவெ லாமுற நின்று தமதிடை
மனமி லாத வசவனைக் கண்டனர்.

(இ - ள்.) இனையராகி - இத்தகையராகி—இருந்தவக்காலையில் - இருந்தவத்தருணத்தில் —அனையனாகிய - அத்தன்மையுடையோனாகிய —அல்லமன்றன்னிடை - அல்லமதேவனிடத்தில்—நினைவெலாமுறநின்று - நினைவனைத்துமொருங்குபெறநின்று —தமதிடைமனமிலாத - அடியார்களிடத்தில் வைத்தஸ்மரணைசற்றுமில்லாத—வசவனைக்கண்டனர் - வசவதேவனைப்பார்த்தார்கள். எ - று. ஞானமெய்து மதிநீவரகுறியாதலால் "நினைவெலாமுற நின்று தமதிடை மனமிலாதவசவனென்றார்" அடியார்கள் தோன்றுவெழுவாய். (கரு)

வேறு.

பெரியவர் சிறியவ ரென்னும் பெற்றிமை
யரவணி கடவுட னடியர் தம்முளே
தெரிபவ னெவனவன் சிறிய னேயென
விரிவுறு மறையெலாம் விளம்பு மென்பவே.

(இ - ள்.) பெரியவர்சிறியவரென்னும் —பெரியோர்சிறியோரென்கின்ற—பெற்றிமை - தன்மை—அரவணிகடவுடன் - பாம்பையணியாகவணிந்தபரமசிவனது —அடியர்தம்முளே - அடியார்களுக்குள்ளே—தெரிபவனெவன் - எவன்பேதங்காண்பானோ—அவன் - அப்புருடன்—சிறியனேயென - இழிஞனேயென்று —விரிவுறுமறையெலாம் - பலசாகைகளாக விரிந்துள்ளவேதங்களனைத்தும்—விளம்பும் - சொல்லும்—என்ப - என்றறிஞர் கூறுவர். எ - று. ஏ - அசை. சிவதொண்டிற் கல்வியுடைமையும் கல்வியின்மையுங் கருதற்க வென்க. (கசு)

ஆவுரித் திடினுநீ றணிபு மன்பனம்
மாவுரித் தவனென வணங்கத் தக்கவன்
பூவுரித் தவன்பதம் புனையப் போற்றுற
நாவுரித் தெனமறை நான்கு மோதுமால்.

(இ - ள்.) நீறணிபுமன்பன் - அன்புகொண்டுநீறணிவோன்—ஆவுரித்திடினும் - ஆவுலைதசெய்யினும்—நம - நம்முடைய—மாவுரித்தவனென - யானையுரித்தோனாகிய சிவனென்று—வணங்கத்தக்கவன் - யாவராலும்

வணங்கற்குப்பாத்திரன்—அவன்பதம்புனைய - அவனது திருவடியையருச்சிக்க—பூவுரித்தென - புஷ்பந்தகுதியதென்றும்—போற்றுற - அவனைத் துதிக்க—நாவுரித்தென - நாக்குரியதென்றும்—மறைநான்கும் - நான்கு வேதங்களும்—ஓதும் - சொல்லும். எ - று. ஆல் - அசை. ஆவதையினு மிக்கதீமையின்மையின் ஆவுரித்திடினுமெனவும், அவன்பால் சிவதொண்டு மேலிட்டவிடத்தில் அத்தீச்செய்கை யெவரதுள்ளத்தினு மெய்தற்கிடமின்மையின் வணங்கத்தக்கவன் பூவுரித்து நாவுரித்து எனப்பட்டது. மறைநான்கு மோதுமென்றதனால் ஈஸ்வரவாக்கியமாதலால் அவனும் துதிபெற்றவனெனக் குறிப்பித்ததாகப் பெற்றாம். எனவெனவை யீரிடத்து மொட்டுக. (கஎ)

வந்தவர் வருபவர் வருகின் றார்களா
மந்தமி லடியர்மாட் டாற்றுஞ் செய்கையைச்
சிந்தனை செய்கிலன் றேசி கன்செயு
மிந்திர சாலமுற் றிருந்து நந்தியே.

(இ - ள்.) வந்தவர் - வந்தவர்களும்—வருபவர் - இனிவரப்போகிறவர்களும்—வருகின்றார்களாம் - வருகின்றவர்களுமாகிய—அந்தமிலடியர் மாட்டு - எண்ணிறந்தவடியார்களிடத்தில்—ஆற்றுஞ்செய்கையை - செய்யுந்தொண்டினை—சிந்தனைசெய்கிலன் - நினையாதவனாய்—தேசிகன்செயும் - அல்லமன்செய்கின்ற—இந்திரசாலமுற்று - இந்திரசாலத்தில் மனமுறைந்து—இருந்துநந்தி - வசவண்ணனிருந்து. எ - று. ஏ - அசை. அல்லமன்செய்யும் இந்திரசாலவித்தையில் வித்துவானைக்காண வூக்கமுற்றிருக்கையில் அடியார்கள் தொண்டை மறந்தனனென்க. (கஅ)

பத்தியிற் றவறினேன் பாலி ருந்துநாந்
துய்த்துடற் சுமப்பதிற் றுறத்த னன்றென
மெய்த்தவக் குழாமெலாம் வெகுண்டு போயின
வத்தனற் றண்டநா யகனை விட்டரோ.

(இ - ள்.) பத்தியிற்றவறினேன்பால் - அடியார்தொண்டிழந்தவனிடத்தில்—இருந்துநாம் - நாமிருந்து—துய்த்து - புசித்து—உடல்சுமப்பதில் - தேகஞ்சுமப்பதிலும்—துறத்தனன்றென - விடுதலன்றென்று—மெய்த்தவக்குழாமெலாம் - உண்மையானவடியார்கூட்டமனைத்தும்—அத்தன் - கர்த்தனையே—நல் - நல்ல—தண்டநாயகனைவிட்டு - வசவண்ணனை

விட்டு—வெகுண்டுபோயின - கோபித்துக்கொண்டுபோயின. எ - . அடியார்களை மறந்ததால் அவர்கள்கோபித்து அவ்விடம்விட்டுப் போயின ரென்க. (௧௯)

துன்றிய மெய்த்தவர் துறந்து போயபின்
மன்றல்செய் மற்றைநாண் மனையை யொத்தொரு
தன்றனி நற்புரந தனிப்பக் கண்டன
னன்றறி நற்செய னந்தி தேவனே.

(இ - ள்.) துன்றியமெய்த்தவர் - மிக்கமெய்த்தவக்குழாங்கள்—துறந்துபோயபின் - விட்டுநீங்கியபின்னர்—மன்றல்செய் - கல்யாணஞ்செய்த—மற்றைநாள் - மறுநாள்—மனையை-அந்தக்கல்யாணஞ்செய்த வீட்டிற்கு—ஒத்து - ஒப்பாகி—தன் - தன்னுடைய—நல் - நல்ல—தனி - தனியாக—ஒருபுரம் - ஒருதேகம்—தனிப்ப - ஒண்டியாயிருக்க—நன்றறி - உண்மைநெறியறிந்த—நற்செயல் - சன்மார்க்கத்தையுடைய —நந்திதேவன் - வசவண்ணன்—கண்டனன் - பார்த்தனன். எ - று. கல்யாணங்கழிந்த மறுநாள் அவ்வீடு ஒருவருமின்றித் தனியேயிருக்குமாறுபோன்று மடத்திலொருவருமின்றித் தான்மாத்திரமிருக்க வசவண்ணன் கண்டனனென்க. (௨௦)

வழுவின னன்புசெய் வழியை யின்றுநான்
குழுவுறு மடியவர்க் குறித்துச் செய்தவிவ்
வொழிவறு மடிசிலுண் டொழிந்தி டாதுதீர்ந்
தழிவுறு மேயென வகந்த ளர்ந்தனன்.

(இ - ள்.) குழுவுறும் - திரளாயுள்ள—அடியவர்குறித்துச்செய்த - அடியார்களைக் குறித்துச்செய்துவந்த—அன்புசெய்வழியை - அன்புவிளைதற்கியைந்த நெறியை —இன்று நான் வழுவினன்-இன்றைக்குநான்வழுவிவிட்டனன்—இவ்வொழிவறுமடிசில் - யாதானுங்குன்றுதவளவையுடைய ஒவ்வுணவை—உண்டொழிந்திடாது - உண்டுசெலவழியாமல்—தீர்ந்து - நீங்கி—அழிவுறுமேயென - கெட்டுப்போகுமேயென்று —அகந்தளர்ந்தனன் - மனநொந்தனன். எ - று. அடியார்கள் சென்றுவிட்டதால் அவர்கள் தொண்டில் வழுவினேனென்றும், உண்பாரில்லாமல இவ்வடிசில்மிகை அழிந்துவிடுமே யென்றும் விசனமுற்றன னென்க. (௨௧)

சங்கம பத்திசெய் தண்ட னர்தனே
சங்கம பத்திசெய தகைமை பூண்டுநான்

சங்கம பத்தியிற் றவறினே னென்றாற்
சங்கம பத்திசெய் தன்மை யெண்மையோ.

(இ - ள்). சங்கமபத்திசெய் - சங்கமபத்திசெய்கின்ற —தண்டநாதனே - வசவண்ணனே—சங்கமபத்திசெய் - சங்கமபத்திசெய்கின்ற—தகைமைபூண்டு - விரதமேற்கொண்டு—நான் - அடியேன்—சங்கமபத்தியில் - சங்கமபத்தியினிடத்தில்—தவறினேனென்றால் - வழுவினேனெனின்மையாயின் —சங்கமபத்திசெய் - சங்கமபத்திசெய்கின்ற—தன்மை ஒழுக்கம்—எண்மையோ - எளிமையதோ. எ - று. சங்கமபத்தி; அடியார்களுக்கன்புகொண்டு தொண்டுபுரிதலை. எண்மையோவென்பதி லோகாரம் அருமையென்ன மறுத்தலா லெதிர்மறை. (உஉ)

இழிப்பினும் வெறுப்பினு மில்லி னுள்ளன
வழிப்பினு முடம்பினை யரிந்து கொல்லினும்
பழிப்பறு சங்கம பத்தி செய்பவன்
ஒழிப்பது பிறவியென் றுலக மோதுமே.

(இ - ள்.) இழிப்பினும் - மானககேடெய்தியவிடத்தும்—வெறுப்பினும் - எவற்றினுமவெறுப்பெய்தியவிடத்தும்—இல்லினுள்ளன - மனையிலுள்ளவைகள்—அழிப்பினும் - நாசமெய்தியவிடத்தும் —உடம்பினை - தனதுதேகத்தை—அரிந்து - துண்டுதுண்டாகவரிந்து —கொல்லினும் - பிறர்கொலைசெய்தவிடத்தும்—பழிப்பறு-குற்றமற்ற—சங்கமபத்திசெய்பவன்- இவற்றாற்கலங்காது சங்கமபத்திசெய்தோன்—ஒழிப்பது - ஒழித்தற்கியைவது—பிறவியென்று - சனனமென்று—உலகம் - பெரியோர்கள்—ஓதும் - சொல்லுவார்கள். எ - று. ஏ - அசை. இங்கே வுலகமெனல் உயர்ந்தோர்மாட்டு. திண்ணமாதலின் ஒழிப்பது பிறவியென்றார். (உங)

இம்முறை சங்கம பத்தி யெய்திய
வெம்முடை நந்தித னெண்ண முற்றுற
வம்மடை யடிசிலுண் டலமன் மாதவர்
தம்முறு பசியெலாந் தணிப்ப வுண்ணினன்.

(இ - ள்.) இம்முறை - இவ்வாறு—சங்கமபத்தி - சங்கமபத்திநெறியை—எய்திய - அழியாதுமேற்கொண்ட —எம்முடைநந்திதன் - எம்மையாளாகவுடைய வசவண்ணனது—எண்ணமுற்றுற - எண்ணநிறைவேற—அ - அந்த—மடை - சோறுமுதலிய—அடிசிலுண்டு - உணவினைத்து

மூண்டு—அலமன் - அல்லமதேவன்—மாதவர்தம் - அடியார்களுடைய
உறுபசியெலாம் - மிக்கபசியனைத்தும்—தணிப்ப - தணிந்துபோமாறு—
உன்னினன் - நினைத்தனன். எ - று. அலமன்; இடைக்குறை. (உச)

ஒருவன்யான் சிறுபசி யுடையன் சிற்றுணா
விரைவுற விடுதிநீ வேண்டு மாறுபின்
பரிவுள வடியவர் பாற்செ யென்றனன்
பொருவறு வசவனை நோக்கிப் போதகன்.

(இ - ள்.) ஒருவன்யான் - யானொருவன்—சிறுபசியுடையன் - கொஞ்சம்பசியுடையவன்—சிற்றுணா - அற்பவுணவாக—விரைவுறவிடுதி-முன்னேவிரைவிற்கொடு—நீவேண்டுமாறு - உன்னிஷ்டப்படி —பின் - பின்னே—பரிவுள - அன்புள்ள—அடியவர்பாற்செய் - அடியார்களுக்குவுணவிடுதி—பொருவறு - ஒப்பற்ற—வசவனைநோக்கி - வசவண்ணனைப்பார்த்து—போதகன் - அல்லமன்—என்றனன் - என்றுசொல்லினன் எ-று. எனது சிறுபசியைத் தணித்துப் பின்ன ரடியார்கள் பசியைத் தணித்திடுதி யென்றல்லமன் கூறினனென்க. (உரு)

ஐயனு முனிவுறு தருளும வண்ணமயான்
செய்யுநல் வினையென மகிழ்ந்து தேவனைப்
பையவுண் மனையிடைப் பணிந்து கொண்டுபோய்ப்
பெய்யுமென் மலர்மணிப் பீடத் தேற்றினன்.

(இ - ள்.) ஐயனும் - வசவண்ணனும்—முனிவுறுது - கோபியாமல்—அருளும்வண்ணம் - கொடுக்கும்வண்ணந்துணிவது —யான்செய்யு நல்வினையென - நான்செய்யுநன்மார்க்கமென்று—மகிழ்ந்து - சந்தோஷித்து—தேவனை - அல்லமனை—பணிந்து - வணங்கி—பைய - மெதுவாக—உண்மனையிடைக்கொண்டுபோய் - மனைக்குள்ளழைத்துக்கொண்டுபோய்—பெய்யும் - பரப்பிய—மெல் - மிருதுவாகிய—மலர் - மலர்களையுடைய—மணி-அழகிய—பீடத்து - ஆசனத்தில்—ஏற்றினன் - ஏறச்செய்தனன். எ - று. ஐயனும் மகிழ்ந்து பணிந்து கொண்டுபோய் ஏற்றினனெனமுடிக்க. (உசு)

ஏற்றிய வருள்வச வேச னெம்பிரான்
காற்றுணை மலர்களைக் கந்த மஞ்சன

காற்றமென் மலர்நறும் புகைவி ளக்கெனப்
போற்றிய விவைகொடு பூசை செய்தனன்.

(இ - ள்.) ஏற்றிய - ஏறச்செய்த—அருள் - கிருபைபொருந்திய —வசவேசன் - வசவண்ணன்—எம்பிரான் - அல்லமனது —கால் - திருவடிகளாகிய—துணைமலர்களை-உபயதாமரைமலர்களை —கந்தம் - சுகந்தமும்—மஞ்சனம் - அபிஷேகநீரும்—மெல் - மிருதுவாகிய—நாறுமலர் - வாசனையுள்ளபுஷ்பங்களும—நறும்புகை - வாசனைப்புகைகளும்—விளக்கு - தீபமும் - எனப்போற்றிய - என்றுகமங்களாற்சொல்லப்பட்ட —இவைகொடு - இங்ஙனமாயவபிஷேககருவிகளைக்கொண்டு—பூசைசெய்தனன்- பூசித்தான். எ - று. காறறுணைமலர் ; உருவகம். (உஎ)

பூசனை செய்தபின் போற்றி நின்றுபொற்
பாசன மமைத்துமென் பதமப டைததுமேல
யோசனை கைகமழ் கறியு மொளளிய
போசன முறையிடப புரிநது நநதியே.

(இ - ள்.) பூசனைசெய்தபின் - பூசைசெய்தபின்னர் —போற்றிநின்று - துதித்துநின்று —பொற்பாசனமமைத்து - அழகியபோசனம்படைத்தற்கியைந்தவாழையிலையைப்போட்டு —மென்பதம்படைத்து - மெல்லியசாதமபடைத்து—மேல் - அதன்மேல் —யோசனை - யோசனைதூரம்—கைகமழ் - கைமணம்வீசத்தக்க—கறியும் - கறிகளையும்—ஒள்ளிய - அழகிய—போஜனம் - போஜனவகைகளை —முறையிடப்புரிந்து - முறையேபடைக்கச்செய்து—நந்தி - வசவண்ணன். எ - று. ஏ - அசை. நந்தி போற்றிநின்று அமைத்து படைத்து முறையிடப்புரிந்தெனக் கூட்டிப் பொருள்கொள்க. (உஅ)

அருந்துக வெனவடி தொழுது மக்கலந
திருந்திய வமுதுளோ ரவிழுஞ் சேடியா
தருந்தின னேரிமைப் பேரதி னல்லமன்
பொருந்திய வவரிறும பூத ராகவே.

(இ - ள்.) அருந்துகவென - புசித்தருளவேண்டுமென்று—அடிதொழுதும் - திருவடிகளைவணங்கவும் —அக்கலம் - அந்தவுண்ணுங்கலத்தில்—திருந்திய - நிறையப்படைத்துள்ள—அமுதுள் - சாப்பாட்டில்—ஓரவிழுஞ் சேடியாது - ஓர்சாதமுமீதியாகாமல்—அல்லமன்-அல்லமதேவன்—பொ

ருந்தியவவர்-அங்கிருந்தவர்கள் —இறும்பூதராக - அதிசயிப்பராக— மைப்போதின் - ஒரிமையளவில். —அருந்தினன் - உண்டனன். எ - று.

பின்னரு மம்முறை பெய்ய வையுனவ்
வன்னமு மம்முறை யருந்திப் பின்னரும்
பின்னரு மம்முறை பெய்ய வுண்டனன்
றன்னுளம் வியந்தனன் றண்ட நாயகன்.

(இ - ள்.) பின்னரும் - பின்னும் —அம்முறை - அந்தமுறைப்படி— பெய்ய - படைக்க —ஐயன் - அல்லமன் —அவ்வன்னமும் - அந்தசாப்பாட்டையும் —அம்முறையருந்தி - முன்னுண்டவாறுண்டு —பின்னரும் பின்னரும் - பின்னும்பின்னும்—அம்முறைபெய்ய - அவ்வாறுபடைக்க— உண்டனன் - சாப்பிட்டனன் —தண்டநாயகன் - வசவண்ணன்—(இதைக்கண்டு) தன்னுளம் - தனதுள்ளத்தில் —வியந்தனன் - அதிசயித்தனன். எ - று. (௯0)

சிறுச்சிறி தனமிடுஞ் செய்கை யாலரு
ளிறைக்கெழி லுதரவெங் நெருப்பெ ழுந்ததால்
விறற்கன லம்முறை விறகி டக்கனன்
றுறப்பெரி தெனவெழுந் தோங்கல் போலவே.

(இ - ள்.) சிறுச்சிறிது - சிறிதுசிறிதாக —அனமிடுஞ்செய்கையால் - போசனமிடுஞ்செய்கையினால் —அருளிறைக்கு - கிருபைபொருந்தியவல்லமனுக்கு—எழில் - அழகிய—உதரவெந்நெருப்பு-கொடியவுதராக்கினி— விறற்கனல் - விறகினுள்ளவக்கினி —அம்முறை - முன்னிட்டமுறைப்படி—விறகிட - அதில்விறகுவைக்க—கனன்று—சீறி—உற - பொருந்த— பெரிதென - பெரிதாக —எழுந்தோங்கல்போல-எழுந்ததிகரித்தாற்போல—எழுந்தது - அதிகரித்தது. எ - று. ஆல் - ஏ - அசைகள். விறகாக்கினியில் 'மேலுமேலும்விறகிட அவ்வக்கினிமேலிடுமாறுபோன்று அல்லமனுக்கும் உதராக்கினிமேலிட்டதென்க. அனமெனவிடைக்குறை. (௯௧)

எண்ணிய வெண்ணியாங் கியற்று மேவல
ரன்னமும் வருகென வழைத்து நம்மனைப்
பண்ணிய பதமெலாம் படைமி னென்றலுந்
துண்ணென வனமிடுந் தொழிலெ டங்கினார்.

(இ - ள்.) எண்ணியவெண்ணியாங்கு - வசனவெண்ணெண்ணியவெண்ணப்படி—இயற்றுமேவலர் - செய்யுமேவலாளிகளை—அண்ணனும் - வசவண்ணனும்—வருகெனவழைத்து-வாருங்களென்றுகூப்பிட்டு—சம்மேளனப்பண்ணிய - சமதுமடத்திற்சமைத்த—பதமெலாம்படைமின் - சர்ப்பாட்டையெல்லாமிவருக்குப்படையுங்கள்—என்றலும்-என்றுவசவண்ணர் சொல்லவும்—துண்ணென - திடுக்கென்று—அனமிடுந்தொழில்தொடங்கினர் - சாப்பாடுவெட்டிக்கத்தொடங்கினர்கள். எ - று. துண்ணெனல்; விரைவுக்குறிப்பு. (௩௨)

வேறு.

அளவறு மடியர்க் கெல்லா மாக்கிய வடிசிற் குன்றங்
கொளவுறு கூடை யோடு கூடைக ளாக்கக் கொண்டு
வளமுறு கயிலைக் குன்றம பெயர்த்திவண் வைத்த தென்னத்
தளவுற மூடிசி லெங்க டமபிரா னெதிர்கு வித்தார்.

(இ - ள்.) அளவறும்டியர்க்கெல்லாம் - அளவிறந்தவடியார்களுக்கெல்லாம்—ஆக்கிய - சமைத்த—அடிசிறகுன்றம் - குன்றுபோன்றசாதராசிகளை—கொளவுறுகூடையோடு - வாரிக்கொள்ளத்தகுந்தகூடைகளோடு—கூடைகடாக்கக்கொண்டு - கூடைகளிடிபடுமாறுவாரிக்கொண்டு—வளமுறு - வளப்பமுள்ள—கைலைக்குன்றம் - வெள்ளியங்கிரியை—பெயர்த்து - அடியோடுபெயர்த்து—இவண்வைத்ததென்ன - இவ்விடத்திற்கொண்டுவந்துவைத்தாற்போல—தளவுறமூடிசில்-மல்லிகையரும்புபோன்றசாதங்களை—எங்கடம்பிரானெதிர் - எமதுகர்த்தனுகியவல்லமனெதிரில்—குவித்தார் - குவையல்செய்தார்கள். எ - று. அடிசிற்குன்றம்; உருவகம். அக்கயிலைமலைவடிவுபோறகாட்டச் சாதக்குவையலைக்குறித்தலால் இதுதற்குறிப்பணி. (௩௩)

பருப்பொரு பொருப்பெ னத்தாம் படைத்தனர் சிலரெ டுத்து
விரைப்புது நெய்க விழ்த்து விடுத்தனர் சிலர்ம ணக்கும்
பொரிக்கறி பளிதம பாகு புளிங்கறி பலவு மெல்லா
நிரைத்தொரு சிலர்சொ ரிந்து நின்றனர் முகில்கள் போல.

(இ - ள்.) பருப்பு - சமைத்தபருப்புகளை—ஒருபொருப்பென - ஒருமலையைப்போல—தாம்படைத்தனர் - தாங்கள்வட்டித்தார்கள்—சிலரெடுத்து - சிலர்கையாலெடுத்து—விரை - வாசனைபொருந்திய—புது - புதிய—நெய் - நெய்களை—சிலர் - சிலபேர்—கவிழ்த்துவிடுத்தனர். - கவிழ்த்

துவிட்டார்கள்—சிலர் - சிலபேர்—மணக்கும்பொரிக்கறி - மணக்கின்ற பொரிக்கறிகளையும்—பனிதம் - பச்சடிகளையும்—பாகு - கொழம்புகளையும்—புளிங்கறி - புளியிட்டபதார்த்தங்களையும்—பலவும் - இவைபோல்வனபலவும் —எல்லாம் - சமஸ்தத்தையும்—நிறைத்து - வரிசையாக—ஒருசிலர் - சிலபேர்—முகில்கள்போல - மேகங்களைப்போல—சொரிந்து நின்றனர் - சொரிந்துநின்றார்கள். எ - று. சிலரெடுத்துப்படைத்தனர் சிலர்கவிழ்த்து விடுத்தனர் ஒருசிலர் சொரிந்து நின்றனரென முடிக்க. தாமென்பது அசைநிலையெனினுமமையும். பனிதமெனற்குப்பொருள் கற்பூரமெனல் பொருந்தாமையின் பச்சடியென்றாம். ஒன்றன்பின் னொன்றெனலை நிரைத்தெனக் கொள்க. (௩௪)

வடைபடு திகிரி யாக மாங்கனி கவண்கல் லாக
வுடைபடு கழைக்க ரும்பங் கொண்கதை யாகக் கொண்டு
கடைபடு முலகிற் கெல்லாங் காரிய கருத்தன் முன்னாப்
படைபடை யெனச்சொ ரிந்தார் படைமுகத் திளைஞ்ரா போல.

(இ - ள்.) வடை - வடைகள்—படு - பொருந்திய—திகிரியாக - சக்ராயுதங்களாகவும்—மாங்கனி-மாம்பழங்கள்—கவண்கல்லாக - கவண்டுகற்களாகவும்—உடைபடு - முறியத்தக்க—கழைக்கரும்பு - மூங்கில்போன்ற கரும்புகள்—அங்கு - அவ்விடத்தில்—ஒண்கதையாக - பலமுள்ளதடிகளாகவும்—கொண்டு - ஏற்றுக்கொண்டு—கடைபடுமுலகிற்கெல்லாம் - கீழ்ப்பட்டவுலகங்களுக்கெல்லாம்—காரியம் - காரியநடாத்துதற்கு—கருத்தன்முன்னர் - தலைவனாகியவல்லமனுக்குமுன்னே—படைமுகத்திளைஞர் போல - யுத்தகளத்தெதிர்த்த சுத்தவீரர்களைப்போல —படைபடையெனச்சொரிந்தார் - படைபடையென்று சொரிந்துவிட்டனர். எ - று. வடை, மாங்கனி, கரும்பு, இவற்றில் திகிரி, கவண்கல், ஒண்கதை, இவற்றையாரோபித்தலால் விரியுருவகவணி. (௩௫)

குளங்கரை யாக வந்தக் குளத்தினுட் பசுவின் றீம்பால்
விளங்குறு மமுத வேலை விடுத்தென விட்டார் சில்லோர்
உளங்கனி மூவர் செய்யு ளொத்தமுக் கனியு மேனோர்
வளங்கெழு தொடர்பு போலு மற்றைய பழமுந் தூர்த்தார்.

(இ - ள்.) குளம் - குளமானது—கரையாக - எல்லையாக—அந்தக்குளத்தினுள் -அந்தக்குளத்தில்—பசுவின்தீம்பால் - மதுரமாகியபசுவின்பாலை—விளங்குறும் - விளங்காநின்ற—அமுதவேலைவிடுத்தென - திருப்பா

ற்கடலைவிடுத்தாற்போல—கில்லோர் - சிலபேர்—விட்டார்-விட்டனர்—உளங்கனி - உள்ளநெக்குருகத்தக்க —மூவர்செய்யுளொத்த - சம்பந்தர் முதலிய மூவர்செய்யுளுக்கொப்பாகிய—முக்கனியும் - மூன்றுகனிகளையும்—ஏனோர் - மற்றவடியார்களின்—வளங்கெழு - வளப்பமுள்ள —தொடர்புபோலும் - செய்யுளைப்போலும் —மற்றையபழமும் - ஏனையபழங்களையும்—தூர்த்தார் - நிரப்பினார்கள். எ - று. கில்லோரென்பதை இடைநிலைத்தீபமாக விட்டார் தூர்த்தார் என்பவற்றோடொட்டுக. மூவரெனல்; சம்பந்தர், அப்பர், சுந்தரரை. இவர்கள்செய்யுளெனல்; திருக்கடைக்காப்பு,தேவாரம், திருப்பாட்டுகளை. முக்கனியெனல்; வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழமெனலே. தொடைகளாற்றொடுக்கப்படுஞ் செய்யுட்களை தொடர்பெனல் காரணவாகுபெயர். மற்றையபழம்; முந்திரி, தீவராட்சி, பேரீச்சங்கனி முதலியவைகளை. உளங்கனி செய்யுளென முடிக்க. குளமுதலியவற்றில் கடைமுதலியவற்றை யாரோபித்தலால் விரியுருவகவணி. (ருசு)

எண்ணில ரிடுவ வெல்லா மினியன வின்ற வென்றன்
கணணிமை யொடுங்கு முன்னர் கடிதயின் றுதவு ருமல்
வண்ணமென் மலாக்கை வாங்கி வறிதிருந தனனெங் கோன்றே
பண்ணவன் பரிக்கு மேடு பளளமென் பனவங் குண்டோ. [ர்ப்

(இ - ள்.) எண்ணிலர் - எண்ணிறந்தபேர் —இடுவவெல்லாம் - இடுவனவனைத்தையும் —இனியனவின்றவென்றன் - நன்கென்றுந் தீதென்றுஞ் சொல்லாதவனாய்—கண்ணிமையொடுங்குமுன்னர் - கண்ணிமைப்பதற்குமுன்னே—கடிதயின்று - விரைவிலுண்டு—உதவுருமல்வண்ணம் - சலித்தினிவுணவிடாவண்ணம்—மெல் - மிருதுவாகிய—மலர்க்கைவாங்கி - தாமரைமலர்போன்றகையையெடுத்து—எங்கோன்வறிதிருந்தனன் - அல்லமன்சும்மாவிருந்தனன்—தேர் - ரதத்தையுடைய —பண்ணவன்பரிக்கு - சூரியனுடைய குதிரைகளுக்கு—மேடுபள்ளமென்பன-மேடுபள்ளமென்னப்பட்டவை—அங்குண்டோ - அங்குளவோ. எ - று. உதவுருமல் வண்ணமென்பது அவர்கள் சலித்துநிற்கும் விதத்தை. உண்டோவென்பதி லோகாரம் எதிர்மறை. இவ்வுவமை இனியன வின்றவெனலுக் கருதாமைபற்றி யென்க. (ருஎ)

சுற்றினு முண்க வென்று தமருப சரியா வண்ணஞ்
சற்றினு மிடுக வென்று தம்பிரா னுண்ணு கின்றான்

மற்றிது கண்டு நின்றோர் மட்கல மொழிய வேறு
பற்றிலை யென்று நந்தி திருமுகம் பார்த்துச் சொன்னார்.

(இ - ள்.) சற்று - கொஞ்சம்—இனுமுண்கவென்று - இன்னுஞ்சாப்பிடுகவென்று—தமருபசரியாவண்ணம் - உறவினருபசரியாதிருக்கும்வண்ணம் —சற்றினுமிடுகவென்று - இன்னுங்கொஞ்சம்போடென்று—தம்பிரான் - அல்லமன்—உண்ணுநின்றான் - விரைவிற்சாப்பிட்டுக்கொண்டிருக்கின்றனன் —மற்றிதுகண்டு - இவ்வதிசயத்தைக்கண்டு —நின்றோர் - அங்குநின்றவேவலாளிகள் —மட்கலமொழிய - சமைத்தமட்பாத்திரத்தையன்றி—வேறுபற்றிலையென்று - வேறுபற்றேனுமில்லையென்று—நந்தி - வசவண்ணனது —திருமுகம்பார்த்துச்சொன்னார் - அழகியமுகத்தைநோக்கிச் சொல்லினர். எ - று. உபசாரம்வேண்டாமல் விரைவிலுண்பதால் யாதோர்பற்றுமில்லாதிருக்க ஏவலாளிகள் மட்கலத்தைக் காட்டினரென்க. (௩௮)

உண்விளை யாடல் செய்யு மொருவனைக் கண்டு வேண்மேற்
கண்விளை யாடு நெற்றிக் கடவுண்மெய் யடியா ரெல்லாம்
விண்விளை யாடுஞ் சோலை வியனக ரிடத்திற் செல்வப்
பெண்விளை யாடுந் தம்மிற் பேரன மிடுதற் கெண்ணி.

(இ - ள்.) உண் - உணவில்—விளையாடல்செய்யும் - திருவிளையாடல்செய்கின்ற—ஒருவனைக்கண்டு - ஒருவனாகியவல்லமனைக்கண்டு —வேண்மேல் - மன்மதன்மேல்—விளையாடும் - விளையாடல்செய்த—கண்ணெற்றி - நெற்றிக்கண்ணையுடைய—கடவுள் - பரமசிவனது —மெய்யடியாரெல்லாம் - மெய்யடியார்களனைவரும் —விண்விளையாடும் - ஆகாயமளாவிய—சோலை - தோப்புகள்சூழ்ந்த—வியனகரிடத்தில் - பெரிதாகியபட்டணத்தில்—செல்வப்பெண் - செல்வப்பெண்கள்கூடி —விளையாடுந்தம்மில் - விளையாட்டாகச்செய்யு நிலாச்சோறுகளில் —பேரனம் - அவ்வுணவே—இடுதற்கெண்ணி - படைக்கநினைத்து. எ - று. வேண்மேற்கண்விளையாடல்; மன்மதனையெரித்தலை. அந்நகரிலுள்ளசெல்வப்பெண்கள் விளையாட்டாகச்செய்யு நிலாச்சோறுகளையேனும் படைத்தற்கெண்ணினரென்க. "பேரனமிடுதற் கெண்ணியெனப் பாடமுமுண்டு. இலக்கணையால் 'விண்விளையாடுஞ் சோலையெனற்கு ஆகாயமளாவிய' சோலையென்றாம். (௩௯)

பாண்டின்மே லேற்றி வந்தும் பானையிற் சுமந்து வந்தும்
வேண்டிய பாக முற்று வேறுவே றாய வன்ன
மாண்டகைக் குரவ னுண்ண வளவிலர் சொரிந்து யர்த்தா
ரூண்டழல் வெறுக்கும் வண்ண மூட்டுவ மென்பார் போல.

(இ - ள்.) பாண்டின்மேல் - வண்டிகளின்மேல்—ஏற்றிவந்தும் - ஏற்றிக்கொண்டுவந்தும்—பானையிறசுமந்துவந்தும் - பானைகளிற்சுமந்துகொண்டுவந்தும்—வேண்டியபாகமுற்று - அவரவர்வேண்டியபாகங்களிற்சிறந்து—வேறுவேறாயவன்னம் - வெவ்வேறாகியாகச் சமைக்கப்பெற்ற வன்னங்களை—ஆண்டகை - ஆண்தன்மையையுடைய—குரவனுண்ண - அல்லமனுண்பான்வேண்டி —ஊண்டழல் - உதராக்கினி—வெறுக்கும் வண்ணம் - வெறுத்துப்போகும்படி—ஊட்டுவமென்பார்போல - உணவுண்ணச்செய்வமென்று சொல்லுவார்போல—அளவிலர் - அளவில்லாத பேர்கள்—சொரிந்து - குவையல்குவையலாகச்சொரிந்து —உயர்த்தார் - மலைபோலுயர்த்தினார்கள். எ - று. (சo)

மலையென வமல ஞான வாரிமுன் சொரிந்து யர்ப்ப
ரிலைமலர் பசுங்காய் கந்த மிளஞ்செழுந் தண்டாற் செய்த
வுலையமை பல்கா யம்பெ யொண்கறி யமுது வேறு
பலபல முறைம யங்கப் படைப்பர்வல் விரைந்து வந்து.

(இ - ள்.) மலையென - மலைகளைப்போல—அமலம் - பரிசுத்தமாகிய—ஞானவாரிமுன் - ஞானசமுத்திரமாகிய வல்லமனுக்குமுன்—இலை - இலைக்கறிகளையும்—மலர் - மலர்க்கறிகளையும்—பசுங்காய் - பசியகாய்க்கறிகளையும்—கந்தம் - வாசனையும்—இளம் - இளமையும்—செழும் - செழுமையுமுள்ள—தண்டாற்செய்த - தண்டுவகைகளாற்செய்த—உலையமை - அக்கினியிற்பாகமாகிய —பல்காயம்பெய் - முளகுமுதலியபலகாயங்கள் பெய்யப்பெற்ற—ஒண்கறி - மணமுள்ளகறிகளையும்—அமுது - சாதங்களையும்—வேறு - வேறுவேறாக —பலபலமுறை - பலபலவிதமாக—மயங்க - முன்னதுபின்னதுமாகமாற—வல்விரைந்துவந்து - மிகவும்வேகமாகவந்து—சொரிந்துயர்ப்பார் - சொரிந்துயரச்செய்வோர்—படைப்பர் - இவெர்கள். எ - று. ஞானவாரி, உவமையாகுபெயர். (சக)

குய்கமழ் கறிக ளிட்டுக் குவிப்பவர் சிலரெ டுத்து
நெய்கவிழ் கைய ராகி நிற்பவர் சிலர்நி ரம்பப்

பெய்கவிழ் சொரியென் றூன்பால் பெய்பவர் சிலர ளைந்த
கைகமழ் தயிர்கு டத்தாற் கவிழுப்பவர் சிலரங் கம்மா.

(இ - ள்.) குய் - தாளிதம—கமழ் - மணக்கின்ற—கறிகளிட்டு - கறிக ளையிட்டு—குவிப்பவர்சிலர் - அம்பாரம்போற் குவிப்பவர்சிலரும்—எடுத்து - எடுத்து—நெய்கவிழ் - நெய்யைக்கவிழ்க்கின்ற—கையராகிநிற்பவா- கையையுடையவர்களாய்நிறபவர்கள்—சிலர் - சிலரும்—நிரம்பப்பெய் - நிரம்பப்பெய்துவிடு—கவிழ் - கவிழ்த்துவிடு—சொரியென்று - சொரிந் துவிடென்று—ஆன்பாறபெய்பவர் - பசுவின்பாலைவிடுபவர்கள்—சிலர்- சிலரும்—அளைந்த - பிசைந்த—கைகமழ - கையுமணக்கத்தகுந்த—தயிர் - தயிரை—குடத்தாறகவிழ்ப்பவர் - குடத்தோடுகவிழ்ப்பவர்கள்—சிலர் - சிலருமாம்—அங்கு - அவ்விடத்தில். எ - று. அம்மா; வியப்புக்குறி. குவி ப்பவர்சிலர் நிறபவர்சிலா பெய்பவர்சிலர் கவிழப்பவர்சிலர் எனப்பொ ருள் கொள்க. (௪௨)

இட்டவர் மறிய வன்ன மிடுதறகு விரைநது செல்வாா
முட்டுவ ரெதிர்ந டநது மூரலகை வாங்கி வாங்கிக்
கொட்டுவ ரடிசி றந்த கூடைகள கவிழ்தெதெ றிநது
தட்டுவ ரனம்ப டைக்குந் தமபிரா னடிய ரன்றே.

(இ - ள்.) இட்டவர் - முன்னன்னமிட்டவர்கள்—மறிய - பின்னும்— அன்னமிடுதற்கு - அன்னம்படைத்தற்கு—விரைந்துசெல்வார் - விரைவா கவோடுவர்—மூரல் - சாதங்களை—கைவாங்கிவாங்கி - கையில்வாங்கிவா ங்கி—எதிர்நடந்து - எதிரேநடந்துவந்து—முட்டுவர் - ஒருவருக்கொருவர் முட்டிக்கொள்வார்கள்—அடிசிறந்தகூடைகள் - சாதங்கொண்டுவந்தகூ டைகளை—கொட்டுவர் - தலைகீழதாககொட்டுவார்கள் —அனம்படைக் கும் - சாதம்பரிமாறுகின்ற—தம்பிரானடியர் - சிவனடியார்கள்—கவிழ் த்தெறிந்து - கூடைகளைக்கவிழத்தெறிந்து —தட்டுவர் - தரையிலோங்கி த்தட்டுவார்கள். எ - று. அன்று - ஏ - அசைகள். தம்பிரானடியர் செல்வார் முட்டுவர் கொட்டுவர் தட்டுவர் என்முடிக்க. அனம் - இடைக் குறை. (௪௩)

இன்னணம படைத்த வெல்லா மிமைப்பினி லயின்று சைவ
மன்னவன் வயிற்றின் வெநதீ வளர்ததினிர் தீயி ரெல்லா
மென்னாநல் வசவ தேவ னிருந்தபல் பண்டங் கொண்டு
முன்னவன் பசியை யாற்ற முன்னிமற் றிதனைச் செய்தான்.

(இ - ள்.) இன்னணம்படைத்தவெல்லாம் - இவ்வாறுபடைத்தவுண வனைத்தையும்—இமைப்பினிலயின்று - இமையளவிலுண்ணவித்து—சைவமன்னவன்-அல்லமதேவனது—வயிற்றின் - வயிற்றில்—வெந்தீவளர்த் தினிர் - உதராக்கினியைவளாத்துவிட்டீர்கள்—நீயிரெல்லாம் - நீங்களெல்லாம்—என்ன - என்றுசொல்லி—நல்லசவதேவன் - நல்லசவண்ணன்—இருந்தபல்பண்டங்கொண்டு - அங்கிருந்தவுணவுக்கியைந்த பலபண்டங்களைக்கொண்டு —முன்னவன்பசியையாற்ற - அல்லமனது பசிதணிக்க—முன்னி - நினைத்து—மற்றிதனைச்செய்தான் - பின்னிந்தக்காரியத்தைச்செய்தான். எ - று. அயின்று தன்வினைபிறவினை மயக்கம். (௫௪)

அவரையும் பயறு மெள்ளு மரிசியு மவலுங் கொள்ளுந்
துவரையுங் கடலை யுஞ்செஞ் சோளமு நெலலும புல்லுங்
குவரையுங் கயிலை யும்பொற் குன்றமும போல ஞாலத
தெவரையுங் களிப்பு செய்ய வெங்கணுங் குவிப்பித தானல்.

(இ - ள்.) அவரையும் - அவரையையும்—பயறும் - பயறையும்—எள்ளும் - எள்ளையும்—அரிசியும - அரிசியையும—அவலும்-அவலையும—கொள்ளும் - கொள்ளையும—துவரையும் - துவரையையும்—கடலையும் - கடலையையும்—செஞ்சோளம் - செம்மையாகியசோளத்தையும்—நெல்லும்-நெல்லையும்—புல்லும் - புல்லையும்—குவரையும - குவரையென்னுமோர்வகை தானியத்தையும்—கைலையும் - கைலையங்கிரியையும்—பொற்குன்றமும் போல - மேருகிரியையும்போல—ஞாலத்து - பூமியிலுள்ள—எவரையும் - யாவரையும்—களிப்புசெய்ய - சந்தோஷப்படுத்தும்படி—எங்கணும் - எவ்விடத்திலும்—குவிப்பித்தான் - குவையலாக்கும்படிசெய்தான். எ - று. ஆல் - அசை. (௫௫)

குன்றெனக் குவித்த வெல்லாங் கொள்ளெனக் கொண்டு நம்பன்
மென்றரைக் கணத்து ளின்னு மெல்வன கொணர்மி னென்ன
வன்றிறற் றண்ட நாதன் மனதுறு வவை யியற்றி
நின்றிடத் தம்பி ரானு நினைவிலு லவைய யின்றான்.

(இ - ள்.) குன்றெனக்குவித்த - மலைபோலக்குவையலாக்கிய —எல்லாம் - இவையனைத்தையும்—கொள்ளென - உண்ணென்றுசொல்ல—நம்பன்கொண்டு - அல்லமனவுற்றையுட்கொண்டு—அரைக்கணத்துள்மென்று - அரைக்கணத்தில்மென்றுவிட்டு —இன்னும் - இன்னமும்—மெல்வன - மென்றுதின்னத்தக்கவைகளை —கொணர்மினென்ன - கொண்டு

வாருங்களென்றுசொல்ல —வன்றிறலினன்பில்வலியிற்றந்தையுடைய— தண்டநாதன் - வசவண்ணன்—மனத்தினில் - தனதுமனதினில்—அவை யியறறிநின்றிட - அவையுண்டாக்கிநிற்க —தம்பிரானும் - அல்லமனும்— நினைவினல் - தன்மனதினல்—அவையயின்முன் - அவற்றையுண்டானன். எ - று. (சுகூ)

நோக்கினு லளித்த வெல்லா நோக்கினுற் றெலேத்தா னந்தி
வாக்கினு லளித்த வெல்லாம் வாக்கினுல் வள்ள லுண்டு
போக்கினு னிடுத லுண்ண லென்னுமிப் போரின் கண்ணே
தூக்கினு லிருவர் தாமுந் தோல்வியுற் றுடைந்தா ரில்லை

(இ - ள்.) நோக்கினுலளித்தவெல்லாம் - திருட்டியினுற்கொடுத்தவனை த்தையும்—நோக்கினுற்றெலேத்தான் - திஷ்டியினலழித்தனன்—நந்தி- வசவண்ணன் —வாக்கினுலளித்தவெல்லாம் - வாக்குக்காரணமாகக்கொ டுத்தவனைத்தையும்—வாக்கினுல்வள்ளலுண்டு - வாக்குக்காரணமாகவல் லமதேவனுண்டு—போக்கினுன் - நிறைவேற்றினன்—இடுதல் - படைத் தலும்—உண்ணல் - தின்னுதலும்—என்னும் - என்கின்ற—இப்போரின் கண்ணே-இந்தப்போர்க்களத்தில்—தூக்கினுல் - ஆராய்ந்துபார்த்தால்— இருவர்தாமும் - இவ்விருவரும்—தோல்வியுற்று - தோல்வியடைந்து—உ டைந்தாரில்லை - பின்னிட்டவர்களில்லை. எ - று. நினைவினுலும், நோக் கினுலும், வாக்கினுலும், அளித்தலும், உண்டலுமெனல் இருவர்மகிமையும் விளக்கநின்றது. இவ்வுணவுகளை இம்மூன்றுலும் கணத்திற்படைத்தலி லும் அழித்தலிலும் சமத்தையடைதலின், இருவர்தாமுந் தோல்வியுற்று டைந்தாரில்லையென்றும், இயற்றல் அளித்தல் இடுதல் படைத்தல் மு தலியவையும், இவற்றிற்கெதிராகவரும் அயிலல் தொலைத்தல் உண் டல் அழித்தல் முதலியவையும் ஒருபொருட்கிளவி. போர்புரிவார்போல் இடுதலுமழித்தலுமாரு நடத்தலின் இப்போரின்கண்ணே யென்றுங் கூறினர். (சஎ)

படைத்திடுந் தொழின் முயன்ற பத்தன தியல்பு மன்ன
துடைத்திடுந் தொழிலி னின்ற தூயவ னியல்பு நோக்கி
யடுத்தநற் பத்த ரெல்லா மனையவ ரிருவர் சீரு
மெடுத்துரைத் துளம்வி யப்புற் றிறைஞ்சின ரொருங்கு மாதோ.

(இ - ள்.) படைத்திடுந்தொழில் - படைக்குந்தொழிலை—முயன்ற-செ ய்த—பத்தனதியல்பும்-வசவண்ணனதுவல்லமையையும் —அன்ன - அத்

நகையினதாகிய சிருட்டியை — துடைத்திடுந்தொழிலில் - அழிக்குந்தொழிலில்—நின்ற - பின்னிடாதுநின்ற — தூயவனியலும் - வசவண்ணனது வல்லமையையும்—நோக்கி - பார்த்து—அடுத்தநற்பத்தரெல்லாம் - அங்குநின்றசிவனடியார்களனைவரும்—அனையவரிருவர் - அத்தன்மையராகியவிருவரின்—சீரும் - கீர்த்திகளையும்—எடுத்துரைத்து - எடுத்துத்துதித்து—உளம - மனதில்—வியப்புற்று - அதிசயங்கொண்டு—ஒருங்கு - ஒருமிக்க—இறைஞ்சினர் - வணங்கினார்கள். எ - று. மாது - ஓ - அசைகள். (சஅ)

இடுதற்கு வல்லா னநதி யிடும்பொரு ளெவற்றை யுங்கை
தொடுதற்கு வல்லா னிந்தத் தூயவ னென்ப ரிவ்வா
றிடுதற்கு வல்லா ரில்லை யென்பரிவ் வாறு நாங்கை,
தொடுதற்கு வல்லார் தம்மைச் சொல்லவுங் கேளே மென்பார்.

(இ - ள்.) இடுதற்குவல்லான் - படைத்தற்குவல்லவன்—நந்தி - வசவண்ணனும் —இடும்பொருளெவற்றையும் - அங்ஙனம்படைக்கும்பொருளனைத்தையும் —கைதொடுதற்குவல்லான் - நசிக்கச்செயதற்குவல்லமையுடையோன்—இந்தத்தூயவன் - இந்தப்பரிசுத்தமாகியவல்லமனும்—என்பர் - என்றுசிலர்கூறுவர் —இவ்வாறிடுதற்குவல்லார் - இவ்வாறுகொடுத்தற்குவலியுளோர்—இல்லையென்பர் - சிலரில்லையென்றுசொல்வார்கள்—இவ்வாறு - இவ்வண்ணம்—நாங்கைதொடுதற்குவல்லார்தம்மை - நாம்கையினாற்சுட்டிக்காட்டற்கியையவல்லாரை—சொல்லவுங்கேளேம் - பிறர்சொல்லவுங்கேட்டிலேம் —என்பார்-என்றுசிலர்சொல்லுவர். எ-று. இங்கே கைதொடுதல் அழித்தலை. கைதொடுதற்குவல்லார்தம்மை - அழித்தற்குவல்லாரை—சொல்லவும் - பிறர்சொல்லவும்—நாங்கேளேம் - நாங்கள் கேட்டிலேம்—எனப்பதப்பொருள் கொள்ளினுமமையும். (சக)

கண்ணப்ப னன்பி னானே கறியென வமைத்த வூனை
யுண்ணப்ப னானின் வேறா முயிருணின் றமைவ னென்று
வண்ணப்பொன் னனைய சென்ன வசவதே சிகன் வணங்கி
விண்ணப்பஞ் செய்தான் றுங்க விடைமுகுங் கரந்தா னோடு.

(இ - ள்.) கண்ணப்பன் - கண்ணப்பனென்போன் —அன்பினானே - மிக்கவன்பினால்—கறியெனவமைத்தவூனை - கறியாகச்சமைத்தமாமிசத்தை—உண்ணப்பன் - உண்டபரமசிவன் —ஊனின்வேறாம் - தேகத்திற்குவேறாகிய —உயிருணின்றமைவனென்று - உயிருக்குயிராயிருப்பனெ

ன்று—வண்ணம் - அழகிய—பொன்னனைய - பொன்போன்றுவிளங்காநி ன்ற—சென்னவசவதேசிகன் - சென்னவசவண்ணன்—வணங்கி - நமஸ் கரித்து—துங்கம் - பரிசுத்தமாகிய—விடைமுகங்கரந்தானோடு - விரஷப வடிவமறைந்துவந்தவசவண்ணனோடு—விண்ணப்பஞ்செய்தான் - சொல் லினன். எ - று. எனவே, கண்ணப்பனுனைத்தின்றேன் ஊனுடலி னின்றும் பற்றுதுயிரானிற்றலின் அங்ஙனமவனைக்காணமுயலுதியென்று சென்னவசவன் குறிப்பித்ததாகப் பெற்றும். (௩௦)

வேறு.

சென்ன வசவன் சொல்லியவச் செயலே செய்யுஞ் செய லென்று, மன்னு மருளின் மடிவால மாச்சி தேவன் வந்துரைப்ப, வென்னை யுடையா னும்மொழியே யெனது மனதைத் தேற்று மது, பின்னை யுளதோ கதகமலாற் பெருநீர் தெளித்தற் கென்று ரைத்து.

(இ - ள்.) சென்னவசவன்சொல்லிய - சென்னவசவதேவன்சொல் லிய—அச்செயலே - அந்தச்செய்கையே —செய்யுஞ்செயலென்று - யா ஞ்செய்யத்தக்கசெய்கையென்று —மடிவாலமாச்சிதேவன் - மடிவாலமா ச்சிதேவனென்போன்—மன்னுமருளின் - நிலைபெற்றகிருபையோடு—வந் துரைப்ப - வந்துசொல்ல—என்னையுடையான் - என்னையாளாகவுடைய வசவண்ணன்—நும்மொழியே - தேவரீர்வசனமே—எனதுமனதை - என்னுடையமனதை—தேற்றுமது - தேற்றத்தருவது—பெருநீர் தெளித் தற்கு - மிக்ககலங்கனீரைத்தெளிவித்தற்கு—கதகமலால்-தேற்றாங்கொ ட்டையையன்றி —பின்னையுளதோ - வேறுளதோ—என்றுரைத்து - என்றுசொல்லி. எ - று. (௩௧)

பொறிகள் கரணம் பூதங்கள் புலன்கண் மற்றும் பல் வகைய, கறிக ளாக வாருயிரே கலந்துண் பதமா நீயுண்ணப், பெறுக திலன்யா னெனநின்று பிறவிப் பிணிதீர் மருந்து வன்ற, னறிய மலர்மெல் லடிப ணிந்தா னமையா ளுடைய வருணந்தி.

(இ - ள்.) பொறிகள் - ஐம்பொறிகளும்—கரணம் - அகக்கரணங்க ளும்—பூதங்கள் - பஞ்சபூதங்களும் —புலன்கள் - ஐம்புலன்களும்—மற் றும்பல்வகைய - இன்னும்பலவகையாவிரிந்துள்ளதத்துவங்கள் —கறிக ளாக - பதார்த்தங்களாகவும்—ஆருயிரே - நிறைந்தயுயிரோ—கலந்துண் -

கறிகளோடுகலந்துண்ணத்தக்க—பதமா - சாதமாகவும் —நீயுண்ணப்பெறுகிலன் - நீயுண்ணும்படியானபாக்கியமடைந்தேனில்லன் —யானென - யானென்று —நின்று - திகைத்துநின்று —பிறவிப்பிணிதீர் - பிறவிநோயைத்தீர்க்கத்தக்க—மருத்துவன்றன் - வயித்தியனுகியவல்லமனது—நறியமலர் - வாசனையுள்ளதாமரைமலர்போன்ற—மெல்லடி - மிருதுவாகியதிருவடிகளை —நமையாளுடைய - நம்மையாளாகவுடைய —அருணந்தி - கிருபைபொருந்தியவசவண்ணன் —பணிந்தான் - வணங்கினன் எ - று. பல்வகைய, வினையாலணையும்பெயர். கறிகளாக உண்பதமா இவை விரியுருவகவணி. பிறவிப்பிணி தொகையுருவகம். (௫௨)

வசவ னிலைகண் டருண்ஞான வள்ள லல்ல மப்பெயரான், பசியின் வந்தே னலன்பொருட்குப் படர்கா மக்கு வந்திலன் யான், கசியு நினது மனத்தன்பு காண வந்தே னென்றேத்தி, யிசையின் மலியு மரனடியார் யாரு மகிழ வெடுத்தணைத்தான்.

(இ - ள்.) அருள் - கிருபைபொருந்திய —ஞானவள்ளல் - ஞானதாதாவாகிய—அல்லமப்பெயரான் - அல்லமனென்னும்பெயருடையோன்—வசவனிலைகண்டு - வசவண்ணனதுபரிபாகநிலையைக்கண்டு —யான் - நான்—பசியின்வந்தேனலன் - பசிதணிப்பான்வந்தவனல்லன்—பொருட்கு - பொருளீட்டற்கும் —படர்காமக்கு - மிக்ககாமந்தணித்தற்கும்—வந்திலன் - வந்தேனில்லன்—நினது - உன்னுடைய —கசியும் - நெக்குருகுகின்ற —மனத்து - மனதிலுள்ள —அன்புகாண - அன்புபெருக்கைக்காண —வந்தேனென்று - வந்தனனென்று—ஏத்தி - துதித்து —இசையின்மலியும் - கீர்த்தியின்மிக்க—அரனடியார்யாரும் - சிவனடியாரனைவரும்—மகிழ - களிக்கும்படி —எடுத்தணைத்தான் - எடுத்துமார்போடணைத்துக்கொண்டனன். எ - று. காமத்துக்கெனல் விகாரத்தாற்றொக்கது. யானெனலை இடைநிலைத்தீபகமாக்குக. (௫௩)

கண்போ லுயிர்கள் கண்டறியக் கதிர்போற் காட்டும் பெருமானே, யுண்போன் யாறு வூட்டிமுனக் கூட்டு வேனென் றெழுந்தமையா, லெண்போ தென்போற் பேசுதமையா ரில்லை யில்லையென்றனன்பின், பண்போ டமல னெதிர்நின்றான் பத்தி வடிவமாயினான்.

(இ - ள்.) கண்போல் - உலகையறியுங்கண்போல —உயிர்கள்கண்டறிய - உயிர்கள்நுண்மைநிலையினையதெனக்கண்டறிய —கதிர்போற்காட்

டும் - சூரியனைப்போல்விளக்கிக்காட்டும்—பெருமானே - கர்த்தனே—உண்போன்யாறு - போகமுண்பேரன்யாகுக —ஊட்டுமுனக்கு - ஊட்டுவிக்குமுனக்கு —ஊட்டுவேனென்று - உண்ணச்செய்வேனென்று—எழுந்தமையால் - யானெழுந்தபடியால் —எண்போது - யோசிக்கும்போது—எண்போற்பேதமையார் - என்னைப்போலமூடத்தன்மையுடையோர்—பண்போடு - நற்குணங்களோடு —அமலனைதிர்கின்றான் - அல்லமனைதிர்கின்றவனாகிய—பத்திவடிவமாயினான் - பத்தியேவடிவமாகநின்றவசவண்ணன்—இல்லையில்லையென்றனன் - இல்லையில்லையென்றுசொல்லினன்—பின் - அதன்பின்னர். எ - று. உரையிற்கோடலென்னுமுத்தியால் உயிர்கள்கண்டறிய உயிர்கள்கண்டுணர, கண்போல் கண்ணைப்போலும், கதிர்போல் சூரியனைப்போலும், காட்டும்பெருமானே விளக்கிக்காட்டுங்கர்த்தனே என்றுரைகொள்ளினுமமையும். உணர்தலைப்பற்றிக் கண்ணையும், விளக்கலைப்பற்றிச்சூரியனையுமுவமைகூறினர். ஞானத்திற் கிவ்விருதன்மையு மொருங்குடைமையின் இதனைக்காட்டும்பெருமானே யென்றானென்க. அன்றேல், சச்சிதானந்தவிலக்கணங்கட்கிலக்கியமின்றாம். எண்ணும்போதெனல் விகாரத்தாற்றொக்கது. (௫௪)

செம்மை நெறியா னருணந்தி தேவன் றன்னைப் புகழ்வமோ, பொய்ம்மை தீரு மல்லமனைப் புகழ்வ மோவிங் கன்றியிவர், தம்மை விழியாற் காண்பதற்குத் தவஞ்செய் துடல மிதுபெற்ற, வெம்மை யாமே புகழ்வமோ வெனநின் றனர்தம் பிரானடியார்.

(இ - ள்.) செம்மைநெறியான் - செந்நெறிச்செல்வோனாகிய —அருள் - கிருபைபொருந்திய—நந்திதேவன் றன்னை - வசவண்ணனை —புகழ்வமோ - துதிப்பமோ —பொய்ம்மைதீரும் - கற்பனைகடந்த —அல்லமனை - அல்லமதேவனை—புகழ்வமோ - துதிப்பமோ—இங்கன்றி - இவ்விதமன்றி—இவர்தம்மை - இவர்களை —விழியாற்காண்பதற்கு - கண்களாற்காண்பதற்கு—தவஞ்செய்து - தவந்தைச்செய்து —உடலமிதுபெற்ற - இந்தத்தேகத்தையடைந்த—எம்மையாமே - நம்மைநாமே—புகழ்வமோவென - துதிப்பமோவென்று—தம்பிரானடியார் - சிவதொண்டர்கள்—நின்றனர் - சொல்லிநின்றனர். எ - று. இம்மூன்றோகாரமும் எதிர்மறை. செம்மைநெறி திருத்தொண்டை. (௫௫)

பரிந்த நந்தி முகநோக்கிப் பசித்தா ரென்று நீதளரப், பிரிந்த வந்த வடியர்தமைப் பிறங்க லனைய நின்மாடத், தருந்த

வணங்கிக் கொணர்தியென வறிவா னந்த மயன்கூற, விரை ந்து விடைகொண டெழுந்தன்பு வெள்ளஞ் சென்ற தவரிட த்தில்.

(இ - ள்.) பரிந்த - அன்புகொண்ட — நந்திமுகநோக்கி - வசவண்ண னதுமுகத்தைப்பார்த்து — பரித்தாரென் று - பரியாயிருவொன் று — நீத ளர - நீவருந்த — பிரிந்த - உன்னைவிட்டுநீங்கிய — அந்தவடியர்தமை - அந் தவடியார்களை — பிறங்கலனைய - மலைபோன்ற — நின்மாடத்து - உன் னுடையவீட்டில் — அருந்த - சாப்பிடுதற்கு — வணங்கி - நமஸ்காரஞ்செய் து — கொணர்தியென - அழைத்துக்கொண்டுவாவென்று — அறிவானந்த மயன்கூற - அறிவானந்தவடிவமாகியவல்லமன்சொல்ல — விரைந்துவிடை கொண்டு - விரைவிலுத்தரவுபெற்றுக்கொண்டு — எழுந்து - எழுந்திருந் து — அவரிடத்தில் - அடியார்களிடத்தில் — அன்புவெள்ளஞ்சென்றது - அன்புப்பெருக்குச்சென்றது. எ - று. வசவனை அன்புவெள்ளமென்றரு வகமாக்கலின் சென்றதென்றஃறிணையொருமையதாக்கியதென்க. ( )

சென்ற வசவ னருட்குரவன் றிருமே னியிற்று னங்க ணிந்த, மன்றன் மலருஞ் சந்தனமும் வடிவிற் றிகழ மடிநிமிர் ந்து, தின்றன் முதல கறிமணக்கத் தேக்கு விடுத்து முகமலர்ந் து, கொன்றை கமழ்வே ணியனடியார் குழாங்க ளிருப்பக் கண் டனனால்.

(இ - ள்.) சென்றவசவன் - போகியவசவண்ணன் — அருட்குரவன் - அருளையுடையவல்லமனது — திருமேனியில் - உடலில் — தானங்கணிந்த - தானங்கேதரித்த — மன்றன்மலரும் - வாசனையுள்ளமலர்களும் — சந்தன மும் - சந்தனமும் — வடிவிற்றிகழ - திருமேனியில்விளங்கவும் — மடிநிமிர் ந்து - மடிதளர்ச்சிநீங்கி — தின்றன்முதல - தின்றன்முதலாகியபுடைபெய ர்ச்சிக்கிளைந்தனவாகிய — கறிமணக்க - பதார்த்தங்கள்மணக்கவும் — தே க்குவிடுத்து - ஏப்பங்கொண்டு — முகமலர்ந்து - முகமலர்ச்சியோடு — கொ ன்றைகமழ் - கொன்றைமாலைமணக்கின்ற — வேணியன் - சடையையு டைய பரமசிவனது — அடியார்குழாங்களிருப்ப - அடியார்கூட்டங்களிரு க்க — கண்டனன் - பார்த்தனன். எ - று. ஆல் - அசை. உணவில்லா விடத்து மடிதளர்தலை மடிநிமிர்ந்தென்றார். (ருஎ)

கண்ட நந்தி யடிபணிந்து கடையேன் செய்த பிழையெல் லா, முண்டு பொறுமின் வருகவென வுள்ளங் களிப்புற் றுங்கி

ருந்த, தொண்டர் வசவ நின்பெருமை சொல்ல வெளிதோ வயி ருராய், பண்டு போல வாய்கைதொழிற் படாம லயின்றே மின் றென்று.

(இ - ள்.) கடை - போய்க்கண்ட—நந்தியடிபணிந்து - வசவண்ணனை தடிகளைவணங்கி—கடையேன் செய்தபிழையெல்லாம் - நாயினுங்கடையேன் செய்த பிழையனைத்தையும்—உண்டு - சாப்பிட்டு—பொறுமின் - பொறுத்துக்கொள்ளுங்கள்— (ஆதலால்) வருகவென - வாருங்களென்றுவசவண்ணன் வேண்ட—உள்ளங்களிப்புற்று - மனமகிழ்ந்து—ஆங்கிருந்ததொண்டர் - அங்கிருந்தவடியார்கள்—வசவ - வசவண்ணதேவனே—நின்பெருமை - உனதுமகிமையை—சொல்லவெளிதோ - எம்மாலெடுத்துச்சொல்லவெளிதாமோ—பண்டுபோல - முன்போல—வாய்கைதொழிற்படாமல் - வாய் கைகளாலெய்துந்தொழில்படாமல்—வயிறுரா - திருத்தியாக—இன்று - இன்றைக்கு— அயின்றேமென்று - உண்டனமென்று. எ - று. வாய் கை தொழிற்படாமையாவது; மெல்லல், நக்கல், பருகல் முதலிய வாய்த்தொழிலும், பிசைதல் எடுத்தூட்டல் முதலிய கைத்தொழிலும் இல்லாமலுண்டலே. எனவே, வியப்புதொனிக்கப் பெற்றும். (௫௮)

தேவ ருண்ண வவியுணவு செந்தீ முகத்தி லிடுதல்போ லோவில் யாங்க ளெல்லேமு முண்ண வடிசி லல்லமன்ற னுவின் மருவ விடுநினையோர் நாவோ புகழுந் தரத்ததென வாவி யனைய நந்திசீ ரமல னடியார் புகன்றேத்தி.

(இ - ள்.) தேவருண்ண - தேவர்களுண்பான்வேண்டி—அவியுணவு - அவிர்ப்பாகத்தை—செந்தீமுகத்தில் - யாககுண்டத்தில்—இடுதல்போல் - கொடுப்பதுபோல—ஓவில் - நீங்காத—யாங்களெல்லேமும் - யாங்களனைவரும்—உண்ண - உண்டுதிருத்தியடைய —அடிசில் - உணவு—அல்லமன்றனுவில் - அல்லமனதுநாவின்கண்—மருவ - பொருந்த—இடுநினை - விருந்திட்டவுன்னை—ஓர்நாவோ - ஓர்நாக்கா—புகழுந்தரத்தது - துதிக்குந்தகையது—என - என்று—ஆவியனைய - உயிருக்கொப்பாகிய—நந்திசீர் - வசவண்ணனதுகீர்த்திநாமங்களை —அமலனடியார் - சிவனடியார்கள்—புகன்றேத்தி - சொல்லித்துதித்து. எ - று. செந்தீமுகமாக்த் தேவர் திருத்தியடையுமாறுபோல் அல்லமன் காரணமாக யாங்கள் திருத்தியடையுமாறுசெய்தனை எனப்புகழ்ந்தாரென்க. (௫௯)

உலகி லொருவன் சிவயோகி யுண்ட தம்ம சராசரமா
மலகி லுயிர்க ளெலாமுண்ட தாகு மென்ன மறைகூறு
மிலகு முணர்வைக் காட்சியா லின்றிங் குணர வுணர்த்தினன்
கலக வினைக டாக்குமருட் கண்ணன் றிகழல் லமதேவன.

(இ - ள.) உலகில் - உலகத்தினிடத்தில்—ஒருவன் - ஒருபுருடனாகி ய—சிவயோகி - சிவயோகியென்போன்—உண்டது - புசித்தது—அம்ம- ஆச்சரியம—சராசரமாம - சராசரமாகின்றுள்ள—அலகில - அளவில்லாத—உயிர்களெலாம - சகலவுயிர்களும—உண்டதாகும - புசித்ததாகும்—என்ன - என்று—மறைகூறும் - வேதங்கள்சொல்லாநிற்கும் —இலகுமுணர்வை - அங்ஙனம்விளங்குமவாக்கியத்தையை—காட்சியான் - பிரத்தியட்சத்தால்—இன்று - இப்போது—இங்கு - இவ்விடத்தில்—உணர - யாமுணர—உணர்த்தினன்-நேரேகாட்டினன — (அவனுரெனில) கலக்வினைகள - விடாதுகலக்குஞ்செய்யுமிருவினைகளையும்—தாக்கும் - நீக்கத்தக்க—அருட்கண்ணன் - அருட்கண்ணனாகிய—திகழ - சொப்பிரகாசமாகவிளங்குகின்ற—அல்லமதேவன - அல்லமதேவனென்போன் எ - று. அம்ம- உரையசைசொல்லெனினுமமையும். உண்டது உண்டதாகுமெனமுடிக்க. வினைகட்குக்கலகமென் றடைகொடுத்தது இன்பதுன்பங்களின விடாதுமொத்துண்ணச்செய்தலி னெனக. (௯௦)

ஆத லால்வ் வல்லமனை யருத்த லெம்மை யெலாமருத்தல்
பாத மவனைப் பணிதலெம்மைப் பணித லாகு மெஞ்ஞான்றும
பேத மில்லை நல்வசவப் பெயரோய செல்க வென்னமலை
மாது தழுவக் குழைந்ததோள வள்ள லடியார் தமைவணங்கி.

(இ - ள.) ஆதலால - ஆகையால —அவ்வல்லமனை - அந்தவல்லமதேவனை—அருத்தல - உண்ணச்செய்தல் —எம்மையெலாம - எங்களையெல்லாம் —அருத்தலாகும - அருந்தச்செய்தலாகும —பாதமவனைப்பணிதல - அவனதுதிருவடிகளைவணங்கல் —எம்மைப்பணிதலாகும - எங்களைவணங்கியதாம்—எஞ்ஞான்றும் - எப்போதும —பேதமில்லை - சிறிதும்பேதமென்பதில்லை —நல்வசவப்பெயரோய - நல்லபசவனென்னும்பெயரையுடையோனே—செல்கவென்ன - போகக்கடவாயென்றுசொல்ல—மலைமாது - உமையவளை—தழுவ - தழுவாநிற்க—குழைந்த - அதனாற்சுருங்கிய—தோள் - தோள்களையுடைய—வள்ளல் - பரமசிவனது—அடியார்தமைவணங்கி - அடியார்களைநமஸ்கரித்து எ - று. அருமெனலை ரிட

த்துபொட்டுக. அருத்தல் பிரவினை. விம்பப்பிரதிபிம்பபாவமின்மை யின் பேதமில்லையென்றார். எனவே, ஏனையர்க்குச்சீவபாவமகலாமை யின் பேதமில்லையெனறருகு முரணெய்துமெனப் பெற்றும். மலைமாதுதழு வக்குழைந்ததோளெனல் புராணசம்மதம். குழைந்தவென்பது தன் வினையாதலின் அதனுலெனவருவித்தாம. பாதமவனையென்பது வேற்று மைமயக்கம். (௯௧)

**மீ**ண்டு நந்தி யல்லமனுர் மென்பூங் கமல வடியிறைஞ்சி,
யாண்ட பெருமா னடியாரா கன்னை யுண்ட வுணவுகரு, வீண்டு
மகவு முணனலபோ லெந்தை யுண்ட வெலாமுணடு, புண்ட
மகிழ்வோ டிருந்தனாநீ புனைநற மலரும புனைநதென்றான்.

(இ - ள்.) மீண்டு - அவ்விடத்துநின்றுதிருமபிவந்து—நந்தி - வசவண் ணன்—அல்லமனுர் - அல்லமனது—மெல் - மிருதுவாகிய— பூ - அழகிய— கமலவடி - தாமரைமலர்போன்றவடிகளை —இறைஞ்சி - வணங்கி—ஆ ண்ட - எம்மையடிமைகொண்ட —பெருமானடியார்கள - சிவனடியார்க ள்—அன்னையுண்ட - தாயுண்ட —உணவு - உண்டியை —கரு - கருவா க—ஈண்டு - பொருந்திய—மகவு - சிசு—உண்ணல்போல் - உண்பது போல—எந்தையுண்ட - தேவரீருணட —எலாமுண்டு - உணவனைத்தை யுமுண்டு—நீபுனைந்த - நீசூடிய —மலரும்புனைந்து - புஷ்பங்களையுஞ்சூடி க்கொண்டு—பூண்டமகிழ்வோடு - நீபூண்டசந்தோஷத்தோடு—இருந்தன ர் - இருந்தாரகள —என்றான் - என்றசொல்லினன். எ - று. கமலமல ரைக்கமலமென்றது ஆகுபெயா. கருப்பமுடையா ளுண்டவுணவு அக்க ருவுக்குமாதல்போலத் தேவரீருக்கியைந்தவுணவுமுதலியவை தேவரீரடி யார்களுக்கியைந்ததாகக் கண்டனனென்றுனென்க. மகவுமென்பதிலும மை இறந்ததுதழீஇயவெச்சவும்மை. எலாமென்பதிடைக்குறை. தா யுண்டலைக் கருவுமுணடதறகோட்பிடலால் இஃதொப்பணி. (௯௨)

**மா**றனடித்த வடு பட்ட மன்னு முயிரின் றிறமெல்லா
மீறில் புகழ்கங் கணவசவ னிட்ட வடிசி லுணடுபசி
யாறி யிருந்த வாதலினு லல்ல மன்பூ ரணனென்னக்
கூறு மொழிமெய் மெய்யென்று கூறி யுலகங் களித்ததால்.

(இ - ள்.) மாறன் - பாண்டியன் —அடித்தவடி - அடித்தவடியை— பட்ட - தாங்கிய—மன்னும் - நிலைபெற்ற—உயிரின் றிறம் - உயிர்களின்ற ன்மைபோல்—ஈறில்புகழ் - முடிவில்லாதபுகழை —கங்கணா - கங்கண

மாகவுடைய—வசவனிட்ட-வசவன்னனல்லமனுக்கிட்ட—அடிசில் - உணவை—உண்டு - புசித்து—எல்லாம் - அடியார்கூட்டமனைத்தும்—பசியாறியிருந்தவாதலினால் - பசிதணிந்திருந்தபடியால்—அல்லமன் - அல்லமதேவன்—பூரணனென்ன - பரிபூரணனென்று—கூறுமொழி - சொல்லுகின்றவேதமொழி—மெய்மெய்யென்று - சத்தியஞ்சத்தியமென்று—கூறி - சொல்லி—உலகங்களித்தது - உலகங்களிப்புற்றது. எ - று. ஆல் - அசை. சான்றோரெனப்படினும் உலகமெனப் பொதுப்படக் கூறலால் களித்ததெனவம்முறிணை யொன்றன்பாலாக்கினர். அன்று பிட்டுக்கு மண்சுமந்தபோது பாண்டியன் சிவனையடித்தவடி எல்லாவுயிர்களுக்குந் தாங்கியதுபோன்று, இன்று அல்லமனுக்கிட்டவுணவு எல்லாவடியார்களுக்குமாயினதால் அல்லமனைப் பூரணனென்றற்குயாதுமுரண்? என்பதுகருத்து. மெய்மெய்யெனல் அடுக்கு. (௨௩)

இவ்வா றருந்தி யமைதிபெறு மெங்கள் பரம யோகிதான், றெவ்வா கியவைம் புலன்வென்ற திறல்கூர் வசவன் றனை மகிழ்ந்து, சைவா கமமு நான்மறையுஞ் சாற்றும் பொருளை யுணர்த்துதற்குச், செவ்வாய் மலரத் திருவுள்ளஞ் செய்து தனிவீற் றிருந்தனனால்.

(இ - ள்) இவ்வாறருந்தி - இவ்வாறுணவுண்டு—அமைதிபெறும் - சும்மாவிருந்த—எங்கள்பரமயோகிதான் - எங்கள்பரமயோகியாகியவல்லமன்—தெவ்வாகிய - சத்துருக்களாகிய—ஐம்புலன்வென்ற - ஐம்புலன்களையுஞ்செயித்த—திறல்கூர் - வலிமிகுந்த—வசவன்றனை - அல்லமனைநோக்கி—மகிழ்ந்து - சந்தோஷித்து—சைவாகமமும்-சைவாகமங்களும்—நான்மறையும் - நான்குவேதங்களும்—சாற்றும்பொருளை - பிரிதிவாதிக்கும் பரம்பொருளை—உணர்த்துதற்கு - தெரிவித்தற்கு—செவ்வாய்மலர - செவ்விதாகவாய்திறக்க—திருவுள்ளஞ்செய்து - நினைத்து—தனிவீற்றிருந்தனன் - தனித்திருந்தனன். எ - று. ஆல் - அசை. வேதாகமமெனப் பேதமுறினும் எடுப்பதுமுடிப்பது மோர்பொருளேயாதலால் சைவாகமமு நான்மறையுஞ் சாற்றும்பொருளை யென்றார். தானேயொன்றை யுபதேசியாது வேதாகமப்பொருளைத்துணிதல், துணிபுநவிற்சியணி. (௨௪)

ஆரோகணகதி - முற்றிற்று.

கதி - ௨௩ - ௫ - திருவிருத்தம் - ௬௪௨



## இருபத்துநான்காவது

# மஹேலயகதி.

வேறு.

மயங்குத லின்றி மஹேலய மெய்திற்
சயந்தரு முத்தி தலைப்படு மென்று
நயந்தரு மல்லம நாதன் விளங்க
வியம்பிய வண்ண மியம்புது மன்றே.

(இ - ள்.) மயங்குதலின்றி - மயங்காமல்—மஹேலயமெய்தில் - மஹேநாசமடைந்தால்—சயந்தரும் - வெற்றிதரத்தகுந்த —முத்திதலைப்படுமென்று - முத்திகிடைக்குமென்று—நயந்தரும் - நிரதிசயானந்தவாழ்வைத் தரத்தக்க—அல்லமநாதன் - அல்லமதேவன் —விளங்க - நன்குவிளங்குமாறு—இயம்பியவண்ணம் - போதித்தவழியே—இயம்புதும் - யாம்சொல்லுதும். எ - று. அன்று - ஏ - அசைகள். மயங்குதலின்றிமஹேலயமெய்தலாவது ; உபாதானம் உபாதேயமாகாவண்ணம் காட்சிப்பொருள் கருத்துப்பொருள்களைத் தக்கவிசாரத்தாற்றெளியில் தனக்கெனச்சொரூபமொன்றின்றியகலும், அகறலே மஹேலயமெனக. சயந்தருதலாவது ; சுசாதிகமுதலிய மூன்றையும் வென்று தனித்தரசாங்கஞ்செய்தலே. பிராணபந்தனஞ் செய்தலாலாய மஹேலயமன்றெனக்காட்ட மயங்குதலின்றியென்றார். அல்லமனுலெய்தும்பயன் நிரதிசயானந்தமன்றி வேறின்மையின் நயந்தருமென அடைகொடுக்கப்பட்டது. விளங்கவெனலை இயம்பியவென்பதோடு முடிக்க. (க)

பத்தர்க டங்கள் பசிக்குணு மையன்
றத்துவ நல்கு கருத்தொடு தங்க
வத்தலை யன்பொ டகங்குழை கின்ற
வித்தக நந்தி விளம்புவ னன்றே.

(இ - ள்.) பத்தர்கடங்கள் - அடியார்களுடைய—பசிக்கு - பசிதணிதற்கு—உணும் - தாமுண்ட—ஐயன் - அல்லமதேவன்—தத்துவம் - மெய்

யுணர்வினிலையை—நல்குகருத்தொடு - வசவண்ணனுக் கநுக்கிரகிக்கவேண்டுமென்னுங் கருத்தொடு—தங்க-இருக்க—அத்தலை - அவ்விடத்தில்—அன்பொடகங்குழைகின்ற - மிக்கவன்போடுமனநெக்குருகுகின்ற—வித்தகநந்தி - விவேகமுள்ளவசவண்ணன்—விளம்புவன் - சொல்லுவன். எ - று. அன்று - ஏ - அசைகள். தன்பசிக்கன்றெனக்காட்டப்பத்தர்கடங்கள் பசிக்குணுமையனெனவும், உண்மைவடிவமாக்குதலைத் தத்துவ நல்குமெனவுங் கூறினாரென்க. தத்துவம் உண்மை. (௨)

விருப்பு வெறுப்புரு வாம்விட யத்தோ
டிருக்கு மயற்சக மென்பதி லாமற்
பரப்பிர மத்தியல் பார்ப்ப தெனக்குத்
தெரித்தரு ளென்றுரை செய்து துதித்தான்.

(இ - ள்.) விருப்புவெறுப்புருவாம் - விருப்புவெறுப்பேவடிவாயுள்ள—விடயத்தோடிருக்கும் - விடயத்தோடுகூடிநிற்கின்ற—மயல் - பிராந்திரூபமாகிய—சகமென்பது - சகமெனப்படுவது—இலாமல் - காணப்படுதலின்றி—பரப்பிரமத்து - பரப்பிரமத்தின்—இயல் - உண்மைநிலையை—பார்ப்பது - தெரிசிப்பதாகியதிஷ்டியை—எனக்குத்தெரித்தருளென்று - எனக்குத்தெரிவிக்கவேண்டுமென்று—உரைசெய்து - சொல்லி—துதித்தான் - துதித்தனன். எ - று. விருப்புவெறுப்புக் குடன்படாத சத்தபரிசாதிவிடயமும் அவ்விடயமன்றிச்சகமும் இல்லாதிருக்க அச்சகத்தை யோர் முதலாகவுஞ் சுயம்பாகவுங்கொண்டு அநாதிநித்தியத்துவங் கற்பித்தல் தனதுமருட்சியாலாதலின் மயற்சகமெனவும், இதுமித்தையாகக்காறும் மெய்யுணர்வைக் காண்டல் கூடாமையின் அச்சகமென்பதிலாமற் "பரப்பிரமத்தியல்பார்ப்பதெனக்குத் தெரித்தரு" ளெனவுங் கூறினாரென்க. செகத்தினதுண்மைநிலையை விளக்கலின் மெய்ம்மை நவிற்சியணி. (௩)

அண்ணலு மார்வ மடைந்தரு ணந்தி
மண்ணுல கோர்தளை மாறுபு ஞானக்
கண்ணுறு மாறு கடாயின னென்று
புண்ணிய னோடு புகன்றிடு கின்றான்.

(இ - ள்.) அண்ணலும் - அல்லமனும்—ஆர்வமடைந்து - களிப்புற்று—அருணந்தி - அருளையுடையவசவண்ணன் - மண்ணுலகு - பிருதிவண்டமாகியவுலகென்னும்—ஓர்தளை - ஒப்பற்றபந்தத்தினின்றும்—மாறுபு -

நீங்கி—ஞானக்கண்ணுறுமாறு - ஞானதிஷ்டியடைவான்வேண்டி—கடாவினவென்று - வினாவினவென்றுணர்ந்து —புண்ணியனோடு - புண்ணியமூர்த்தியாகியவசவண்ணனோடு—புகன்றிடுகின்றான் - சொல்லுகின்றான். எ - று. எல்லாத்தலைகளும பிறவிகடோறுமாறும். மாறினும், உலகமுண்டென்னுஞ் சித்தப்பிராந்தி யகலாக்காறும் எத்தலையுமவிலைதற்கிடமாதலினாலும், இதனினும் பந்தமேலொன்றின்மையாலும், மண்ணுல கோர்தலை யென்றார். மண்ணுலகெனல் பிருதிவண்டமுதலாகக் காணப்பட்ட வெண்ணிறந்த வண்டநிரை கோடிகளெனினு மமையும். (௪)

யானென தென்ப திருந்திடு காறு
ஞான முறானது நண்ணில னாகிற்
றானிலை யாத சகந்திகழ் கிற்கு
தீன மிலாத சிவந்திக ழாதே.

(இ - ள்.) யானெனதென்பது - யானெனதென்னுமகமமதை —இருந்திடுகாறும்-இருக்குமளவும் —ஞானமுறான்.ஞானமடையான்—அதுநண்ணிலனாயின் - அந்தஞானத்தையடையானாயின்—தானிலையாத - தானேர் முதலாகநிலையுறாத—சகந்திகழ்கிற்கும் - சகங்காணப்படும்— (இதனால்) தினமிலாத - மாசற்ற—சிவந்திகழாது - சிவம்விளங்காது. எ - று. ஏ - அசை. யானெனதென்பது; யானெனதெனக்கோடற்கியையாதவற்றை. யானெனதென்பது தொகையொருமை, இங்ஙனமர்கப் பொருள் கோடலைமறுத்து யானுகிற தற்போதங்கெடவேண்டுமெனின்; ஞானமுறுவதுயாது? சகந்திகழ்வதும் சிவந்திகழாததும் யாதுக்கு? என்னுங்கடாவுக்கு விடையின்றிப்போம். ஆதலின்வழூ. தானெனல் இங்கேசகத்தைச்சுட்டிநிற்றலால் சுட்டுப்பெயராக்குக. யானெனல் சோபாதிகமுமன்று நிருபாதிகமுமன்று. சோபாதிகம்பற்றி நிருபாதிகம்வந்தமையாலும் யானெனற்கிவ்விரண்டுங் கற்பனையாதலாலும், இவ்விபரீதமுன்னர்தொலையின் எனதென்னுமமதை தொலைவதற்குச் சற்றுமுயலவேண்டுவதின்று, ஆதலின்யானெனதென்பதை முன்னும் பின்னுமாகக் கூறினார். இஃதறியாதார்யாதுகூறினுமென்பயன். பொருந்தாதென்க. (ரு)

இறங்கெனு மாறுழல் கின்ற கருத்துப
பிறந்திற வாத பெரும்பிர மத்தி
லிறந்திடில் யானென தென்னு மகந்தை
மறைந்திடு மன்றி மறைந்திடு போதான்.

(இ - ள்.) கறங்கெனுமாறு - காற்றாடியென்றுசொல்லும்படி—உழல்கின்ற - விடாதலைகின்ற—கருத்து - மனது—பிறந்திறவாத - உதித்தழியாத—பெரும்பிரமத்தில் - பெரிதாகியவொப்பற்றசைதன்யத்தில்—இறந்திடில் - நசிக்கில்—யானெனதென்னுமகந்தை - யானெனதென்னுமகந்தையானது—மறைந்திடும் - மழுங்கிப்போம்—அன்றி - இம்முறையாலன்றி—மறைந்திடுமோ - வேறொன்றால்மழுங்கிப்போமோ. எ - று. தான் - அசை. மறைந்திடுமோவென்பதி லோகாரம் எதிர்மறை. "ஆனதவுலகமெலாந்தனதுசோதி" என்பதைமறந்தமறதியே மனமெனப்படும். அம்மனதிற்குத் தத்தெரிசனமின்மையால் தனதுபிரதிபலனமாகியசகத்து சத்தெனக்காணப்படும். காணப்படில், தற்பிரீதி யயலாகக்காணப்படும். காணுங்காறும், நித்தியதிருத்திக்கிடமின்மையின் கறங்கெனுமாறுழல்கின்றகருத்தெனவும், அக்கருத்து அந்தர்முகத்துக்கிளையயுங்கால் அச்சைதன்யத்தையன்றித் தானோர்முதலன்றாகமுடிதலைப் பெரும்பிரமத்திலிறந்திடிலெனவும், அங்ஙனமிறக்கு மநுஷ்டானமேலீட்டில் யானெனதென்னுஞ்சோபாதிக மனுவனுவாகக் கரையுமாதலின் யானெனதென்னுமகந்தை மறைந்திடுமெனவும், இங்ஙனமழுங்கல் வேறோர்நெறியாலன்றாதலின் அன்றிமறைந்திடுமோ வெனவுங் கூறினார் வேறோர்நெறியாவது; சரியை, கிரியை, யோகநெறித்தாச்சோலை. (சு)

யானிது செய்வ லெனக்கிது செய்வ
ரேனைய ரென்ன விருந்த கருத்தான்
மேனிகழ முத்தி விரும்ப லிருட்டாற்
பானுவை மேவுறு பற்றை நிகர்க்கும்.

(இ - ள்.) யானிதுசெய்வல் - யானிதனைச்செய்வன்—ஏனையர் - இவ்வுதவிபெற்றோர்—எனக்கிதுசெய்வரென்ன - எனக்கின்னவுதவிசெய்வார்களென்று—இருந்த - எண்ணியிருந்த—கருத்தால்-எண்ணத்தால்—மேனிகழ் - இனிப்பூர்வபட்சப்படுத்தற்கிடமின்றி மேலாகவிளங்கும்—முத்திவிரும்பல் - மோட்சத்தையடையவிரும்புதல்—இருட்டால் - துணைக்கருவியாகக்கொண்டவிருட்டினால்—பானுவை - சூரியனை—மேவுறுபற்றை - அடையவேண்டுமென்னுமாசையை—நிகர்க்கும் - ஒக்கும். எ - று. எனவே, இக்கருத்திகந்து முத்திவேண்டல் பானுவால் இருட்டைமேவுறுபற்றைநிகர்க்குமெனக்குறித்ததால் தற்குறிப்பணி. இருட்டாற்பானுவைமேவுதலெங்கணுமின்மையின் இல்பொருளுவமையணி. பிறருதவிக்கவாவுங்கருத்து இருள். அக்கருத்தால்மறுமையிலடையுமுத்தி பானு

எனக்கொள்க. இருட்டாற்பானுவையடைதற்கியையின் பிறருதவியவா ஙுங்கருத்தால் முத்தியடைதற்கியையு மென்க. (எ)

இருவினை தாம்வரும யானென லாலவ்
விருவினை யால்வரு மின்பொடு துன்ப
மிருவினை யானென லின்றெனி லில்லை
யிருவினை யில்லெனி லில்லை பிறப்பே.

(இ - ள்.) யானெனலால் - அல்லதையானெனக்கோடலால்—இருவினைதாம்வரும் - நல்வினை தீவினைகள்தாமே வந்துவிளையும்—அவ்வினையால் - மெய்யெனக்கொள்ளு மவ்வினைகளால் —வருமின்பொடுதுன்பம் - சுகதுக்கங்கள்தாமேவந்தமையும் —யானெனலின்றெனில் - சைதன்யத்தையுன்றி யானெனக்கோடற்கிடமின்றெனின்—இருவினையில்லை - இருவினைகள் விளைதற்கிடமில்லை —இருவினையில்லெனில் - இருவினைகள் விளைதற்கிடமில்லை யென்றேற்கின்—இல்லைபிறப்பு - பிறவிகளில்லையாம். எ - று. ஏ - அசை. இல்லையென்னுமிரண்டில் ஆமென்னு மாக்கவினைக டொக்குநின்றன. முதலிரண்டடியும் அத்தியாரோபமெனவும், ஏனைய விரண்டடியும் அபவாதமெனவுங்கொள்க. யானலதை யானாகக்கோடல் பிறவிசம்பந்தம். தவிர்தல் விடுதிசம்பந்தம். எனவே, சலட்சண விலட்சண விலக்கணமாநிற்பது யானெனக்குறிக்கப்பெற்றும். இல்லையென்னும் மூன்றும் பன்மைக்குறிப்பு வினைமுற்றாதலின், இவற்றிற்கு வினைமுதல்களைப் பன்மைப்பெயராக்குக. (அ)

மனத்தை யடக்க மனந்துணை யாகும
பினைத்துணை யின்றது பெற்றன னாயிற்
றனிச்சிவ மேயொரு தானென வாழ்வ
னினைத்து மறந்து நிலத்துழ லானே.

(இ - ள்.) மனத்தையடக்க - அசுத்தமனத்தைக்கெடுக்க—மனந்துணையாகும் - சுத்தமனந்துணைக்கருவியாகும்—பினைத்துணையின்று - வேறோர் துணைக்கருவியின்று—அதுபெற்றனனாயின் - அதனையுறுதியாகப்பெறுவானாயின்—தனிச்சிவமே - ஒப்பற்றசிவமே—ஒருதானென - ஒருதானாக—வாழ்வன் - வாழ்ந்துகொண்டிருப்பன்— (இவ்வாறன்றியும்) நினைத்துமறந்து - பிறப்பிறப்புற்று —நிலத்துழலான் - பூமியிற்கீழ்மேலாகவுழன்றுகொண்டிரான். எ - று. ஏ - அசை. அசுத்தசங்கற்பத்தைச் சுத்த

சங்கற்பத்தாலன்றிமாய்த்தலொண்ணாது. அஃதெங்ஙனமெனின், திரிபுடியாகப்பரிணமித்ததுயாதோ வதனைவிசாரத்தாற்கண்டுதெளிதல் சுத்தமனமெனவும், அங்ஙனந்தெளியாது திரிபுடியைச்சுபாவமெனக்கொண்டுழலல் அசுத்தமனமெனவுங்கோடற்கியைதலினென்க. அங்ஙனந்தெளிவுறுமிடத்துச் சிவந்தானாகவும், தெளிவுற்றவிடத்துப் பிறவிகட்குத் தானிடமாகவு மெய்தலொண்ணாமையின் வாழ்வனெனவும், உழலானெனவுங் கூறினர். இவ்வாறு நயங்கருதியன்றியுரைகொள்ளின் ஞாயஞ், சோதனை பொருத்தங்கட்குமுரணும். அந்தந்தப்பிறவிமயமாதல் நினைத்தெனவும், நழுவல் மறந்தெனவுங்குறிப்பித்தது செனனமரணங்களைக்காட்ட செனனமெடுத்துழலல், இன்னநிலமென்றெவர்க்குங் கணிக்கக்கூடாமையின் பொதுப்படநிலமென்றார். கீழ்மேலாகவுழலலாவது; உயர்திணையாகவேனும், அஃறிணையாகவேனும விடாதுசெனித்திறத்தலே. (அ)

வாரணை மாகு மனத்தை யடக்கிற்
காரண மாயை களைந்தொழி யாத
பூரண மாகிய போத மடைந்திட்
டாரண மோது மரும்பொரு ளாவான்.

(இ - ள்.) வாரணமாகும் - மதயானைபோலடங்காதுழலும் —மனத்தையடக்கில் - மனத்தைத்தன்வயப்படுத்தில்—காரணமாயை - எவற்றிற்கு முதற்கருவியாநின்றுள்ளமாயையென்பதை —களைந்து - வேரோடு களைந்து—ஒழியாத - ஒருகாலத்தும்விட்டுநீங்காத —பூரணமாகிய - பரிபூரணமாநிறைந்துள்ள —போதமடைந்திட்டு - ஞானத்தையடைந்து—ஆரணமோதும் - வேதங்களாற்சொல்லப்பட்ட—அரும்பொருளாவான் - அரியபரம்பொருளாவன். எ - று. மனத்தைவாரணமென்றது; மூடமேலீடுபற்றியும், காரியமாயையென்னுது காரணமாயையென்றது; அறிவுக்கயலுண்டெனல் பற்றியும், பூரணமாகியபோதமென்றது; போலிபோதங்களை மறுத்தல்பற்றியும், ஆரணமோது மரும்பொருளென்றது; யுத்தி யநுபவத்துக்கு முரணுது பற்றியுமென்க. களைதலாவது; காரணமாயையானது தன்னையன்றி யின்றெனவும், தானன்றெனவு முள்ளவாறு கோடலே. போதமாவ னென்னுது போதமடைந்திட்டெனல், பிராந்தி தொலைத்தற்கென்க. அரும்பொருளாதல்; தானேதானாதலே. அன்றேல் முரணும். ஒருபொருளே விபரீதமாகவுமன்றாகவு முடிதலினென்க. வாரணமாகு மனத்தையடக்கல்; திரிசியமின்றிச்செய்தலே. அடக்கிலாவா னெனமுடிக்க. (௯0)

வேறு.

விரிந்த நெஞ்சங் கருவியாம் விடய முணர விரியாம
லொருங்கு நெஞ்சங் கருவியாந் தன்னை யுணர வொருங்காமல்
விரிந்த நெஞ்ச முடையவனை விடாது பிறவி யென்றுணர்க
வொருங்கு நெஞ்ச முடையானை யுறாது பிறப்பென் றுணர்கவே.

(இ - ள்.) விடயமுணர - விடயமுணர்தற்கு—விரிந்தநெஞ்சம் - பலவாகச்சிதைந்துள்ளமனம்—கருவியாம் - காரணமாகும்—தன்னையுணர - தன்னையுள்ளவாறுணர்தற்கு—விரியாமல் - பலவாறுகச்சிதையாமல்—ஒருங்குநெஞ்சம் - ஒன்றுபட்டமனம்—கருவியாம் - காரணமாகும்—ஒருங்காமல் - ஒன்றுபடாமல்—விரிந்தநெஞ்சம் - பரந்தமனதை—உடையவனை - உடையபுருடனை—விடாதுபிறவியென்றுணர்க - பிறவியவனைவிட்டு நீங்காதென்றுணர்க—ஒருங்குநெஞ்சமுடையானை - ஒன்றுபட்டமனமுடையோனை—உறாதுபிறப்பென்றுணர்க - பிறவியர்தனுகாதென்றுணர்க. எ - று. ஏ - அசை. கிரிசியமுள்ளளவு மனமெனலுண்டு. அதின் விரிவு குவிவை மனதின்மேலேற்றல் மயக்கவணி. மேகமோடுதலைச் சந்திரனோடுதலாகக் காண்டல்போலுமென்க. (கக)

அந்தக் கரண சுத்தியே யறிவை யறிதற் சாதனமவ்
வந்தக் கரண சுத்திதனக் கறையுங் கரும மாரணங்க
ளந்தக் கரண சுத்திதா னவை தவாவற் றிடுதலே
யந்தக் கரண சுத்தியினா லடைவன் பிண்டப் பெயரன்றே.

(இ - ள்.) அந்தக்கரணசுத்தியே - மனோசுத்தியே—அறிவையறிதற்சாதனம் - ஆன்மாவை யுள்ளவாறுணர்தற்குச்சாதனமாம்—அவ்வந்தக்கரணசுத்திதனக்கு - அவ்வந்தக்கரணஞ்சுத்தியாதற்கு—ஆரணங்கள் வேதங்கள்—கருமமறையும் - கருமஞ்செய்யச்சொல்லும்—அந்தக்கரணசுத்திதானவது - அந்தக்கரணசுத்தியென்பது—அவாவற்றிடுதல் - ஆசையற்றிருத்தலாம்—அந்தக்கரணசுத்தியினால் - இங்ஙனமவாவற்றிருத்தலால்—அடைவன் - தப்பாதடைவன்—பிண்டப்பெயர் - பிண்டப்பெயரை யியற்கையாகவுடையபிரமத்தை. எ - று. அன்று. ஏ - அசைகள். கிரிசியதோடமெய்துழி யவாவறும், அவ்வவாவறுதற்குமுறை; கைவல்லியத்தில் "கள்ளூமூனு்னீவிரும்பிலு லென்னுங் கவியிலும், "மனையறங்கள்செய்மகங்கள் செய்யென்னுங் கவியிலும் காண்க. இதனை வேதங் கருமகாண்ட

த்திற் பிரதிவாதிப்பதினல் அறையுங்கருமமாரணங்களென்ருர். பிண்டப் பெயரெனல் பிரமத்திற்கெய்தியது காரணவிருேறி. அவாவற்றிடுதலே யென்னுந் தேற்றேகாரமெய்தியது; அந்தக்கரணசுத்தியெனல் வேறெ ன்ற லன்றெனற்கு. அறிவையன்றி யின்மையின் அறிவை யான்மா வென்ரும். (கஉ)

ஆசை யறுதல் வீட்டின்ப நேரே யடையக் காரணமா
மாசை யறுத லலதில்லை பலநூ லனைத்து மாய்ந்திடினு
மாசை யறுவோன் சிவனுத றிண்ண மெனநன் றறிந்திருந்து
மாசை யுறுத லென்கொண்டோ வந்தோ மனித ரறியேமே.

(இ - ள்.) ஆசையறுதல் - அவாவொழிதல்—வீட்டின்பம் - பேரின் பத்தை—நேரேயடையக்காரணமாம் - முட்டின்றிநேரேயடைதற்குக் காரணமாம்—ஆசையறுதலலது - அவாநிக்ரகத்தாலன்றி—பலநூலனை த்தும் - பலவாகவிரிந்துள்ளசகலகலைகளையும்—ஆய்ந்திடினும் - ஆராய்ந்து தெளியினும்—இல்லை - பயனில்லை —ஆசையறுவோன் - அவாநிக்ரகமு டையோன்—சிவனுதல் - சிவவடிவமாதல்—திண்ணமென - ஸ்திரமென் று—நன்றறிந்திருந்தும் - ஐயந்திரிபறத்தெரிந்திருந்தும்—ஆசையுறுதல் - ஆசையிலுழலல் —என்கொண்டோ - என்னவுறுதிகொண்டோ—மனி தர் - மனிதர்கள்—அந்தோ - ஐயோ—அறியேம் - தெரிகிலேம். எ - று. ஏ - அசை. மனிதர் நன்றறிந்திருந்தும் ஆசையுறுதல் என்கொண்டோ அந்தோ வறியேமெனக் கூட்டிப்பொருள்கொள்க. நன்றறிந்திருந்து மென்பதிலும்மை இழிவுசிறப்பு. (கங)

ஆசு தீர்ந்த மனததினிடை யன்றி யுணர்வு தோன்ருது
மாசு தீர்ந்த வாடியிடை யன்றி வதனந் தோன்றுமோ
பாச நீங்கு பரஞ்சுடரை நினைக்கு நினைவாற் பற்றுமனங்
காச நீங்கு கண்போலத் தன்னைக் காண விளங்குமால்.

(இ - ள்.) ஆசுதீர்ந்த - குற்றமற்ற—மனத்தினிடையன்றி - மனதின் கணன்றி—உணர்வுதோன்ருது - அறிவுதையமாகாது—மாசுதீர்ந்த - க ளங்கமற்ற—ஆடியிடையன்றி - கண்ணடியிடத்தல்லது—வதனந்தோன் றுமோ - முகங்காணப்படுமோ—பாசநீங்கு - பாசரகிதமான —பரஞ்சுட ரை - பரஞ்சோதியை—நினைக்குநினைவால் - நினைக்கத்தக்கசுத்தநினை வால்—பற்றுமனம் - பற்றற்றவாவியமனம்—காசநீங்குகண்போல - காச மென்னுநோயினின் றகன்றகண்களைப்போல—தன்னைக்காண - தன்னை

யுள்ளவாறுதரிசிக்க—விளங்கும் - பிரகாசிக்கும். எ - று. ஆல் - அசை. ஆசுதீர்ந்தமனமாவது; திரிசியபிராந்திதீர்ந்தமனதை. நினைக்குநினைவாவது; பிரவிர்த்திக்கியையாத புடைபெயர்ச்சியை. காசமெனல்; கண்ணை மறைக்குமோர்விதநோயை. காசநீங்காவிடத்துக் காட்சிகளனைத்து மங்ஙனமாகக்காணும். ஒன்றையொன்றாகக் கொள்ளும் பிராந்தியகலாவிடத்துத் திரிசியமனைத்து மங்ஙனமாகத்தோன்றும், ஆதலினிங்ஙனங் கூறினாரென்க. (கச)

வானமல்லேன் வளியல்லே னழனீ ரல்லேன் மண்ணல்லேன்
ஞானமல்லேன் வினையல்லே னானே சிவமென் றெண்ணினோ
னூனை யல்லா வொருசிவமே யாவ னிவ்வா றுன்னுதா
னீன மெல்லா முடையவுடம பெடுத்துச் சுழலு மெஞ்ஞான்றும்.

(இ - ள்.) வானமல்லேன் - ஆகாயமல்லன் —வளியல்லேன் - காற்றுமல்லன் —அழனீரல்லேன் - அக்கினியுநீருமல்லன் —மண்ணல்லேன் - பிரிதிவுமல்லன்—ஞானமல்லேன் - ஞானமுமல்லன் —வினையல்லேன் - இருவினைகளிலொன்றுமல்லன்— (ஆதலின்) நானேசிவமென்றெண்ணினேன் - நானேசிவவடிவமென்றுதிடங்கொண்டோன் —ஊனமில்லா - மாசற்ற —ஒருசிவமேயாவன் - ஒப்பற்றசிவவடிவாகவேவிளங்குவன்— இவ்வாறுன்னுதான் - இவ்வாறுசிந்தியாதவன் —ஈனமெல்லாமுடைய - இழிவனைத்தையும்வடிவமாகவுடைய—உடம்பெடுத்து-தேகமெடுத்து— சுழலுமெஞ்ஞான்றும் - எப்போதுஞ்சுழன்றுகொண்டிருப்பன். எ - று. தன்னையன்றி ஞானஞ்ஞானமின்மையானும், வினைமுதலையன்றி வினையில்லாமையினும், எதிர்மறையாக இவையல்லேனெனப்பட்டது. இது விலக்கணி. இவற்றிற்குடன்பாடாக ஐயந்திரிபகன்ற தெளிவுமிக்குற்றவிடத்துச் சிவமெனவு நானெனவுமின்றித் த்விதபாவமறலைக்காட்டவும் நானேசிவமென்றும் சிவமேநானென்றுந்தொனிக்கவும் இரண்டு தேற்றேகாரந்தந்தனரென்க. அல்லுவெனற்கெதிர்மறை ஆமெனலைக்யமெனக்கொள்க. நானேயென்பதை இடைநிலைத்தீபமாக்குக. எண்ணினோனென்பதை ஆவனென்பதோடுமுடிக்க. இங்கேயெண்ணுதல்; பிரத்யட்சமாகக்கண்டெண்ணுதலை அன்றேல், பாவனையாகமுடியும். முடியின், துக்கநிவிர்த்திக்குந்தடையற்றவானந்தத்துக்கு முபயப்பிரஷ்டத்வமெய்தும். எய்துவதாற்கொள்ளற்க. இதனையேமுத்திமுடிவென்பர். (கரு)

தன்னைச் சிவமென் றறிந்தவனே யறிந்தான் றன்னை யுண்மையாக், தன்னைச் சிவமென் றறியாதா னறியா னென்றுந் தன்

னுண்மை, தன்னைச் சிவமென் றென்றறிவ னன்றே பாசந் தனை நீப்பன், றன்னைச் சிவமென் றறியாதான் றனக்குப் பிறப்பே துணையாகும.

(இ - ள்.) தன்னைச்சிவமென்று - தனதெதார்த்தநிலையேசிவமென்று—அறிந்தவனே - அறிந்தான்யாவனேவனே—உண்மையா - உள்ளவாறு—அறிந்தான் றன்னை - தன்னைத்தானறிந்தவனெனப்படுவான்—தன்னைச்சிவமென்று - தன்னைச்சிவவடிவமென்று —அறியாதான் - அறியாதான்யாவனேவனே—தன்னுண்மை - தனதெதார்த்தநிலையை—அறியானென்றும் - எப்போதுமறியமாட்டான்—தன்னைச்சிவமென்று - தனதெதார்த்தநிலையைக்கனவேதானேசிவவடிவமென்று—அறிந்தவன்றே - அறிந்தவக்கணத்தில்தானே—பாசந்தனை - இழிவாகியபாசத்தை—நீப்பன் - நீக்கிவிடுவன் —தன்னைச்சிவமென்று - தன்னைச்சிவவடிவமென்று—அறியாதான்றனக்கு - அறியாதவனுக்கு —பிறப்பேதுணையாகும் - பிறவியேதுணையாகநிற்கும். எ - று. தானெனல்; அறிவு. சிவமெனல்; ஆனந்தம். தன்னை யறிவாகவுள்ளவாறுகண்டுழி யானந்தம்வேறன்மையின் தன்னைச் சிவமென்றறிதலெனவும், தன்னை யுபாதியாகக்கண்டுழி யானந்தநானன்மையின் தன்னைச் சிவமென்றறியாமையெனவும், இவற்றிற்கு முறையே பாசமகலலு மகலாமையும் பயனாதலின் பாசந்தனைநீப்பனென்வும், அவனுக்குப்பிறப்பே துணையாகுமெனவுங் கூறினாரென்க. மதத்தார்கூறுமெல்லாப்பதவிகளுஞ்சுகசாதனமன்றேல் தவம், விரதம், யாகமுதலியவற்றாலன்றி யெய்த வொண்ணாவெனவிதிப்பதற்கேதென்னை? அங்ஙனம்விதித்தவழிச்செய்தெய்தினும் தான்யாதனாவுடலாலன்றி யநுபவித்த லொண்ணாதென்பானேன்? அறிவே யானந்தமாகாதுழி யைக்கியமென்னல்பொருந்தாமையின் மறுத்தலேன்னுமதம். (கசு)

தன்னைப் பேதமாக்காண்கை சகத்திற் காணப் பட்டதாந்
தன்னைப் பேத மறச்சிவமென் றறிவோன் ஞானி தானொருவ
னென்னக் கருதி மறையஞூர் யாஞெ யென்ன வத்துவிதந்
தன்னைப் புகலுங் கண்டதனைச் சாற்றன் முறையின் கருத்தன்றே.

(இ - ள்.) தன்னை - அறிவாகியதன்னை—பேதமாக்காண்கை - உடலிலிவராக்காண்டல்—சகத்தில் - சகத்தைப்போல—காணப்பட்டதாம் - திரிசியமெனப்பட்டதாம்—தன்னை - அறிவை—பேதமற - உபாதியென்றுன்னும்பேதநீங்க —சிவமென்றறிவோன் - அறிவேயானந்தமென்றுணர்

வோன்—ஞானிதானொருவனென்ன - ஞானியொருவனேயென்று—க ருதி - நினைந்து—மறை - வேதங்கள் —அதுநீயானை யென்ன - அதுநீயானை யென்று—அத்துவிதந்தன்னைப்புகலும்- அத்துவிதத்தையே பிரிதிவாதிக் கும்— (இதனையறியார்) கண்டதெனச்சாற்றல் - கண்டபடியைக்கியநிலை யைக்கூறுதல்—மறையின்கருத்தன்று - வேதத்தின்கருத்தன்று. எ - று. ஏ - அசை. தன்னை யுடலாகக்காண்கை திரிசியமெனற்குமாறென்னை? இன்றேல், ஒருப்திப்பிரியம்வேறுருமா. வேறுயின், பிறவி கடத்தற்கேதிலை. று. ஆதலின், "தன்னைப்பேதமறச்சிவமென்றறிவோன் ஞானிதானொரு வ" னென்றார். இங்கேமறையென்பது; சாமவேதமகாவாக்யத்தையென வும், அதுநீயானையென்பது ; தத்துவமசியெனற்குப் பதப்பொருளெனவும், அத்துவிதமெனல்; லட்சியார்த்தத்தையெனவுங்கொள்க. கண்டதெனச் சாற்றல்; உபாதிசகிதமெனவும், உபாதிரகிதமெனவும், இவைபரமபொ ருளுக்குரியனவெனவுந், தனதுதிருஷ்டிபேதங்களெனவுஞ் சற்றுமுணர் தற் கியைபினரல்லராய் முன்பின்முரணுறத் தம்போலிகள் களிக்கக் கண்டபடி பிதற்றலையென்க. எனவே, சரியை, கிரியை, யோகநெறித்தா னொரு பரம்பொருளையடையப் பேருஞ்சொல்லினு மது முத்திநெறிக் குக் கொண்டுவருந்தந்திரமாதலின் அதுமறையின் கருத்தெனப்பெறும். சகத்திலென்பது ஐந்தாம் வேற்றுமை யுவமைப்பொருளில்வந்தது. (கஎ)

தூய்தா கியநெஞ் சுடையார்க்குந் தாமே சிவமாத் தோ ன்றுமாற், றீதா கியநெஞ் சுடையார்க்குத் தெளிய வபேத மிகலி ன்றி, வேதா கமங்கள் விளம்பிடினும் விளங்கா தென்றும வே றென்னும், வாதா லழிவ ரவாமாயை மயக்க மயங்கு மதியினோ.

(இ - ள்) தூய்தாகிய - பாசங்கடந்த—நெஞ்சுடையார்க்கு - மனது டையார்க்கு—தாமேசிவமாத்தோன்றும் - தாமேசிவமாகவிளங்குவர்—தீ தாகிய - மலசகிதமான—நெஞ்சுடையார்க்கு - மனமுடையவர்களுக்கு— தெளிய - தெளிவுபெற—அபேதம் - அபேதநிலையை —இகலின்றி - சுரு தியாதிகட்குமாறின்றி —வேதாகமங்கள் - வேதாகமமுதலிய பிரபலசுரு திகள்—விளம்பிடினும் - விடாதுபோதிக்கினும்—விளங்காதென்றும் - அ பக்குவிகட்கென்றும்விளங்காது—வேறென்னும்வாதாலழிவர் - பேதவா தமேபயனெனக்கொண்டவ்வாதத்தாற் பயனின்றியழிவர்—அவர் - அவர்க ளாரெனில்—மாமாயைமயக்கம் - மாயாமயக்கத்தில் —மயங்கும் - எல்லைகா ணாதுதியங்கும்—மதியினோர் - மதியையுடையவர்கள். எ - று. தூய்தாகிய தீதாகிய என்றவடைகளால் நெஞ்சை மலரகிதமென்றும், மலசகித

மென்றுங் கூறினும். இந்தச்சுத்தரசுத்தம் நெஞ்சுடையாரைச்சார்தலால், "சினைவினைமுதலொடுஞ்செறியு" மென்றவிதிகண்டாம். உடையார்க் கென நான்காம்வேற்றுமை கொடுத்தமையானும் தோன்றுமெனல் அஃறி ணைப்பன்மையில் வருமாதலானுந், தாமேயென்பதை அவர்களனைஞ்சங் களே யெனப்பொருள்கொள்ளின் வழுவுக்கிடமின்றெனக்காண்க. அபே தமென்றதனல், வேறென்னும் வாதாலென்பதைப் பேதவாதமென்றுரை கொண்டாம். பேதவாதம் ஆறெனவேயும், அபேதவாதம் ஐந்தெனவேயும் வேதாந்தசூடாமணியில் (கஉகூ-கஉஎ) வது கவிகளிற்காணுக. செகசீவப ரந் தனக்கெனச் சொரூபமொன்றின்மையின் அதனையறியாது அநாதிநித் தியத்வஞ் சாதித்தல் மாயைமயக்கமெனவும், சாதித்தல்மாத்திரமன்றித் தாமு முண்மையாக மயங்கு மதியினராதலால் மயங்குமதியினரெனவுங் கூறினரென்க. தூய்தாகியவென்னும் பதத்தில் யகரவொற்றுத் தோன் றியது ஆசெதுகை. பேதவாதிகட்குத் தெளியவபேதமிகலின்றி வேதா கமங்கள் விளம்பிடினுஞ் சற்றும் விளங்காதெனல் அருமை நவிற்சியணி.

நெஞ்சஞ் சோகம் பாவனையி னிற்க நிறுத்தி விடயங்க
ளஞ்சுந் துறவாத் துறந்தசிவ யோகி யொருவ னடியிணையிற்
றுஞ்சுந் திருமான் முதலமர ருள்ள மவனை துதித்திறைஞ்சா
தெஞ்சுந் தவமா முனிவரிலை யெனநான் மறையு மியம்புமால்.

(இ - ள்.) நெஞ்சம் - மனம்—சோகம்பாவனையில் - சோகம்பாவனை யென்னுநிலையில்—நிற்க - கலங்காதுநிற்க—நிறுத்தி - நிறுத்திவிட்டு—வி டயங்களஞ்சும் - ஐந்துவிடயங்களையும்—துறவாத்துறந்த - துறவாமற்றுற ந்த—சிவயோகியொருவன் - ஒருசிவயோகியினுடைய—அடியிணையில் - உபயபாதங்களில்—திருமான்முதல் - விஷ்ணுமுதலிய—அமரருள்ளம் - தேவர்களுடையமனம்—துஞ்சும் - ஆனந்தநித்திரைசெய்யும்—அவனை - அங்ஙனமாகியசிவயோகியை —துதித்திறைஞ்சாது - துதித்துவணங்கா மல்—எஞ்சும் - மீதியாநின்ற—தவமாமுனிவர் - தவத்தையுடையமகத் தானரிஷிகள்—இலையென - இல்லையென்று —நான்மறையுமியம்பும் - நான்கு வேதங்களுமுறையிடும். எ - று. ஆல் - அசை. சோகம்பாவனை யென்னும்பதம் அவன் இவன் தேவதத்தன் எனப்பொருட்டு அந்தகா லத்தி லவ்விடத்திற் குடும்பியாய்நின்ற வவனும் இந்தகாலத்தி லிவ்விடத் திற் சந்நியாசியாய் நின்ற விவனும் தேவதத்தனொருவனே யெனக்காட்ட நின்று வாச்சியார்த்தத்தையும், தேவதத்தனொருவனே அங்கவ்வேடமாக வும் இங்கிவ்வேடமாகவும் நின்றோனாதலானும், அவனையன்றி அக்தச்

சுட்டிக்கும் புறத்துச்சுட்டிக்கும் வேறுபொருளின்றாதலானும் அவனே இவன் இவனே அவனென்றயிக்கங்காட்ட லட்சியார்த்தத்தையுந் தந்து வுபசாந்த நிலையதாக்குமென்க. இதையேற்றற் பாலதாகிய வுதாரணஞ் சிறிதுகூறுதும். அதாவது, விழிப்பிற் சகலனெனவும், உறக்கத்திற் கேவலனெனவும பேர்பெற்றுநின்றோன் ஆன்மாவையன்றி வேறலன். சகலமாநின்ற வவ்வேடமும் கேவலமாநின்ற விவ்வேடமும் ஆன்மாவன்று ஆன்மாவை யன்றியுமின்று. எனவே, ஆன்மாவாகியவேடதாரியைக் காணவேண்டு மென்பதாயிற்று. விடயங்களைந்தும துறவாமல் துறத்தலாவது; இருவகைப்பற்றும் ஆன்மாவையன்றி யின்றாகவும் அன்றாகவுமுள்ளவாறு கண்டுநிற்றலே. சிவயோகியடியிணைகளில் நஞ்சுந்திருமால்முதலிய ரென்றதனுல் சிவயோகிதுஞ்சல் வுபசாந்தவேலையெனவும், ஏனையோர் துஞ்சல் அதனது லேசமெனவும் பெற்றாம். இங்ஙனமன்றேல் யுத்தியநுபவத்துக்கு முரணும். (கக)

என்று கருணை பொழிவிழியெங் கோமா னுண்மை யினி தியம்ப, நின்ற வசவ ராயனுள மழல்சேர் மெழுகி னெக்குருகிச், சென்று குரவ னடிபணிந்தான் சென்ன வசவன் முதலாக, துன்று சரண ருய்ந்தனமயா மென்று துதித்துத் தொழுதனரால்.

(இ - ள்.) என்று - இங்ஙனமாக—கருணைபொழி - கிருபாவெள்ளம் பொழிகின்ற—விழி - கண்களையுடைய—எங்கோமான் - எமதுகர்த்தரா கியவல்லமதேவன்—உண்மை - எதார்த்தநிலையை—இனிதியம்ப - நன்குரைத்த—நின்ற - அங்குநின்ற —வசவராயனுளம் - வசவண்ணனது மனம்—அழல்சேர் - நெருப்பிற்பட்ட—மெழுகின் - மெழுகைப்போல—நெக்குருகி - கசிந்து—சென்று - போய்—குரவனடிபணிந்தான் - அல்லமனது திருவடிகளில்வணங்கினன்—(பின்னர்) சென்னவசவன்முதலாக - சென்னவசவன்முதலினராக—துன்று - அங்கேநெருங்கிய—சரணர் - அடியார்கள்—உய்ந்தனமயாமென்று - நாங்கள் துன்பக்கடலினின்று பிழைத்தோமென்று—துதித்துத்தொழுதனர்-துதித்துவணங்கினர். எ - று. ஆல் - அசை இயம்ப ப்ணிந்தான் தொழுதனர் எனக்கூட்டிப்பொருள் கொள்க. (உO)

இவ்வா றருளுற் றனையுணர்த்தி யிருந்த ஞான வியல்வீர, சைவா சிரிய னல்லமனிந் துறையிற் பருவந தலைசிறப்ப, வுய்வா

வினைந்து தனைநோக்கி யுற்ற வடியார்க் குபதேசஞ், செய்வா
னியன்ற வடிவொடுசென் றருள்செய் செயல்செய் துலாவினன்.

(இ - ள்.) இவ்வாறு - இவ்வண்ணம்—அருளால் - கிருபையினால்—த
னையுணர்த்தி - தனது நிசவடிவைத்தெரிவித்து—இருந்த - எழுந்தருளி
யிருந்த—ஞானவியல் - ஞானவிலக்கணமமைந்த—வீரசைவாசிரியன் -
வீரசைவத்துக்குச் சிரேஷ்டாசிரியனாகிய—அல்லமன் - அல்லமதேவன்—
இத்தரையில் - இந்தபூமியில்—பருவந்தலைசிறப்ப - பருவகாலமேலிட—
உய்வானினைந்து - பிறவிக்கடலினின் றுய்யும்படிநினைந்து—தனைநோக்கி
யுற்ற - தன்னையெதிர்நோக்கிக்காத்துக்கொண்டிருக்கின்ற —அடியார்க்
குபதேசஞ்செய்வான் - அடியார்களுக்குபதேசஞ்செய்யவேண்டி—இய
ன்றவடிவொடு - அதற்கியைந்தவேடத்தோடு—சென்று - போய்—அருள்
செய்செயல்செய்து - அநுக்கிரகிக்கத்தருந்தசெய்கையைச்செய்து—உலா
வினன்—எங்குந்திரிந்தனன். எ - று. யாதுந்தன்னையன்றியின்மையின்
தனையுணர்த்தியெனவும, பரிபாககாலமேலிடலைக்காட்ட பருவந்தலைசிற
ப்பவெனவும், எல்லாத்துன்பங்களினின் றுநீங்குதலினும் பிறவித்துன்பத்
தினின்று நீங்குதலரிதாதல்பற்றி யுய்வானினைந்தெனவுங் கூறினாரென்க.
இக்கவியில் உய்வான் செய்வான் என்பவை ஆ செதுனைகள். (உக)

பங்கேலயகதி - முற்றிற்று.

ஆ கதி - உ௩ - இ - திருவிருத்தங்கள். ௩௦௭௪.

---



இருபத்தைந்தாவது

# மான்மியகதி.

வேறு.

வியனில மேவிய விழுமி யோர்க்கெலாஞ்
செயிரறு மல்லமன் செய்த நன்றியைக்
கயிலையி னுதல்விழிக் கடவு டன்புடை
மயிலிய லொடுசொலு மாறு கூறுவாம்.

(இ - ள்.) வியனிலம் - விசாலம்பொருந்தியபூமியில்—மேவிய - இருக்கின்ற—விழுமியோர்க்கெலாம் - அடியார்களுக்கெல்லாம்—செயிரறும் - மலரகிதமான—அல்லமன்செய்தநன்றியை - அல்லமதேவன்செய்யாமற் செய்தநன்றியை—கயிலையில் - கைலாயத்திலெழுந்தருளிய—நுதல்விழிக்கடவுள் - நெற்றிக்கண்ணையுடையபரமசிவன்—தன்புடை - தனதிடது பாகத்திலமர்ந்த—மயிலியலொடு - மயில்போன்றவியலையுடைய உமையவளோடு—சொலுமாறு - சொல்லும்விதத்தை—கூறுவாம் - சொல்லுவாம். எ - று. சிவதொண்டுமேலீடுபற்றி விழுமியோரெனப்பட்டது. மயிலியல் உவமைப்புறத்துப் பிறந்தவன்மொழித்தொகை. சொலுமாறு இடைக்குறை. நுதல்விழிக்கடவுள், காரணவிடுகுறி. (க)

ஆயிடை யருணந்தி யாதி மாதவர்
நேயமோ டமர்வுற நிறுவி யல்லமன்
மாயிரு ஞாலமேன் மானிடர்க் கெலாம்
பேரருள் செயுந்தொழில் பூண்டு ளானரோ.

(இ - ள்.) ஆயிடை - அவ்விடத்தில்—அருள் - கிருபையையுடைய—நந்தியாதிமாதவர் - வசவண்ணர்முதலியவடியார்கள்—நேயமோடு - பிரமானந்தத்தோடு—அமர்வுற - நித்தியதிருந்திபெற்றிருக்க—நிறுவி - நிறுத்திவிட்டு—அல்லமன் - அல்லமதேவன்—மாயிருஞாலமேல் - பெரிதாகியபூமியின்மேல்—மானிடர்க்கெலாம் - பரிபாகமுள்ளமனிதர்களிடத்தி

லெல்லாம்—போய் - சென்று—அருள்செயுந்தொழில்-அநுக்கிரகிக்கத்த க்கமுயற்சியை —பூண்டுளான் - விரதமாகக்கொண்டனன். எ - று. அ ரோ - அசை. அல்லமன் நிறுவி பூண்டுளான் எனமுடிக்க. மாணிடர்க் கெலாம், வேற்றுமைமயக்கமெனினுமமையும். (உ)

இன்னண மல்லம் னிருநி லத்துறத்
தன்னிகர் கயிலேயிற் சிங்கந் தாங்கிய
பொன்னணே மிசையமர் புராரி தன்னெடு
மின்னணி முலேயுமை விளம்பன் மேயினுள்.

(இ - ள்.) இன்னணம் - இவ்வாறு—அல்லமன் - அல்லமதேவன்—இ ருநிலத்துற - பெரிதாகியபூமியிலிருக்க—தன்னிகர்கயிலேயில் - தனக்கு த்தானேயொப்பாகியகைலேயிலையில்—சிங்கந்தாங்கிய - சிங்கங்களாற்சும க்கப்பெற்ற—பொன் - பொன்னுலாகிய—அணேமிசை - ஆசனத்தின்மே ல் —அமர் - எழுந்தருளியிருக்கின்ற —புராரிதன்னெடு - திரிபுரமெரித்த பரமசிவனேடு—மின் - மின்னல்போன்ற —அணி - அழகிய—முலே - த னங்களேயுடைய—உமை - உமாதேவியானவள்—விளம்பன்மேயினுள்— சொல்லத்தொடங்கினுள். எ - று. "பிறவுமோர்க்கும்பிற" வென்னும்விதி யால் நிலத்துறவெனலேக்கொள்க. புராரியெனல் வில்லியென்முற்போல இகரவிகுதிவுயர்திணேயாண்பாற் படர்க்கையாயதென்க. மின்னெனலே உமையவளோடுவொட்டுக. (௩)

அல்லம னருள்பெறற் கடைந்த நந்தியோ
டெல்லேயி னின்கண மெனது நற்கலே
மெல்லிய னிலமிசை மேவிச் செய்ததென்
சொல்லுதி யெனவுமை யிறைவன் சொல்லினுன்.

(இ - ள்.) அல்லமன்-அல்லமதேவரது —அருள்பெறற்கு-அநுக்கிரகம் வாய்த்தற்கு—அடைந்தநந்தியோடு- சென்றநந்திதேவரோடு —எல்லேயி ல் - அளவில்லாத—நின்கணம்-உனதுசிவகணங்களும்—எனதுநற்கலே - எனதுசாந்துவிகுணப்பெண்ணுகிய—மெல்லியல்-மிருதுவானமேனியை யுடையவக்கமாதேவியும்—நிலமிசைமேவி - பூமியிலடைந்து —செய்த தென் - செய்தகாரியமென்ன—சொல்லுதியென - சொல்லுவாயென் று—உமை - உமையவள்கேட்க—இறைவன்சொல்லினுன் - பரமசிவன் சொல்லுவன். எ - று. மெல்லியல் அன்மொழித்தொகை. சொல்லுதி

யென வுமையென்பதற்கு, சொல்லுவாயென்று வுமையவள் கேட்கவெ
ன்றுரைகொள்வதுசிறப்பு. (௪)

நந்திநல வசவனு நாமங் கொண்டமர்ந்
தந்தமி லெம்மடி யவரை யாமெனப்
புந்திசெய தவர்விழை பொருள ளித்தமண்
சிந்திய நிலமிசைச் சிறப்புற் றனரோ.

(இ - ள்.) நந்தி - நந்திதேவர் —நல்வசவனுநாமங்கொண்டு - நல்லவச வண்ணனென்னுநாமந்தரித்து—அமர்ந்து - இருந்து—அந்தமில் - அளவில்லாத—எம்மடியவரை - எமதடியார்களை—ஆமென-சிவதொண்டுக்குரியராமென்று—புந்திசெய்து - நினைந்து—அவர்விழை - அவ்வடியார்கள்விரும்புகின்ற —பொருளளித்து - பொருள்களைக்கொடுத்து —அமண்சிந்திய - சமணர்கள்பரவியிருக்கின்ற—நிலமிசை - பூமியின்மேல்—சிறப்புற்றான் - மகிமையுற்றனன். எ - று. அரோ - அசை. சிவதொண்டுக்குரியராமென்றெஞ்சிநின்றதால் இசையெச்சம். சமணர்களாருநிலைமைநிலை அமண்சிந்தியநிலமெனல்குறிப்பு. (௫)

அறஞ்செயு நின்கலை யாரு மங்கைபோய்ச்
சிறந்துள வுலகின்மா தேவிப் பேர்பெறீஇ
மறஞ்செயு மதன்வலி மாள மாய்த்தெலாந்
துறந்தனள் குரவனைத் துருவிப் போயினாள்.

(இ - ள்.) அறஞ்செயு - முப்பத்திரண்டறங்களையுஞ்செய்த—நின் - உன்னுடைய—கலையாகும் - சாத்துவிதகலையாகிய —மங்கை - பெண்ணானவள்—போய் - சென்று —சிறந்துள - சிறப்புற்றிருக்கின்ற—உலகில் - உலகத்தில்—மாதேவிப்பேர்பெறீஇ - மாதேவியென்னும்பெயரைப்பெற்று—மறஞ்செயு - அடியார்களுக்குத்தீச்செயலையேசெய்யும்—மதன்வலிமாள - மன்மதனதுவலிகுன்ற—மாய்த்து - கெடுத்து —எலாந்துறந்தனள் - எல்லாப்பற்றையும்விட்டவளாய்—குரவனைத்துருவிப்போயினாள்- ஞானசாரியனைத்தேடிப்போயினள். எ - று. மங்கை போய் பெறீஇ மாய்த்து துறந்தனள் துருவிப்போயினள் எனக்கூட்டிமுடிக்க. (௬)

நண்ணிய நங்கண நாதர் தாமுமக்
கண்ணகன் ஞாலமுற் றெய்மைக் காணிய

வண்ணநல் வினைகள்பல் வகைபு ரிந்தவ
ரெண்ணிய பலநக ரிடத்து வைகினார்.

(இ - ள்.) நண்ணிய - பொருந்திய — நங்கணநாதர்தாமும் - நமதுசிவகணநாதர்களும் — அக்கன்னகன்ஞாலமுற்று - விசாலமானவந்தப்பூமியிற்சென்று — எம்மைக்காணியவண்ணம் - எமதெதார்த்தநிலையைக்காணவேண்டுதற்கியைந்த — நல்வினைகள் - சற்கிருத்தியங்களை — பல்வகைபுரிந்து - பலவேறுவகைப்படச்செய்து — அவர் - அந்தக்கணநாதர்கள் — எண்ணிய - தங்கள்தங்களுக்கிஷ்டமாகிய — பலநகரிடத்து - பலநாட்டின்கண் — வைகினர் - தங்கினார்கள் எ - று. நங்கணநாதர்தாமும் உற்று புரிந்து வைகினரெனக் கூட்டிமுடிக்க. (எ)

அளக்கருவ் விரதரா யவரி ருந்திடத்
துளக்கமி னிலையுடைத் தூய னல்லமன்
கொளக்குறை படாதபே ரின்பங் கூட்டுண
விளக்கின னுலகினில் வீர சைவமே.

(இ - ள்.) அளக்கரும் - அளவிடுதற்கரிய — விரதராய் - விரதமுடையவர்களாய் — அவரிருந்திட - அவர்களிருக்க — துளக்கமில் - சலனமற்ற — நிலையுடை - திடநிலையினையுடைய — தூயனல்லமன் - பரிசுத்தனாகியவல்லமதேவன் — கொள - பருவத்திற்கியைந்தவாறுகொள்ளவும் — குறைபடாதபேரின்பம் - குறைவற்றவானந்தத்தை — கூட்டுண - கொள்ளைகொள்ளவும் — உலகினில் - உலகத்தில் — வீரசைவம் - வீரசைவத்தை — விளக்கினன் - விளங்கச்செய்தனன். எ - று. ஏ - அசை. அல்லமன் விளக்கினன் எனக்கூட்டி முடிக்க (அ)

வேறு.

எவ்வகைச் சமயத் திற்கு மிறைவனே யெனினு நேயஞ்
சைவநற் சமயத் துற்றான் சைவத்தும் வீர சைவத்
தவ்வவர் பிறவி நீக்கு மல்லமன் விருப்ப முள்ளான்
மைவரிக் கயலெ னெடுங்கண் மடவரா லென்றான் வள்ளல்.

(இ - ள்.) எவ்வகைச்சமயத்திற்கும் - பலவேறுவகைப்படுகின்றவெவ்வகைச்சமயத்திற்கும் — இறைவனேயெனினும் - கடவுளேயென்றாலும் — நேயம் - பேரின்பவிளைவுக்கியைந்த — சைவநற்சமயத்து - நல்லசைவசமயத்தில் — உற்றான் - முக்கியமாகத்தங்கினன் — சைவத்தும் - சைவத்

தில் முக்கியமாகத்தங்குவதிலும் —வீரசைவத்து - வீரசைவத்தில் —அவ் வவர்பிறவிநீக்குமல்லமன் - அவரவர்பிறவிகளைநீக்கசக்தியைந்த வல்லமதேவன்—விருப்பமுள்ளான் - தங்கருமிக்கவிருப்பமுடையவன் —மை - மைதீட்டிய—வரி-செவ்வரிகருவரிபடர்ந்த—கயல் - சேற்கெண்டைபோன்ற—நெடுங்கண் - நீண்டகண்களையுடைய —மடவரால் - பெண்ணே—என்றுன்வள்ளல் - என்றுபரமசிவன்சொல்லினன். எ - று. இறைவனே யென்பதி லேகாரந் தேற்றம். எனினும் என்பதிலும்மை யெதிரது தழீஇய வெச்சவும்மை. நேயமென்கின்றமிகையால் பேரின்பமென்றும். சைவத்தும் என்பதிலும்மை இழிவுசிறப்பு. எவ்வகைச்சமயத்திற்கு மென்பதிலும்மை முற்றும்மை. (௯)

சமயமெவ் வகையி னுநதான் சைவமே லாய தென்கொ
லமையுநல் வீர சைவ மதனினுஞ் சிறந்த தென்கொ
லிமையவர் பரவு முக்க ணெம்பிரா னருள்செய் யென்ன
வுமையவள் வினவ வேழ முரித்தவன் விளம்பு மன்றே.

(இ - ள்.) சமயமெவ்வகையினும் - எவ்வகைப்பட்டசமயங்களிலும்—சைவம் - சைவமானது—மேலாயதென்கொல் - எங்ஙனமேலாயது—அமையும் - பொருந்திய—நல்வீரசைவம - நல்லவீரசைவமானது —அதனினும் - அந்தச்சைவத்தைக்காட்டிலும் —சிறந்ததென்கொல் - எங்ஙனஞ் சிறப்புற்றது—இமையவர்பரவும் - தேவர்கள்வணங்கத்தக்க—முக்கண் - மூன்றுகண்களையுடைய —எம்பிரான் - எமதுகர்த்தனே —அருள்செய் யென்ன - இவ்வையத்தைநீக்கியருளவேண்டுமென்று —உமையவள்வினவ - பரமேஸ்வரிகேட்க—வேழமுரித்தவன் - யானையுரித்தோனாகியபரமசிவன்—விளம்பும் - சொல்லுவன். எ - று. அன்று - ஏ - தான் - அசைகள். கொல்லெனவிரண்டும் ஐயம். (௪0)

உரைக்குமெச் சமயத் திற்கு முத்தர பாகஞ் சைவந்
தரிக்குமச் சைவத் திற்குத் தரமெனு வீர சைவந்
தெரிக்குநற் காமி காதி சிரத்தினிற் றிகழுங் கண்டா
யரிக்குரற் சிலம்ப ரற்று மடிமலர்த் தடங்க ணல்லாய்.

(இ - ள்.) உரைக்கும் - சொல்லப்பட்ட—எச்சமயத்திற்கும் - எவ்வகைப்பட்டசமயங்கட்கும் —உத்தரபாகம் - மேலாயபாகத்தை —சைவந்தரிக்கும் - சைவமானதேற்கும் —அச்சைவத்திற்கு - அந்தச்சைவசமயத்திற்கு—உத்தரமென - மேலாயதென்று—வீரசைவம் - வீரசைவமா

னது—தெரிக்கும் - யாவர்க்குந்தெரிவிக்கும் —நற்காமிகாதி - நல்லகஷமி யத்தவமுதலியவற்றின்—சிரத்தினில் - உச்சியில்— திகழும் - விளங்கும்— கண்டாய் - காணுதி—அரி - பருக்காங்கற்களின்—குரல் - சத்தத்தால்— சிலம்பாநிற்கும் - நூபுரங்கள்கோஷிக்கின்ற—அடி - பாதங்களையும்—ம லர் - தாமரைமலர்போன்ற—தடம் - விசாலமாகிய—கண் - கண்களையு முடைய—நல்லாய் - பெண்ணே. எ - று. எவ்வகைச்சமயத்திலுமேலா யது சைவமெனவும், அதனினுமேலாயது வீரசைவமெனவுந் தெரிவி த்தாரென்க. அடிமலரெனல்; உருவகம். (கக)

புறந்தரு சமயம புக்குப் புறமலாச் சமயத் தெய்தி
யறநதிகழ சைவ முற்றுஞ் சரிதைசரி தாதி யாற்றிச்
சிறந்துள வீர சைவஞ் சேர்ந்தபின் வீடு நண்ணு
நறுந்தளிர் கவற்று மேனி நனைமலர் வல்லி யன்னாய்.

(இ - ள்.) புறந்தரு - புறம்பாகத்தரப்பட்ட—சமயம்புக்கு - சமயங் களிலுமைழந்தும—புறமலாச்சமயத்து - அகச்சமயங்களில்—எய்தி - அ டைந்தும்—அறந்திகழ் - நல்லொழுக்கம் விளங்குகின்ற —சைவமுற்று - சைவத்தையடைந்தும்—ஆங்கதில் - அதனிலும்—சரிதாதியாற்றி - சரி தாதிகளைச்செய்து—சிறந்துள - சிறப்புற்றிருக்கின்ற—வீரசைவஞ்சேர்ந் தபின் - வீரசைவநெறிக்கணமைந்தபின் —நறுந்தளிர் - நல்லதுளிர்க ளை—கவற்றும் - வருத்துகின்ற—மேனி - மேனியையுடைய—நனை - தே னையுடைய—மலர் - புஷ்பங்கணிறைந்த —வல்லியன்னாய் - வல்லிசாதக் கொடிபோன்றவளே—வீடுநண்ணும் - விடுதிமுத்திகிடைக்கும். எ - று. புறச்சமயமாறையு மகச்சமயமாறையும் அகராதியிற்காண்க. (கஉ)

அருமறை முடியுஞ் சீர்சா லாகம முடியு மொத்துப்
பொருமற மிலாமன் முற்றும் பொருளினை விளங்கக் காட்டித்
தருமுறை யதனால் வீர சைவமே தலைமைத தாமிவ்
விருமறு வறுநன் னூலு மிதிற்பிர மாண மாகும்.

(இ - ள்.) அருமறைமுடியும் - அரியவேதத்தினந்தமும்—சீர்சால் - சிற ப்புமிக்க—ஆகமமுடியும் - ஆகமங்களினந்தமும்—ஒத்து - சற்றும்பேதி யாதொத்து —பொரும் - முரணுகின்ற—மறமிலாமல் - சசரிதகமுதலிய விகற்பமில்லாமல்—முற்றும் - பூரணமாகிநிறைந்துள்ள—பொருளினை - ப ரம்பொருளை—விளங்கக்காட்டி - விளங்கும்படிதெரிவித்து —தருமுறை

னல் - நிர்விகற்பசமாதிதரத்தகுந்தநெறியால்—வீரசைவமே - வீர வமென்பதே—தலைமைத்தாம் - எவற்றினுந்தலைமையதாம்—இ - இங் —இரு - பெரிதாகிய—மறுவறு - குற்றமற்ற—நன்னூலும் - நல்லவீர சவநூல்களும்—இதில் - இந்தச்சுவாநுபூதிநிலைக்கு—பிரமாணமாகும் - நதிப்பிரமாணமாநிற்கும். எ - று. சுததசைதன்ய மொன்றேயெனல் பதாந்தமெனவும், அறிவுக்கறிவெனல் ஆகமமுடிபெனவுங் கொள்க. வ்விரண்டு மொத்தலாவது; அறிவுக்கறிவென்பது வுபாதிநாட்டத்தா ன்றிச் சைதன்யநாட்டத்தா லின்மையிற் போலியாமெனக. இங்கே பாருளெனல் மதத்தரால் விடாதுவழக்கிடுதலை. (கரு)

ஒன்றொரு விடயந் தன்னி லுறுசுவை நிறைவென் றாக்கி
யன்றுமெம் முகத்த ளித்திட் டெம்பிர சாதங் கொண்டு
துன்றுறு கரும முன்னாத் தூய்மையில் வீர சைவத்
தன்றிவே றொருமார்க் கத்தி னடுக்குமோ வடுக்கண் மாதே.

(இ - ள்.) ஒன்றொருவிடயந்தன்னில் - ஒவ்வொருவிடயங்களிலும்—உறுசுவை - உறுவதாலெய்துமினியசுவையை—நிறைவென்றாக்கி - தற் பிரியமாதலின்பரிபூரணமாக்கி—என்றும் - எப்போதும்—எம்முகத்து - எமதுசந்நிதியில்—அளித்திட்டு - நிவேத்தியஞ்செய்து —எம்பிரசாதங் கொண்டு - அந்தவெமதுபிரசாதத்தைக்கொண்டு —துன்றுறுகருமம் - நித்ய கர்மானுஷ்டானங்களை—உன்னா - நினையாமற் சலனமற்றிருக்கின்ற—தூய்மை - இந்தப்பரிசுத்தமான சுவாநுபூதிநிலை—இவ்வீரசைவத்தன்றி - இந்தவீரசைவத்தெய்துமன்றி —வேறொருமார்க்கத்தின் - சைவ முதலிய வேறொருமார்க்கத்தில்—அடுக்குமோ - கிடைக்குமோ—வடு - மாம்பிஞ்சின் பிளப்பையொத்த—கண் - கண்களையுடைய—மாதே - பெண்ணே. எ - று. ஏ - அசை. சோதனையில் ஒவ்வொருவிடயமுந்தனக் கெனச் சொரூபமொன்றின்றி ஞெப்திமாத்திரமாநிற்றலானும், அந்தஞெப்தியையன்றி யயலாகப்பிரியமொன்றின்மையானும், இதனால் ஞெப்தியே பிரியம் பிரியமேஞெப்தியென் றுதற்கியைவதினானும் "ஒன்றொருவிடயந்தன்னி லுறுசுவைநிறைவென்றாக்கியெனவும்," சுசாதிகமுதலியவை யிறந்தது வெமதுசந்நிதியாதலால் "எம்முகத்தெனவும்," அங்ஙனமைக்ய மாக்கியதே பிரசாதமாதலானும் அது நிவேத்தியமாதலானும் "எம்பிரசா தங்கொண்டளித்திட்டெனவும்," அங்ஙனமாயவவசரம் கிருதகிர்த்தியமுத லிய நான்குமெய்தற்பால நிலையாதலா லதனை "துன்றுறுகருமமுன்னாத் தூய்மையெனவும்," இத்தூய்மையெய்தற்கு யோக்கியதையுடையது வீர

சைவமன்றி யேனையதன் முதலாக "இவ்வீரசைவந்தன்றி வேறொரு மார்க்கத்தினடுக்குமோ," வெனவுங்கூறினர். கூறவே, உபசாந்தநிலையது வீரசைவமேயெனப்பெறும். இருதகிர்த்தியமுதலிய நான்காவன; இருதகிர்த்தியம், துக்காபாவம், சர்வகாமாப்திகம், பிராப்திப்பிராப்பியம் என்பன. இவற்றை வேதாந்தசூடாமணி முதலிய ஞானநூல்களிற் காண்க. அடுக்குமோவெனபதி லோகாரம் எதிர்மறை. (கச)

ஆதலால் வீர சைவத் தறிவினை யறியச் செய்தான்
மாதர்மா தேவி யாமுன் வண்கலை மாதி னுக்கு
மேதையாம் வசவனாதி மெய்யடி யவர்க்கு ஞான
போதகா சிரிய னென்னும் பொருவில்ல லமன்வேற் கண்ணாய்.

(இ - ள்.) ஆதலால் - ஆகையால்—வீரசைவத்து - வீரசைவத்தின் கண்—அறிவினை - எல்லாவற்றையு மறியுமறிவை—அறியச்செய்தான் - விளங்கக்காட்டினன்—மாதர் - அழகிய—மாதேவியாம் - மாதேவி யென்னும் பெயருடையவளாகிய—உன் - உன்னுடைய—வண்கலைமாதினுக்கும்—சாத்துவிதகலைப்பெண்ணுக்கும்—மேதையாம் - விவேகமயமாகிய—வசவனாதி-வசவண்ணன்முதலிய—மெய்யடியவர்க்கும் - மெய்யடியார்களுக்கும் —ஞானபோதகாசிரியனென்னும் - ஞானபோதகாசிரியனென்கின்ற—பொருவில் - ஒப்பில்லாத—அல்லமன் - அல்லமதேவனென்பொன்—வேற்கண்ணாய் - வேல்போன்றகண்களையுடையவளே. எ - று. எல்லாவற்றையுங்காணுங் கண்ணைக்காட்டுவான்போன்று எல்லாவற்றையு மறியுமறிவையறியச்செய்தன னென்பதுகருத்து. அல்லமன் கலைமாதினுக்கும் மெய்யடியவர்க்கும் அறிவினையறியச்செய்தானெனக்கூட்டி முடிக்க. மாதினுக்கும் மெய்யடியவர்க்கும் என்பவற்றிலுள்ளவும்மைகள் எஞ்சி நின்றன. கலைமாதென்றது வண்ணென்றடைகொடுத்ததனால் சாத்துவிதகலையென்றும். அடியவரென்றது மெய்யென்றமிகையால் திரிகரணமொத்தவரெனப்பெறும். எனையபோதகாசிரிய னன்றெனக்காட்ட ஞானபோதகாசிரிய னென்றது எடுத்துக்காட்டணி. (கரு)

பருவபே தத்தாற் பேதப் படும்பொருள் பருவங் கண்டு
திரிவின்மா முனிவர் யோகர் சித்தர்கண் முதலா னோர்க்குப்
பொருவிலா வல்ல மப்பேர் புண்ணியன் புகன்றுட் கொண்டான்
குரவவார் குழன்ம டந்தா யென்றனன் குன்ற யில்லி.

(இ - ள்.) பருவபேதத்தால் - பக்குவபேதத்தினால்—பேதப்படும்பொருள்—பேதமாகக்காணப்படுமெய்ப்பொருளை —பருவங்கண்டு - ஏற்றற்குரியபருவங்கண்டு—திரிவில் - மாறுபடாத—மாமுனிவர் - மகத்தானரிஷிகளும்—யோகர் - யோகிகளும்—சித்தர்கள் - சித்தர்களும்—முதலானோர்க்கு - முதலியபேர்களுக்கு—பொருவிலா - ஒப்பில்லாத—அல்லமப்பேர்புண்ணியன் - அல்லமனென்னும் பெயரையுடையபுண்ணியவான்—புகன்று - அநுக்ரகித்து—ஆட்கொண்டான் - அடிமைகொண்டனன்—குரவம் - வளைந்த—வார் - நீண்ட—குழல் - கூந்தலையுடைய—மடந்தாய் - பெண்ணே—என்றனன் - என்றுசொல்லினன்—குன்றவில்லி - மேருவை வில்லாகவளைத்த பரமசிவன். எ - று. பருவபேதத்தாற் பேதப்படும்பொருளென்றதனால் இயல்பாக வென்று மொருபடித்தாயதென்றும், பருவங்கண்டு சித்தர்முதலானவர்க்குப் புகன்றாட்கொண்டா னென்றதனால் பருவங்காணு மிடத்தவலமாமென்று முறைகாணப்பெறும். குரவ விதியுயிரீறு. (கக)

அம்மையுண் மகிழ்வு பொங்க வல்லமன் பெருமை கேளா
மம்மர்செய் துளங்க லக்கு மாயையைக் கடந்தா னென்றன்
மெய்ம்மைநின் பவள வாயால் விளம்பநா னறிந்தே னென்று
மும்மதில் வலிதொ லைத்த முக்கணு யகனைத் தாழ்ந்தாள்.

(இ - ள்.) அம்மை - உமையவள்—உண்மகிழ்வுபொங்க - உள்ளத்திலாநந்தம்பெருக—அல்லமன்பெருமைகேளா - அல்லமதேவனதுமகிமையைக்கேள்வியுற்று—மம்மர்செய்து - மோகத்தைவிளைவித்து—உளங்கலக்கும் - மனதைக்கலங்கச்செய்கின்ற—மாயையைக்கடந்தான் - மாயையைவென்றனன்—என்றன்மெய்ம்மை - எனதுண்மைநிலையை—நின்பவளவாயால் - உனதுபவளம்போன்றவாயினால்—விளம்ப - சொல்ல—நானறிந்தேனென்று - நான்தெரிந்துகொண்டேனென்று—மும்மதில்வலி - திரிபுரத்தின்வலியை—தொலைத்த - நாசஞ்செய்த —முக்கணுயகனை - திரிநேத்திரமுடையபரமசிவனை—தாழ்ந்தாள் - வணங்கினாள். எ - று. கேளாவென்பது செய்யாவென்னும்வாய்பாட்டுவினையெச்சம். மம்மர்செய்துளங்கலக்கலாவது; விரும்பியமெய்தாதவைகளைப்பற்றி வந்தெய்து மனோவனதயை. மாயையைக்கடத்தலாவது; உண்மைபோற்காண்டலில் மயங்காமையை. என்றன் மெய்ம்மையாவது; கானனீர் கிளிஞ்சில்வெள்ளி வானமை கயிற்றிற்பாம்பு முதலியவைபோல் தோற்றன்மாத்திரமுஞ் சொன்மாத்திரமுமா நிற்குநிலையன்மையை. (கஎ)

அங்குமை மாதி ேனாடு மல்லமன் பெருமை கூறித்
திங்களவெண் முகிழ்பு னைந்த செஞ்சடைப் பரமன் மேவ
விங்கருண் மேக மென்னு மிணையிலெங் குருகு கேசன்
மங்கல முத்தி யின்பம் வழங்குமத் தொழிலி னின்றான்.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்தில்—உமைமாதினோடும் - உமாதேவியோடும்—அல்லமன் பெருமைகூறி - அல்லமதேவனது மகிமையைச்சொல்லி—வெண் - வெண்மையாகிய—திங்கள்முகிழ்புனைந்த - மூன்றாம்பிறைச்சந்திரனையணிந்த—செஞ்சடைப்பரமன் - சிவந்தசடையையுடைய பரமசிவன்—மேவ - சுமமாவிருக்க—இங்கு - இவ்விடத்தில்—அருள்மேகமென்னும் - கிருபாமேகமெனனப்பட்ட—இணையில - ஒப்பில்லாத—எங்குருகுகேசன் - எமதுகுருவாகிய வல்லமதேவன—மங்கலம் - என்றுமழியாத—முத்தியின்பம் வழங்கும் - வீட்டின்பத்தைத்தராநிற்க —அத்தொழிலில - அந்தமுயற்சியில—நின்றான - விடாதுசெய்யநின்றனன. எ - று. அங்கு - இங்கு என்றதனால் கைலாயமும் பூமியுமெனக்கொள்க உமைமாதினோடும் என்ற உம்மையால் அல்லமன்பெருமையென்பதில எண்ணும்மைபெருகியதாகக்கண்டாம. இதனால் உமைமாதின் சிறுமையையும அல்லமன பெருமையையுங்கூறியதாகப்பெறறாம். திங்கள் வெண்முகிழெனல இலக்கணை. அருளமேகமென்னும குருகுகேசனெனல்; உருவகவணி (௧௮)

மூத்தவ ரிளைஞர் நோயார் முகிழ்முலை மாதா நல்ல
தீதொழி லாளர் பொல்லாத தீதொழி லாளரென்றும்
பார்த்திலன் யாவர் மாட்டும் பரிந்தருண் மாரி பெய்து
காத்தன னமல ஞான காரணன் குருகு கேசன்.

(இ - ள்.) மூத்தவர் - வயதினமூத்தவர்களென்றும—இளைஞர் - சிறியவர்களென்றும்—நோயார் - வியாதியையுடையவர்களென்றும் —முகிழ்முலை - முல்லையரும்புபோன்ற தனங்களையுடைய—மாதர் - மங்கைப்பருவமாதரென்றும்—நல்லதீதொழிலாளரென்றும் - பொல்லாததீசெயலுடையோரென்றும்—பார்த்திலன் - பேதம்பாராதவனாய் —யாவர்மாட்டும் - யாவரிடத்தும்—பரிந்து - விரும்பி—அருள்மாரிபெய்து - கிருபாவெள்ளம்பொழிந்து—காத்தனன் - இரட்சித்தனன்—(அவனாரெனில்) அமலஞானகாரணன் - பரிசுத்தஞானகாரணனாகியும்—குருகுகேசன் - குருகுகேசனென்னும்பெயரையுடையவனாயுமிருக்கின்றவல்லமன். எ-று.

மூகிழ்முலைமாதரொன்றதனால் மங்கைப்பருவமாதரொன்றும். சற்கருமமுந் துற்கருமமும் பிறவிதரற்பாலதின் இரண்டையுந் தீத்தொழிலென்றார். நல்லதீத்தொழில் சிவபுண்ணியாதிகருமங்களையும், பொல்லாத்தீத்தொழில் யாகாதிகிருத்தியங்களையுமெனக்கொள்க. என்றுமெனலைக் கடைநிலைத்தீபமாக்கி யெங்குமொட்டுக. அருள்மாரி; உருவகம். அமலஞானகாரணன், குருகுகேசன், இவை காரணவிடுகுறி. நல்லதீத்தொழிலும் பொல்லாத்தீத்தொழிலும் நிட்காமியதவத்துக்குமாறுதலின் இவை விலக்கென்றற்கு இங்ஙனங்கூறினாரென்க. பருவபேதம்பாராது யாவர்மாட்டுமருண்மாரி பெய்துகாத்தனனென்றதனால் அல்லமனதுகாருண்யம் விளங்கக் கண்டாம். பொறி, புலன், கரணம், அவித்தை யென்னும் மலஞானமிருப்பதால் இவற்றிற்குமாறாக அமலஞானமென்றார். அமலஞானமாவது; பொருளைப் பொருளாகக்காண்டலே. (௧௯)

இன்னவா றருளி னானே யிவருற விவர்வே றென்று
தன்னைபோ லுயிர்கட் கெல்லா மாரரு ளொருங்கு செய்தே
யென்னையா ளெனக்கொண் டாளு மிணையடிக குருகு கேசன்
மன்னுமா தவர்க ணெஞ்ச மலர்தொறும் வாழா நின்றான்.

(இ - ள்.) இன்னவாறு - இவ்வண்ணம்—அருளினால் - கிருபாபெருக்கால்—இவருறவிவர்வேறென்னாது - இவருறவினரிவரயலாரெனப்பேதஞ்சற்றுங்கொள்ளாது—அன்னைபோல் - தாய்போல—உயிர்கட்கெல்லாம் - எல்லாவுயிர்களுக்கும்—ஆரருள் - பூரணவருளை—ஒருங்குசெய்து - ஒருங்குவிளங்கச்செய்து—என்னையாளெனக்கொண்டு - என்னையடிமையாகக்கொண்டு—ஆளும் - இரட்சிக்கின்ற—இணையடி - உபயபாதங்களையுடைய—குருகுகேசன் - குருகுகேசனாகியவல்லமன்—மன்னும் - நிலைபெற்ற—மாதவர்கள் - பெரியோர்களுடைய—நெஞ்சம் - மனமாகிய—மலர்தொறும் - புட்பங்கள்தோறும்—வாழாநின்றான் - வாழ்கின்றனன். எ - று. ஏ - அசை. நெஞ்சமலர்; உருவகம். (௨0)

எல்லொளி யிரவி போல விருண்மல மிரித்தி லங்கு
மல்லமன் சரித மோதி லறம்பொரு ளின்பம் வீடாம்
நல்லன பயனோர் நான்கு னன்னுவ னிதனைக் கேட்
வல்லநல் வினையி னுறு மற்றவை மருவி வாழ்வன்.

(இ - ள்.) எல்லொளி - மிக்கவொளியையுடைய—இரவிபோல - சூரியனைப்போல—இருண்மலமிரித்து - இருள்போன்றமும்மலங்களையு

நாசஞ்செய்து—இலங்கும் - பிரகாசியாநின்ற —அல்லமன்சரிதமோதி ல் - அல்லமனது சரித்திரத்தைவாசிக்கில்—அறம்பொருளின்பம்வீடாம் - அறம்பொருளின்பம்வீடென்னும்—நல்லன - நல்லனவாகிய —பயனோர் நான்கும் - நான்குபயனையும்—நண்ணுவன் - அடைவன்—இதனைக்கேட் கவல்ல-இதனைக்காதினாற்கேட்பதற்குவல்லமையுள்ள—நல்வினையினானும்- சற்கிருத்தியத்தினாலும் —மற்றவை - அந்தநான்குபயனையும் —மருவி - அடைந்து—வாழ்வன் - வாழாநிற்பன். எ - று. எல்லொளி; மீமிசைப்ப தம். இரித்து; பிறவினை. நல்லன; வினையாலணையும்பெயர். வல்ல; குறிப் புப் பெயரெச்சம். நல்வினையினானுமென்பதினும்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மை. நல்லனபயன்; இருபெயரொட்டுப்பண்புத்தொகை. (௨௧)

மதியிலார் மதிஞ ராவர் மகவிலார் மகவு யிர்ப்பர்
நிதியிலார் நிதிப டைப்பர் நிலையிலார் நிலைத்து வாழ்வர்
பதியிலார் பதிகி டைப்பர் பழுதிலிவ் விருபத் தைந்து
கதியினா னிரம்பு காதை கற்றவர் கூறக் கேட்பின்.

(இ - ள்.) பழுதில் - குற்றமற்ற—இவ்விருபத்தைந்துகதியினால் - இந் தவிருபத்தைந்துகதியினால் - நிரம்பு - நிரம்பிய—காதைகற்றவர் - சரித் த்திரங்களைக்கற்றவர்கள்—கூறக்கேட்பின் - அவர்கள்சொல்லக்கேட்டா ல்—மதியிலார் - மூடர்கள்—மதிஞராவர் - விவேகிகளாவார்கள் —மகவி லார் - பிள்ளையில்லாதவர்கள் —மகவுயிர்ப்பர் - பிள்ளைபெறுவர்—நிதியி லார் - செல்வமில்லாதவர்கள்—நிதிபடைப்பர் - செல்வமுடையராவர்— நிலையிலார்-யாதோர்நிலையுமில்லாதவர்கள்—நிலைத்துவாழ்வர் - ஒன்றினிலை பெற்றுவாழ்வார்கள்—பதியிலார் - பட்டணமில்லாதவர்கள் —பதிகிடை ப்பர் - தமக்குச்சுதந்தரமாகப்பட்டணம்பெறுவார்கள். எ - று. இந்நூல் நிட்காமியபலனைத் தரற்பாலதாயிருக்கக் காமியப்பயனையுந் தருமெனக் கூறியவிக்கவி இடையிற்பாடிச் சேர்த்ததாகக் காண்கின்றதென்க. கேட் பவர்க்கே யிவ்வளவுபயனெய்தின் கற்றவர்க் கெவ்வள வென்பம். (௨௨)

பார்கெழு சகாத்த மூவைஞ் ஞூற்றெழு பானுஞ் காவு
தாகிய குரநா மங்கொ ளாண்டுறு விடைஞா யிற்றிற்
சீர்கெழு மல்ல மன்றன் றிருவிளை யாடற் காதை
கார்கெழு மிடற்றெங் கோமான் கருணைகொண் டியம்பினனே.

(இ - ள்.) பார்கெழு - பூமியில்வழங்கும்—சகாத்தம் - சாலிவாகன சகாத்தமென்னும் —மூவைஞ்ஞூற்றெழுபானுங்காவதாகிய - ஆயிரத்

